உ

விநாயகர் துணை.

காஞ்சீபுரம் குமரகோட்டத்தருச்சகரும,
சுப்பிரமணியசுவாமிகள் வரப்பிரசாதியும்
ஆகிய
ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்
அருளிச்செய்த

# கந்தபுராண மூலமும்

மகாவித்வான் - காஞ்சீபுரம்
ஸ்ரீமத். இராமசாமிநாயுடவர்கள்
மூலத்திற்கிணக்கமாக எழுதிய

# வசனமும்.

இவை
சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர்
**கோ. வடிவேலுசெட்டியாரவர்களாலும்**
சென்னை, சிந்தாதிரிப்பேட்டை ஆங்கிலோ வர்னகுலர் ஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர்
**வல்லி. ப. தெய்வநாயகமுதலியாரவர்களாலும்**
சென்னை, சூளை
ஸ்வாமி விவேகாநந்த இந்து பாலிகா பாடசாலைத்
தலைமை உபாத்தியாயர்
**செ. மு. வேலுமுதலியாரவர்களாலும்**
பார்வையிடப்பட்டு,
ஷை தெய்வநாயகமுதலியாரவர்களால்

சென்னை,
பிரஸிடேன்ஸி அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டன.
இரண்டாம் வால்யம்.



1908.

கந்தபுராணத்துள் இரண்டாவதுவால்ய

# படல அகராதி.







# இரண்டாவதுவால்யத்தின் பிழைதிருத்தம்.



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௭ | ௧௬ | ௩ | கொர | கோர |
| ௧௧ | ௧௯ | ௪ | கொணடனை | கொண்டனை |
| ,, | ௨௦ | ௩ | கோண்மகன் | கோன்மகன் |
| ௧௫ | ௬௧ | ௩ | ளிள்மேல் | னின்மேல் |
| ௧௮ | ௮௭ | ௩ | மூதூர் | மூதூர் |
| ,, | ௯௦ | ௨ | கறறை | கற்றை |
| ௨௪ | ௧௪௯ | ௪ | கொணடனை | கொண்டனை |
| ௨௯ | ௧௯௭ | ௨ | ரடன | ரடன் |
| ,, | ௨௦௪ | ௩ | தடங்தோ | தடந்தேர் |
| ௩௨ | ௨௨௮ | ௨ | நூறுறா | நூறுநூ |
| ௩௩ | ௨௪௪ | ௩ | வெணடுதன் | வெகுண்டுதன் |
| ௩௮ | ௨௮௭ | ௩ | நிரந்தன | நிறைந்தன |
| ௪௧ | ௩௧௬ | ௧ | பூதவிர | பூதவீர |
| ,, | ௩௨௧ | ௪ | சோரதான் | சேர்ந்தான் |
| ,, | ௩௨௨ | ௨ | ராயிாம் | ராயிரம் |
| ௪௯ | ௦ | ௨௯ | இருவடைய | இருவருடைய |
| ௫௦ | ௦ | ௨ | இனைத்தது | இளைத்தது |
| ௭௧ | ௧௯௯ | ௪ | பொளளொன | பொள்ளென |
| ௭௮ | ௨௬௭ | ௨ | கெமமாய்ப் | கேமமாய்ப் |
| ௧௦௫ | ௯௩ | ௪ | துடங்க | துளங்க |
| ௧௦௮ | ௧௨௫ | ௧ | வற்றிப | வற்றிய |
| ௧௧௩ | ௧௭௮ | ௧ | றிசைப்ப | றிசைப்ப |
| ௧௨௪ | ௫௯ | ௪ | புயல்கன் | புயல்கண் |
| ௧௩௭ | ௧௧௨ | ௩ | விங்கு | வீங்கு |
| ,, | ௧௧௫ | ௪ | துணடினுன் | தூணடினுன் |
| ௧௩௮ | ௧௨௪ | ௩ | னேயெளி | னேயெனி |
| ௧௪௪ | ௨௯ | ௩ | லெருவன் | லொருவன் |
| ,, | ௩௩ | ௪ | கெதிகுற | கெதிருற |
| ௧௫௨ | ௧௦௯ | ௩ | யெண்ணல் | யெணணல |
| ௧௫௪ | ௧௩௧ | ௩ | ஓழியு | ஊழியு |
| ௧௫௬ | ௧௫௩ | ௪ | தொளினுன் | தோளினுன் |
| ௧௬௩ | ௨௨௭ | ௩ | ளிங்கு | னிங்கு |
| ௧௮௦ | ௩௯ | ௩ | பனைக்கை | பணைக்கை |
| ௧௮௫ | ௪ | ௨ | வேவினை | வேலினை |
| ௨௦௧ | ௧௬௯ | ௧ | உன்னுனைக் | உன்னுணைக் |
| ௨௦௩ | ௧௮௬ | ௪ | யெலும் | யெனும் |
| ,, | ௧௯௩ | ௩ | கொட்டியே | கோட்டியே |
| ௨௦௪ | ௨௦௩ | ௨ | நிள்ளனட | நின்னடை |
| ௨௦௮ | ௨௩ | ௧ | மூர்த்தியைய் | மூர்த்தியைப் |
| ௨௧௩ | ௭௨ | ௩ | செய்யதொர் | கெய்யதொர் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨௧௭ | ௧௦௬ | ௧ | ஈநு | ஈறு |
| ௨௨௮ | ௨௨௦ | ௧ | பொடிபுப்ப | பொடிப்ப |
| ,, | ௨௨௪ | ௧ | ரெண்ப | ரெண்ம |
| ௨௩௫ | ௨௮௯ | ௨ | தெகையை | தொகையை |
| ௨௩௬ | ௨௯௬ | ௩ | சூழ்ச்கிக் | சூழ்ச்சிக் |
| ,, | ௨௯௮ | ௩ | ளார்ப்பப் | ளார்ப்பப் |
| ,, | ௩௦௦ | ௪ | சொம்பொற் | செம்பொற் |
| ௨௪௨ | ௩௬௨ | ௩ | கண்டள | கண்டன |
| ௨௫௭ | ௨௧ | ௩ | தண்ளிடத் | தன்ளிடத் |
| ௨௬௨ | ௬௯ | ௪ | நிற்ருன் | நின்ருன் |
| ௨௭௨ | ௧௬௫ | ௨ | கொட்டியே | கோட்டியே |
| ௨௭௯ | ௨௪௫ | ௧ | தடந்தோல் | தடந்தோள் |
| ௨௮௭ | ௩௨௫ | ௨ | யவுணாகள் | யவுணர்கள் |
| ௨௯௫ | ௪௦௦ | ௨ | லெவ்வா | வெவ்வா |
| ,, | ,, | ௨ | விரப்விப் | விரவிப் |
| ,, | ,, | ௩ | தெவ்யாய் | தெவ்வாய் |
| ௩௦௦ | ௪௪௮ | ௨ | ளிநதா | ளிந்தா |
| ௩௦௩ | ௪௭௮ | ௧ | தலைபணித் | தலைபணித் |
| ௩௦௭ | ௦ | ௩௫ | நின்ருள் | நின்ருன் |
| ௩௧௦ | ௧௪ | ௪ | தொகையாய் | தோகையாய் |
| ௩௧௧ | ௧௭ | ௪ | யுண்ணுதியோ | யுன்னுதியோ |
| ௩௧௨ | ௧ | ௨ | மீதுமைகும் | மீதுவைகும் |
| ௩௧௩ | ௧௩ | ௧ | மவுனர்தங் | மவுணர்தங் |
| ௩௧௪ | ௨௩ | ௪ | ணங்ஙன் | ணங்ஙன் |
| ,, | ௨௫ | ௩ | நொக்கி | நோக்கி |
| ,, | ,, | ௪ | மகழ்ச்சி | மகிழ்ச்சி |
| ௩௧௫ | ௩௧ | ௪ | தாணுவில் | தாணுவில் |
| ,, | ௩௩ | ௪ | காதவால் | காதலால் |
| ௩௧௮ | ௧௪ | ௪ | னேற்றுரி | ளேற்றுரி |
| ௩௨௦ | ௨௮ | ௧ | அத்துளை | அத்துணை |
| ௩௨௩ | ௨௦ | ௧ | வடிக்தொண்ட | வடிக்கொண்ட |
| ௩௩௩ | ௧௨௫ | ௩ | சேரந்திடு | சேர்ந்திடு |
| ௩௩௪ | ௧௨௮ | ௧ | சிவர்கன | சிவந்தன |
| ௩௩௫ | ௧௩௯ | ௨ | முல்லையின் | முல்லையின் |
| ௩௩௮ | ௧௭௫ | ௪ | யொற்றிளர் | யொற்றினர் |
| ௩௪௯ | ௦ | ௯ | வரந்தாள | வரந்தர |
| ௩௫௦ | ௦ | ௫ | நகர்வித்தான் | நுகர்வித்தான் |
| ௩௫௧ | ௮ | ௩ | கொற்றவற | கொற்றவற் |
| ௩௫௨ | ௧௯ | ௩ | றெய்தத | றெய்வத் |
| ,, | ௨௧ | ௧ | ஆ | நா |
| ௩௫௪ | ௦ | ௪ | பிறடு | பிரகு |
| ௩௭௦ | ௧௧ | ௪ | வலித்தருள் | வளித்தருள் |
| ௩௭௧ | ௧௯ | ௧ | முளிந்தவ | முனிந்தவ |
| ,, | ௨௭ | ௪ | கினைஞரைக் | கிளைஞரைக் |
| ௩௭௪ | ௧௫ | ௧ | வெண்டுநர்க் | வேண்டுநர்க் |
| ௩௭௬ | ௩௫ | ௪ | குறுகலாாகளே | குறுகலார்களே |
| ௩௭௭ | ௪௧ | ௨ | தக்களே | தக்கனே |

# இரண்டாவதுவால்யத்தின் பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩௮௧ | ௯ | ௧ | யனைத்தும் | யனைத்தும் |
| ௩௮௩ | ௨௧ | ௪ | மன்னிடை | மண்ணிடை |
| ,, | ௨௫ | ௨ | யடிகளை | யடிகளை |
| ௩௮௭ | 0 | ௧௭ | மருமகளை | மருமகளை |
| ,, | 0 | ௨௨ | கோவித்து | கோபித்து |
| ௩௯0 | ௧௩ | ௪ | நிலைமனயப் | நிலைமையைப் |
| ௩௯௩ | ௪௧ | ௧ | யாஙக | யாங்க |
| ௩௯௬ | ௧ | ௩ | கனுகிக் | கனுகிக் |
| ௩௯௮ | ௨ | ௩ | மூலெ | மூளை |
| ௪0௧ | ௨௬ | ௩ | யினிதி | யினிதி |
| ,, | ௨௭ | ௧ | நோக்கலாண் | நோக்கலான் |
| ௪0௪ | ௧௬ | ௩ | வல்லிபோற் | வல்லிபொற் |
| ௪௧௩ | ௭ | ௩ | செந்தெறி | செந்நெறி |
| ௪௧௪ | ௧௯ | ௩ | கண்ணுதற் | கண்ணுதற் |
| ௪௩௨ | ௨௧ | ௧ | வனிந்தா | வணிந்தா |
| ௪௯௪ | ௪௪ | ௪ | நீன்றூன் | நின்றூன் |
| ௪௪௪ | ௧௪௩ | ௧ | உக்ரைப்பொரு | உக்கிரப்பெரு |
| ௪௪௯ | ௧௯௩ | ௧ | மானுல | மாலுல |
| ௪௭௬ | 0 | ௨௧ | மதிக்குங் | மத்திக்குங் |
| ௪௭௯ | ௨௭ | ௪ | பயனயா | பயன்யா |
| ௪௯௯ | ௨௨௩ | ௧ | ஒடின | ஓடின |
| ௫௧௨ | ௩௭ | ௩ | மறையவாா | மறையவரா |
| ௫௨௭ | ௧௫ | ௨ | காளிகைய | காளியை |
| ,, | ௧௭ | ௪ | ளிவை | ளிவை |
| ௫௩௨ | ௨ | ௧ | மேடங்கலின் | மடங்கலின் |
| ௫௪௪ | ௧௧௭ | ௧ | தென்றிகழ் | தேன்றிகழ் |
| ௫௪௭ | ௧௪௮ | ௨ | மருஙகாகத் | மருங்காகத் |
| ௫௬௧ | ௯௩ | ௪ | ளிமை | ளிமை |
| ௫௬௮ | ௩௯ | ௩ | வல்வி | வல்லி |
| ௫௭௭ | ௧௧௭ | ௨ | சிவனுரை | சிவனுறை |
| ,, | ௧௧௯ | ௧ | யொருபகலி | யொருபகலி |
| ௫௭௮ | 0 | ௨0 | விநாயகப்பெருமானை | விநாயகப்பெருமானை |
| ௫௭௯ | 0 | ௨௫ | விரவாகு | வீரவாகு |
| ,, | 0 | ௨௮ | அவனைப | அவனைப் |
| ௫௮0 | 0 | ௩௭ | சோமாஸ்கந்தரரைக் | சோமாஸ்கந்தரைக் |

உ

சிவமயம்.

சண்முகக்கடவுள் துணை.

நான்காவது

# யுத்தகாண்டம்.

## ஏமகூடப்படலம்.

காரண னென்னுந் தேவு நான்முகத் தவனு முக்கட்
பூரணன் றானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
யாரண முடிவுந் தேறா வனாதியா யுயிர்கட் கெல்லாங்
காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம். (௧)

திண்ணிய வவுணர் தம்மைச் செற்றிட வின்னே செவ்வேற்
பண்ணவ னேகு மெல்லா வமரரும் யாங்கிற் செல்வர்
துண்ணென யானு மேகா தொழிவது சூழ்வன் றென்னா
வெண்ணிவந் திடுவான் போல விரவிவந் துதயஞ் செய்தான். (௨)

இரவிவந் துதய வெற்பி னெய்திய காலை தன்னி
னரியணை மிசையே வைகு மறுமுகங் கொண்ட வண்ணல்
பிரமன்மான் மகவான் றேவர் முனிவரர் பிறருங் கேட்ப
வரமிகு சிறப்பின் வீர வாகுவை நோக்கிச் சொல்வான். (௩)

பாவமே பயிலுஞ் சூர பன்மனு மவுண ரானோ
ரேவரு முடிவா ராக விமையவ ரிடும்பை நீங்க
மாவியல் கின்ற வீர மகேந்திர புரத்துக் கின்னே
போவது புரிது நந்தேர் பொள்ளெனக் கொணர்தி யென்றான். (௪)

வள்ளன்மற் றிதனைச் செப்ப மாலயன் மகவா னாதி
யுள்ளபண் ணவர்கள் கேளா வுவகையங் கடலின் மூழ்கித்
தெள்ளிதி னெமது துன்பந் தீர்ந்தது தீர்ந்த தென்னாத்
துள்ளின ராடிப் பாடி யவனடி சூட லுற்றார். (௫)

ஆயது காலை தன்னி னரும்பெருங் கயிலை போற்று
நாயக நந்தியண்ண னற்கணத் தலைமை பூண்டோன்
சேயதோர் மனவே கப்பொற் றேரொடு வலவன் றன்னைக்
கூயினன் கொண்டு வல்லே குமரவேண் முன்ன ருய்த்தான். (௬)

முன்னுற மருத்தன் றூண்டு முரண்டகு தடந்தேர் நண்ண
வன்னதை யருளி னோக்கி யறுமுகம் படைத்த வண்ணல்
பன்னெடுஞ் சீயந் தாங்கும் பைம்பொனின் றவிசு தன்னின்
மன்னின னிருந்த னீங்கி யெழுந்தனன் மறைகள் போற்ற. (௭)

மாறில்பொன் சுடரு மேரு வரைமிசை யிருமூ வெய்யோர்
வேறிலா தொருபாற் பட்டு விளங்கிவந் திவரு மாபோ
லாறுமா முகத்தெம் மைய னணையதொல் லிரத மீக்க
ணேறினு னேறிச் சூழ்வோர்க் கினையதொன் றியம்பு கின்முன. (அ)

வார்திரை யளக்கர் நாப்பண் வரம்பிலா வளவைத் தாகிச
சீர்திகழ் மகேந்தி ரப்பேர்த் திருநகர் முன்ன ரேகிச்
சூர்தனை யடுவான் போதுந் துண்ணென நீவிர் நுந்த
மூர்திக டம்மின் மேவி யூர்ந்திவண் வருதி ரெனறான். (கூ)

இப்படி முகமா றுள்ள வெம்பிரா னிசைத்த லோடு
மப்பணி யிசையா வேத னன்னத்து மாழி மேலோ
னொப்பரு முவண மீது மும்பர்கோன் மான மீதுஞ்
செப்புறு மேனை விண்ணோர் தத்தமூர் தியினுஞ் சேர்ந்தார். (க0)

அந்தமி லிலக்கத் தோரு மவரலா வெண்மர் தாமு
மந்தர முறழும் வீர வாகுவாம வன்மை யோனு
மெந்திர வயமான் றேரின் வீற்றுவீற் றேறி யார்க்குஞ்
சிந்தையி னுனு மெட்டாத தேவர்க டேவற் சூழ்ந்தார். (கக)

சுப்பிரன் மேக மாலி சுவேதசீ ரிடங்க பாலி
யப்பிர சித்துச் சித்தி ராங்கனே சுவால தாலு
வொப்பிலவச சிரனே வீம னுககிர னுக்கி ரேசன்
பிப்பல னந்தி சேனன் பிரமசன் பிரம சேனன். (கஉ)

பதுமனே கராளன் றண்டன் பத்திரன் பரிக நேமி
யுதவகன் புட்ப தந்த னுருத்திரா காரன் வீரன்
மதிசயன் கேது மாலி வக்கிரன் பிரம கேச
னதிபதி கலிங்கன் கோர னச்சுத னசலன் சாந்தன். (கங)

சித்திர சேனன் பூரி சுசீலன்மா சயனே சிங்க
னுத்தர மடங்கற் பேரோ னுபதிட்டன் சயனே யீசன்
மத்தகன மதங்கன் சண்டி மகாபலன் சுவேத னீல
பத்திரன் சுவாகு வண்டா பரணனே காக பாதன். (கச)

பிங்கலன் சமானன் மாயன் பிறங்கிய நிகும்பன் கும்பன்
சங்கபா லன்வி சாகன் சதநாவ னயக்கி ரீவ
னங்கையா யிரத்தன் செங்க ணயுதத்த னனந்தன் வாமன்
மங்கல கேசன் சோமன் வச்சிர மாலி சணடன். (கரு)

அசமுகன் சரபன் குந்த னுடகன் கவந்தன் மேகன்
விசயன்வித் துருமன் றண்டி வியாக்கிரன் கால பாசன்
றசமுகன் குமுதன் பானு தனஞ்சய னிடப ரூபன்
சுசிமுக னனல கேசன் சுபத்திரன் கேது மோகன். (கசு)

மத்தனுன் மத்த னந்தி மனோபவன் வாயு வேகன்
பத்துநூ றடிகள் பெற்றோன் பானுகம் பன்ப தங்கன்
சுத்தனே யனிகன் சீதன் சுனுதனே சுமாலி மாலி
யத்திரி யவுணா கூற்ற னரிகேசன் சுவால கேசன். (கஎ)

இங்கிவர் பூத வெள்ளத் திறையவ ரொருநூற் றெண்மர்
பொங்குவெஞ் சினத்த ரெல்லாப் புவனமு மடுவென் றூனு
மங்கொரு கொடியபின் முன்ன ரடுபவ ராடன் மிக்கோ
ரங்கையில் வலியோர் யாருஞ் சண்முகத் தவனைச் சூழ்ந்தார். (கஅ)

ஏயெனப் பகரு முன்ன மிவ்வகை யெவருஞ் செவ்வேற்
சேயினைச் சூழ்த லோடுஞ் செய்கைமற் றதனைக் காணூஉ
மாயிருட் பரவை ஞாலம் வரைக்குலம் பனிப்ப வாததிட்
டாயிரத் திரட்டி வெள்ளத் தனிகமு மெழுந்த வன்றே. (கசு)

எழுந்தன வனிக வெள்ள மீண்டிய வெங்கும் விண்ணோர்
பொழிந்தனர் பூவின் மாரி பூதர்தந் தெழிப்பு விண்ணு
மொழிந்திடு திசையும் பாரு முற்றன வுலைந்த தாழி
யழிந்தன கருவி வான மண்டமுங் குடைந்த மாதோ. (உ0)

கல்லென விரங்கு பேரி கரடிகை துடியே காளஞ்
சல்லரி திமிலை தக்கை தண்ணுமை படகங் கோடு
வல்லிய வுடுக்கை சங்கம் வான்குட முழவ மாதிப்
பல்லிய மனந்த கோடி பாரிட மியம்பிச் சென்ற. (உக)

கள்ளலம் புற்ற தண்டார் கவினிய மொய்ம்பிற் பூத
வெள்ளமங் கேக லோடும் விரிந்தெழு பூழி மாலை
தள்ளருஞ் சுடர்கண் மாற்றி யகிலமுந் தானே யாகி
யள்ளலங் கடலின பேழ்வா யடைத்தது திடரே யாக. (உஉ)

கலகல மிழற்று நோன்றாட் கழல்புனை பூத வெள்ளம்
வலவயி னெல்கு மேந்தும வள்ளுறை வழுத்திச் சூழ்ந்து
செலவுறு கிரிகண் மானச் சென்றுதந் தலைவ ரோடு
மலைபொரு மளக்கர் வேலை யகன்கரை யிறுத்த வம்மா. (உங)

மடங்கலை யுறழு மொய்ம்பின் மாபெரும் பூத வெள்ளந்
தடங்கழல கலிப்பத் தாளிற் சலசல வொலிப்ப மாறு
நெடுந்திரை யலமந் துளர நேமியங் கடலே யாறு
நடந்தன பொறையாற் றாது சேடனு நடுக்க முற்றான். (உச)

படிதவிர் பூத வெள்ளம் படர்தலும் பரட்டின் காறுங்
கடலள வமைந்த தன்றே கனல்விழிச் சுறவு சின்னை
கெடலருந் திமிங்கி லாதி கிடம்போ லுலவா நின்ற
வடியுறை பரலே போன்ற வதற்படு கிரிகண் முற்றும். (உரு)

தந்திரப் பூத வெள்ளந் தடங்கட லாற்றிற் சார
வெந்திறற் றுணைவர் யாரும் விரிஞ்சனு மாலு மற்றை
யிந்திரத் தலைவ னாறு மிமையவர் பலருஞ் சூழ
வந்தரத் தாற்றிற் சென்று னறுமுக னணித்திண் டேர்மேல். (உசு)

மாறுபட் டவர்மேற் செல்லும் வயப்பெரும் பூத ரேக
வாறுபட் டமரு முந்நீ ரலமந்து தெளிவின் றாகிச்
சேறுபட் டிறைய தொன்று தேய்ந்திடு முன்ன மன்னே
நீறுபட் டெழுந்து சென்றெவ் வுலகமு நிமிர்ந்து சூழ்ந்த. (உஎ)

இவ்வகை யயில்வே லண்ணல் விராயிரம் பூத வெள்ளங்
கவ்வையி னமைந்து செல்லக் கனைகடல் வரைப்பி னேகி
யெவ்வம தடைந்த தொல்லை யிலங்கையங் குவடு நீங்கி
மைவரை புரைசூர் மேவு மகேந்திர புரமுன் போந்தான். (௨௮)

வேறு.

போந்தகாலை யயலின்வந்து போற்றியங்கை கூப்பியே
நாந்தகஞ்சி லைகதை நலங்கொள்சங்கு சக்கர
மேந்தினானு நான்முகனு மிந்திரத் தலைவனு
மாய்ந்துநேடி யின்னதன்மை யாவமோ டியம்பினார். (௨௯)

காண்டியீது சூரனூர் கடுங்கணீசா செறிகலா
லாண்டுசேறன் முறையதன் றதற்கடுத்த வெல்லையா
மீண்டுபாச றைத்தல மியற்றுவித் திருந்தபின்
வேண்டுமாறு புரிதியைய வினையநாடி யென்னவே. (௩௦)

குன்றெறிந்த முருகனன்ன கூற்றுணர்ந் திசைந்திடா
நன்றிதென் றருட்கண்வைத்து நாகர்கமபி யன்றனை
மன்றவன்பொ டேவிளித்து வல்லையீண்டு பாசறை
யொன்றுசெய்தி டென்னலு முளஞ்சிறந்து புகலுவான். (௩௧)

தாரகற் கடந்தவேற் றடக்கைவீர வீண்டியா
னேரிறைக்கு முன்னமாக வோங்குபா சறைத்தலஞ்
சீரிதிற் படைக்குவன் றெரிந்துகாண்டி யுனதுபே
ராரருட் டிறத்தினென் றடித்தலம் பணிந்துபின். (௩௨)

மாடகூட மண்டபம் வளங்கொள்சோலை வாவிகள்
பீடுலாய கோபுரம் பிறங்குவீதி யோதிசை
கோடிகோடி யாக்கிமற்றொ ரோநக ரியற்றியே
நாடுமேம கூடமென்று நாமமொன்று நாட்டினான். (௩௩)

கருத்திலன்ன வன்செயுங் கவின்கொள்பாடி வீடுகண்
டருத்தியான் மகிழ்ச்சியெய்தி யருள்புரிந்து கந்தவே
டிருத்தகுஞ் சனங்கள்போற்றி செய்யவாண்டு சென்றபின்
மருத்தனுந்து தேரிழிந்து மந்திரத்தை நண்ணினான். (௩௪)

அந்தமற்ற பூதர்தம்மை யாவணங்க ணிறுவியே
முந்துகொற்ற வயவர்நான் முகத்தனாதி யவரொடு
மந்திரத்து ளேகியே மகிழ்ந்துவீற் றிருந்தன
னிந்திரப் பெருமடங்க லேறுதாங்கு தவிசின்மேல். (௩௫)

ஒன்பதோ டிலக்கவீர ரோங்கலாள ரறுவர்க
ளன்புசெய்து போற்றிசெய்ய வறுமுகேச னமரர்கண்
முன்புசெய் பணித்திற முறைப்படப் புரிந்திட
வின்பினோடு மேமகூட வெழிலிருக்கை வைகினான். (௩௬)

வசனம்.

வலிய அரக்கரை வெல்லும்பொருட்டுக் குமாரக்கடவுள் செல்லுகின்றார்; அவரைத் தேவர்களும் சூழ்ந்து செல்லுகின்றார்கள்; நானும்செல்வது உசிதமாமென்று நினைந்தவன்போலச் சூரியனும் உதித்தான். அப்போது முருகக்கடவுள் வீரவாகுதேவரைநோக்கி, சூரபன்மன்முதலியோரைவென்று தேவர்களை வாழ்விக்கும்பொருட்டு நாம் இப்பொழுதே மகேந்திரநகரத்துக்குப் போகவேண்டும், நமது தேரை விரைவிற் கொணாகவென்று கட்டளையிட அவர் வாயுதேவரைநோக்கி, உடனே தேர்கொண்டுவாருமென்று கட்டளையிட்டார், அந்தக் கட்டளையின்படியே வாயுதேவரும் தேரைக்கொண்டுவந்து சண்முகக்கடவுள் சந்நிதியில்நிறுத்த, அப்பெருமான் அந்தத் தேர்மீதிலேறுதலும், பிரமன்முதலிய தேவர்களும் வீரவாகுமுதலியோரும் தத்தம வாகனங்களிலேறிப் பின்றொடாந்தனா. சுப்பிரன், மேகமாலி, சுவேதசீரிடன், சுபாலி, அப்பிரசித்து, சித்திராங்கன்முதலிய நூற்றெண்மராகிய பூதப்படைத்தலைவரும் சூழ்ந்து சென்றனர். இரண்டாயிரவெள்ளம பூதவீரரும் ஆரவாரத்தோடு சென்றனா. இப்படி குகப்பெருமான் போவதைக்கண்ட தேவர்கள் பெருங்களிப்புக்கொண்டு பூமழைபொழிந்தார்கள். பூதங்கள் குடமுழாமுதலிய வாத்தியங்களை முழக்கிக்கொண்டு முன்சென்றன.

இவ்வாறுசெலலும் படையின் காற்றுகளானது கடலைத் திடராக்கிவிட்டது. படைகள் கடலைவழியாகக்கொண்டுவர, விசும்பாறுக அறுமுகக்கடவுள் அதிவேகமாகச்சென்று மகேந்திரநகருக்கருகே சோந்தார். அப்போது பிரமனமுதலிய தேவர்கள் குமாரக்கடவுளைவணங்கி, இது சூரபன்மன்வாழுகின்ற நகரமாதலால் இதில் தங்குதல்தகுதியன்று, வேறுபாசறை யமைத்துக்கொள்வதே தகுதியென்றார்கள். அப்படியேயாகுகவென்று தெய்வத்தச்சனையழைத்துக் கட்டளையிடுதலும், அவனும் ஒரு நொடிப்பொழுதில் மாடகூடங்கள், மண்டபங்கள், சோலைகள், வாபிகூபதடாகங்கள், கோபுரங்கள் முதலியவற்றைச்சமைத்து, அவற்றிற்கு ஏமகூடமென்று பேரிட்டுத்தர, அந்த விசித்திரமான வேலைப்பாடமைந்த பாசறையில் அறுமுகன் மனமகிழ்வோடெழுந்தருளி அங்கே தனக்கென்றமைக்கப்பட்ட மந்திரத்தில் பிரமன்முதலிய தேவர்களும் ஏனையோரும்சூழ்ந்து வழிபட்டுநிற்க எழுந்தருளினன்.

ஏமகூடப்படலம் முற்றிற்று

---

# வரவுகேள்விப்படலம்.



ஏகநா யகனு மைய னிவ்விடை யிருந்த வெல்லை
நாகாமே லளிவைத் துள்ள நாரத னவற்றை நாடி
மாகநீள் புரிசை சூழ்ந்த மகேந்திர புரத்திற் சென்று
போகமா ருலகின் மேலாம் புரவலன் கோயில் புக்கான். (க)

புக்கன னவுண ருய்ப்பப பொருவிலா விகல்வெஞ் சூரன்
மிக்குயர் திருவி னேடும் வீற்றிருந் திடுதல் காணூஉ
விக்கென விளைய தீயோ னிறப்பவென் றுன்னி வாயாற்
றக்கதோ ராசி கூறிச் சார்ந்தனன் றவத்தின் மேலோன். (உ)

அங்கைகண் மலர நின்றே யாசிசெய் தானை நோக்கி
யெங்குளை யிங்கு வந்த தென்னைநீ யாரை யென்ன
மங்கையோர் பங்கன் மேவும் வடபெருங் கயிலை வாழ்வே
னுங்குலந் தலைமை யாக வைகலு நோற்றல் செய்வேன். (௩)

கைதவம் புகலேன் வெய்ய காமமே முதல நீத்துச்
செய்தவம் பலவு முள்ளேன் றேவருக் கிடுக்கண் செய்வேன்
மைதவிர் புகரி னோடு மருவுநண் புடையே னின்பா
லெய்தியொன் றுரைக்க வந்தே னாரத னெனும்பே ருள்ளேன். (௪)

சிந்துவான் மதிதோய் வேணிச் செல்வனின் னடிவ தாகக்
கந்தனு முருகன் றன்னைக் காமர்கண் ணழலா னல்க
வந்தமா மதலை தன்பா லையவுன் பணிய தாற்று
மிந்திரா தியர்க ளேகி யிறைஞ்சியே யேத்தி யுற்றார். (௫)

உற்றுளார் தமக்கு நின்னு லுறுதுயர் குமரன் கேட்பச்
சொற்றன ரஞ்ச லென்று தொல்சிவ னருண்மேற் கொண்டு
கொற்றவெம் பூதவீரா குழாத்தொடும் புவியி னேகி
மற்றுன திளவ றன்னை வரையொடும் வேலாற் செற்றான். (௬)

ஆண்டது புரிந்த பின்ன ரறுமுகன் செந்தி மேவித்
தூண்டின னினக்கோ ரொற்றைத் துண்ணென வவனும் வந்து
மீண்டபின் புகுதி நாடி வேலையைக் கடந்து தன்பா
லீண்டிய படையொ டனு னிந்நகர் வடபால் வந்தான். (௭)

ஆங்கனம் பாடி வீடொன் றுற்றுவித தனிகம் யாவும்
பாங்குற விருந்தான செவ்வேள் பாத்தன னினைய வெல்லா
மீங்கிது நிகழ்ந்த வண்ண மென்றலு மவுணர் கோமான்
றீங்கன லென்னச் சீறி நகைத்திவை செப்ப லுற்றான். (௮)

வேறு.

மேனிமிர் கொண்ட லுயர்த்தவ னம்புய மிசைவேதா
நீனிற மாயவ னாரது போல நினைந்தானோ
வானொ லண்டமொ ராயிர கோடியு மரசாளவேன்
மாநகர் மேலொரு பாலக னும்பொர வருவானே. (௯)

அரியி னினஞ்செறி சூழலி னன்னவை யடலுன்னிக்
கரியது கன்றுழை கலைபிற வற்றொடு கடிதேகிற்
பொருது வயங்கொள வலலது கொல்லது போலன்றோ
முருகனும் வெம்படை யுடனிவண் வந்திடு முறைதானே. (௧௦)

வேலை கடந்தென தானை யிகழ்ந்து வியன்பூதச்
சால நெடும்படை தன்னுட னிந்நகர் சார்வானுங்
கால மிதங்கவன் வீர மழிப்பல் கருத்திலனாய
பாலக னென்றும் விடேன்வசை யென்பதும் பாரேனல். (௧௧)

முன்னொரு சூழ்ச்சியி னசமுகி யொண்கர முரிவித்தே
யொன்னல ராயம ரும்பர்கள் யாவரு முய்ந்தாரோ
வென்னிளை யானொடு மெற்பினை யடடன மெனவுன்னித்
தன்னுயிர் போவ தறிந்தில னிந்நகர் தனின்வந்தான். (௧௨)

ஆழிய தெண்டிரை யாழி கடைந்தவ னலகில்லா
வேள்வி புரிந்திடு வாசவ னம்புய மிசைமேயோன்
வாழிய நம்பெயா கூறினு மஞ்சினர் மறைகுறமுர்
பூழிபு ணைந்தவர் பாலக னேவமர் புரிவானே. (கங)

அந்தர மேல்வரு செங்கதி ரைச்சிறை யமர்வித்த
மைந்தனை நாற்படை தன்னொடு மேவி வயப்போரான்
முந்திய பூதரை யேனைய வீரரை முடிவிததே
கந்தனை யொல்லையின் வெறறிகொளா வேனிது காண்கிற்பாய். (கச)

என்றசு ரேச னிசைத்தலு நாரத னிவைகேளா
நன்றிது நன்றிது தாழ்ககலை யின்னினி நகாசூழச்
சென்றவ னைபபொர நின்படை யேவுதி செலகின்றேன்
வென்றி நுமக்குற நோறறிடு வானென விண்போனுன. (கரு)

வேறு.

நாரத னினைய கூறி நகையொடு போத லோடுஞ்
சூரரு ளாற்றன் மிக்கோன் றுண்ணென வயலி னின்ற
கொரனுற் கோர னென்னு மொறறரைக் குறிததுநோககி
வாரிதி யிறைவற் பற்றி வலலையிற் கொணாதி ரென்றான் (கசு)

என்றலு மனைய ரோடி யெறிகடற் கரசைக் கூவி
வன்றிற லோடு பற்றி வல்லைமுன கொணாந்தே யுய்பபக்
கன்றிய மனத்த னகிக் கைதொழு தவலங் கூாந்து
நின்றன னவனை நோக்கி நெருபபெழ விழித்துச சொல்வான (கஎ)

பவ்வநீ ரரச கேண்மோ பங்கயத் தவனு மாலுஞ்
செவ்விதி னுணரா வண்ண மொளிததவன் சிறுவன் றன்னை
வெவ்வலி கடந்த பூத வெள்ளததை நமது மாறு
லிவ்விடை விடுத்த தெனனை யென்னலு மிசைகக லுமறுன். (கஅ)

மண்படு புவனம் போற்று மன்னகேள் புயங்க மீது
கண்படு முகுந்தன் வேதாக் கடவுளர் தலைவ னேடு
மெண்படு துணைவ ரானேர் யாவருமப புடையிற சூழ
விண்படு நெறியிற் சென்றான் வீரவேற றடக்கை யண்ணல். (ககூ)

மடல்கெழு நீபத் தண்டார் வள்ளல்வா னெறியிற் போத
மிடல்கெழு பூதரென்பான் மேவினா சென்று றன்று
ரடிகளின் பரட்டின் காறு மமைந்தில னவரை யானே
தடைசெய வல்லேன் போலுந் தக்கதே யிதுமற றன்றே. (உ௦)

ஊழியு முலையாப் பூத ரொல்லெனச் செல்லத் தாளிற்
பூழியா லளறு பட்டாங் கிடையறப் புலம்ப லுற்றே
னூழிய னென்னும் பேரு மற்றனன் வசையே பெறறே
னேழையேன் செய்வ தென்கொ லெதிருண்டோ வலியர்க் கம்மா. (உக)

தெள்ளிதிற் றமிழ்தேர் காட்சித் திருமுனி கரத்தில் வாரி
யுள்ளுறக் கொண்ட தேபோ லொலலையின் மிசைவர் போலாங்
கொள்ளையிற் சேறுபூ தாக்கு ளொருவரோர் குடங்கைத் தன்னி
னள்ளுதற் காற்ற கில்லே லதலி னுய்ந்தே னன்றே. (உஉ)

உடல்சின வசனி தன்னை யொண்பணி விலக்க வற்றோ
கடுமுர ணரிமா னேற்றைக் களிறெதிர் விலக்கிற் றுண்டோ
மிடல்கெழு விதியைப புந்தி விலக்குமோ வஃதே யன்றோ
வடன்மிகு பூதர் தம்மை யளியனேன் றடுப்ப தென்றான். (௨௩)

இற்றெலா மவுணர்க் கோமா னிசைத்தலு மெய்து ளக்க மெய்தி
திற்றலு நெடுவே லண்ண னீணகர் நணிய தன்மை
யொற்றறிற் சிலவர் காணா வோடின ரொல்லை சென்று
கொற்றவற் பணிந்து நின்றே யிவையிவை கூற லுற்றார். (௨௪)

அராவணை யண்ணல் வேதா வரிமுத லமரர் சூழ
விராவுறு மிலக்கத் தொன்பான் வெலற்கரும் வீரர் போற்ற
விராயிரம பூத வெள்ள மீண்டிட வெறிநீர்ச் சென்னிப்
பராபரன் மைந்த னந்தம் பதிவட திசையிற் போந்தான். (௨௫)

வடதிசை யதனிற போந்து வானவர் புனைவற கொண்டே
படிபுகழ் தகைமைத தான பாசறை புரிவித் தாங்கே
புடைதனி னளிக மான பூதவெவ் வீரர் மேவ
நடுவணோ நகரந் தன்னி னண்ணிவீற றிருந்தா னன்றே. (௨௬)

கண்டன மிதனை யின்னே கடவது புரிதி யென்னாத்
திண்டிறல் வெய்ய தூதர் செப்பலு மதனைக் கேளா
வண்டமும் புவனம யாவு மலமர வழலிற் சீறிப்
புண்டிகழ்ந் தனைய கண்ணா னிவையிவை புகல லுற்றான். (௨௭)

ஆ திருவிருத்தம - ௬௩.

---

வசனம்.

இவ்வாறு குமரவேள் எழுந்தருளியிருக்கும்போது சூரபன்மனிடம் நாரத முனிவர் வருதலும, அவன் அவரைநோக்கி, நீர் யாரென்றுகேட்க, அவர் என்பேர் நாரதமுனியென்றும, குமரவேள் வீரவாகுதேவரைத் தூதுவிட்டதும், தாரகனைக் கிரவுஞ்சமலையோடு களைந்ததும, அந்தச் சண்முகக்கடவுள் இப்பொழுது திருச் செந்திற்பதியைநீங்கி, இந்த நகரத்துக்கு வடதிசையில் தமக்கு பாசறையொன் றமைத்துக்கொண்டு அதில் தமதுபடைகளோடெழுந்தருளியிருக்கிறானென்றும, இந்தச்செய்தியை உனக்கறிவிக்கவந்தேனென்றும சொல்லிநின்றார். இதைக்கேட்ட சூரபன்மன் நெருப்புப்போலச்சீறி நகைத்துச் சொல்லலாயினன்.

முனிபுங்கவரே! அந்தமுருகன், இந்திராதியருடைய நகரங்கள்போல என் மகேந்திரநகரையும் எண்ணினானோ, ஆயிரத்தெட்டண்டங்களையும் அரசாண்டுவருகிற என்னோடு இந்தச்சிறுவன் போர்செய்யப்புறப்பட்டானே, இது எப்படியிருக்கிறதென்றால், குகையிலிருக்கிறசிங்கத்தோடு யானைக்கன்று போர்செய்யவந்தது போலிருக்கின்றது. முன்னேயொரு தந்திரத்தால் என்தங்கையாகிய அசமுகியின் கையைச்சிதைத்த தேவர்களெல்லாரும் பிழைத்துப்போனார்களா? இக்குமரன் என் தம்பியாகிய தாரகனோடு கிரவுஞ்சத்தையும்வென்ற செருக்கினால், தன்னுயிரிழக்கப்போவதையறியாமல் இங்குவந்தான், இந்திரன்முதலிய தேவர்களும் என்பெயர் கேட்டாலும் அஞ்சுவார்களே, அப்படியிருக்க இந்தச்சிறுவனோ என்னை வெல்ல வல்லவன்! தொட்டிலில் விளையாடிக்கொண்டிருந்தகாலத்திலேயே சூரியனைச்

சிறைவைத்த என்புதல்வனாகிய பானுகோபனைக்கொண்டு, இவனையும் இவனுக்குதவியாய்வந்த பூதவீரர் முதலியோர்களையும் இப்பொழுதே வெற்றிகொள்வேன், நீர் பார்க்கப்போகிறீர் என்றுசொல்ல, நாரதமுனிவர் சூரபன்மனைநோக்கி, நீ விரைவாகச்சென்று அந்தச் சிறுவனைவெல்ல வழிதேடுவாயாக, நானும் உங்களுக்கு வெற்றியுண்டாக்கும்பொருட்டுத் தவஞ்செய்யப்போகிறேனென்றுசொல்லி ஆகாயவழியாகச்சென்றார்.

பிறகு சூரபன்மன், கோரன் உற்கோரன் என்னும் இரண்டு தூதரையனுப்பி வருணனைவரவழைத்து நெருப்பெழநோக்கி, முருகனென்னுஞ் சிறுவன் எனது நகரத்திற்குவருமபடி அவனுக்கு நீ யெப்படிவழிவிட்டாயென்றுகேட்க, அவ்வருணன் அஞ்சிநின்று, இறைவனே! யானென்செய்வேன், அந்தச்சிறுவனைச் சூழ்ந்துவந்த பூதப்படைகள் என்வழியாய்வரும்போது, நான் அவர்களுடைய காற்பரட்டினளவாகவேயிருந்தேன். அப்படியிருக்க, அவர்களைத்தடுக்க என்னால்முடியுமோ என்று சொல்லிக்கொண்டிருக்கையில், சில தூதுவர் ஓடிவந்து இறைவனே! முருகன் பூதப்பெரும்படையுடனேவந்து நமது நகரத்தைச்சூழ்ந்துகொண்டானென்று சொல்லக்கேட்ட சூரபன்மன், அண்டகோடிகளெல்லாமநடுங்கும்படி சிரித்துச் சொல்லத்தொடங்கினான்.

வரவுகேள்விப்படலம் முற்றிற்று.

---

# முதனாட்பானுகோபன்யுத்தப்படலம்.



கோதை வேலுடைக் குமரன தாற்றலுங் கொற்றப்
பூத ராற்றலு மேனைய ராற்றலும போர்செய்
தூத னாற்றலுந் தொலைககுவன் றுண்ணென நீவி
ராத வன்றனிப் பகைஞனைக் கொணாதிரென் றறைந்தான். (க)

ஆன காலையி னன்றெனத் தூதுவ ரகன்று
பானு கோபன திருக்கையுக கணையவற் பணிந்து
மேனி லைப்படு தந்தைதன் பணிவிடை விளம்ப
மான வாலரித் தவிசுவிட் டெழுந்தனன் மன்னோ. (உ)

தொல்லை மந்திரத் தலைவருஞ் சுற்றமா யினரு
மெல்லை தீர்தரு தானையந் தலைவர்க ளியாரு
மொல்லெ னப்புடை சூழ்ந்தன ருருமுகா னறென்னப்
பல்லி யங்களு மார்த்தன போர்த்தன பதாதி. (ங)

அக்க ணத்தினி லிரவியம் பகைஞனே ரணித்தேர்
புக்கொ ராயிர கோடிவீ திகளொரீஇப் புடையிற்
றொக்க வீரரிற் கண்டுளார வயின்வயி னொழுபபோய்
மிக்க தாதைதன் றிருநக ரடைந்தனன் விரைவின். (ச)

தேரி னின்றிழிந் தண்ணலங் கோயிலுட் சென்று
சூர பன்மனை யணுகியே யவனடி தொழுது
வீரவீரநீ யெனையிவண் விளித்ததென் னென்ன
வாரி ருங்கழன் மன்னவ னின்னன வகுப்பான். (ரு)

முந்து தாரக வெம்பியை வரையொடு முடித்த
கந்தவேள் செந்தி நீங்கியே யளக்கரைக் கடந்து
நந்தி தன்கணத் தலைவரும் பூதரு நணுக
விந்த மாநகர் வடதிசை வாயில்வந் திறுத்தான். (௬)

சிந்து போன்றுல களந்திடு கள்வனுஞ் செயிர்தீர்
கந்த மாமலர்க் கடவுளு மென்பணி கடந்த
விந்தி ராதியர் யாவரும் பிறருமா யீண்டி
வந்து ளார்களா மறுமுக மதலைதன் மருங்கு. (எ)

அளிய ராகிய வமரரு மரன்றரு மகவு
மொளிறு வாட்படை நந்திதன் கணத்தினு ளோருங்
களியின் மூழ்கிய பூதருங் கடிதுவந் தடைதற்
கெளிது பட்டதோ நன்றுநன் றினையமா நகரம். (அ)

பின்னை தன்னுட னடுக்கலை மைந்தனைப் பிறரை
முன்ன மட்டிடு மாறலா தங்களை முருக்கச்
சென்னெ றிக்கொடு போதலென் கடனவர் சிறியர்
மன்னர் மன்னன்யா னுதலி னிருந்தனன் வறிது. (௯)

அந்தண் மாமுகி லுயர்த்தவன் வேண்டலு மமலன்
றந்த கந்தனைச் சாரதத் தலைவர்க ளோடு
நந்த மைப்பொர விடுத்தன னுதலி னுனு
மைந்த திறகொடு வென்றிபெற் றிருந்திடல் வழக்கே. (௰)

ஆத லாலினிப் படையொடு மமர்க்களத் தடைந்து
நாதன் மைந்தனை நந்திதன் கணத்துளார் தம்மைப்
பூதர் தங்களைப் பொருதழித் தடலயம புனைந்து
காதன் மைந்தநீ மீடியா னம்முனங் கடிதின். (௧௧)

வேறு.

என்றிவை சூர்முத லிசைப்பக் கேட்டலும்
பொன்றிகழ் தடம்புயம் பொருப்பிற் சேட்செல
வொன்றிய குமிழ்வடி வுடலம் போர்த்திட
நின்றிடு திருமக னிவைநி கழ்த்துவான். (௧௨)

இருளுறு மிடற்றின னேவு மைந்தனை
மருளுறு பூதரை மற்று ளாரதமை
வெருளுறு சமரிடை வென்று மீள்வதோர்
பொருளென நினைந்துகொல் புகன்றி யிற்றெலாம். (௧௩)

பன்னுவ தென்னினிப் பரமன் கான்முளை
யிந்நகர் நணுகுமு னெதிர்ந்து போர்செய்வா
னென்னலே வினவின னீய தோர்ந்திலை
பின்னிது புகலுதல் பிழைய தாகுமால். (௧௪)

படைப்பெருந் தொறுவொடும் படர்ந்து கந்தனை
யடுத்தனன் பேரம ராற்றி வென்றிகொண்
டிடுக்கணில் பூதரை யேனை யோருடன்
முடித்திவண் வருகுவன் முதல்வ காண்டிநீ. (௧௫)

கந்தனை விறல்கொடே யவன்றன் கட்படு
செந்திரு மார்பனைத் திசைமு கத்தனை
யிந்திரக் கள்வனை யிமைப்பிற் பற்றிமுன்
றந்திடு கின்றனன் றகுவ செய்தியால். (௧௬)

என்றிவை கூறியே யிறைஞ்ச மைந்தநீ
சென்றனை வருதியாற் றிறலி னோடென
நன்றென விடைகொடு நடந்து நன்கமை
பொன்றிகழ் தனதுதேர் புகுந்து போயினான். (௧௭)

தொலலையிற் பரிசனம் புடையிற் சூழ்தரப்
பல்பதி னாயிரந் துணைவர் பாற்பட
வொல்லென வியம்பல வொலிபப வேகுரு
வெலலையம் பகைதன திருக்கை யெய்தினான். (௧௮)

பண்டியந் தேரினுந் தணந்து பாங்கரின்
மண்டுறு தூதரை வல்லை கண்ணுறீஇ
யெண்டரு நம்படை யாவு மிவ்விடை
கொண்டனை வீரெனக் கூறிப் போயினான். (௧௯)

ஏயிரும் பரிசனர் யாரை யுங்கிறீஇ
மாயிருங் கலைமகள் வதிந்து வைகிய
வாயுத சாலையி னவுணர் கோன்மகன்
போயினன் றொழுதனன் பூசை யாற்றினான். (௨௦)

கயிரவ நிறத்தபூங் கச்சு வீக்கினான்
வயிரவொள் வாளினை மருங்கு சேர்த்தினான்
வெயில்விடு பொன்றுகின் மீது சுற்றினான்
றுயிலறு மமரரைத் துளக்கங் கண்டுளான். (௨௧)

செல்லிடை யுருமெனத் தெழிக்கு நோன்கழல்
கல்லென வரற்றிடக் கழலிற் பூட்டினான்
வல்லிதிற் சாலிகை மருமஞ் சேர்த்தினான்
சொல்லினு நிவந்தெழு தூண்செய் தோளினான். (௨௨)

கோதையை யங்கையிற் கொளுவிச் சுற்றினான்
போதுற ழங்குலி புட்டி ருங்கினான்
சோதிகொள் சரம்படு தூணி யைச்சுவன்
மீதுற வீக்கினான் விறலின் மேலையோன். (௨௩)

வெம்பெரு நுதன்மிசை விசயப் பாலதாஞ்
செம்பொனின் பட்டிகை திகழச் சேர்ததினான்
பம்புறு மணிகலம் பலவுந் தாங்கினான்
றும்பையஞ் சிகழிகை மவுலி சூட்டினான். (௨௪)

வடித்ததோர் பெருஞ்சிலை வயமுண் டாகவென்
றெடுத்தனன் விடுத்திடின் யாவர் தம்மையும்
படுத்திடு மோகமாம் படையொன் றேந்தினா
னடுத்திடு செறுநர்தம் மாற்ற லுன்னலான். (௨௫)

ஆனதோர் போரணி யணிந்து வாய்தலிற்
பானுவின் மாற்றலன் படர முன்னரே
போனதோர் தூதுவ ரெழுதிர் போர்க்கெனத்
தானையோ டெழுந்தனர் தகுவர் யாவரும். (௨௬)

வேறு.

விசைய னேமியன் மிகுத்திறன் மாயன்
முசலி கண்டகன் முரன்கரன் மூர்க்கன்
றசமு கன்கனலி சண்டன் விசண்ட
னசமு கன்மகிட னக்கிர வாகு. (௨௭)

விசைய சேனன்விட சேனன் விமோகன்
வசைகொள் சோமகன் மதுச்சசி சிததுச்
சுசிமு கன்னசனி சூனிய கேது
வசுர சேனனி வராதிய ராஞோர். (௨௮)

தடுக்கொ ணாவகை தடிந்திடு தெய்வப்
படைக்க லங்களவை பற்பல பற்றா
வுடைத்த வன்மையுட னையென வந்தார்
இடைத்த தோவம ரெனககிளர் கின்றார். (௨௯)

ஆன காலைபதி னாயிர வெள்ளந்
தான வப்படைஞா சாரபுதொ றேகி
மீன வேலைகளும் வெள்குற வார்த்து
மான வத்தலைவ மாடுற வந்தார். (௩0)

கோல வார்சிலை கொடுங்கதை நீடுஞ்
சூல நேமியயி லேமர மீட்டி
யாலம் வாளகணைய மாரெழு நாஞ்சில்
கால பாசமிவை கைக்கொடு சென்றார். (௩௧)

கந்து கததொகை கடங்கலுழ் கைம்மா
வெந்தி ரத்திரத மீங்கிவை மூன்று
மைந்தொ கைபபடுமி ராயிர வெள்ளந்
தந்தி ரத்தலைவா தம்புடை சூழ்ந்த. (௩௨)

ஐந்து நான்குடைய வாயிர வெள்ளத்
திந்த நாற்படையு மீண்டுபு செலல
மைந்தி னேற்றமிகு மானவர் தத்தஞ்
சிந்தை போற்கடிது சென்றன ரம்மா. (௩௩)

சென்ற காவலர்கள் சேனையி னோடு
மென்ற வன்பகைஞ னெய்துழி நண்ணி
யொன்ற வங்கைதொழு தொல்லென வார்த்துத்
துன்றி வந்துபுடை சூழ்ந்தன ரன்றே. (௩௪)

இரவி தன்பகைஞ னங்கவை காணா
வொருத னேவலனை யொல்லையி னோக்கித்
திருமை பெற்றதொரு தேரினை வல்லே
தருக வென்னவினி தென்று தணந்தான். (௩௫)

செப்பு மத்தொழில் சிரங்கொடு சென்றே
மெய்ப்ப டைக்கருவி மேவுழி நண்ணி
முப்ப தாயிர முரட்பரி பூண்ட
வொப்பி லாவிரத மொன்றினை யுய்த்தான். (௩௬)

உய்த்த தேரினுத யக்கிரி வாவு
மொய்த்த வெங்கதிரின் மொய்ம்பொடு பாய்ந்தான்
மெத்து பேரணிக வெள்ள மியாவு
மத்து ணைப்பொழுதி னூர்த்தன வன்றே. (௩௭)

உரத்த கந்திகளொ ராயிர கோடி
பெருத்து நீண்டசைவு பெற்றிடு பாலை
விரித்து நீட்டியென வெவ்வசு ரேசர்
கரத்தி னெண்ணிலக வரித்தொகை வீச (௩௮)

மற்ற வன்றனது மாசிருண் மேனி
யுற்றி டாதகருமை யாலவ னெய்தா
சுற்றி மீதுலவு தோற்றம தென்னக்
கற்றை வெண்குடைகள் காவல ரேந்த (௩௯)

அடைப்பை கோடிகண் மிஞ்சுட ரொள்வாள்
கடிகொள் பீலிகவி னுற்றக ளாதித்
தொடக்க மேந்திமுறை சுற்றி யனந்தம்
படைப்பெ ருந்தலைவர் பாங்கொடு போற்ற (௪௦)

எழில்செ றிந்தவிர தத்திடை வைகு
மழலின் வெங்கதிரை யாற்ற முனிந்தோ
னுழைய ரிற்பலரை யொய்யென நோக்கி
விழுமி தோமொழி விளம்புத லுற்றான். (௪௧)

காமர் வெம்படை கணிப்பில கொண்ட
சேம மாகியயா மத்தேரொரு கோடி
யேம மோடுகொணா வீரென வோடுந்
தாம வேலுழையா தாழ்ந்தனர் சென்றார். (௪௨)

அண்ட ரும்படை யளப்பில வுய்த்துத்
திண்டி றற்செழுந் தேரொரு கோடி
கொண்டு வந்துழையர் கொற்றவன் மைந்தற்
கெண்டி சைப்புறமு மீண்டுற விட்டார். (௪௩)

ஆண்ட கைக்குமர னன்னது காலை
மாண்ட சீரவலவன் மாமுக நோக்கிப்
பாண்டின் மாத்தொகுதி பண்ணின வித்தேர்
தூண்டு கந்தனமர் சூழலி னென்றான். (௪௪)

என்னலும் விழுமி தேயென முட்கோன்
மன்னு மத்திகையின் வன்றொழில் காட்டித்
துன்னு வாம்புரவி யின்றொகை தூண்டிப்
பொன்னந் தோகடவி னன்புகழ் வெய்யோன். (௪௫)

வெய்ய வன்றனை வியன்சிறை யிட்ட
கைய னேகவது கண்டு புறஞ்சூழ்
மையன் மாலவுண மாபபடை யாவு
மொய்யெ னப்பெரி துலம்பின வன்றே. (சசு)

எழுந்த தானவ ரிகற்படை வெள்ள
மெழுந்த தேர்நிரை யெழுந்தன கைம்மா
வெழுந்த வாசிக ளெழுந்தன வோதை
யெழுந்த கேதன மெழுந்தன பூழி. (சஎ)

அறைந்த பேரிகை யறைந்தன சங்க
மறைந்த காகள மறைந்தன திண்கோ
டறைந்த சல்லிகை யறைந்த தடாரி
யறைந்த தண்ணுமை யறைந்தன தக்கை. (சஅ)

ஆர்தத தேர்த்தொகுதி யார்த்தன வாசி
யார்த்த தந்திநிரை யார்த்தனர் வெய்யோ
ரார்தத வாற்றுவச மார்தத‌ன கண்டை
யார்தத தார்நிரைக ளார்த்தது மூதூர். (சகு)

அதிர்ந்த மாநில மலைந்தன நாக
முதிர்ந்த தாரகை யுலைந்தனர் தேவர்
விதிர்ந்த மேகநிரை விண்டது மேருப்
பிதிர்ந்து போயின பிறங்கல்க ளேழும். (ருo)

ஊழி யான்மதலை யோங்கு படைப்பே
ராழி யோடுற வருக்கன் வெருண்டே
பூழி வான்முகடு போர்தலெழல காணு
வாழி யென்றதின் மறைந்து படர்ந்தான். (ருக)

வாழி மாநகர் வளைந்திடு தொல்பே
ராழி யாங்கடைய வப்படை யாகிச்
சூழும் வேலையிடை தோன்றி யுலாவும்
பூழி தூர்த்துளது பூதர்க ளேபோல். (ருஉ)

விட்ட சோதிநிமிர் விண்மிசை தாக்கப்
பட்டு லாவரு பதாகையி னீட்டம்
வட்ட வானமெனும் வான்பட கத்தைக்
கொட்டு மண்மகள் குலாவுகை போலும். (ருங)

தாழும் வீரர்படை தம்மி னுரிஞ்சப்
பாழி வெங்கனல் பரந்தப தாகைச்
சூழல் வானநதி தோய்ந்தசை காலை
வீழு மாலிகளின் வீழ்ந்திடு கின்ற. (ருச)

வான மோடியன மால்கரி தள்ளுந்
தான மோடின சுரங்களி னோடி
மீன மோடுதிரை வேலையி னோடுங்
கான மோடின களிற்றின மென்ன. (ருரு)

செப்பு தற்கரிய சேனைகள் தன்னிற்
றுபபு மிக்கெழுவு தொல்படை வெள்ள
மிபபு றத்துநெறி யின்றியவ் வானத
தப்பு றததினு மளப்பில சென்ற. (௫௬)

மறந்த ருங்கதிரை வன்சிறை செய்தோன்
செறிந்த தானையுட னிவ்வகை செல்ல
விறந்த சீர்நகரி னிததிற மெல்லா
மறிந்து நாரத னகன்றிடு கின்றான். (௫௭)

வான மேனெறி வழிக்கொடு பூதர்
மேன பாசறை வியன்பதி யுட்போய்
ஞான வாலறிவி னாரதன் விண்ணோ
சேனை காவல னமாந்துழி சென்றான். (௫௮)

சிந்து ரப்பகை சிரததவி சுறற
கந்த வேளிரு கழறறுணை காணுப
புந்தி நாரொடு புகழ்ந்து வணஙகி
யெந்தை கேடகவென வின்ன துரைப்பான். (௫௯)

பூத சேனையொடு பொள்ளென வேகி
யாதி நீயிவ ணமர்ந்தன யாவுந்
தூதா கூறவுயா சூரபன் மாவென்
றோது தீயவ னுணாந்து வெகுண்டான். (௬௦)

திகண்ட முற்பக னெடுங்கதி ரோன்பா
னுகண்ட தன்மகனை யொல்லை விளிததே
யகண்ட சேனையொடு மன்பில னின்மேல்
வெகுண்டு போாசெய விடுததன னம்மா. (௬௧)

விடுத்த காலையவன் வெஞ்சம ராற்றற்
கடுதத கோலமொ டளபபில வான
கடறபெ ருமபடை கலந்துட னேகத்
தடுப்ப ருமவெகுளி தன்னொடும் வந்தான். (௬௨)

இவனு டன்சமரி னேற்பவா நீயுஞ்
சிவனு மன்றியெவா தேவரி னுளளா
ரவனை வெல்வதரி தாகுமு னோர்நாட்
புவனி யுண்டவர் புறந்தர வெனறான். (௬௩)

கரையி லாவமர் கடந்திசை கொண்டான்
வரைவி லாதபல மாயைகள வல்லா
னுரக வேந்தினு முரமபெரி துள்ளான்
பிரம னீந்திடு பெருமபடை பெறறான். (௬௪)

அறைக டறகிறைவ னங்கைகொள் பாச
மறலி தன்பரசு வவ்வினன் மாயோன்
வீறலி னேமிகொள வேண்டலன் முன்னஞ்
சிறிய தந்தையணி குற்ற சிறப்பால். (௬௫)

ஆகை யாலவனை யாள்கொடு வல்லே
வாகை கொண்டிட லுமற்றரி தம்மா
பாகு பட்டபடை பாங்குற நீயே
யேகல் வேண்டுமட வென்று பகர்ந்தான். (௬௬)

நார தன்னிவை நவின்றிடு காலை
மூர லெய்திமுரு கன்புடை நின்ற
வீர வாகுவை விளித்தருள் செய்து
சீரி தாவினைய செப்புத லுற்றான். (௬௭)

ஈண்டு பூதரொ டியாம்வரு தன்மை
யாண்டு சூரனுணர்ந் தந்நகர் தன்னின்
மாண்ட தானையுடன் மைந்தனை நம்மேற்
றூண்டி னமர் தொடங்கிய மன்னோ. (௬௮)

எள்ளு தற்கரிய வெண்மரி லக்க
ருள்ள பேர்களுமொ ராயிர பூத
வெள்ளமும் புடையின் மேவர நீபோய்ப்
பொள்ளெ னப்புரிசை யின்புடை சூழ்தி. (௬௯)

சென்று முன்கடை சிதைத்தனை யங்கண்
கன்றி நேரவுணர் காவலன் மைந்தன்
றுன்று சேனைக டொலைத்தம ராற்றி
வென்றி கொண்டவனை மீளுதி யென்றான். (௭௦)

ஈறும் வேன்முருக னிவ்வகை கூறி
வீர வாகுவை விடுத்திளை யோரைச்
சார தத்தலைவர் தம்முட னேவி
நார தற்கிது நவின்றருள் செய்வான். (௭௧)

கேட்டி யான்முனிவ கேழ்கிளர் சிம்புட்
கூட்ட மீதுசில கோளரி மேவின்
வாட்ட வல்லன்கொல் மாய்குவ தல்லாற்
காட்டு வாமுடிவு காண்டிய தென்றான். (௭௨)

குமர னிலகுவிடை கொண்டு படர்ந்தே
விமல வாலுணர்வின் மேதகு வீரன்
சிமைய மேருநிகர் திண்சிலை யொன்றை
யமரர் கோன்புகழ வங்கை பிடித்தான். (௭௩)

வீக்கினன் கவசம் வெந்நிடை தன்னிற்
றாக்கினன் பகழி பெய்திடு தூணி
நீக்கமில் விரலி னீடுகை தன்னிற்
றூக்கு கோதையொடு புட்டி றரித்தான். (௭௪)

சேம வெம்படை செறிந்திடு வைய
மாம ருங்கினில் வரம்பில செல்லத்
தோமில் வீரமிகு தோளின னங்கோ
ரேம மாமிரத மேறினன் மாதோ. (௭௫)

எட்டி வீரரு மிலக்கரு மேனை
மட்டில் பூதக்கண மனனரு மாக
வொட்டி யாடம ருருக்கொடு கொண்மூ
முட்டு தோதகொகையின் மொய்ம்பொடு புக்கார். (எகு)

தேரின் மேறபடு சிறப்புடை வீரர்
வீர வாகுவை விரைந்தயல் சூழ்ந்தார்
நேரி லாயிர நெடுங்கதி ரொனறைச்
சூரர் தந்தொகுதி சுற்றிய வாபோல். (எஎ)

விரசி யேயமர் விளைந்திட வெஞ்சூ
ரரசன் மாநகரி னுயிர வெள்ளம்
பரிச னங்களபடர் மின்கடி தென்று
முரச றைந்தனர்க ளாயிடை மொய்ம்போர். (எஅ)

அறைந்த காலைதனி லாயிர வெள்ள
நிறைந்த பூதர்நெடு வேன்முரு கன்பாற்
செறிந்து போற்றியிட வேனையர் சென்று
றுறைந்த வாகலி யுடைந்தது போல (எகூ)

அருத்தி யிற்படரு மாயிர வெள்ளக்
கிருததி மததவர் கிளாந்திடு தீப்போ
லுருதது வேலையி னொலித்துய ரூழி
மருததின் வன்மைகொடு வந்திடு கின்றார். (அ0)

பைய ராவிறை பரித்திடு கின்ற
வையம யாவையுமொர் வாகுவின் வைக்குங்
கையா காலனை யடுந்தறு கண்ணா
வெய்ய ரானவாகள் யாரினும் வெய்யோர் (அக)

அரத்த வேணிய ரடும்படை யேந்துங்
கரத்தர் வெங்கழல் கலிதுதிடு தாளா
வரத்தின் மேதகையா மாயைக டந்தோ
ருரதத னண்டமு முடைத்திட வல்லோா. (அஉ)

இனைய தனமையினா லெணடிய பூத
ரனைவ ருஞ்செல வவர்க்கிறை யானோர்
தனது தொல்லிளைஞர் தம்மொடு சென்றுங்
வனைக ருங்கழல் வயம்புனை வாகு. (அங)

செல்ல லுந்திமிலை செல்லுறழ் பேரி
கல்லெ னுங்கரடி காகள மாமபல்
சலல ரிபபறை தடாரி யுடுக்கை
பல்லி யம்பிற முழங்கின பாங்கர். (அச)

மாறில் சேனையிடை வந்தெழு தூழி
நீறு பூசிமுடி நீடிய கங்கை
யாறுதோய்ந்தகல் விசும்பிடை யாடி
யேறு கொண்டகொடி யீசனை யொப்ப. (அரு)

பாய சாரதர் படைக்கு ளெழுந்தே
யாய பூழியவு ணபபடை தன்னிற
சேய பூழியொடு சேரவன தாமுன்
போயெ திரந்தமா புரிந்திடு மாபோல். (அசு)

பான்மை யின்னன படைப்புற வெண்ணில்
சேனை வெள்ளமொடு திண்டிறல வாகு
தூந லந்தவறு சூருறை மூதூர்
வானு லாம்புரிசை மாடுற வந்தான். (அஎ)

வேறு.

ஆனதோர் காலையி னதனை நோக்குறீஇத்
தானவ ரொருசிலர் தரிபபின் றேடிமேய
சேனையங் கடலினைத தீர்ந்து வல்லைபோய்ப்
பானுவின் பகைஞனைப பணிந்து கூறுவார். (அஅ)

மாயிருந் தானைகண் பருங்கு சூழ்ந்திட
நீயமா செயவரு நிலைமை நாடியே
வேயென முந்திவண் மேயி னன்றனை
யேயினன் குமரவே ளேகப்பச்சு யீதென்றார். (அகூ)

மற்றிவை யவுணர்கோன் மதலை கேட்டலுங்
கறமறையங் கதிர்மணிக் கடகக கையினை
யெறறினன் முறுவலசெய் தெயிறு தீயுகச்
செறறமொ டியிர்த்திவை செபபன் மேயினன். (கூo)

இருந்திடு பாலனை யெனஞெ டேபொர
விரைந்தெதிர் தூதனை வியன்ப தாதியாய்ப்
பொருந்திய பூதரைப போரகக ளததியான்
றுரந்திடு கின்றனன றொலைந்து போகவே. (கூக)

அந்தர வரைபபினி லாசை யெட்டினில்
வந்திடு மளக்கரின மறமை நேமியிற
கந்தனு மொறறனுங் கணங்கள யாவருஞ
சிந்தினா வெருவிமேய திரியக காண்பனால. (கூஉ)

புன்மைய ராகிய பூதா சேனையும்
வன்மையி றாதனு மழலைப பிள்ளையுந்
தொன்மிட லொருவிமேய தொலைந்து போகினு
மென்மன வெகுளியு மேகற பாலதோ. (கூங)

விடுகில னவர்தமை மேலை யேழ்பெருங்
கடறிசை முழுவதுங் கடநது செலலினும்
புடையதா சுறறியே போர்க்கு றுதிவட்
டொடுவரு கின்றனன் குறுகிப பறறியே. (கூச)

மேவலி லவாதமை மேலை நமபெருங்
காவலன் முனபுறக் காட்டி யிவ்விடைத்
தேவர்க டமமொடுஞ் சிறையில வீட்டுவ
னேவரு மெனதுசீ ரிறைஞ்சி யேத்தவே. (கூரு)

என்றிவை பற்பல விசைத்துசூர்மகன்
கன்றிய மனத்தொடு கடிது சேறலுந்
துன்றிய வவுணர்தந் தொகுமுன் போயின
பொன்றிகழ் வடமதிற் புதவு நீங்கியே. (௯௬)

ஆனதோர் காலையி னடையும் பூதவெஞ்
சேனையி னாற்றலுந் திறலுங் கண்ணுறீஇத்
தானவர் கூறுவார் சமர்கண் டோடிய
வானவ ரன்றிவர் வலியர் போலுமால். (௯௭)

என்னினு மிங்கிவ ரெம்மொ டேபொரும்
வன்மையு முடையரோ வரம்பில குன்றெலாம்
பொன்மலை யதனொடு பொருவ தேயினு
மின்மினி கதிரினும விளங்க வலலதோ. (௯௮)

என்றிவை போல்வன வினையி ரானவ
ரொன்றல பலபல வுரைத்து வெகுசினங்
கன்றிய வழல்விழிக் கணத்தின் சேனைமேற்
சென்றனர் தெழித்தனர் சிலைத்த பலவியம். (௯௯)

வயிர்த்திடு பூதர்கண் மறலி யென்றுல
கயிர்த்திடு மவுணரை நோக்கி யப்புவி
யுயிர்த்தொகை யலைத்தவ ருவாகொ லோவெனச்
செயிர்த்தன ரிடித்தனர் தீயர வெம்மையார். (௧௦௦)

கரையறு தானவர் தாமுங் காய்கனல்
புரைதரு சூர்விழிப் பூத வீரரு
பொருவரி னொருவர்போ ருடன்று சேறலா
னிருவகை யணிகமு மிகலி னேறுற்றவே. (௧௦௧)

தந்தியின் கரங்களிற் றண்ட மேந்திடா
வந்தெதிர் தெம்முனை மாய்ந்து வீடுறச்
சிந்துதி யெனுங்குறி செப்பிப் பூதர்மே
லுந்தினர் மீமிசை யுலப்பி ரானவர் (௧௦௨)

பகைத்திடு பூதர்கள் பலரு நாடியே
திகைத்திவை யாவெனச் சிந்தித் தையுறத்
தகைத்தடந் தாளவை தரையின் பாற்படா
துகைத்தனர் பரியெனு மோத வேலையே. (௧௦௩)

காரிடைச் சென்றெனக் களிற்றி னுந்திரை
நீரிடைச் சென்றென நீடு மாவினும
போரிடைச் சென்றனர் பூதத்துப் போற்றியே
தேரிடைச் சென்றனர் வரையிற் சென்றென. (௧௦௪)

ஆடுகரி நிரையினை யாடன் மாக்களைத்
தடநெடுந் தேர்களைத் தணப்பி லாவகை
கடலினை வளைந்திடு கரைய தாமெனப்
புடைதனிற் சுற்றியே புவியி னேகினர். (௧௦௫)

அத்திற மெதிர்ந்திடு மவுணர் பூதர்மேன்
முத்தலை வேற்படை முசுண்டி தோமரஞ்
சத்தியொ டெழுமழுத தண்ட மேழுத
லெத்திறப் படைகளு மெடுத்து வீசினா. (கOசு)

கரங்கொடு பெரும்படைக் கலங்கள் யாவையும்
பரங்கொடு வீசிய பதக ருட்கிட
மரங்கொடு மெழுக்கொடும் வரைகொ டிந்தம
துரங்கொடும் வீசின ருலைவில பூதரே. (கOஎ)

வேறு.

செறிந்து நேர்ந்து செருச்செயு மெலலையி
னிறந்த தானவ ரெண்ணில ராவிபோய்த
தறிந்த தாளுந் தலையுங் கழலுமாய்
மறிந்த சாரத ரும்வரம் பில்லையால் (கOஅ)

மாண்ட சாரதர் யாக்கையு மண்மிசை
வீண்ட தானவர் மெய்களுஞ் செங்களம்
யாண்டு மாகி யிருங்கரை போலுற
நீண்ட நேமியி னின்றது சோரிநீா. (கOகூ)

விரவு பூதர் வெருண்டுசென் றுன்னல
ரிரத மோடிர தங்களை யெறறினா
கரிக ளாறகரி யின்றொகை காதினர்
பரிக ளோடு பரிகளை மோதினர். (கக0)

ஆளை யாள்கொண் டடர்த்தன ராங்கவர்
தோளை யேதம தோள்கொடு தாக்கினா
தாளி னலவர் தந்தலை சிந்தினா
கோள ரிததொகை மானடுங் கொள்கையார். (ககக)

ஏற்ற சாரத ரெற்றிடத் தானவ
ரூற்ற மின்றி யுடைதலு மவவழிக்
காறறொ டங்கி கலந்தன்ன காட்சியா
னூற்ற லாள னனலிகண் டானரோ (ககஉ)

கையின் மேயின கார்முக மொன்றுதன்
மொய்யின் வாங்கி முரண்கெழு நாணொலி
செய்ய லோடுமத தேவா வெருககொளா
வைய கோவென் றலக்கணுற் றாரரோ. (ககங)

நாரி யார்ப்பு நணுகலு நாறபடை
மூரி யார்ப்பு முகிலிடை யாபபெனும்
பேரி யார்ப்பும் பிறங்கு பெருங்கடல்
வாரி யார்ப்புந்தம் வாய்மடிந் திட்டவே. (ககச)

கொற்ற வில்லிற் கொடுங்கனல் வெங்கணை
முற்று மாரியின் முத்திறந் தூண்டலுஞ்
செற்று பூதாத மொய்ம்பினுட் சென்றன
புற்றி னூடு புகுந்திடு பாந்தள்போல். (ககரு)

அங்கு மாப்படை யேவலு மவ்வழிச்
சிங்க னென்னுந் திறலகெழு சாரத
னெங்க ணுய்தி யிறந்தனை யீண்டெனப்
பொங்கு சீற்றம் புகுந்தனன் புந்திமேல். (ககசு)

நேர்கொண் டார்த்து நெடுந்தகை தீயவன்
றேர்கொண் டார்கருந் திறற்பரிச் சேக்கையிற
பார்கொண் டாரப்பப் பருஉத்தடக் கைதனிற்
றாகொண் டாரத்திடந் தண்டினிற் சாடினான். (ககஎ)

சாடு மெல்லையிற் சாரதி யுந்திய
வாடல் வாம்பரி யாவி யுலந்திட
வோட லின்றி யிரதமங் குற்றதா
னீடு கின்ற நிலைபடு தேரென. (ககஅ)

மாக்க ளூற்ற மடிவினை நோக்கியே
தீக்க ணற்பெய ரோன்சின மேற்கொளாத்
தாக்க ணங்குறு தாழ்சிலை வாங்கியே
யேக்கள பூட்டி யிதுவொன்று கூறுவான். (கககூ)

தடுக்கொ ணாவிச் சரஞ்சொரிந் துன்னுயிர்
படுத்து வானவர் பார்த்திடத் தென்றிசை
விடுக்கி லேனெனின் வெஞ்சம ரத்திடை
யெடுக்கி லேனசிலை யானெனக் கூறினான். (கஉ0)

சூளிவ் வாறு புகன்று தொலைவிலா
வாளி யான்மிசை யங்கியின் பேரினான்
கோளி யார்பய னாமெனக் கூற்றுறழ்
வாளி தூண்டி மறைத்தனன் மேனியே. (கஉக)

மறைய வேயுடல் வாளிக ணண்டவு
மிறையு முன்னல னின்னலு றாழ்கிலன்
பொறையி னோடு பொருக்கெனப் போகியத்
தறையி னின்ற சயந்தனைத் தேறினான். (கஉஉ)

நீர்மு கந்த நெடுமுகி லாமெனத்
தோமு கந்தனிற் றீயவ னேந்திய
கார்மு கந்தனைக் கைக்கொடு வாங்கியே
பாமு கத்துப் பதைப்புற வீசனும். (கஉங)

வலக்கை யாலொரு வான்கதை பற்றியே
சிலைக்கை யீர்த்திடுஞ் சிங்கனைத் தீயினான்
றலைக்கண் மோதலுந் தானவ ராத்தனா
கலக்க முற்றனர் கண்டவத் தேவரே. (கஉச)

அடித்த தண்டொ டனலிதன் கைத்தலம்
பிடித்து மற்றொர் பெருங்கையி னாலவன்
றடித்த மார்பத் தடவரை சாய்ந்துக
விடிப்பின் மும்மை யிசைத்திட வெற்றினான். (கஉரு)

ஏற்ற வெய்யவ னெல்லையி றன்புறச்
செற்ற மிக்கெழுஞ் சிங்கனுஞ் செங்கையிற்
பற்றி தண்டத் தொம்மெப பதகனைச்
சுற்றி வானந் துணுக்குற வார்த்தனன். (கஉசு)

மாறி லாத வவுணனை வன்கையாற்
சூறை போல வசசிங்கன் சுலவலு
ப றில பி த்திரி லைபரு லோம்பிகத
ப த ட லமுமெதலபு மறுறமின் றுயிலுன். (கஉஎ)

ஆர முறபெய ரண்ண லறிவொரீஇச்
சோரு மெல்லையிற றண்ணென வேறிய
தேரை விட்டுத திறலரிய பேரினன்
பாரி னெற்றப் பதைப்பொடு துஞ்சினன். (கஉஅ)

வேறு.

அண்டருந் திறலின் மிக்க வனலியங் கிறந்த வண்ணங்
கண்டனன் கவலா வுள்ள மழலெனக் கறங்கு கண்ணன்
சண்ட னென் றுரைக்கும் பேரோன் றடிப்பரும் படைக டன்கை
கொண்டிவ னுயிரை யின்னே குடிபபனு லென்று சென்றான். (கஉகூ)

என்றதோர் மாற்றங் கேளா வெரிவிழித் திடியி னக்குப்
பொன்றிய வனலி யங்கைப் போர்கெழு தண்டம் வாங்கிச்
சென்றனன் விரைவி லனுன் றோமிசைப பாய்ந்து நீலக்
குன்றெனும் வயிரத் தோண்மேற் புடைத்தனன் கூற்ற முட்க. (கநுO)

புடைத்தலு முயிர்த்து நெஞ்சம் பொம்மெனப் பொருமலெய்தித்
தடப்பெருந் தேரில் வீழுஞ் சண்டனுந் தனது செங்கை
யெடுத்ததோர் தண்டந் தன்னு லெதிர்புகுஞ் சிங்கன் மார்பத்
தடித்தன னவனுந் தானு மாரரு ருழந்து வீழ்ந்தார். (கநுக)

அப்பொழு ததனை நோக்கி யவுணரின் மாய னென்போன்
குப்புறு தடந்தே ரோடுங் குறுகலும பூதர் தம்மி
னொப்பிலா நீல னோர்போ யோச்சினன் கதையொன் றண்ணன்
முப்புர ம தனிற் றாண்டு மூரிவான் பகழி யென்ன. (கநுஉ)

போந்ததோர் தண்ட மாயன் பொருவகன் மார்பிற் றக்க
மாய்ந்தனன் போல நின்று வருந்திமற றவன்றன் பாணி
யேந்துமுத் தலைவே லொன்றை யெறிந்தன னெழிலா கத்திற்
சாய்ந்ததுகுருதி நீலன் றானுமங் கயரா நின்றான். (கநுந)

சிறிதுபோ ழ ததனிற் றேறித் திரண்மணிக் கடகஞ் சேர்த்த
வெறுழ்வலித் தடக்கை தன்னு லெதிர்ந்தவ னுரத்தி னெற்ற
வறைகழன் மாயன் றானு மணங்குற நீல னென்போன்
கறைகெழு நாக மெனனக் கனன்றிது குருதிச செய்வான். (கநுச)

மந்தரந் தழீஇய தொல்லை வாசுகி யென்ன மாயன்
சுந்தரத் தடம்பொற் றோளைத் துணைககையாற றொடர்ந்து வீக்கிக்
கந்தரந் தன்னிற் றீய கறைசெறி யெயிற்றிற கவ்வி
முந்துறு குருதிச செந்நீர் குடித்தனன் மொய்ம்பி னோடும். (கநுரு)

சோரிய தூண்டு நீலன் றொல்சினந் துறந்து நின்று
ளுருயி ருண்டு போனா னந்தக னனைய காலை
மூரிவிற றடக்கை மாயன் முடிந்தனன் சண்டன் சிங்கன்
பேரரு ருழந்தோர் தேறிப பின்னும்பொர புரிய லுற்றார். (கருசு)

கிட்டினர் தடந்தேர் மீது கிடந்ததண் டேந்திக் கீழ்ப்பா
யொட்டின ரொருவர் தம்மி னொருவர்மே லுடனறு பொங்கி
முட்டின ரிரண்டு பாலின் முறைமுறை பெயர்ந்தார் மொய்ம்பால்
வட்டணை திரிந்து தண்டிற ருக்கினர் மாற்று கின்றார். (கருஎ)

இங்கிது போலப் பலவே றியற்கையிற் கதையின் வெம்போர்
சிங்கனுஞ் சண்டன ரூனுஞ் செய்தனர் திரிந்து வேலைப்
பொங்கிய பூதர் வேந்தன் பொருவரு மவுணன் பொன்னா
ரங்கையிற றண்டஞ் சிந்த வடித்தன னணிபொற் றண்டால். (கருஅ)

வயிர்த்திடு தண்ட மங்கண் வலிகெழு சிங்கன் மோத
வயிர்த்தொகை யாத லோடு மாற்றலஞ் சவுணா யாரு
முயிர்த்தன ரென்கொ லாமென் றுன்னின ருருமே றென்னச்
செயிர்த்தனன் சண்ட னென்னுஞ் செருவலா னுரைக்க லுற்றான். ()

தண்டமொன் றிற்ற தென்று தருக்கலை தடம்பொற் றோளாக்
கொண்டது மன்றே யன்றோ கூறறுவ னகரு மேலை
யண்டமு முலையத் தொன்னா னடாத்தன னுனக்கிங் கஞ்சேன்
மண்டமர் புரிதி யென்னா வலிகெழு கரங்கொண் டேற்றான். (கசo)

ஏற்றன னிகலும் வேலை யெரிசினங் கடவிச் சிங்க
னாற்றலை யாங்கொ னீயென் றூற்றலை யணிபொற் றண்டம்
போற்றுகென் றுய்ப்ப வங்கட் புகாநெறி புடைத்துக் கையாற்
கூற்றனு முட்க வார்த்தான் குருமணித் திரடோள் கொட்டி (கசக)

அந்நெடுந் தகையோ னார்ப்ப வதுபொழு தழன்று சிங்கன்
பொன்னெடுந் தண்டா லன்னான் புயமிறப் புடைத்த லோடுங்
கன்னெடுந் தோளு மோர்சா கதுமென முரியத் தண்டும்
பன்னெடுந் துணியாய்ச் சிந்திப் படிமிசைக் கிடந்த தன்றே. (கசஉ)

புயந்தளர்ந் திடலுஞ் சண்டன் போவது கரமென் றுன்னா
வயர்ந்தில னெசிபொற் றோளை யங்கையி னிறுத்து வாங்கி
வயங்கெழு தண்டிற் பற்றி வட்டணை புரிந்தான் வானோ
வியந்தன ரிவனே கொல்லாம் வீரருள் வீர னென்றே. (கசங)

கரங்கெழு புயப்பொற் றண்டாற் கார்கெழு சண்டன் காம
ருரங்கெழு வுரத்தின் மோத வுருமெழு பட...
னிரங்கில னவன்போல யானு மொருதலை கரங்கொண் டென்னாச்
சரண்கொடே யவன்ற னாகத் தடவரை யதனைச் சாய்த்தான். (கசச)

கண்டகன சாயத லோடுங் கரமெடுத் தார்த்து வானோர்
புண்டருங் குருதிச செங்கட் பூதநா யகனீ யன்றேற
சண்டனை யுதைப்பார் யாரே தாழ்த்திட லவன்ற னாவி
கொண்டரு ளினையீ னென்று குறையிரந் துறைய லுற்றார். (கச(

வேறு.

வானவ ருரைகேளா மறலியொ டிகல்வெங்கட்
டானவ னிவனேயென் றனியுயி ரங்கிற்பா
னீனம துறுதேவ ரிவனொடு நமையின்றே
யூனுட லுயிரோடு முண்குவ னதுகாணீர். (கசசு)

என்னலு மிகல்சிங்க னெரிகலுழ் விழியானென்
முன்னிது புகலகின்றாய் முடிகுவை யினியென்னாக்
கொன்னவி றருகையாற் கொடிறுடை தரமோத
வொன்னல னதுபோழ்தி னொசிமுகி லெனவீழ்ந்தான். (கசஎ)

போழுறு பகுவாயிற் பொலிதரு மெயிறோடும்
வீழுறு நகையாலும் விரிகுரு தியினாலுந்
தாழுறு மதிதன்னைத் தாரகை நிரைசூழ
வூழுற வமாசெவ்வா னொத்ததவ் வுழியன்றே. (கசஅ)

சண்டனு மிறலோடுஞ் சமன்விட வருதூத
ரண்டலர் வெருவாமு னலமர லுறுகின்றார்
கண்டன னதுசிங்கன் கையன துயிர்தனைக்
கொண்டனை குதிரென்னக் குறுகின ரதுகொண்டார். (கசகூ)

ஆனதொர் செயல்பாரா வசமுக னெனவோது
மானவ னிறைநினனில் வந்தன துயிருண்ப
லேனைய ரெனவேநீ யெண்ணலை யெனையென்னாக்
கானிமிர் தருதேர்மேற் கடுவிசை யொடுசென்றான். (கரு௦)

சிங்கன தெதிர்செல்லுஞ் செல்லுறழ் பகுவாயா
னங்கணு கிடும்வேலை யதிபல மதுவெம்போ
னெங்கினி யகல்வாய்நீ யிற்றனை யிவணென்னாப்
பொங்கிய சினமோடும் பொளளென விடைபுக்கான். (கருக)

செந்தழல் புரைவெங்கட் டிறலச முகனென்போன்
முந்துற மதுவென்னு மொய்ம்பின னெதிர்கோட
லந்தக னொடுகால னமர்புரி தரவேமுன்
வந்தெதி ரெதிர்தன்மை மானுவ தெனலாமால். (கருஉ)

அணுகின ரிருவோரு மசமுக னதுகாலைக்
குணநனி சிலைகொள்ளக் குலவிய சிலைகொள்ளாக்
கணிகையர் மிளிர்வேற்கட கடைநில வியதென்ன
நணுகிய நுதிவெங்க ணொன்கணை சிதறுற்றான். (கருங)

முன்னது வரலோடு முகனுறு செயலோரான
றுன்னுபு செறிபோழ்துந் துணைவிழி யிமையாதான்
றன்னிலை யிறையேனுந் தவிாகில னொருதானே
யங்கிலை தனினின்று னடுதிறன் முயலகின்றான். (கருச)

பாலுற நிமிர்கின்ற பழமர மதுபற்று
மேலுறு சரம்வீசான் விடுகணை படமெய்யிற்
சாலிகை யெனநின்றான் றகுவன திரதத்திற்
காலென விசைசென்றே கருமுகி லெனவார்த்தான். (கருரு)

ஆர்த்தன னதுகேளா வசமுக னயர்வெய்தித
தேர்த்தனி னிலமீதிற் சிலையொடு கணைசிந்தி
வேர்த்தனன் வறிதுற்றான் விம்மினன் மெலிதன்மை
பார்த்தனன் மதுவென்போ னிவையிவை பகர்கின்றான். (கரு௬)

வீரனு மலையெஞ்சா வெஞ்சமர் வலனெய்தச்
சூரனு மலைநின்றே சூர்நிலை யதுகாணாந்
தீரனு மலையென்னே செருமுய லுதிநீநின்
னாருயிர் கொடுபோகென் றவனியின் மிசைபோனான். (கருஎ)

பாரிட னிலன்மேவப் பகரச முகனென்னும்
பேருடை யவன்வெள்கிப் பெருமித மிலனாகிப
போரிடை வெருவுற்றே னெனவொரு புரையுற்றோ
னாரிடை யிதுதீர்வ னெனவல மருகின்றான். (கருஅ)

ஆயிடை யவுணன்றா னமர்புரி கிலனாகிப்
போயின னவனந்தோ பொன்றுத லினிதென்னாக்
காயமொ டிளமானக் கனல்சுட மனம்வேவத
தீயென வெகுளூற்றான் செருமுய றிறல்பெற்றான். (கருகூ)

ஒல்லையி னவனேகி யுழிதனி தொடராநிற்
கொல்லுவ னினியாண்டுக் குறுகினு மகலாதே
நில்லுநில் லெனவாரா நீனிற முகிலென்னச்
செலனுறழ் பகுவாயாற் றிசைசெவி டுறவார்த்தான். (கசுO)

அற்றமின் மதுவென்போ னசமுக னுரைகேளாக்
கற்றது முளகொல்லோ கழறினை சிலவீரம்
பெற்றிலை யெனைநாடிப் பெயருதல் பிழையேனு
முற்றனை யிசையெற்கோ ருறுபழி தருகின்றாய். (கசுக)

என்றிது புகல்கின்றோ னெதிருற விகலிப்போய்ப்
பொன்றிகழ் சிலைகோலிப பொறியுமிழ் பிறைவாளி
யொன்றல பலவுய்ப்ப வுருகெழு சினமெய்தி
நின்றன னவையாவு நெடியகை கொடுவீசி. (கசுஉ)

வேறு.

வைத்தலைப் பகழிமேல விடுப்ப மாமதா
வெய்ததில னிறையுமென் றெண்ணணி யெண்ணலன்
முத்தலைக கழுவயின் முசல மாதியாங
கைத்தலப் படையெலாஞ் சிதறுங் காலையே. (கசுங)

சாரதன் மெய்யுறத் தளாந்து தானவன்
றேரினை விரைந்துதன் செஙகை யாலெடா
வாரிதி மேற்செல விடுப்ப வஞ்சகன்
பாரிடை யொல்லையிற பாய்ந்து மேயினான். (கசுச)

குப்புறு கின்றவன் கூளி வேந்தன்முன்
வெப்பமொ டணுகுறா வீங்கு தோளினாற்
றுபபுறு மற்றொழி றொடங்க வானகத
தப்புற மவன்செல வடிகொண் டோச்சினான். (கசுரு)

வெய்தென விறந்துவான் மீண்டு பூதன்மு
னெய்தின னவனுரத திடியி னெற்றியே
வைதனன் போயினன் மறைந்து மறறொரு
கைதவ நினைந்தனன் ககனம் புக்குளான். (கசுகூ)

வரந்தனிற் பெற்றதோர் மாய னேமியைக்
கரந்தனி லெடுத்தனன் கருத்தி லர்ச்சனை
புரிந்தனன் றொழுதனன் போற்றிப் பூதன்மேல்
விரைந்துற விடுத்தனன் விளியுந் தன்மையான். (கசுஎ)

மாசுறு மசமுகன் மதுவி னுகமேற்
பாசனம் வியப்பமால் பரிதி யுய்ததலுங்
காசினி யவன்வெறுங் கரதத னுதலின்
வீசிய வப்படை வெகுண்டு மீண்டதே. (கசுஅ)

கனையிரு ளுருவினைக் கனலி சோர்ந்தென
முனைகெழு மசமுகன் முடியை யட்டதாற்
றனதுளை நேமிதன் னுவு ருததோர்
வினையிலை யென்பது மெம்மை போலுமால். (கசுகூ)

உலந்தன னசமுக னுருமு வீழ்ந்தென
நிலந்தனில் வீழ்தலு நின்ற தானவர்
புலந்தன ராழிமால் புடையிற போயது
தொலைந்ததின் றமரென வமரர் துள்ளவே. (கஎ0)

சாற்றிய வவுணர்தந் தலைவ ரேனையர்
நாறறிறப் படையொடு நடந்து தம்முளஞ்
சிற்றம தாகியே செருவி லைத்தலு
மேமறெதிர சாரத ரிரிந்து போயினா. (கஎக)

வெற்றிகொ டானவர் வெகுண்டு போர்செயப
பறறல ராகிய பாரி டததவ
ரிற்றனா வன்மையை யிரிந்து போயினர்
மற்றது கண்டனன் வலிய தண்டகன. (கஎஉ)

வேறு.

ஏற்ற மாகு மிலக்கவில வீரருட்
சாற்று பேரிசைத தண்டகப் பேரினன்
கூற்றை நேர்வ தொருசிலை கோட்டியே
மாற்ற லார்மிசை வாளிக டூவினன். (கஎங)

மின்னு நாரி வியன்சிலை யேசிலை
துன்னு நாணொலி சூருரு மேற்றொலி
பொன்னின் வாளி மழைபொழிந் திட்டதான்
மன்னு தண்டக மாப்பெருங் கொண்டலே. (கஎச)

தட்டின் மொய்ம்புடைத் தண்டக மேலையோன்
விட்ட வாளிகள் வெய்யவர் தானையுட்
பட்ட காலைப் பரந்தெழு சோரிநீர்
மட்டி லாத குடிஞையின் வந்ததே. (கஎரு)

இரத மிற்றன வெண்ணில வண்ணமார்
பரிகள் பட்டன பற்பல மாமதக்
கரிகள் பட்ட கணிப்பில வெண்ணிலா
வரிக ணேரவு ணப்படை பட்டதே. (கஎசு)

இந்த வாறிவர் பட்டிட வேனையோர்
நொந்து தம்முயிர் காபப நுதலியே
சிந்தி யேயெண் டிசையினும் பாரினு
மந்த ரத்தினு மாயிரிந் தோடினர். (கஎஎ)

வேறு.

தண்டா வவுணப் படையிவ்வகை சாய்ந்த வாறு
மெண்டானை மள்ளர் பலரங்க ணிறந்த வாறும்
விண்டாழ் கதிரைச் சிறைபூட் டியவீர வீரன்
கண்டான் வெகுண்டா னகைத்தொன்று கழறு கின்றான். (கஎஅ)

மட்டார் தெரியன் மகவான்முதல்வானு ளோர்க
ளொட்டாத சேனிற் றலைவெய்தி யிரிந்து போக
வட்டாடல் செய்த நமராகளின் றவி மாண்டு
பட்டாரகொ லீசன் மகனேவு படைக டம்மால். (கஎகூ)

எல்லார் கதிரைச் சிறைபூட்டிய யானு நிற்க
வொலலாக ளாற்ற லுளராயடு மூற்ற நன்றாற்
கொல்லாது சீறற மிலதாயிகல் கொண்டு றதேல்
வெல்லாது கொல்லோ வரிதன்னையும் வேழ மெல்லாம். (கஅ0)

வாரார கழற்கா லமராரட மாய்ந்த வெள்ள
மீரா யிரததின் மிகுமல்ல தையெஞ்சு றதாற்
பேராம லென்பாங் கரினிற்பன பேசில் வெள்ள
மோரா யிரமே யிரிகின்ற தொழிந்த தெல்லாம். (கஅக)

ஒன்றே வரிவி லொருவேன் பிடித்தொன்ன லார்மேற்
சென்றே யடல்செய் திலன்முன்ன மென்சேனை யெல்லாங்
கொன்றே னியானே பொரவிட்ட னன்கூழை தன்னி
னின்றே னிஃதோர் பொருளென்று நினைந்தி லேனால். (கஅஉ)

தீருஞ் செயலை நினைந்தாவதென் சென்றியானே
யோரொன்று கன்னன் முடிகின்றமுன் றென்ன லார்தம்
பேரின் றெனவே யடுவேனது பெற்றி லேனேற்
சூரன் குமர னலன்யானெனச் சூண்மொ ழிந்தான். (கஅங)

பானுப் பகைவ னிவைகூறிப் பரிதி மான்றேர்
மானக் கடுங்கோல் வலவன் மரபிற் கடாவச்
சேனைக் கடலி னுடன்சென்று தன்செங்கை தன்னிற்
கூனற சிலையைப புருவததி னொடுங்கு னித்தான். (கஅச)

மேதக்க தன்கைச் சிலைவாங்கி விளங்கும் வெள்ளி
சோதிக் கிறையா யுறுமெல்லையிற சூலகொண் மேக
மூதக்க பாரிற சொரிந்தென்ன முனிந்து நேரும்
பூதப் படைமேற் சர்மாரி பொழித லுற்றான். (கஅரு)

பொழிகின்ற காலைத் திறன்மேதகு பூதர் நோக்கிக்
குழிகின்ற கண்ணி னழல்காலக் குலா சலங்க
ளொழிகின்ற வெற்பு முழுதும்பறித் தொல்லை வீசி
யழிகின்ற காலத் தருமேறென வார்த்து நின்றார். (கஅரு)

என்றின் பகைஞன் றனைப்பூதர்கள் யாரும் வீசுங்
குன்றம் பலவும புடைசுற்றக் குறித்து நோக்கி
யொன்றங் கதனுக் கொருகோடியொண் கோல தாகத்
துன்றும் படியே முறைதூண்டித் துகள்செய் திட்டான். (கஅஎ)

வண்டேது பூந்தா ரவன்வாளியின் மாய்ந்த குன்ற
றுண்டேளி யாகி யதுவானிடை நொய்தி னேகி
விண்டோக டோறுஞ் செறிகின்றவர் மேனி தோயக்
கண்டேதி யாற்றுதவர் விண்ணிடைக் கங்கை புகார். (கஅஅ)

தேவுத் தடந்தே ரொருவன்செரு வெல்லை முற்று
மேவிக் கறங்கிற் றிரிவான்றனி வில்லை வாங்கிக்
கோவைத தொடையொன் றினி லாயிர கோடி வாளி
தூவிக் கணத்தின் றொகைமுறறுந் தொலைவு செய்தான். (கஅகூ)

நன்கால நீவி மிளிர்கின்ற நறுநெய் தோய்ந்த
மின்கா லதனின் விரைகின்ற செந்தீயின் வெய்ய
முன்காலு கின்ற சுடருள்ளன மூன்று கண்ண
வன்கால னஞ்ச வடவலலன வஞ்சன் வாளி. (ககூ0)

தோளைத் துணிக்குங் கரத்தோடு துணிக்கு மார்பைத்
தாளைத துணிக்கு மெரிகுஞ்சித் தலைது ணிக்கும்
வாளைத் துணிககு மணிமெய்வயப பூதா வாழ்க்கை
நாளைத் துணிக்கு மசுரன்விடு நாம வெங்கோல். (ககூக)

சூரற் கினிய மகன்வாளி துணித்து வீச
வீரத்தின் மிகக கணத்தின்றலை வீழு முன்னர்ச்
சீருற்ற சோரிப புனலசிந்துவ தீயா சென்ற
பாரைப் புனிதஞ் செயுந்தன்மை படைத்த தன்றே. (ககூஉ)

பொன்சென் றிலங்குங் கணைதளளலும் பூதா சென்னி
மின்சென்ற வானத் தெழச்சோரியு மீதெ ழுந்த
வென்சென் றனையாங் குமரன் படையேக லென்னுப்
பின்சென்று பறறித தருவான்றொடர் பெற்றி போலும். (ககூங)

எய்யுந் தொழிலுக் கவன்மேலவா யாவ ரெங்க
ளையன் படையா கியபூதர்தம ஙாற்றன மொய்ம்புங்
கையும் வரையுஞ் சிரமுங்கழற காலு மார்பு
மொய்யென் றறுககு மவுணனவிடு மொன்றோ வாளி. (ககூச)

வானோர் தொகையைச் சிறையிட்டவன் மற்றிவ் வாறு
தானோர் சிலையின் வலியாலடத் தாவில பூத
ரானோ ரளப்பில் லவர்மாய்த்திட வாற்ற லில்லா
வேனோர்கள் யாரு முடைவாரிவை யெண்ண லுற்றார். (ககூரு)

மின்னும்புகர் வேலவ னங்குளன் வீர வாகு
பின்னின் றனனீ துணரான்பிற ராரு மற்றே
முன்னின்ற நம்மை யிவனட்டிடு மொய்ம்பி லேமியா
மென்னிங்கு நிற்ப தெனப்பூத ரிரிந்து போனார். (௧௯௬)

இரிகின்ற பூத ரெவரும்படைக் கீற்றி னின்ற
வரிகின்ற தண்டா ரடன்மொய்ம்புடை வள்ளல் பாங்கர்ப
பரிகின்ற நெஞ்சத் தொடுசெல்லவப் பான்மை யாவுந்
தெரிகின்ற னனுக்கிர னென்பதொர் சேனை வேந்தன். (௧௯௭)

கண்டுக்கிர னாகிய பூதன் கனன்று செங்கண்
விண்டிற் பெரிது நிவப்புற்று விளங்கு பொன்னந்
தண்டப்படை யொன்றினை யங்கையிற் றாங்கி யேகி
யண்டத் தவர்கள் புகழ்த்தனி யாளைநேர்ந்தான் (௧௯௮)

செற்றத்துட னுக்கிர னேர்புகு செய்கை தன்னைக்
கற்றைக் கதிரைத் தனையிட் டவன்கண்டு தன்கைக்
கொற்றச் சிலையைக் குனித்தாயிர கோடி வாளி
முற்றத் துரந்தே யவன்யாக்கையை மூடி யார்த்தான். (௧௯௯)

மைக்கின்ற மேனி நெடும்பூதனை வருசுன் வாளி
தைக்கின் றிலவா னுதிமாய்ந்து தளர்ந்து வீழ்ந்த
மெய்க்கின்ற வின்பு மறனும் விளையாது வாளா
பொய்க்கின்ற வன்கைப் பொருள்வலையிற் போவ தேபோல. (௨௦௦)

விடுகின்ற வாளி பயனின்றயல் வீழ்த லோடும்
படுகின்ற தன்மை யதுகண்டனன் பானு கோப
னடுகின்ற தெவ்வர் திவனறன்னையென் றங்கண் வானந்
தொடுகின்ற தாங்கோ ரெழுவத்தைச் சுழற்றி விட்டான். (௨௦௧)

தீயன் முசலந் தனையுக்கிரன் செங்கை தாங்கு
மாய்திண் கதையாற் சிதைத்தேயவன் றேரை யண்மிப்
பாயும் பரியைப் புடைத்தொல்லையிற் பாரின் வீட்ட
வேயென்று பல்கா லிகழ்ந்தார்த்தனா யாரும் வானோர். (௨௦௨)

புரவித் தொகுதி விளிவாகப் பொருவின் மைந்த
னெரியிற் கனன்று புடையோரிர தத்தின் வாவி
வரிவிற் குனித்துக் கிரனேந்தும் வலிய தண்ட
முரிவுற் றிடவே யொருநூறுமொட் டம்பு தொட்டான். (௨௦௩)

நூற்றெண் கணையா லவன்றண்ட நுணுகோ தாகச்
சீறுந் திறலுக்கிரன் கைக்கொடு தீயன் மைந்த
னேறுந் தடந்தேர் தனைவாளி னெடுத்து வீச
வீறும் பரிதி பதத்தின் றுணை மேய தன்றே. (௨௦௪)

துன்னுன மதலை வருகின்றது சூர னோக்கி
முன்னுளி னின்று நமைப்பற்ற முயன்று ளான்கொ
லென்னுன புணர்ப்பை யுணரேனனித் தாகு மின்ன
பென்னுவ தோவென் றுளத்துன்னி யிரிந்து போனான். (௨௦௫)

தேரோடு சென்ற வசுரன்மகன் சேணின் மீண்டு
பாரோடு சேர்வான் வருகின்ற பரிசு நோக்கிற்
காரோடு வானந் தவறுற்றுழிக் காமர் தாருக
தூரோடு சாய்ந்து மறிகின்றதொர் தோற்ற மொக்கும். (௨0௬)

வேறு.

வீழு கின்றதே ரொருவியே வெங்கதிர்ப் பகைஞன்
றாழு மெய்யுடை யுக்கிரன் றன்னைவந் தணுகி
மாழை யொண்கையா லெற்றியே யெடுத்தவா னுலகோ
ரேழை யுங்கடந் தப்புறஞ் சென்றிட வெறிந்தான. (௨0௭)

எறியும் வெய்யவன் வேறொரு தேரின்மே லேறி
வெறிகொள் பங்கயத் தண்ணலா விதித்துமுன் னளித்த
செறியு மூவிலை யிருதலை வேலினைச் சேண்போய்
மறியு முக்கிர னெதிர்புக விடுத்தனன் மன்றோ. (௨0௮)

விடுத்த தெய்வவே லுக்கிரன் மருமத்தை விடர்போற்
படுத்தி யேபுகுந் தப்புறம் போந்திடப் பாரி
னடுத்து மற்றவன் சிறிதயா வுற்றன னதுகண்
டெடுத்த குன்றொடுந் தண்டியென் றுரைப்பவ னெதிர்ந்தான். (௨0௯)

தண்டி யாகிய பாரிடன் றனதுகைத் தலத்தின்
மிண்டு கின்றதோ ரடுக்கலை யவன்மிசை வீசக்
கொண்ட வார்சிலை வாங்கியா யிரங்கணை கோத்துக்
கண்ட துண்டம தாக்கின னதனையோர் கணத்தில. (௨௧0)

வெற்பு நுண்டுக ளாதலும் விண்ணுற நிமிர்ந்து
கற்ப கம்புரை மராமர மொன்றினைக் களைந்து
வற்பு றுங்கரந் தனிலெடுத்த தவுணர்கோன் மணித்தேர்
முற்பு குந்திடும் பரிகளைப் புடைத்தனன் மொய்ம்பால். (௨௧௧)

மொய்ம்பி னிற்புடைத் திடுதலுங் கவனமா முழுது
மம்பு வித்தலை மறிந்தன வதற்குமுன் னவுணன்
பைம்பொன் முத்தலைப் பலபதி னாயிரம் பகழி
செம்பு னற்கொளத் தண்டிதன் னெற்றியுட் செறித்தான். (௨௧௨)

செறித்த காலையின் மெலிந்தனன் றண்டியச் செய்கை
குறித்து நோக்கியே பிணங்கியாம் பூதனோர் குன்றம்
பறித்து வீசுவான் முயறலு மாயிரம் பகழி
நிறத்தின் மூழ்குமா றெய்தன னனையனு நின்றான். (௨௧௩)

குன்று கொண்டகைப் பிணங்கியுந் தொல்வலி குறைந்து
நின்ற காலையி லேனைய பூதரு நேர்ந்து
சென்று வீற்றுவீற் றமரினைச் சிலபொழு தியற்றி
யொன்று தீங்கதிர்ப் பகைஞனுக் காற்றல ருடைந்தார். (௨௧௪)

எண்ட ருங்கணத் தலைவர்க டொலைதலு மிதனைக்
கண்டு வெஞ்சினந் திருகியே யெதிர்ந்தனர் கபாலி
யண்ட லோசன னிரஞ்சன னுருத்திர னகண்டன்
றண்ட கன்முத லிலக்கமா கியபடைத் தலைவர். (௨௧௫)

யிடல்ப டைத்திடு மிலக்கமாம் வீரரும் விரவித
தடம ணிப்பெருந் தேரொடு மவுணன்முன் சார்ந்து
சுடரு டைக்கட கங்கிளர் செங்கையிற் றன்னுந்
தொடும ரத்தினைக் குனித்தனர் நாணொலி கொண்டார். (௨௧௬)

கவடு பட்டிடு மீரிரு மருப்புடைக் கருப்பக்
குவடு பட்டதை யுரைப்பதெ னொருகரிக் கொம்பாற்
சுவடு பட்டிடு மேருவுஞ் சலித்தது துளங்கிச்
செவிடு பட்டன வானமும் வையமுந் திசையும். (௨௧௭)

பானு கோபன்மற் றதுகண்டு சிறுநகை படைத்து
மான வெஞ்சிலை யொன்றினைத் தோள்கொடு வணக்கி
மேன லந்திக ழண்டங்கள் யாவையும் வெருவத்
தேனின் வீழ்ச்சியை மலைந்திடுங் குணத்தொலி செய்தான். (௨௧௮)

உலத்தின் மேற்படு மொய்ம்புடை யிலக்கரு மொருங்கே
வலத்தில் வெஞ்சிலை யிடத்தினில் வடிக்கணை தொடுத்து
நிலத்தில் வந்துகார் நெடும்புனல் சிதறிய நெறிபோற்
புலத்தி யன்முறைப் பேரன்மேற் றலைத்தலை பொழிந்தார். (௨௧௯)

தொடலை யம்புயத் திலக்கமாம் பொருநருந் தொடுத்து
விடுச ரத்தொகை யவுணன்மேல் வீற்றுவீற் றேக
நெடிய தெண்டிரைப் பேரியா றெண்ணில நிரந்து
புடவி கொண்டதோ ரளக்கர்மேற் போவன போலும். (௨௨௦)

இலக்கர் விட்டிடு சரமெலா மவுணர்க ளெவருங்
கலக்க முற்றிட வருதலுஞ் சூர்மகன் கண்டே
கொலைக்கொ டுஞ்சிலை வளைத்ததி லாயிர கோடி
விலக்க ருங்கணை தொடுத்தவை யறுத்தனன் விரைவில். (௨௨௧)

அறுத்து மற்றுமோ ராயிர கோடியம் பதனைச்
செறுத்து விட்டிட வறுமுகன் பரிசனர் தெரிந்து
விறற்க டுங்கணை யாங்கதற் கெழுமையால் விடுத்து
மறித்து மீண்டிடு வித்தன ரவுணர்கோன் வாளி. (௨௨௨)

அறந்தி றம்பிய சூர்மகன் வாளிக ளனைத்து
முறிந்து மற்றவன் றன்மிசை யுற்றன முழங்கிச்
செறிந்த மாமுகி லுயிர்த்திடுஞ் சீகரஞ் செலலா
தெறிந்து கால்பொர வந்துழி மீண்டுபோ மியல்போல். (௨௨௩)

செங்க திர்ப்பகை சீறியே செயிரிலா வயிரத்
துங்க வெங்கணை யபரித மிசைமிசை துரந்து
வெங்கண் வீரர்கள் செலுத்திய சரமெலாம் விலக்கி
யங்கை யிற்கொண்ட கார்முக மிலக்கமு மறுத்தான். (௨௨௪)

பிடித்த கார்முக மற்றுழி மானவர் பெயர்த்துந்
தடத்த தேரிடை யிருந்திடுஞ் சேமமாந் தனுக்க
ளெடுத்து வாங்கியே சரந்துரந் திரவியம் பகைஞன்
றொடுத்து மேல்விடுங் கணைகளை யிடையிடை துணித்தார். (௨௨௫)

சூரன் மாமகன் றொடுசரந் துணித்தபின் றாண்டுந்
தேரி லாயிரம் பரியினா றாயிரந் தெழித்துக்
காரு லாவரு பதாகையி லாயிரங் கடவி
யூரும் வன்மைசே வலவன்மே லாயிர முய்த்தான். (௨௨௬)

வசையில் வீரர்க ளிவ்வகை விடுத்தலு மனத்திற்
பசையில் சூரமக னிரதமும் பரிகளும் பாகு
மசனி கொண்டதோ ரர்துவசமு மற்றன வதற்பின்
விசையில் வேறொரு தேரிடைப் பாய்ந்தனன் வெகுண்டு. (௨௨௭)

வைய மேற்செலு மவுணர்கோன் றன்சிலை வணக்கிச
செய்ய கூர்ங்கணை நூறுறா றாயிரஞ் செலுத்தி
யையன் விட்டவர் தேரொடு சிலைகளை யறுத்து
மெய்யி டந்தொறு மழுத்தின னெண்ணிலா விசிகம். (௨௨௮)

பரிதி மாற்றலன் பகழிகண் மெய்யெலாம் பட்டுக்
குருதி சோர்தலு மிலக்கருந் தொல்வலி குறைந்து
பெரிது நோயுழந் தாற்றல ராகியே பின்னர்ப
பொருதி றந்தனை நினைந்தில ருடைந்துபின் போனார். (௨௨௯)

வற்பு றுத்திய விலக்கம்வில லாளரு மலைய
விற்பி டித்தவ னொருவன்ற யாரையும் வென்றான்
முற்ப கற்புரி தவப்பய னிதென மொழிமோ
கற்பி னாற்றலென் றுரைத்துமோ கழறுவ தெவையே. (௨௩௦)

ஆன காலையில வீரகோ ளரியென வறையு
மான வீரன்மற் றதுகண்டு தனதுவில் வளைத்துப
பானு கோபன்முன் னெய்தியே பிறைமுகப பகழி
சோனை மாரியும விம்மித முற்றிடச் சொரிந்தான. (௨௩௧)

சொரிந்த காலையி லதுகண்டு சூரன்மா மதலை
சிரந் துளக்கியே யிங்கிவ னாற்றலுந் திறலும்
பெருந்த னிச்சிலை விஞ்சையு நனறெனப பேசி
வரிந்த கார்முகங் குனித்தனன் பனித்தனா வானோர். (௨௩௨)

குனித்த சாபத்தி னூறுநூ றாயிர கோடி
நுனித்த வச்சிர நொறிலுடைப் பகழிக ளாக்கித
தனித்து நேர்ந்தவன் விடுத்திடு சரமெலாந் தடிந்து
துனித்தி டக்கணை யாயிர மழுத்தினன் றோண்மேல். (௨௩௩)

தோளி லாயிரம் வெங்கணை யழுத்தலுந் தோலாக
கோள ரித்திறற் பேரினன் கோமகன் றரந்த
வாளி யாவையும் விலக்கியே யாங்கவன் மருமஞ்
சாள ரம்படச் செறித்தன னாயிரஞ் சரங்கள். (௨௩௪)

சரங்க ளாயிர மகலமே லழுத்தலுந் தருவ
னிரங்கி நோயுழந் தாற்றவு முனிவுசெய் திவனைக்
கரங்கொள் விலலினால் வெலலரி தாமெனக கருதி
யுரங்கொள் விண்டுவின் படைக்கலந் தனையெடுத் துய்த்தான். (௨௩(

நார ணன்படை யாங்கவ னுருக்கொடு நடந்து
வீர கோளரி விடுத்திடு சரமெலாம் விழுங்கிப்
பாரு மண்டமு நடுக்குற விடிக்குரற் பகுவாய்க்
காரி ரிந்திட வார்ப்பொடு கடிதுசென் றதுவே. (உ௩௬)

விண்டு வின்படை யணுகலும் விறலரி யதனைக்
கண்டு மால்படை யெடுக்குமு னப்படை கடிதாய்
வண்டு லாந்தொடை மார்பிடம் புகுந்துமன் னுயிரை
யுண்ட தில்லையா லவசமாக் கியதவ னுணர்வை. (உ௩௭)

அண்ண லேந்திடும் வேற்படை யாணையா லனையா
னுண்ணி லாவுயிர் கொளவஞ்சி யெருவைநீ ருண்டு
கண்ண னார்படை சிறிதுதன் வன்மையுங் காட்டித்
துண்ணெ னப்பின்னர் மீண்டது சூர்மகன் றன்பால். (உ௩௮)

மீண்ட காலையில் வீரகோ ளரியவண் வீழ்ந்து
மாண்டு ளானென மயங்கின னங்கது வயமாத்
தாண்ட னென்பவன் கண்டுதன் றனிச்சிலை குனித்து
மூண்ட செற்றமொ டணுகினன் கதிர்ப்பகை முன்னா. (உ௩௯)

ஓங்கல் வாகுடை வீரனேர்ந் திடுமுனெண் கையிற்
றாங்கும் வில்லினை யவுணனே ராயிரஞ் சரத்தா
லாங்க ணந்துணித் தாயிரங் கணைநுத லழுத்த
வேங்கி னாசுர னையன்வே றொருசிலை யெடுத்தான். (உ௪0)

எடுத்த கார்முகம் வாங்குமுன் னிரவியம் பகைஞன்
றொடுத்து நூறுகோ லதனையு மோரிரு துணியாப்
படுத்தொ ராயிரம் பகழியாற் றேரொடும் பரியை
முடித்து வாளியோ ரேழுநூ றுய்த்தன்ன மொய்ம்பில். (உ௪௧)

தேர ழிந்திடச் சிலையது மழிந்திடத் திறல்சேர்
பேர ழிந்திடத் தனிமையாய்த் தினநவன பிரியா
ஊர ழிந்திட வறியனும் பரிதிபோ லுறநுண
கார ழிந்திட வாரத்தனன் கிளாந்தெழுங் கதத்தான். (உ௪௨)

பராக மாப்புவி யகழ்ந்திடு பணைமருப் பிரட்டை
வராக மாயிரத் தாற்றல்பெற் றுடையசூர் மகன்மேல்
விராக நெஞ்சுடை விறற்கதிர் பாய்ந்தனன் விண்மே
லிராகு வின்மிசைத் தினகரன் வாவினு னென்ன. (உ௪௩)

பாய்ந்து திண்டிறல் வெய்யவன் வெய்யவன் பகைகுந
னேந்து வாசிலை பறித்திரு துணிபடுத் தெறிய
வேந்தன் மாமகன் வெண்டுதன் மருங்கிடை விசித்த
நாந்த கம்முரீஇக் குற்றினன் மருமத்தி னடுவண். (உ௪௪)

வீர வெய்யவ னுரமிசைச் செலுத்திய வெங்கட
கூரும் வாட்படை வாங்குமுன் னங்கவன் குருதி
சூரி யன்பகை யகலம்வந் துற்றது தூயோன்
றூரை வாளொன்று மாறுபோய்க் குற்றிய தகவின். (உ௪௫)

குற்றி வாங்குமுன் வீரமார்த்தாண்டனுங் கொதித்துக்
கற்றை வெஞ்சுடாச் சுரிகையை மருங்குறை கழித்து
மற்ற வன்மணி மார்பத்து வயிரவான கவச
மிறுதி டும்படி குறறினன் யாவரு மிரங்க. (உ௪௬)

கிளைத்தி டுந்திறல் வெய்யவன் குற்றலுங் கேடு
விளைத்த சூர்மகன் றன்னுடைச் சுரிகையான மீட்டுங்
குளத்தின் மூழ்குறக் குற்றின னன்னதோர் குறறிற்
களைத்து வீழ்ந்தனன் காலபொர மறிந்தகற பகம்போல். (உ௪௭)

தாழ்ந்த சோரியு மலக்கணும் பெருகுறத தடந்தேர்
வீழ்ந்த வன்றனை விளிந்தன னிவனென விடுத்துத்
தாழ்ந்த தோரபெருந் தனுவினை யெடுத்துழி தனனிற்
சூழ்ந்த தானையோ டேற்றனன் சூரியன் பகைஞன். (உ௪௮)

ஏற்று நேர்வரு சூரன்மா மதலையை யெதிர்ந்து
போற்ற லார்புகழ் வீரராக் கதனெனும பொருநன்
காற்றின் வந்தனன் றுணைவாக டொலைந்தது கண்டான்
சீற்ற முள்ளுற நிமிர்ந்தெழுக குனித்தனன சிலையை. (உ௪௯)

சிலைகு னிததொரு பத்துநூ றயிறகணை தெரிந்து
யொலியு டைககழற சூரன்மா மதலைமே லுய்பப
விலகி யத்தொகைப் பகழியா னம்பிதன் வியன்மேற
வலவ னைததலை துணித்தனன் வாளிநூ றதனால. (உ௫0)

நூறு வாளியாற் சூதன்மாண் டிடுதலு நொடிப்பில்
வேறோர் பாகனை வீரராக கதனிரீஇ வெகுளா
வாறு மாமுக னடியினைக் தாயிரங் கணையாற
கூறு செய்தன னவுணர்கோன் குருமணி மகுடம. (உ௫௧)

உவமை நீங்கிய வைவகைத தாயமேற றருளின
மவுலி யிற்றிடத் திருவின்றி மன்பதா ணெய்தி
யவதி யில்லதோர் பெருஞ்சின மூணடெழு வவுணன்
குவடி லாமணிக் குன்றுபோ னின்றனன் குறுகி. (உ௫௨)

மணியி ழுந்திடு மரவுபோற் கதிரிலா வானம்போற
பணையி ழுந்திடுங் கறபகப பழுமரந் தனைபபோற
றுணைம ருப்பினை யிழந்திடுந் தந்திபோற் றொலலை
யணியி ழுந்திடு மகளிர்போ லழகில னானன் (உ௫௩)

இற்றொ ழிந்திடு மகுடநீத தேவல ரளித்த
கற்றை யொண்சுடா மவுலியொன் றினைமுடி கவித்து
வெற்றி வீரராக் கதன்விடு சரமெலாம விலக்கி
மற்ற வன்சிலை துணித்தனன் வாளியா யிரத்தால். (உ௫௪)

ஆடல் வெஞ்சிலை யறுத்தலும் வயமுடை யரக்க
ணடி யோதனு வெடுக்குமுன் னாகிளங் கதிரை
வீட ருந்தனை யிட்டவன் விசிகமா யிரததாற்
பாடு செய்தன னனையவன் றனதுமேதாப் பரியை. (உ௫௫)

மாய்ந்து மாத்தொகை படுதலும் வீரனோர் மணித்தேர்
பாய்ந்த காலையி லிரவிமாற் றலனவன் பாணி
யேந்து வில்லினை யாயிரம் பகழியா லிறுப்ப
வேந்தன் மாமகன் றனம்பிசை யயிலொன்று விடுத்தான். (௨௫௬)

விடுத்த வேலினை நூறுகோ றொடுத்தவன் வீட்டத்
திடத்தின் மேற்படு வீரராக கதனது தெரிந்து
தடத்த தேரினு மிழிந்தவற் கூவிய தனிப்பா
யெடுத்தெ றிந்தனன் பானுகோ பன்றனி யிரதம். (௨௫௭)

எறியு மெல்லையிற் றருவா தங் குரிசில்விண் ணெழுந்து
வெறிகொள் பங்கயத் தண்ணன்முன் கொடுத்ததோர் வேலைச்
செறுந ரவியை யுண்கென விடுத்தலுஞ் சென்று
விறல ரக்கன்மேற் பட்டதங் கனையனும் வீழ்ந்தான். (௨௫௮)

தரையில் வீழ்ந்திடும் வீரராக கதனனி தளர்ந்தான்
முருக னூவையாற் போக்கில தவனுயி ரூன்ன
மிரவி யம்பகை திகிரியின மறிந்துளா னெழுந்து
பொருதல் வன்மையின் றுகிமேய யிடைந்தபின் போனான். (௨௫௯)

போன காலையில் வேறொரு தேரிடைப் புகுந்து
பானு மாற்றலன் வணங்கியோ காமுகம் பற்றி
யூனு மாவியுங் கவர்ந்திடு சரமழை யோச்சி
யேனை வீரராக டம்மையும் வெலலுமா றெதிர்ந்தான். (௨௬௦)

வீர வந்தகன் வீரமா மகேசசுரன் வீர
தீரன் வீரமா மகேந்திரன் றிறற்புரந் தரனு
நேரி லாரிவ ரைவருஞ் சிலைகொடு நேர்ந்து
சூரி யன்பகை வன்மிசைக் கணைமழை சொரிந்தார். (௨௬௧)

சொரிந்து வேறுமவ் வளவையி லாதபோர்த் தொழிலைப்
புரிந்து பின்னுறச் சூர்மகன் சரங்கணமெய் புதைய
வருந்தி நின்றன ரிருவர்கண் மறிந்தன ரொருவ
ரிரிந்து தோசிலை யழிந்துநொந் தேகின ரிருவர். (௨௬௨)

வேறு.

சாற்று மித்திறம் வீரர்க ளியாரையுந் தனிமைந்தன்
வீற்று வீறறம ராடியே வென்றிகொண் டிடும்வேலை
யாற்ற லின்றிமுன் பினறிய வவுணர்தா னைகண்முற்று
நாற்றி சைகளு மும்வந் தவனைநண் ணியவன்றே. (௨௬௩)

பின்று சேனைகள் யாவையுந் தன்னயற் பெயாததும்வந்
தொன்ற வேயிர வியமபகை வருதலு முந்துகண்டா
னன்று நன்றிவ ணுற்றுழி னிற்பமென நகைசெய்தா
னென்று நந்திகள் கணத்தவர் தலைமைபெற் றிருக்கின்றான். (௨௬௪)

வாகை மொய்ம்புடை மேலையோன் மாலயன் றனக்கெட்டா
வேக நாயகன் றிருமகன் றுளிணை யினிதுன்னி
யோகை யானனி வழுத்தியே போதநொழி லுளங்கொண்டு
சேகு நெஞ்சுடைப் பானுகோ பன்முனஞ் செலலுற்றான். (௨௬௫)

அரியு நான்முகத் தொருவனுங் குனித்திட வறத்தேவுஞ்
சுருதி மாமறைத் தொகுதியுங் குனித்திடச் சுரர்கோவு
மிரவி யண்ணலு மதியமுங் குனித்திட விகலாடற்
றிருவு மோடியுங் குனித்திடக் குனித்தனன் சிலைதன்னை. (௨௬௬)

விசையெ டுத்திடு மூதையும் வடவையும் வெருக்கொண்டு
வசையெ டுத்திட வளக்கருந் தமொலி வறிதாகத்
திசையெ டுத்திடு மண்டமும் புவனமுஞ் சிதைந்தேமா
றிசையெ டுத்திட வெடுத்தனன் சிலையினா ணிசைதன்னை. (௨௬௭)

நாணொ லிக்கொடு வெஞ்சமர் புரியமே னடப்பானைக்
காண லுற்றனன் றினகரற் சினவிய கதக்கண்ணா
னேனு டைப்பெருங் காமுக மொன்றுவே றெடுத்திட்டான்
சேணி லத்தவர் பணித்திடக் குனித்தொலி செய்திட்டான். (௨௬௮)

முன்பு திண்டிறல் வாகுவின் வாகுவின் முழக்கத்தை
யன்பி னுடைய வமரர்க ளவ்வைதீர் மகிழ்வெய்திப்
பின்பு சூர்மகன் சிலையொலி கேட்டலும் பதுற்றே
யின்ப துன்பங்க ளொருவழிக் கண்டன மிவணென்றார். (௨௬௯)

புகழ்ச்சி மேலவன் குணத்தொலி செவிக்கொடு பொலிந்தோர்க
ளிகழ்ச்சி மிக்கவன் குணத்திசை கேட்டலு மிரங்குற்றார்
திகழ்ச்சி யாரமு துண்டவர் நஞ்சமுண் செயல்போனார்
மகிழ்ச்சி யீற்றினிற் றுன்புவந் தடைவதோர் வழக்கன்றே. (௨௭௦)

மாய னான்முகன் மகபதி முதலிய வானோர்கள்
காயம் யாவினு நிரந்தன ரமர்த்தொழில் காண்பாரா
யாய போழ்தினிற் சூரபன் மாவரு ளசுரேசன்
றாய வன்றனை நோக்கியே யினையன சொல்கின்றான். (௨௭௧)

கோதை வேலினாற் றாரகன் றனையடு குகனல்லை
யாதி யேனமாய்ப் புவியினைக் கிளைத்திடு மரியல்லை
வேத நான்முகத் தவனல்லை விண்ணுளோர் வேந்தல்லை
தூதனாகிய நீகொலென் னெதிர்பொருந் தொழில்வல்லாய். (௨௭௨)

இழைத்த மாயையான் முற்பகற் போந்தனை யெங்கோன்முன்
பழித்தி றஞ்சில கூறினை யிளவலைப் படுத்திட்டா
யழித்தி மாநகர் யானஃ துணர்ந்தில னதனாலே
பிழைத்தி யன்றெனி னுய்ந்திவண் வந்திடப் பெறுவாயோ. (௨௭௩)

பொருது வென்றிகொண் டுனதுயிர் நமனூர் புகுவிப்பன்
சரத மிங்கிது பிறந்திடு மளவையிற் றழல்காலும்
பரிதி யைச்சிறை பிணித்தவ னெற்றனைப் படுத்தானென்
றொருத னிப்பழி கொள்வதல் லாற்புக ழுறுவேனே. (௨௭௪)

முனைமு டித்தநின் றுணைவரை வென்றனன் முரட்பூதந்
தனைய டர்த்தனன் சிந்தின னனிகமுந் தனிநொந்த
வுனைமு டிக்குவ னுனைவிடுத் தோனையு முலைவித்தென்
சினமு டிக்குவன் மகபதி தன்னையுஞ் சிறைசெய்வேன். (௨௭௫)

என்ற காலையில் வீரவா கியம்புவா னெவரேனுந்
சென்று போர்புரி வார்தமை வெல்வதே திறலாகும
பின்று வார்தமை யடுவதே வசையலாற் பிறிதுண்டோ
வென்றி யெய்துவா ருரைப்பரோ போர்புரி விரைந்தெனறான். (உ௭௬)

வேறு.

என்னு மாத்திரத் திரவியம பகைஞனீ ரைந்து
பொன்னெ டுங்கணை யெடுத்துவா சிலையிடைப் பூட்டி
மின்னு வாமென விடுத்தலும வீரனும் விரைவி
லன்ன வீரைந்து வாளிதொட டவற்றினை யறுத்தான். (உ௭௭)

ஆறு நாலுவெம் பகழியு மறுத்தபின் னறிஞ
னூறு வாளிகள் விடுத்தலும வந்தது நோக்கி
வீறு மததொகைச் சரங்களவிட் டவையிடை வீட்டி
யீறி லான்மகன் மீதிலா யிரங்கணை யெய்தான். (உ௭௮)

ஆயி ரங்கணை தூண்டிமற் றவற்றினை யறுத்துத்
தூய வன்பதி னாயிரஞ் சுடுசரந் தூரப்பத
தீய னததொகை வாளியா லங்கவை சிந்தி
யேயெ னக்கொடும் பகழிநூ றாயிர மெய்தான். (உ௭௯)

உய்த்த வாளிநூ றாயிரந் தன்னையு முரமோ
னததொ கைப்படு பலலவந் தூண்டியே யறுத்துப
பத்து நூற்றின்மே லாயிரம் பெற்றிடும பகழி
மெய்த்த முறகதி ரிரவியம பகைஞன்மேல் விடுத்தான். (உ௮௦)

விடுத்த வாளியைப பத்துநா றாயிரம் விசிகந்
தொடுத்து மாற்றியே சூரபன் மாவரு டோன்ற
லெடுத்து நூறுநூ றாயிரம புங்கவ மேவ
நொடிப்பில வீட்டின னினையனஞ் சிலீமுக தூக்கி. (உ௮௧)

வஞ்ச னேவினை மாற்றியே யெம்பிரான் மதலை
செஞ்ச வாளிநூ றாயிர கோடிகள் செலுத்தக்
கஞ்ச மாமக னாயிரத்தடு திருமகன் கணிப்பில்
புஞ்ச வாகணை யிறுதிநாண முகிலெனப பொழிந்தான். (உ௮௨)

பார்ம றைந்தன திசையெலா மறைந்தன படர்முந்
நீர்ம றைந்தன குலகிரி மறைந்தன நிலவுங்
கார்ம றைந்தன ககனமு மறைந்தன கதிரோன்
றேர்ம றைந்தன விருவர்தங் கணைமழை செறிய. (உ௮௩)

பாரி வட்டமு மாதிர வட்டமும பரவை
வாரி வட்டமு நேமியின வட்டமு மலிவான்
மூரி வட்டமு மண்டத்தின் வட்டமு முடிக்கச
சாரி வட்டமாய்த் திரிவன வனையவா தடந்தேர். (உ௮௪)

மாறில் வாளிகண் முறைமுறை சொரிதலான் மறைவ
ரீறு செய்தவை யகறறுழித் தோன்றுவ ரிமைப்பில்
வேறு வேறதா யித்திற நிகழ்த்திடும் வீரா
சூறை போலம ராடின ருலகெலாஞ் சுற்றி. (உ௮௫)

இரவி வானவன் றனதுதிண் டேரினு மீர்க்கும்
புரவி மீதினும முடுபதி மானததும் புறஞ்சூழ்
கரிகண் மீதினும விண்ணுலா வமரர்தங் கணனும்
பொருவி லாளியர் விடுகணை சிதறியே போமால. (௨௮௬)

செங்கண் வீரர்க ளிருவரும் பொருவதித் திசையென்
றங்கு நாடரி தவர்விடும பகழிக ளனந்த
மங்குல் வானெலா நிரந்தன மிசையினும் வருமா
லிங்கு நிறகரி தெமக்கென வோடின ரிமையோர. (௨௮௭)

புடவி கீழ்வன வண்டங்க டுளைப்பன புறத்திற்
கடலொ ரேழையும பருகுவ புவனங்கள கடப்ப
வடலின் மேதக்க யாவருந் தடுத்திடற் கரிய
வடவை நாவையுந் துணிபபன வவர்விடும் வாளி. (௨௮௮)

இகலக டந்திடு திண்டிறல் வாகுவு மிரவிப
பகையு மாறறிய பெருஞசமா வலியையார் பகாவார்
மிகுதி கொணடபல கணைமழை யுஃபபுரு விடுபபத
திகிரி யமபடை போன்றன வனையாகைச சிலைகள. (௨௮௯)

வெய்ய வன்றனைத் தளையிடும வெய்யவன் விறலார்
துய்ய மொய்மபினன விடுசர மாரியைத தொலைததுக்
கையி ருந்திடு காமுக மொன்றையுங கடிதி
னையி ரண்டுநூ றயிறகணை யாலறுத தார்ததான். (௨௯௦)

ஆர்தத காலையில் வீரவா குபபெய ரறிஞன்
போதத் மோர்தனு வாங்கியே பெருஞசினம் பிடிததுச்
சூர்தத வெஙகணை யாயிரம் விரைவினிற றூண்டி
மூர்தத மொனறினி லவுணனேந் தியசிலை முரிததான். (௨௯௧)

முரிதத காலையி னவுணர்கோ னுறறவு முனிந்து
கரததின மறறொரு சிலைகுனித தாயிரங் கணைக
ளுரததி னமபியு மணங்குற விடுததலு மோரேழ
சரததி னலவன் றனிபபெரு மவுலியைச் சாய்ததான். (௨௯௨)

வாய்த்த பன்மணி குயிறறிய கனகபா மவுலி
சாய்த்த காலையின் வேறொரு கதிர்முடி தன்னை
யேத்தல் சான்றிடு சூர்மகன புனையுமா றெடுத்தான்
பூதத செஙகதி ரவனைமுன் பிடிததவா போல. (௨௯௩)

எடுதத பொன்முடி சென்னியிற கவித்தன னிதன்முன்
வடித்த வெஙகணை யாயிரந தூண்டிப புற றவன்மேல்
லடுதத சாலிகை சிநதினன சிந்திய வளவி
னடிதது நலலறம் பாடின பரிதியு நகைததான. (௨௯௪)

கிருதர் போறறிடு சூர்மக னுயிர நெடுங்கோல
சுருதி நாயக னிளவற னுதலிடைத துரபபக்
குருதி நீருண்டு குழுவொடுந் தோன்றுவ குணபாற்
பரிதி வானவ னிளஙகதிர் விரிந்தெழும பரிசின். (௨௯௫)

நெற்றி மீதுகோ லாயிரம் படுதலு நிறையிற்
சூற்று நீங்கிலன் றன்வலி சுருங்கிலன் றக்கோன்
பற்றி யங்கையாற் பறித்தவை வீசினன் பகைஞன்
கொற்ற வெய்யகோல் விளிவின்றி நின்றிடுங் கொல்லோ. (௨௯௬)

சகத்தை நல்கிய வறுமுகத் திளவலத் தருவன்
முகத்தி னாயிர மகலத்தி னாயிர மொய்ம்பி
னகத்தி னாயிரங் கரங்களி னாயிர மாக
மிகைத்த வெங்கணை தெரிந்தொரு தொடையினில் விடுத்தான். (௨௯௭)

விட்ட வாளிகள் சூர்மக னவயவம் விரவிப்
பட்டு மூழ்கலு மவசமாய்த் தளர்ந்தனன் பாணி
நெட்டி ருஞ்சிலை யூற்றமாய் வறியனாய் நின்றான்
றொட்ட தெண்கயத் தூறிமே லெழுந்தது சோரி. (௨௯௮)

வந்து வந்தெழு குருதிநீர் முழுதுடன் மறைப்பப்
புந்தி தன்னிடைச் சீற்றமு மூண்டெழப் பொலிவான்
செந்தழற் பிழம் பாலுமோர் குன்றெனத் திகழ்ந்தா
னந்தி மேற்றிசை யெழிலியின் வண்ணமு மானான். (௨௯௯)

ஆன போழ்தினி லவுணர்மாத் தலைவர்க ளாரும்
பானு மாற்றலன் பொருவலி யின்மையைப் பார்த்துச்
சேனை நாற்பெரும் பரவையி னோடுமுன் சென்று
மான வேற்படை வீரவா குவின்புடை வளைந்தார். (௩௦௦)

இலைபி றங்கிய சூலம்விட் டேறுதண் டெழுவ
முலைபி றங்கிய கணிச்சிமற் றிப்படை யொருசார்
சிலைபி றங்கிய பகழிகள் வீரன்மேற் செலுத்தி
மலைபி றங்கிய விரவிசூழ் திமிரென மறைத்தார். (௩௦௧)

வேறு.

தொடைக்கல னிலவு மார்பிற் றொல்லைக ரேசர் கொண்ட
படைக்கல மான வெல்லாம் விடுத்தலுந் தனாது பாணி
யிடைக்கலந் திருந்த வார்விற் குனித்தன னிடுக்கட் படாமோ
ரடைக்கலம் புகுதும் வெள்ளி யருவரை யளித்த வண்ணல். (௩௦௨)

ஆயிர கோடி கோடி யடுசரந் தொடையொன் றாக
மாயிரும் புயத்து வல்லால் வல்லையின் வலித்துத் தூண்டித்
தீயவ ருடன்று விட்ட படையெலாஞ் சிந்த லுற்றான்
பாயிருட் படலங் கீறுஞ் செங்கதிர்ப் பரிதி போல. (௩௦௩)

அவுணர்கள் யாரு முய்த்த வடுபடை மாரி சிந்திக்
குவவுறு விசயத் தோளான் கொடுஞ்சர மனந்த கோடி
தவறில வாக வுய்த்துத் தகுவர்தந் தானை முற்று
முவரியுண் வடவை போல வொல்லையின் முடிக்க லுற்றான். (௩௦௪)

தோலினை யறுக்கும் வாளைத் துணித்திடுஞ் சோதி வில்லின்
காலினை யறுக்கும் வெய்ய கணிச்சியை யறுக்கும் வீசுங்
கோலினை யறுக்கு நேமிக் கொடும்படை யறுக்குங் காமர்
வேலினை யறுக்கு மும்மா விடலைதன் வீர வாளி. (௩௦௫)

வேறு.

உரந்துணிக்குங் கவசமிடு முரந்துணிக்கும் புயந்துணிக்கு மொன்ன லார்தங்
கரந்துணிக்கு மடல்புரிமோ கரந்துணிக்குங் கழறுணிக்குங் கணிச்சி கைத்தோ
மரந்துணிக்குங் குனித்தகொடு மரந்துணிக்கும் வாய்துணிக்கு மவுலி தாங்குஞ்
சிரந்துணிக்கு மெறிந்திடுமவச் சிரந்துணிக்கு முரவோன்றன் செங்கை வாளி.

கதமறுக்கும் வதமறுக்குந் தூங்குபுழைக் கையறுக்குங் கபோலத் தூறு
மதமறுக்கு நுதலறுக்கும் வாயறுக்குஞ் செவியறுக்கும் வயிரக் கோட்டின்
விதமறுக்கும் வாலறுக்கு மெய்யறுக்குந் தலையறுக்கும் வேழஞ் செல்லும்
பதமறுக்கு முரணறுக்கு மரணறுக்கும் வீரன்விடு பகழி மாரி. (௩௦௭)

ஆரறுக்குஞ் சகடறுக்கு மச்சறுக்கு நெடுந்துவச மறுக்குந் தேரின்
பாரறுக்குங் கூம்பறுக்கும் பாகறுக்கு மங்கணுறும் பதக ராவி
வேரறுக்கு மடியறுக்கும் விரிதருகொய் யுளையறுக்கும் விளங்குஞ் செம்பொற்
றாரறுக்கும் புரவிகளின் றலையறுக்கு நிலையறுக்குஞ் சரங்கண் மன்னோ.

கானோடும் வரையோடுங் கரையோடுந் திரையோடுங் கழியி னோடு
மீனோடுங் கடலோடும் விசையோடுந் திசையோடு மேக மோடும்
வானோடு நிலனோடு மிருகதிரின் மருங்கோடும் வாளத் தோடுந்
தேனோடும் பூந்தாரான் சிலையோடு நெடும்பகழி சிந்துஞ் சென்னி. (௩௦௯)

வேறு.

பாயிரும் புனல்போ லோடிப் படியெனப் பரந்து நீடித்
தேயுவின் றிறன்மேல் கொண்டு சேணென முடிவின் றாகி
வாயுவின் விரைந்து சென்று வள்ளல்கை வாளி யொவ்வொன்
றாயிர கோடி சென்னி யறுக்கினும் வெறுக்கி லாவே. (௩௧௦)

வரந்தனிற் றலைமை சான்ற வொருசில மான வீரர்
சிரந்தனைத் துணித்துக் கொண்டு சீர்கெழு சூரன் வைகும்
புரந்தனிற் கொடுபோ யன்னா பொற்றொடி மடந்தை மார்தங்
கரந்தனி னுகுத்துச் செல்லுங் கந்தனுக் கிளவல் வாளி. (௩௧௧)

புரண்டன வயவர் யாக்கை பொழிந்தன குருதித் தாரை
யுருண்டன டான்றே ராழி யுலவின பலவுங் கூளி
திரண்டன கணங்க ளீட்டஞ் செறிந்தன சேனம் பிள்ளை
யிருண்டன திசைகள் முற்று மிரிந்தன வொழிந்த தானை. (௩௧௨)

பட்டன புரவிப் பந்தி படிந்தன முடிந்த வேழங்
கெட்டன ரவுண ராருங் கிடந்தன வொடிந்த திண்டே
ரட்டன னொருவ னின்று னகலிரு விசும்பை வல்லே
தொட்டன பிணத்தின் பொம்மல் சோரியா றெழுகிற் றன்றே. (௩௧௩)

பாய்ந்திடு குருதி நீத்தம் படர்ந்தது புகுந்து பௌவஞ்
சேர்ந்தது சுறவு மாந்திச் செருக்கிய திறலோ னம்பால்
வீந்திடு மவுண ராவி விடுத்தனர் சென்று தந்தா
ளோய்ந்தனர் நடுவன் றூத ரொழிந்தன கழிந்த பூசல். (௩௧௪)

சிந்திய வவுணர் தானைச் செய்தியும் பரிதிக் கூற்ற
னொந்தனன் றமிய னின்ற தன்மையு நோக்கி நோக்கி
நந்தம தண்ண றன்பா னண்ணுது மென்று மீண்டு
வந்தன முந்து சாய்ந்த வயப்பெரும் பூத வெள்ளம். (௩௧௫)

இரிந்திடு பூத வீர ரியாவரு மீண்டார் நின்று
வருந்திய தலைவர் தொல்லை வன்மிடல் பெற்று ரங்க
ணருந்துய ருழந்து வீழ்ந்தா ராவியோ டெழுந்தா ரின்னோர்
பொருந்தனி வீர வாகு புடையுற வளைந்து புக்கார். (௩௧௬)

அங்கது போழ்து தன்னி யனர்வுயிர்த் துணர்வு தோன்றச்
செங்கதி ரோனைச் சீறுஞ் சேவகன் சற்று நோக்கிச்
சங்கையி னிமிர்ந்த கொள்கைத் தன்பெருஞ் சேனை காணான்
கங்கமுங் கழுகு மார்க்குங் களேபரச் சூழல் கண்டான். (௩௧௭)

நேருறு தனிவில் லாளி நின்றது நோக்கி நம்பாற்
சாருறு மனிக மெல்லாந் தடிந்தன னிவனென் றுன்னி
யாரிடை யடங்கிற் றம்மா வாண்மைக்கு மவதி யுண்டோ
வீரன்மற் றிவனே யல்லால் வேறிலை போலு மென்றான். (௩௧௮)

இனையன வியந்து பின்னு மென்னெதிர் பொருத வீர
ரனைவரும் விளிந்தோ ரன்றி யடல்வலி படைத்தோ ரில்லை
குனிசிலை யொருவ னின்றான் கொற்றமுற் றிடுவ னம்மா
தினகரன் பகைஞ னாற்றல சிரிது சீரி தென்றான். (௩௧௯)

கன்னலொன் றளவை தன்னிற் கந்தவே ளொற்றன் யாக்கை
சின்னபின் னங்க ளாகச் செய்குவன் செய்தி டேனேற்
பின்னுயிர் வாழ்க்கை வேண்டேன் யான்பிறந் தேனு மல்லே
னென்னொரு சிலையும் யானு மெரியிடைப் புகுவ னென்றான். (௩௨௦)

வஞ்சின மினைய கூறி மாதிரக் கிழவன் மைந்த
னெஞ்சினில் வெகுளித் தீயு மானமு நீடி யோங்க
வெஞ்சலி லீசன் முன்ன மேகிய கொடுநஞ் சென்னச்
செஞ்சிலை வீரன் முன்னந் தேரொடுஞ் சென்று சேர்ந்தான். (௩௨௧)

கைத்தலத் திருந்த தொல்லைக் கார்முகம் வளைய வாங்கி
முத்தலைப் பகழி யங்கோ ராயிரம் விடுப்ப மொய்ம்ப
னத்திறத் தியன்ற வாளி யாயிரஞ் சிலையிற் பூட்டி
யுய்த்தன னறுத்துப் பின்னு மோராயிரஞ் சரங்கள் விட்டான். (௩௨௨)

அற்றது தெரிந்து தீயோ னாயிரம் விசிகந் தூண்டி
மற்றவை விலக்கிப் பின்னும வாளியோ ரயுதந் தொட்டுக்
கொற்றவன் றேரும் பாகுங் குரகதக் குழுவு மாயச்
செற்றன னதனை நோக்கிச் சேனுளா ரலக்க ணுற்றார். (௩௨௩)

வில்லொடும் வீர வாகு வேறொரு தேர்மேற் பாய்ந்து
வல்விதி னாற்று நூறு வாளிக டுரந்து வெய்யோன்
சிலவியந் தேரு மாவும் வலவனுஞ் சிலையும் வீழப்
பல்லிருந் துண்டஞ் செய்தான் விண்ணவர் பண்ணை யார்ப்ப. (௩௨௪)

பூங்கழன் மிழற்ற வேறோர் பொன்னவாந் தேரின் மீப்போ
யாங்கொரு சாபம் பற்றி யவுணன்றன் செவியின் காறும்
வாங்கின னெழுநூறு வச்சிரப் பகழி பூட்டி
யோங்கலம் புயத்து வீர னுரத்திடைப் புகவுய்த் தார்த்தான். (௩௨௫)

ஆகத்திற் பகழி பாய வறுமுகன் றாதன் முன்னஞ்
சோகத்தை யுணாகி லாதோன் றுயரத்தின் சுவையுங் கண்டு
மாகத்தி லிரவி தன்னை வன்சிறை பிணித்தோன் சென்னி
காகதக் கிடுவ னென்று வெகுண்டனன் காலன் போல்வான். (௩௨௬)

கறுத்திடு வீர னீரேழ் கங்கபத் திரங்க ளேவி
யறுத்தனன் சிலையைப் பின்னு மாயிரம் பகழி தூண்டி
நொறிற்பரி யிரதந் தன்னை நூறின னூறு கோலான்
மறுத்தெதிர் பொருத தீயோன் மருமததை வாயில் செய்தான். (௩௨௭)

வருந்தில னதற்கு மைந்தன் வயினுறு மிரத மொன்றின்
விரைந்துடன் புகலும் வீரன் விசிகமா யிரத்தைத தூண்டி
யுரந்திறந் திட்ட வாற்றா லோச்சியே புறததிற் றாங்கு
மரந்திகழ் பகழித் தூணி துணிபட வறுத்தா னன்றே. (௩௨௮)

தூவுறு பகழி தூர்க்குந் தூணியிற் றிடலு நேமிக்
காவலன் றனய னம்மா கார்முக விஞ்சை தன்னுன்
மேவலன் வென்றி கோட லரிதென வினைய முன்னித்
தேவர்தே வுதவு மோகப் படையினைச் செங்கை கொண்டான். (௩௨௯)

சிந்தனை கவரு மோகத் தீப்படை யவுணன் செங்கை
வந்திட வனைய போழ்தின் மனததினல் வழிபா டாற்றி
வெந்திற லணிகத தோடு மேவலன் றன்னை யெய்திப
புந்தியை யழிதது வீட்டி வருகெனப் புகன்று விட்டான். (௩௩0)

விட்டிடு மோக மென்னும் வியன்படை வெகுளி வீங்கித்
தட்டுடை நெடுந்தேர் வெய்யோன் றன்பெருஞ் சுடர்கண் மாற்றி
நெட்டிருப் படலை வீசி நிரந்தபல் லுயிரு மஞ்சி
யுட்டெளி வகன்று மாழ்க வொல்லெனப பெயர்ந்த தன்றே. (௩௩௧)

பெயர்ந்திடு மோக நாமப் பெரும்படை யூக்க நோக்கித்
துயாந்தனர் வெருவி யாற்றத் துளங்கினா தனுக்கென் றுள்ள
மயாந்தனர் பூதா யாரு மவ்வவர் தலைவ ரானோர்
சயந்தனை யிழந்து நின்று சாம்பினர் தேமபு கின்றார். (௩௩௨)

வேறு.

மோகப படைசே றலுமுந் தெதிர்மா
றேகப படையொன் றையுமே வுகிலார்
சேகப் படையத தொடைசிந் தினரான்
மாகப படைமொய்ம புடைவள ளல்பின்னோர். (௩௩௩)

அந்தத திறல்வெம் படையாற் றலுடன்
வந்துற றழிமே லவன்மற் றிதுதா
னைந்தப் படையா லழிவெய் துமெனச்
சிந்தித் தனன்வே ளொருசெய் கையிலான். (௩௩௪)

ஒன்றும் முதலோ னிலையுன் னுதலு
மன்றா லம்வருந் திறனு மெனவே
சென்றா ருணர்வுஞ் சிதைவித ததுபோர்
வென்றார் புகழ்மோ கவியன் படையே. (௩௩௫)

இலக்கத் துடனெண் மருமே னையரு
மலக்கத் துடன்வீழ்ந் தனர்மாற் றலரூர்
கலக்குற் றிடுகோ ளாகருத் தழியா
நிலக்கட் படுகந் தெனநின் றனனால். (௩௩௬)

நிற்கும் பொழுதத் தினினீ டகல்வா
னற்கும் பரிதிப் பகையங் கதுகண்
டெற்கின் றெதிரா யினர்யா வருளார்
நற்குன் னினனென் றுநகைத் தனனே. (௩௩௭)

புகழுற் றிடுமே லவர்புந் தியின்மா
றிகழுற் றிடுபெற் றிதெரிந் தவுணன்
மகிழுற் றுநகைத் துவயம் புனையா
நிகழுற் றிடுசீ ரொடுநின் றனனே. (௩௩௮)

மல்வன் மைகொண்மொய்ம் பனுமற் றவருந்
தொல்வன் மையிலா துடல்சோர்ந் தனரால
வில்வன் மையினு லிவர்வீ டுறவே
கொல்வன் கடிதென் றுகுறித் தனனே. (௩௩௯)

வரிநின் றவில்வாங் கினன்வா னுணர்வு
திரிநின் றவன்மேற் சிலைவீ ரர்கண்மேல்
விரிநின் றகணைப் படைமேல் விசிகஞ்
சொரிநின் றனன்யாக் கைதுளைத் தனனே. (௩௪௦)

ஆங்கா கியவே லையிலா றுமுகன்
பாங்காம் விறலோ ரெடுபா ரிடர்க
ணீங்கா மருண்மால கொடுநே ரலனாற்
றீங்கா யினதன் மைதெரிந் தனனே. (௩௪௧)

தெரிந்தான் முகமா றொடுசேர்ந் துயிர்தோ
றிருந்தா ரருளசெய் திடுமெம் பெருமான்
விரைந்தாங் கொரமோ கவியன் படையைப
புரிந்தா னதனோடு புகன் றிடுவான். (௩௪௨)

நன்றே தெளிவுற் றெமர்நண் ணும்வகை
நின்றே திலன்விட் டநெடுமை படைபாற்
சென்றே யதன்வன் மைசிதைத் திவணீ
வென்றே வருகென் றுவிடுத் தனனே. (௩௪௩)

ஏண்கொண் டசிவன் மகனே வுபடை
சேண்கொண் டுபடர்ந் திருள்சிந் தையராய்த்
தூண்கொண் டிடுதோ ளவர்துன் னியதோர்
மாண்கொண் டசெருக் களம்வந் ததுவே. (௩௪௪)

மிடல்கொண் டவமோ கவியன் படைசென்
றிடுகின் றுழிவெய் யவனே வுபடை
யடல்கொண் டிடும்வீ ரரகத் திலிரு
ளுடையும் படிவல் லையினே டியதால். (௩௪௫)

அசைகொண் டவுடுத் திரளான வெலா
மிசைகொண் டவினன் வரவே கியபோற்
றிசைகொண் டிடுநம் மவர்சே னையொரீஇ
யிசைகொண் டவுணன் படைமீண் டதுவே. (௩௪௬)

மோகத் தனிவெம் படைமொய்ம் பிலதா
யேகத் திறல்வா குவுமே னையரு
மாகத தினின்மை யலகன் றமலன்
வாகைப் படைகண் டுமகிழ்ந் தனரே. (௩௪௭)

அழலுற் றதுபோ லவகன் மணியி
னிழலுற் றிடுதேர் மிசைநின் றவனு
மெழலுற் றிடுவீ ரர்கள்யா வர்களுந்
தொழலுற் றனர்நின் றுதுதித் தனரே. (௩௪௮)

செயிர்கொண் டகருத் தொடுசெற் றலர்தம்
முயிர்கொண் டிடுவோன் படையூற் றமெலா
மயிர்கொண் டிடவட் டதனுற் றறெரீஇ
மயிர்கொண் டபொடிப் பொடிவாழ்த தினரால். (௩௪௯)

தீயோன் படைசெய் தசெயற் கையில்யா
மாயோ மருளென் கையகத் தடையா
வாயோ டுரைவீ ரமறுத தனரா
யேயோ வெனவெள் கினர்யா வருமே. (௩௫௦)

அண்டா தவனு லெம்மகத் திலிரு
ளுண்டா கியதன் மையுணர்ந் தறிவன்
விண்டா னுறவிப் படைவிட் டனனென்
றெண்டா வுமுளத் திடையெண் ணினரால். (௩௫௧)

மூக்நான் கெனுமொய்ம் புளமூர்த் திதனை
யுன்னு வருணீர் மையுளத் தடையா
வன்னார் தொழுதேத் தினரத் துணையின்
மின்னு மெனவப் படைமீண் டதுவே. (௩௫௨)

மீண்டுற் றவமோ கவியன் படைபோய்த்
தூண்டுற் றருகன் புடைதுன் னியதா
லாண்டுற் றிடும்வீ ரர்களண் டலன்மேன்
மூண்டுற் றிடுபூ சன்முயன் றனரே. (௩௫௩)

ஆங்குற் றிடுகா லையடுந் திறலின்
பாங்குற் றிடுமொய்ம் புபடைத் துடையோ
னீங்கற் கருமா னமுநீள் சினமு
மோங்குற் றெழவின் னதையுன் னினனே. (௩௫௪)

அந்நே ரலனீண் டொரடற் படையான்
முன்னே மயல்செய் தமுரண் டொலைய
வின்னே யடுவே னெனவெண் ணமுருக்
கொன்னே யரன்மாப் படைகொண் டனனே. (௩௫௫)

அங்கத னென்கின்ற வணங்கு வாரத்
தெங்கட் டிறைவன் படையே கியதும்
வெங்கட் படுதன் படைமீண் டதுவுஞ்
செங்கட் டிறலண் ணல்செயற் கையுமே. (௩௫௬)

வேறு.

இம்மெனச் சூரமக னிவற்றை நோக்குறா
விம்மித மெய்தினன் வீர மொய்ம்புடைச்
செம்மலை யெதிர்ந்திலன் செருக்கு நீத்தனன்
கைம்மிகு துயரினன் கருதன் மேயினான். (௩௫௭)

இவ்விடை யொன்னல ரெண்ணம யாவையும்
வவ்வினன் மாநில வரைப்பின் வீட்டின
னுய்வகை பெற்றுட னுணர்ந்து தோன்றினார்
செய்வதெ னையகோ கடவுள செய்கையே. (௩௫௮)

எடுத்தனன் மாற்றல னிறைவன் மாப்படை
தொடுத்திடு வானெனிற் றன்னி யென்னுயிர
படுத்திடும் யானது பரித்து வந்திலன்
விடுத்துட னப்படை விலக்கும் வண்ணமே. (௩௫௯)

வென்றிட லரிதினி வீர வாகுவைச்
சென்றனன் மூதுநகர்த் தெய்வ தப்படை
மன்றவுந் தந்திவன் வன்மை மாற்றுவ
னின்றிடல பழுதென நெஞ்சி லுன்னினான். (௩௬௦)

அயன்மகன் மதலைமீச யுருவ மாகிமே
வியன்மிரு தனதுதேர் விடுத்து விண்ணெழீஇப்
பயனறு முகிலெனப் படர்ந்து வல்லையி
னயனுறு கடிமதி னகருட் போயினான். (௩௬௧)

கொற்றவன் மறைந்தகல் கொள்கை காண்டலுஞ்
சுற்றுறு தானவர் தொலைந்து போயின
ரற்றது தெரிந்திடு மமரர் யாவரும்
வெற்றியின் றிமதென விளம்பி யார்த்தனர். (௩௬௨)

மாயையி னுருவமாய் வஞ்சன் மாநகர்
போயினன் காலையே புகுவன் போக்கினி
யாயவன் றனைவிரைந் தடுதி யென்றுபூத
தூயினர் வீரன்மேற் சுரர்கள யாவரும். (௩௬௩)

தினகரன் மாற்றலன் செம்பொற் றேரொரீஇ
யினைவுட னுருவமா யிரிந்து போதலை
வினையமொ டோர்வுறு வீர னினறனன்
முனிவொடு பிழைபடு மூரி யானைபோல். (௩௬௪)

விண்டிடு சூர்மகன் வெருவி வெங்கிடல்
கண்டனர் துணைவருங் கணத்தின் வீரருந்
திண்டிற விழுந்தனன் றீயன் பற்றிநாங்
கொண்டணை வாமெனக் கூறன் மேயினர். (௩௬௫)

என்பது விளம்பியே யாரு மார்ப்பொடு
துன்புறு மவுணனைத் தொடர்ந்து பற்றுவான்
முன்பொடு முயறலுந் தெரிந்த மொய்ம்பினன்
றன்புடை யோர்க்கிது சாற்றன் மேயினான். (௩௬௬)

பேடியர் சிறுதொழில் பேணி யுள்வெரீஇ
யோடினன் போகிய வொன்ன லான்றனை
நாடிநா மடுவது நலத்தின் பாலதோ
சாடுவ னினிவரிற் சரதம் யானென்றான். (௩௬௭)

என்றிவை வள்ளலு மியம்ப யாவரு
நன்றென விசைத்தலு மவற்றை நாடியே
குன்றுறழ் புயத்துணை கொட்டிக் குப்புறீஇ
வென்றிகொள் பாரிட வெள்ள மார்த்தவே. (௩௬௮)

முற்றிய தமரினி முயல்வ தில்லையாற்
செற்றல னோடினன் றிரும்பும் வீரனு
நிற்றில னினியென நினைந்து நீங்குவா
னுற்றன னாமென விரவி யோடினான். (௩௬௯)

செந்திரு மதுமலர் செறியப் பூத்துழி
முந்துறு நித்தில முழுது மொய்த்தென
வந்தர முழுவது மடைந்த செக்கரிற்
சுந்தர வுடுநிரை பலவுந் தோன்றிய. (௩௭௦)

குண்டுநீர்க் கனலொடு குலாவி மாவுளத்
தெண்டகு தமியரை யிகலி மாமதி
பண்டுள முனிவரர் பரமன் மேல்விடு
வெண்டலை யாமென விண்ணிற் றோன்றினான். (௩௭௧)

இத்துணை வேலையி லிலக்கத் தெண்மரா
மெய்த்துணை யார்களும் வெய்ய பூதரு
மத்துணைப் படைகளு மயலிற் சென்றிட
மொய்த்துணை விறலுடை மொய்ம்பன் மீண்டனன். (௩௭௨)

அந்தமில் கைலையை யருளிற் போற்றிடு
நந்திதன் கணத்தரி னாத னாகியோன்
விந்தைகொள் செருநில மொருவி மீண்டுபோய்க்
கந்தவேள் பாசறைக் கண்ணு ணண்ணினான். (௩௭௩)

நண்ணிய திறலினா னான்மு கன்முதற
புண்ணிய மேலவர் போற்ற வாண்டுறு
கண்ணுத லருள்புரி கந்தன் முன்புபோய்த்
துண்ணென வணங்கினன் றுணைவர் தம்மொடும். (௩௭௪)

வணங்கின னெழுந்துபின் வள்ள றோர்ந்திட
விணங்கலன் றன்மக னெதிர்ந்து போர்செயா
வணங்குட னிரிந்தது மனைத்துஞ் செப்பலுங்
கணங்களின் முதல்வன்மேற் கருணை யாற்றினான். (௩௭௫)

நல்லருள் புரிந்தபின் னம்பி யிப்பகற்
றொல்லம ருழந்தவிற் றுன்பங் கூர்ந்துளா
யெல்லிது பொழுதுநின் னிருக்கை தன்னிடைச
செல்லுதி துணைவரோ டென்று செப்பினான். (௩௭௬)

செப்பலும் விடைகொடு செம்மல் பின்னவா
மெய்ப்படு பாரிடம் விரவச் சென்றொரா
யொப்பருந் தனதுபே ருறையுள் வைகினான்
றுப்புறு தானைக டொன்மை போலுற. (௩௭௭)

சேயவன் விடுத்திடு சேனை பாசறை
போயது மிருந்ததும் புகலுற் றாமினி
மாயிரு வளங்கெழு மகேந்தி ரப்பதி
யாயிடை நிகழ்ந்தவா றறியக் கூறுவாம். (௩௭௮)

ஆடுறு சமரிடை யழிந்து முன்னரே
யோடிய வவுணர்கோ னுள்ளந் தன்னிடைப
பாடுறு துயரமும் பழியு மானமு-
நீடினன் பெருமித நிலைமை நீங்கினான், (௩௭௯)

கோனுறு மந்திரங் குறுகல் செய்திலன்
றூனுறு திருநகா தனனி லேகியே
யூனம துடையர்போ லுயங்கி வைகினான்
பானுவின் பகைஞனென் றுரைக்கும் பண்பினான். (௩௮0)

மந்திரக் கிளையொடு மருவ வேண்டலன்
றந்திர தமரொடுஞ் சார்தல் வேண்டலன்
சிந்துரத தொல்பகைச் சென்னி போற்றிய
விந்திரப் பெருந்தவி சிருக்கை வேண்டலன். (௩௮௧)

ஆடுறு மங்கைய ராடல் வெஃகலன்
பாடுறு மங்கைய ரிசையிற பற்றலன்
கூடுறு மங்கையர் குழாமு நோக்கல
னாடுறு மங்கையா புணர்ப்பு முன்னலான். (௩௮௨)

நிசாவது சென்றபின் னெடுஞ்செவ் வேலுடை
விசாகனை யவன்படை வீரர் தங்களை
யசாவுறு செருவிலவென் றுடல் கொள்வதற்
குசாவின னுளத்துட னூக்கம் வேறிலான். (௩௮௩)

வேறு.

ஆதவன் றன்பகை யவ்வழி யமாதனு
மேதருந் தொலைசமர் விளைவெலா நோக்கியே
மூதருந் திருநகர் முழுமணிக் கோயிலிற்
றாதர்கை தொழுதுபோய்ச் சூரனுக் குரைசெய்வார். (௩௮௪)

கேட்டியா லுன்மகன் கேடிலா வாகைசேர்
தோட்டுணை யானொடுந் தொல்சம ராற்றியே
யீட்டுபல் பூதரை யீறுசெய் திவ்விடை
மீட்டுமவ் வெய்தினான் வினையமுண் டாங்கொலோ. (௩௮௫)

அன்னபண் புணர்கிலே மதனைமே லறிதியான்
மின்னுதண் சுடருடை வேலவன் றாதனும
பன்னரும் படையொடும் பாசறைக் கேகினு
னின்னதால் விளைவெனு வினையெலாம் பகர்தலும். (௩அசு)

மாற்றலார் தமையடவலியிலனாகியே
யூற்றமா மைந்தன்வந் துற்றசொற் கேட்குமுன்
சீற்றமா யெரிவிழி சிதறவே வெய்துயிர்த
தாற்றவு முறுவலித் தரசனென் றுரைசெய்வான். (௩அஎ)

மைந்தருந் துணைவரு மருவுபல் சுற்றமுந்
தந்திரத் தலைவருஞ் சமரினுக் கேகலர்
நந்தலில் படையொடு நாளைநான் சென்றுபின்
கந்தனைத் திறல்கொடே கடிதின்மீண் டிடுவனல். (௩அஅ)

போதிரிப் பொழுதெனப் புகறலும் பணிகுறுந்
தூதுவர் போயினர் சூரனு மவுணர்கோ
னேதிலார் தம்மைவென் றிசைபுனைந் திடுதன்மேற்
காதலாய் வைகினன் யாவதுங் கருதலான். (௩அகூ)

அடுபெரும் போரினை யாற்றியே யாற்றலான்
முடிவிலா விறல்கொள முன்னுவீ ரர்க்கெலா
நெடியளாய்த் திறலிலா நெஞ்சினு ருக்கெலாங்
கடியளாய் வைகினள் கங்குலா நங்கையே. (௩கூ0)

பிரிகுவார் தங்களைப் பிரிகலா தேனையோ
ரருகுதா னிற்கலா தச்சநா ணினறியே
விரகநோய் தெறுதலான் மிகக்தோர் தூர்ததராய்த்
திரிகுவா ராமெனச் செல்லுமிவ வெல்லியே. (௩கூக)

பாடிசா றென்றிசைப் பார்புரந் திடமிரா
வீடிசால் வெம்பக லெல்லொடும வருவது
நேடியே மதியெனு நீள்குடை முன்செல
வோடல்போற் போயதா லுடுவெனும் படையொடும். (௩கூ௨)

மையிருட் கலையினை மகிழ்நனு மதிநிலாக்
கையினு னீக்கியே கலவிசெய் தகலுழி
வெய்யவன் வருமெனு வெள்கியத் துகிலுடீஇ
யொய்யெனப் போயினுள கங்குலென் றூற்றுளாள். (௩கூ௩)

ஆ திருவிருத்தம் - சடுஎ.

---

வசனம்.

தூதர்களே, நீங்கள் விரைந்துபோய் என்மகனாகிய பானுகோபனையழைத்து வாருங்களென்றுசொல்ல, அவர்களும் அப்படியேபோய்த் தெரிவித்தவுடனே பானுகோபன் புறப்பட்டுவந்து தன்தந்தையாகிய சூரபன்மனை வணங்கினன், அவனைச் சூரபன்மன்பார்த்து, என் அருமைமகனே, முருகன் உன்சிறியதந்தையாகிய தாரகனைவென்ற செருக்கினல், நம்மையும் வெல்லத்துணிந்து நமது நகரத்தைத்

னாகி அந்தக்கோபுரவாயில்வழியே நுழைந்துநுழைந்து வெளியேசென்றுதிரிவார்கள். தமது புன்னகையாலுண்டாகிய நெருப்பை முப்புரத்தின்மேற் செலுத்திய சிவபெருமானது ஆணையினால் சிறந்து விளங்குகிற இந்தக்காஞ்சிமா நகரத்தில், ஆகாயமளாவிய மதிலினிடத்து அந்த நகரத்தோடுண்டாயினவேயன்றி இடையிலே நிருமிக்கப்பட்டன வல்லவென்று சொல்லும்படி, கோபுரங்களிலுள்ளகொடிகள் அவற்றின் தளிர்கள்போன்று விளங்கின. மாடமாளிகைகளும் மண்டபகோபுரங்களும் ஒவ்வொரு வீதிகளிலும் கோடா கோடியினும அதிகமாயுள்ளன. ஆகையால், அவற்றைக்கணித்துச் சொல்லவல்லவர்யார்? அவற்றின்மேற் கட்டப்பட்டுள்ள கொடிகளின் தொகையும் அவ்வாறே கணிக்கப்படாதனவாயிருக்கும். பெரியமலைகள்போன்ற மாளிகைதோறும் கட்டப்பட்டுள்ள மகரதோரணங்கள் பலநிறக்கண்ணாடிகளில் பொருந்தி விளங்குதல் எதுபோலுமெனின், ராகு கேதுக்களிரண்டும் ஒருவடிவுகொண்டு ஆகாயத்தில் சந்திர சூரியர்களென்கிற இருசுடர்களின் புறத்தை மறைத்த தன்மையையொத்திருக்கும. பசுமபொன்னினாற் செய்யப்பட்ட பல அடுக்குகளையுடைய சுழற்றேர்கள் ஆகாயத்தில் தமது நுனிகள்பொருந்தும்படி பல தம்பங்களையடைந்து சுழன்று கொண்டிருத்தல் எதுபோலுமெனின், நேராகிய கோல்களினுச்சியிலே பம்பரத்தினுருவத்தைச்சுழற்ற, அது சுழன்றுகொண்டிருக்குந் தன்மையை நிகாக்கும். பளிங்குக் கற்களினாற் செய்யப்பட்ட திண்ணைகளின்மேல் முத்துக்களும மாணிக்கங்களும பதிக்கப்பட்ட இடங்களின்மேல் நிறுத்திய பொற்பாலிகைகள் சோந்திருத்தல் எதுபோலுமெனின், ஒருதடாகத்திற் பூத்த தாமரைமலாப்பொகுட்டை யொத்திருக்கும. சித்திரத்தோடு கூடியமரகத நிலையின்மேல் பொன்னிலையும் அதன்மேல் முத்துநிலையும் அதன்மேல் மாணிக்க நிலையும் விளங்குதலால், அவை மேகமண்டலமும சூரியமண்டலமும் சந்திரமண்டலமும் அக்கினிமண்டலமும் ஒன்றின்மேலொன்றாக இருக்குந் தன்மையை அந்தப் புராதனநகரமானது காட்டிக்கொண்டிருக்கும். மன்மதன்போன்ற அழகுள்ள வாலிபர்களும் ரதிதேவிபோன்ற அழகுள்ள மாதர்களும் வசிக்கின்ற முத்துமாலிகை வரிசையின் பக்கத்தில், அழகிய மயிற்கூட்டத்துடன் தனித்துச் செல்லும் அன்னப்பறவையானது கருமையாகிய மேகங்களின் நடுவில் பூர்ணசந்திரன் நுழைந்து செல்லுந் தன்மையை யொத்திருக்கும். கொடிகளசையுங்காட்சி, சூரிய சந்திரர்கள் ஆகாயத்தில் உதித்து வருவதைப்பார்த்து உலகிலுள்ள பாம்புகளெல்லாம் ஒருங்குசேர்ந்து தண்டாகாரமாய்நிமிர்ந்து அந்நகரத்திலுள்ள மாளிகைகளுக்கும் மண்டபங்களுக்கும் அருகிற்சென்று அவர்களைப்பிடிக்கும்பொருட்டுத் தாம் கொண்ட கோபத்தினால் தங்கள் பிளப்புள்ள நாவை நீட்டியசைக்குந் தன்மையை யொத்திருக்கும். இனிமையால் தேனைவென்ற சொற்களையுடைய மாதர்களோடு ஆடவர்கள் மூழ்குகின்றதடாகம்போல, பளிங்குக்கற்களால் விளங்குகிற இடத்தில் பிரகாசிக்கிற மாணிக்கக்கற்களமைத்த மேல் மாளிகைகள் விளங்குதல் எதுபோலுமெனின், அந்தரத்தில் நிற்கிறதெய்வவிமானத்தை யொத்திருக்கும். தேவர்களும், அசுரர்களும் முனிவர்களும் சித்தர்களும் இயக்கர்களும் மற்றைத்தேவர்களும்தங்கள் தங்களுடைய நகரங்களினின்று நீங்கி இந்நகரத்தையடைந்து வாசஞ்செய்தற்குரிய வெவ்வேறிடங்கள் அதிகமாய் நிலைபெற்றிருக்கும். கையினிடத்தில் தொங்குகின்ற கமண்டலம் பக்கத்திலிருக்க, பிராணவாயுவைவெழுப்பி, ரேசகபூரக கும்பகங்கள் செய்து விதிப்படியே நாசிநுனியில பார்வையைச்செலுத்தி, ஏற்பதாகிய ஒருவகை ஆசனத்திலிருந்துகொண்டு, சிவபெருமான் திருவடிகளை இதயகமலத்திலிருத்திப்

பெரிதாகியதவத்தைச் செய்வோர்களுடைய பன்ன சாலைகளும் அந்நகரத்தில் பற்பலவுண்டு. முற்காலத்தில்நாம் திருமுடியைத்தேடும்படி நெருப்புமலையாய் நிமிர்ந்து நின்ற சிவபெருமான் மறுபடியும் இவ்வுருவத்தோடுஉயர்ந்து நிற்கின்றனரோவென்று பிரமதேவனும் நினைக்கும்படி நான்கு வேதங்களையு முணர்ந்தவேதியர் செய்யும் யாகப்புகை அண்டமுகட்டையுங் கடந்து சென்றது. மெய்யுணர்வினால் நல்லொழுக்கத்தை உயிர்போலக் காப்பாற்றுகிறவர்களும் மேன்முறைக்கண்ணே நிற்பவர்களும் ஐம்புலன்களை வென்றவர்களும ஆகியவேதியர் தெருக்கள் பலவாக அந்நகரத்தில் நெருங்கியிருக்கும். பலவகையாகிய ஆயுதங்களையுடைய பலவான்களும் அநேக யுத்தங்களில் வெற்றியடைந்தவர்களும் சதுர்வேத பாராயணர்களுமாகிய அரசர்களுடைய தெருக்களநேகம் தெய்வலோகத்துக்குச் சமானமாயிருக்கும். ஆபரணக்குவியல்களும் நவமணிக்குவியல்களும் பொற்குவியல்களும் பிறபொருள்களும் அளவில்லனவாய் நிறைந்திருக்கிற வைசிய கடைவீதிகள் கற்பகத்தருவை நிகாத்து எல்லாப்பொருள்களையும தருவனவாய் விளங்கிக்கொண்டிருக்கும். கங்காகுலத்தில் பிறந்தவர்களும பூமிதேவிக்குப் புதல்வர்களும திருமாலுக்குச் சமானமாகிய செல்வப்பெருக்குள்ளவர்களும் பிரமதேவனது பாதத்திற்பிறந்தவர்களுமாகிய வேளாளருடைய வீதிகளும் பலவாகநிறைந்திருக்கும். தமது ஐம்பொறிகளாலும் காணடலமுதலிய செயல்களைச் சிவபெருமானிடத்தே செய்கிற தொண்டர் திருக்கூட்டங்களும கண்களில் ஆநந்தக்கணணீர்சிந்தக் கைகூப்பிவணங்குகிற தேவர்கூட்டங்களும் ஆலயங்கள்தோறும் நிறைந்திருக்கும். பிரமன் முதலிய தேவர்கள் எக்காலத்தும் இந்நகரத்தில் வந்து சஞ்சரித்தலால், அவர்களுடைய வாகனங்களாகிய அன்னமுதலியவற்றின் அடிச்சுவடுகள் இந்நகரத்தின் தெருக்கள் தோறும் நீங்காதிருக்கும். குதிரைகள் கனைக்கின்ற வோசையும யானைகள் பிளிறுகின்றவோசையும தோகளினோசையும் காலாட்களினோசையும் தேவதுந்துபியோசையும் அத்தெருக்களில் இடையறுமலிருக்கும். அந்நகரத்திற் செய்யப்படும் நடநமெல்லாம் சிவபெருமானுடைய நடநமே. பாடும்பாடல்களெல்லாம அவன்விடயமாகிய பாடல்களே. கேட்பனவெல்லாம அவனது பெருமைவாய்ந்த புண்ணிய சரிதங்களே. கூட்டங்களெல்லாம் அவனது திருத்தொணடு செய்வோருடைய கூட்டங்களே. அந்நகரத்தில் பால் தயிா நெய் முதலியனை கிணறுகளில் நிறைக்கப்பட்டிருக்கும். அங்குள்ள அன்னசத்திரங்களெலலாம் உமாதேவியார் முப்பத்திரணடு தருமங்களையுஞ் செய்துவருகிற அன்னசாலையையொத்திருக்கும. உயர்ந்த மாளிகைகளின் வாயில்களதோறும மேலேறியாடுகிற கழைக்கூத்தர்களைப்போல, அவ்வவ்விடங்களில் நிலைபெற்றாடுகிற சித்திரப்பிரதிமைகளின் வரிசைகள் தேவர்களும் உற்றுப்பார்த்து விரும்பத்தக்கனவாயிருக்கும். அந்நகரத்திலுள்ள இளஞ்சிறுவர்கள் ஊர்ந்துவிளையாடுகிற பலவகையாய் அலங்கரிக்கப்பட்ட சிறுதேர்கள் பலசூரியர்கள் செலுத்திய தேர்களையொத்திருக்கும். அந்நகரத்திலுள்ள பொதுவிடங்கள்தோறும் தமிழ் முதலிய பாஷைகளில் வல்லபுலவர்களும் கொடையாளரும் நெருங்கியிருப்பார்கள். மாடங்களின்மேல் சஞ்சரிக்கிற மாதருடைய கூந்தலைப் புலாத்துகின்ற அகிற்புகையும் மேகங்களும் வேறுபாடு தோன்றாமற் கலந்திருக்கும். நாட்டியப்பெணகள்செய்யும நடநவோசையும் பாடலினோசையும் தேவர்களுடைய செவிகளுக்கு இனிமையைத் தருவனவாயிருக்கும். அரம்பைப்பெண்கள் இந்நகரத்திலுளாரை விரும்பலும் தேவர்கள் இந்நகரத்துக் கணிகைமாதரைவிரும்பலும் நோக்கினால் இது மன்மதனுடைய ராஜதானியென்று சொல்லலாம். யானைக

ளின் மதநீர்ப்பெருக்கும் இடைச்சேரியினின்றும் வழிந்துவருகிற பாற்பெருக்கும் கலந்து தெருக்கடோறும் ஆறுபோலோடும். ஆடவரும் மாதரும் அணிந்து களைந்த ஆடையாபரணமுதலியவையே திருமகளுக்குச் செல்வமாகுமென்றால் இக்காஞ்சி மாநகரத்தின் வளத்தையெடுத்துச்சொல்ல யாவரால் முடியும். முரசமுதலியவாத்தியங்கள்முழங்க மணஞ்செய்யுமோசையே அந்நகரத்தில் நீங்காதிருக்கும். தேவர்களாலும் நாகலோகத்தாராலும் அந்நகரானது விரும்பப்படும் பெருமையுடையதாயிருக்கும். பகை நோய்முதலிய கெடுதிகள் அவ்விடத்திலில்லாமையால் இந்நகரத்தை முத்தியுலகென்றே சொல்லலாம். பொன்னே மரமாகவும் கிளைகளாகவும், பவளமே இலையும் தளிருமாகவும் நீலமணிகளே மலர்களாகவும் தோன்றி விளங்குகிற காஞ்சிமரமானது ஐந்துவிஷ்ணுக்கள் கண்டு அவர்களால் அமைக்கப்பட்ட தடாகத்தின் பக்கத்தில் தனதுநிழல் நிலைபெயராதிருக்கும் காரணத்தால் இதனைக்காஞ்சிமா நகரமென்று உலகத்தார் கூறுவார்கள்.

இதுபோன்ற பலகாரணங்களால் அந்நகரத்துக்குப் பிரளயசித்து, சிவபுரம், விண்டுபுரம், திரிமூர்த்திவாசம், பிரமபுரம், தபோமயம், சகலசித்தி, கன்னிகாப்பு, துண்டீரபுரம், தண்டகபுரம் எனப்பலபெயர்கள் அமைந்து வழங்குகின்றன. அயோத்தியை முதலிய சப்தநகரங்களுள்ளே இந்நகரம் சிறந்ததென்று முற்காலத்தில் சிவபெருமான் உமாதேவிக்கருள்செய்ததனால் இதினுஞ் சிறந்த நகரம் இவ்வுலகத்திலுண்டு ? பாலியாறு வடதிசையிற்செல்லவும், சேயாறு தென்றிசையிற் செல்லவும் நடுவே விளங்குகிற காஞ்சிமாநகரமானது கங்கை யமுனையென்னும் இரண்டு நதிகளுக்கும் நடுவேயுள்ள காசியினுஞ்சிறந்து விளங்காநிற்கும். அநேகமாயிரந்தீவினைகளைச் செய்தவர்களும் ஒரு நல்வினையைச்செய்ததால் அவர்கள் பாவமொழிந்து சிறந்த பதவிகளையடைவதுகண்டு தேவர் முதலியோர் வந்து தவஞ் செய்துகொண்டிருக்கும் அக்காஞ்சிமா நகரத்தின் பெருமையைச் சொல்ல வல்லவர் யாவர்? பிரமதேவன்படைத்த எல்லாவுலகங்களும் அழிந்தகாலத்தும் அழியாதிருக்கையால் இந்நகரம் சிவபெருமானால் படைக்கப்பட்டதென்றே சொல்லலாம். ஒலிகளெல்லாம் வேதவொலியாகவும், நீரெல்லாங் கங்கை நீராகவும், கற்களெல்லாம் சிவலிங்கங்களாகவும், அங்குவசிப்போரெல்லாம் தேவராகவும், மரங்களெல்லாம் கற்பகமரங்களாகவும், அநுபவிப்பதெல்லாம் இன்பமாகவும், சஞ்சரித்தல் பிரதக்ஷிணமாகவும், நினைப்பதெல்லாம் தியானமாகவும், விழுதலெல்லாம் சிவவணக்கமாகவும் கொள்ளப்படுவது வேறு எந்த நகரத்திற்குண்டு? சாக்கிய நாயனார் திருக்குறிப்புத்தொண்டநாயனார் முதலிய அடியார்கள் முத்திபெற்றதும் இந்நகரமே. உமாதேவியானவள் காசியை விட்டுவந்து முப்பத்திரண்டு தருமங்களையும் குறைவற நடத்துவதும் இந்நகரத்திலேயாகும். உமாதேவியானவள் இன்னமும் நோற்றுக்கொண்டிருக்கிற இந்நகரத்தில ஒருக்ஷணமாயினும் தங்கினவர்கள் முத்தியுடைதற்கொரு தடையுமில்லை. மேலும், மும்மூர்த்திகளும் இந்திரன முதலானோருமிருந்து அரசாண்டது இந்நகரமேயாம். இந்நகரத்திலுள்ள சிவாலய விஷ்ணுவாலயங்கள்போல் வேறெந்த நகரத்திலுமிருக்கக்கண்டிலேம். இந்நகரத்தில் ஒருதூண்டாவிளக்கு, இரண்டிடம், மூன்று தெற்றி, நான்கு அரண, ஐந்து தருக்கள், ஆறு பறவைகள், எழு நதிகள், எட்டுப் பொதுக்கள், ஒன்பது பொய்கைகள் பத்துக் கற்கள், பதினொரு சபைகள் இவையாவும் விளங்கிக்கொண்டிருக்கும். இவற்றின் விரிவைவிளக்குவோம், காமக்கோட்டத்தில் இறைவி

யெழுந்தருளியிருக்கும் பிலத்திற்கருகிலிருப்பதொரு தூண்டாவிளக்கு. இறவாத்தானம் பிறவாத்தானம் என இறைவனிருக்குமிடமிரண்டு. உணவுதருந்தெற்றி, படைக்குந்தெற்றி, மூகர்க்குச்சொற்பயிற்றுந்தெற்றி எனத்தெற்றிகள் மூன்று. வடக்கில்வேங்கடம், தெற்கில் பெண்ணையாறு, மேற்கில் பவளமலை, கிழக்கில் கடல் இவையே நான்கரண்கள். வேதவுருவாய்த் தழைத்தோங்கியமா, மலர்பிஞ்சுகாய்கள் காட்டாமலே பழங்களைத்தந்து அவற்றை யுண்பார்க்கு அஷ்டமா சித்திகளையுந் தருகின்றபுளி, மணமுள்ள பலவகை மலர்களைப் பூத்துத்தழைத்த இலுப்பை, ஆகாயத்தையே நோக்கும்அத்தி, தனது நிழல்புறத்தேசெல்லாமல் நிற்கின்ற காஞ்சி இவையே ஐந்துதருக்கள். அமுதருண்டியைததருகிற சாதகம், நவமணிகளைத்தருகிற அன்னம், நூல்களை வடித்துரைத்துக் கொம்பில்வாழுங்கிள்ளை, இனிவருங் காரியத்தைச்சொல்லுகிற ஆந்தை, குறையுறிற்கூவாக்கோழி, உலகத்துப்பாவமொழிக்குஞ் சக்கரவாகம் இவைகளே ஆறுபறவைகள். கம்பை, பம்பை, மஞ்சணீர், பிச்சி, கலிச்சி, மணணி, வெஃகா என நதிகளேழு. நீர்வேட்டோர்க்குதவித்திரிகின்ற காவலையுடையபொது, குறுமுயல்சென்று கரியைத் தொடரும்பொது, எழிசைப்பயனை விளக்கும்பொது, விஷ்ணுமூர்த்தி கண்வளரும்பொது, ஒருபுற்றில் முழவோசையிடையறுதொலிக்கும்பொது, திசை மயக்கங்காட்டும்பொது, இறைவி தவஞ்செய்யும்பொது இவையே எட்டுப்பொதுக்கள். பிணிநீக்கும்பொய்கை, மநுவந்தரம் பிரமகற்பம் ஆகிய இவற்றைத்தெரிவிக்கும்பொய்கை, முக்கால முணர்த்தும் பொய்கை, இறைவனடிகாட்டும் பொய்கை, வேண்டியவற்றைத்தருமபொய்கை, மெய்யுணர்வு தருமபொயகை, பொன்னிறந்தரும் பொய்கை, திருமகள்விலாசமளிக்கும் பொய்கை, வசிகரம்தரும் பொய்கை எனப் பொய்கைகள் ஒன்பது. விடமொழிககுங்கல், பிணியொழிக்குங்கல், அடுத்தவரைத் தேவராக்குங்கல், வெட்டப்பட்டுவிழுந்த வுடற்றுண்டுகளிரண்டையும் பொருந்தச் செய்யுங் கல், வேந்தர்க்கரசாட்சி தருங்கல், புதையலுணர்த்துங்கல், வினையொழிக்குங் கல், வழக்கறுக்குங்கல், படைக்கஞ்சாது நிற்குங்கல், இறந்தாரை யெழுப்புங் கல் எனக்கற்கள் பத்து. பிறன்மனை நயந்தாரை மூகராக்குஞ்சபை, கணவனைவஞ்சித்த மனையாளை மூகையாக்குஞசபை, ஆசிரியனையவமதிததாரை மூகராக்குஞ் சபை, திருடர்முன்னே சுழலாநிற்குஞ்சபை, பலநிறங்கள் தோன்றுவிக்குஞ்சபை, விஞ்சைகள் வழங்குஞ்சபை, திசைமயக்கறுக்குஞ்சபை நாகர்நாட்டிற் செலுத்துஞ்சபை. நவமணிகளையுதவுஞ்சபை, அமிர்தமிருக்குஞ்சபை, உருமறைக்குஞ் சபை, மேகமிடையறாது மழைபொழியுஞ்சபை, இரவைபபகலாக்குஞ்சபை, பகலையிரவாக்குஞ்சபை எனச்சபைகள் பதினொன்று. இவைபோன்ற அற்புதங்கள் இன்னுமநேகம் அந்நகரத்திலுண்டு. அவற்றையெடுத்துப் புகழ்தல் பிரமதேவனுக்குங் கூடாது. முற்காலத்தில் பிரமதேவன் இந்நகரச்சிறப்பை சநகனுக்குச் சொல்ல, அவன் வியாசமுனிக்குச்சொல்ல, அவன் சூதமுனிக்குச் சொல்ல, அவன் நைமிசாரணியத்தில் சவுநகன்முதலிய முனிவர்களுக்குச் சொன்னதை. யான்சொல்லவல்லேனோ. கருணைவடிவையுடைய இறைவியெழுந்தருளித் தவஞ்செய்யுங் காமகோட்டம்போல அதற்கருகே குமரகோட்டம் என்றொருதலமும் அந்நகரத்துண்டு. இந்தக்குமரகோட்டத்தில் பரமசிவனது நெற்றிக் கண்ணிலுதித்து, வேற்படையேந்திச் சூரபன்மன் முதலியோரைச் சங்கரித்துத் தேவர்சிறைமீட்டு இந்திரனை விண்ணாட்டிற் குடியேற்றினவனாகிய முருகக்கடவுள் எழுந்தருளியிருப்பான். இக்கடவுள் மதுரையின் மேற்றிசையிலுள்ள திருப்

பரங்குன்றமுதலிய ஆறு திருத்தலங்களிலும் அமர்ந்திருப்பான். இந்திரலோகத்தி லும், கந்தகிரியிலும், இந்நகரத்திலும் எழுந்தருளியிருப்பான், அன்றியும், குமர கோட்டத்தில் கண்டிகை, செபமாலை, கமண்டலமுதலியவற்றையேந்தி, முற் காலத்தில் பிரமனைமாற்றிப் படைப்புத்தொழிற் கடவுளாய் நின்றதுபோல வேடங் கொண்டு தேவர்கள் வந்துவணங்கும்படி யெழுந்தருளியிருப்பான். முற்காலத்தில் பிரமன் தன்மனம் தூய்மையடையும்பொருட்டு நாமகளோடு இந்நகரத்தில் வசிக்கும்போது, இல்லறநெறியில் வழுவாத முனிவரெல்லாரும்வந்து, பிரமனை வணங்கி இறைவனே! யாங்கள் இதுவரையில் இல்லறத்தில்வழுவாது நின்றோம், இனித்துறவறத்தையடைந்து தவஞ்செய்ய விரும்பினோம், தவஞ்செய்தற்குரிய நிர்மலமாகிய இடமொன்று எமக்குக்கிருபை செய்யக்கடவீரென்று பிரார்த்திக்க, பிரமன் ஒருதருப்பையையெடுத்து அதையொரு சக்கரவுருவாய்ச் செய்துருட்டி விட்டு, இந்தச்சக்கரம் எந்த இடத்திற்போய்நிற்கின்றதோ அதுவே உங்கள் தவத் துக்குரிய இடமென்று நியமிக்க, அவர்களும அப்படியே அதனைத் தொடர்ந்து போய்அதுநின்றதனால் நைமிசமெனப் பெயர் பெற்ற அரணியத்தில் (நைமிசாரணி யத்தில்) தங்கியிருந்தார்கள். இருக்கும்போது ஒருவேள்வி செய்துமுடித்து மனத் தூய்மையுடையவராயமுனிவர்களிருக்குமிடமாகிய அந்த நைமிசாரணியத்திற்குச் சூதமுனிவர் எழுந்தருளலும், அவரை அம்முனிவர்கள் செய்யவேண்டிய வுபசாரங் களெல்லாம்செய்து, இறைவனே! பிரமதேவனது கட்டளையால் யாங்கள் இங்கு வசிக்கும்படியான பாக்கியம்பெற்றோம், எமது தவப்பயன்போன்ற தேவரீரைத் தரிசிக்கவும் பெற்றோம், ஆதலால் எமது பிறவிப்பயனடைந்தோம் என்று கூற, சூதமுனிவர் அவர்களைநோக்கி, முனிபுங்கவர்களே! உங்களை நான் தரிசிக்கப்பெற் றது என் தவப்பயனன்றோ வென்றுபசரித்துக் கூறுதலும, அம்முனிவர்கள் மன மகிழ்ந்து, சூதரைநோக்கி, வியாசமுனிவருடைய மாணக்கருட்சிறந்த பெருந்தவ னே, யாம் சண்முகப்பெருமாள் கதையைக்கேட்க மிகவும விருப்பங்கொண்டி ருக்கிறோம் அதனையெங்களுக்கு அநுக்கிரகிக்கவேண்டுமென வேண்டுதலும், அவ் வாறே சூதமுனிவர் அவர்களுக்குச் சொல்லததொடங்கினர்.

## பாயிரப்படலம்.

முந்தொரு காலத்தின் மூவுலகந் தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனாலே
யந்தமின் மறையெல்லா மடிதலை தடுமாறிச்
சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்றார். (௧)

நெற்றியில் விழிகொண்ட நிமலன தருளாலே
யற்றமின் மறையெல்லா மாதியின் வரலாலே
மற்றத னியல்பெல்லா மயலற வேநாடித்
தெற்றென வெவராலுஞ் செப்புவ தரிதாமால். (௨)

ஆனதொர் பொழுதின்க ணமரரு முனிவோரு
மானில மிசைவைகு மாக்களு மிறையுள்ள

ஞானம திலராகி நவின்மறை நெறிமாற்றித்
தீநெறி பலவாற்றிப் பனுவல்கள் சிலசெய்தார். (௫)

அவனியி லறமெல்லா மருவினை யெனநீக்கிப்
பவநெறி யறமென்றே பற்பல ருஞ்செய்யப்
புவனம துண்டோனும் போதனு மதுகாணுஞ்
சிவனரு ளாலன்றித தீர்கில திதுவென்றார். (௬)

வேறு.

இன்ன பான்மையை யெண்ணி யிருவரும்
பொன்னி னூடி புறந்திடு மன்னனுந்
துன்னு தேவருஞ் சுற்றினர் வந்திடக்
கன்னி பாகன் கயிலையி லேகினார். (௭)

அந்தில் செம்பொ னணிமணிக் கோயிலின்
முந்து கோபுர முற்கடை யிற்புகா
நந்தி தேவரை நண்பொடு கண்டுநீ
ரெந்தை யாக்கெம் வரவிசைப பீரென்றார். (௮)

தேவ தேவன் றிருமுன்ன ரேகியே
காவ னந்திக் கடவுள் பணிந்தெழீஇப்
பூவை வண்ணனும போதனும் புங்கவ
ரேவ ருஞ்செறிந் தெய்தின ரீண்டென்றான். (௯)

என்ற காலையின் யாரையு மிவ்விடைக்
கொன்றை சூடி கொணர்கெனச செப்பலு
நன்ற தேயென நந்தி வணங்கியே
சென்று மான்முதற் றேவரை யெய்தினான். (௧௦)

செம்மை போகிய சிந்தை யரைக்கெழீஇ
யெம்மை யாளுடை யானரு ளெய்தினு
னும்மை யங்கு வரதுவன் றுணினி
வம்மி னீரென வல்லையிற் கூவினான். (௧௧)

விளிதத காலை விழிவழிப் போதரீர்
துளிக்க நின்று தொழுது கவலொரீஇக்
களிக்கு நெஞ்சினர் கண்ணுத லெந்தைமுன்
னளித்தி யாலென் றவனுட னேகினார். (௧௨)

புடைக டந்திடு பூதர்கள் போற்றுமத்
தடைக டந்து தடுப்பரும் வேனிலான்
படைக டந்தவர் பாறபடு மெண்ணிலாக்
கடைக டந்துபி னண்ணலைக் கண்டனர். (௧௩)

முன்ன ரெய்தித் தொழுது முறைமுறை
சென்னி தாழ விறைஞ்சினர் சேணிடைத்
துன்னு மாதரந் தூண்டவந் தண்மினொ
டுன்னு மன்பி னுததியி னாழ்ந்துளார். (கஉ)

ஈர்க்கும் பாசத் திருவினை யின்றொடே
தீர்க்கின் றாமிவ ணென்னுஞ் செருக்கினாற்
றார்க்கின் றார்மலர் சோதிபொற் றண்மிசைப்
போர்க்கின் றார்மெய்ப் பொடிபபெனும் போர்வையே. (கங)

நேய முந்த நெடும்பக னீங்கிய
தாயெ திர்ந்திடு கன்றின் றகைமையாய்த்
தூய வந்தனை யோடு தொழுமவர்
வாயின் வந்தன வந்தன போற்றினார். (கச)

அண்ண லீசன் வடிவை யகந்தனி
லெண்ணி னெல்லையி லின்பம் பயக்குமாற்
கண்ணி னோவரு காட்சிய ராயிடி
னெண்ணு மோவவர் தஞ்செய லோதலே. (கரு)

மேலை வானவர் வேந்தொடு மெம்பிரான்
சீல மேய திருமுன்பு மேவினார்
மாலு நான்முகத் தண்ணலும் வந்திரு
பாலு மாகிப் பரவின ரென்பவே. (கசு)

வேறு.

அம்புயா சனமுடை யண்ண லாழியா
னும்பரோ டித்திற முற்றுப் போற்றிச
செம்பொனார் முடிமிசைத் திங்களா சோத்திய
வெம்பிரா னருளபுரிந் தினைய கூறுவான். (கஎ)

ஒன்றொரு குறைகளு முறுத பான்மையா
னன்றுநும் மரசிய னடந்த வோவெனக்
குன்றவில் லுடையவோர் குழகன் செப்பலு
னின்றமா ரெழுதிவை நெறியிற் கூறுவான். (கஅ)

ஆதியி லயன்படைப் பல்ல தென்னருண்
மேதிய னடுதொழி லேனை விண்ணவ
ரேதமில் செயன்முறை யாவுங் கண்ணுத
லாதநின் னருளினா னடந்த நன்றமரோ. (க௯)

கருமணி மிடற்றுடைக் கடவு ளின்னுநீ
யருளுவ தொன்றுள ததனைக் கூறுவ

ரிருசில மேல்வ ரியாரு மின்றனைப்
பரமென வுணர்கிலர் மாயைப் பான்மையால். (உ௦)

நின்றன துரிமையை நிகழ்த்தி மேன்மையா
வென்றனை யயன்றனை யெண்ணு வார்சில
ரன்றியு நின்னுட னநேகர் தம்மையு
மொன்றென வேதினர்க் குரைக்கின் றார்சிலர். (உக)

காலமுங் கருமமுங் கடந்த தோர்பொருண்
மூலமுண் டோவென மொழிகின் றார்சிலர்
மேலுமுண் டோசில விளம்ப லின்மையின்
பாலுறு முணர்ச்சியே பரமென் பார்சிலர். (உஉ)

ஆற்றுறு புனல்படிந் தழுக்கு நீக்கலார்
சேற்றிடை வீழ்ந்தென மறைகள் செப்பிய
நீற்றொடு கண்டிகை நீக்கி வன்மையால்
வீறறொரு குறிகொடு மேவு வார்சிலர். (உ௩)

காமமோ டுவகையுங் களிப்பு நல்கலால்
வாமமே பொருளென மதிக்கின் றார்சிலர்
தோமிலா மூவகைத் தொழிலும் வேள்வியு
மேமமார் பொருளென வியம்பு வார்சிலர். (உ௪)

உரையிசை யாதியா மொலிகள் யாவையும்
பிரமமே யெனப் பேசு வார்சில
ரரிதுசெய் நோன்பினு லடைந்த சித்திகள்
பொருள்பிறி தில்லையெனப் புகல்கின் றார்சிலர். (உ௫)

பெருமைகொள் குலந்தொறும் பிறந்து செய்திடும்
விரதமுஞ் சீலமும் வினைகண் மாற்றிட
வருகலும் பிறவுமா யங்கம் விட்டுயிர்
பரவுதல் வீடெனப் பகரு வார்சிலர். (உ௬)

அறிந்தறிந் துயிர்தொறு மதுவ தாகியே
பிறந்திறந் துணர்வெலாம் பெற்று நோன்பொடு
துறந்துகொன் றிட்டன துய்த்துக் கந்தமற்
றிறந்திடன் முத்தியா மென்கின் றார்சிலர். (உ௭)

நன்னல மாதரை நண்ணு மின்பமே
யுன்னரு முத்தியென் றுட்கொள் வார்சில
ரின்னன துறைதொறு மெய்தி யாவருந்
துன்னரும் பிறவியுட் டுன்ப நீங்கலார். (உ௮)

வார்வில் லதனை விரைவிற் குனியா வடிவா ளிகள்போக்கிச்
சோர்வில் லவனு மெதிர்கின் றனரைத் துணிசெய் தனனிற்ப
வோர்வில் லொருவன் றனியே யிவண்வந் துறுபோர் புரிகின்றான்
போர்வில் லறிவ னிவனே யெனவே புகலகின் றனபூதர். (௫௨)

ஓதக் கடல்போ லலமந் தலமந் துலையா விகல்செய்யும்
பூதர்க் கிறையுக் கிரனென் றொருவன் புகைதீ யுமிழ்கண்ணன்
மேதக் கசலந் தரனு ருடலம் வீழும் படிகீண்ட
சோதிக் கடவுட் படையுண் டுமிழுந் தொலைவிலோ னிகல்வல்லோன். (௫௩)

ஏண்டா னவருக் கிறைவன் குமர னிகல்செய் திடுமாறு
கண்டான் முனியா விரைவிற் படர்வான் காலன் றிறல்கொள்ளுந்
தண்டா னதுகொண் டவனேர் குறுகித் தடமார் பிடையோச்ச
விண்டா னிவனென் றவுணப் படையோர் வெருவா வலமந்தார். (௫௪)

மாறா கியவுக் கிரனே வுதலும் வருதண் டவன்மார்பிற்
கூறா கியசா லிகைசிந் திடவே கொதியா வருகின்றான்
பாறா டுகளத் திடையீங் கிவனைப் பலியூட் டுவனென்னா
நூறா யிரமா சுகமோர் தொடையி னெய்திற செலவெய்தான். (௫௫)

வெய்தா மயில்வா ளிகளுக் கிரன்மேல் விறல்சே ரதிசூர
னெய்தா னதுமற் றவன்மேற் படவே யெருவைப் பெருநீத்த
மெய்தான் முழுதும் பெருகுற் றிடலும் விழுமத் தொடுசெற்றஞ்
செய்தா னொருமால் வரைகொண் டவுணன் றேர்மேற் செலவுய்த்தான். ()

அதிர்பொற் கழலான் விடுதிண் கிரியா லதிசூ ரன்மான்றேர்
பிதிர்பட் டிடலும் புவிமேற் படர்தல் பிழையா மெனவுன்னா
வுதயக் கிரிபோற் கனகத் தியலு மொருபோர் மிசைநிலக்
கதிருற் றெனவே கடிதிற் பாய்ந்தான் காலன மிடறீர்ப்பான். (௫௭)

வேறு.

பாயும் வேலையப் பன்மணித் தேரினை
யேய வாற்றல்கொண் டூர்தரு மவாசிகண்
மாயும் வண்ண மறம்புரி யுக்கிரன்
சீய மாமெனச் சென்றுதைத் தானரோ. (௫௮)

உதைக்க வெய்யவ னெண்பரி பாரிடைப்
பதைத்து வீழ்தலும் பையுளின் மாழ்கியே
சிதைப்ப னிந்தச் சிறியனை யென்றுமெய்
புதைப்ப நூறு பொருசரந் தூண்டினான். (௫௯)

தூண்டு கின்ற சுடர்க்கணை யாவையு
மீண்டி யேதன் னெதிருறு மப்பெற்றியைக்
காண்ட லுங்கதை கைக்கொடு வுக்கிரன்
மீண்டி டும்படி வீசினின் றாக்கவே. (௬௦)

வேறொர் தேரிடை வெய்தென வெய்தியே
யூறு நீங்கிய வுக்கிரற் கண்ணுறீஇ
மாறி றெய்வத மாப்படை தொட்டனை
யீறு காண்ப னிறந்தனை நீயெனா. (௬௧)

முன்னு பூசை முதலிய யாவையு
முன்னி யேகின் றெருங்குடன் செய்தபின்
வன்னி மாப்படை வாங்கி வணங்கியே
மின்னு தண்சுடர் மீக்கொள வீசினன். (சுஉ)

ஆசை தோறு மழல்சிந்த மாற்றலன்
வீசு வெம்படை வீரத்தை நோக்கியே
யீசன் மைந்த னிணைமலர்த் தாள்களை
நேச மோடு நினைந்தனன் போற்றினன். (சுா)

எவவெ வர்க்கு மிறையவ னாகியோ
னவ்வ ழித்தன் னருள்செய வுக்கிரன்
செவ்வி திற்செலுந் தீச்சரம் பற்றியே
கவ்வி நுங்கினன் கண்கனல் கான்றிட. (சுச)

நுங்கு வான்றனை நோக்கி யரிமுகன்
றுங்க மாமகன் றொல்புனன் மாப்படை
பொங்கு சண்டப் பொருபடை யேவலு
மங்க வற்றையும் பற்றி யருந்தினன். (சுரு)

காற்றின் வெம்படை யேவினன் கைதவ
னூற்ற லுக்கிர னன்னது நுங்கினன்
றேற்று கின்றுழிச் செய்தவ மன்றியே
யேற்ற மான விரும்பொருள் யாவதோ. (சுசா)

மற்று மவ்வதி சூரன் மலரய
னொற்றை வெம்படை யோச்சலு முக்கிரன்
பற்றி நுங்கவப் பங்கயன் றுதைபாற்
பெற்றி ருந்த பெரும்படை யேவினன். (சுஎ)

ஒய்யெ னச்சென் றருகெழு நாரணன்
பொய்யின் மாப்படை போந்திட வாங்கதுங்
கையில் வாங்கிக் கதுமென வாய்க்கொளா
வெய்ய வுக்கிரன் மேயினனென்பவே. (சுஅ)

ஆன காலை யரிமுகன் காதலன்
யானி னிச்செயி யற்கையென் னேயிவன்
றானவ் வீசன்கொல் கண்ணன்கொ றாமரை
மேனி லாவிய வேதன்கொ லோவென்றான். (சுகூ)

மூவ ராகிய மூர்த்திக ளல்லதை
யேவ ரேமற் றிதுசெயும் பெற்றியா
ராவ னவ னவர்க்கு ளிவனெனாத்
தேவர் மாற்றலன் பின்னருஞ் செப்பினன். (எ0)

சீற்றங் கொண்ட வவுணர் திரைக்கடற்
றோற்றங் கொண்டவச் சூர்கெழு முக்கிர
னேற்றங் கண்டுழி யென்செய்து மென்றனர்
கூற்றங் கொண்ட வுயிரிற் குலைந்துளார். (எக)

அண்ணல் வாசவ னாதிய ராகிய
வெண்ணில வானவர் யாவரு மிச்செயல்
கண்ணு றுவிகல் கண்டரு ளான்முகப்
பண்ண வன்முன் பணிந்திது கூறுவார். (எஉ)

எங்க ளால்வரு மெண்ணில் பெரும்படை
செங்க ணான்படை தீயகின் மாபபடை
யங்கி யாவு மனுகவிப் பூதர்கோ
னுங்கு மாறென் னுவனுதி யென்னவே. (எங)

இந்த ராதியா கேண்மின்க ளீங்கிவ
னந்தி வான்சடை யண்ணல் வரததினுல்
கந்த னெந்தை கழலிணை போற்றியே
வந்து ளானெவ் வலியையு மாற்றுவான். (எச)

எம்மை யாளுடை யீச னருள்பெறுஞ்
செம்மை யானவன் செம்பொற சிலம்படி
மும்மை யுந்தொழு முததிபெற் றுனிவ
னெம்மி னும்பெரி யானென்று மீறிலான். (எரு)

மைக்க ருங்கடல் வண்ணன்முன் னேவிய
சக்க ரந்நுக ருந்தவத் தோனினு
மிக்க வாற்றலன் வெற்றியின் மேலையா
னுக்கி ரன்னென் றுரைத்திடிமே பேரினுன். (எசு)

பண்டு நாமருள் பல்படை யாவையு
முண்ட தோவியப் பொல்லையி லெல்லையி
லண்ட முஞ்சிதைத தாக்குவ னீங்கிவன்
கொண்ட தொல்புகழ் கூறுத தொலையுமோ. (எஎ)

என்ன நான்முக னெண்ணி யியம்பலு
மன்ன கேட்டலு மண்டர்கள் யாவருந்
தன்னு சென்னி துளக்கிப பெருந்திற
லின்னு மாக வியற்கென் றியம்பினுர். (எஅ)

வேறு.

வான மேலிது நிகழ்ந்துழி மாறிலா வவுணர்
சேனை காவலன் பூதனை நோக்கிநிற் சிதைப்ப
வூன மாகிய படையென வுன்னலை யுமைபான்
ஞான நாயகன் படைதொடு வேனென நவின்றுன். (எகூ)

மந்தி ரந்தனிற் பூசனை முதலிய வகுததுச்
சிந்தை மேலுறு வெகுளியோ டரன்படை செலுத்த
வந்த மில்லதோ ருலகெலா முறுவலா லடர்க்கு
மெந்தை கொண்டதோ ருருவெனத் தோன்றிய திமைப்பில். (அ0)

நஞ்சு மாரழ லுகமு நடுவன தருவும்
விஞ்சு பூதமுங் கணங்களும் வேறுபல் படையு
மெஞ்ச லில்லதோ ரங்கியும் போற்றவெவ் வுலகு
மஞ்சி டும்படி நடந்தது லரன்படை யதுவே. (அக)

ஈசன் மாப்படை வருதலு முக்கிர னென்னு
மாசில் வீரன்றன் னங்கையிற கதையினை யகற்றிப்
பாச நீக்குமஞ் செழுத்தினை விதிமுறை பண்ணி
நேச மோடிகை தொழுதரன் பொன்னடி நினைந்தான். (அஉ)

ஆண்டை யுக்கிர னிற்றலு மஞ்சலி புரிவான்
மாண்ட தொலபடை யிலலவன் றதிசெயும் வாயா
னீண்டி வன்றனை யடுகிலன் யானென வெண்ணி
மீண்டு சென்றது சிவனருள் படைக்கலம் விரைவில். (அந)

அண்ண லம்படை துறந்தவர் மேல்விடி னவர்பா
னண்ணு றுதுநம் பக்கல்வந் திடுமென நல்க
விண்ணு லாம்புக ழவுணர்கோன் பெறுதலின் விடையூர்
பண்ண வன்றனை யடைந்ததாங் கவனருள் படையே. (அச)

ஆன பெற்றிகண் டிங்கிவன் சிவன்கொலென் றயிர்த்துச்
சேனை காவலன் றுளங்கினன் பூதர்கள் சிறந்தார்
வானு ளோராமலா மாரிக ரோததனர் மாறு
மேனை வீராகள விழிபொழி தாரைகான றிரிந்தார். (அரு)

நீங்கு கின்றதோா தானவா குழுவினை நீவி
ரோஙகு கின்றதை விடிமினக ளென்றுதே ரிழிந்து
பாங்க ருறறத்தா தண்டுகொண் டரிமுகன் பாலன்
வீங்கு போரிடை யெபறின னுக்கிரன் வெகுண்டான். (அசு)

எற்று தண்டினை யங்கையா லுக்கிர னென்போன்
பறறி வாங்கியே யவன்றலை தரம்பதை பதைபபத்
தெறறெ னப்புடைத திடுதலு நிலனிடைச் சேர்ந்தான்
மறற வன்றன துயிர்கொடு போயினன் மறலி. (அஎ)

துஞ்சி வீழ்தி சூரனை நோக்கியே துகடீர்
மஞச போலவே வருமசு ரேந்திரன் மனமு
நஞ்ச பாமெனக் கொதித்தன னழலெழ நகையா
விஞசு பூதர்தங் குழுவினமேற சென்றனன் விரைவின் (அஅ)

கடிது சென்றசு ரேந்திர னிந்திரன் கரத்தி
னெடிய வில்லினு மாயிரத் திரட்டிமே னிமிர்ந்த
கொடிய வார்சிலை வாங்கியே குணததொலி கொளுவப்
படியுமு வானமுங் குலைந்தன வுயிரெலாம் பதைபப. (அகூ)

பூத ரங்கது நோக்கியே தண்டமும் பொருப்பும்
பாத வங்களுந் தாரகன் றந்திடு பதகன்
மீது சென்றிட விடுததலு மனையன விலக்கிச்
சோதி வெங்கணை யிறுதிநாண முகிலெனச் சொரிந்தான். (கூ0)

வடிகொள் வார்கணை விடுத்தலும் பூதர்கள் வலிதின்
விடுபி றங்கலே முதலிய விடையிடை வீட்டி
முடியுங் கைகளு மாகமு முகத்தொடு மொய்ம்பு
மடியுஞ் சோரிநீர் கான்றிட வழுந்திய வவர்பால். (கூக)

மற்றும் வெங்கணை யுலப்பில தூண்டலு மண்மே
லுற்ற கைகளுந் துணிந்திடு தோள்களு மடியு
மிற்ற கண்டமு மாகிவெம பூதர்க ளிறப்பக்
கொற்ற வீரரிற் கனகனென் பவனெதிர் கொண்டான். (௯௨)

எதிர தாய்வரு கனகன்மேற் றூரக னீந்த
வதிரும் வார்கழ லண்ணலோர் வடிக்கணை யழுத்த
வுதிர வாரியோ டன்னவன் றேர்மிசை யுநறுன்
கதிரின் மேல்வரு செய்யகோ ளாமெனக் கடிதின். (௯௩)

பாகன் றன்னுயி ருலந்திட வுதைதததுவெம் பணைக்கை
நாகந் தந்திடு மதலைதன் வரிசிலை நாணைக
காகம் போலவெள் ளெயிற்றினூற் கீறிவெங் கறைசேர்
மேகந் தாரணி மிசையிழிந் தாலென மீண்டான். (௯௪)

இழிந்து மால்வரை யொன்றுகைக் கொண்டசுரரிந் திரனும்
கழிந்த சீர்ததியான் மீமிசை யோச்சலுங் கரத்தி
னழிந்த வில்லினை நீத்துவே றொருசிலை யதனைக
குழிந்த கண்ணுடைப பூதர்கள் வெருக்கொளக் குனித்தான். (௯௫)

குனித்து நான்கிரு சுடுசரந் தொடுத்தறை கூவித்
தனித்து மேல்வருங் கனகனே வியகிரி சாய்த்துப
புனிற்றி ளம்பிறை செக்கர்வா னுழைந்தெனப புயஙகள்
பனித்தி டும்படி யழுத்தின னுயிரம பகழி. (௯௬)

பகழி யாயிரம் படுதலு மாடகன் பையு
ணிகழ நிறறலும் வேறொரு வலவனை நிறுவிப்
புகழி றூனவன் றேரொடு பூதர்மேற போத
வகழு மால்வரை யொன்றெறிந் தன்மத்த னூர்த்தான். (௯௭)

அவனெ றிந்திடும் பருப்பதம விரைவில்வந் தடர்க்கக்
கவன வெம்பரி யாயின வுலந்தன காணுப்
பவன வேகத்தின் வேறொரு தேர்மிசைப பாய்ந்தான்
புவன முண்ணிய நின்றதோர் கடவுளே போலவான். (௯௮)

முந்து வெங்கணை யுலப்பில தூண்டலு முந்நீர்
செந்து கிர்க்கொடி போர்த்தெனக் குருதிநீர் செறிய
வந்த முற்றிலன் புவிமிசை யிருந்தன னுங்கே
மந்த னென்பவன் றூரகன புதல்வனோர் வந்தான். (௯௯)

வருத லோடுமாங் கவன்மிசை யையிரு வாளி
குருதி காலுற வழங்கலு மெரியெனக கொதியாப்
பரிதி மேவரத் தருவதோர பருப்பதம் பறித்துக்
கருதி யேவின னவுணர்கோ னங்கது கண்டான். (௧00)

சென்று மார்பெதி ரேற்றலும் வந்தழித் தெறித்துக்
குன்று மீண்டுமற் றவன்புடை போயது கொடியோ
னென்று போலிய வாயிரம் பகழிக ளுய்த்தா
னின்று மந்தனங் கயர்ந்தனன் சிங்கனு நேர்ந்தான். (௧0௧)

எடுத்து மால்வரை யொன்றவ னுரத்தினே றெறியத்
தடுத்தொர் வாளியி னகற்றின னமரிடைத் தரியார்
விடுத்த தோர்கதை யெறிதலு மவனது விலக்கித்
தொடுத்து நூறுகோ லழுத்தினன் சிங்கனுந் தொலைந்தான். (௧௦௨)

ஒழிந்த சாரதத் தலைவர்க ளியாவரு முடன்றே
யழிந்து நின்றனர் தாரகன் குமரனு சுகங்கள
பொழிந்து மற்றுள பூதரை முடித்திடும் போதிற்
கழிந்த துன்பொடு மிலக்கரிற் றண்டகன் கண்டான். (௧௦௩)

தனது கார்முகம் வாங்கியே தண்டகப் பெயரோன்
முனையி ருங்கணை யாயிரங் கொடியவன் முகத்தி
னனிபு குந்திட விடுத்தலு நடலையுற் றிரங்கி
மனம்வெ குண்டுபின் றன்பெருஞ் சிலையினை வளைத்தான். (௧௦௪)

வளைத்து நாலிரண் டம்பினைத் தண்டக மறவோன்
குளத்தின் மேற்பட விடுத்தலு மெழுந்தன குருதி
யிளைத்து நின்றனன் றேர்மிசை யன்னவற் கிளையோன்
கிளத்து சோமுகன் றாரகன் மகனெதிர் கிடைத்தான். (௧௦௫)

எதிர்பு குந்தவ னகலமே லைம்பதிற் றிரட்டி
கதிர்தெ றுங்கணை யவுணர்கோ னழுத்தலுங் கவலா
வதிர்த ருந்தன தொண்சிலை வாங்கியா யிரமா
நுதிகொள் வெஞ்சரந் தூண்டினன் சோமுக னொடிப்பில். (௧௦௬)

பல்ல வங்களா யிரமுமத் தாரகன் பாலன்
சில்லி யந்தனித் தேரினை வலவனைச் சிதைப்ப
மெல்ல வேறொரு தேர்மிசைப் பாய்ந்துவே லொன்றை
யொல்லை யிங்கிவ னுயிரினை யுண்கென வுய்த்தான். (௧௦௭)

உய்த்த வேலவ னகலமேற் படுதலு முயங்கி
யெய்த்து மற்றவன் றேர்மிசை மயங்கின னிருப்ப
நித்தன் வோவுறு சோமுகற் கிளையவ னெடுமா
லொத்த வன்மையன் விசயனென் பவன்கடி துற்றான். (௧௦௮)

விசய னங்கொரு கொடுமரம் வாங்கியே வெகுண்டு
நிசித வெங்கணை யாயிர முய்த்துநே ரில்லா
வசுர ரிந்திரன் வலவனைத் தடிந்துமற் றவன்கை
யிசையும் வில்லொடு நாரியைத் துணிபட விறுத்தான். (௧௦௯)

முற்று நூலுணர் பாகுயி ருலத்தலு முனியா
விற்ற நாணொடு வார்சிலைத் துணியினையேந்திக்
கொற்ற மாரசு ரேந்திரன் மத்திகை கொண்டு
பொற்றை யன்னதன் றேர்விடு வலவனிற் பொலிந்தான். (௧௧௦)

தகுவர் கோனொரு வலவனை நிறுவியோர் தண்ட
மிகலும் வன்மையா லெடுத்தன னவன்மிசை யெறியப்
புகுது மெல்லையிற் கண்டெதிர் விசயனும் புகழோன்
மிகவு மெல்லையில் சரங்களைத் தூண்டினன் விடுத்தான். (௧௧௧)

தொட்ட தொட்டன கணையெலாந் துகள்பட்த் தொலைத்து
மட்டு லாந்தொடை விசயன்மார் பகத்திடை வந்து
பட்ட காலையி லவன்றன திரதமேற் பதைத்து
விட்ட வில்லொடு குருதியுந் தானுமாய் வீழ்ந்தான். (கக௨)

வீழ்ந்த காலையி லிலக்கரி லேனையோர் வெகுண்டு
பொழிந்த வாளியாற் றாரகன் மகனொடு பொருதே
யழிந்தி யாவரு மிரிந்தனர் போதலு மதுகண்
டுழந்த துன்பொடு வீரமொய்ம் பினன்விரைந் துற்றான். (கக௩)

வீர வாகுவே ளிணையடி போற்றியே வெகுண்டோர்
கோர வெஞ்சிலை வாங்கின னொன்னலி கொளுவி
யாரும் வானவர் வியப்புற வவுணர்க ளயரத்
தார காசுரன் மதலையை மறைத்தனன் சரத்தால். (கக௪)

மறைப்ப மெய்யெலாங் குருதிகொண் டிடலும்வல் லவுணன்
விறற்க டுஞ்சிலை யொன்றினை வளைத்தவன் மிசையே
பிறைத்த லைக்கணை யாயிர மழுத்தினன் பெரிது
முறைத்த செம்புன லிருவரு மிளங்கதி ரொத்தார். (கக௫)

தார கத்திற லான்மகன் றாண்டியேழ் சரத்தாற்
சூர ரித்திற லண்ணல்கைச் சிலைத்தனைத் துணிப்ப
வீரன் மற்றொரு கார்முகம் வாங்கியே விடங்கால்
கூர யிற்கணை யாயிரம் விடுத்தனன் குறியால். (கக௬)

ஏகும் வார்கணை தாரகன் மகன்சிலை யிறுத்துப்
பாக னவியுண் டிரதமோ டயங்களைப் படுப்ப
வாகை யின்றியே வேறொரு தேர்மிசை வறியன்
போக லோடுமற் றன்னது கண்டனர் புலவோர். (கக௭)

வெருவ ரப்பொருந் தாரகன் மதலையை வீரன்
பொருது வெறறிகொள வான்கொலா மினியெனப் புகழ்ந்தா
ரரிய வற்புத மோவவன் வென்றிட லவுணன
கரித ருஞ்சுதன் சிம்புளின் சுதனிவன் கழறின். (கக௮)

மாறொர் தேரிடைப் பாய்ந்தவ னொருதனு வளைத்து
நூறு கோல்விடுத் தவனிர தத்தினை நூறச்
சீறி வானெழீஇ வீரவா குபபெயர்த் திறலோ
னூறு மாமுக முதல்வனைப் பரவினின் றாத்தான். (கக௯)

உறைக ழித்துவா ளுருவியே யும்பரிற் படர்ந்து
சிறைக ழித்திடும் வரைபுரை யவுணர்கோன் றேர்மேற்
குறைக ழிததிடும் பணிகவர் மதியெனக் குபபுற்
றிறைக ழிக்குமுன் னவன்றனைக் கையிலொன் றெறிந்தான். (க௨௦)

எறிந்த காலையி லிற்றதோர் கைத்தல மிறலுங்
குறைந்த கையிடைச் சலசல விழிவன குருதி
செறிந்த நீலவொண் கிரிதனக் கொருபுடை சென்றே
யுறைந்த தோர்கரும் பணியழன் மணியுமிழ்ந் தொப்ப. (க௨க)

கைய றுத்தலுந் தாரகன் றன்சுதன் கனன்று
மொய்யு டைக்கதை யொன்றெடுத் தவன்மிசை மோத
வெய்யெ னத்திறன் மொய்ம்பினன் வாளெழூஉந் தொருதன்
செய்ய பொற்பதத் துதைத்தன னங்கவன் சிரத்தில. (௧௨௨)

காமர் தாளினு லுதைத்துவிண் படர்தலுங் கண்டு
தூம மாவிழி யானசு ரேந்திரன் றொடர்ந்தோர்
சேம வாளகொடு வாளெழ மேலையோன் சீறி
யேம நாந்தகத் தாலவன் றலையற வெறிந்தான். (௧௨௩)

எறிந்த சென்னியு மியாக்கையு மிம்பரின் வீழ்ந்து
மறிந்த மற்றவன் மன்னுயிர் போயது வான்மேற
செறிந்த விண்ணவ ராரதன ரின்னதோர் செய்கை
யறிந்த தானவக் கடலெலா மோடின வன்றே. (௧௨௪)

மக்க ளாயின ரிருவரு மிறந்தது மலைந்து
பக்க மேயின தானைக ளிரிந்ததும் பாராத
தொக்க பேரழ லுலகட வெழுந்ததோற் றம்போன்
மிக்க சீற்றமேற் கொண்டன னண்டங்கள வென்றான். (௧௨௫)

சீற்ற மேதகு காசிபன் மதலைபோர் செய்யு
மாற்ற லாதமை யடுவனல விரைந்தென மதித்துக்
காற்றின் முந்துசெ றேரிடைக் கடிதவந் தெய்திக
கூற்றின் வெம்பசி தணிபபதோர் சிலையினைக் குனித்தான். (௧௨௬)

வாணி போற்றிடு சயமகள் வீரமா மடந்தை
நீணி லேப்பட வேறுசோ பானத்தி னெறிம்போற்
பூண ளாவிய பொன்னவாஞ் சிலைதனிற புணாத்த
நாணி னேதையைக் காட்டின னணிவிர னகத்தால். (௧௨௭)

கரங்கொள் வில்லொலி கேட்டலும் பாரிடக் கணங்கண்
மரங்கள் சிந்தினர் சிகரிகள் சிந்தினா மலையு
முரங்கள் சிந்தினா வீரமுஞ் சிந்தின ருடலுஞ்
சிரங்க ளானவும் பனித்திட வோடினா சிதறி. (௧௨௮)

யாண்டு மாகியே யிரிந்தன ரல்லதிங் கிலத்தில்
வீண்டு ளார்சிலர் பதைத்துநின் றாசிலர் வீழ்ந்து
மாண்டு ளார்சிலா மயக்கமுற றாசிலர் மறறு
மாண்டு பன்னிரண் டொழிந்தில தவுணன்வில் லரவம். (௧௨௯)

வேத னஞ்சினன் மான்முடி துளக்கினன் விண்ணோ
நாத னஞ்சினன் மறலியு மஞ்சின னடுங்கிக்
கோதி னல்லற மஞ்சின வைவகை கொண்ட
பூத மஞ்சின வுயிர்த்தொகை யஞ்சின பொருமி. (௧௩0)

வஞ்சன் வார்சிலை நாணொலி கேட்டலு மறத்தால்
விஞ்சு பூதமீ ராயிர வெள்ளமும் வெருவி
யெஞ்சி யேயவ ணின்றிடா திரிந்துள வென்று
லஞ்சு பூதங்க ளஞ்சுவ தறபுதத் தனவோ. (௧௩௧)

சூரன் விற்பெரு முழக்கினைக் கேட்டலுந் துளங்கிப்
பாரி டத்தொகை யழிதர வன்னது பார்த்துப்
போரி யற்படைத் தலைவர்நூற் றெண்மரும் புகுந்து
மாரி யிற்பொழிந் திட்டனர் வரைகளு மரமும். (கஙஉ)

அன்ன வேலையிற் பத்துநூ றாயிர கோடி
பொன்னின் வெங்கணை யவுணர்கோன் முறைமுறை போக்கித்
தன்னு ழைப்புகும் வரையொடு தருக்களைத் தடிந்து
துன்னுபாரிடத் தலைவர்தம் யாக்கையைத் துளைத்தான். (கஙங)

முடிது ளைத்தனன் முகத்தினைத் துளைத்தனன் மொய்ம்பைத்
தொடையன் மார்பினைத் துளைத்தனன் பாணியைத் துளைத்தான்
கடிது ளைத்தனன் குறங்கினைத் துளைத்தனன் கழல்சே
ரடிது ளைத்தனன் பாரிடத் தலைவரு மயர்ந்தார். (கஙச)

துளைத்த மெய்யினை வெஞ்சரம் போதலுந் துயர்கொண்
டிளைத்து நின்றன னதிபலன் வக்கிர னென்போன்
களைத்து வீழ்ந்தனன் வச்சிர னிரங்கினன் கபாலி
யுளத்தின் வன்மைய தழிந்தன னுன்மத்த னுலைந்தான். (கஙரு)

நீடு குன்றினை யேந்தியே யச்சுத னின்று
னோடு கின்றில னெதிர்ந்திலன் மாபல னுளைந்தான்
வாடு கின்றனன் மதிசயன் மேகனு மருண்டா
னாடு றுந்துய ரறிந்தன னண்டவா பரணன். (கஙசு)

மேக மாலியுண் ணடுங்கினன் சுப்பிரன் மெலிந்தான்
காக பாதன்மெய் பதைத்தன னுதவகன் கவன்று
னாகம் வீழ்ந்திடு குருதியு ளாழ்ந்தின னசலன்
மாக வந்தனுந் திரங்கின னத்திரி மறிந்தான். (கஙஎ)

பத்தி ரன்சிறி திடைந்தன னுடைந்தனன் பதும
னெய்த்த சைந்தனன் வியாக்கிரன் றனஞ்சய னிரிந்தான்
மத்தன் வைதுவெய் துயிர்த்தனன் பினாகிமெய் மறந்தான்
சித்தி ராங்கனுங் கனகனுந் துயர்க்கட றிளைத்தார். (கஙஅ)

நெஞ்ச ழிந்தனர் மாலியு நீலனு நெடுங்கண்
பஞ்ச டைந்தனர் கும்பனு நிகும்பனும் பதைப்புற்
றஞ்சி யேங்கினர் சண்டியுந் தண்டியு மாலி
துஞ்சல் கூடினர் வாமனுஞ் சோமனென் பவனும். (கஙகூ)

வெங்க னுக்கிர னெழுவதற் குரனிலன் வெருண்டான்
சிங்க னோய்ந்தனன் சும்பசீ ரிடன்மறந் தீர்ந்தான்
சங்க பாலன்வீழ்ந் துருண்டன னந்தியுஞ் சலித்தான்
பிங்க லன்னுயிர்க் கின்றில னுரோமசன் பெயர்ந்தான். (கசO)

இனைய தன்மையா லிவர்முத லானநூற் றெண்ம
ரனிக வேந்தர்கள் போர்வலி யின்றியே யழியத்
துனைய மற்றது கண்டுநூ றாயிரத் தொகையோர்
கணையும் வார்சிலை வாங்கியே தூர்த்தனர் கணைகள். (கசக)

தூர்த்து மற்றவர் மாறுகொண் டிடுவுழிச் சூரன்
வோர்த்து வெங்கணை மாரிதூ யனையன விலக்கி
யார்த்து வெஞ்சர மாயிர கோடிதொட் டங்கண்
மூர்த்த மொன்றினி லனையவர் சிலைகளை முரித்தான். (௧௪௨)

முரித்து மற்றவர் வாசிலை யெடுப்பதன் முன்னந்
திரித்து மாயிர கோடிவெங் கணையினைச் செலுத்திப
பரித்தி றம்பல பூண்டிடுந் தேர்களைப் படுத்தி
யுரத்தி லன்னவாக் கிலக்கமா யிரங்கணை யுய்த்தான். (௧௪௩)

உய்த்த வாளிக ணைஞ்சுபோழ்ந் திடுதலு முளைந்தே
யெய்த்து வீழ்ந்தன ரிலக்கரு மனையகண் டிரங்கி
வித்த கங்கெழு வீரமாத் தாண்டனும் விடலை
கைத்த லங்கெழு சிலையொடு நோக்கினன் கடிதின். (௧௪௪)

வாங்கு வில்லின னெறிந்தநா ணொலியன்வார் கடல்க
ளேங்கு மாறபின னவுணன்மேற் கணையெனு மெழிலி
தூங்கு வித்தலுஞ் சரங்களே யன்னவை தொலைத்துத்
தீங்க டங்கணை யாயிர நுதலிடைச் செறித்தான். (௧௪௫)

செறித்த காலையில் வீரருள் வெய்யவன் செயிர்த்து
மறித்தும் வெஞ்சரந் தூண்டவே யாயிரம் வாளி
குறித்து வீசியே யவன்விடு கணையொடுங் குனிவில
லறுத்து ரம்பிளந் தம்புபெய் தூணியு மட்டான். (௧௪௬)

அட்ட காலையில் வீரமார்த் தாண்டனுள் ளழுங்கிப்
பட்டு ளானென வீழ்ந்தனன் பரிசது நோக்கி
யொட்ட லான்வலி யடக்குவன் யானென வுருத்து
விட்ட தேரொடும் வந்தன னரக்கனும் விறலோன். (௧௪௭)

வந்த வீரராக் கதனெனு நாமத்து வலியோன்
கொந்து லாந்தொடை தூங்குதன் கொடுமரங் குனியா
வைந்து நூற்றிரண் டடுசரந் துரந்திட வதுகா
லுந்தி யாத்தன னவுணர்கோ னோராயிரங் கணைகள். (௧௪௮)

முட்டு வெங்கணை வீரராக் கதனெனு மொய்ம்பன்
றொட்ட வாளியை விலக்கியங் கவன்சிலை துணிக்க
நெட்டி ருஞ்சுடர் வாளமொன் றேந்தினன் விசும்பி
லெட்டு மாதிரக் கரிகளும் வெருவவார்த் தெழுந்தான். (௧௪௯)

விண்ணெ ழுந்தவ னவுணர்கோ னின்றிடும் வியன்றேர்க்
கண்ணில் வாவியே யாங்கவன் கொண்டகார் முகத்தைத்
துண்ணெ னச்சுடர் நாந்தகத் தெறிதலுஞ் சூரன்
வண்ண வாசிலை முடிந்தில தொடிந்தது மணிவாள். (௧௫0)

நெடிய வாட்படை யிற்றிட விறலுடை நிருதன்
றுடையன் மாபகத் தெற்றுவான் முயறலுஞ் சூரன்
படையி ழந்திடும் வலியிலற் கொலவது பழியென்
றடியின் மேற்படுத் தெறிந்தன னண்டமேற் செல்ல. (௧௫௧)

அரக்கர் வீரனை யவுணர்கோ னெறிந்திட வலமந்
திரக்க மெய்தியே வீழ்ந்தனன் புவிமிசை யிதுகண்
டுரக்க டுங்கணை மாரிக ளொன்னலன் றேருங
கரக்க வீசிவந் தேற்றனன் மகேந்திரன் கடியோன். (௧௫௨)

சூர னங்கது விலக்கியே கணைமழை தூரப்ப
வீரன் மற்றது சிந்தினன் பகழிகள் வீசிச்
சாரி வட்டம தாய்வர வவுணனுந் தகவோன்
றேரை வட்டணை வந்தனன் சிலீமுகஞ் சிதறி. (௧௫௩)

திரியும் வட்டணை முறையினுற் சரமழை சிதறி
வருதி றததினு லையம தாவவர் வடிவை
யொருதி றத்தருந் தெளிகில ருணாந்திட வறமேறு
விருதி றத்தரும் வீரமா மகேந்திர ரென்றால. (௧௫௪)

ஆள ரிக்குடன் வந்தவ னத்துணை யழன்று
கோள ரிக்குடன் வந்தவன் விடுசரங் குறைத்துத்
தாளின் முப்பது மருமமீ திருபது தடம்பொற
றோளின் முப்பது கணைவிடுத் தவன்வலி தொலைத்தான். (௧௫௫)

வலிதொ லைந்தவன் வீழ்தலு மாக்களின் றொகைமேற
புவியி னெடுத்தன வவுணர்கோ னுரைப்பினை புகலு
மெலிவி லாறறலன் வீரதீ ரன்னெனும மெய்யமையான
சிலைகு னிந்திடப பகழிவா னிமிர்ந்திடச் சென்றான். (௧௫௬)

சென்ற வீரதீ ரன்விடு கணையொடு சிலையை
யொன்றொ ராயிரம வாளியால வீட்டியே யுயர்ந்த
குன்ற மன்னதோா தேரையேழ் கணையினுற் குறைப்ப
நன்று நன்றெனுத் தண்டமொன் றெடுத்துமே லடைந்தான். (௧௫௭)

நடதத லாகிய வெல்லையிற் பகழியோா நான்கு
தொடுததது மற்றவ னேந்திய தண்டினைத் துணித்துத்
தடதத மாாபினு மொய்ம்பினு மேழிரு சரங்கள
விடுத்து மண்மிசை வீட்டினன யாரையும வென்றான. (௧௫௮)

ஆன காலையில் வீரமா மகேசனு மடலோன
கூனல் விலலினு லரிதிவன றனைவலி கோடன்
மான மார்திறன் மொய்ம்பறகு மெனமனம வலியா
னூனு மாவியுங் கவாவதோா தெய்வவே லுய்த்தான. (௧௫௯)

வேல்வி டுததுழிக் கண்டவன் வெஞசிலை குனிததுக்
கோல்வி டுததலு மாயிர மன்னவை குறைததுச
சூல்வி டுததிடு மெழிலிபான் மினவருந தொடாபின்
மால்வி டுததிடா வவுணன்மார் புறறதவ வைவேல. (௧௬0)

உற்ற தோரெஃக நுண்டுகள் ளாகிவிண் ணுலவிச்
சுற்று மாதிரஞ் சென்றது சூரன்மேல் வீரன்
மற்றொர் தண்டினை விடுததிட வெடுக்குமுன் வல்லோர்
சொறற சாபததின் முந்துமேழ் கணையினைத தொடுததான். (௧௬௧)

ஏழெ னப்படு பகழியு மகேசனு மேந்தல்
பாழி மொய்ம்பினைப பாழிய தாகவே படுத்த
வீழ லுற்றதங் கவனுட லுணர்ச்சிகள் வீந்த
சூழு கின்றதோர் மன்னுயி ரடைந்தது துரியம். (கசுஉ)

மகேச னென்பவன் மயங்கலு மற்றது நோக்கிக்
ககேசன் மேல்வரு மிராகுவி னவுணனைக் கன்று
நகேசன் மங்கையோ டிகலிவேங் கடகிரி நண்ணுங்
குகேச னேவல்செய் வீரகே சரியெதிர் கொண்டான். (கசுந)

எதிர்பு குந்தவன் வணக்கியே நாணொலி யெறிந்த
துதிகொள் வார்சிலை தன்னையெழ் கணையினாற் றுணியா
வதிர்கு ரன்மணித தேரைநா றம்பினு லறுத்து
நுதிநெ டுங்கணை யழுததின னுயிர நுதலின். (கசுச)

ஆயி ரங்கணை நுதலிடை யழுத்தவம் புவியிற்
பாய்த ருங்குரு திபபெரு நதியொடு பாய்ந்து
சேயி ருங்குவ டொன்றினைச் செங்கையாற் பறித்து
மாயை தந்திடு மதலைமேல் விடுத்தனன் மன்னோ. (கசுரு)

எறித்த ருஞ்சுடர்த் தபனனுஞ் சேடனு மிரங்கப்
பறித்தெ டுத்துமேல் வீசிய பராரையங் குன்றம்
வெறித்த ருந்தொடை யவுணர்கோன் விசிகமொன் றதனு
லறுத்து மார்பினு றயிற்கணை யழுத்தின னம்மா. (கசுசா)

கரம்பு குந்திடுங் குனிசிலை யுமிழ்ந்திடுங் கணைக
ளுரம்பு குந்திட வீரகே சரிமன முளைந்து
பரம்பு குந்திடு மவுணர்கோன் றேர்மிசைப் பாயா
வரம்பு குந்தகுன் றன்னமார் பததிடை யடித்தான். (கசுஎ)

வடித்த விற்படை யவுணர்கோன் மருமத்தின் வலிதா
யடித்த காலையில் வீரகே சரிதன தஙகை
வெடித்த தாமெனக் கீண்டது விண்டது சோரி
துடித்து யிர்ப்பொடு தேரிடை மறிந்தனன் றுயரால். (கசுஅ)

வீர கோளரி பதைத்துமான் றேரிடை வீழச்
சூரன் மற்றிவற கொல்வது பழியெனச் சூழா
வோர்கை யாலவன் றனையெடுத தச்சுத னுறங்கும்
வாரி திக்கிடை யெறிந்தனன் விண்ணவா மருள. (கசுகூ)

பரந்த பாற்கட லெறிதலும் வீழ்ந்தவன் பதைப்புற்
றரந்தை யெய்தியே யெழுந்துவிண் ணெறியின்மீண் டணுகி
முரிந்த தம்மினங் கூடின னங்கதன் முன்னம்
புரந்த ரபபெயர் வாகையா னேற்றெதிர் புகுந்தான். (கஎ0)

ஏற்றெ திர்ந்திடு வீரமா புரந்தா னென்பா
னாற்றல் வெங்கணை சொரிந்துபோர் செய்வனே லவற்றை
மாற்றி வென்றிடு மென்னையு மிவனென மதிததுக்
கூற்று வன்படை தொட்டன னவுணனைக் குறுக. (கஎக)

குறுகு மப்படை வரத்தினை நோக்கியே கொடியோன்
முறுவல் செய்தன னங்கதற் கெதிருற முரணு
றுருவ தோர்படை தொட்டில னிகழ்ந்திட வுவன்மேன்
மறலி தன்படை பட்டுமாய்ந் திட்டது வரத்தால். (௧௭௨)

தண்ட கன்படை மாய்தலுஞ் சயங்கெழு மகவான்
முண்ட கன்படை யெடுத்தனன் றொடுப்பதன் முன்னங்
கண்ட கன்சிலை வாங்கினா னாயிரங் கணையை
விண்ட கன்பெரு மாபகந் திறந்திட விடுத்தான். (௧௭௩)

திறந்த ருஞ்சுடர்க் கணைபுருந் தரத்தினை நெறியாத
திறந்து போயின வீரமா புரந்தரன் செங்கை
யுறைந்த நான்முகப் படையெடுத் தேசோரி நீருமிழ்ந்து
மறிந்து மாய்ந்தனன் வந்தனன் வீரர்தம் மறலி. (௧௭௪)

தீர ராந்திற லவுணர்கள் பூதராஞ் சிதைவார்
சூர ராஞ்சிலை வல்லவர் நமரெலாந் தொலையு
நீர ராஞ்செருச் செயலிது நன்றென நிகழ்த்தி
ராந்தகன் வந்தன னந்தகன் வெருவ. (௧௭௫)

சார்ங்க மன்னதோர் வலியதாய் மாமதன் றனுவா
மீர்ங்க ரும்பென வரிபடு சிலைதுணித் தேற்றுக
கார்ங்க ரும்புய லாமென நாணொலி காட்டிக்
கூர்ங்கொ டுங்கணை சிதறினன் றாபபிசை கொண்டான். (௧௭௬)

ஆர்ப்பெ டுத்தலு மஞ்சினன் கதிரவ னங்கம்
வேர்ப்பெ டுத்தன ரமரர்கள் விஞ்சையர் விண்டார்
சீர்ப்பெ டைக்குல மலமரக் கின்னரர் சிந்திப்
பார்ப்பெ டுத்திரி கின்றன கேசரப் பறவை. (௧௭௭)

ஆன காலையில் வீரரந் தகன்விடு மம்பின்
சோனை மாரியைக் கணைகளால் விலக்கியே சூர
னூனு மாவியுங் கவருமா யிரங்கணை யுய்ப்பத்
தானு மாயிரம் பகழிதொட் டன்னதைத் தடுத்தான். (௧௭௮)

தடுத்த காலையி லவுணர்கோன் சினவிழுத் தலைசேர்
வடித்த வச்சிரச் சிலீமுக மாயிரம் வலமேல
யெடுத்து விட்டிட வீரரந் தகன்றமக் கெதிரா
விடுத்த பல்லவம் யாவையுஞ் சிந்தியே விரைந்த, (௧௭௯)

விரைந்து போய்விற லந்தகன் றேரினை வீட்டிக்
கரந்த னிற்சிலை யொடித்துவீ ரத்தினைக் கலக்கி
யுரந்த னிற்புகுந் துணாவுண்டு சோரிநீ ருகுத்துப்
புரந்த ரற்குளந் துணுக்குறப் போயது புறத்தில். (௧௮௦)

விறல்ப டைத்திடு மந்தகன் கணைபட வீழ்ந்து
மறல்ப டைத்திட வாங்கது நோக்கியே மனத்தி
னுறல்ப டைத்திடு செற்றமு மானமு முகைப்பத்
திறல்ப டைத்திடு மொய்ம்பினு னவுணன்மேற் சென்றான். (௧௮௧)

அரிக ளச்சுறும் வீரவா குப்பெய ரறிஞ
னிரத மூர்ந்தவர் தேற்றலு மாங்கவ னெழில்சே
ருருவ நோக்குறு வொற்றரு மிவனென வுன்னிப
பெரிது வெஞ்சின மெய்தியே யவுணர்கோன் பேசும். (கஎஉ)

எமது வீரமா மகேந்திரஞ் சாடியெண் ணில்லாத்
தமரை யட்டனை தானைக ளளப்பில தடிந்தாய்
குமரர் தங்களைக் கொன்றனை நின்னுயிர் கொண்டே
யமரி னற்றலை யின்றொடே முடிக்குவ னமமா (கஎந)

பற்று பட்டிமை பயிற்றியே யமைச்சரிற் பன்னி
யொற்ற னாகியே யின்னுமவந் தாயெனி னுய்தி
மற்ற தேகடன் வாரசிலை பிடித்தனை மாண்டா
யிற்றை வைகலோ நின்னுயிர்க் கிழைததநா ளென்றான். (கஎச)

தூது மாகுவ னமைச்சனு மாகுவன் றன்னா
மீது வெஞசம ராற்றுவ னின்னமும் வேலோ
னோதி மெபணி யாவையுஞ் செய்குவ னுலகி
லேதும் வல்லனயான் வேணடுமோ புரிதியா லென்றான். (கஎரு)

என்று வீரனோ திடுதலு மெரிந்தன நயனந்
தின்ற வாளெயி றிதழினை யுரோமங்க ளசிலிர்த்த
துன்று சீற்றமுள் ளெழுந்தது சூரனு மவுணன்
குன்ற மன்னவிற் குனித்தன னொலி கொணடான். (கஎசா)

சிலைப ணித்திடக் குனித்திடு காலையிற் செம்பொன்
மலைப ணித்தன பாரகம பணித்தன வான்றோ
யலைப ணித்தன வண்டமும பணித்தன வங்கட்
டலைப ணித்தன னரவினுக் கிறையவன் றானும. (கஎஎ)

வேறு.

அம்முறை வேலையி லாடலநோண மொய்ம்பிற்
செமம றனுது செழுங்கர முற்ற
மைமமலி வார்சிலை வனமையின் வாங்கிக
கொம்மென நாணொலி கொண்டன னாததான். (கஎஅ)

ஆர்த்திடு பேரொலி யாங்கவன் வாஙகுஞ்
சீர்த்தனு வாரபொடு செனறிடு காலை
மூாத்தம தொன்றினின் முசசக வைப்பும்
பேர்ததென வேபெயா குற்றன வன்றே. (கஎகூ)

அங்கது காலையி லாயிர கோடி
துங்க நெடுங்கணை தூர்த்தன னார்ப்பப்
புங்கவ னுக்கிளை யான்புய லெனன
வெங்கணை வீசி விலக்கின னின்றான். (கஅ0)

விலக்கிய காலை வெருண்டிடவ னாவி
கலக்குவ னென்று கடுஞ்சரம் வெய்யோ
னிலக்கம் விடுத்திட வேந்த றடுத்தான்
கொலைககணை யாயிர கோடி தொடுத்தே. (கஅக)

வெற்றிகொள் வான்பினும் வெங்கணை கோடி
செற்றமொ டேசெறி வித்திடு காலை
மற்றவை சிந்தினன் வாளிக ளாறு
நெற்றியில் விட்டன னீளபுய வீரன். (கசஉ)

அச்சுத னுமவு ணன்குள மெய்தி
மெய்ச்சர நூறும விளிந்துபின் விண்ட
வச்சிர மாகிய மால்வரை யொன்றி
னுச்சியி னுறறபொன் னூசிக ளென்ன. (கசங)

நூறயில் வாளி நுதறகிடை சென்று
மூறில னாகி யுறுந்திற னோக்கி
யாறுமு கேச னயிறபடை யலலா
வீறுசெ யாதிவன் யாகையை யென்றான் (கசச)

என்றிடும் வீர னிதற்பினும் வாளி
துன்றுபல கோடி சொரிந்திட வெய்யோன்
வன்றிறல வெங்கணை யாலவை மாற்றி
யொன்றுட னேழ்கணை யொண்புய முய்த்தான். (கசரு)

அம்பிரு நானகு மணைந்துட னுடன்
மொய்மபினன் மொய்மபுற மூழ்கியுள ளூற்ற
செம்புன லுண்டு செழும்பிடர் போழ்ந்தே
யும்பர் வெருக்கொள வோடிய மாதோ. (கசசா)

ஓடிய வேலை யுளைந்திடு நெஞ்ச
னுடலகொண் மொய்மபின னவ்வசு ரேசன்
பாடுறு தேர்விடு பாகர்த மெய்யிற
கோடிபல கோடி கொடுங்கணை விட்டான். (கசஎ)

அலகி னெடுங்கணை யாக மழுந்த
வலவாக ளாறற வருந்தின ராகிப
புலவொடு சோரி புறததில் விளங்க
விலவ மலர்ந்தென யாரு மிருந்தார். (கசஅ)

அங்கத நோககி யழன்றசு ரேசன்
செஙகணை யைம்பது தீயென வோச்சி
வெங்கண் விறறபுயன் மேதகு தேரைப
பொங்குளை மாவொடு பொளளென வட்டான். (கசகா)

அட்டிடு காலை யடற்புய னங்கோா
வட்டணை யார்கொள வையம தேறி
நெட்டழல் வாயு நெடுமபடை தன்னைத
கொட்டன னங்கது சூர னறிந்தான். (உ00)

வே று.

வீறுகிய வசுரர்க்கிறை மிகவுரல படைதது
மாறுகவொா படைதொட்டிலன வரிவில்லொடு திறப்ச்
சூறுவளி யழன்மாபபடை சூரன்மிசை தாககி
யூறு யின நூறுயிர முதிராயின பிதிராய். (உ0க)

காற்றின்படை கனலின்படை கண்டம்பல வாகக்
கூற்றின்படை கதிரின்படை கூடத்தொடுத் திடலுஞ்
சீற்றங்கெழு சூரன்மிசை சென்றேயவை தாமு
மேற்றந்தனை யிழந்தேகடி திறந்திட்டன வன்றே. (உ0உ)

அருணன்படை மறலிப்படை யழிவெய்தலு மம்மை
சரணந்தனி லவருசத்திக டருமைந்தரிற் றலைவன்
வருணன்படை நிருதிப்படை மகவான்படை மூன்று
முரணங்கொடு கொடியோனுர மொய்ம்பிற்புக விடுத்தான். (உ0௩)

ஏயுற்றவை யவுணர்க்கிறை யிருதோளுர மெய்தி
வீயுற்றன வதுகாலையில் வீரங்கெழு மொய்ம்பன்
மாயப்படை யவுணப்படை வல்லேசெல விடுப்பப்
போயப்படை யவன்மெய்யிடை புகுந்தேபொடி யான. (உ0௪)

விண்ணோர்படை யிவையாவையும் விளிவாதலும் வீர
னண்ணான்பெரு விறல்கண்டன னனிவிம்மித னாகி
மண்ணோடுயிர் தொகையாவையும் வகுத்தோன்படை நளினக்
கண்ணோன்படை யொடுகூட்டுபு கடிதிற்செல விடுத்தான். (உ0௫)

விடுக்குற்றிடு மயன்மால்படை விரைந்தேசினம் வீங்கி
யடுக்குற்றிடு முருமுப்புகை யழல்காலபல படைகண்
மடுக்குற்றிடு புணரித்தொகை வறுத்தெவ்வகை யுலகு
நடுக்குற்றிட வவுணற்கெதிர் நடந்திட்டன மாதோ. (உ0௬)

ஆண்டேவரு மயன்மால்படை யவுணன்றட மார்பங்
கீண்டேகுது மென்றேயவன் கிளர்தாரக லத்தின்
மூண்டேசின மொடுதாக்கிய முழுமாமணி வயிரச்
சேணோங்கிரி துளைப்பான்முயல் சிறைவண்டின மெனவே. (உ0௭)

மாயோன்படை யுலகந்தரு மறையோன்படை யவுணத்
தீயோனுரந் தனிற்பாய்ந்து திருத்தொல்வலி சிந்தி
மீயோங்கிய வசுரேசரும் விண்ணோர்களு நோக்கி
யேயோவென வசையெய்தி யிரிந்திட்டன வன்றே. (உ0௮)

மீளுற்றவை யிரியுஞ்செயல் விழிதீயுற நோக்கி
நீளுற்றிடு திறன்மொய்ம்பின னிமலன்வர முன்னிக்
கோளுற்றிடு பெருவிம்மிதங் கொண்டுற்றிட வண்ட
மாளுற்றிடு மவுணர்க்கிறை நகைசெய்திவை யறைவான். (உ0௯)

முத்தேவரின் முதலாகிய மூவாமுதல் வரத்தா
லெத்தேவர்கள் படையுய்க்கினு மெனைவெல்கில வெந்தப்
புத்தேள்படை விடினுமெதிர் பொரவேயொரு படையு
முய்த்தேதடை வினைசெய்கில னவற்றின்வலி யுணர்வேன். (உ௧0)

ஊனீத்திடு தவவிண்ணவ ருலகப்புக ழயன்மா
றனீத்துள படையென்னிடை சார்கின்றதொர் தன்மை
மாநீத்தமெ லாமுண்டிடு வடவைத்தழ லதனைத்
தேனீத்தொகை தசையிற்றெனச் சேருந்திற னன்றே. (உ௧௧)

தெரிந்திட்டனை நீயோச்சிய திறல்வெம்படை யென்பாற்
[illegible]
முரிந்திட்டன மறிந்திட்டன முடிந்திட்டன வொடிந்தே
யெரிந்திட்டன கரிந்திட்டன விடைந்திட்டன வலலால். (உகஉ)

வில்வன்மைகொள் சரவன்மையும் விண்ணோர்படைக் கலத்தின்
பல்வன்மையும் பிறவாகிய படைவன்மையு மியல்பாந்
தொல்வன்மையுங் கண்டேயுனைத் தொலைவில்படை யொன்றாற்
கொல்வன்னெனக் காலந்தெரி கூற்றாமென நின்றேன். (உகங)

என்றவ்வசு ரன்செப்பலு மிளையோனினி யொன்றா
லொன்றாகளிற் றலைவன்வலி யுணரேனென வுன்னாத்
தொன்றொன்மையின் மூன்றட்டரு டோன்படைக் கலத்தை
மன்றாருள புரிசிந்தனை வழிபாட்டொடு விடுத்தான். (உகச)

விடுங்காலையி னிறைவன்படை விடமவெங்கன லசனி
கொடுங்காலிருள் கதிர்வெய்யவன் கூற்றமபல கூளி
தொடுங்காரமுகச் சரமாரிகள் சூலமபடை சுற்ற
வடுங்காலமி தெனவேநெடி தார்த்தார்ப்பதை யனறே. (உகரு)

உறுகின்றதொர் படைநோக்கின னுரமுற்றெனக் குடைந்தே
யிறுகின்றதொர் படைமற்றல வீசன்படை யீதாற்
பெறுகின்றவப் படையாலிது பிழைசெய்குவ லென்னாச்
செறுகின்றதொ ரவுணர்க்கிறை சிவன்றோலபடை யெடுத்தான். (உகசு)

ஊறேற்றிடு தன்சிந்தையி னுறுபூசனை நிரப்பி
யாறேற்றிடு சடிலத்தவ னடன்மாப்படை தொடுப்ப
நீறேற்றிடு மொய்ம்பனவிடு நிமலப்படை யெதிர்போய்
மாறேற்றமா புரிந்திட்டது வையத்தவர் வெருவ. (உகஎ)

வேறு.

காண்டகு நுதல்விழிக் கடவுண் மாப்படை
யாண்டவை யிரண்டுமின் றூட லாற்றியே
மாண்டிடு முலகென வானம போற்றிட
மீண்டன வொல்லையில விட்டு ளோரகாபால. (உகஅ)

அன்னது நோக்கியே யசுரர் மேலையோ
னின்னவை கொல்லுனக் கியன்ற வன்மைக
ளுன்னுயி ரின்னினி யொழிப்பன் காண்கெனாத்
தன்னெடுஞ் சிலைவளைஇச் சரங்கள் சிந்தினான். (உகசூ)

துன்புறு வடிக்கணை சூரன் சிந்தலுந்
தன்பெருஞ் சிலையினைத் தானும வாங்கியே
முன்புற நெடுஞ்சர முகிலிற் றாவினான்
பொன்புனை யலங்கலம் புயத்து வள்ளலே. (உஉ0)

அத்தகு மெல்லையி லவுணர் மன்னவன்
முத்தலை நெடுங்கணை மூவைந் தேவியே
வித்தக மொய்ம்புடை வீர வாகுவின்
கைத்தல வில்லினைக் கண்ட மாக்கினான். (உஉக)

சிலையது துணிதலுஞ் சீறி வீரனோ
ரிலையுடை வேலினை யெடுத்து வீசலுந்
தொலைவறு வரம்பெறு சூரன் மாமனு
மலையிடைக் குறுகியே மற்ற திற்றதே. (உஉஉ)

இற்றுழி யவுணர்க ளிறைவன் மாலயன்
மற்றுள கடவுளர் வலியுங் கொள்வதோர்
கற்றையங் கதிர்மணிக் கதையொன் றேசினை
வெற்றிகொண் டேவிய வீர வாகுமேல். (உஉங)

திண்மைகொள் பஃறலைச் சேடன் பாங்குளா
ரெண்மரோ டொன்றியோ ரியற்கைத் தாகியே
யுண்மலி யாப்புட னொழுகிச் சென்றென
வண்மணி கறங்கிட மணித்தண் டெற்றதே. (உஉச)

வெங்கதை வருதலும் வீர வாகுவோர்
செங்கதை யெதிருறச் செலுத்தி நிற்றலு
மங்கதை நீறுசெய் தவன்றன் மார்பிடைத்
துங்கதை தன்னொடு துண்ணென் றெய்திற்றே. (உஉரு)

மேக்குயர் பெருஞ்சின வீர வாகுவின்
மாக்கிளா ரகலமேல் வயிர மாக்கதை
தாக்கலும் விண்டது தாரைச் செம்புனீர்
தேக்கிய நதிகளிற் றிரைத்துச் சென்றதே. (உஉசு)

ஆழ்ந்திடு சோரிய னவுணன் றண்டினாற்
போழ்ந்திடு மார்பினன் புகையு நெஞ்சினன்
சூழ்ந்திடும் விறலினன் றளரும் யாக்கையன்
வீழ்ந்தன னமரர்கள் வெருவி யோடவே. (உஉஎ)

ஆற்றலின் றுகியே யண்ணல் வீழ்தலு
மேற்றிகழ் வலவனும் விசாலி யென்பவன்
றேற்றுறு பான்மையைச் சிந்தித் தோர்புடை
காற்றெனத் தேர்கொடு கடிது போயினன். (உஉஅ)

போந்திடு காலையிற் புலம்பி வீழ்ந்துளான்
மாய்ந்திடு சரதமா மென்று மாற்றிலா
னாய்ந்தனன் சிலைகுனித் தம்பு மாரிதூய்க்
காய்ந்தனன் சென்றனன் கணத்தின் றானைமேல். (உஉகூ)

பொன்றிடா வரத்தினன் பூத சேனைமேற்
சென்றனன் கணைமழை சிதறிக் கோறலு
நின்றவை யிரிந்தன நெடிய தீக்கதி
ரென்றினை யடைந்திடு பனியி னீட்டம்போல். (உஙo)

தாக்கிகல் வீரருஞ் சயங்கொண் மொய்ம்பனு
நீக்கமி லிராயிர நீத்தத் தானையு
மூக்கிய வலியழிந் துடைந்த தன்மையை
நோக்கினன் பன்னிரு நோக்கங் கொண்டுளான். (உஙக)

ஆண்டது வேலையி லாறு மாமுகன்
பாண்டிலந் தேர்மிசைப் பாகை நோக்குறு
வேண்டுகு சூரன்மே லிரத மொய்யெனத்
தூண்டுதி யென்றனன் சுரர்கள் போற்றவே (உ௩உ)

வேறு.

இணையறு முருக னிவ்வா றிசைத்தலு மினைய தோரா
வுணர்வுறு பவன னென்னு மொருதனிப் பாக னாகர்
கணமணி செறிந்த பொற்பிற் காமரு கடவுட் டேரைத்
துணையறு சூரன் முன்னர்த் துண்ணெனத் தூண்டி யுய்த்தான். (உ௩௩)

ஆயது காலை தன்னி லவுணர்கோ னநந்த கோடி
ஞாயிறு திரண்டொன் றாகி ஞாலமே லிருளை யோட்டிச்
சேயுயர் விசும்பை நீங்கிச் செருநிலத் தூற்ற தென்னத்
தூயதோர் குமரன் போரிற் றோன்றிய தோற்றங் கண்டான். (உ௩௪)

முண்டக மலர்ந்த தன்ன மூவிரு முகமுங் கண்ணுங்
குண்டல நிரையுஞ் செம்பொன் மவுலியுங் கோல மார்பு
மெண்டரு கரமீ ராறு மிலங்கெழிற் படைகள் யாவுந்
தண்டையுஞ் சிலம்பு மார்க்குஞ் சரணமுந் தெரியக் கண்டான். (உ௩௫)

சூரெனு மவுணர் கோமான் றொல்லைநா ளுற்ற வாறும்
பாரிடை முடிவின் றாகிப் பல்லுக மிருந்த வாறு
மாரண மறிதற் கேற்ற வாறுமா முகத்தெம் மையன்
பேரெழி லுருவ நோக்கிப் பெருமயன் கோடற் கேயோ. (உ௩௬)

எஞ்சலி லவுணர் செம்ம லிங்ஙன மமர தாற்றித்
துஞ்சிலென் றொலைவுற் றாலென் றூயவா லறிவின் மிக்கோர்
நெஞ்சினு மளத்தற் கொண்ணு நிருமலக் குமர மூர்த்தி
செஞ்சுடர் வடிவங் கண்டு தீவினை நீங்கி யுய்ந்தான். (உ௩௭)

பூவுல கண்ட மெல்லாம் புரந்திடுஞ் சூரன் றன்னைத்
தீவினை யாள னென்றே செப்புவர் சிறப்பின் மிக்க
மூவிரு முகத்து வள்ளன் முன்னவந் தெய்தப் பெற்று
னாவிவன் றவத்திற் கன்றி யறத்திற்கு முதல்வ னன்றே. (உ௩௮)

இன்னமு முனிவர் தேவர் யாவரு மினைய னென்றே
யுன்னருந் தலைமைத் தாகு மொருதனிக் குமரன் றன்னைத்
தன்னிரு விழியாற் கண்டான் றனவர்க் கிறைவ னென்றா
லன்னவன் றவத்தின் பேற்றை யாரறிந் துரைக்கற் பாலார். (உ௩௯)

பொருசமர் வினைப்பான் போலப் பொருக்கெனப் போந்த சூர
னிருவிழி தன்னிற் காண்பா னெளிதுதன் வடிவங் காட்டி
யருளது புரிந்தா னென்னி னாதியங் குமரன் மாயத்
திருவிளை யாடல் யார்க்குந் தெரிகில போலு மன்றே. (உ௪0)

சிந்தையா லறிதற் கொண்ணாத் திருவுரு விழியாற் கண்டு
முந்துதா னின்ற சூரன் முழுதுல கடிவா னின்றோன்
மைந்தனை யிவனென் றுன்னி மனத்தினில் வெகுளி தூண்டக்
கந்தவே டன்னை நோக்கி யினையன கழற லுற்றான். (உ௪௧)

வேறு.

சேனை யாயினைச் சூழ்ந்தவர் செருவலி யழிந்து
போன போனதோர் மாதிரந் தெரிந்தில பூத
மான வீரரு மழிந்தனர் சிலைத்தொழில் வல்ல
வேனை யோர்களு மென்னொடு பொருதன ரிறந்தார். (உசஉ)

இற்ற நின்பெரும் படைக்கெலாந் தலைவனு மென்பா
லொற்று வந்துள வீரனும் பொருதுயி ரொழிந்தான்
மற்று நீயொரு பாலனே யென்னொடு மலைந்து
கொற்ற மெய்துதி நன்றுநன் றுன்னுளக் குறிப்பு. (உசங)

மேல தாகிய நின்னுடைத் தாதையும் விண்ணு
ஞால மும்புரந் துதவிய நான்முகத் திறையு
மாலும் வெஞ்சமர் புரிதிறங் கருதிலர் மற்றோர்
பாலன் வல்லைகொ லென்னொடு போர்தொழில் பயில. (உசச)

முந்தை நாள்வலி யில்லதோ ரடுக்கலு முன்யான்
றந்த செல்வத்தின் மயங்கிய தாரகா சுரனும்
புந்தி நீங்கிய வவன்படைத் தலைவரும் போல
மைந்த வென்னையு நினைந்தனை போலுநின் மனத்தில். (உசரு)

தேக்கு சீரினேன் வரத்திய லுன்னலை சிதையா
வாக்க முன்னலை பெருமிட லுன்னலை யடலின்
வீக்க முன்னலை படைத்திற முன்னலை வெம்போ
ரூக்க முன்னலை சிறுவநீ பெருஞ்சமர்க் குற்றாய். (உசசு)

கமல மேலுறை பகவனு மாயனுங் ககனத்
தமரர் செம்மலு மாதிரக் கிழவரு மழுங்கச்
சிமைய மங்கையு மிரங்குற வென்னொரு சிலையா
லிமையோ டெங்குமு னின்வலி யழிக்குவ னென்றான். (உசஎ)

வேறு.

சூரனென் றுரைபெற் றுள்ள தொல்லையோ னினைய தன்மை
வீரமுந் திறலுஞ் சீரும் வெகுளியுங் கொண்டு செப்ப
வாரரு ளுருவாய் நின்ற வாதியங் குமரன் கேளா
மூரலுஞ் சிறிது தோன்ற வித்திற மொழிய லுற்றான். (உசஅ)

வெற்றியு முடைய மாற்றன் மிகுதியு முடைய மேன்மை
பற்றியு முடைய மெண்ணில் படைகளு முடையம் வீயாப்
பெற்றியு முடையந் தானைப் பெருங்கட லுடைய மென்று
மற்றினி யகந்தை கொள்ளேன் மாற்றுதும் வல்லை மன்னோ. (உசகூ)

வரமிகு சிறப்பி னோமை மழவிளங் குமரன் கொல்லோ
பொருதுவென் றிடுவான் வல்ல னென்றுநின் புந்தி கொண்டாய்
பெரிதுநீ மடவை மாதோ பிரான்றனி நெற்றி நாட்டத்
தொருசிறு பொறியே யன்றோ வுலகெலா மடுவ தம்மா. (உரு0)

அறிவுடை முதிய ரென்று மாண்டிளை யோர்க ளென்றுஞ்
சிறியவர் பெரிய ரென்றுந் திருத்தகு வளத்த ரென்றும்
வறியவ ரென்றும் வீரா மதிக்கிலா யாவ ரேனும்
விறல்வலி படைத்து நேரின் வெஞ்சமர் விளைப்ப ரன்றே. (உருக)

நூற்றுட னெட்ட தென்ன நுவலுறு முகத்தின் காறும்
பேற்றுட னினிது வைகும் பெரியநின் வலியை யின்னே
தேற்றம துறுத கொள்கைச் சிறியநம வன்மை தன்னு
ஆற்றுடைய பாலிற் புக்க வுறையென வடுது மெனறுன். (உ௫உ)

வேறு.

என்னு முன்வெகுண் டவுணர்கோ னிருசிலந் தன்னை
முன்ன ளந்தவன் போலண்ட முகடுதோய் வுறக
கொன்னெ டுஞ்சிலை யொன்றினைக் கரத்தொடு குனிப்ப
வன்ன பான்மையைக் கண்டன னாதியங் குமரன். (உ௫௩)

மால யன்சுரர் பல்லிய மியம்பிவாழ்த் தெடுப்ப
வால மார்வனத் தெம்பிரா னுடைய வங்காண்
மேலை மூதண்ட முகடுற வெடுத்ததோர் வியன்றாட்
கோல மென்னவோ நெடுஞ்சிலை யெடுத்தனன் குமரன். (உ௫௪)

அடற்பெ ருந்திறற் சண்டிதன் பெருமித மடக்கிப்
படித்த லந்தனை யருளுவா னடல்செய் பரம
னெடுத்த சேவடி பகிரண்ட மட்டிடா வியல்பாற்
றடுத்த செங்கைபோற் குனித்தன னறுமுகன் றனுவை. (உ௫௫)

குனித்த வில்லிடைக் குமரவே ளாணொலி கொண்டா
னனைத்து மண்டங்க ளுடைந்தபே ரோதைபோ லவுணன்
சினத்து மாறுதன் குணத்திசை யெடுத்தனன் செகத்திற்
பனித்த டங்கடல் யாவுமார்த் துடைந்திடும் பரிசின். (உ௫௬)

அள்ளி லைப்படை யவுணர்கோ னசர மழைதூய்
வள்ள றன்னையுந் தேரையு மலகையு மறைப்பத
தெள்ளி திங்கிவன் வினைசையென் றெந்தைசிந் தித்துக்
கொள்ளை வெங்கணை துரந்தவை யாவையுங் குறைத்தான். (உ௫௭)

குறைத்த காலையிற் சினவியே பின்னருங் கொடுநஞ்
சுறைத்த பொற்கணை பலதொட வாளிக ளோச்சி
யறுத்து மற்றவை குமரவே ளவுணர்கோன் றன்னை
மறைத்து விண்ணெறி மாற்றினன் பகழிமா மழையால். (உ௫௮)

ஆன பான்மைசோ பகழியின் படலிகை யவுணன்
சோனை வாளியாற் றுணித்திடை வீட்டியே சுராதஞ்
சேனை காவலற் கண்டனன் வினைத்தனை சிந்தி
ஞான நாயகத் தாணுவைக் காணுநற் றவர்போல். (உ௫௯)

கண்டு தீயவன் பத்துநூ றாயிரங் கணைக
ளண்டர் நாயகன் குமரனைமேல் விடுத்தலு மவற்றை
யெண்ட ருஞ்சர மாரியால் விலக்கியீ ரேழு
புண்ட ருங்கணை யுய்த்தன னங்கவன் புயமேல். (உ௬0)

கயப்பொ ருப்பினை யுரித்தமால் வரைதரு காளை
வயப்பொ ருப்பினை யடுகணை சூரனும வலியோன்
புயப்பொ ருப்பினை யெய்தியே துளைத்தில புரைதீ
ரயப்பொ ருப்புறப் புற்றடல்பெறு வழலவன் கதிர்போல். (உ௬௧)

மாயை தன்மகன் வச்சிர யாக்கையின் வலியை
நாயகன் றிரு மதலைகண் டழலெழ நகைத்துத்
தீய வன்பினும் விடுவதோர் சரமெலாஞ் சிந்தி
யாயி ரங்கணை யாலவன் சிலையினை யறுத்தான். (உ௬உ)

சிலையி னைத்துணித் திடுதலு மவுணர்கோன் செயிர்த்து
மலையி னைத்தடிந் தவன்மிசை மலரயன் றந்த
விலைய யிற்படை யொன்றினை யெறிதலு மீரேழ்
கொலையு டைக்கணை தூண்டியே யன்னதைக் குறைத்தான். (உ௬௩)

ஏறு சேவகத் தவுணர்கோ னயிற்படை யிறலும
வேறொர் கார்முகம் வாங்கினன் சரமழை வீசி
மாறு மாறவன் றொடுந்தொடுங் கணையெலா மாற்றி
யாறு மாமுகன் புயத்திலேழ் வாளிதொட் டார்த்தான். (உ௬௪)

செங்க திர்ப்பகை தன்னைமுன் னுதவினான் செலுத்தும்
வெங்க ணைத்தொகை பரஞ்சுட ருருவமாம் விமலன்
றுங்க மிக்கதோள் புக்குநுண் டுளிய தாகிப்
பொங்க னற்றிரட் பட்டதோர் பூளைபோன் றனவால். (உ௬௫)

மொய்யி ருங்கணை பட்டுநீ றுதலு முருகன்
வெய்ய சூர்வலி நன்றுநன் றென வெகுளா
வையி ரண்டுவான் பகழியா லவன்சிலை யறுத்துச்
செய்ய தேரையு மாயிரங் கணையினாற் சிதைத்தான். (உ௬௬)

ஆழி பூண்டிடு மிரதமு மங்கையிற் சிலையும்
பூழி யாதலு மசுரனுக் கேமமாய்ப் போந்த
வேழி ரண்டுறு மாயிரந் தேரையு மிமைப்பி
னூழி நாயகன் றன்சர மழையினா லொழித்தான். (உ௬௭)

சேம மாகியே நின்றிடு தேரெலாஞ் செவ்வேள்
காமர் வாளியாற் சிதைத்தலு மன்னது கண்டான்
றாம வெங்கன றாண்டிய விழியுடைச் சூர
னேம மாகியே கொண்டிடு சூலமொன் றெறிந்தான். (உ௬௮)

நண்ண லன்விடு முத்தலைப் படையைநாற் கணையாற்
பண்ண வன்றிரு மாமக னிருதுணி படுத்துத்
துண்ணெ னக்கணை யேழினா லவன்றுடை துணியா
வண்ண லஞ்சுடர் முடியையோர் கணையினா லறுத்தான். (உ௬௯)

மணிப டுத்திய மவுலியை யறுத்தபின் வலியோன்
பணிப டுத்தமெய் யெங்கணும் பசரிகள் போக்கி
யணிப டுத்தியே புனைதரு மதாணிக ளனைத்துந்
துணிப டுத்தினன் மறைகளுந் துணிந்திடற் கரியோன். (உ௭௦)

ஆன காலையிற் சூரபன் மாவெனு மரசன்
மான வன்மையிற் குறைந்தது நோக்கிமா டுள்ள
சேனை காவலர் நாற்படை தன்னொடுஞ் சேர்ந்து
சோனை யாம்படை வழங்கியே குமரனைச் சூழ்ந்தார். (உ௭க)

ஏழு நேமியு மெறிந்துமே ருவைவளைந் தென்னக்
கேழில பலபடை வீசியே யார்த்துடன் கிளர்ந்து
சூழுமவ் வெய்யவர் தானையைக் கண்டனன் றொன்னாட்
பூழி யாகவே யவுணரூ ரட்டவன் புதல்வன். (௨௭௨)

குருதி வேற்படை கொண்டவன் றன்புடைக் குழுமிப்
பொருதி றற்பெருந் தானையைப் பொள்ளென வல்வான்
கருதி யாங்கொரு கரத்தினி லிருந்திடு கடவுட்
பரிதி யம்படை தொட்டன னிரவியிற் படர. (௨௭௩)

இலகும் வெய்யவ னடுவுநா ளாமத்தி னேகி
யலகில் பேரிரு ளட்டென வாழிபோ யவுணர்
தலையு மாகமுங் கைகளு மடிகளுந் தடந்தோள்
மலையும் வீசிய படைகளுந் துணித்தது மன்னோ. (௨௭௪)

மேனி லாவிய தேர்களைத் துணித்திடும் வெங்கண்
மான யானைக ளியாவையுந் துணித்திடும் வயமாத்
தானை யாவையுந் துணித்திடுஞ் சமரினேத் தாங்குஞ்
சேனை காவல ரியாரையுந் துணித்திடுந் திகிரி. (௨௭௫)

ஆரந்து ணித்தவா ளவுணர்க ளடுசம ருன்னி
ஓரந்து ணித்திடு மிகழ்நிறைத் துணித்திடு முரப்பிற்
சீரந்து ணித்திடும் படைதொடு முயற்சிகள் செய்யிற்
காரந்து ணித்திடு மெதிர்ந்திடிற் றுணித்திடுங் கழல்கள். (௨௭௬)

குடைது ணித்திடுங் கவரிக டுணித்திடுங் கொடியின்
றொடைது ணித்திடுந் தோள்நிறை பூண்டமான் றொகையி
னிடைது ணித்திடு மவுணர்தங் கரங்களி னிருந்த
படைது ணித்திடுந் துணித்திடும் பலவியத் தொகையும். (௨௭௭)

கொற்ற மிக்கதோர் கோல்கொடு வலியுடைக் குலாலன்
சுற்றி விட்டிடு திகிரியின் விரைவொடு சுழன்று
பற்ற லார்பெருந் தானையைப் பஃறுணி படுத்தி
யொற்றை நேமியம் பெரும்படை திரிந்ததா லுலவி. (௨௭௮)

போர ழிந்திடு மவுணர்த முடற்குறை புகையாச்
சோரி யனலியா வதனிடைத் துணிந்துவீழ் பரியுந்
தேரும் யானையு மவிகளா வெம்பிரான் றிகிரி
வீர மாமக மொன்றியற் றுவதென விளங்கும். (௨௭௯)

வெஞ்ச மாத்தொழில் புரிதரு மவுணரை வீட்டி
வஞ்ச கத்தொடு மாயமாம் பேரிருண் மாற்றி
யெஞ்ச லுற்றிடுங் குருதியம் பெருகிற மெய்திச்
செஞ்சு டாகத்தி ராயதா லறுமுகன் றிகிரி. (௨௮௦)

நச்சு தன்னிடத் தீமலையை யிருத்திய நம்ப
னிச்சு மனமலி யாழிசென் றுற்று மியல்பை
யச்சு தன்கரத் தேந்திய நேமிகண் டதனை
மெச்சு தன்மையிற் புகழ்ந்தது விம்மித மேவி. (௨௮௧)

தீர்த்த னுய்த்திடு நேமியம் பெரும்படை செருவி
லார்த்த தானைநா றாயிர வெள்ளமு மடைய
மூர்த்த மொன்றினிற் றுணித்தது மூவிரு முகத்தோன்
வார்த்தை யாலவை முழுவது மாறறிய வாபோல். (உ௮௨)

ஆட லுற்றவேற் பண்ணவ னலர்கதிர்ப் பரிதி
பாடு சுற்றிய வவுணர்கோன் றானையைப படுத்து
மோடு பெற்றதொல புகழொடு மீண்டது முளிபுற்
காடு முறறவுந் தனிபடர்ந் துண்டதோர் கனலபோல். (உ௮௩)

கைம்ம லிந்திடு குடைபல காம்பிடை துணிந்து
மெய்ம்ம லிந்திடு விழுநிணச் சேறறிடை வீழ்ந்து
பொம்மல் கொண்டெழிற் புறுவன பூவலர் தடத்திற்
செம்மல கொண்டமர் தாமரைக் காடுபோற் றிகழும். (உ௮௪)

அழுங்கல் கொண்டதோர் கரிபரி யவுணர்பே ரனிகம்
வழங்க லின்றிவீழ்ந் தவிந்திடு களேவர மலித
றழுங்கு தெண்டிரை யுலகுள சயிலங்க ளனைத்து
மொழுங்க தாகிவந் தாயிடைத தொக்கவா றொப்ப. (உ௮௫)

அகல்வி சும்புகா றோங்கிய களேவர மதன்பால்
ஞெகிழி கொண்டவாய்ப் பேயின நிணனுண்டு சிரித்து
மிகவு மார்ப்பெடுத தீண்டுவ மின்னியே யிடிததது
முகிலி ருங்கண முதுவரைச் சாரன்மொய்த ததுபோல். (உ௮௬)

மையல் யானையு மவுணர்த மியாக்கையு மற்று
மொய்யெ னக்கொடு குருதியம் பேரியா றொழுகல்
செய்ய தோரபணி கருங்கடன் மறைத்தல்சிந் திதது
வெய்ய நஞ்சுமிழ்ந் திருவிலம படாதலபோல் விளங்கும். (உ௮௭)

மாணி லைப்படு பேய்சில களேவர வரைபோய்ச்
சோணி தப்புன லாறுபாய்ந் திடவதன றுவலை
சேணி லததுளா ரரிவையா புனைகலை தெறிபப
நாண லுறறனர் பூபபெண நகைபபரென றுன்னி. (உ௮௮)

சொல்ல ருந்திற வவுணரிற சிலாதலை துணிந்து
வலலை யிற்கிளாந் தாத்தலும வசியினுற தம்மை
யல்லல் செய்திடு கோளிரண் டல்லதை யவைபோ
லெலலை யில்லவை வந்தவென் றிரியுமா விரவி. (உ௮௯)

நீடி விண்படர் கொடிசில நிமிர்கவந் ததநின்
காடு தன்னிடைப் புகுந்துதந் தலைமிசைக் காட்டி
யாடல யானையின களேவரங் குத்துவ வடுபோ
ரூடு காக்கையின் முகருமவந் தார்கொலென் றுரைப்ப. (உ௯௰)

நீட லுற்றசீ ரவுணர்கோ ளுணையா னிலமேல்
வீட லுற்றிடு வயவர்க்குத் தம்முயிர் மீட்டுங்
கூட லுற்றிடு திறனெனக கூளிகை கொட்ட
வாட லுற்றிடு முடற்குறை யநந்தகோ டிகளால். (உ௯௧)

இளைய வெல்லையி லெம்பிரா னெரிகதிர்ப் பரிதி
முளையில் வந்தடல் செய்ததை யுணர்ந்திலன் முன்சூழ்
களையி ருங்கடற் படையெலாம் பட்டவா கண்டு
மனம ருண்டொரு தமியனாய் நின்றனன் வலியோன். (௨௯௨)

நீண்ட தன்னொரு வேற்படை யுய்த்துநீக் கினனோ
பாண்ட ரங்கம தியற்றுவான் படையின்வீட் டினனோ
மாண்டு போகவென் றொருமொழி தன்னின்மாற் றினனோ
வீண்டு தானையை முடித்ததெவ் வாறிவ னென்றான். (௨௯௩)

தேரி ழந்தனன் சிலையது மிழந்தனன் றிறல்சேர்
பேரி ழந்தனன் றானைக ளிழந்தனன் பெரும்பூ
ணேரி ழந்தனன் மவுலியுங் கவிகையு மிழந்தான்
பாரி ழந்திடு மன்னர்போ னின்றனன் படிமேல். (௨௯௪)

நின்றி ருந்திற லவுணர்கோ னெடுஞ்சின நெஞ்சிற்
றுன்ற மார்பகம் வியர்த்திட முடித்தலை துளக்கி
நன்று நன்றொரு பாலகன் வலியென நகையா
வென்றி நான்முகன் படைக்கல மெடுத்துமேல் விடுத்தான். (௨௯௫)

வேறு.

சூற்புய லன்னதோர் சூரன் விடுக்கு
மாற்படு போதன் வயபபடை சென்று
பாற்படு மெல்லை பரஞ்சுடர் செங்கை
வேற்படை சென்று விழுங்கிய தன்றே. (௨௯௬)

விழுங்குதல் கண்டனன் வெய்யவ னெஞ்ச
மழுங்குதல் செய்தன னச்சுத மூர்த்தி
வழங்கிய தொல்லை வயப்படை யேந்தி
முழங்கழ லென்ன முனிந்துடன் விட்டான். (௨௯௭)

விட்டிடு மாயவன் வெம்படை யேகி
மட்டறு கண்ணார்த மாலுரு வீன்று
கிட்டிய காலை கிளர்ந்திடு மொள்வே
லட்டது தன்னையு மார்ந்தது மன்னோ. (௨௯௮)

சயம்புனை செம்ம றனுதரு ணீரா
லயன்படை தன்னுட னமபுவி கேள்வன்
வியன்படை தன்னையும் வேற்படை யுண்ணக்
கயமபடு சூரது கண்டுவிம முற்றான். (௨௯௯)

கறுத்திடு கின்றதொர் கந்தர வள்ளல்
விறற்படை தன்னை விடுத்திடின் யாரே
மறுத்திடு வாரஃ தென்று மனத்திற்
குறித்தனன் மாயை கொடுத்தருள் கோமான். (௩௦௦)

முப்புர நீறெழ மூரல் விளைத்தோன்
மெய்ப்படை தன்னை விடுப்பது தேற்றி
யப்படை யேந்தி யருச்சனை நீரா
லொப்பறு சீர்த்திய னெய்யென வுய்த்தான். (௩௦௧)

அத்தகு வெம்படை யாட லியற்றா
முத்தலை வேற்படை மூர்த்திகள் கோல
மெத்திசை தன்னினு மீண்டற வார்த்து
மெய்த்தழல் வீசி விரைந்தது மாதோ. (கூ0உ)

ஆடியல் யானைக ளாயின வெட்டும்
வீடிய வேயென வீழ்ந்தயர் வுற்ற
நீடிய நேமியி னின்றிடு செந்தீ
யோடிய சேடனு முட்கி யுலைந்தான். (கூ0௩)

படித்தல நெக்கது பல்வகை மேக
மிடித்தொகை சிந்தி யிரிந்தன பானுத்
துடித்தது திங்கள் சுழன்றது மேரு
வெடித்த திடந்தொறும் விண்டதிவ் வண்டம். (கூ0௪)

இலக்கர் நடுங்கின ரேனைய வீரர்
கலக்க மடைந்தனர் காண்டகு பூதர்
மலக்கம தெய்தினர் மற்றிது தன்னை
விலக்கரி தாலென வோடினர் விண்ணோர். (கூ0௫)

புடவி முதற்புவ னங்க ளனைத்து
மொடிவரை செல்லுமு னொய்தென மாய
முடிவ தியற்றிடு மூர்த்திக ளும்மப்
படைவர வன்னது பார்த்தனன் வள்ளல். (கூ0௬)

எந்தைதன் மாப்படை யெய்தன வையன
சிந்தை புரிந்தொரு செங்கையை நீட்டி
வந்திடு மப்படை பற்றினன் மாதோ
தந்தவன் வாங்கிய தன்மைய தென்ன. (கூ0௭)

பெற்ற முயர்த்த பெருந்தகை நாமக்
கொற்ற நெடும்படை யைக்கும ரேசன்
பற்றியொர் பாணி பரித்தன னின்றான்
மற்றது கண்டனன் மாயவண் மைந்தன். (கூ0௮)

வேறு.

விட்ட விட்டதோர் படைக்கெலாம் வேறுவே றொன்றா
தொட்டி லானத னலது மாறுறுத றுணியான்
கிட்டு மெலலையி லவையெலாங் கவர்ந்தனன் கேடி
லட்ட மூர்த்திசே யென்பது காட்டின னம்மா. (கூ0௯)

என்னொ டேபொரற் கிவனலால் வேறிலை யினையோன்
றன்னொ டேபொரற் கியானலா திலையிது சரத
மன்ன பான்மையி னெனக்குநே ராமிவ னலது
பின்னை யாருளர் தமியனாக குவமையாப் பேச. (கூ௧0)

மான வேற்படை வன்மையும் விற்றொழில் வலியு
மேனை யாயுள வன்மையுங் கண்டன னினிமேற்
பானல் வாய்மைந்தன் செய்வது பார்ப்பனென் றுன்னி
மோன மாகியே நின்றன னவுணர்கண் முதல்வன். (கூ௧௧)

பொருளி னீர்மையாற் புனைகலன் மாற்றலிற் புவிமே
லிருளி னீர்மையாய்த் தோன்றினே னற்புத மெய்தி
மருளி னீர்மையா னின்றது நோக்கியே வள்ள
லருளி னீர்மையா லினையன மாற்றங்க ளறைவான். (௩௧௨)

இந்தி ரன்றனி மதலையை யிமையவர் தம்மை
யந்த மில்பகல் சிறையிடைப் படுத்தனை யதற்கா
முந்தொ ரொற்றனை விடுத்தன மாங்கவன் மொழியுஞ்
சிந்தை கொண்டிலை விடுத்திலை யமரர்தஞ் சிறையும். (௩௧௩)

அன்ன தன்மையா லீண்டியாம் வந்தன மமரிற்
றன்னை நேரிலா திருந்திடு தாரகன் றன்னை
முன்ன மட்டிடு முறையென நின்னையு முனிவா
லின்ன வைகலே யடுதுமென் றேகின மீண்டும். (௩௧௪)

ஈண்டு நின்புடை யீண்டிய விலக்கம்வெள் ளத்து
நீண்ட தானையு நின்கிளை வன்மையு நின்னாற்
றூண்ட லுற்றிடு தெய்வதப் படைகளுந் தொலைந்து
மாண்டு போயது கண்டனை வறியனாய் நின்றாய். (௩௧௫)

நெடிய தாரகற் செற்றவே லிருந்தது நின்னை
யடுத லிங்கொரு பொருளுமன் றரிதுமற் றன்றாற்
படையி ழந்திடு நின்னுயி ருண்டிடிற் பழியாய்
முடியு மென்றுதாழ்க் கின்றனந் தருமத்தின் முறையால். (௩௧௬)

பன்னு கின்றதென் பற்பல விண்ணுளோர் பலருந்
துன்னு தொல்சிறை விடுத்தியே லுன்னுயிர் தொலையே
மன்ன தன்மையை மறுத்திடி னொலைநா மடுது
மென்னை கொல்லுன தெண்ணங்க ளுரைத்தியா லென்றான். (௩௧௭)

வேறு வேறுநின் றுலகெலா மளிப்பது வெஃகி
யாறு மாமுகம் பன்னிரு செங்கைகொண் டருள்வோ
னூறு சேரவு ணன்றனக் கினையன வுரைப்ப
மாறொர் வாசகஞ் சொற்றில னுளத்திவை மதிப்பான். (௩௧௮)

படையி ழந்தன னிவனென வுன்னியே பால
னிடைதெ ரிந்தனன் போலவே யிமையவர் யாப்பை
விடுதி யென்னவும் வல்லனு யினன்விளி வில்லே
னடலு மாற்றலுந் தெரிந்திலன் பிள்ளைமை யதனால். (௩௧௯)

மன்ற லந்தொடை யறுமுகன் வரம்பிலா வைக
னின்று பேரமர் புரியநான் வறிதுநின் றிடினுங்
கொன்றி டுந்தொழில் வல்லனே தந்தைமுன் கொடுக்க
வென்று மாய்ந்திடா வொருவரம் பெற்றிடு மென்னை. (௩௨௦)

தொழுத குந்திரு மவுலியுங் கவிகையுந் துணிய
விழிவ தாகியே தமியனின் றமரியற் றிடினு
மழிவ தில்லையா லாவது மிலைபுக ழதனாற்
பழிய தொன்றுறு மங்கது பாதுகாத் திடுவேன். (௩௨௧)

வேற்று நீர்த்தடங் கொள்வதை யன்றிவெள் ளங்க
ளூற்று நீர்ப்பெரும் புணரியைக் கொள்வதற் குறுமோ
வேற்ற தானையைப் படைகளைத் தொலைப்பதே யன்றி
மாற்று மோவென தழிவுறா வரத்தையு மைந்தன். (௩௨௨)

என்னை யங்கவன் முடித்திட லரியதா கியானு
மன்ன வன்றனை யித்துணை வெல்வது மனைத்தே
தொன்ன கர்ப்பெரு வளத்தெடும் படையொடுந் துன்னிப்
பின்னர் வந்தம ரியற்றியே பெருந்திறல் பெறுவேன். (௩௨௩)

வசைய தன்றிது செருச்செய்வோர் பற்பகன் மலைந்து
விசைய மெய்தினு மேன்மையாம் வியப்புமா மேலுந்
திசைவி ளங்குறு புகழுமாம் யானுமிச் செய்கை
யிசைவ தேகட னறிஞர்தஞ் சூழ்ச்சியு மிஃதே. (௩௨௪)

என்று பற்பல சூழ்ச்சிகண் மனத்திடை யெண்ணி
யொன்றொர் மாயையின் மந்திரந் தன்னையுள் ளுறுத்தி
நின்ற மன்னவ னெல்லையின் மறைந்தவ ணீங்கிப்
பொன்றி கழ்ந்திடு மகேந்திரக் கோயிலுட் போனான். (௩௨௫)

மறைந்து போயசூர் முயற்சியை மன்னுயிர் தோறு
முறைந்த நாயகன் கண்டன னொருதனிச் செவ்வே
லெறிந்து மற்றவ னுயிர்கொள நினைந்தில னின்னு
மறிந்து தீயவ னுய்யுமோ வெனுந்திரு வருளால். (௩௨௬)

வேறு.

ஆய வேலைதனி லாறுமு கன்பான்
மாய னும்மயனும் வானவர் கோவு
மேய தேவர்களும் யாவரு மெய்தித
தூய வந்தனை யுடன்சொல லுற்றார். (௩௨௭)

என்று காசிப னிடந்தனில் வந்தா
னன்று தான்முத லாவசு ரேசன்
வென்றி யேகொடு வியப்பொ டிருந்தா
னுன்ற னோடுபொரு தோடின னின்றே. (௩௨அ)

நீடு சூரனுட னீயமர் செய்த
லாட லேயலதை யாங்கவ னாவி
கோடல் சிந்தையிடை கொண்டனை யென்னி
னோடு மோபொருது முய்திற முண்டோ. (௩௨௯)

துங்க முற்றுடைய சூர்தனை வேலான்
மங்கு வித்திடுதி மற்றதன் முன்ன
மங்க வற்கெதி ரருஞ்சம ராற்ற
லெங்கண் வைத்துடைய வின்னரு ளன்றோ. (௩௩௦)

என்றி யம்புதலு மெங்கை வினாவி
நன்று நன்றென நகைத்தினி நம்முன்
சென்று நின்றுசமர் செய்திடின் வல்லே
வென்று சூர்முதலை வீட்டுது மென்றான். (௩௩௧)

ஆடல் சேருமவு ணன்சம ராற்று
தோடி னாருமுறு கண்ணுள ராகி
வீடி னார்களென வீழ்ந்தயர் வாருங்
கூடி னார்குமர வேள்புடை வந்தார். (௩௩௨)

சங்க மாகியுறு சாரத ரானோ
ரெங்க ணாயகனை யெய்தி யிகற்சூர்
மங்குல் வானிடை மறைந்தது தேரா
வங்கண் ஞாலமலை வுமறிட வார்த்தார். (௩௩௩)

திகழ்ந்த பூதர்கள் செருத்தனி லெம்மை
யிகழ்ந்த சூர்நகரி னிம்மதில் வீட்டி
யகழ்ந்து கோபுர மகன்கட லிட்டு
மகிழ்ந்து மீண்டிடுதும் வம்மின மென்றார். (௩௩௪)

வம்மின் வம்மினென வல்லை விளித்துத்
தம்பி னங்களொடு சாரதர் மேலோ
ரம்ம கேந்திர மழுங்குற வார்த்திட்
டிம்மெ னக்கடி தெயிற்புற முற்றார். (௩௩௫)

உற்ற காலைதனி லொண்மதில் காக்குங்
கொற்ற வீரனதி கோரன் மருங்கிற
சுற்று தானையொடு சோர்வில னின்றான்
செற்று பூதர் படை சென்றன கண்டான். (௩௩௬)

கண்டு ளானனி கனன்றிதழ் கவ்வித்
திண்டி பேரிதி மிலைப்பறை யார்ப்பத்
தண்ட லின்றியமா தானைக ளோடு
மண்டு போர்புரிய வந்தெதிர் புக்கான். (௩௩௭)

எதிர்பு குந்திடலு மேற்றெதிர் சென்று
ரதிர்பு குங்கழலி னாடுறு பூதர்
பொதிர்பு குந்தவிருள் போர்த்துழி யெண்ணில்
கதிர்பு குந்தனைய காட்சி படைத்தார். (௩௩௮)

தோம ரம்பரசு சூலமொ டெஃக
மேம ருங்கதைக ளேவினா கோரன்
மாய ருங்கவுணர் மற்றிவர் குன்றங்
காம ரம்படை கலந்து விடுத்தார். (௩௩௯)

எடுத்து வேழமிரை யெற்றினர் தேரை
யொடித்தெ றிந்தன ருகண்டுகள் பாய்மாப
பிடித்தொர் கைகொடு பிசைந்தனர் வீரா
துடித்தி டும்படி துகைத்தனர் பூதர். (௩௪௦)

எறிவர் பல்படையு மெய்குவர் வெங்கோல்
குறிய வீட்டிகொடு குற்றுவர் வாளாற்
செறுநர் தங்களுடல் சிந்துவ ரிவ்வா
றறியும வெஞ்சமரை யாற்றினர் தீயோர். (௩௪௧)

சோரி பொங்கின சொரிந்தன மூளை
சாரு றுங்குடர் சரிந்தன சேனங்
காரி பம்பின கணங்களு மேனை
வீரரா மவுண ரும்பலர் வீந்தார். (௩௪௨)

ஈடு றுஞ்சம ரிழைத்துழி யிவ்வா
றூடல் வெங்களவ ராற்ற முனிந்தே
சாடி வன்மையொடு தாக்கலு நில்லா
தோடி னாரவுண ராயுளர் முற்றும். (௩௪௩)

கோர மிக்கவதி கோர னெனும்பேர்
வீரன் மற்றதனை நோக்கி வெகுண்டே
யோரெ ழூததனை யுரத்தொடு பற்றிச்
சார தப்படைஞர் தம்மொடு நேர்ந்தான். (௩௪௪)

தலைத னிற்கர தலத்தினின் மொய்ம்பின்
மலையி னிற்பெரிய மார்பின் முகத்தி
னொலிக ழற்கண முலைந்திட மோதிக்
கொலைவி ளைத்தொருவ னேகுல வுற்றான். (௩௪௫)

ஈடி லாததொ ரெழூப்படை பற்றா
வோடி யோடியுரு முற்றென மோதி
வீடு றாதமர் விளைத்திடு பூதர்
கோடி கோடியொ ரிமைப்பிடை கொன்றான். (௩௪௬)

இந்த வாறவ னெழுக்கொடு தாக்க
முந்து தூசிமுரி வுற்றது கண்டான்
கந்த னேவல்செய் கணப்படை மன்னன்
சிந்து மேகன்முனி வோடெதிர் சென்றான். (௩௪௭)

சென்ற பூதரிறை செங்கையில் வைகுங்
குன்ற மொன்றையதி கோர னெனும்பேர்
வென்றி யான்மிசை விடுத்தலு நோக்கித்
தன்ற டக்கையெழு வாற்றகர் வித்தான். (௩௪௮)

தகரு மெல்லைதரி யார்கடல் வற்ற
முகிலி னுண்டிடு முரட்பெய ரண்ணல்
வெகுளி யோடவுணர் வேந்தனை யெய்தி
யகல மீதினி லடித்தனன் மாதோ. (௩௪௯)

அடித்த லோடுமவு ணர்க்கிறை யானோ
னிடுக்க ணெய்தியவ னுவியை யின்னே
முடிப்ப னென்றுமுச லங்கொடு மொய்ம்பிற்
புடைத்த னன்னுருமு வீழ்வது போல. (௩௫௦)

பூதன் மொய்ம்பிடை புடைத்த வெழுத்தா
னேத மாமுரிய வேற்றெதிர் தெவ்வைக்
காது கைகொடு கபோல மதன்கண்
மோத வேயவுண னுவி முடிந்தான். (௩௫௧)

வாய்தல் போற்றிய வயப்படை வீரன்
சாத வுற்றுழி தலைத்தலை யார்தரப்
பூத சேனையர்கள் பொம்மென வேகி
மூதெ யிற்றலை முதற்கடை சென்றார். (௩௫௨)

ஆண்டி யோசனையொ ராயிரம் வான்போ
யீண்டு செம்மணிக ளாலிய வுற்று
மாண்ட தீயவட வாமுக மேபோ
னீண்ட தோர்சிகரி நின்றது கண்டார். (௩௫௩)

கண்ட தோர்சிகரி கைகொடு தொட்டுத்
தெண்டி ரைக்கடலின் மேற்செல விட்டார்
மண்டு மேருவரை யின்குவ டேந்திச்
சண்ட வாயுவிடு தன்மைய தென்ன. (௩௫௪)

அன்ன வேலையி லலைந்தது ஞாலம்
பன்ன கேசனு மிகப்பட ருற்றான்
மன்னு சூருறை மகேந்திர மூதூர்
துன்னு தானவா துளங்கி யயர்ந்தார். (௩௫௫)

ஈண்டு பூதரெறி யுஞ்சிக ரந்தா
ஞண்டவ் வேலையிடை யாழ்ந்தது தொன்னா
ணீண்ட மேனியிறை நின்றனி யாமுன்
மாண்டு சாய்ந்துவிழு மந்தர மென்ன. (௩௫௬)

வேறு.

பொலங்கெழு சிகரியப் புணரி சேர்தலிற்
கலங்கின விரிதிரைக் கைம்ம றித்ததான்
மலங்கின மொடுசுறா வருந்தி மிங்கில
கிலங்களு மிரிந்ததங் கிளைக ளோடுமே. (௩௫௭)

மாதலம் புகுந்திடுஞ் சிகரி வாரியுட்
பூதரங் குய்த்திட விரைவிற் போவது
வேதமுன் கொணர்தரு மீனம் வேலையிற்
பாதலம் புகுந்திடு பான்மை போலுமே. (௩௫௮)

கழற்கறங் கியதெனுங் கண்ண ருந்திய
வழறகொழுந் தாகிய சிகரத் தூய்மணி
நிழற்பொலிந் திடுவன நீல வேலையிற்
றழற்பரந் தெழுவதோர் தன்மை போலுமே. (௩௫௯)

நாகர மணிவெயி லனுரும் வேலையிற்
சீகர மும்பர்போய்த் தெறித்து மீள்வது
சாகர முற்றது தழலென் றன்னியே
மாகர வாரிநீர் வழங்கல் போலுமால். (௩௬0)

காம்ரு சிகரியிற் கலைவிய மாமணி
யேமுற நிழற்றிய வெழிலை நோக்கியே
பூமது நுகர்தரு பொறிவண் டானவை
தாமரை வனமென வயிர்த்துச் சாருமால். (௩௬௧)

பங்கய மணிகிழற் பரப்பை நோக்கியே
யிங்கிவை தசையென வெண்ணிப் புட்குல
நுங்கிய செல்வன நொய்தி னெய்தியே
யங்கிகொ லெனச்சில வகன்று போயின. (௩௬௨)

தெழித்திடும் வேலையிற் செய்ய சோதியாற்
றழற்பொலி கோபுரந் தரிப்பின் றேகலாற்
கிழித்தன பணிபதி கிளர்ந்து மற்றவர்
விழித்தன ருருமென வெருவி யோடினர். (௩௬௩)

பூதர்கள் யாம்விடு பொலங்கொள் கோபுர
மோதநெஞ் சடைதலு மூதிரங் கான்றதாற்
சேதன மோவிது செப்பு மென்றனர்
மீதுறு கதிர்மணி வெயிலென் றுன்னலார். (௩௬௪)

பொற்பகல் சிகரியுட் பொருந்தி யாழ்பவ
ரற்பக னுகருமீ னவரை நுங்குமான்
முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது
பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே. (௩௬௫)

ஆனதொர் கோபுர மளப்பி லாதமர்
தானவர் கிளையொடும் வீழ்ந்த தன்மையான்
மீனுறு திரைக்கடல் வெள்ள மேற்செலா
மாநக ரெயிற்னை வளைந்து புக்கதே. (௩௬௬)

காதிடு மியற்கையிற் கால்கொண் டேகலிற்
பூதலம் வெருக்கொளப் பொங்கு மார்ப்பினின்
மீதமர் காரினில் விமலன் விட்டிடும
பூதரை நிகாத்ததப் புரிசை சூழ்புனல். (௩௬௭)

மைக்கடல் புவியினு மகேந்தி ரப்புர
மிக்கது போலுமென் றைய மேறகொளா
விக்கண நாடுது மென்று சென்றபோற்
புக்கது நகரிடைப புணரி நீத்தமே. (௩௬௮)

மீனெனு மைந்தரை மிசைந்த தானவர்க்
கானதொ ரிறுவரை யுணுகிற் றிவ்விடை
யானவர்ப் பொருவனென் றெண்ணிச் சேறல்போற்
போனதப் பதியினுட் புணரி நீததமே. (௩௬௯)

இவ்வகை நிகழ்ந்திட வெறிந்த கோபுரம்
மௌவமுற் றிடுதலும் பைமபொன் மாமதில்
வெவவலி யரசாகள விளிப வீறிலாக்
கௌவைகொ டிருநகர்க் காட்சித் தாயதே. (௩௭௦)

எல்லைமற் றனையதி லீண்டு சாரதர்
மலலலம புரிசையின் வடாது பாங்கரை
யொல்லைபிற றம்பதத் துதைப்பச் சாய்ந்தது
செல்லுற வீழ்ந்திடு சிகர மேயென. (௩௭௧)

மாமதில் சாய்தலும் வலிய பூதர்கள்
காமரு நகரினுட் கலந்து நண்ணினு
ரேமரு கடங்கலு ழிபங்க ளீண்டியோர்
தாமரை மலர்த்தடந் தன்னிற் புக்கபோல். (௩௭௨)

கானுறு பங்கயக் கடவுட் கிப்பகல்
போனதோர் காலையிற் புணரி யாவையு
மாகிலங் கொள்வது மானப் பூதவெஞ்
சேனைகண் மகேந்திர புரத்திற் சென்றவே. (௩௭௩)

புக்கனர் வீரர்கள் புயலின் மேனியுஞ்
செக்கரங் குஞ்சியாந் தீயுங் கைகளாய்
மிக்கெழு புணரியும் வேறு வேறுரு
மைக்கட லுலப்பில வருவ போலவே. (௩௭௪)

துதித்திட வரியவ னகரிற் றுண்ணென
வெதிர்த்திடு தானவ ரினத்தை யொல்லையிற்
சிதைத்தனர் மாளிகை சிகரம் யாவையு
முதைத்தனர் வீட்டின ருயர்ந்த பூதரே. (௩௭௫)

மதரொடு குறுகுமவ் வயவெம் பூதர்க
ளதிர்கழ லடிகளா லளபபின் மாளிகை
பிதிர்வட வுந்தலும் பிறங்கு பூழிகள்
கதிருறு கதியினுங் கடந்து போனவே. (௩௭௬)

வேறு.

அங்கவ் வெல்லையிற் சாரத வேந்தர்க ளயில்வேற்
புங்க வன்றனை நீங்கியா மவுணர்கோன் புரத்து
ளிங்கி னிப்படர் கின்றது தக்கதன் றென்னுச்
செங்க ளந்தனின் மீண்டனர் சேனையுந் தாமும். (௩௭௭)

ஆன காலையிற் பூதர்தஞ் செய்கைக ளனைத்து
ஞான நாயகன் காண்குறு நல்லருள் புரிந்து
மான வேற்படை வீரரு மமரரும் வழுத்தச்
சேனை யாவையுங் கொண்டுதன பாசறை சேர்ந்தான். (௩௭௮)

பாச றைப்புகு குமரவேள் பாரிடப் பகுதி
யாச றப்புனை யாவணச் சூழல்போ யமரா
வாச வத்தனிக் கடவுளா தியர்புடை வழுத்த
வீச னிற்சிறந் தரியணை தன்னில்வீற் றிருந்தான். (௩௭௯)

ஈண்டு தானவ ரிலக்கம்வெள் ளத்தரு மின்னே
மாண்டு போயின ரனையரை மலிகதிர்க் கரத்தாற்
றீண்டி வான்மையிற குறைந்தன னென்றுசெஞ் சுடரோ
னுண்டு மூழ்குவான் புக்கென வளக்கரை யடைந்தான். (௩௮௦)

வேறு.

புரந்தர னுதியர் புன்மை நீக்கியே
பெருந்திரு வுதவுவான் பிரான்றன் காதல
னிருந்தனன் பாசறை யீது நின்றிடத்
திருந்தலர் மாட்டுறுஞ் செய்கை செப்புவாம். (௩௮௧)

ஒருவரு முளத்தினு முணர்வு ருவகை
யருவம தாகியே யகன்று ளூர்முதல்
பொருவரு மகேந்திர புரத்துக் கோயிலுட்
டிருமகண் மணமனைச் சேறன் மேயினன். (௩௮௨)

பஞ்சடி நூபுரப் பதுமை கோயில்போ
யஞ்சிய லடுத்தமெல் லமளி மேலுறுத்
துஞ்சலன் யாரொடுஞ் சொல்லு மாடலன்
வெஞ்சமர் வினையமே யுன்னி மேவினன். (௩௮௩)

ஆனதொ ரெல்லையி லரசன் போர்செயப்
போனதும் பொருததும் புறந்தந் தோமென
மாநக ரதனிடை வறியன் வந்ததும்
பானுவின் பகைஞனுக் கொற்றர் பன்னினார். (௩௮௪)

சொன்னடை மந்திரத் தொடர்பு மாயமுந்
தன்னுறு படைகளுஞ் சாத னஞ்செய்வோ
னன்னது கேட்டலு மலக்க ணெய்தியே
மன்னுறு கடிநகா வல்லை யேகினன். (௩௮௫)

மணிநிரை யிகலியே மாறு வில்லுமி
ழிணையறு சினகர மெய்திச் சேக்கைமேற்
றணிவறு சூழ்ச்சியோ டமர்ந்த தாதைதன்
றுணையடி வணங்கியே தொழுது கூறுவான். (௩௮௬)

மாற்றலர் யாவரு மறிய வல்லைபோ
ராற்றுதி யாலென வைய முற்பகல்
சாற்றினை விடுத்தனை தமிய னேகியே
யேற்றவர் தம்முட னிகல்செய் தேனரோ. (௩௮௭)

உற்றில னறுமுக னொழிந்த வீரர்கள்
சுற்றிய படையொடு துவன்றிப் போர்செய்தார்
பற்றிய மோகமாப் படையைத் தூண்டியான்
மற்றவ ருணர்ச்சியும் வலியு மாற்றினேன். (௩௮௮)

சென்றம ரியற்றிய செறுநர் யாரையும்
வென்றன னதனை விமலன் மாமக
னென்றொரு மாப்படை யுய்ப்ப வென்படை
வன்றிற னீங்கியே வருந்தி மீண்டதே. (௩௮௯)

அன்னதொர் பான்மையா லனையர் யாவரும்
பின்னுணர் வெய்தியே பெயர்ந்து போயினா
ரென்னிது வெற்றியென் றியானு மீண்டன
னுன்னொடு முரைத்தில னுள்ளம் வெள்கினேன். (௩௯௦)

நெற்றியங் கண்ணுடை நிமல னேனையோர்
முற்றரு படைகளான் முடிவின் மாயையாற்
பற்றலா யாரையும் படுதது நாளையே
வெற்றிகொள் குவனென நென்னன் மீண்டனன். (௩௯௧)

ஞாயிறு வந்தபி னண்ண லார்மிசைப்
போயம ரியற்றிடப் புறத்திற் சென்றன
ஞயதன் முன்னரே யனிகந் தன்னுட
னேயென வேகினை யெந்தை நீயென்றார். (ந௲உ)

வரந்தனி லழிவுறா வள்ள லீண்டுறு
திருந்தல ருடனமர் செய்தற் காகவோ
ளருந்துணை வேண்டலை யதனை யுன்னிமீண்
டிருந்தன னிப்பக லிதென் செய்கையே. (ந௲ந)

ஓர்ந்திலை யித்திற முணர்வு ளாரொடுந்
தேர்ந்திலை யென்னையும் விளித்துச் செப்பிலை
சார்ந்திடு நாற்பெருந் தானை தன்னொடும்
போர்த்தனை யமர்க்கிது பெருமைப பாலதோ. (ந௲ச)

அமரருக் காக்கமு மவுணர்க் கேக்கமு
மிமையவர் முதல்வனுக் கின்பு நல்கினை
குமரனைக் கணங்களைக் குறித்து மன்னநீ
சமரினுக் கேகுத றலைமை யாகுமோ. (ந௲[illegible]

திகழ்ச்சிகொண் மேலவர் சிறியர் தம்மொடு
நிகழ்ச்சிகொள் போரிடை நோவ ரேயெனிற்
புகழ்ச்சிய தில்லையாற் பொருது வெல்லினு
மிகழ்ச்சியின் பாலதா மெவரெ வர்க்குமே. (ந௲சு)

சென்றது கிடந்திடச் சிறிய னென்னினு
மொன்றிவண் மொழிகுவ னுள்ளங் கோடியா
லின்றிர வகன்றபின் னேகி யாரையும்
வென்றிகொண் டேகுவன் விடுதி யாலெனை. (ந௲எ)

கொற்றவை சிறுவனைக் கொற்றங் கொள்வதுஞ்
சுற்றுறு படையையான் றொலைக்குந் தன்மையு
மொற்றுவர் கண்டுமு னுரைக்க வெந்தைநீ
தெற்றெனை மகிழ்ச்சியிற் சிறந்து வைகுதி. (ந௲அ)

வேறு.

கூறிய வேற்படை கொண்டுடை யோனை
வீரர்க டம்மொடு வெற்றிகொ ளேனேல்
வாரல னீண்டு மகிழ்ந்திறை நல்கும்
பேரர சாட்சி பிடிக்கில னென்றான். (ந௲௯)

என்பது கேட்டனு மெவ்வுல கிற்குந்
துன்பு புரிந்திடு சூரபன் மாவா
முன்பன் மகிழ்ந்து முகத்தெதிர் நிற்குந்
தன்புதல் வற்கிது சாற்றுத லுற்றான். (சOO)

மூவர்க டாங்களு முச்சக முள்ள
தேவரு மையிரு திக்குடை யோரு
மேவரு மேற்கினு மெம்பியை யட்ட
மேவல னாற்றலை வெல்லரி தம்மா. (சOக)

பன்னிரு செங்கை படைத்துள சேயோன்
றன்னொ டெதிர்ந்து சமர்த்தொழில் செய்வா
ரென்னல தில்லை யிவன்சிறி யோனென்
றுன்னலை வன்மையி னுெபபில னேகாண். (சoஉ)

குன்ற மெறிந்திடு கூரிய வேற்கை
வன்றிற லாளனை வன்மையில் யானே
வென்றிடு கின்றனன் மேலது நிற்க
வொன்றுள தைய வுரைப்பது கேண்மோ. (சoங)

ஒற்றென வந்துநம் மூரலை வித்துப்
பற்றலர் நீடு படைக்கிறை யாருங்
கொற்றவ னைத்தனி கூவி மலைந்து
செற்றனை யேகுதி சேனையொ டென்றான். (சoச)

தந்தை புகன்றிடு தன்மையை யோரா
வெந்தை பிராற்குள மித்திற மாமேன்
முந்திறை தன்னின் முடிப்பனி தென்ன
மைந்தனை நோக்கி மகிழ்ந்தனன் மன்னன். (சoரு)

அடுசமர் செய்வகை யாங்கவ னேக
விடையது நல்கி வியத்தகு மன்ன
னிடையுறு சூழ்ச்சிக ளியாவு மிகந்து
மிடைதகு தொல்வள மேவி யிருந்தான். (சoசு)

தாதைத னேவ றலைக்கொடு சென்றே
யாதவன் மாற்றல னாகிய மைந்த
னேதமி றன்குல மேகலு மங்கட்
டூதுவர் பற்பலர் துண்ணென வந்தார். (சoஎ)

துங்கம துற்றுள சூர்தரு மைந்தன்
செங்கம லம்புரை சீறடி தன்னைத்
தங்கண் முடிக்கொடு தாழ்ந்தன ரின்றே
யிங்கிவை கேட்க வெனமொழி குற்றார். (சoஅ)

வேறு.

மன்னவ னின்றுபோய் மலைந்து மீண்டபி
னென்னலன் மாட்டுறு முலப்பில் பூதர்க
ளிந்நகர் வடாதுசா ரெய்திக் காவலோன்
றன்னுயி கொண்டனர் தானை சிந்தினார். (சoகூ)

தகுவர்த மாப்படை தலைய ழிந்தபி
னகவிரு விசும்பளந் தாண்டு நின்றிடு
சிகரியைக் கீண்டுதஞ் செங்கை யாலெடா
வெகுளியொ டளக்கரின் மீது வீசினார். (சகo)

நீடிய சிகரிபோய் நேமி புக்கபின்
மாடுறு வடபுல மதிலை முற்றவுஞ்
சாடினர் மீண்டனர் தலைவ விந்நகர்
கோடில தாங்கடற் குட்டம் போன்றதே. (சகக)

என்றலும் வினவியே யேந்த றன்புடை
சென்றிடும் வயவரிற் சிலரை நோக்கியே
வன்றிற லுடையநம் மரபிற் றச்சனை
யொன்றொரு கணத்தின்முன் னுய்த்தி ரென்னவே. (௪௧௨)

ஆயவர் விரைந்துபோ யவுணத் தச்சனை
மேயின ரிறைமகன் விளித்து ளானெனக்
கூயினர் வருகெனக் கொடுவந் துய்த்தனர்
மாயிருங் கதிரைமுன் வெருண்ட மைந்தன்முன். (௪௧௩)

தன்னடி வணங்கியே தச்ச னிற்றலு
மன்னவர் மன்னவன் மதலை வல்லைநீ
யிந்நகர் வடமதில் சிகரி யேனவுந்
தொன்னெறி யமைக்கெனச் சொற்றுத் தூண்டினான். (௪௧௪)

எல்லைமற் றன்னதி னெல்லை தன்பகை
கல்லுயர் மொய்ம்பன்மா காய னென்பதோர்
வல்லவு னன்றனை வருதி யென்றுகூ
யொல்லையி னினையதொன் றுரைத்தன் மேயினான். (௪௧௫)

சேயுயர் வடமதிற் சிகரி தன்னிடைப்
போயினை யங்நெறி புரத்தி யாலென
வாயிரப் பத்தெனு மனிக வெள்ளமோ
டேயினன் றானுறு மிருக்கை யெய்தினான். (௪௧௬)

அத்துணை யேகியே யவுணர் கம்மிய
னுத்தர னெடுமதி லோங்கு கோபுரஞ்
சித்திர வுறுப்பொடு சித்தத் துன்னியே
வித்தக வன்மையால் விதித்துப் போகவே. (௪௧௭)

அடுகரி புரவிதே ரவுணர் தானையாங்
கடலுடன் சென்றுமா காய னென்பவன்
வடமதிற் சிகரியின் வாய்தல் போற்றியே
சுடர்கெழு தீபிகை சுற்ற வைகினான். (௪௧௮)

ஆயது நிகழ்வுழி யாழி வெற்பின்வாய்
ஞாயிறு நணுகலு மிருளின் யாமினி
போயது மெய்ப்புலன் புந்தி சேர்வுழி
மாயைய தகன்றிடும் வண்ண மென்னவே. (௪௧௯)

கங்குலென் றுரைபெறு கடவுட் கற்புடை
நங்கையை மேவுவா னயபபு மேறகொளா
வங்கவ ளோதொடாந் தணுகு வானெனச்
செங்கதி ரண்ணல்கீழ்த் திசையி லெய்தினான். (௪௨௦)

திருவிருத்தம் - ௮௭௭.

வசனம்.

சூரபன்மன் சூரியோதயத்துக்குமுன்னேயெழுந்து காலைக்கடன்கழித்து, சிங்காதநத்தில்வீற்றிருந்து, தூதரையழைத்து, இவ்வுலகத்திலுள்ள நமது சேனைகள் முழுதையும் உடனே கொண்டுவாருங்கள் நாம் முருகனோடு போர்புரியச்செல்லுவோம் என்றலும், அவர்கள் அப்படியே சேனைகளையெல்லாம் ஒருங்கேகொண்டுவந் தெதிரேவிடக்கண்டு, இப்பொழுதே பகைவரைவென்றவன்போல மனமகிழ்ந்தான். பிறகு போர்க்கோலங்கொண்டு, அதிசூரன், அசுரேந்திரன் என்னும் இருவரையும் படைத்தலைவராக நியமித்து, மேருமலைபோன்ற பெருந்தேரேறி, நால்வகைப்படையுஞ்சூழ்ந்துவர,ஆகாயமார்க்கமாய்ச்செல்லுவது கண்ட இந்திரன்,சண்முகப்பெருமான் சந்நிதியையடைந்து வணங்கிச் சூரபன்மன் போர்க்கோலங்கொண்டுவருகிறான் அவனைக்கொன்று எங்களைக் காத்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, பெருமானும் அப்படியேயாகுகவென்று வாயுதேவனாகிய பாகனையழைத்துத் தேரகொண்டுவரப் பணித்து அத்தேரின்மீதேறியருளி, தேவர்கள் பூமழைபொழியவும், போர்க்குரிய வாத்தியவிசேடங்கள் முழங்கவும், வீரவாகுதேவர்முதலியோர் சூழ்ந்துவரவும் விரைந்துசென்று போர்க்களமடைந்தார். அடைதலும், பூதப்படைகளும் அவுணப்படைகளும் கைகலந்து போர்செய்யத்தொடங்கிப் பலவகையாகிய ஆயுதங்களைப்பிரயோகித்து ஆரவாரித்தன. அப்பொழுது இறந்தவர்களுடைய கவந்தங்களெழுந்து குதிப்பதைநோக்குமிடத்து அது சண்முகப்பெருமானதுபோரில் நாம் இறந்ததனால் எமக்கினிப் பிறவித்துன்பமில்லையென்று மகிழ்ந்து ஆநந்தகூத்தாடுவதுபோலிருந்தது. அவுணர்கள் பெரும்பாலும் மாண்டதுகண்ட அதிவீரன் என்பவன் மிகவும் கோபங்கொண்டு பூதப்படைகளைக் கொன்றகுவிக்கையில், பூதப்படைத்தலைவரிலொருவனாகிய உக்கிரன் என்பவன், ஒரு தண்டாயுதத்தை அதிசூரன்மேலெறிய, அவனும் நூறாயிரம் பாணங்களை உக்கிரன்மேற்செலுத்தினான்; அவன் பெரிய மலையொன்றைப் பிடுங்கியெறிந்து அதிசூரனேறியிருந்த தேரைப் பொடியாக்கினான்; குதிரைகளையும் அழித்தான். அதிசூரன் அநேகபாணங்களையேவ, உக்கிரன் கதையொன்றினால் அவையாவும் பொடிபடுத்தினான். அதிசூரன் அக்கினிக்கணையொன்றையேவ, அதை உக்கிரன் விழுங்கிவிட்டான். பின்பு வருணாஸ்திரம்முதலியவற்றைவிட, அவற்றையும்பற்றி விழுங்கிவிட்டான். அதற்குமேல அதிசூரனும் அவுணப்படைகளும் இனியாம் என்செய்வதென்று மனங்கலங்கினார்கள். தேவர்கள் பிரமனைநோக்கி, இவ்வுக்கிரனுக்கு அளவிறந்த இந்தப்பேராற்றல எப்படியுண்டாயிற்றென்று கேட்க, பிரமன் அவர்களைநோக்கி, இவன் நீலகண்டனாகிய நின்மலனைநோக்கித் தவம்புரிந்து அவனருளால் இப்பெருவலிபடைத்திருக்கிறான். இவன் புகழ் எம்மால் எடுத்துச்சொல்ல முடியாதென்றான். தேவர்கள் தலையசைத்து அப்படியாவென்று மகிழ்ந்துவியந்தார்கள்.

இவ்வாறு ஆகாயத்தில் நடக்கையில, அதிசூரன் சிவாஸ்திரத்தையேவ, அதை உக்கிரன்கண்டு, தன்கையிலிருந்த தண்டினைநீக்கித் திருவைந்தெழுத்தைத் தியானிற்றலும் அந்தச்சிவாஸ்திரம் மீண்டுபோயிற்று. அதைக்கண்டு தேவர்கள் மலர்மழைசொரிந்தார்கள். பிறகு உக்கிரன் தன்கைத்தண்டினால் அதிசூரனைத்தாக்குதலும் அவன் பதைபதைத்து விழுந்து இறந்தான். இச்செய்தியையறிந்த அசுரேந்திரன் பூதப்படைகளைச் சிந்நபிந்நஞ்செய்தான். அதுகண்டு வீரருள்காகன் என்பவன் எதிர்ந்து, ஒருமலையைப்பறித்தெறிந்து அசுரேந்திரன் கைவில்லையொடித்தான். பிறகு அக்காகன் அவனால் துன்பமடைந்துநிற்க மத்தன் என்பவனும்

சிங்கன் என்பவனும் வந்தெதிர்ந்து தோல்வியடைந்தார்கள். அதன்பிறகு இலக்கத்தவரில் தண்டகன்முதலியோர் எதிர்ந்து போர்செய்து தளர்ந்தார்கள். அதன்பிற்கு அசுரேந்திரன் வீரவாகுதேவரையெதிர்ந்து போர்செய்யக்கண்ட தேவர்கள், அசுரேந்திரன் யானைமகன், வீரவாகு சிம்புளின்மகன், இவருள் யார்வெல்வாரோவென்று பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது வீரவாகுதேவர் கைமிஞ்சி அவனைக்கொன்றார். இதையறிந்த சூரபன்மன் கோபங்கொண்டெழுதலும் வீரதிவாகரன்முதலிய பூதவீரர்கள் எதிர்ந்தார்கள். அவர்களையெல்லாம் அநேகமாயிரம் பாணங்களால் வருத்தினான். இதைக்கண்ட வீரவாகுதேவர் வந்தெதிர்த்தார். அவரைச் சூரபன்மன்நோக்கி, நீ தூதனென்றுசொன்னால் உன்னைக்கொல்லமாட்டேன், நீயொரு வீரன்போல வந்தெதிர்த்தாயாதலால் இதோவுன்னைக்கொல்லுகிறேன்பார் என்று பலபாணங்களை யேவிவருத்த, அவரும் பலபாணங்களையேவ இவ்வாறு நெடுநேரம் போர்நிகழ்ந்ததில் வீரவாகுதேவர் இளைத்ததைக்கண்ட சண்முகப்பெருமான், அவனோடு எதிர்ந்து போர்செய்யத்தொடங்க, அவன் இவரை நோக்கி, முருகா! நீயொரு சிறுபாலகன், நீயோ என்னோடு போர்செய்யவல்லை, உனக்குதவியாய்வந்த வீரவாகுவும் பூதப்படைகளும் பட்டபாடறியாயோ, வென்றிவ்வாறுசொன்ன சூரன்வார்த்தையைக்கேட்ட சண்முகன், சூரனைநோக்கி, நீயேன்துள்ளுகிறாய், என்னைப் பாலகனென்றிகழ்கின்றாய், இந்தப்பாலகனெதிரே உன் வல்லமையைக்காட்டக்கடவை யென்றுசொல்லி அவனுடைய தேர் வில்முதலிய எல்லாவற்றையும் அழித்தலும், அவன் பிரமாஸ்திரம் நாராயணாஸ்திரம் முதலியவற்றையேவ, அவற்றையெல்லாம் தன்கை வேற்படையே விழுங்கச்செய்தனர். பிறகு சூரன் சிவாஸ்திரத்தைத்தொடுக்க, அதைத் தமது திருக்கரத்தினாலே பிடித்துக்கொண்டு அவனுக்குத் தகுந்த புத்திமதிகளைச்சொல்லவும், அவன்கேளாமல் மாயமாய் மறைந்துபோனான். போர்க்களத்தில் அயர்ந்துவீழ்ந்திருந்த சேனைவீரரும் சண்முகப்பெருமானை வந்தடைந்தார்கள். சிலபூதவீரர் அதிகோரனுடன் போர்செய்து அவனையும் அவன்சேனைகளையும்கொன்று மீண்டுவந்து சண்முகப்பெருமானை யடைந்தார்கள். சண்முகப்பெருமானும் பூதவீரரும், இலக்கத்தொன்பதின்மரும், தமமைச்சூழ்ந்துவரப் பாசறையிற்பிரவேசித்துத தமது சிங்காதநத்தில் வீற்றிருந்தார். சூரியனும் அஸ்தமித்தான். பூதர்களால் வடக்குவாயில அழிக்கப்பட்டதென்று தூதர்சொல்லக்கேட்ட பானுகோபன் மயனையழைத்து அவனால் அந்தவாயிலைப் புதுக்குவித்து மாகாகாயன் என்பவனை அந்த வாயிற்காவலனாக நியமித்துத் தானும் தன்மாளிகையில் இனிதுவீற்றிருந்தான்.

இரண்டாநாட்சூரபன்மன்யுத்தப்படலம் முற்றிற்று.

---

# மூன்றுநாட்பானுகோபன்யுத்தப்படலம்.

இரவிவந் தற்றுழி யெழுந்து சூர்மகன்
மரபுளி நாடகடன் வழாம லாற்றியே
செருவினி லுடைந்திடு சிறுமை சிந்தியாப்
பொருவரு மாயையைப் போற்றன் மேயினான். (க)

போற்றினன் முன்னுறு பொழுதின் மாயவள்
கோற்றொழில் கன்றிய குமரன் முன்னரே
தோற்றின ளிற்றலுந் தொழுத கையினன்
பேற்றினை முன்னியே யினைய பேசுவான். (உ)

தாதைத னவ்வைகேள் சண்மு கத்தவன்
றாதுவ னோடுபோர்த் தொழிலை யாற்றினே
னேதமின் மானமு மிழந்து சாலவு
நோதக வுழந்தன னூன்மை நீங்கினேன். (ங)

துன்னல ரோடுபோர் தொடங்கி யீற்றினிற்
பின்னிடு வார்பெறும் பிழையும் பெற்றன
னென்னினி வரும்பழி யிதற்கு மேலென்று
னன்னது மாயைகேட் டறைதன் மேயினள். (ச)

மறைநெறி விலக்கினை வானு ளோர்தமைச்
சிறையிடை வைத்தனை தேவர் கோமகன்
முறையினை யழித்தனை முனிவர் செய்தவங்
குறையுறு வித்தனை கொடுமை பேணினாய். (ரு)

ஒவருந் தன்மையா லுயிர்கள் போற்றிடு
மூவரும் பகையெனின் முனிவர் தம்மொடு
தேவரும் பகையெனிற் சேணி லுற்றுளோ
ரேவரும் பகையெனி னெங்ஙன் வாழ்தியால். (சு)

பிழைத்திடு கொடுநெறி பெரிதுஞ் செய்தலாற்
பழித்திறம் பூண்டனை பகைவ ரிங்கக
ரழித்தம ரியற்றிட வவர்க்குத் தோற்றனை
யிழைத்திடும் விதியினை யாவர் நீங்கினார். (எ)

நூற்றிவண் பற்பல நுவலி னுவதென்
மாற்றருந் திறனுடை மன்னன் மைந்தநீ
சாற்றுதி வேண்டுவ தருவ னென்றனு
மாற்றவு மகிழ்சிறந் தனையன் கூறுவான். (அ)

நின்றம ரியற்றியே னென்ன லென்றனை
வென்றன னேகிய வீர வாகுவை
யின்றனி கதமொடு மீறு செய்திட
வொன்றொரு படையினை யுதவு வாயென்றான். (கூ)

அடல்வலி பிழைத்திடு மவுணன் சொற்றன
கெடலரு மாயவள் கேட்டுத் தன்னொரு
படையினை விதித்தவன் பாணி நல்கியே
கடிதினி லொருமொழி கழறன் மேயினள். (கo)

மற்றிது விடுத்தியான் மறையிற் கந்தவே
ளொற்றனைப் பிறர்தமை யுணர்வை வீட்டியே
சுற்றிடும் வாயுவின் றொழிலுஞ் செய்யுமா
லிறைவயிற் சயமுன தேகு வாயென்றாள். (கக)

உரைத்திவை மாயவ ளும்பர் போந்துழி
வரத்தினிற் கொண்டிடு மாய மாப்படை
பரித்தவ னொருகலிற் பழியை நீங்கியே
பெருத்திடும் பெருமிதப் பெற்றி கூடினன். (கஉ)

கூர்ப்புறு பல்லவங் கொண்ட தூணியைச்
சீரப்புறத் திறுக்கிமெய் செறித்துச் சாலிகை
கார்பபெருங் கொடுமரங் கரங்கொண் டின்னதோர்
போர்பபெருங் கருவிகள் புனைந்து தோன்றினான். (கஅ)

காற்படை யழற்படை காலன் றொல்படை
பாற்படு மதிபபடை பரிதி யோன்படை
மாற்படை யரன்படை மலர யன்படை
மேற்படு சூர்மக னெடுத்தன் மேயினான். (கசு)

மேனவப் படைமதில் விரவு சாலையுள்
வானவப படைகொடு வாய்தல் போந்தன
ஞானவப் படைதரு மாடல் வில்லினான்
றானவப படைஞர்க டொழுது தாழ்ந்திட. (கடு)

சயந்தனைப் பொருதிகந் தார்பெய் தோளினான்
சயந்தனைப் பொருதநாட் சமரிற் கொண்டதோர்
சயந்தனத் தேறினன் றருவர் யாவருஞ்
சயந்தனைப் பெறுகென வாசி சாறறவே. (கசா)

ஒப்பறு செறுநர்மே லுருகதுப் போர்செயத்
துபபுறு சூரமகன் றொடாகின் றனெனச்
செப்புறு மொறறர்க டெரிந்து போமென
வெபபுறத் தானையு மெழுந்து போந்தவே. (கள)

பரிபதி னாயிர வெள்ளம் பாய்மத
கரிபதி னாயிர வெள்ளங் காமர்தே
ரொருபதி னாயிர வெள்ள மொப்பிலா
விருபதி னாயிர வெள்ள மேனையோர். (கஅ)

நாற்படை யிவ்வகை நடந்து கோமகன்
பாற்பட விரவின பரவு பூழிகண்
மாறபடு புணரிநீர் வறபபச் சூழ்ந்ததான்
மேறபடு முகிலின மிசைய வந்தென. (கசு)

திண்டிற லணிகமீச் சென்ற பூழிகண்
மண்டல முழுவதும் வரைகள யாவையு
மண்டமும் விழுங்கியே யவைக ளற்றிட
வுண்டலி னடைத்தன வுவரி முற்றுமே. (உ0)

முரசொடு துடிகுட முழவஞ் சல்லரி
கரடிகை தண்ணுமை யுடுக்கை காகள
மிரலைக ளாதியா மியங்க ளார்த்தன
திருநக ரழியுமென் றாறறுஞ் செய்கைபோல். (உக)

உழையுடைக் கற்பின ருரையிற் சென்றிடா
தழையுடைப் பிடிக்குரீ தணிக்கும் வேட்கையாற்
புழையுடைத் தனிக்கரம போக்கிப் பொங்குருன்
மழையுடைத் திடுவன மதங்கொள் யானையே. (உஉ)

கார்மிசைப் பாய்வன கதிர வன்றனித்
தேர்மிசைப் பாய்வன சிலையிற் பாய்வன
பார்மிசைப் பாய்வன பாரி டத்தவர்
போர்மிசைப் பாய்வன புரவி வெள்ளமே. (உங)

அருளில ராகிய வவுணர் மாண்டுழித்
தெருளுறு மவ்வவர் தெரிவை மாதர்கண்
மருளொடு துன்புறும் வண்ணங் காட்டல்போ
லுருளுவ விரங்குவ வுலப்பி றேர்களே. (உச)

கரிந்திடு மேனியுங் கணிப்பி றூனவர்
தெரிந்திடு மாலைசூழ் செய்ய பங்கியும்
விரிந்திடு நஞ்சுபல் லுருவ மேவுறீஇ
யெரிந்திடு மங்கிகான் றென்னத் தோன்றுமே. (உரு)

வேறு.

பொங்கு வெங்கதிர் போன்றொளிர் பூணினர்
திங்கள் வாளெயிற் றூர்முடி செய்யவர்
தங்க வற்புதர் பொன்புகர் தூங்குவே
லங்கை யாள ரசனியி னூர்த்துளார். (உசா)

நீள மர்க்கு நெருநலிற் போந்துபின்
மீளு தற்குடைந் தார்தமை வீட்டுதும்
வாளி னுக்கிரை யாவென்று வாய்மையாற்
சூளி சைத்துத் தொடர்ந்தனர் வீரரே. (உஎ)

ஓடு தேரி னுவாக்களின் மானவர்
நீடு கையி னிவந்துறு கேதன
மாடி விண்ணை யளாவுவ தாருவைக்
கூட வேகொல் கொடியெனுந் தன்மையால். (உஅ)

கோலி னேங்கு கொடியுங் கவிகையுந்
தோலு மீண்டலிற் சூழிரு ளாயின
மாலை சூழ்குஞ்சி மானவர் வன்கையில்
வேலும வாளும் பிறவும்வில் வீசுமே. (உகூ)

இன்ன தன்மை யியன்றிடத் தானைக
ளுன்னு பாங்கரிற் சூழ்ந்து படர்ந்திட
மன்னன் மாமகன் மாநகர் நீங்கியே
பொன்ன வாம்புரி சைபபுறம் போயினான். (௩0)

போய காலைப் புறந்தனில் வந்திடும்
வேயி னோர்களின் வெம்பரி மாமுக
மாயி ரங்கொ ளவுணனை நோக்கியே
தீய சூர்மக னின்னன செபபுவான். (௩க)

ஈசன் விட்ட குமர னிருந்திடும்
பாச றைக்களந் தன்னிற் படர்ந்துநீ
மாசி லாவிறல் வாருவைக் கண்ணுறீஇப்
பேச லாற்றுதி யின்னன பெற்றியே. (௩உ)

மன்ன னாணையின் மண்டம ராற்றியே
தன்னை யின்று கடிந்திசை பெற்றிட
வுன்னி வந்தன னெல்லையி னேகுதி
முன்னை வைகலிற் போரென்று முன்னலாய். (௩௩)

என்ற மாற்ற மெனத்துரை யாகவே
வென்றி யோடு புகன்றனை மீள்கென
நின்ற தூதனை நீசன் விடுத்தலு
நன்றி தென்று நடந்துமுன் போயினான். (௩௪)

ஏம கூட மெனப்பெய ராகிய
காமர் பாசறைக் கண்ணகன் வைப்புறீஇ
நாம வேற்படை நம்பிக் கிளவலாந்
தாம மார்பனைக் கண்டிவை சாற்றுவான். (௩௫)

எல்லை தன்னை யிருஞ்சிறை வீட்டிய
மல்ல லங்கழன் மன்னவன் மாமக
னெல்லை யிப்பக லுன்னுயிர் மாற்றுவான்
செல்லு கின்றனன் செப்பிய சூளினான். (௩௬)

ஏவி னானெனை யித்திறங் கூறியே
கூவி நின்னைக் கொடுவரு வாயென
மேவ லாள விரைந்தமர்க் கேகுதி
நாவ லோயென வேநவின் றானரோ. (௩௭)

தூத னிவ்வகை சொற்றெதிர் நிற்றலு
மூத குந்திறன் மொய்ம்ப னகைத்திபா
னாத வன்பகை யாருயி ருண்டிடப்
போது கின்றனன் போய்ப்புகல் வாயென்றான். (௩௮)

ஒற்ற னித்திற மோர்ந்துடன் மீடலுஞ்
செற்ற மிக்க திறல்கெழு மொய்ம்பினான்
சுற்ற மோடு தலைவர்கள் சூழ்ந்திடக்
கொற்ற வேற்கைக் குமரன்மு னண்ணினான். (௩௯)

எங்கு மாகி யிருந்திடு நாயகன்
பங்க யப்பொற் பதத்தினைத் தாழ்ந்தெழீஇச்
செங்கை கூப்பிமுன் னிற்றலுஞ் செவ்வியோ
னங்க னுற்ற தறிந்திவை கூறுவான். (௪0)

றென்ன லோடு திருதன் றனிமக
னுன்னை முன்னி யுரனொடு போந்துளான்
றன்னு தானைத் துணைவர்க டம்மொடு
முன்னை வைகலி னேகுதி மொய்ம்பினோய். (௪௧)

போயெ திர்ந்து பொருதி படைகளா
யேய வற்றிற் கெதிரெதிர் தூண்டுதி
மாயை வஞ்சன் புரிந்திடின் வந்துநந்
தூய வேற்படை துண்ணென நீக்குமால். (௪௨)

போதி யென்று புகன்றிட வப்பணி
மீது கொண்டு விடைகொண்டு புங்கவன்
பாதம் வந்தனை செய்து படர்ந்தனன்
ஓாது போயம ராற்றிய தொன்மையோன். (௪௩)

துணையு ளார்களுஞ் சுற்றமுள் ளார்களுங்
கணவர் தங்களிற காவலா யாவரு
மணிகொ டேர்புக வாடலந் தோளினு
னிணையி லாத்தன் னிரதத்தி லேறினான். (௪௪)

ஏறு மெல்லையி லிச்செய னோக்கியே
யூறில் பூதரொ ராயிர வெள்ளமு
மாறி லாத வரையு மரங்களும்
பாறு லாவு படையுங்கொண் டெய்தினர். (௪௫)

சார தங்கெழு தானைக ளீண்டியே
காரி னங்களிற் கல்லென வார்பபுற
வீர மொய்ம்பின் விடலையைச் சூழ்ந்தன
ராரும் விண்ணவ ராசி புகன்றிட. (௪௬)

மேன காலை விசயங்கொண் மொய்ம்பினன்
றானை யானவுந் தம்பியர் யாவரு
மேனை யோர்களு மீண்டச்சென் றெய்தினன்
பானு கோபன் படரும பறந்தலை. (௪௭)

வேறு.

தேர்த்திடும் பரிசிடுஞ் செறியும் வெள்ளமுங்
கார்த்திடு தானவக் கடலு கோபுரீஇ
யார்த்தன ரிகலின ராற்றல் கூறியே
போரதொழின் முறையினைப புரிதன் மேயினர். (௪௮)

கோடுகண் முழங்கின குறுங்க ளுருளி
பீடுற விரட்டின பேரி யார்த்தன
மூடின வலகைகண் மொய்த்த புள்ளின
மாடின னடுவனு மமரர் நோக்கவே. (௪௯)

இலையயி ேறாமர மெழுத்தண் டொண்மழு
வலமொடு வச்சிர மாழி மாபபடை
தொலைவறு முததலைச் சூல மாதிய
சிலைபொதி கணையுட னவுணர் சிந்தினர். (௫0)

முத்தலைக் கழுவொடு முசலம் வெங்கதை
கைததலத் திருந்திடு கணிச்சி நேமிகண்
மைத்தலைப் பருப்பத மரங்க ளாதிய
வத்தலைப் பூதரு மார்த்து வீசினர். (௫௧)

பணிச்சுடர் வாளினும் பாணி சென்னிதோ
டணித்தனர் குற்றினர் சுரிகை யாதியாற்
குணிப்பறு மெழுக்கதை கொண்டு தாக்கினர்
கணப்படை யொடுபொரு மவுணர் காளையர். (௫௨)

பிடித்தன ரவுணரைப் பிறங்கு கைகளா
லடித்தனர் கிழித்தன ரணிய கந்தர
மொடித்தனர் மிதித்தன ருருட்டு கின்றனர்
புடைத்தன ரெழுக்களாற் பூத வீரரே. (௫௩)

வாசியும் வயவரு மாயச் சாரத
ராசறு கரங்களா லள்ளி யள்ளியே
காய்சின விபங்களிற் கணிப்பி றேர்களில்
வீசினின் றெற்றின ரவையும் வீழவே. (௫௪)

ஓதவெங் கடல்களு மூழி வன்னியு
மேதகு வலிகொடு வெகுளி வீங்கியே
யாதியின் மாறுகொண் டமர்செய் தாலென
பூதரு மவுணரும் பொருதிட் டாரரோ. (௫௫)

குழுகிய லவுணருங் கொடிய பூதருங்
கழுகெனு முறைபெறு களத்திற் போர்செய
வொழுகிய சோரியா றானை வேட்டலாய்
முழுகிய கரண்டம்விண் மொய்த்த புள்ளெலாம். (௫௬)

துணிந்தன கைத்தலந் துணிந்த தோட்டுணை
துணிந்தன சென்னிக டுணிந்த வாலுரந்
துணிந்தன கழலடி துணிந்த மெய்யெலாந்
துணிந்தன வலிசில பூதர் துஞ்சினர். (௫௭)

முடித்தொகை யற்றனர் மொய்ம்பு மற்றன
ரடித்துணை யற்றன ரங்கை யற்றனர்
வடித்திடு கற்பொடு வலியு மற்றனர்
துடித்தன ரவுணரு மநேகர் துஞ்சினர் (௫௮)

வசையுறு மவுணரின் மன்னர் யாவரு
மிசைபெறு பூதரி னிறைவ ருங்கெழீஇத்
திசையொடு திசையெதிர் செய்கை போலவே
யசைவில ராகிநின் றமர தாற்றினர். (௫௯)

மால்கிளர் தீயவர் மலைகொள் சென்னியைக்
கால்கொடு தள்ளினர் கனைவ ரந்தனைப
பால்கிளர் பிலத்தினுட் படுத்துச் சென்றனர்
தோல்களை யுரித்தனர் சூல பாணிபோல். (௬௦)

அரித்திற லடக்கின ரவுண வீரர்தம்
வரத்தினை யொழித்தனர் மாய நூறியே
புரத்தினை யழித்தனர் போரின் மாதொடு
நிருத்தம தியற்றினர் நிமலன் போலவே. (௬௧)

கங்குலின் மேனிய ராழிக் கையினர்
தங்கமொ டவுணரைத் தொலைத்துத் தண்ணெனச்
சங்கம திசைத்தனர் தண்டந் தாங்குவார்
செங்கண்மால் பொருவினர் சிலவெம் பூதரே. (௬௨)

அயர்ப்புறு மால்கரி யரற்ற வேசுலாய்க்
குயிற்றிய மணிநெடுங் கோடு வாங்குவா
ருயற்படு கற்பமங் கொன்றி லேனத்தி
னெயிற்றினைப் பறித்திடுங் குமர னன்னவே. (௬௩)

கொலைபயில் கரிமுகங் கொண்டு பூதர்தம்
மலையிடை மறைந்தனர் மறித்துந் தோன்றியே
யலமரு சமர்புரிந் தவுண வீரரிற்
சிலர்சிலர் தாரகன் செயற்கை மேயினார். (௬௪)

மாலொடு பொருதனர் மலர யன்றனைச்
சாலவும் வருத்தினர் சலதி வேலையின்
பாலர்க ளவுணரிற் பலாச லந்தரன்
போலுடல் கிழிந்தனர் பூதர் நேமியால். (௬௫)

போன்றவர் பிறரிலாப் பூத நாயகர்
மூன்றிலைப் படைகளின் மூழ்கித் தீமைபோய்
வான்றிகழ் கதியும்வா னுணர்வு மெய்தியே
தோன்றின ரந்தகா சுரனைப் போற்சிலர். (௬௬)

வேறு.

இலக்க வீரரு மெண்மரு மத்துணை
விலக்கில் வில்லுமிழ் வெங்கணை மாரிதூ
யொலிக்கொள் சூறையி னெல்லையிற சுற்றியே
கலக்கி னார்க ளவுணக் கடலினை. (௬௭)

வேறு.

மிடைந்தகண வீரர்களு மேலவரு மாக
வடைந்தம ரியற்றியவு ணப்படைகண் மாயத்
தடிந்தன ரொழிந்தன தடம்புனல் குடங்க
ருடைந்தவழி சிந்தியென வோடியன வன்றே. (௬௮)

ஓடியது கண்டன னுயிர்த்துநகை செய்தான்
காடுகிளர் வன்னியென வேகனலு கின்று
னாடல்செய முன்னியொ டடற்சிலை யெடுத்தான்
றேடுசெறி வாகைபுனை சூரனருண் மைந்தன். (௬௯)

வாகுபெறு தேர்வலவ னைக்கடிது நோக்கி
யேகவிடு கென்றிரவி தன்பகை யியம்பப்
பாகனினி தென்றுபரி பூண்டவிர தத்தை
வேகமொடு பூதர்படை மீதுசெல விட்டான். (௭௦)

பாரிடர்கள் சேனையிடை பானுவை முனிந்தோன்
சேருதலு மாங்கது தெரிந்துதிறல் வாகு
சாருறு பெருந்துணைவர் தம்மொடு விரைந்தே
நேரெதிர் புகுந்தொரு நெடுஞ்சிலை யெடுத்தான். (௭௧)

எடுத்திடும்வில் வீரனை யெதிர்ந்தவுணன் மைந்தன்
வடித்திடு தடக்கைதனில் வார்சிலை வளைத்துத்
தடித்தன குணத்தொலி தனைப்புரிய வண்டம்
வெடித்தன முடித்தலை துளக்கினர்கள் விண்ணோர். (௭௨)

எண்ணில்பல கோடியுரு மேறுருவ மொன்றாய்
வண்ணமிகு மின்னிடை மறைந்தொலிசெய் தென்ன
விண்ணுற நிவந்தவியன் மொய்ம்புடைய வீர
னண்ணலர் துணுக்கமுற நாணிசை யெடுத்தான். (௭௩)

நாணொலி செவித்துணையி னஞ்சமென வெய்தத்
தூணிகளும் வாகுடைய சூர்மதலை சீறி
வாணிலவு கான்றபிறை வாளியுல வாமற்
சேணுகில னுந்திசைக ளுஞ்செறிய விட்டான். (௭௪)

மாமுருக வேளிளவன் மற்றது தெரிந்தே
காமர்பிறை போன்றுகதி ரென்வெயில் கான்று
தீமுகம தாமளவில செய்யசர மாரி
தூமுகிலு நாணமுற வேநெடிது தூர்த்தான். (௭௫)

ஐயன்விடு வெஞ்சரமு மாதவனு மஞ்சும்
வெய்யன்விடு வெஞ்சரமு மேவியெதி ரவ்வி
மொய்யுடைய ராவின முனிந்திகலி வெம்போர்
செய்வதென மாறுகொடு சிந்துவன நம்மில். (௭௬)

வேறு.

கரிந்திடு மாமுகில் கடந்தன வானவர்
புரிந்திடு சேணெறி புகுந்தன மாலய
னிருந்திடு மூரையு மிகந்தன போயின
திரிந்தன சாரிகை சிறந்தவர் தேர்களே. (௭௭)

தெண்டிரை நேமிகள் சென்றன சூழ்வன
வெண்டிசை மாநக ரெங்கணு மேகுவ
மண்டல மால்வரை மண்டி யுலாவுவ
வண்டமு லாவுவ வங்கவர் தேர்களே. (௭௮)

மங்குலின் மேலதோ மண்டல மார்வதோ
செங்கண னூரதோ தெண்டிரை சேர்வதோ
விங்குள ரேறுதே ரெங்குள வோவெனச்
சங்கையி னுடினர் தங்களில் வானுளோர். (௭௯)

மன்னிய மாமுகில் வண்ணம தாயின
ரன்னதொல் வீரர்க ளண்மிய தேரவை
மின்னுவின் மேவுவ வெம்மையில் வீசிய
துன்னிய வாளிக டொன்மழை போல்வவே. (௮0)

ஆங்கவர் தேர்களி லாண்டுறு பாகர்க
ளேங்கலில் வாசிக ணேண்டிய மேலவா
தீங்கதிர் வாளிகள சேண்புடை சூழ்வுற
வேங்கின ரோடின ரீண்டிய வானுளோர். (௮௧)

வேறு.

பூச லிவ்வகை புரிந்திடு கின்றுழிப் புரைதீர்
வாச வன்மகன் றனைச்சிறை செய்திடும் வலியோ
னூசு கங்களி லாசுக மாயிரந் தூண்டி
யீசன் பாலகன் சேனைநா யகனிறத் தெய்தான். (௮௨)

ஆக மீதிலோ ராயிரம் பகழிபுக் கழுந்த
மேவக வீரனு மிளவலு முனிவுகொண் டேவி
வாகை வெங்கணை பத்தநூ றவுணர்கோன் மதலை
பாகு மாக்களு மிரதமு மொருங்குறப் படுத்தான். (அங)

படுக்க வெய்யவன் வேறொரு வையமேற் பாய்ந்து
தடக்கை வில்லினை வளைக்குமு னுயிரஞ் சரத்தைத்
தொடுக்க மற்றவ னுரந்தனைப போழ்தலுந் துளங்கி
யிடுக்க ணெய்தின னார்த்தனர் பூதர்க ளெவரும். (அச)

பூத ரார்த்திடு துழனியைக் கேட்டலும் பொருமிக்
காதில் வெவ்விட முய்த்திடு திறனெனக் கனன்றே
யேத மில்லதோர் பண்ணவப் படைகளா லிமைப்பிற்
றாத னாற்றலைத் தொலைக்குவன் யானெனத் துணிந்தான். (அரு)

இணையில் சூர்மகன் வாருணப் படைக்கல மெடுத்துப்
பணிவு கொண்டகார் முகந்தனிற் பூட்டிநீ படர்ந்து
கணித மில்லதோர் நீத்தமாய்ச் சாரதர் கணத்தைத்
துணைவர் தங்களைத் தூதனை முடிக்கெனத் தொடுத்தான். (அசு)

தொடைப்பெ ரும்படை கடைமுறை யுலகெலாந் தொலைக்கு
மடற்பெ ருங்கட லேழினும் பரந்துபோ யான்று
தடப்பெ ரும்புன னீத்தமாய் விசும்பினைத் தடவி
யிடிப்பெ ருங்குரல் காட்டியே யேகிய திமைப்பில். (அஎ)

கண்ட வானவர் துளங்கினர் பூதருங் கலக்கங்
கொண்டு நின்றன ருணர்ந்திலா துணைவருங் குலைந்தா
ரண்டர் நாயகற் கிளையவ னோக்கியே யகில
முண்டி லாவரு மங்கிமாப் பெரும்படை யுய்த்தான். (அஅ)

புகையெ ழுந்தன வெம்மையு மெழுந்தன புலிங்கத்
தொகையெ ழுந்தன னெகிழிக ளெழுந்தன சுடரின்
வகையெ ழுந்தன பேரொலி யெழுந்தன வன்னிச்
சிகையெ ழுந்தன செறிந்தன வானமுந் திசையும். (அகூ)

முடிக்க லுற்றதீப் பெரும்படை செறியமூ தண்டம்
வெடிக்க லுற்றன வற்றின கங்கைமீன் றொகுதி
துடிக்க லுற்றன சுருங்கின வளக்கர்தொல் கிரிகள்
பொடிக்க லுற்றன தளர்ந்துமெய் பிளந்தன புவியும். (கூ0)

தீர்த்த னேவலோன் விடுபடை யின்னணஞ் சென்று
மூர்த்த மொன்றினில் வாருணப் படையினை முருக்கி
நீர்த்தி ரைப்பெரு நீத்தமு முண்டுமே னிமிர்ந்து
போர்த்த தாமெனச் சுற்றிய தவுணர்கோன் புறத்தில். (கூக)

சுற்று கின்றவப் படையினைக் கண்டுசூர் புதல்வன்
செற்ற மேற்கொண்டு மாருதப் பெரும்படை செலுத்த
மற்ற தூழிவெங் காலுருக் கொண்டுமன் னுயிர்கண்
முற்று மண்டமுந் துளங்குறச் சென்றது முழங்கி. (கூஉ)

மாரு தப்படை சென்றுதீப் படையினை மாற்றிச்
சார தப்படை மேலட வருதலுந் தடந்தோள்
வீரன் மற்றது கண்டுவெம் பணிப்படை விடுத்தான்
சூரி யத்தனிக் கடவுளுந் தன்னுளந் துடங்க. (௯௩)

ஆயி ரம்பதி னாயிர மிலக்கமோ டநந்தர்
தீய பஃறலைப் பன்னகத் தொகுதியாய்ச் செறிந்து
காய மெங்கணு நிமிர்ந்துசெந் தீவிடங் கான்று
பாயி ருஞ்சுடர்க் கதிரையு மறைத்தது படத்தால். (௯௪)

வெங்க ணுகங்க ளுமிழ்கின்ற வங்கியும் விடமு
மங்குல் வானமுந் திசைகளு மாநில வரைபபு
மெங்கு மீண்டிய விரவினிற் புவியுளோர யாண்டும்
பொங்கு தீச்சுட ரளப்பில மாட்டுதல் போல. (௯௫)

உலவை மாப்படை யுண்டிடு மங்கியை யொருங்கே
வலவை நீர்மையாற் றம்முழை வருமபடி வாங்கி
யலகில் வெம்பணி விடுத்தென வன்னவை யுமிழ்தீக்
குலவு கின்றன புகையெனக் கொடுவிடங் குழும. (௯௬)

இனைய கொள்கையாற் பன்னகப் பெரும்படை யேகி
முனமெ திர்ந்திடு மாருதப படையினை முனிந்து
துனைய வுண்டுதன் மீமிசைச் சேறலுந் தொன்னாட்
கனலி யைத்தளை பூட்டிய கண்டகன் கண்டான். (௯௭)

இன்ன தேயிதற் கெதிரென வவுணர்கோ னெண்ணிப்
பொன்னி ருஞ்சிறைக் கலுழன்மாப் படையினைப் போக்க
வன்ன தேகலும் வெருவியே யாற்றலின ருகிப
பன்ன கபபடை யிரிந்தது கதிர்கண்ட பனிபோல. (௯௮)

ஆல வெம்பணிப் படைமுரிந் திடுதலு மார்த்துக்
கால வேகத்தி னுவணமாப பெரும்படை கலுழன்
கோல மெண்ணில புரிந்துநோ வந்திடக் குரிசின்
மேலை நந்தியந் தேவன்மாப் படையினை விடுத்தான். (௯௯)

சீற்ற மாயண்ண னந்திதன் பெரும்படை செலுதத
நூற்று நூறுநூ றாயிர கோடிநோன் கழறகா
லேற்றின் மேனிகொண் டுலகெலா மொருங்குற வீண்டி
யாற்ற வெய்துயிர்த் தார்த்தது மூதண்ட மதிர. (௧௦௦)

களனெ னப்படு நூபுரங் கழலிடை கலிப்ப
வளவில் கிங்கிணித் தாமங்கள் கந்தரத தார்ப்ப
வொளிறு பேரிமி லண்டகோ ளகையினை யுரிஞ்ச
வளரு நீண்மருப் புலகெலா மலைப்பவந் ததுவே. (௧௦௧)

•திரையெ றிந்திடு மளக்கருண் டலவுசேண் முகிலி
னிரையெ றிந்தது பரிதிதே ரெறிந்தது நெடிதாந்
தரையெ றிந்தது திசைக்கரி யெறிந்தது தடம்பொன்
வரையெ றிந்தது குலகிரி யெறிந்தது மருப்பால். (௧௦௨)

நந்தி மாப்படை யின்னண மேகியே நணுகி
வந்த காருடப் படையினை விழுங்கிமாற் றலனைச்
சிந்து கின்றன னென்றுசென் றிடுதலுந் தெரியா
வந்த கன்படை தொடுத்தன னவுணர்கட் கரசன். (௧௦௩)

தொடுத்த வந்தகப் படையையும் விடைப்படை துரந்து
படுத்து வீட்டிய தன்னதன் மிடலினைப் பாராக்
கடித்து மெல்லித ழதுக்கியே யயன்படைக் கலத்தை
யெடுத்து வீசின னிந்திரன் பதிகனற் றீந்தோன். (௧௦௪)

வீசு நான்முகப் படைக்கலம் வெருண்டுவிண் ணெறிபோ
யீச னூர்திதன் யடையினைக் காண்டலு மிடைந்து
நீச னேவலின் வந்தன னின்வர வுணரேன்
காய்சி னங்கொளே லெனத்தொழு துடைந்தது கடிதின். (௧௦௫)

நான்மு கத்தினில் விதித்திடு நூற்றித ழிருக்கை
நான்மு கப்படை பழுதுபட் டோடலு நகைத்து
வான்மு கத்தவ ரார்த்தன ரதுகண்டு மைந்தன்
சூன்மு கக்கொண்டன் மேனியன் பெரும்படை தொடுத்தான்.(௧௦௬)

ஊழி நாளினு முடிகிலா தவன்மக னுந்து
மாழி யான்படை யாண்டுமா வுருவமா யமைந்து
கேழி லைம்படை தாங்கிமா யத்தொடுங் கெழுமி
வாழி நந்திதன் படையெதிர் மலைந்தது மன்னோ. (௧௦௭)

நார ணன்படை நந்திதன் படைக்கெதிர் நணுகிப்
போரி யற்றியே நிற்புழி யதுகண்டு புனிதன்
சூர ரிதத்திறல் சிந்திடச் சிம்புளாய்த் தோன்றும்
வீர பத்திரப் படையினைத் தொழுதனன் விடுத்தான். (௧௦௮)

ஏய தாகிய வீரபத் திரப்படை யெழுந்து
போய காலையி னந்திதன் படையெதிர் பொருத
மாய வன்படை தொலைந்தது மதியொடு திகழ்மீ
னுயி ரங்கதி ரோன்வரக் கரந்தவா றதுபோல். (௧௦௯)

செங்க ணாயகன் படைதொலைந் திடுதலுந் தெரிவா
னங்க ணுய்வுறு விமைப்பினி லகிலமு மழிக்கு
மெங்க ணாயகன் படையினைத் தூண்டுதற் கெடுத்தான்
வெங்க ணாயிரங் கதிரினைச் செயிர்த்திடும் வெய்யோன். (௧௧௦)

எஞ்ச லில்லதோ ரெம்பிரான் றெழில்படை யெடுத்து
மஞ்ச னங்கந்தந் தூபிகை மணிவிளக் கமுத
நெஞ்சி னிற்கடி துய்த்தனன் பூசனை நிரப்பி
விஞ்சு மன்பினால் வழுத்தியே தொழுதனன் விடுத்தான். (௧௧௧)

தாதை யாயவன் படைக்கலம் விடுத்திடுந் தன்மை
காதன் மாமகன் கண்டனன் றானுமக் கணத்தி
லாதி நாயகன் படைதனை யெடுத்தன னளியாற்
போத நீடுதன் புந்தியா லருச்சனை புரிந்தான். (௧௧௨)

வழிப டுந்தொழின் முற்றிய பின்னுற மதலை
யழித கன்மகன் விடுத்திடு படைக்குமா றுகி
விழுமி தாயிவண் மீளுதி யாலென வேண்டித
தொழுதி யாவர்க்கு மேலவன் படையினைத தொடுத்தான். (கசந)

தூயன் விட்டிடு சிவன்படை யெழுதலுந் தொல்லைத்
தீயன் விட்டிடு பரன்படை யெதிர்ந்துநேர் சென்ற
தாய வப்படை யிரண்டுமா றுகிய வழிக்கு
நாய கத்தனி யுருத்திர வடிவமாய் நண்ணி. (கசச)

ஊழிக் காலினை யொருபுடை யுமிழ்ந்தன வுலவாச்
சூழிப் பாய்புகை யொருபுடை யுமிழ்ந்தன தொலைக்கும்
பாழிப் பேரழ லொருபுடை யுமிழ்ந்தன பலவா
மாழ்ந தீவிட மொருபுடை யுமிழ்ந்தன வவையே. (கசரு)

கூளி மேலவர் தொகையினை யளித்தன கொடிதாங்
காளி மேலவர் தொகையினை யளித்தன கடுங்கண்
ஞாளி மேலவர் தொகையினை யளித்தன நவைதீ
ராளி மேலவர் தொகையினை யளித்தன வயலில். (கசசு)

பேயி னங்களை யொருபுடை யுமிழ்ந்தன பிறங்கி
மூய தொல்லிரு ளொருபுடை யுமிழ்ந்தன முழங்கு
மாயை தன்கண மொருபுடை யுமிழ்ந்தன மறலித்
தீயர் தங்குழு வொருபுடை யுமிழ்ந்தன செறிய. (கசஎ)

எண்ட ருங்கட லளப்பில கான்றன வெரிகால்
கொண்ட வின்றொகை யளப்பில கான்றன கொலைசெய்
சண்ட வெம்பணி யளபபில கான்றன தபன
மண்ட லங்களோ ரளப்பில கான்றன மருங்கில். (கசஅ)

அனந்த கோடியர் புட்கலை யிறைவரை யளித்த
வனந்த கோடியர் கரிமுகத் தவர்தமை யளித்த
வனந்த கோடிய ரரிமுகத தவர்தமை யளித்த
வனந்த கோடியர் சிமபுண்மே னியர்தமை யளித்த. (கசகூ)

ஏறு வெம்பரி வயப்புலி வல்லியம் யாளி
சீறு மால்கரி தேரொடு மானமேற் சேர்ந்து
மாறில் பல்படை சிந்தியே முனிந்துமேல் வருவான்
வேறு வேறெங்கு முருத்திர கணங்களை விதிதத. (கஉ0)

ஆர ணன்படை யளப்பில தந்தன வைவர்
சார ணன்படை யளப்பில தந்தன தந்த
வார ணன்படை யளப்பில தந்தன வளத்தின்
கார ணன்படை யளப்பில தந்தன கடிதின். (கஉக)

வாயு வின்படை யெண்ணில புரிந்தன மறலி
யாய வன்படை யெண்ணில புரிந்தன வளக்கர்
நாய கன்படை யெண்ணில புரிந்தன நகைசேர்
தீய வன்படை யெண்ணில புரிந்தன செறிய. (கஉஉ)

கற்பொ ழிந்தன ஞெகிழிகள் பொழிந்தன கணக்கில்
செற்பொ ழிந்தன கணிச்சிகள் பொழிந்தன திகிரி
யெற்பொ ழிந்தன சூலம்வேல் பொழிந்தன வீண்டும்
விற்பொ ழிந்தன சரமழை பொழிந்தன விரைவில். (கஉங)

வேறு.

இம்முறை யுருவ நல்கி யெம்பிரான் படையி ரண்டு
மைம்மலி கடலும் வானு மாதிர வரைப்பும் பாருங்
கொம்மென விழுங்கி யண்ட கோளகை பிளந்து மேல்போய்த்
தம்மின்மா றாகி நின்று சமர்த்தொழில் புரிந்த வன்றே. (கஉச)

வற்றிப வளக்க ரேழும் வறந்தன வான்றோய் கங்கை
மூறறிய புறத்தி லாழி முடிந்ததவ் வண்ட தபபாற்
சுற்றிய பெருநீ நீத்தந் தொலைந்தன வாண்டை வைப்பிற்
பறறிய வுயிர்கள் யாவும் பதைபதைத் திறந்த வம்மா. (கஉரு)

எரிந்தன நிலனும் வானு மிடிந்தன மூடிந்து மேருப்
பொரிந்தன வடவின் சூழல் பொடிந்தன விரவி தேர்க
ணெரிந்தன வண்டம் யாவு நிமிர்ந்தன புகையி னீட்டங்
கரிந்தன கிரிக ளேழுங் கவிழ்ந்தன திசையில் யானை. (கஉசு)

அலைந்தன சூறை வெங்கா லவிந்தன வடவைச் செந்தீக்
குலைந்தன பிலங்க ளேழுங் குலுங்கின வண்டப் பித்தி
யுலைந்தன வுயிர்கள் யாவு முடைந்தனர் தெரிந்த வானோர்
தொலைந்தன கமட நாகஞ் சுருண்டன புரண்ட மேகம். (கஉஎ)

பூமகள் புவியின் மங்கை பொருமியே துளங்கி யேங்கித்
தாமரைக் கண்ணன் றன்னைத் தழுவின ரிருவ ரோடு
நாமகள் வெருவி யோடி நான்முகற் புல்விக் கொண்டாள்
காமனை யிறுகப் புல்லி யிரதியுங் கலக்க முற்றாள். (கஉஅ)

மற்றுள முனிவர் தேவர் மடந்தையர் தம்மைப் புல்லி
கிற்றலு மாற்றா ருய்யு நெறியுமொன் றில்லா ராயு
முற்றிடு மச்சந் தன்னா லோடினர் வனததீச் சூழப்
பெற்றிடும் பறழ்வாய் கவ்விப் பெயர்ந்திடும் பிணுக்க ளேபோல். (கஉகூ)

திரண்டிடு பூத வீரர் தியங்கின ரிலக்க ரானோர்
மருண்டனர் துணைவர் தாமு மயங்கினர் வீரற் சூழ்ந்தார்
புரண்டன ரவுண ரியாரும் பொடிந்தன படர்ந்த தேர்க
ளுருண்டன களிறு மாவு மொருவனை யவுண னின்றான். (கங0)

ஆழிசூழ் மகேந்தி ரததி லமர்தரு மவுணர் முற்றுஞ்
சூழுமித் தீமை நோக்கித் துண்ணென வெருவி மாழ்கி
யேழிரு திறத்த வான வுலகங்க ளியாவு மாயு
மூழிநா ளிதுகொ லோவென் றலைந்தனர் குலைந்த மெய்யார். (கஙக)

பேரொலி பிறந்த தண்டம் பிளந்தன வளைந்த சூறை
யாரழல் பரவிற் றம்மா வாதவன் விளிந்தா னந்த
மூருறை சனங்கள் யாவு முலைந்தன புகுந்த தென்னோ
தேருதி ரென்றுசூர ரொற்றரைத் தெரிய விட்டான். (கஙஉ)

விட்டிடு கின்ற வொற்றர் செல்லுமுன் விரைந்து போரிற்
பட்டது தெரிந்து தூத ரொருசிலர் பனிக்கு நெஞ்சர்
நெட்டிரு விசும்பி னீந்து நெறியின ரிறைவன் றன்னைக்
கிட்டினர் வணங்கி நின்றாங் கினையன கிளத்த லுற்றார். (௧௩௩)

ஐயகே ளுனது மைந்த னலரிதன் பகைஞ னென்ன
லெய்திய தூத னோடி ருஞ்சமர் விளைத்துப் பின்னர்த்
தெய்வதப் படைக ளுய்த்துச் செகமெலா மழிக்கு மேலோன்
வெய்யதோர் படையைத் தூண்ட வவனுமப் படையை விட்டான். (௧௩௪)

அப்படை யிரண்டு மாகி யகிலமு மொருங்கே யுண்ணு
மொப்பில்பல் லுருவ மெய்தி யுருகெழு செலவிற் றாகித்
துப்புட னண்ட முற்றுந் தொலைத்தமா புரிந்த மாதோ
விப்பரி சுணர்ந்த தென்றா ரிறையவன் வினவிச் சொல்வான். (௧௩௫)

இரவியை முனிந்தோன் முக்க ணிறையவன் படையை யாரும்
வெருவர விடுத்து மின்னும் வென்றில னொற்றன் றன்னை
நெருநலிற் சிறிய னாக நினைந்தன மவனை யந்தோ
வுருவுகண் டெள்ளா தாற்ற லுணர்வதே யுணர்ச்சி யென்றான். (௧௩௬)

வெருவரு மினைய பான்மை விளைந்திட வெம்பி ரான்றன்
பொருவரும் படைக டம்மிற் பொருதன வாட லுன்னி
யொருவரு நிகர்கா ணாத வூழியின் முதல்வன் றானே
யிருபெரு வடிவ மாகி யிருஞ்சமர் புரிந்த தேபோல். (௧௩௭)

இவ்வகை சிறிது வேலை யெக்தைதன் படைக்க லங்க
ளவ்விரு வோருங் காண வாடலா லமர தாற்றி
வெவ்வுரு வாகத் தம்பான் மேவர விதித்த வெல்லாஞ்
செவ்விதின் மீட்டும் வல்லே திரும்பிய திறலோ தம்பால். (௧௩௮)

திரும்பிய படைக டங்கள் செய்கையாற் றிரிந்த வண்டம்
பெரும்புவி யகல்வா னேமி பிலம்வரை பிறவுந் தொல்லை
வரம்புறு மாறு நல்கி மாற்றலர் பக்க மல்லா
வரும்பெற லுயிர்கண் முற்று மருள்செய்து போன வன்றே. (௧௩௯)

திண்டிறன் மொய்ம்பன் விட்ட சிவன்படை மீட லோடு
மண்டலன் விடுத்த தொல்லைப் படையுமாங் கவனை நண்ணக்
கண்டன ரமர ரார்த்தார் கைதவ னிதினும் வெற்றி
கொண்டிலன் முடிவ னின்னே குறைந்ததெம் மிடரு மென்னார். (௧௪௦)

பாங்கரி னிபங்கள் காணான் பாய்பரித் தொகுதி காணான்
றாங்கெழிற் றேர்கள் காணான் றானவப் படையுங் காணா
னாங்கவை முடியத் தானே யாயினன் றன்மை கண்டா
னேங்கின னவுணன் மைந்த னிரங்கிமற் றினைய சொல்வான். (௧௪௧)

மூண்டொரு கணத்தி னெல்லா முடிபபவன் படையு நேர்போய்
மீண்டுள தென்னி னம்மர் விடுத்திட மேலொன் றுண்டோ
மாண்டன வனிக முற்றும் வறியனுய்த் தமிய னின்றே
னீண்டினிச் செய்வ தென்னென் றெண்ணியோர் சூழ்ச்சி கொண்டான்.()

மாயத்தா னெய்து நிற்கின் மலைவதுஞ் செயலன் றென்று
மாயத்தா னுருவங் கொண்டு வல்விரைந் தெழுந்து சென்று
காயத்தா னாகி நிற்பக் கைதவன் வெருவித் தோன்றாக்
காயத்தா னுடைந்தா னென்றே யார்த்தன கணங்க ளெல்லாம். (கசங)

விடலையின் னெழுந்த காலை மேவலர் தொகையை யெல்லா
முடிவுசெய் கென்று வஞ்ச முரட்படை யவுணன் றூண்டி
னடுமது நமையு மென்னா வதற்குமுன் னளக்க ராற்றைக்
கடிதினிற் கடந்தான் போலக் கதிரவன் கரந்து போனான். (கசச)

மைப்புயன் மேனித் தீயோன் மறைந்தது வள்ளல் காணா
விப்பக லூனுங் கள்வ னிறந்தில னிரிந்து வல்லே
தப்பின னினியான் செய்யத் தகுவதென் னுரைத்தி ரென்ன
வொப்பருந் துணைவர் கேளா வொருங்குடன் றொழுது சொல்வார். ()

வந்தெதி ரவுணர் தானை மாண்டன தமிய னின்றான்
சிந்தினன் கரந்து போனா னினிவருந் திறலோ ரில்லை
யந்தியு மணுகிற் றம்மா வனிகமு மியாமு மீண்டு
கந்தனை யிறைஞ்சிக் காலை வருவதே கடமைத் தென்றார். (கசரு)

வேறு.

இனைய தன்றுணைவ ரினையன கூற
வினவி னோன்முருக வேளடி காணா
நினைவு கொண்டிடலும் விண்ணிடை நின்ற
தினக ரன்பகைஞ னின்னதெ ரிந்தான். (கசஎ)

முன்னை வைகலின் முரிந்தன னென்றே
பன்னு மோர்வசை பரந்தது மன்றிப்
பின்னு மிப்பகல் பிழைத்தன னென்றா
லென்னை யாவர்களு மெள்ளுவா மாதோ. (கசஅ)

தொக்க போரில்வெரு விததொலை வோரைத்
தக்க தோர்துணைவர் தந்தையர் தாயர்
மக்கள் பெண்டிரு மறப்பர்க ளென்னின்
மிக்கு ளாரிகழ்தல் வேண்டுவ தன்றே. (கசகூ)

இன்று தென்னலி னிரிந்துள னென்றால்
வென்றி மன்னனெனை வெகுண்டு துறகருந்
துன்று பல்கதி ரினைச்சுளி தொல்சீர்
பொன்று மெந்தைபுக ழுந்தொலை வாமால். (கருO)

யாதொர் துன்னல ரெதிர்ந்திடி னின்று
காத லேவலி கடந்திடு சூழ்ச்சி
நீதி யன்றதுவு நேர்ந்தில தென்னிற்
சாத லேதகுதி சாய்ந்திட லன்றே. (கருக)

வருந்தி நின்றெதிர் மலைந்தன னின்று
பிரிந்து ளானிவ னெனும்பழி கோட்ல்
பொருந்த லன்றுபுணர் வென்னினு மாற்றி
விரைந்து மாற்றலரை வென்றிடல் வேண்டும். (கருஉ)

முன்ன கின்றொரு முரட்படை தன்னை
யின்ன லெய்துமவகை யேவுது மென்னி
னன்ன தறகெதி ரடும்படை தூண்டிச்
சின்ன மாகவது சிந்துவன் வீரன். (கருங)

இறந்த னன்பொரு திரிந்தன னென்றுப்
பறந்தலைச் செறுநர் பன்னுற வின்னே
மறைந்து நின்றொரு வயபபடை தூண்டிச்
சிறந்த வென்றிகொடு சென்றிடல் வேண்டும். (கருச)

தெய்வ தப்படை செலுத்துவ னென்னி
னவ்வ னைத்துமம ராற்றலர் தம்பாற்
செவ்வி துற்றுயிர் செகுததிட வின்றே
வெவ்வு ருக்கள்கொடு மீளுவ தல்லால. (கருரு)

பண்ண வப்படை படைத்திடு கோல
மெண்ண லன்றெரியி னேற்றன தூண்டித்
துண்ணெ னத்தொலைவு சூழ்ந்திடும் யானும்
விண்ண கத்துறல் வெளிபபடு மாதோ. (கருசு)

வெளிப்ப டிற்செறுநர் விண்ணினும் வந்தே
வளைத்தி கற்புரிவர் மாறமர் செய்தே
யிளைத்த னன்பொரவு மின்னினி யொல்லா
தொளித்து முறபகலி னேடரி தாமால். (கருஎ)

ஏயெ னச்செறுந ரீண்டுழி நண்ணி
யாய தொல்லுணர் வனைத்தையும வீட்டி
வீயு மீற்றினை விளைததிடு கின்ற
மாய மாப்படை விடுத்திடன் மாட்சி. (கருஅ)

என்று சிந்தைதனி லின்னன வுன்னி
யன்று மாயவ ளளித்திடு கின்ற
வன்றி றற்படையை வல்லையெ டுத்தே
புன்றொ ழிற்குரிசில் பூசனை செய்தான். (கருகூ)

நெறிகொண் மூப்புலனி னெஞ்சினில் யாரு
மறிவ ரும்பரிசி னண்டலர் தம்பாற்
குறுகி மெய்யுணர்வு கொண்டுயிர் மாற்றி
யெறிபு னற்கடலு ளென்றுவி டுததான். (கசூ0)

விடுத லுங்கொடிய வெம்படை தான்வந்
தடையும் வண்ணமறி தற்கரி தாகிக்
கடிது பாரிடை கலந்து கணத்தின்
படையை யெய்தியது பாவம தென்ன. (கசூக)

இருங்க ணத்தரையி லக்கரை யொள்வாண்
மருங்கு சேர்த்திய வயத்துணை வோரை
நெருங்கு தார்ப்புய நெடுந்திற லோனை
யொருங்கு சூழ்ந்துணர் வொழித்தது மன்றே. (கசூஉ)

ஆன்ற பொன்னகரி லண்டர்க ளஞ்ச
வூன்றும் வில்லிடை யுறங்கிய மால்போற்
றோன்று மாயைபடை தொல்லறி வுண்ண
மான்றி யாவரு மறிந்து கிடந்தார். (௧௬௩)

மறிந்து ளார்தமது மன்னுயிர் வவ்விச்
சிறந்த தன்வலி செயற்கரி தாக
வறிந்து மாயைபடை யாகுல மூழ்கி
யெறிந்து நேமியிட வெண்ணிய தன்றே. (௧௬௪)

ஓல மிட்டுலக முட்கிட வூழிக்
காலின் வெவ்வுருவு கைக்கொடு மாயக்
கோல வெம்படை கொடுந்தொழில் கொண்ட
வால காலமென வான்றுள தன்றே. (௧௬௫)

வேறு.

வெள்ளமா யிரம தென்னும் வியனுரை படைத்த பூத
மள்ளரைத் தலைவர் தம்மை வயங்கெழு துணையி னோரை
நள்ளலர்க் கடந்த துப்பி னம்பியை யுமப ராற்றும்
பொள்ளென வெடுத்து மாயப் படைக்கலம் போயிற் றம்மா. (௧௬௬)

போயது சூரன் மைந்தன் புந்தியிற் கதிமேற் கொண்டு
மாயிரு நேமி யாறும் வல்லையிற் றப்பி யப்பாற்
றூயதெண் புனலா யான்ற தொல்கட லழுவ நண்ணி
யாயவர் தொகையை யீட்டே யகன்றிடா தோம்பிற் றன்றே. (௧௬௭)

நின்றிடு சூரன் மைந்த னிலைமைமற் றிதனை நோக்கிப்
பொன்றினன் வீர வாகு பூதரும் பிறரும் வீந்தார்
குன்றம தன்றான் மீளக் குரைபுனல் வேலை யாழ்ந்தார்
நன்றுநஞ் சூழ்ச்சி யென்னா நகையெயி றிலங்க நக்கான். (௧௬௮)

அண்டருங் களிப்பின் மேலோ னவ்விடை யகன்று வல்லே
விண்டொடர் நெறியிற் சென்று வியன்மகேந் திரத்தி னெய்தி
யெண்டிசை யுலகம் போற்ற விறைபுரி தாதை தன்னைக்
கண்டன னிறைஞ்சி நின்றாங் கினையன கழற லுற்றான். (௧௬௯)

இன்றியான் சென்று பல்வே றிருஞ்சம ரியற்றிப் பின்னர்
வன்றொழில் புரிந்த வீர வாகுவை யவன்பா லோரை
யன்றியும் பூத வெள்ள மாயிரந் தன்னை யெல்லாம்
வென்றுயிர் குடித்தி யாக்கை வியன்புனற் கடலு ளுய்த்தேன். (௧௭0)

சிறிதுநீ கவலை கொள்ளேல் சேனையும் யானு மேகி
மறிகட லெறியுங் கால்போல் வளைந்துபா சறையைச் சிந்தி
யறுமுகன் றனையும் வென்றே யரியய னோடும் விண்ணோ
ரிறைவனைப் பற்றி நாளை யீண்டுதந் திடுவ னென்றான். (௧௭௧)

வேறு.

என்னும் வேலையி லெழுந்தன வுவகையாப் புடைய
பொன்னி னங்கத மூட்டற நிமிர்ந்தன புயங்கண்
மின்னு மாமணிக் கடகங்க ணெரிந்துவீழ் கின்ற
துன்னு மாமயிர் பொடித்தன முறுவறோன் றியதே. (௧௭௨)

எழுந்து நின்றிடு மிரவிதன் பகைஞனை யிமைப்பி
லழுந்த மார்புறத் தழீஇக்கொடு மடங்கலே றூற்றுஞ்
செழுந்த னிப்பெருந் தவிசிடை யேற்றியச் சேயைக்
குழந்தை நாளெனத் தன்னய லிருத்தினன் கொண்டான். (௧௭௩)

தந்தை யாயினோ ரினிதுவீற் றிருப்பதுந் தமது
மைந்தர் தங்குடி பரித்தபி னன்றிமற் றுண்டோ
வெந்தை வந்துநந் தொன்முறை போற்றலால் யானுஞ்
சிந்தை தன்னிலோ ரெண்ணமு மின்றியே சிறந்தேன். (௧௭௪)

அன்று நோற்றதும் பற்பக லுண்டரோ வதற்காக்
கொன்றை வேணியன் கொடுத்தன னென்பது கொள்ளாச்
சென்ற வார்த்தைக ணிற்கவிவ் வரசுமித் திருவு
மின்று நீதரப் பெற்றனை யையா னென்றான். (௧௭௫)

என்று பற்பல நயமொழி கூறிமுன் னிட்ட
வென்றி சேரணி மாற்றியே புதுவதா விளித்துத்
துன்று பொன்முடி யாதியா வார்கழற் றுணையு
நன்று தான்புனைந் தொருமொழி பின்னரு நவில்வான். (௧௭௬)

முன்ன நீசொற்ற தன்மையே மூவிரு மூகத்தோன்
றன்னை வென்றுவெஞ் சாரதப் படையினைத் தடிந்து
பின்னர் நின்றிடு மமரரைச் சிறையிடைப் பிணித்தே
யென்னு டைப்பகை முடிக்குதி காலையே யென்றான். (௧௭௭)

என்ன வன்னது செய்குவ னத்தவென் றிசைப்ப
மன்னர் மன்னவன் சமரிடை நொந்தனை மைந்த
பொன்னு லாயநின் றிருமனைக் கேகெனப் புகலப்
பன்னெ டுங்கதிர் மாற்றலன் விடைகொண்டு படர்ந்தான். (௧௭௮)

சூழி யானைதேர் வருபரி யவுணர்கள் சுற்ற
நாழி யொன்றின்முன் சென்றுதன் கோநகர் நண்ணி
வாழ்வின் வைகின னிதுநிற்க வன்புனற் கடலு
ளாழும் வீரர்க டேறியே யெழுந்தவா றறைவாம். (௧௭௯)

வடபெ ருங்கிரி சூழ்பவன் றொல்பகை மாயப்
படைவி டுத்ததும் பூதருந் துணைவர்கள் பலருந்
தொடையல் வாகுடை வீரனு மயக்குறத் தூநீர்க்
கடலு ளிட்டது மாங்கனஞ் சுரரெலாங் கண்டார். (௧௮௦)

அண்ட ரங்கது நோக்கியே வெய்துயிர்த் தரந்தை
கொண்டு ளம்பதைத் தாவலித் தரற்றிமெய் குலைந்து
கண்டு ளித்திடக் கலுழ்ந்துநா வுலர்ந்துகைம் மறித்து
விண்டி டும்படி முகம்புடைத் தலமந்து வியர்த்தார். (௧௮௧)

இன்ன வித்திற மாகியே யமரர்க ளிரிந்து
சென்னி யாறுடைப் பண்ணவற் குரைத்திடச் சென்றா
ரன்ன தாகிய பரிசெலா நாடியே யவர்க்கு
முன்ன மோடினன் முறைதெரி நாரத முனிவன். (௧௮௨)

அம்பெ னும்படி கால்விசை கொண்டுபோ யறிவ
னிம்ப ராகிய பாசறைக் கண்ணுறு மெந்தை
செம்ப தங்களை வணங்கிநின் றஞ்சலி செய்தே
யும்பர் கோமகன் றன்மனந் துளங்குற வுரைப்பான். (௧௮௩)

சூரன் மாமகன் கரந்துமா யப்படை துரந்து
வீர வாகுவுந் துணைவரும் வெங்கணத் தவரு
மாரு மால்கொள வீட்டியே யன்னதா லவரை
வாரி நீர்க்கட லுய்த்தனன் சூழ்ச்சியின் வலியால். (௧௮௪)

என்று நாரத முனிவரன் புகறலு மிமையோர்
சென்று சென்றுவேள் பதங்களை யிறைஞ்சியே திருமு
னின்று வீராக ளழிந்திடு செயன்முறை நிகழ்த்த
வென்றி வேலினை நோக்கியே யெமபிரான் விளம்பும். (௧௮௫)

கங்கை யன்னதோர் வாலிதா கியபுனற் கடற்போ
யங்கண் வைகிய மாயமாப் படையினை யழித்து
வெங்கண் வீரர்மா லகற்றியே யனையவர் விரைவி
லிங்கு வந்திடத் தந்துநீ செல்கென விசைத்தான். (௧௮௬)

செய்ய வேலினுக் கின்னதோர் பரிசினைச் செப்பி
யைய னவ்விடை விடுத்தலு நன்றென வகன்று
வெய்ய தீங்கதி ராயிர கோடியின் விரிந்து
வைய மேலிருண் முழுதுண்டு வல்விரைந் ததுவே. (௧௮௭)

அரவு மிழ்ந்தது கொடுவிட முமிழ்ந்தகா லடுகூற்
றுருவு மிழ்ந்தது செல்லின முமிழ்ந்ததெவ் வுலகும்
வெருவு பல்படைக் கலங்களு முமிழ்ந்தது மிகவுங்
கருநெ டும்புகை யுமிழ்ந்ததங் குமிழ்ந்தது கனலே. (௧௮௮)

மின்னல் பட்டன முகிலிருள் பட்டன விசும்பிற்
றுன்னல் பட்டன காரிருள் பட்டன துன்னு
ரின்னல் பட்டிடு மெய்யிருள் பட்டன வெரிமுன்
பன்னல் பட்டன நேமிசூழ் தனியிருட் படலம். (௧௮௯)

எரிந டுங்கிய தனிலமு நடுங்கிய தெண்பாற்
கரிந டுங்கிய வளக்கரு நடுங்கிய கனக
கிரிந டுங்கிய தரவின நடுங்கிய கிளாதே
ரரிந டுங்கிய திந்துவு நடுங்கிய தம்மா. (௧௯௦)

அங்கி தன்படை கூற்றுவன் றன்படை யனிலன்
றங்க வெம்படை யளக்கர்கோன் றன்படை சோமன்
செங்கை வெம்படை மகபதி பெரும்படை திருமால்
பங்க யன்படை யாவையுந் தொழுதுடன் படர. (௧௯௧)

அடிகள் விட்டிடும் வேற்படை யெனப்படு மலரி
கடிது சேறலும் வானவர் வதனமாங் கமல
நெடிது மாமகிழ் வெய்தியே மலர்ந்தன நெறிதீர்
கொடிய தானவர் முகமெனுங் கருவிளங் குவிய. (௧௯௨)

இரிந்த தானவர் நாளையா மிறந்துமென் றிருக்கை
பொருந்தி மாதரை முயங்கினர் கங்குலும் புலர
விரைந்து ஞாயிறு வந்ததென் றேங்கமின் னுரைப்
பிரிந்த வானவ ராயவருஞ் சிறந்தனர் பெரிதும். (ககூ௩)

இதழி நத்திணு லயிறபடை முப்புரத் திறைவ
னுய்த்த தீநகை போலவே வலவிரைந் தோடி
மூதழி றத்திரு நேமியும் பிற்பட முந்திச்
சுத்த நீக்கடல் புகுந்தது விண்ணுளோர் துதிபப. (ககூ௪)

செய்ய வேறபடை யாயிடை புகுதலுந் தெரிந்து
வெய்ய மாயவள படைக்கல மாறறவும் வெருவி
மையல் வீரரை நீங்கியே தொலைந்துபோய் மறிந்து
மொய்யி ழுந்தது தன்செய லிழந்தது முடிந்தே. (ககூரு)

ஆய காலையி லெந்தைதன் படைக்கெதி ரடைந்து
தூய தெணகட லிடையவன வெருவியே தொழுது
நேய நீரமையான் மும்முறை வணங்கிமுன் னின்று
காய முறறவும் வியாபபெழ வொருமொழி கழறும். (ககூசு)

வேறு.

அந்த மிலவர மடைந்திடு சூரன்
மைந்தன மாயவள வயப்படை தூண்டி
நந்தம வீரர்கண நாதரை யெல்லாம்
புந்தி மேன்மயல் புணர்ததின னமமா. (ககூஎ)

முன்னு ளர்சசிமுடி வோரதமை மற்றென்
றன்னி டததிலிடு தன்மை புரிந்தா
னனன ததுணையி லபபணி யாறறி
யெனனி டததினி லிருந்துள தனமேற. (ககூஅ)

இருந்த மாயைபபடை யெமபெரு மானீ
மருந்து போலிவண் வழிபபடல காணூஉ
வருந்தை யெய்தியடல வீரரை நீங்கி
முரிந்து வீழ்ந்திவண் முடிந்தது மன்றோ. (ககூகூ)

தொடையல் வாகைபுனை சூரருண் மைந்தன
விடவ ரும்படையின வெவ்வலி சிந்தி
யடவும லன்மையில னங்கவ ராலே
யிடர்ப டுஞசிறிய னென்செய்வ னமமா. (உ00)

வெந்தி றறபகைஞா மேலமர் செய்ய
வந்த வீரரு மறிந்துணா வற்று
ரெந்த வேலையெழு வாரிவ ரென்றே
புந்தி நோய்கொடு புலமபினன் யானும். (உ0க)

மூறுவ லாறபுர முடிததவ னல்கு
மறுமு கேசனசு ரததொகை யெலலா
மிறையின் மாற்றுமம ரெண்ணிய தாடற்
றிறம தென்றுநனி சிந்தனை செய்தேன். (உ0உ)

வள்ள லாயிடை வதிர்து கணத்தின்
வெள்ள மோடுவிடு வீரர்க டம்மை
நள்ள லான்மக னவிர்திட லன்னுற்
றுள்ள மாங்கொலென வுன்னி யயர்ந்தேன். (௨௦௩)

ஆதி மைந்தனசு ரத்தொகை தன்னைக்
காதி னுய்குவ னெனக்கரு துற்ற
பேதை யேன்புரி பிழைப்பிவ னுண்டோ
வேது மில்லைமுனி யேயெனை யென்றான். (௨௦௪)

வாழு நேமியிறை மற்றிது கூறித்
தாழு மெல்லைதள ரேவினி யென்னு
வூழி யின்முதல்வ னுய்த்திடு மொளவே
லாழு நீரரை யடைந்தது நண்ணி. (௨௦௫)

வேறு.

அடைதரு கின்ற முன்ன ரவருணர் வுண்ட மாயப்
படையது நீங்கிற் றாகப் பதைபதைத் துயிர்த்து மெல்ல
மடிதுயி லகன்று தொல்லை வாலறி வொருங்கு கூடக்
கடிதினி லெழுந்தா ரங்க ணுதித்திடு கதிர்க ளென்ன. (௨௦௬)

புழையுறு மெயிற்றுப பாந்தள் பொள்ளெனச் செயிர்த்துக் கான்ற
வழல்படு விடமீச் செல்ல வலமந்து வியர்தது மாழ்கிக்
கழிதுயி லடைந்தோர் வல்லோன் காட்சியா லதுமீண் டேக
வெழுவது போல வன்னோர் யாவரு மெழுத லுற்றார். (௨௦௭)

சாரதக் கணத்து ளோருந் தலைவரு மிலக்கத் தோரும்
யாரினும் வலிய ரான வெண்மரு மெவர்க்கு மேலாம்
வீரனு மெழுந்து வேலை மீமிசைப் பெயர்ந்து செவ்வேள்
சீரடி மனங்கொண் டேதிதித் தொழுதனர் சிறந்த வன்பால். (௨௦௮)

வீடின வவுணன் மாயை விளிந்தன பவத்தி னீட்டம்
பாடின சுருதி முற்றும் படிமக ளுவகை பூத்தா
ளாடிய தறத்தின் றெய்வ மார்த்தன புவனம் யாவு
நாடிய முனிவர் தேவர் நறைமலர் மாரி தூர்த்தார். (௨௦௯)

அன்னதோ ரமைதி தன்னி லாறுமா முகத்து வள்ளன்
மின்னிவர் குடுமிச் செவ்வேல் விண்ணிடை வருதல் காணூஉப்
பன்னரு முவகை பொங்கப் பன்முறை பணிந்து போற்றிச்
சென்னியிற் றொழுத கையா ரெதிர்கொடு சென்று சூழ்ந்தார். (௨௧௦)

சூழ்ந்திடு கின்ற காலைச் சூர்மகன் மாயை தன்னாற்
றாழ்ந்துணர் வழிந்த வாறுந் தடம்புனற் புணரி யுய்ப்ப
வீழ்ந்தது மையன் வேலான் மீண்டதும் பிறவு மெல்லா
மாழ்ந்ததொல் லறிவாற் றேறி யறிஞர்க்கு மறிஞன் சொல்வான். (௨௧௧)

அந்தமி லொளியின் சீரா லறுமுகம் படைத்த பண்பா
லெந்தைக ணின்றும் வந்த வியற்கையா றசத்தி யாம்பேர்
தந்திடும் பனுவல் பெற்ற தன்மையாற் றனிவேற் பெம்மான்
கந்தனே யென்ன நின்னைக் கண்டனக் கவலை நீத்தேம். (௨௧௨)

நண்ணலன் பிணித்த மாய நலிந்திட யாங்க ளெல்லாந்
துண்ணென வறிவின் றாகித் தொல்புனற் கடலுட் பட்டே
மெண்ணரும் படைகட் கெல்லா மிறைவநீ போந்த வாற்றா
லுண்ணிக ழுணர்ச்சி தோன்ற வுய்ந்தன முயிரும பெற்றேம். (உகங)

குன்றிடை யெம்மை வீட்டிக் கொடியவன் புணர்ப்புச் செய்த
வன்றும்வந் துணர்வு நல்கி யளித்தனை யதுவு மல்லா
லின்றும்வந் தெம்மை யாண்டா யாதலின் யாங்க ளுய்ந்தே
முன்றனக் குதவுங் கைம்மா றுண்டுகொ லுலகத் தென்றான். (உகச)

தூயவ னினைய மாற்றஞ் சொற்றலு மயில்வேல் கேளா
நீயிர்கள் விளிந்த தன்மை நேடியே விமல னென்னை
யேயின னதனால் வந்தேன் யான்வருந் தன்மை நாடி
மாயம திறந்த தங்கண் வருதிரென் றுரைத்த தன்றே. (உகரு)

நன்றெனத் தொழுது வீர னகையொளி முகத்த னாகிப்
பின்றொடர் துணையி னோரும் பெருங்கண த்தவருஞ் சூழச்
சென்றன னினைய காலைச் சிறந்தவேற் படைமுன் னேகி
வென்றிகொள் குமரன் செங்கை மீமிசை யமர்ந்த தன்றே. (உகசு)

ஆக திருவிருத்தம் - க,0கூ.

---

வசனம்.

மறுநாள் விடியற்காலத்தில் பானுகோபன் தன்காலைக்கடனை முடித்துக் கொண்டு தான் அபஜயப்பட்டதைப்பற்றி வருந்தி, மாயையைநினைத்தான். அவள் இவனுக்கெதிரேதோன்றி, நீயென்னைநினைத்தது யாதுக்கு என்று கேட்க, சண் முகன்தூதனாகிய வீரவாகுவினால் மானமிழந்தேன் என்றான். அதைக்கேட்ட மாயையானவள் நீ தேவர்களைச் சிறையிலிடுதல்முதலிய அக்கிரமமானகாரியங்களைச் செய்ததனால் இந்தக்கதி நேரிட்டது. இப்பொழுது உனக்குவேண்டுவது யாது சொல்லென்றுகேட்க, வீரவாகுவை வெல்லத்தகுந்த ஒரு படைக்கலந் தரவேண்டு மென்றான். ஒரு மாயாஸ்திரத்தைப் படைத்துக்கொடுத்துவிட்டு மாயையானவள் சென்றபிறகு, பானுகோபன் போர்க்கோலங்கொண்டு ஏமகூடத்தில் பாசறையுட் சென்று, தான் போர்செய்யவந்திருப்பதைத் தூதனால் வீரவாகுதேவருக்கு அறி விக்க, அவரும் இதோவருகிறேனென்று சொல்லிவிட்டு, பூதவீரர்முதலியோர் தம் மைச்சூழ்ந்துவரக் குமரநாயகன் சந்நிதியையடைந்து வணங்கிநிற்க, அப்பெரு மான், இங்கு நடந்தசெய்தியாவுமறிந்து, வீரவாகுவைநோக்கி, நீ விரைந்துபோய்ப் பானுகோபனை வென்றுவரக்கடவையென்றருளிச்செய்ய, அவ்வாறே விரைந்து சென்று போர்க்களமடைதலும், பூதவீரரும அவுணவீரரும் கைகலந்து போர்செய் ததில், அவுணப்படையில் அநேகர் மாண்டதைக்கண்ட பானுகோபன பூதவீரரைச் சிந்நபிந்நமாய்ச் சிதறடித்தான. அதைக்கண்ட வீரவாகுதேவர் அவனோடெதிர்ந்து நெடும்பொழுது பெரும்போர்செய்தார்; முடிவில் சிவாஸ்திரத்தைப் பானு கோபன் விடுத்தான். வீரவாகுதேவரும் அந்த அஸ்திரத்தையேவிடுத்தார். இவ் விரண்டும் ஒன்றுக்கொன்று போர்செய்து, தம்மை யேவினவரிடமேபோய்ச்சேர்ந் தன. பொழுதும்பட்டது. பானுகோபன் ஆகாயத்தில்மறைந்துநின்று மாயாஸ் திரத்தைப் பிரயோகித்தான். அது வீரவாகுதேவருடைய சேனைகளையெல்லாம் மயக்கிக் கட்டிக்கொண்டுபோய்க் கடலிற்போட்டது. பானுகோபன் மனமகிழ்ந்து

போய்த் தன்பிதாவாகிய சூரபன்மனுக்கு நடந்தசெய்தியைச் சொல்லிவிட்டுத் தன் மாளிகையையடைந்தான். இந்தச்செய்தியை நாரதர் சண்முகப்பெருமானுக்கறிவிக்க, அவர் தமது திருக்கரத்திலுள்ள வேற்படையையேவ, அதுசென்று பானு கோபன்விட்ட மாயாஸ்திரத்தின் வலியையழித்துப் பெருமான்கையையடைந்தது. கடலினின்றும் வீரவாகுதேவர்முதலியோர் மயக்கமொழிந்து வெளிப்பட்டார்கள்.

மூன்றாநாட்பானுகோபன்யுத்தப்படலம் முற்றிற்று.

# நகர்புகுபடலம்.

முன்னுறச் செவ்வே லேக மூவிரு முகத்து வள்ள
றன்னடிக் கமல முன்னித் தரங்கநீ ருவரி வைப்பின்
மின்னெனக் கடிது போந்து விறன்மிகு தடந்தோ ளண்ண
றொன்னிலைத் திருவின் மேவுஞ் சூரன்மூ தூரைக் கண்டான். (க)

கண்டனு மெயிற்றின் மாலை கல்லெனக் கலிப்பக் கண்கண்
மண்டுதீப் பொறிகள் கால வாய்புகை யுமிழ நாசித்
துண்டம துயிர்ப்ப மார்பந் துண்ணென வியர்ப்புத் தோன்றத்
திண்டிறன் மொய்ம்பின் மேலோன் செயிர்த்திவை புகல லுற்றான். (உ)

வெஞ்சமர்க் காற்ற லின்றி வெருவிப்போய் விண்ணி னின்று
வஞ்சனை புரிந்து நம்மை மாயத்தால் வென்று மீண்டு
முஞ்சன னிருந்த கள்வ னுயிர்குடித் தன்றி யையன்
செஞ்சர ணத்தனைக் காணச் செல்லுவ தில்லை யானே. (௩)

நன்னக ரழிப்ப னின்று நண்ணலன் மதலை நேரி
னன்னவன் றனையும் யானே யடுவனா லடுகி லேனேற்
பின்னுயிர் வாழ்க்கை வேண்டேன் யான்பிறந் தேனு மல்லே
னென்றொரு சிலையும் யானு மெரியிடைப் புகுவ னென்றான். (ச)

சூளிது முதலவன் கூறத் துணைவரும் பிறருங் கேளா
வாளரி யனைய வீர வடையலர்க் கழிந்தேம வாளா
மீளுதல் பழிய தாகும் வென்றிகொண் டல்லா லெந்தை
தாளிணை காண்ப துண்டோ சரதமே யிதுமற் றென்றார். (ரு)

நும்மனத் துணிவு நன்றா னெறில்படைக் கணத்தோ டேகி
யிம்மெனச் செறுநர் மூதூ ரெரியினுக் குதவி நேர்ந்தார்
தம்மையட் டவுணன் மைந்தன் றனையுந் தடிதும் யாரும்
வம்மெனப் புகன்றா னென்ப வாகையம் புயத்து வள்ளல். (சா)

ஆரியன் றனது மாற்ற மனைவரும் வியந்து செல்ல
வோரிமை யொடுங்கு முன்ன முவரியி னடுவ ணான
வீரமா மகேந்தி ரத்தின் மேற்றிசை வாயில் போந்தான்
பாரிடக் கணங்க ளார்த்த பரவைக ளழிந்த தேபோல். (எ)

ஆர்த்தன வவுணர் கேளா வற்புத மிகழ வான்போய்ப்
பார்த்தனர் சிலவ ருள்ளம் பதைத்தனர் சிலவர் யாக்கை
வேர்த்தனர் சிலவ ரீது மேவலர் தழனி யென்னாச்
சேர்த்தனர் சிலவ ரம்பா செருவெனக் கிளருந் தோளார். (அ)

வேறு.

வேழத் தின்றொகை வெம்பரி வெய்யோ
ராழித் தேர்க ளளக்கரி னீண்ட
வூழித் தீச்செறி வுற்றன வேபோற்
பாழித் தீபிகை பற்பல மல்க. (கூ)

வானா ருங்குட வாய்தலில் வைகி
யானா தென்று மளித்திடு கின்றோன்
மேனாண் மாயை விதித்திடு மைந்த
னூனார் செம்புன லுண்டுமிழ் வேலோன். (க0)

அரணங் கொண்டதன் னாணை கடந்த
முரணாங் கூற்றுவன் மூத்தலை வேலும்
வருணன் பாசமும் வன்மையின் வாங்கி
விரணங் கொண்டு வியன்சிறை செய்தோன். (கக)

விண்ணிற் றீச்சுடர் போன்மிளிர் மெய்யான்
வண்ணப் பல்பொறி மாமுக முள்ளா
னண்ணற் சீய வரித்தவி சின்க
ணண்ணாற் றுண்ட னஞ்சினும் வெய்யோன். (கஉ)

சேனார் மாமுகில் செல்லொடு சிந்த
மானார் பூத வயப்படை யார்த்தே
யேனார் வீரரொ டெய்திய தன்மை
காணா நின்று கனன்றெழ லுற்றான். (கங)

தன்கண் ணின்றிடு தானைக ளெல்லா
முன்கண் சென்றிட மொய்ம்புட னேகிப்
புன்கட் டீயவ னேற்றெதிர் புக்கான்
வன்கட் பூதர்கள் வந்து மலைந்தார். (கச)

வில்லுண் வாளிகள் வேன்மழு நேமி
யல்லுண் மெய்யவு ணப்படை தூர்த்த
கல்லும் மாமர முங்கதை யாவுஞ்
செல்லென் றுய்த்தனர் சீர்கெழு பூதர். (கரு)

முட்டா வெஞ்சின மூண்டிட வின்னோர்
கிட்டா நின்று கிளர்ந்தம ராற்றப்
பட்டார் தானவர் பாரிடர் பல்லோர்
நெட்டா றொத்து நிமிர்ந்தது சோரி. (கசு)

கண்டா ரன்னது காவலர் சீற்றங்
கொண்டார் தாமெதிர் கொண்டமர் செய்ய
வண்டார் நின்றில ராவி யுலந்தே
விண்டா ரோர்சிலர் மீண்டு தொலைந்தார். (கஎ)

இடித்தார் தேரினை யெற்றினர் மாவை
யடித்தார் தந்திக ளானவை சிந்த
முடித்தா ரொன்னலர் மூளையி னின்றே
நடித்தார் பூதர்க ளாரதர் பாட. (கஅ)

முன்சூழ் தானை முடிந்தது கண்டான்
மன்சூழ் வெம்புலி மாமுக வீர
னென்சூழ் கிங்கினி யென்று கிளைந்தோர்
கொன்சூ லப்படை கொண்டு நடந்தான். (௧௯)

நடக்கின் றானை நலிந்து கணத்தி
லடக்கின் றானென வார்த்தெதிர் நண்ணிக்
கடக்குன் றங்கள் கணிப்பில வைகுந்
தடக்குன் றம்பல சாரத ருய்த்தார். (௨௦)

சாலங் கொண்டிடு சாரத ருய்த்த
நீலங் கொண்ட நெடுங்கிரி யாவுஞ்
சூலங் கொண்டுபஃ றுண்டம தாக்கி
யாலங் கொண்ட வளக்கரி ளுர்த்தான். (௨௧)

அங்கோர் கொண்டவ னாற்றலை நோக்கி
யெங்னே கிற்பதி யாமிவ னென்னா
முன்னே நின்ற முரண்கெழு சிங்கன்
மின்னே யென்ன விரைந்தெதிர் சென்றான். (௨௨)

வேறு.

வயமிகு பூதரின் மடங்கற் பேரினோன்
வெயிலுமிழ் முத்தலை வேலொன் றேந்தியே
குயவரி முகமுடைக் கொடியன் முன்புபோய்ப்
புயலென மிரிந்திடத் தெழித்துப் பொங்கினான். (௨௩)

அத்துணை வேலையி லவுணர் காவலன்
முத்தலை வேலினான் முந்து சிங்கன்மேற்
குத்தின னனையனுங் கொடியன் மார்பிடைக்
கைத்தல மிருந்ததன் கழுமு ளோச்சினான். (௨௪)

செறித்திடு சூலவேல் செருவின் மேலவர்
புறத்தினிற் போயின பொழிந்த செம்புன
னெறித்தரு பகலவ னின்ற குன்றினு
மெறித்தரு மிளங்கதி ரென்னச் சென்றதே. (௨௫)

ஆங்கவர் முறைமுறை யயில்கொள் சூலவேல்
வாங்கின ரிடந்தொறு மற்று மோச்சுவ
நீங்கிது போலகின் றிகலிப போர்செய்தார்
நீங்கருந் தளைபடு நெறிய ரென்னவே. (௨௬)

அற்றது காலையி லனையர் கைத்தலம்
பற்றிய முத்தலைப் படைக ளானவை
யிற்றன வொருதலை யிரண்டும் வீழ்தலு
மற்றொழில் புரிந்தனா நிகரில் வன்மையார். (௨௭)

புலிமுக னவ்வழிப் புரிந்து மற்றொழில்
வலியினை யிழந்தனன் மைய லெய்தினான்
றலமிசை வீழ்தலுந் தனது தாள்கொடே
யுலமுறழ் தோளினை யுதைத்து ருட்டினான். (௨௮)

ஒலிகழன் மேலவ னுதைத்த வன்மையா
லலமரு தீயவ னவி நீங்கினன்
மலர்மழை தூவினர் வானு ளோரரி
புலிதனை வெல்வது புதுமைப் பாலதோ. (உகூ)

சூர்கொளு முத்தலைச் சூல வேல்கொடு
நேர்கொளும் புலிமுக னிறந்த நீர்மைகண்
டார்கலி யாமெனப் பூத ரார்த்தனர்
வார்கழல் வீரனு மகிழ்ந்து நோக்கினன். (௩0)

கழிந்தன தானைகள் காவல் வீரனு
மழிந்தனன் மேற்றிசை யரணம வீட்டியே
செழுந்திரு நகரிடைச் சேறும் யாமென
மொழிந்தனர் பூதர்கண் முரணின் முந்தினர். (௩க)

முந்திய பூதர்கண் முனிந்து மேற்றிசை
யுந்திய புரிசையை யொல்லை சேர்வுறுத்
தந்தம தடிகளாற் றள்ளிப் பொள்ளெனச்
சிந்தினர் பறித்தனர் சிகரி தன்னையும். (௩உ)

பொலம்படு சிகரியைப் பறித்துப் பூதர்க
ளலம்படு மகேந்திர நகருள் வீசியே
யுலம்பின ரவுணர்க ளுலைந்து சிந்தினர்
கலம்பகிர் வுற்றிடக் கடலுற் றூர்கள்போல். (௩௩)

முகுந்தனை வென்றிடு முரண்கொள் பூதர்கள்
புகுந்தனர் மகேந்திர புரத்து ளுள்ளவிற்
றொகுந்தொகு மவுணரைத் தொலைத்துச் சென்றனர்
தகுந்தகு மிவர்க்கென வமரர் சாறறவே. (௩௪)

நீக்கமின் மாளிகை நிரைகள் யாவையு
மேக்குயர் பூதர்கள் விரைந்து தம்பதத
தாக்கினி லழித்தனர் தவத்தின் மேலவர்
வாக்கினி லகற்றிய வண்ண மேயென. (௩௫)

ஆர்த்திடு கரிபரி யவுண ராயினோர்
தேர்த்தொகை மாளிகை சிகர மாய்ந்திடக்
கூர்த்திடு நெடுங்கணை கோடி கோடிகு
ரேர்த்தனர் சென்றனர் துணைவ ராயினோர். (௩௬)

அன்னதோ ரமைதியி னுடன் மொய்ம்பினன்
வன்னியின் படையொடு மருத்தின் மாப்படை
பொன்னெடுஞ் சிலைதனிற் பூட்டி நீவிர்போ
யிந்நக ரழித்திரென் றிமைப்பி லேவினன். (௩எ)

ஏவிய வப்படை யிரண்டு மொன்றியே
மூவுல கிறுதியின் முடிக்குந் தம்முரு
மேவின நகரெலாம் விரவிச் சூழ்ந்தன
தீவிழி யவுணரு மிரிந்து சிந்தவே. (௩அ)

ஒட்டலர் நமையினி யுருத்துச் செய்வதென்
விட்டன னிங்குளன் வெருவ லேமெனு
நெட்டழல் கொளுவியே நிலவி மாநகர்
சுட்டன வுடுக்கிரை பொரியிற் றுள்ளவே. (௩௯)

எரிந்தன சில்லிடை யிறந்து பூழியாய்
விரிந்தன சில்லிடை வெடித்த சில்லிடை
கரிந்தன சில்லிடை கனலி சூழ்தலாற்
பொரிந்தன சில்லிடை புகைந்த சில்லிடை. (௪0)

எப்புவ னங்களு மிறைஞ்சு சூர்நகா
வெப்புறு கனல்கொள விளிந்து போயகா
லப்புறழ் செஞ்சடை யமலன் மூரலான்
முப்புர மானவை முடிந்த தேயென. (௪௧)

இன்னண மிந்நக ரெரிமி சைந்துழி
யன்னவை யொற்றர்க ளறிந்து வல்லைபோய்ப்
பொன்னிவர் கடிநகர் புகுந்து வாய்வெரீஇ
மன்னவர் மன்னனை வணங்கிக் கூறுவார். (௪௨)

காய்கதி ரண்ணலைக் கனன்ற நின்மகன்
மாயவெம் படையினுன் மலைந்து ளார்தமைத்
தூயதொர் புனற்கட றுன்ன வுய்த்தன
னீயது தெரிந்தனை நிகழ்ந்த கேட்டிமேல். (௪௩)

அங்கிவை நாரத னறையக் கந்தவேள்
செங்கையில் வேற்படை செலுத்த வன்னது
பொங்குறு தெண்புனற் புணரி சேறலு
மங்கிய தோடிய மாயை தன்படை. (௪௪)

வஞ்சனி தன்படை மாண்டு போந்துழித்
துஞ்சுத லொழிந்தனர் தொன்மை போலவே
நெஞ்சினி லுணர்வெலா நிகழ யாவரு
முஞ்சன ரெழுந்தன ரும்ப ரார்த்திட. (௪௫)

மாற்படு புந்திதீர் மறவர் தாமுறு
பாற்பட வருவது பார்த்துக் கைதொழு
தேற்பொடு பணிதலும் யாரும் வம்மெனு
வேற்படை முன்னுற விரைந்து மீண்டதே. (௪௬)

மேனிகழ் நெறிகொடு மீண்ட செய்யவே
லானது குமரவே ளங்கை போந்ததா
லூனமின் மாற்றல ரொல்லை வந்துநம்
மாநகர் மேற்றிசை வாயி னண்ணினுர். (௪௭)

மேற்றிசை வாய்தலில் வீரர் சேறலு
மேற்றனன் றுனையோ டிருந்த காவல
னூற்றினன் சிறிதம ரவன தாவியை
மாற்றின ரனிகமு மாண்டு போயதே. (௪௮)

குடதிசை யெயிலினைக் கொடிய பூதர்க
ளடிகொடு தள்ளின ராண்டு நின்றிடு
படியறு சிகரியைப் பறித்து மாநகர்
நடுவுற வீசினர் நமர்கண் மாயவே. (சகூ)

சோர்வறு பூதருந் துணைவ ராகிய
வீரருந் தலைவனும் வீர வாகுவுஞ்
சீரிய நகரிடைச் சென்று மேற்றிசை
யாரழல் கொளுவினின் றழித்தன் மேயினர். (ருo)

அண்டலர் வன்மையா லயுத யோசனை
யுண்டது கொழுங்கன லுண்ட வெல்லையுங்
கண்டன மிதனைநீ கருத்தி லையமாக்
கொண்டிடன் மன்னவென் றொற்றர் கூறினர். (ருக)

வேறு.

ஒற்ற ரிவ்வகை யுரைத்தலு மவுணர்கோ னுளத்திற்
செற்ற மிக்கன நெறித்தன வுரோமங்கள் சிலிர்த்த
நெற்றி சென்றன புருவங்கண் மணிமுடி நிமிர்ந்த
கற்றை வெங்கனல் கான்றன சுழன்றன கண்கள். (ருஉ)

கறங்கு சிந்தனைச் சூரனித் தன்மையிற் கனன்று
மறங்கொள் சாரணா தங்களை நோக்கிநீர் வான்போய்ப்
பிறங்கு மூழியி லுலகெலா மழித்திடப் பெயர்வா
னுறங்கு மாமுகி லியாவையுந் தருதிரென் றுரைத்தான். (ருங)

அயலி னிற்புறு தூதுவா வினவியே யைய
வியலு மிப்பணி யெனத்தொழு தும்பரி னேகிப்
புயலி னத்தினைக் கண்டுநம் பாணியாற் புடைத்துத்
துயிலெ ழுப்பியே விளித்தன னிறையெனச் சொற்றார். (ருச)

எழுவ கைப்படு முகில்களு மினையே யேகி
விழுமி தாகிய மகேந்திரத் திறைவன்முன் மேவித்
தொழுது நிற்றலு மித்திரு நகரினைத் தொலைக்கு
மழலி னைத்தணி வித்திடு வீரென வறைந்தான். (ருரு)

அறையு மெல்லையி னன்றென வெழிலிக ளகன்று
செறித ரும்புகை யுருக்கொடு விண்மிசைச் சென்றே
ரிறையி லெங்கணும் பரந்தன மாவலி யிடைபோய்க்
குறிய மாயவ னெடியபே ருருவுகொண் டதுபோல் (ருசு)

கருமு கிற்கண முறைமுறை மின்னின ககனத்
தொருமி டிக்குல மொராயிர கோடியை யுகுத்த
பருமு டிக்குல கிரியொடு மேருவும் பகிர்ந்த
திருமு டித்தலை துளக்கியே வெருவினன் சேடன். (ருஎ)

விண்டு லாமதிற் கடிநகர் தன்னைவெங் கனலி
யுண்டு லாவுறு தன்மையு மவுணர்தம் முலைவுங்
கண்டி யாமிது தொலைத்திடி னீண்டொரு கணத்தி
லண்டர் நாயகன் றுனைமன் னவனெமை யடுமால். (ருஅ)

நீட்ட மிக்கவித் திருநகர் புகுந்துநீ ருக்கி
வாட்டும் வெந்திற லெரியினை யகற்றிலம் வறிது
மீட்டு மேகுது மென்றிடி னவுணர்கோன் வெகுண்டு
மூட்டும் வன்றலை செய்வதென் னென்றன புயல்கள். (அகூ)

தொல்லை மாமுகி லிவ்வகை யுன்னியே சூர
னெல்லை யில்பக லிட்டிடு முவளகத் தெய்தி
யல்ல லூற்றிடு கின்றதி னுடலம புயத்தோன்
கொல்ல நம்முயிர் வீடினு மினிதெனக் குறித்த. (கூ0)

புந்தி மேலிவை துணிபென நாடியே புயல்கள்
சிந்து துள்ளியொன் றிபத்துணை யளவையிற் செறிய
முந்தி யோரிறை பொழிந்தன பொழிதலு முடிந்த
வந்த மாநகர் மேற்றிசை பொடித்திடு மழலே. (கூக)

ஆய தன்மையை நோக்கினா னாறிரு தடந்தோ
ளாய கன்படைக் கிறையவ னழலெழ நகைத்துத்
தீயி னாற்றலை யழித்தன மேகமோ செறுநர்
மாய மேகொலோ வென்றுதேர் வுற்றனன் மனத்தில். (கூஉ)

தேரு கின்றுழி நாரதன் விண்ணிடைச் சென்று
வீர கேளிவை யூழிநாண் முகிலினம் வெய்ய
சூர னாணையால வந்தன வடலவயந் தொல்லோன்
மூரி வெம்படை தொடுத்தியால் விரைந்தென மொழிந்தான். (கூங)

விண்ணில் வந்திவை நாரத னுரைத்தனன் மீட்டுந்
துண்ணெ னச்செல வினவியே வாகையந் துணைத்தோ
ளண்ண லூழிநா ளனற்படை தூண்டின னதுபோய்க்
கண்ண கன்முகி லினத்தினைச் சூழ்ந்தது கணத்தில். (கூச)

சூழல் போகிய வெழிலிகள் யாவையுஞ் சுற்றி
யூழி மாப்படை யவற்றிடைப் புனலெலா முண்டு
வாழி மொய்ம்பினை யடைந்தது மற்றது காலை
யாழி மால்கடற் றொகையென வீழ்ந்தன வவையே. (கூரு)

மறிந்த வெல்லையி லாறுமா முகமுடை வள்ளல்
சிறந்த வாறெழுத் துண்மையை விதிமுறை செப்ப
விறந்த தொன்மிடல் வருதலு முய்ந்துட னெழுந்து
புறந்த ருங்கட லதனிடை யோடின புயல்கள். (கூசா)

விழுந்து கொண்டல்க ளிரிதலும் பாரிட வெள்ள
மெழுந்து துள்ளியே யார்த்தன மலர்மழை யிமையோர்
பொழிந்து வானிடை யாடின ரிவைகண்டு பொருமு
லழுந்து கண்ணடி செல்லுமுன் போயின ரொற்றர். (கூஎ)

வேறு.

கொற்றவை யாடுறு கோநகர் நண்ணி
யற்றமின் மன்ன னடித்துணை மீது
தற்றுறு பூமுடி தாழ விறைஞ்சி
மற்றிது கேண்மிய வென்று வகுப்பார். (கூஅ)

ஊழி புகுந்துழி யுற்றிடு கொண்மூ
வேழும் விரைந்துகின் னேவலின் விண்போய்
வீழ்புனல் சிந்துபு மேற்றிசை தன்னிற்
சூழுறு மங்கி யினைத்தொலை வித்த. (சுசு)

மாற்றலர் தூதுவன் மற்றது காணூஉ
வீற்றுறு தீபபடை யேழ்முகின் மீது
மாற்றலின் விட்டிட வன்னவை வீழ்ந்து
மேற்றிசை வாய்தலில் வேலை புகுந்த. (எ0)

வன்னி செறிந்தன மாய்ந்தன வென்றே
யுன்னலை பூத ரொழிந்திடும் வீர
ரன்னத னெண்மையி னுடுறு கின்று
ரிந்நக ரென்றனு மேந்தன் முனிந்தான். (எக)

வேறு.

மயிர்ப்புறம் பொடித்திட வரைகொண் மார்பகம்
வியர்ப்புற வெரிதழல் விழிகள் சிந்திட
வுயிர்ப்பிடை புகைவர வுருமுக் கான்றெனச்
செயிர்த்திடு மன்னவ னிதனைச் செப்பினுர். (எஉ)

போரினை யிழைத்துவெம் பூதர் தங்களை
வீரர்க டொகையினை வீட்டிப் பின்னுறச்
சாருறு சிவன்மகன் றன்னை வென்றிவட்
சேருதுங் கொணாதிர்நந் தேரை யென்றனன். (எங)

ஆக திருவிருத்தம் - க,கசுசு.

---

வசனம்.

வீரவாகுதேவ ஆகாயத்தில் மறைந்துநின்று மாயையால் நம்மைவென்ஞேடிப்போன கள்ளனுகிய பானுகோபனைத் தலையறுத்தல்லது நமக்குச் சகலநன்மையுந்தரும் குமாரசற்குருவினுடைய சந்நிதானத்திற்செல்லேன்; என்வில்லுடன் நானும் தீயில்விழுந்து இறந்துபடுவேனென்று தம்சேனையுடன் மகேந்திரநகரின் மேற்புரவாயிலை யடைந்தார். அச்சப்தத்தைக்கேட்ட அசுரர் ஆகாயத்தின்மீது சென்றுபார்த்தனர்; அற்புதமடைந்தனர்; மனம்பதைத்தனர்; உடம்புவேர்த்தனர்; இது பகைவர்செய்கையென்று நினைத்தனர். இதைக்கண்ட புலிமுகனென்னுமரக்கன் எதிர்த்துப்போர்செய்துமாண்டான். பின்பு வீரவாகுதேவரும் அக்கினியாஸ்திரம், வாயுவாஸ்திரமென்னு மிரண்டையும் ஒருங்குசேர்த்து விடுத்து அமமகேந்திரநகரைத் தீக்கிரையாக்கினர். அதனையறிந்த சூரபதுமன் அத்தீயையவிக்கச் சத்தமேகங்களையுமேவினுன். மேகங்கள் மழைபெய்து தீயையவிப்பதைக்கண்ட வீரவாகுதேவர் வடவாமுகாக்கினியஸ்திரத்தைவிட்டு அம்மேகங்களைக் கிரகித்தனர். அம்மேகங்கள் விழுந்து கடலிற்சென்றன. இதனைக்கண்ட தூதுவர் விரைந்து சென்று சூரபதுமனுக்கறிவித்தனர். அதைக்கேட்ட சூரபதுமன் மிகக் கோபங்கொண்டு தான்சென்று போர்புரியுமாறு கருதினன்.

நகர்புகுபடலம் முற்றிற்று.

---

# இரணியன்யுத்தப்படலம்.

ஒற்றரை நோக்கியே யுணர்வின் மன்னவன்
சொற்றது கேட்டலுந் துளங்கி யேங்கினான்
மற்றவ னளித்திடு மதலை மாரிநாட்
புற்றுறை யரவெனப் புழுங்கு நெஞ்சினான். (௧)

ஆயிர மறையுணர்ந் தான்ற கேள்வியான்
றாயநல் லறத்தொடு முறையுந் தூக்கினோன்
மாயமும் வஞ்சமு மரபிற் கற்றனன்
றீயதோ ரவுணருட் டிறலும் பெற்றுளான். (௨)

தரணியின் கீழுறை யரக்கர் தங்கண்மேல்
விரணம தாகிமுன் வென்று மீண்டனன்
முரணுறு சென்னியோர் மூன்று கொண்டுளா
னிரணிய னென்பதோ ரியற்கைப் பேரினான். (௩)

இருந்தன னொருபுடை யெழுந்து தாதைதன்
றிருந்தடி யிணையினைச் சென்னி சேர்த்திடாப்
பொருந்துவ தொன்றுள புகல்வன் கேளெனாப்
பரிந்துநின் றினையன பகர்தன் மேயினான். (௪)

தேவரை நாஞ்சிறை செய்த தன்மையா
லாவது பாவமே யாக்கம் வேறிலை
யாவையு முணர்ந்திடு மிறைவ திண்ணமே
போவது நம்முயிர திருவும் பொன்றுமால். (௫)

சூருடைக் கானகந் தோற்றும் புன்மைபோய்ப்
பாரிடைப் புவனமோர் பலவும் போற்றியே
சீருடைத் தாகியித் திருவின் வைகுத
லாரிடைப பெற்றனை யதனைத் தேர்திநீ, (௬)

மாலைமுன் வென்றது மலர யன்றனை
யேலுறு முனிவரை யேவல் கொண்டது
மேலுய ரமரரை விழுமஞ் செய்தது
மாலமர் கடவுட னாற்ற லாலன்றோ. (௭)

அரிபொர வருவனே லமரர் கோனொடும்
பிரமன்வந் தேற்குமேற் பிறர்க ணோவரேற்
பொருவதும் வெல்வதும் புறத்தைக் கண்டுபின்
வருவது மெளிதரோ கடனு மற்றதே. (௮)

நோற்றிடு தவத்தினை நோக்கி யெண்ணிலாப்
பேற்றினை யுதவிய பிரானொ தீமையான்
மாற்றிட வுன்னுமேல வணங்கி மாறுறீஇப்
போற்றுத லன்றியே பொரவுஞ் செய்யுமோ. (௯)

ஒன்றொரு பயன்றனை யுதவி னோர்மனங்
கன்றிட வொருவினை கருதிச் செய்வரேற்
புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ. (௧௦)

கந்தனை யருள்புரி கடவு ளாணையைச்
சிந்தையின் மாறுகொள் சிறியர் யாவரு
மந்தம தடைந்தன ரன்றி வன்மையா
லுய்ந்தன ரிவரென வுரைக்க வல்லமோ. (கக)

கட்டுசெஞ் சடைமுடிக் கடவுள் காமனைப்
பட்டிட விழித்ததும் பண்டு மூவெயில்
சுட்டது மந்தகன் சுழலச் சூலமே
லிட்டதுங் கேட்டிலை போலு மெந்தைநீ. (கஉ)

காலனை யுதைத்ததுங் கங்கை யென்பவண்
மேல்வரு மகந்தையை வீட்டிக் கொண்டது
மாலய னமரர்க ளிரிய வந்ததோ
ராலம துண்டது மறிகி லாய்கொலோ. (கங)

அண்டரை யோரரி யலைபப வன்னது
கண்டநஞ் சடையவன் கருதி வீரனாற்
றண்டம திழைததுந் தககன் வேளவியை
விண்டிடு விததது்ம் வினவி லாய்கொலோ. (கச)

கடிமலர் மேலவ னிகழக் கண்ணுதல்
வடுகனை யேவிவள் ளூகிரி னன்னவன
முடிகளை விததது முகுந்தன் றன்னிடை
யடைதரு வித்தது மறிகி லாய்கொலோ. (கரு)

முந்தொரு மகபதி மொய்ம்பை யட்டது
மைந்திய லரக்கரை யழிதத செய்கையுந்
தந்தியை யுழுவையை யுரித்த தன்மையு
மெந்தைநிற் குணர்த்தின ரிலலை போலுமால். (கசு)

ஏமுற வுலகடு மேனக் கொம்பினை
யாமையி னோட்டினை யணிந்த தன்மையும்
பூமலர் மிசையவன் முதல புங்கவர்
மாமுடி யணிந்தது மதிக்கி லாய்கொலோ. (கஎ)

கதித்திடு முனிவரர் கடிய வேள்வியி
லுதித்திடு முயலக னெல்லெண் ணூர்தமெழப்
பதத்தினி லுதைத்தவன் பதைப தைததிட
மிதித்ததும் பிறவுநீ வினவிற் றிலலையோ. (கஅ)

ஒன்னலர் தன்மைபூண் டுற்று ளோர்தமைத்
தன்னிக ரில்லவன் றண்டஞ் செய்தன
வின்னமோர் கோடியுண் டிருந்தி யானிவட்
பன்னினு முலப்புறு செல்லும் பல்லுகம். (கசு)

வேறு.

ஆதலா லீசன் றன்னை யடைந்தவ ருய்வ ரல்லாப்
பேதையர் யாவ ரேனும் பிழைக்கல ரினைய வாய்மை
வேதநூல் பிறவுங் கூறும் விழுப்பொரு ளாகு நீயு
மேதமா நெறியி னீங்கி யிப்பொரு ளுணர்தி யெந்தாய். (உ0)

இன்னமொன் றுரைப்ப னீமு னிருந்தவ மியற்ற விந்த
மன்னிலை புரிந்த மேலோன் மாற்றவும் வல்ல னாமா
லன்னவன் குமரன் றன்னோ டமர்செய்வ தியல்போ வைய
தன்னினு முயர்ந்தா ரோடு பொருதிடிற் சயமுண் டாமோ. (௨௧)

பூதல வரைப்பும் வானுந் திசைகளும் புணரி வைப்பு
மேதகு வரையுந் தொன்னாள் வேறுபா டுற்ற நோக்கி
யீதென மாயங் கொல்லென் றெண்ணின மனைய வெல்லா
மாதிதன் குமரன் செய்த வாடலென் றுரைத்தா ரன்றே. (௨௨)

அண்ணலங் குமர னாட லறிகிலர் மருளுங் காலைக்
கண்ணிடை யன்னான் மற்றோர் வடிவினைக் காட்டி நிற்ப
விண்ணவர் பலருஞ் சூழ்ந்து வெகுண்டனர் வெம்போ ராற்றத்
துண்ணென வவரை யட்டாங் கெழுப்பினன் றாயோ னென்பர். (௨௩)

எண்டொகை பெற்ற வண்டம் யாவையும் புவன வைப்பு
மண்டுபல் வளனு மேனை மன்னுயிர்த் தொகுதி முற்று
மண்டரு மூவர் தாமு மனைத்துமா கியதன் மேனி
கண்டிட விமையோர்க் கெல்லாங் காட்டினன் கந்த னென்பர். (௨௪)

மறைமுத லவனை முன்னோர் வைகலின் வல்லி பூட்டிச்
சிறையிடை வைகுத் தானே திண்புவி யளித்து முக்க
ணிறையவன் வேண்ட விட்டா னென்பரா லினைய வாற்றா
லறுமுகன் செய்கை கேட்கி னற்புத மாகு மன்னோ. (௨௫)

அங்கண்மா ஞாலத் தன்னை மேலினி யகழு மோட்டுச்
செங்கண்மா லேன யாக்கை யெயிற்றையோர் சிறுகை பற்றி
மங்குல்வா னுலகிற் சுற்றி மருப்பொன்று வழுத்த வாங்கித்
தங்கணா யகற்குச் சாத்தச் சண்முக னளிகு மென்பர். (௨௬)

நேரலர் புரமூன் றட்ட நிருமலக் கடவுண் மைந்த
னாரினும் வலியோ னென்கை யறைந்திட வேண்டுங் கொல்லோ
பாரினை யளந்தோ னுய்த்த பரிதியை யணியாக் கொண்ட
தாரகன் றன்னை வெற்பைத் தடிந்தது சான்றே யன்றோ. (௨௭)

அறுமுகத் தொருவ னாரு மமலனை யரன்பால் வந்த
சிறுவனென் றிகழன் மன்னு செய்கையாற் பெரியன் கண்டா
யிறுதிசேர் கற்ப மொன்றி னீறிலா தவன்பாற் றோன்று
முறுவலி னழலு மன்னோ வுலகெலா முடிப்ப தம்மா. (௨௮)

வாசவன் குறையு மந்தண் மலரயன் குறையு மற்றைக்
கேசவன் குறையு நீக்கிக் கேடிலா வெறுக்கை நல்க
வாசிலோர் குழவி போலா யறுமுகங் கொண்டா னெண்டோ
ளீசனே யென்ப தல்லாற் பிறிதொன்றை யிசைக்க லாமோ. (௨௯)

கங்கைதன் புதல்வ னென்றுங் கார்த்திகை மைந்த னென்றுஞ்
செங்கண்மான் மருக னென்றுஞ் சேனையின் செல்வ னென்றும்
பங்கயன் முதலோர் தேறாப் பரஞ்சுடர் முதல்வன் றன்னை
யின்னவை பலவுஞ் சொல்வ தேழைமைப் பால தன்றோ. (௩௦)

புன்னிரு தடந்தோள் வள்ளல் பரிதியம் பகைவன் சூழ்வாற்
றன்னுறு படைஞா மாய்ந்த தன்மையை வினவித் தாழா
தன்னவர் மீளு மாற்று லளக்கர்மேல் விடுத்த வேலை
யிங்கர் தன்னிற் றாண்டின் யாரிவ ணிருத்தற் பாலார். (௩௧)

தாரகற் செற்ற தென்றாற் றடவரை பொடித்த தென்றால்
வார்புனற் கடலு ளுய்த்த வலியரை மீட்ட தென்றாற்
கூருடைத் தனிவேல் போற்றிக் குமரன்றாள் பணிவ தல்லாற்
போரினைப் புரிது மென்கை புலமையோ கடன தாமோ. (௩௨)

அரனிடைப் பிறந்த வண்ண லாணையால் வந்த தூதன்
றிருநக ரழித்தான் முன்னஞ் சேனையுந் தானு மேகி
யொருபகற் பானு கோப னுலைவுறப் பொருது வென்று
கருதரு மவுணர் தானைக் கடலையுங் கடந்து போனான். (௩௩)

இப்பகல் வந்து வீர னிருஞ்சம ரியற்ற வெம்முன
றப்பினன் மறைந்து மாயைப் படைதொடா வுணர்ச்சி தள்ளி
யப்புன லளக்க ருய்ப்ப வறுமுகன் வேலான் மீண்டுன்
மெய்ப்பதி யடுவா னென்றா லவனையார் வெல்லற் பாலார். (௩௪)

இறுதியு மெய்தா னென்னி னேற்றதொல் லுணர்ச்சி மாய்ந்து
மறியினு மெழுவ னென்னின் மாயையுந் தொலையு மென்னிற்
செறியும்விண் முதல்வர் தந்த படைக்குநேர் செலுத்து மென்னி
னறிஞர்க ளவன்மேற் பின்னு மமர்செயக் கருது வாரோ. (௩௫)

தூதென முன்னர் வந்தோ னொருவனுற் றொலையு மிந்த
மூதெயி னகர முற்று மவுணரு முடிவ ரென்னி
னாதியு முடிவு மில்லா வறுமுக னடிபோ ருன்னிப்
போதுமே லிமைப்பி னெல்லாப் புவனமும் பொன்றி டாவோ. (௩௬)

கரங்கள்பன் னிரண்டு கொண்ட கடவுள்வந் தெதிர்க்கி னந்தம்
வரங்களும் படைகள் யாவு மாயையுந் திறலுஞ் சீரு
முரங்களுந் திருவு மெல்லா மூழிநா யகன்முன் னுற்ற
புரங்களு மவுண ரும்போற் பூழிபட் டழிந்தி டாவோ. (௩௭)

ஒற்றனை விடுத்து நாடி யும்பரை விடாமை நோக்கி
மற்றிவட் போந்து நம்மேல் வைகலும் வந்தி டாது
சுற்றுதன் றானை யோடுந் தூதனைத் தூண்டி யங்க
ணிற்றையி னளவு நம்பாற் கருணைசெய் திருந்தா னையன். (௩௮)

கருணைகொண் டிருந்த வள்ளல் கருத்திடைத் தொலைவில் சீற்றம்
வருவதன் முன்ன மின்னே வானவர் சிறையை மாற்றி
யுரியநந் தமரும் யாமு மொல்லையி னேகி யையன்
றிருவடி பணிந்து தீயேஞ் செய்தன பொறுத்தி யென்று. (௩௯)

பணிந்துழி யமல மூர்த்தி பலவுநாம் புரிந்த தீமை
தணிந்தருள் செய்து தானுந் தணப்பிலா வரங்க ணல்கி
யணிந்ததன் றானை யோடு மகலுமா லுய்தும் யாமுந்
துணிந்திது புகன்றே னீதே துணிவென மதலை சொற்றான். (௪௦)

வேறு.

பரிந்துதனக் குறுதியிவை தெருட்டுதலு மதுகேளாப் பருவாய் கால
விரிந்தபுகைப் படலிகைபோய்த் திசையனைத்தும் விழுங்கியிட வெகுளி மூளாக்
கரிந்ததன துடல்வியர்ப்ப வுயிர்ப்புவர விதழ்துடிப்பக் கண்கள் சேப்ப
வெரிந்துமனம் பதைபதைப்ப வருமெனக்கை யெறிந்துநகைத் தினைய சொல்வான்.

தூவுடைய நெடுஞ்சுடர்வே லொருசிறுவ னாற்றலையுந் தூதாய் வந்த
மேவலன்றன் வலியினையும் யான்செய்யப் படுவனவும் விளம்பா நின்று
யேவருனக் கிதுபுகன்றார் புகன்றுரை யுணர்வேனே யின்னே யன்னோ
ராவிதனைக் களைந்திடுவே னுங்கவர்தொல் குலங்களெலா மடுவன் யானே.

ஞாலமெலா முன்படைத்த நான்முகனை நியலங்க நவின்று போவா
னுலமிசைத துயில்கூர்வா னென்னிளவ றனக்குடைந்தா னமரர் கோமான்
வேலைதனின் மீன்முழுது மென்பணியிற் றந்தனனால் வெள்ளி வெற்பி
னீலமிடற் றவன்மகனோ தொலைவறுமென் பேராற்ற னீக்கு கின்றான்.

அரியயனும் புரந்தரனும் விண்ணவர்க ளெல்லோரு மகிலந் தன்னின்
விரவுகணத் தவரெவரும் யாக்குமுத லாருமுக்கண் விமலன் றானும்
பொருசமரி னேற்றிடினு மெனக்கழிவ தனறிவென்று போவ துண்டோ
வொருசிறிதும் புந்தியிலா மைந்தாயான் பெற்றவர முணர்கி லாயோ. ()

வேறு.

ஆற்றல் விட்டனை குலமுறை பிழைத்தனை யரசி
னேற்ற நீங்கினை யொன்னலர்க் கஞ்சினை யிசைத்தாய்
மாற்ற மொன்றினி யுரைததியே லுனறனை வல்லே
கூற்று வன்புரத் தேற்றுவன் யானெனக் கொதித்தான். (சரு)

கொதித்த வேலையின் மைந்தனு நம்முரை கொடியோன்
மதித்தி லன்னிவன் மாய்வது சரதமே வான்மே
லுதித்த செங்கதிர்ப் பரிதியங் கடவுளரு மூலகில்
விதித்தி றந்தனை யாவரே வன்மையால் வென்றோர். (சசு)

இறுதி யாகிய பருவம்வந் தணுகிய திவனுக்
குறுதி யாம்பல கூறினென் பயனென வுன்னா
வறிவ னீசில வறிந்தனன் போலநீ றகறைந்தேன்
சிறுவ னாதலிற் பொறுத்தியென் றுற்றினன் சீறறம். (சஎ)

வெஞ்சி னந்தனை யாற்றியித தாதைதான் விரைவிற
றுஞ்சு முன்னர்யா னிறப்பது நன்றெனத் துணியா
வெஞ்ச லில்லவன் றாளிணை வணங்கிநீ யிசைதத
வஞ்சி னந்தனை முடிப்பன்யா னென்றனன் மைந்தன். (சஅ)

அனைய வேலையி லையநீ மாற்றலர்க் கஞ்சி
வினையம் யாவுமுன் னுரைத்தனை யவாகள்பால் வீரம்
புனைய வுன்னிய தென்கொலோ வென்றலும் பொன்னோ
னுனது மைந்தன்யா னஞ்சுவ னோவென வுரைத்தான். (சகூ)

தாதை யன்னதோர் வேலையின் மைந்தனைத் தழீஇக்கொண்
டீது நன்றுநன் றுன்பெருந் தானையோ டெழுந்து
போதி யென்றலும் விடைகொடு புறந்தனிற் போந்து
மாதி ரம்புகழ் கின்றதன் னுறையுளில் வந்தான். (இo)

திறங்கொண் மேருவை நிலாக்கதி ருண்டநீர் மையைப்போன்
மறங்கொள் சூர்மக ளுடைக மெய்யிலவச் சிரத்தின்
றிறங்கொள் சாலிகை கட்டினன் றாணிபின் செறித்தான்
பிறங்கு கோதையும் புட்டிலுங் கைவிரற் பெய்தான். (௫௧)

அடங்க லர்க்குவெங் கூற்றெனு மாடல்வில் லொன்றை
யிடங்கை பற்றினன் வலங்கையிற் பலபடை யெடுத்தான்
றடங்கொண் மோலியிற் றுமபையஞ் சிகழிகை தரித்தான்
மடங்க லாயிரம் பூண்டதேர் புக்கனன் வந்தான். (௫௨)

ஆற்றன் மிக்குறு துணைவரா யிரவரு மணிகம்
போற்று மன்னரா யிரவரும் போரணி புனைந்து
காற்றெ னபபடா கவனமான் றேரிடைக் கலந்து
நாற்றி றற்படை தன்னொடு புடைதனி னடப்ப. (௫௩)

நூறொ டேயெழு நூறுவெள் ளங்கொறி லுடைத்தேர்
சீறும யானையு மதத்தொகை யவுணாதஞ் சேனை
யாறு நூற்றிரு வெள்ளதத பரிகளு மனைததே
சூறை மாருத மாமென வவன்புடை சூழ்ந்த. (௫௪)

துடிக றங்கின கறங்கின பேரிதுந் துபிபபே
ரிடிக றங்கின வலமபுரி கறங்கின வெடுக்குங்
கொடிக றங்கின தானைகள் கறங்கின குனித்துக்
கடிக றங்கின கறங்கின கழுகொடு காகம். (௫௫)

வசலை மென்கொடி வாடிய தன்னநுண் மருங்கிற்
கிசலை யமபுரை சீறடிக் கிஞ்சுகச் செவ்வாய்ப்
பசலை சோமுலை மங்கையா விழிக்கணை பாய
வசலை மங்கைதன மெய்த்தனு வளைததிட வகன்றான். (௫௬)

அறந்த லைப்படு மிரணிய னனிகநால் வகையும்
புறந்த லைபபடத துயரமுந் தலைப்படப யோந்து
மறந்த லைப்படு பூதர்க ளாரபபொலி வழங்கும்
பறந்த லைக்களம புக்கன னமரர்மெய் பனிப்ப. (௫௭)

விண்ணு ளோர்களும் பிறருமவ் வியனகர் நோக்கித்
துண்ணெ னததுளங் குறுவதுங் கண்டனன் றொன்னூண்
மண்ணி னுள்ளபா ரிடமெலாம் வல்லைவந் தழிதது
நண்ணு கின்றதுங் கண்டன னன்றென நக்கான். (௫௮)

தனது மாநக ரழிந்தது கண்டனன் றணியா
முனிவு கொண்டனன் வெய்துயிரத தனனுடன் முற்று
நனிவி யர்ப்புள தாயினன் மருங்குற நணுகு
மணிக வேந்தரைத் துணைவரை நோக்கியீ தறைவான். (௫௯)

ஆயி ரம்வெள்ள மோரொரு திசையினி லாக்கி
நீயிர் யாவரு நால்வகைத் தாகியே நீங்கி
மாயி ருந்திறற் சாரத வீரரை வளைந்து
போயெ திர்ந்துவெஞ் சமர்புரி வீரெனப் புகன்றான். (௬௦)

அக்க ணர்தனிற் றுணைவரு மனிகமன் னவருந்
தக்க தேயென விரணியன் மொழிதலைத் தாங்கித்
திக்கி லாயிரம் வெள்ளமாச் சேனையைக் கொண்டு
தொக்க பாரிட வெள்ளமேற போயினர் சூழ. (ருக)

தானை மன்னருந் துணைவருந் திசைதொறுந் தழுவிப்
போன காலையி லாடகன் சுடபுலம் புகுதரு
சேனை முனைகொடு சென்றன னின்னதோர் செய்கை
மான வேறபடைக் காவலன் கண்டனன் மன்னோ. (சுஉ)

வீர மொய்ம்பின னதுகண்டு வெஞ்சமர்க் குறுவான்
சூரன் மைந்தரு ளொருவனோ சுற்றமா யினனோ
வாரி வன்கொலென் றையுறு காலையி னயலே
நார தனனெனு முனிவரன வந்திவை நவில்வான். (சுஙு)

இரணி யன்னெனு மைந்தனைச் சூரனிங் கேவ
வருண னென்னவந் தடைந்தன னம்படை யலைப்ப
வருண னிந்திரன் மந்திரி மறலிமா திரத்தின்
முரணு றும்படை நான்கையு முன்னுறச் செலுத்தி. (சுச)

மாயை வல்லவன் படைபல பரித்தவன் வஞ்ச
மாய சூழ்ச்சிகள் பற்பல தெரிந்தவ னவனை
நீய லாதுவெல் கின்றவ ரிலலையா னினக்கிங்
கேய தன்மையி னமாதனைப் புரிதியா லென்றான். (சுரு)

என்று கூறியே நாரதன் விண்மிசை யேக
நன்று நன்றென வன்னதை வினவியே நகைத்துத
துன்று பாரிடத் தலைவரைச் சுற்றமா யுளரை
வென்றி மொய்ம்புடை யாண்டகை நோக்கியே விளம்பும். (சுசு)

ஏற்ற தானையை நமையெலாஞ் சூழ்ந்திட வேவி
மாறற லன்மகன் குறுகுவா னீவிரும் வல்லே
நாற்றி சைக்கணுஞ் சாரதப் படையொடு நடந்து
வீறறு வீற்றுங்க றமாபுரி வீரென விளமபி. (சுஎ)

வீர ரெண்மரை யிலக்கரை வியன்கணத் தவரைப்
பாரி டங்களை நால்வகைப படுமவகை பகுத்தே
யீரி ரண்டுமா திரத்தினுஞ் சென்றிட வேவிச்
சூரன் மாமகன் வருதிசை படர்ந்தனன் றோன்றல். (சுஅ)

காலை யாங்கதி னவுணமாப் பெருப்படை கடிதி
னாலு மாதிரந் தன்னினு நரலைசூழ்ந் தென்ன
மேவல மோடிவந் தணுகலு முருந்துமெம பூத
சாலம் யாவையு மேற்றன சமரினைப புரிய. (சுகூ)

மற்ற வேலையி லவுணாகண் மழுப்படை நாஞ்சில்
கற்றை யஞசுடர்ப பரிதிவார் சிலையுமிழ் கணைகள்
கொறற மிக்குறு தோமரந் தண்டெழுக் குலிச
மொற்றை முத்தலை வேன்முதற் படையெலா முய்த்தார். (எ0)

தோடு சிந்திய தேனறு மராமரத் தொகையின்
காடு சிந்தினர் கதைகளுஞ் சிந்தினா கணிச்சி
நீடு சிந்துரப் பருவரை சிந்தினர் நேமி
மாடு சிந்தினர் சிந்தினர் பூதரில் வலியோர். (எக)

தலையி ழந்தனா கரங்களு மிழந்தனர் தாளி
னிலையி ழந்தனர் சாரத ரவுணரு நெடுங்கை
மலையி ழந்தனர் தேர்பரி யிழந்தனர் மறவெங்
கொலையி ழந்தனர் மடிந்தனர் குருதியுட் குளித்தார். (எஉ)

வசையில் பூதரு மவுணரு மிவ்வகை மயங்கித்
திசைதொ றுமபொரு கின்றழித் தனித்தனி சேர்ந்து
விசைய மொய்ம்பினன் விடுத்திடு வீரரும் விறல்சே
ரசுர வேந்தரும் வெஞ்சமர் விளைத்தன ரன்றே. (எங)

அனைய வெல்லையின் வீரவா குப்பெய ரறிஞன்
கனகன் முன்வருஞ் சேனைமாப் பெருங்கடல கண்டு
முனிவு கொண்டுதன் பாணியின் மூரிவெஞ் சிலையைக்
குனிவு செய்தன னுறததனிக் கடவுளுங் குனிபப. (எச)

மலைவ ளைந்திடு தன்மைபோல் வானுற நிமிர்ந்த
சிலைவ ளைததன ஞாணொலி யெடுத்தனன் றெழித்தா
னலைவ ளைத்திடு கடலெலா நடுங்கிய வனந்தன்
றலைவ ளைத்தன னெண்டிசை நாகமுஞ் சலித்த. (எரு)

காலை யங்கதின் வீரமொய்ம் புடையதோர் காளை
கோலொ ராயிரப் பத்தினைக குனிசிலைக கொளுவி
மேல தாகிய கானிடைப் பொழிதரு மேக
சால மாமெனப் பொழிந்தன னவுணர்தா னையின்மேல். (எசு)

பிடிகு றைந்தன களிற்றினங் குறைந்தன பிடிக்குங்
கொடிகு றைந்தன கொய்யுளைப புரவிதேர் குறைந்த
வடிகு றைந்தன தலைகளுங் குறைந்தன வமபொற
றொடிகு றைந்தன குறைந்தன வவுணர்தந் தோளகள். (எஎ)

எறித லுற்றிடு சூறையாற பல்கவ டிற்று
முறித லுறுவிழ பொதுமபாபோன் மொய்மபன்வா ளியினாற்
செறித லுற்றதம வடிவெலாஞ சிதைந்துவே றாகி
மறித லுற்றன நால்வகைப படைகளு மயங்கி. (எஅ)

வேறு.

ஆரியன் விடட வயிறகணை பாய
மூரி மதககரி முறறுயா யாககை
சோரி யுகுபபன தொல்பக லின்கண்
மாருத முய்த்திடு வன்னியை யொபப. (எகூ)

விறல்கெழு மொய்ம்பன் விடுத்திடு கின்ற
பிறைமுக வாளி பெருங்கரி யின்கை
யறைபுரி கின்றவ ராததொகை தன்னைக்
குறைமதி சென்று குறைபபன போலாம். (அ0)

வித்தக வீரன் விடுங்கணை வேழ
மத்தக முற்றிட மற்றவை போழ்ந்தே
முத்த முகுப்ப முகந்திடு கும்ப
முய்த்திடு நல்ல முதச்சுதை யொக்கும். (அக)

கரம்பட ருங்கவி கைத்தொகை தேரி
னுரம்படு கால்க ளுலம்புரை தோளான்
சரம்பட விற்ற தலைத்தலை யுற்ற
வரம்பின் மதிக்குறை மல்கிய வென்ன. (அஉ)

மேக்குயர் மொய்ம்பன் விடுங்கணை யாற்பாய்
மாக்க டுணிந்து மறிந்து கிடந்த
தேக்கிய தெண்கட லிற்றிரை முற்றுந்
தாக்கிய சூறை தனக்கழிந் தென்ன. (அஙு)

பெருந்தகை விட்ட பிறைத்தலை வாளி
திருந்தலர் தோலுறு செங்கை துணிபப
வருந்திட மாமதி வெளவு மராவைத
துரந்திடு கின்றதன் சுறறம தென்ன. (அச)

வேறு.

தக்க வன்மையாற் சிறந்துளோர் தமதுமாற் றலர்மேன்
மிக்க வெஞ்சினத தேகல்போ லனிகவெள் ளததிற்
றொக்கு வந்துவந் திழிந்தசெஞ் சோரியின் வெளள
மைக்க ருங்கடல் வெள்ளத்தி னூடுபோய் மடிதத. (அரு)

குரைத்தி டும்பெரு ஞாளியுங் குறுநரிக் குழாமு
மிருத்த மேயின கவந்தமு நிணனுண்டு செருக்கி
யுகுத்த குந்திறற் காளியுங் கூளியு மொருசார்க்
கிருத்தி மங்களுந் தலைததலை மயங்கின கெழுமி. (அசு)

சிலையின் வல்லவ னிவவகை கணைமழை சிதறி
நிலைய வெல்லையின் மலைந்திடுந் தானவர் நீதத
முலைப டுங்கனன் முன்னுறு மிழுதென வுடைந்து
குலைகு லைந்துதம் முயிருடன் யாக்கையுங் குறைந்த. (அஎ)

ஆளி யாயிரம் பூண்டதேர் மிசைவரு மவுணர்
மீளி யாயது கண்டன னெடுத்ததோர் வில்லின்
வாளி யாயிர மொருதொடை தூண்டியே மறவெங்
கூளி யாயிர கோடியோ ரிமைப்பினிற கொன்றான். (அஅ)

கொன்ற காலையிற் பூதவெம் படைகளுங் குலைந்து
சென்ற மாதிரந் தெரிந்தில தழலவிடந் தெறக்கண்
டன்று போகிய தேவரே யாயின ரதனை
நின்ற தானையந் தலைவரிற் கண்டன னீலன். (அகூ)

கண்ட நீலனு மிறுதிநா ளழலெனக் கனன்று
திண்டி றற்கெழு மன்னவன் மதலைமுன் சென்றே
யண்ட முந்தலை பனித்திட வுருமென வார்த்தா
னுண்டு போரினி யென்றன ரமரரா யுள்ளோர். (கூ0)

காலை யன்னதி லவுணர்த மிறைமகன் கனன்று
வேலை தொன்றினை யாகமூழ் குற்றிட விடுப்ப
நீலன் வன்மைபோய் நின்றிலன் சென்றன னெடிய
சாலு மொன்றுகொண் டவன்றடந் தேரினைத் தடிந்தான். (௯௧)

வைய மங்கழி வெய்துலு மவுணர்கோன் மற்றோர்
செய்ய தேரிடை வல்லையிற் றாவிநாண் செறித்துக்
கையில் வாங்கிய சராசனத் திடையுறக் கடைநாட்
பொய்யின் மாமுகி லாமெனச் சுடுசரம் பொழிந்தான். (௯௨)

பொழிந்த வார்கணை முழுவது மவனுரம் புகலு
மழிந்தி லன்சிறி தஞ்சிலன குலகிரி யன்றி
யொழிந்த குன்றெலாம் பறித்தனன் வீசியே யுடலத்
திழிந்த சோரிநீர் சொரிதர நின்றன னிமையான். (௯௩)

நிருப னாகிய வாடகன் றன்னெதிர் நீலன்
மரபி னாக்கிய வரையெலாஞ் சரங்களான் மாற்ற
விரைவி னேடுபோ யவன்றடந் தேரினை வெகுளா
வொருகை யாலெடுத் தெறிந்தன னமரரு முலைய. (௯௪)

ஆற்ற லந்தடந் தேரினை வீசிட வதுவுங்
காற்று லாய்கிமிர் விண்ணுறப் போயது காலை
மாறனோர் வையமேற பாய்ந்திட வுன்னினன் வரலு
மேற்றெ ழுந்தெதிர் புக்கன னீலனு மிகலோன். (௯௫)

நிற்றி நிற்றிநீ யென்றுகொண் டேகியே நீல
னெற்றி னானவ னுரத்திடை யவுணனு மிவனைப்
பற்றி வீசினன் பூதனு மீண்டுதன் பதத்தாற்
செற்ற மோடுதைத் துருட்டிவா னுருமெனத் தெழித்தான். (௯௬)

நெறிந்த பங்கிசேர் நீலனங் குதைத்திட நிருதர்
முறிந்து நீங்கிய களத்திடை வழுக்கிவீழ் முகில்போன்
மறிந்து வீழ்தரு மவுணனமேற பாய்ந்தனன் மசவா
னெறிந்த வச்சிரப் பெரும்படை யிதுகொலென் றிசைப்ப. (௯௭)

வீழ்ந்த காலையத் தன்பெருந் தாள்களான் மிதிப்பக்
கீழ்ந்து போயது மாநில மவன் முடி கிழிந்த
போழ்ந்த தாகமும வாய்வழி குருதிநீர் பொழிய
வாழ்ந்து வெந்துய ருழந்தனன் செய்வதொன் றறியான். (௯௮)

திறல ழிந்தனன் சீற்றமு மழிந்தனன் செங்கோன்
மறலி கொள்வதற் கணியனே யாதலு மனத்தி
லிறுதி யெய்திய தீங்கினிச் செய்வதெ னெமக்கோ
ருறுதி யாதென வுன்னினன் பின்னரொன் றுணர்ந்தான். (௯௯)

மாய மொன்றினைப் புரிகுதும் யாமென வல்லே
யாய மந்திரம் புகன்றனன் பூசனை யனைத்துந்
தூய சிந்தையா னிரப்பினன் வேண்டிய துணியா
வாய தெய்வதம் முன்னினன் னன்னதோ ரெல்லை. (௧௦௦)

வேறு.

தன்போலொரு வடிவன்னதொர சமரின்றலை யனுகா
மின்போலொளிர் தருபலபடை விரவும்படி பரியா
வென [illegible] ரநகன்றவ ரெனவீரம துரையா
வன் [illegible] வலிமொண்டிமுன் வரலும.  (க0க)

கண் [illegible] வருகின்றது கடித்தெயெதிர் நடவா
வெண் [illegible] டரின்றலை யிட்டேகிய தொருபொற்
றண்டானது கொண்டேயதன் றலையோதின னிமையோர்
விண்டானிவற் கழிந்தானென நீலன்றனை வியந்தார.  (க0௨)

வியக்கும்பொழு தினிலன்னவன் விடுமாயமும் விசையா
லியக்குற்றவ ரெனவிண்மிசை யுயாகினமது காணுத
தியக்குறறிடு நீலனனது தொடாந்தான்கரந் திடலு
மயக்குற்றன னெடிதுன்னினன் மண்மீதுறக் கண்டான்.  (க0௩)

காணுவல மருவானிது கரவாமென வுணரா
ஞாணுன்மிகு சீறறதெொடு நணுகுறறன னதுவுந்
தூணுர்தடந் தோளகொண்டமா தொடங்குறறது தொடங்கிச்
சேணுகிய தணிததாயது திசையெங்கணுந் திரியும்.  (க0௪)

பாரிற்புகும விண்ணிறபுகும் பரிதிச்சுட ரெனவே
தேரிறபுகு மாவிறபுகுஞ் சிலையிற்புகுந் திரைமுந்
நீரிற்புகும வடவாமுக நெருபபிற்புகு நீலக்
காரிற்புகு நிரயததிடை கடிதிற்புகு மெழுமே.  (க0௫)

முன்னேவரு மிடத்தேவரு முதுவெம்பிடர் தழுவிப்
பின்னேவரும் வலதத்தேவரு மபெரும்போரினைப புரியும்
பொன்னேகரு தியமங்கையா பு [illegible]
பொ [illegible] பத னியல்யானையு [illegible] புகல வாமரி.  (க0௬)

மாலுந்திற மிதுபெற்றியின் வருகின்றதோா மாயக்
கோலந்தனி தொடராவலி குறைந்தான்றிரிந் துலைந்தான்
காலுந்தளா கினனுனவன் கலவிததிறம புகழா
மேலென்செய லெனவுன்னி வெகுண்டானடல் வீரன்.  (க0௭)

வென்றுரபுகழ் தருவீரனும் வினையந்தனை யுன்னி
நின்றுனது காலந்தனி னிருதனறன துருவ
மொன்றுயது பலவாயுல கெல்லாமொருங குறலா
னன்றும்இது மாயம்மென நாணதெொடு நவினுன்.  (க0௮)

திண்டோளுடை நீலன்னிது தெளிகின்றுழி யவனுற்
புண்டோய்தரு குருதிபபுனல புடைபோதரப புவிமேல்
விண்டோனென மறிகின்றவன் மிடலபெறறெழுந் திதனைக்
கண்டோர்தடந் தேரேறினன் மாயததொடு கலந்தான்.  (க0௯)

கலந்தானொரு சிலைவாங்கினன் கனலவாளிக டெரியா
வுலந்தானுறழ தருமெய்யிடை யுய்த்தானுவன் பொங்கா
மலாந்தாமலன வுரமபுண்பட வடிவாளிகள் படலின்
றலந்தான்மன மெலிந்தான்பொரு தனுததான்மிகச் சலித்தான்.  (கக0)

வேறு

ஈண்டு சீர்த்தி யிரணியன் மாயமு
மாணடு நீல னயர்வது நோக்குறுப்
பூண்ட வாகைப் புயத்தவன் சீறியே
தூண்டு தேரொடு துண்ணென நண்ணினான். (௧௧௧)

தாங்கு கின்றதன் றூழ்சிலை தோள்கொடே
வாங்கி நாணியின் வலலிசை கோடலும்
விங்கு மொய்மபின் விறல்கெழு தானவ
ரேஙகி யாரு மிரிந்தனர் போயினார். (௧௧௨)

சோதி நெறறிச் சுடர்த்தனி வேலினான்
பாத மெய்ததுணை பன்முறை போற்றிடா
வாத ரததி னருச்சனை யாறறியே
சேத னபபடை செங்கையின் வாங்கினான். (௧௧௩)

தூய போதகத் தொல்படை யன்னவன்
மாயை மேல்விட மறறதன் பட்டிமை
யாயி ரங்கதி ராதவ னோபுறப்
போய கங்கு னிசியெனப் போந்ததே. (௧௧௪)

போந்த காலைப் புலம்புறு தானவ
ரேந்த லேதமி யாக வெரியெனக்
காந்தி நின்றவன் காமர்வில் வாங்கியே
யாய்ந்து தீங்கணை யாயிரந் துண்டினான். (௧௧௫)

தூண்டு கின்ற சுடுகணை வீரமார்த்
தாண்டன் முன்னவன் றன்வரை மார்புறூ
மீணடு நுண்டுக ளாதலு மேலது
காண்ட லுஞ்சுரர் கையெடுத் தார்த்தனர். (௧௧௬)

பொறுதத வாகைப புயன்வலி வெவ்விட
கிறதத தூறு நெடுங்கணை தூண்டியே
யெறிதத சீர்த்தி யிரணியன் கேதன
மறுதது வில்லொ டரணமுஞ் சிந்தினான். (௧௧௭)

பொருவிற் சாலிகை போதலுஞ் சூர்தருந்
திருவிற கோமகன் செங்கரந் தன்னில்வே
றொருவிற கொளள வொராயிரம் வெங்கணை
விரைவிற் றாண்டின னால்விறன் மொய்ம்பினான். (௧௧௮)

விடுத்த வாளிகள் வெவ்விற லாடக
னெடுத்த வாளி யிருஞ்சிலை பின்னுறத்
தொடுதத தூணிமுன றாண்டிய பாகுதேர்
படுத்து மார்பகம் பஃறுளை செய்தவே. (௧௧௯)

செய்ய வேறொரு தேர்மிசைச் சூருள்
வெய்யன் வாவலும் வீருள வீரனை
மையுன் வாளிகொண் டன்னது மட்டிட
லைமய லெய்தி யிழுந்தனன் வன்மையே. (௧௨௦)

வேறு பின்னரு மேதகு சூர்மக
னேறு தேர்க ளியாவையுஞ் செல்லுமுன்
னூறு நூறு கணைகளி னூறியே
யீறு செய்தலு மேங்கியி தெண்ணினான். (சஉக)

இந்த வேலை யிடர்ப்படு மென்றனக்
கந்த மெய்திய தன்னவ னுயிர்
சிந்து மென்னொடு தீரவது வோவினித்
தந்தை யாரு மிறத்தல் சரதமே. (கஉஉ)

இற்ற காலை யிருங்கடன் செய்திட
மற்றி யாவரு மில்லையிம் மாநகர்ச்
சுற்ற மானவ ருந்தொலைந் தாரினி
யுற்று ளோரு மிறபபரி துண்மையே. (கஉந)

உறுதி யாவ துரைக்கவு மாங்கது
வறிது மோர்கிலா மன்னவன் மாயுமு
னிறுவ தேகட னிற்றில னேயெளி
னறுவ தோவென் னகத்திட ராயினும். (கஉச)

ஒய்யெ னச்சுர ரோடவென் கண்டவென்
னையன் மற்றினித் துஞ்சி னருங்கடன்
செய்வ தறகொரு சேயுமின் றுலெனின்
வைய கத்தில வசைய துண்டாகுமே. (கஉரு)

மைந்த னைப்பெறு கின்றது மாசிலாப்
புந்தி யன்பொடு போற்றி வளர்ப்பதுந்
தந்தை மாண்டுழித் தம்முறைக் கேற்றிட
வந்த மில்கட னாற்றுதற் கேயன்றோ. (கஉசு)

அசைவி லாத வமரிடைத் துஞ்சிடி
னிசைய தாகு மிறந்தில னேயெனிற்
றசையு லாமுட றுங்கியுந் தானெனு
வசைய தாகுமென் வன்மையுந் துஞ்சுமே. (கஉஎ)

என்னை யெய்து மிசையது வேயெனின்
மன்னை யெய்தும் வசையுரை யாங்கதன்
றென்னை யெய்தினு மெய்துக தந்தைபா
லன்ன தாத லழகிதன் றுலெனு. (கஉஅ)

ஆவ துன்னியென் னுருயிர் போற்றியே
போவ தேகட னெனறு பொருககெனத்
தாவி வான்முகி றன்னிடைப ம்பாயொரு
தேவு மந்திரஞ் சிந்தையி லுனனினான். (கஉகூ)

உன்ன லோடு முருவரு வாதலுந்
தன்னை யாருந் தெரிவருந் தன்மையாற்
பொன்னு லாய புணரியுட் போயினான்
மின்னு தண்சுடர் மீனுரு வாகியே. (கஙo)

ஆண்டு போன வவுணனம் மாநகர்
மீண்டு செல்கிலன் மேல்விளை கின்றன
காண்டு நந்தங் கடன்முடிக் குந்துணை
யீண்டு வைகுது மென்றவண் மேவினன். (கரு௧)

ஆய காலையி லாடகன் செய்திடு
மாயை யாமென கங்குலு மாய்ந்திடத்
தூய போதகத் தொல்படை தோன்றல்போற்
சேயி ருங்கதிர்ச் செல்வன்வந் தெய்தினன். (கரு௨)

ஆங்கு வெய்யவ னப்படை போலெழ
நீங்கு மாயையி னீணில வற்றிட
வேங்கி யோடு மிரணிய னுமெனை
வோங்கு திங்க ளுததியிற போயினன். (கரு௩)

நீங்கு சூர்மக னீர்மையை நோக்கியே
வீங்கு தோளுடை வீரனம மாற்றல
னோங்கு மாழியு ளோடினன் ரேற்றென
வேங்கு சங்க மெடுத்திசைத தானரோ. (கரு௪)

சங்கம் வாயிடைக் கொண்டுதன் சீர்த்தியை
யெங்கு ளோருந் தெளிய விசைததுழிப்
பொங்கு பூதர் புகழ்ந்தனர் வாழியென்
றங்கண் வானவ ராசிசெய் தார்க்கவே. (கரு௫)

நின்ற வீரர்க ணோரலர் சேனையைப்
பொன்று வித்தனர் போரிடைத தூதுவர்
சென்று காலொடு சிந்தையும் பிற்பட
மன்றன் மாநகர் மந்திர மெய்தினர். (கரு௬)

மந்தி ரத்துறை மன்னை வணங்கிநீ
தந்த வக்கும ரன்சமாக் காறறல
னுய்ந்தி டக்கொ லுவரையொர் சூழ்சசியாற்
சிந்தி டக்கொ லகனறனன சிந்துவில. (கரு௭)

என்று தூத ரிசைததலு மன்னவன்
குன்றி வெள்கிக் கொடுஞ்சினங் கொண்டிடா
வொன்று மாற்ற முரைததில னவ்வழிச்
சென்ற னன்கனன் மாமுகச் செமமலே. (கரு௮)

ஆ திருவிருத்தம - ௧,௩௦௪.

---

வசனம்.

அப்போது அருகே நின்ற மனந்தூயனும் ஆயிரம் வேதமுணர்ந்தானும் மெய்ந்நெறியிற் செல்பவனுமாகிய இரணியனென்னும் அச்சூரன்மகன் தன்தாதையைப்பணிந்து நான்சொல்வதைக் கேட்டருளுமென் றிதனைச்சொல்லததொடங்கினன். தேவர்கள் பலரையும் நாம் சிறையிலிட்டது பெரும்பாவமே யல்லது அறத்தாறென்று சொல்லப்படுமோ, அவர்களையெல்லாம் நாம் வெற்றிக்கொண்

டோமென்பது சோம சூரியாக்கினியென்னும் முச்சுடரையுங் கண்களாகக்கொண்ட நமது பரம்பொருளாகிய சிவபெருமானருளிய வரத்தின் மேம்பாட்டினுலன்றி வேறொன்றாலன்று. நம்மிறைவனுடன் மாறுகொண்டாரெல்லாம் இறந்து பட்டனரே யல்லது இருந்தாரென்பாரைக் காணகில்லேன். இப்போதோ நமக்கவ்வரங்களெல்லாம் பாலித்த பரமசிவனுடைய திருக்குமாரனே நம்மோடு போர் செய்ய வந்திருக்கின்றனன். ஆகையால் நாம அவனோடு பகைத்துப் போர் செய்வது தகுதியன்று. நாம் செய்தபிழையை நாடியே தண்டிக்க நமது குகப்பெருமா னெழுந்தருளினுன். ஆகையால் தேவர்களைச் சிறையினின்று நீக்கி அவனெதிரே சென்று நாம் பண்ணிய அபராதமனைத்தும் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டினுல் அப்பெருமான் கயிலையைநாடிப் போய்விடுவானென்றான். இவ்வாறு தன் மகனுகிய இரணியன் சொல்லியதைக்கேட்ட சூரபதுமன் மிக்க கோபத்துடன் சில சொற்களைச்சொல்ல அதைக்கேட்ட இரணியன் அடியேன் அபராதத்தை மனத்திற் கொள்ளவேண்டாம். இப்போதே நம்முடன் போாசெய்ய வந்திருக்கும் பகைவரெல்லா மோடிப்போகும் வணணம போர்செய்கிறேனென்று சொல்லி நின்றான். அதைக்கேட்ட சூரபதுமன் மனமிக மகிழ்ந்தான் இரணியனோ தாதை கட்டளைபெற்றுச் சென்று தன் மாளிகையை யடைந்து வில் முதலிய படைகளையேந்தி நாலாயிரம் வெள்ளம் அவுணப்படையை யழைத்துக்கொண்டு போர்க்களங் குறுகினுன். முத்தலையுள்ள இரணியன் மறமே குடிகொண்ட மனமுடைய தன் சேனையை நாற்றிசையிலும் பார்தது பலவிதமாக வளைந்துகொள்ளக் கட்டளையிட்டுத் தான் மேற்றிசையை நாடிநடந்தான். அதைககண்ட வீரவாகு தேவரும் தம்முடைய சேனையையும் அவ்வாறே அமைத்துத் தாமும் இரணியனை நோக்கியெதிர்ந்தனர். இவ்வாறெதிர்ந்தபோது பூதப்படையும் அவுணப்படையும் ஒன்றோடொன்று கைக்கலந்தன. சண்முகங்கொணட தானுவுக்கிளைய வீரவாகு தேவர் இரணியனுடன் வந்த அவுணரையெல்லாம பாணமழை பொழிந்து கொல்லுகையில் சூரபதுமன் மகனுகிய இரணியனோ ஆயிரம பாணங்களையேவி அப்பூதப்படையை இரியல்போகச்செய்தான்.

அதுகண்டு அவுணவீரரில் நீலனென்னும்பூதவீரன் இரணியனோடெதிர்த்து அவனேறியிருந்ததேருடன் அவனை ஆகாயததில்விட்டெறிந்தான். அவன் தேருடன் மீண்டபொழுது அவனைத் தன் காலாலுருளுமபடி நிலத்தில் வீழ்த்தி அவன்மேற் பாய்ந்தான். அதைக்கண்ட இரணியனோ தன் மாயையினுல் வேறோருருவங்கொண்டு காட்ட அதைத் தொடர்ந்து சென்றான். இதறகுள் இரணியன் மெலிவுதீர்ந்து வேறொருதேரிலேறி நீலன்மேற் பாணமழை பொழிந்தான். அதனுல் நீலன் மனவாட்டமடைந்திருந்தான். அதைக்கணட வீரவாகு தேவாஞானுஸ்திரம் விட்டு அவன் மாயையைக் கெடுத்துவிட அவனும வீரவாகுதேவர் மாாபின்மேல் ஆயிரம் பாணங்களை யேவ, அவைகளே மாாபிற் பட்டவுடன் பொடிப்பொடியாயின. வீரவாகு தேவரோ ஆயிரம் பாணங்களை இரணியன்மே லேவி அவன் முதுகிற் கட்டியிருந்த அம்பறாத்தூணியையும் பாணங்களையும் தேருடனழித்துவிட்டு அவன் சேமத்தேர்களையெல்லாம் பொடிப்பொடி யாக்கினர். இரணியனோ இச்செயல்களையெல்லாங்கண்டு நாமோ இறந்து படுவது திண்ணம் நமது பிதாவும் இறந்துபடுவர். பானுகோபன் முதலானோரும் இறந்துபடுவது திண்ணம், நாம் எல்லாரும் இறந்து படுவது திண்ணமாதலால் நமக்கு உத்தரகிரியை செய்வதற்கே யாளில்லாமற்போய் விடுமல்லவா, ஆதலால் நாம் உத்தரகிரியை செய்வதற்காகவாவது மறைந்திருக்க வேண்டுமெனத் துணிந்து அஙகே யருவமாய் மறைந்து மீனுருக்கொண்டு கடலி

லொளித்துக் கொண்டனன். இரவுகழியவே சூரியனும் கீழ்த்திசையி லுதயமா னான். இவன் இவ்வாறுருக்கரந்த செய்தியைத் தூதர்கள் சூரபதுமனிடஞ்சென்று தெரிவித்தார்கள். அதைக்கேட்டிருந்த சூரபதுமன் கோபங்கொண்டுவாளா விருந்த னன். அங்கேயிருந்த வேறொரு குமாரனாகிய அக்கினி முகனென்பவன் நானே சென்று பூதப்படையைக் குமரனோடுவோட்டி வருகிறேன், கட்டளையிடவேண்டு மென்று கேட்க, அதைக்கேட்ட சூரபதுமன் மனமகிழ்ந்து நீயேசென்று வெற்றி கொண்டு மீண்டுவாவென்று சொல்லித் தன் மாளிகையை நோக்கி யடைந்தனன்.

இரணியன்யுத்தப்படலம் முற்றிற்று.

---

# அக்கினிமுகாசுரன்வதைப்படலம்.

எட்டாசை யுளோர்களை யெண்கரியைக்
கட்டாவுறு சில்கதி ரைப்பரியை
முட்டாவரு தேரினை முன்கொணரா
வட்டாடிய தோர்வலி பெற்றுடையான். (க)

கருவாயுறு கின்றதொர் காலைமுதற்
றிருமாதுடன் முற்றழல் சிந்திடலும்
பெருமாயவள் வந்து பிறந்திடவோ
னெரிமாமுக னென்ற வியற்பெயரான். (உ)

பன்னாக மிசைத்துயில் பண்ணவனார்
பொன்னாசிறை கொண்டதொர் புள்ளினுட
னந்நான்முக னாதியு மாடுறுவான்
முன்னாட்கொடு வந்ததொர் மொய்ம்புடையான். (ங)

முன்னுற்றவன் வானெழு மொய்கதிரோன்
றன்னைச்சிறை யிட்டது தான்வினவா
மன்னுற்றிடு சோமனை வைகல்பல
வின்னற்பட வேசிறை யிட்டுடையான். (ச)

தெய்வப்படை தாங்கிய செங்கையினா
னெவர்க்குள தாகிய வாற்றலுளான்
மைவைத்திடு மஞ்சன மாயம்வலா
னெவ்வெப்படை தன்னையு மீறுசெய்வான், (ரு)

அந்தார்முடி கொண்டிடு மையன்முனம்
வந்தானடி தன்னை வணங்கியிவ
ணெந்தாய்மெலி வுற்றனை யென்னெனலுஞ்
சிந்தாகுல மோடிது செப்பிடுவான். (சு)

உண்ணாடிய மாயைகொ டொற்றுமையால்
விண்ணாடர் பொருட்டிவண் மேவியுளான்
கண்ணாரெயில் வேலி கடந்துநமை
யெண்ணாது புரத்திடை யேகினனால். (எ)

ஏருந்தொழில் வெய்யவ னிங்கரம்
வேரும்படி செந்தழல் வீசிடலு
மாகொண்டல்க ளேவினன் மற்றவைமா
ருரும்புனல் சிந்தி யவித்தனவே. (அ)

மடல்கொண்டிடு தாரினன் மற்றதுகண்
டுடலகொண்ட சினத்தொ டொருங்குலகங்
கடைகொண்டிடு கினற கனற்படைதொட்
டடல்கொண்ட முகிற்றிற லட்டனனே. (கூ)

அட்டானது கேட்டன மாடகனை
விட்டாமணி கத்தொடு வெஞ்சமாசெய்
தொட்டாவலி நோக்கி யுடைந்தவனு
நெட்டாழி புகுந்து கிமிர்ந்தனனால். (க0)

நங்கொற்ற மிகுத்திடு நாற்படையு
மங்குற்றிடு கின்றன மாநகரை
யுங்குறறிடு தூத னுறுததனனு
விங்குற்ற நிகழ்ச்சியி தென்றனனே. (கக)

செங்கோன்முறை கோடி யதியவுண
னங்கோதிய கேட்டலு மாரழல்கால்
வெங்கோர முகததது வியன்புதல்வன
றங்கோமுக மாவிது சாற்றிடுவான. (கஉ)

மன்னர்க்கிறை யாகிய மன்னவநீ
யுன்னுற்றுள மீதி லுருததிடவே
முன்னுற்றிடு தூதுவன் மொய்ம்பினனோ
வென்னுக்கவ னுற்றலை யெணணுதிநீ. (கங)

மிடல்கொண்டிடு தூதனை மிக்கவரைப்
புடைகொண்டமா செய்திடு பூதர்தமை
யடல்கொண்டிவ ணின்னை யடைந்திடுவன்
விடைதந்தரு ளென்று விளம்பினனே. (கச)

நன்றேயிது செப்பினை நண்ணலனை
வென்றேவரு கென்று விடுததிடலு
நின்றேதொழு தவ்விடை நீங்கினனற்
குன்றேநிகர் தோளவலி கொண்டுடையோன். (கரு)

கார்கோலமும் வெய்ய கருங்கடலி
னீர்க்கோலமு மன்னவ னீடியதன்
சீர்க்கோநக ரததிடை சென்றனனற்
போர்க்கோல மமைந்து புறம்படர்வான். (கசு)

மைக்கொண்டல் படர்ந்திடு மால்வரைபோன்
மொய்க்கொண்டிடு சாலிகை முன்னுறவே
மெய்க்கொண்டணி புட்டில் விரற்பரியாக்
கைக்கொண்டனன் விண்ணவர் கைப்படையே. (கஎ)

தன்றுதையினைத் தருதா யுதவும்
பொன்றுழ்சிலை கைக்கொடு பொள்ளெனவே
யொன்றுகிய தேரிடை யொல்லைபுகாச்
சென்றான்விழியிற் கனல்சிந் திடுவான். (கஎ)

அறமற்றிடு தீய னகன்றுநகர்ப்
புறமுற்றன னங்கது போழ்துதனிற்
றிறமற்றது தூதுவர் செப்புதன்முன்
மறமுற்றிடு தானைகள் வந்தனவே. (கக)

ஓராயிர வெள்ள மொருத்தலினந்
தேரானவு மதமொகை திண்டிறன்மா
வீராயிர வெள்ள மியாவாகளு
மாராய்வரி தாலவு ணக்கடலே. (உ0)

வேறு.

ஆன காலையி லங்கிமு காசுரன்
மான மேற்கொண்டு மாற்றலர் யாரையும்
யானோர் கன்னன்மு னீறுசெய் வேனெனாச்
சேனை தன்னொடுஞ் சென்றிடன் மேயினான். (உக)

நல்கு மாறின்றி நாள்பல நீங்கியே
மல்கு காதலர் வந்து கலந்துழிப்
பில்கு காமத்துப் பெய்வளை பேதைய
ரல்கு லென்ன வசைந்தகல் வுற்றதே. (உஉ)

அருத்தி மெல்லிய ராதரங் கொண்டிழல்
விருத்தா கூட்டம் வெறுத்திடு மாறுபோ
லெருத்த மீதி லிடிப்பவா தம்முரைக்
கருத்தி னிறகில காய்சின வேழமே. (உங)

மண்ணிற் பாய்வன மாதிரஞ் சூழ்வன
விண்ணிற் றாவுவ வீதியிற் செலவன
வெண்ணிற் பல்பொரு ளிச்சைகொள் வேசியர்
கண்ணிற கொபபன கந்துக ராசியே. (உச)

வஞ்ச நீடி யருளற்று மாயமே
யெஞ்ச லின்றி யிருளெழு வண்ணமாய்
விஞ்சு தடமலகுல் விற்றுணு மங்கையா
நெஞ்ச மொத்தனர் நீளபடை வீரரே. (உரு)

தாாதத டம்புயத் தானவா பலவிய
மார்தத வோதை யகிலமும புககதாற்
றார்த்த மங்கையா சோரவினிற செய்பழி
வார்த்தை யெங்கணும் வலலையிற் சேறல்போல். (உசு)

சோதி மெய்யெழிற் றாயன மாற்றியே
மீது செல்லரும் வெவவிரு ளுய்த்தலா
லேதின் மாதரை யெய்திடும் புன்மையோ
காாமல பொன்ற கடிதெழும் பூழியே. (உஎ)

பீட்டின் மிக்க பெரும்பணை தாங்கிய
மோட்டி ளொட்டக முந்திய கந்தர
நீட்டி வாங்குவ நேர்ந்தவர் முன்றலை
காட்டி வாங்குங் கணிகையா போலவே. (உசு)

சீறு மால்கரி தேர்மிசைப் பூண்டுவிண்
ணுற ளாவிநின் ருடிவ கேதன
மூறு காத லெருவன்கண் வைகினுள்
வேறு ளாரையும் வெஃகி விளித்தல்போல். (உகூ)

வீழு மும்மத வேழங்கண் மத்தகஞ்
சூழி காலின சைதொறுந் தோன்றுவ
மாழை நோக்கியர் மைந்தர்க்கு மாலுறக்
காழ கத்தனங் காட்டி மறைத்தல்போல். (௩0)

தோம ரஞ்சிலை சூல மழுப்படை
நாம வெங்கதை நாஞ்சின் முசலம்வே
னேமி தானவர் நீள்கரஞ் செலவன
காமா மங்கையர் கட்டொழி ருங்கியே. (௩க)

வேறு.

எற்றின பறையின் வீழ்ந்த வெழிலிக ளெழுந்த பூழி
சுற்றின வான மீபபோய்த் தூர்த்தன கங்கை நீத்தம்
வற்றின படையும் பூணும் வயங்கின மயங்கி யெங்குஞ்
செற்றின பதாகை யீட்ட மிருண்டன திசைக ளெல்லாம். (௩உ.)

சோமகண் டகனே சோமன் சூரியன் பகைஞன் மேகன்
காமர்பிங் கலனே யாதிக் கடிகெழு தானை வீரர்
மாமருங் கதனிற் செல்ல மன்னவர் மன்னன் மைந்த
னேமரு பூத சேனைக் கெதிருற வெய்தி னானல். (௩௩)

எதிர்ந்தனர் பூதர் தாமு மவுணரு மிடிப்பிற பேரி
யதிர்ந்தன துடியுஞ் சங்கு மார்த்தன வண்ட மீன்க
ளுதிர்ந்தன வனையா கூடி யுடன்றுபோர் புரிய வையம்
பிதிர்ந்தன பொதிந்த வண்டப் பித்திகை பிளந்த தன்றே. (௩சு)

தொட்டனர் வேலும் வாளுந் தூண்டினர் பகழி மாரி
விட்டனர் பிண்டி பாலம் வியன்மழுத் தண்ட மோச்சிக்
கிட்டினர் சூலம் வீசிக் கிளர்ந்தன ரவுணா பூதர்
பட்டன ரளப்பி லோர்கள் பரந்தன குருதி நீத்தம். (௩ரு)

முத்தலைக் கழுவைத் தண்டை முசலத்தை நேமி தன்னைக்
கைத்தலத் திருந்த கூர்வாய்க் கணிச்சியைப பிறங்க றன்னை
யெதிறத் தவரும் பூத ரெறிந்தன ரெறிந்த காலை
யத்தலை யவுண வீர ரளப்பிலர் பட்டா ரமமா. (௩சு)

தறிந்தன புரவித தாளுந் தலைகளுந் தடந்தே ரச்சு
முறிந்தன துவச மற்ற மும்மதக் கோட்டு மாக்கண்
மறிந்தன வுடலம் வேறு மடிந்தனர் வயவ ரெங்குஞ்
செறிந்தன கழுகு காகந் திரண்டன கூளி திண்பேய். (௩எ)

இருபெரும் படையு மிவ்வா றேற்றிகல் புரியும் வேலை
வெருவரு வேற்கண் மாதர் வியர்ப்பின்வந் துதித்த வீரர்
பொருவருஞ் சிலைகள் வாங்கிப் புங்கவம் பொழிந்து சூழ
வொருவரு மவுணர் நில்லா தோடின ருடைந்து போனார். (௩அ)

உடைதலு மவுணன் மைந்த னையென விடிப்ப மேகன்
கடுமுரட் சோமன் சோம கண்டகன் முதலா வுள்ள
படையுறு தலைவர் பல்லோர் பகழியின் மாரி தூவி
யடுசிலை வீரர் மேற்சென் றமரினை யிழைத்தா ரன்றே. (௩௯)

இழைத்திட வதனை நோக்கி யிலங்கெழிற் றோளில் வீரக்
கழற்புனை கின்றவீர புரந்தரன் கடிய சிறறத்
தழற்பெருங் கடவுள் போல்வா னசனியே றஞ்ச வார்க்கு
முழக்கின னொருதன் சேனை முன்னுறக் கடிது வந்தான். (௪0)

வந்தன னங்கைச் சாபம் வாங்கினன் வாளி மாரி
சிந்தினன் றலைவர் தேரைச் சிதைத்தனன் சென்னி தள்ளி
யிந்துகண் டகனை வானி லேற்றின னேனை வீர
ருந்திய சேமத் தேர்மே லுற்றிகல புரிந்து சூழ்ந்தார். (௪௧)

சுற்றினர் வீரன் மேனி சோரிநீ ரொழுக மாற்றான்
முற்றுறு பகழி தூவ முழங்கழ லெனனச் சீறி
மற்றவர் சிலையுந் தேரு மண்மிசை வீட டி வலலே
நெற்றியி னுரத்திற் றோளி னெடுங்கணை பலவு முய்த்தான். (௪௨)

உய்த்தலு மவுணர் வேந்தற் சூற்றுழி யுதவ நின்ற
மெய்த்திற லாற்ற லாளன் மேகனென் பவனோர் தண்டங்
கைத்தல மிசையி லேந்திக் கணப்படை வீரன் றேரமேன்
மத்திகை முட்கோல் கொண்ட வலவனை மோதி யார்த்தான். (௪௩)

மோதலுந் தனது பாகன் முடிந்திடு தன்மை காணூஉ
மேதகு தலைவன் வீர புரந்தரன் வேலொன் றேந்தி
யீதினின் முடிதி யென்றே யேவின னேவ லோடும்
பூதல மிசையே வீழாப் பொன்றினன் புயலின் பேரோன். (௪௪)

புயலுறு நாமத் தண்ணல் பொன்றலு மதனை நாடி
யயலுறு தானை வீர ரஞ்சின ரகன்று போக
வியலது தன்னை நோக்கி யெரிமுக னெரியிற் சீறிப்
பயிலுறு சிலையொன் றேந்திப் படையொடுங் கடிது வந்தான். (௪௫)

வேறு.

வளைத்தான்றனிப் பெருவில்லினை மருவாமனம் வளைய
விளைத்தானவட் சிறுநாணொலி மிகவார்த்தனன் விண்மேன்
முளைத்தார்தரு பிறைபோலவதொரு முனைவாளிக டெரியாக்
கிளைத்தார்தரு பூதப்படை கெடுற்றிடப பொழிந்தான். (௪௬)

தலையற்றனர் கரமற்றனர் தாளற்றனர் தோளா
மலையற்றனர் மார்பற்றனர் வாயற்றனர் செய்யுங்
கொலையற்றனர் செவியற்றனர் கூறுற்றிடு நாவி
னிலையற்றனர் படையற்றனர் நெடும்பூதர்க ளெவரும். (௪௭)

ஆரிற்றன சகடிற்றன வச்சிற்றன கிடுகி
னேரிற்றன கொடியிற்றன முடியிற்றன விர்க்கு
மூரிப்பரி மாவிற்றன முருகன்படை வீரர்
தேரிற்றன படையிற்றன செருவிற்றன வன்றே. (சகூ)

ஓடிற்றன குருதிப்புன லுலகச்சுற வொலியா
வாடிற்றன கவந்தக்குறை யலகைக்குல மிகவே
பாடிற்றன ஞமலித்தொகை பரவுற்றன கொடிமேற்
கூடிற்றன பாறுற்றன குறுகுற்றன கழுகே. (சகூ)

அக்காலையி னதுகண்டன னழல்கான்றிட நகையா
மைக்காலனும் வெருவுற்றிடு வலிசோதிறன் மகவான்
கைக்கார்முகந் தனைவாங்குபு கணைமாரிகள் சொரியாப
புக்கானவு னனுமாங்கெதிர் பொழிந்தான்சர மழையே. (ருo)

கரவன்விடு நெடுவாளிகள் கந்தன்படை ஞன்மேல்
வருகின்றன வுறுகின்றன மன்னன்மகன முன்னம
பொருகின்றநம வீரன்விடு புகாவெங்கணை பலவு
மிரிகின்றன படுகின்றன விருவோரபக ழியுமே. (ருக)

போரிவ்வகை புரிகின்றுழிப புரைதீரவிறன் மகவான்
றேரும்பொரு சிலையுநகணை செறியாவமுஞ் சிதையா
வீரைம்பது சரமாபுற வெய்தேயிக லவுண
ராரும்படி புகழும்படி யார்ததானறம் போததான். (ருஉ)

மாறுகிய வவுணர்க்கிறை வலியுந்திறன் மகவான்
வீறனவை யிழந்திட்டதும் விழிதீயுற நோக்கிச
சீறுச்சிலை வளையாககணை சிதறுவகை பலவுங்
கூறுவெதிர் புகுந்தாரவன் றுணையாமெழு குமரர் (ருங)

இடிகாலுறு முகிலாமென வெழுவீரரு மேகிக்
கடிதேமுனி வொடுசிந்திய கணையாவையும விலகா
விடமாகிய வெரிமாமுகன் விறலோாபுய வரைமேல
வடிவார்கணை பலசிந்துபு மழையாமென மறைததான். (ருச)

சகத்தானவர் புகழப்படு தலைவன்மகன் சரஙகண்
மிகுததான்விட மெலிவுறறிடு மெழுவீரரும வெயயோன்
முகததாயிரங் கரத்தாயிர முரதததாயிர மொயமபி
னகததாயிரங் கணைபாய்ச்சின ரவனறேரையு மறுத்தார். (ருரு)

வேறு.

அறுத்திடு மெலலையி னழலின மாமுகன்
மறித்துமொா தேரிடை வாவி வலலைபோ
யெறிததரு கதிருடை யெழுவா தமமையுஞ்
செறுதனெரி விழித்திவை செபபன் பேயினன். (ருசு)

ஒன்றொரு படையினு துங்க ளாவியைத்
தென்றிசை மறலியார் தெவிட்ட நல்கியே
வென்றிகொண மொய்மபுடை விடலை தன்னையுங்
கொனறிடு கின்றன னெனறு கூறினன். (ருஎ)

கூறுபோ தகத்தினிற் குமரன் றுணையோர்
வேறுலே றடுகணை வீசி வெய்யவ
னேறுதோ தன்னையு மிவுளி தன்னையு
நூறினா ரவனுட னூழை யாக்கினார். (ருஅ)

ஆயது காலையி லவுணன் வேறொரு
பாயிருந் தேரிடைப் பாய்ந்து கண்ணுதற்
றாயவன் படையினை யெடுத்துத் துண்ணென
நேயமொ டருச்சனை நிரப்பித் தூண்டினான். (ருகூ)

அடலெரி முகத்தினா னாதி நாயகன்
படைதொட வன்னது படியும் வானமும்
வடவையி னுருவமாய் வரலு மச்செயல்
விடலைக ளொருவரும் வெருண்டு நோக்கினார். (சுO)

அனற்படை யன்னதா லதற்கு மாறதாப்
புனற்படை விடுக்குவ மென்று புந்திகொண்
டினப்படு துணைவர்கள் யாரும் வாருண
முனைப்படை தூண்டினார் முடியுஞ் செய்கையார். (சுக)

தூண்டிய வாருணத் தொல்லை மாப்படை
சேணொடொடர்ந் திடுதலுந் தேவன் றீப்படை
யாண்டெதி ராகியே யவற்றை நுங்கிறு
ஈண்டொரு முனிகட லேழு முண்டென. (சுஉ)

சலபதி படைகளைத் தடிந்து வாய்மடுத்
தலகுளோர் வெருவர வூழி யான்படை
வலியுட னேகியே யவ்வவர் தம்மையு
மெலிவுசெய் துயிர்கொடு மீண்டு போயதே. (சுக)

மீண்டது போதலும் வீர ரவ்விடை
மாண்டனர் கயிலையின் மருங்கு போயினார்
மூண்டிடு பெருநகையன் முகத்த னங்கது
காண்டலு மார்த்தனன் களிப்பி லும்பரான். (சுச)

ஒருங்குற வீரர்க ளுலந்து வீடலு
மருங்குற நோக்கிய வயவெம் பூதர்கள்
கரங்களை மறித்தனர் கலங்கி வாய்புடைத்
திரங்கினர் வெருவின ரிரிந்து போயினார். (சுரு)

நெற்றியில் வீரர்தம் விளிவு நீங்கலா
தற்றிடு பூதர்க ளுலைந்து சாய்வதுந்
தெற்றென நோக்கினன் செயிர்த்து விம்மினான்
வெற்றியின் கிழவனும் வீர வாகுவே. (சுசு)

வீரமொய்ம் புடையவன் வெருவ லீரெனப்
பாரிடக் கணங்களைப் பாணி யாலமைத்
தோரிறை முன்னரே யொருதன் றேரொடு
மாரபூன் முகத்தன்மு னணுகப் போயினான். (சுஎ)

போய்க்குறு குற்றழிப் பொருநர்த் தேய்த்தலின்
வீக்கிய கனைகழல் வீர வாகுவைத்
தாக்கெரி முகமுடை த தறுகண் வெய்யவ
ஞேகினன் வெகுண்டிவை நுவறல் செய்குவான். (சுஅ)

வேறு.

எதிரா கியபூ தரையே னையரை
மதியே னினையே யடவந் தனனீ
யதுகா லையினிங் ஙனடைந் தனையால்
விதியே யுனையென் முன்விடுத் ததுவே. (சுகூ)

கொன்றாய் பலரைக் கொடுவெஞ் சமரின்
வென்றாய் பலரை மிகைசெய் தனையாய்
நின்றாய் வருவாய் நினதா ருயிருக்
கின்றா குவதோ விறுதிப் பகலே. (எ0)

முன்னர்ப் பொருதே முரிவுற் றவர்போ
லென்னைக் கருதே லினியோ ரிறையி
லுன்னை த லைகொய் தொருசென் னியையு
மன்னர்க் கிறைசே வடிவைத திடுவேன். (எக)

பூண்பான் முலைமா தாபுணர்ச் சியெனு
மாண்போர் தனிலே வலியற் றழியு
மாண்பா லொருவ னவனே யலஞே
வேண்பா லுனையா னிவண்வென் றிலனேல். (எஉ)

என்று வெதிரா விவையொப் பனசொற்
சொன்று ன துகேட் டிடுதொல் விறலோன்
பொன்னூர் தருசெங் கைபுடைத் துநகைத
தொன்றுன் முகநோக் கியுரைத் திடுவான். (எங)

முளையார் தருபொன் னவன்முன் றுசமர்
விளையா வடிவந் தனைவிட் டகலா
வளையார் புனல்புக கனனன் னவனுக்
கிளையா யொருநீ யெவனுய் குதியோ. (எச)

மூண்டா ரமாசெய திடுமொய்ம் பரெலா
மாண்டார் கதிரோன பகைமற றொருவன்
மீண்டா னவனும் விளிவுற றிடுநீ
யீண்டா ருயிர்தோற றிடவே கினையோ. (எரு)

வீடிச் செருவில் விளிவா குதியோ
பேடித் தொழிலகற் றிடுபிள ளையென
வோடிக் கடலபுக் குயிருய் குதியோ
நாடிக் கடிதொன றைநவிற றுதியே. (எசு)

பார்காத் திடினும் பலதா னவரு
நேர்காத் திடினு நிலைபெற் றழியாச்
சூர்காத் திடினுந் தொலைவில் விறலோ
ரார்காத திடினு மடுவே னுனையே. (எஎ)

என்றிங் கிவைவீ ரனிசைத திட லுங்
குன்றன் னசினத் தழல்கொழு மெனவே
சென்றுள் ளமலைத் தழிதீ முகவன்
வன்றிண் சிலையொன் றைவளைத தனனே. (எஅ)

வேறு.

நடுத்தானகன் றிடுசூரமக ளுஞ்ஞைதையைச் சிலையின்
றெடுத்தானெடுத் தனுமவெய்யவ னிரவோனுட னிரிந்தா
னுடுத்தானுதிர்ந் தனசேடனு முலைந்தானுல கனைத்துங்
கெடுத்தானிவ னெனவானவர் கிளையோடினர் வன்றே. (எகூ)

அக்காலையின் முகமாறுடை யமலன்றனக் கன்பன்
கைக்கார்முக மிருகால்வளைத் தொருகாலொலி காட்டத்
திக்கானன முடையான்முதற் றேவாசுரர் துளங்கி
யிக்காலம தோபார்முழு திறுங்காலம தென்றார். (அ0)

என்றுவிசைத் திடுமெலலையி லெரிமாமுக னீரேழ்
கொன்னார்கணை விடுத்தார்த்தனன் குறுகுற்றது வருமுன்
மின்னுமெனப் பதினாறுகணை விடுத்தேயவை விலக்கிப்
பொன்னார்தரு திறன்மொய்ம்பினன் புயலேறெனத் தெழித்தான். (அக)

செஞ்ஞாயிறு கதிகான்றெனத் தீமாமுகத் தவுண
னைஞ்ஞான்கெனுந் தொகைபெற்றிடு மயில்வெங்கணை தொடுப்ப
வெஞ்ஞான்றுமுற் றிடுசீர்த்திய னிருபான்கணை துரந்து
மைஞ்ஞான்றிடு முகின்மேற்செலு மருத்தாமெனத் தடுத்தான். (அஉ)

கண்டங்கது கனன்மாமுகன் கணையாயிரந் துரந்து
புண்டங்கிய தனிவேலுடைப் புனிதன்றனை திளவன்
முண்டமபுக வுய்த்தேதிறன் முதுவால்வளை யதனை
யண்டங்கிழி படவூதின னவுணப்படை புகழ. (அங)

ஆராரும் வியக்குந்திற லடன்மொய்ம்பின னங்க
ணோராயிரம் வடிவாளிக ளொருங்கேதொடுத் தூய்த்துச்
சூராகிய வவுணன்றரு தொலலைத்தனி மைந்தன்
றேரானதும் பரியானதுஞ் சிலையானதுஞ் சிதைத்தான். (அச)

சிதையும்பொழு தயலவேறொரு தேரின்மிசைப் பாயாக்
கதையொன்றினை விடுத்தானெரி கனன்மாமுக னதன்மேற்
குதையொன்றினைத் துரந்தேயருட் குமரேசனுக் கிளையோன்
சுதையொன்றியக் கலத்தேவிழுந் துண்டம்பல கண்டான். (அரு)

மாற்றோசிலை யினைவாங்கி வளைத்தக்கனன் முகத்தோன
காறறோன்படை துரக்கின்றுழி யிவனுமமது கடவுக
கூற்றோன்படை தொடுத்தானவன் குமரன்றனக் கிளையோன்
வேற்றோர்படை துரந்திடயுல னுறும்வெசெல விட்டான். (அசு)

மாகத்துறு கதிர்வெம்படை மன்னன்றரு மதலை
வேகத்தினில் விடவாங்கது விடுத்தேயது விலக்கி
நாகத்தபா கறைநீவிய நனிகூரிய கணைநூ
றாகத்திடை பட்வேதார்த் தடன்மொய்ம்பின னார்த்தான். (அஎ)

தருமத்திய னிறுவுற்றிடு தக்கோன்விடு சரங்கண்
மருமத்தினிற படுகின்றுழி வானோரமு தருந்துங்
கருமத்தினில் விரவிக்கடல் கடையக்கவிழ்ந் திடட
பெருமத்தென நிலைசோர்ந்துதன் பெருந்தேர்மிசை வீழ்ந்தான். (௮௮)

விழுகின்றதொ ரெரிமாமுகன் வியன்மார்பெனு வரைநின்
றிழிகின்றன நதியாமென வெருவைபபுன லுயிரு
மொழிகின்றது வருகின்றது லாவுற்றது தேற்ற
மழிகின்றது வருமந்தக னசசுற்றன னணுக. (௮௯)

விளிந்தானென மயங்குற்றவன் வெஞ்சூருரு மேற்று
னெளிந்தாடர வசைந்தாலென நெடுந்தேர்மிசைப பெயராத்
தெளிந்தாயிடை யிரங்கிப்பொரு திறல்வன்மைய திலனா
யெளிந்தானெளிந் திடுகின்றவ னிததன்மைசிந் திததான. (௯0)

மொழிபட்டிடு திறன்மாற்றலர் முனைவெஞ்செருத் தனில்யா
னழிபட்டிடின் வருவாயென வந்நாட்சிறு காலைப்
பழிபட்டிடும் வெறியாட்டினைப் பயின்றேபலி யூட்டி
வழிபட்டதன் னகர்க்காளியை மனததின்மிசை நினைத்தான். (௯௧)

வேறு.

விஞ்சுந் தொல்விறன் மேவு சூர்தரு
மைஞ்சன் றன்னை மனததி லுன்னலு
நஞ்சுந் துண்ணென நண்ணு காளிதன்
னெஞ்சந் தன்னி னினைததன் மேயினாள். (௯௨)

சூலங் கொண்ட லமர்ந்து தோன்றுவாள்
சூலங் கொண்ட லமந்த தோளினாள்
கோலம் பெறற குலிஙக வேணியாள்
கோலம் பெற்ற குறுங்கொ லைக்கணாள். (௯௩)

போதங் கொன்று பொருமை மிக்குவாள்
போதங் கொன்று பொலஞ்செய் தாளினா
ளேதந் தீர்ந்திடு மெண்ண லார்சிர
மேதந் தீர்ந்திடு மேம வாளினாள். (௯௪)

சங்கா ரத்தணி தாங்கு கொங்கையாள்
சங்கா ரத்தணி தந்த செங்கையா
ளோங்கா ரத்தி னுரைத்த வாடையா
ளோங்கா ரததி னுரபபு மோதையாள். (௯௫)

ஞாலத் தேவரு நாகர் வேந்தரு
ஞாலத் தேவரு மேத்த நண்ணுவாள்
காலத் தீயர் களிறறின் மேலையோர்
காலத் தீயர் கலங்கு காட்சியாள். (௯௬)

அஞ்சத் தானடி யான வானவ
ரஞ்சத தானடி பேர்த்து லாவுவா
ளஞ்சத தானவர் நைய வெம்மைசெய்
நஞ்சத தானவர் சுறற நல்குவாள். (௯௭)

அங்கத தன்மை யளா யமர்ந்திடு
மங்கத் தன்மை யளாய காளிமால்
சிங்கத தேறிய செலவன் மைந்தன்முன்
சிங்கத் தேறினள செல்லன் மேயினாள். (கூஅ)

வில்லுஞ் சூலம் வியன்ம ழுக்கதை
யெல்லைப பல்படை யாவை யுங்கொளா
மல்லற காளிகண் மாபபெ ரும்படை
செல்லக் கூளி செறிந்து சூழ்ந்தா. (கூகூ)

மூதக் கார்பபொடி விண்ணை முட்டுற
வேதக் கூளிக ளேறு கேதன
மூதச சஙக மொழிந்த பல்லிய
மேதக் கோதை மிகுத்து மேவவே. (கOO)

வேறு.

விரைவொடு பறந்தலை மேவி வீழ்ந்தய
ரெரிமுக மதலையை யெய்தி நோக்கியா
னுரமிகு மொன்னல ருயிரை யுண்பனீ
பரிவுற லென்றன ளமைதத பாணியாள். (கOக)

இவ்வகை யருளியே யிளவல் பாறபடுங்
தெய்வதப பூதர்தஞ் சேனை மேறசெலாக்
கவ்வைகொள செருததொழில் கருதி யார்த்தன
வைவகைப் பூதமு மசசங கொள்ளவே. (கOஉ)

ஆததிடு மெல்லையி லளக்கர் சூழ்ந்தென
வாததிடு மெல்லையி லடல்வெம் பூதரும்
வோர்ததன ரழுங்கினா மேறசென றெற்றனர்
வேர்த்தன ரழுங்கினா விண்ணு ளோரெலாம். (கOங)

காளிகள் சூலமவேல் கணிச்சி காமுகம
வாளிகள் சிந்தினா வரைநெ டுந்தரு
நீளிக ளெழுககதை நேமி யின்னன
கூளிகள் வீசினா குறுகிப போர்செய்தார். (கOச)

அததிற ஞெகிழியே யாடற பூதர்க
ளெததிறத தவரையு மிறு செய்கெனக்
கைநதலத திருந்ததோர் கழுமுள வீசினா
பததிரை தன்னருள படைத்த காளியே. (கOரு)

வீசிய முததலை வெய்ய வேறபடை
காய்சின வெரிபுகை கான்று காளிதண்
மாசக லுருபபல வகுததுப பாரிடர்
பாசன மருளுறப படாத் துற்றதே. (கOகூ)

சண்டிகை விடுபடை தனது வன்மையைக்
கண்டன னிளையவன் கணங்க ளாருயி
ருண்டிடு மிதெனு வுன்னி யேழிரு
புண்டரு கிலிமுகம பொள்ளென றேவினான். (கOஎ)

தீக்கலும் வேலினன் செலுத்து மாசுக
மேக்குறு முத்தலை வேலை நுண்டுகெ
ளாக்கிய தாக்கலு மனைய தன்மையை
நோக்கினள் காளியென் றுரைக்கு நோன்மையாள். (கரு௯)

துண்ணென யான்விடு சூலந் தன்னையு
மண்ணலம் பகழியா லறுத்தென் னாற்றலை
யெண்ணல் னிறபனு லின்னு மங்கவ
னுண்ணிக ழுயிரினை யுண்கு வேனென்றாள். (க௦௬)

என்றிடு காளியோ ரிமைப்பின் முந்துற
நின்றிடு சேனையங் கடலை நீக்கியே
வென்றிடு வயப்புலி மிசைக்கொண் டார்த்திடாச்
சென்றனள் வீரன்முன் செப்பன் மேயினாள். (கக௦)

முன்னுற யான்விடு மூவி லைப்படை
தன்னைவெங் கணைகளாற் றடிதது நின்றனை
யின்னுமோர் சூலமுண் டெறிவன் வீகுதி
யன்னது காத்திட லரிது காணென்றாள். (ககக)

என்றலு முறுவல்செய் திலங்கு சூலமாங்
கொன்றல வாயிர மொருங்கு வீசினு
நின்றவை முழுவது நீறு செய்வனென்
வன்றிற றெரிந்திலை மாது நீயென்றான். (ககஉ)

கொற்றமொய்ம் பினனிவை கூறக் கேட்டுளரு
செற்றம தாகியே தெழித்துச் சண்டிகை
மற்றுமோர் சூலவேல வலலை வீசினள்
சுற்றிய பாரிடத் தொகுதி யுட்கவே. (ககந)

அருந்திற லமரர்க ளதுகொ லாலமென்
றிரிந்தனர் பணியெறு வினனு மிந்துவும
வருந்தினர் சூலமுன் வந்த தன்மையைத்
தெரிந்தனன் வீரமொய்ம் புடைய செம்மலே. (ககச)

எட்டொ னிரண்டுநூ றெனுந்தொ கைபபடு
நெட்டிரும் பகழிக ணிகரத் தூண்டியே
யட்டனன் றுணிபட வரியின் மேலவ
டொட்டிட வருவதோர் சூலந் தன்னையே. (ககரு)

எறித்தரு சூலம திற்று வீழ்தலுஞ்
செறுத்தன ளிங்கிவன் சிரததை வாளினு
லறுததுதி ரப்புனல் சுவைததிட் டாவியைப்
பறிததிடு வேனெனப் பகர்ந்திட் டாளரோ. (ககசு)

நாலிரு தோளுடை நங்கை தோன்றன்முன்
வாலுளை மடங்கலி னிருத்தன் மாண்போரீஇட
பாலுறு திரைக்கடற் பரப்பை விட்டக
லாலும தாமென வார்த்திட் டேகினாள். (ககஎ)

ஆர்த்திடு சண்டிகை யங்கை தன்னிலோர்
கூர்த்திடும் வாட்படை கொண்டு கொம்மெனத்
தீர்த்தனுக் கினியதோர் சோம னிற்புறுந்
தார்த்தடந் தேர்மிசைத் தனிவந் தெய்தினாள். (ககஎ)

நோக்கினன் மொய்ம்பினா னேன்மை பூண்டுளான்
றூக்கணங் காமிவ டனைத தாவியை
நீக்குதல் செய்வது நீர்மைத தன்றெனாத்
தூக்கின னவள்வலி தொலைக்க வுன்னுவான். (ககக)

இடிததென வுரப்பின னெண்கை தன்னையு
மொடித்தன னுமென வொருகை யாலுறப்
பிடித்தனன் மற்றொரு பெருங்கை யாலுரத்
தடித்தனன் காளிவீழ்ந் தவச மாயினாள். (கஉ0)

கரங்கொடு சேவகன் கல்லென் றெற்றலு
முரங்கிழி வுற்றன ளுமிழ்ந்த சோரிநீா
தரங்கம தெறிகட றன்னைப போன்றலா
யிரங்கிய தவடியர் யாவர் கூறுவா. (கஉக)

எண்கையு மொருகையா லேந்தல் பற்றியோ
ரொண்கையி னீசிந னுரததி லெறறலு
மண்கிழி வுற்றன வரைகள கீண்டன
விண்கிள ரண்டபித திசையும் விண்டதே. (கஉஉ)

திரைபெறு கடலைக் சான்ற செமபுனல்
வரைபெறு தனதுமெய் மறைதத லாறறுயர்க்
கரைபெற லில்லவள் காளி யென்றுமுன்
னுரைபெறு பெயரையு மொழிவுற றுளரோ. (கஉங)

இவ்வகை யவசமா யிம்பர் வீழ்ந்தபி
னவ்வகை யுணாசசிபு மனுதி யானவுஞ்
செவ்விது தொலைமைபோற சோரச சூர்மகள்
வெவவலி யிழுந்துகண் விழித்து விபமினாள். (கஉச)

ஆண்மையின் மேலவ னகலத தெற்றிட
வேண்மையும் வீரமு மிழந்து வீழ்ந்தது
நீண்மய லானது நினைந்து நெஞ்சிடை
நாண்மகி வுற்றன ளடுங்கு மாவியான. (கஉரு)

அந்தமி லறுமுகத் தமல னேவலால
வந்தவ னெம்பொரின் வாகை யெய்துமோ
புந்தியி லாதிவட் புக்க னன்னெனாச்
சிந்தைசெய் தெழுந்தனள வன்மை தீர்ந்துளாள். (கஉசு)

இகழ்ந்தவ ருரத்தினை யிகழ்ந்து கூர்நகத்
தகழ்ந்துயி ருணடிடு மணங்கு தோமிசைத்
திகழ்ந்தன னின்றிடு திறலி னுன்றனைப்
புகழ்ந்தன ளினையன புகல்வ தாயினாள். (கஉஎ)

கன்றிய கற்புடைக் கனலி மாமுக
னின்றனை யருச்சனை யியற்றி யேத்தியே
யொன்றல வுயிர்ப்பலி யுதவி வேண்டினு
னன்றிய தயர்த்தில னினிங் கெய்தினேன். (கஉஅ)

உன்னுடை வன்மையு முனது வீரமுஞ்
சின்னமு முணர்ந்திலன் செருவின் முந்துறீஇ
நின்னுட னிகலியிந் நிலைமை யாயின
னின்னினி யேகுவ னிருந்த தொல்லிடை. (கஉகூ)

கறுத்தினி வல்லையிற் கனன்மு கத்தனை
யொறுத்துயி ருண்குதி யொழிந்து ளாரையு
மறுத்தனை நிறகுதி யலரி தன்னைமுன்
செறுத்தவன் றன்னையு மடுதி செமமனீ. (கங௦)

அடையலர் தம்மைவென் றுறு மாமுக
முடையவன் கருணைபெற் றுவகை மேவுதி
நெடிதுபல் லூழியு நீடி வாழ்தியாற
கடைமுறை யிவையெலாங் காண்டி நீயென்றாள். (கஙக)

இத்திறம் யோகினி யிசைத்து வெஞ்சமர்
வித்தகன் விடைகொடு மீண்டு கோளரிச
சித்திர வெருத்தமேற் சேர்ந்து தொல்படை
மொய்த்திடப் போயினன் முந்து வந்துழி. (கஙஉ)

வேறு.

சண்டிகை போந்த காலைத் தழன்முக னனைய வெல்லாங்
கண்டனன் வெகுண்டு நன்றிக் களவன தாற்ற லென்னுத
திண்டிற லாற்றல சான்று சேண்கிடந் துருமுக் கான்று
கொண்டல தெழுந்தா லென்னக் கொம்மென வெழுந்து சொல்வான். ()

கொன்றுயிர் பலவு நுங்கிக் குருதியும் வடியு மாந்தி
யொன்றுதன் னகடு தூரா தலைப்புறுப பசிநோய் மிக்குச்
சென்றிடு காளி யாலோ தெவ்வர்தஞ் செருவை யான்முன்
வென்றனன் சூரன் சேய்கருத துணைகளும வேண்டு மோதான். (கஙச)

சூலமுங் கண்டும் வாளுஞ் சுடர்மழுப் படையுஞ் சீற்றக்
கோலமுங் கொண்டு பாங்கிற கூளிகள் சூழ வைகு
நீலிதன் வன்மை காண்பா னினைந்திவண் விளித்த தன்றி
வேலவன் படையை யன்னாள் வெலலுமென் றுளங்கொண் டேனே. ()

வாவியுங் குளனும் பொய்தீர் நதிகளு மற்று மெல்லாந்
தூவுநுண் பனியா லன்றே துளும்புவ வஃதே போலத்
தேவரை யேவல் கொண்ட சிறப்புடைத் தமியே னிங்ஙன்
மேவிய காளி யாலோ வெய்துவன் வீரத் தன்மை. (கஙசு)

இன்னினிக் கணம தொன்றி னிளவலா ருயிரை வௌவி
முன்னுற வகன்ற வொற்றன் முரண்வலி யதனைச் சிந்தி
யன்னவ னாவி கூற்றுக் கடிசிலா வளிப்ப னல்லான்
மன்னன்முன் போவ தில்லை வஞ்சின மிஃதே யென்றான். (கஙஎ)

கனன்முக னிணைய மாற்றங் கழறியே யவுணத் தொல்பே
ரனிகம்வந் தயலி னீண்ட வாழியந் தேரிற் சென்று
வினைதரு சிலையொன் றேந்தி வன்மையால் வாங்கி நூறு
முனையிரும் பகழி வீர மொய்ம்பன்மேற் றூண்டி யார்த்தான். (கஙஅ)

கொடுந்தொழி லாளன் செய்கை குரைகழல் வீரன் காணா
முடிந்திட வந்தாய் போரு முயற்சியீ தழகி தென்னா
நெடுந்தனிச் சிலைகா லூன்றி ஞெரேலென வளைத்துத் தானு
மடுந்திறற் கணைநூ றோச்சி யறுத்தன னவுணன் வாளி. (கஙகூ)

வேறு.

அறுத்தபொழு தத்திலவு ணர்க்கரசன் மைந்தன்
மறத்தினொடு நூறுசரம வாளியன பூட்டிச்
சிறப்புடைய செம்மலுறு தேரினை யழித்துக்
குறித்தவிறல் கொண்டுசமா வால்வளை குறித்தான். (கசo)

தேரழித லும்வெகுளி செய்திளவ லீரேழ்
கூரிய நெடும்பகழி கொம்மென விடுத்தே
யாரழன் முகத்தவுண னங்கையிடை கொண்ட
மூரிவரி வெஞ்சிலை முரித்தமா விளைத்தான். (கசக)

வில்லது முரிந்திடலும வேறொர்சிலை வாங்கிக்
கல்லென வெயிற்றணி கறித்திவனை யின்னே
கொல்வனெனும் வெய்யமொழி கூறிமண நாறு
மல்லிமல ரோன்படையை யண்ணன்மிசை யுய்த்தான். (கசஉ)

அத்தகைமை நோக்கின னயன்படையை யானு
முய்த்திடி னெனக்குவரு மூதியமெ னென்னாச்
சித்தமுறு பூசனை செலுத்திவிறல் வீர
பத்திர நெடும்படையொர் பாணிகொடு விட்டான். (கசங)

வாரிதிவ ளாகமறை மாதிரையி னுண்ணும்
வீரனெடு வெம்படை விரைந்துபடர் காலை
நாரணன் மகன்படை நடுங்கிநனி தாழா
யாருநகை செய்திட விரிந்துளதை யன்றே. (கசச)

அன்னமிசை யோன்படை யழிந்திடலும் வீரன்
றன்னது நெடும்படை தடுப்பில்வகை யேகி
வன்னிமுக னாவிகொடு மாமுடிக டள்ளி
மின்னுமென வீரனிடை மீண்டுபடர்ந் தன்றே. (கசரு)

வேறு.

வெய்யவக் கனன்முகன் விளிந்து வீழ்ந்தன
னொய்யென வசைசெய லும்பர் நோக்குறா
வையனை வாழ்த்திநின் றலரின் மாரிதூய்
மெய்யணி துகிலெலாம் வீசி யாடினார். (கசசா)

புறந்தரு கலிங்கமும் பூணு நாணமுந்
துறந்தன ருவகையாற் சொல்லு மாடலர்
சிறந்துட னார்த்தனர் தேவ ரற்றைநாட்
பிறந்திடு மைந்தர்தம் பெற்றி யெய்தினார். (கசஎ)

எரிமுக னவ்விடை யிறப்ப வாங்கவன்
பொருபடை வீரர்கள் புலம்பி யாமெலா
மொருசிறு தூதனுக் குடைந்து மோவெனுச்
செருவினைக் குறித்தன ருலப்பி றீமையோர். (கசஅ)

முற்படுந் தலைவர்கண் மூவெண் ணாயிரர்
பொறபுடை யிளையவன் புடையிற சுற்றிடாக்
கபபணந் திகிரிகோல் கணிச்சி வேல்கதை
சொற்படு படையெலாஞ் சொரிந்து போர்செய்தார். (கசகூ)

செய்தது நோக்கியே செயிர்த்துச் சேவகன்
கைதனி விருந்ததோர் காமுக ம்வளைஇ
நொய்தினி லாயிர நூறு கோடிகோ
லெய்தனன் றெழித்தன னவுண ரேங்கவே. (கடுo)

இத்திறங் கணமதொன் றிடைய ருமலே
கைத்தனு வுமிழ்ந்திடுங் கணையின் மாமழை
யுய்த்தனன திரிந்தன னுலகம் போந்திடு
மெய்த்திறன் மருத்தினும் விரைவின் மேவியே. (கடுக)

எறிந்திடு படைகளு மெய்த கோல்களு
முறிந்தன துணிந்தன மொய்ம்பு மார்பமுஞ்
செறிந்திடு கரங்களுஞ் சிரமுந் தாள்களுந்
தறிந்தன வவுணர்தந் தலைவர் வீடினார். (கடுஉ)

வேழமும் புரவியுந் துணிந்து வீழ்ந்தன
வாழியந் தேர்நிரை யனைத்து மிற்றன
சூழுறு மவுணருந் தொலைந்து போயினர்
பாழியந் தோளினன் பகழித் தன்மையால். (கடுங)

பாரெழுக் குறறன ககனம் பாமிசை
வீரெழுக் குற்றதொல் படைகள் வீந்திடச்
சேரெழுக குற்றன திசைகள் செம்புன
லாரெழுக குற்றதா லமர்செ யாறெலாம். (கடுச)

பலவுடை நெடுந்தலைப் பதகா தூசனு
நிலவுடை யெயிறறிடை நிவந்த தீககனல்
புலவுடை விழுங்ணம புழுககல செய்ததாற
கலிகெழு கொடியொடு கணமுந் துய்க்கவே. (கடுரு)

மாமையிற செறித்தன வடிவின் மால்கரி
தாமயிர்ப புறவடி தடக்கை வன்றலை
யேமயிரத தோகையோ டிறறு நீங்குற
வாமையிற போவன குருதி யாறறினே. (கடுசு)

கார்கெழு மவுணருட் கலந்த சோரியின்
ஞரைக ணீததமர வெழுந்து தக்கவா
பேருட லுட்கொடு பெயர்ந்த பின்னுற
வாரிதி வடவையுண் டுலவு மாண்பென. (கடுஎ)

கரியினும் பரியினுங் கால்கொண் டோங்கிய
குருதியம் புனன்மழை குலாவும் வைகலின்
வரைதொறும் வரைதொறு மாறு மாறெழா
வருவிகள் சென்றென வழுங்கிச் செல்லுமால். (கருஅ)

மீளிகள் குருதிநீர் வெள்ள மாயதில்
வாளுறு வேல்களும் வாளு மற்றவுங்
கோளுறு மயிலையிற் குலவக் கண்டுதங்
கேளிரென் றெதிர்வன கெழும வேலைமீன். (கருகூ)

அழல்பொரு செக்கர்வா னகத்தின் மாமதிக்
குழுவினர் சேர்ந்தன குலவுங் கொள்கைபோ
னிழல்பொதி கவிகைகள் நெடிய தாளற
வொழுகிய குருதியி னொருங்கு செல்லவே. (கசுo)

அலைகெழு குருதியா றழுங்குப் றேகலா
றலைகளு முடல்களுந் தசையும் வாரிடக்
கொலைபுரி மறவர்தங் குடரிற் பின்னியே
வலையெறிந் தீர்த்தனர் வயவெம் பூதரே. (கசுக)

ஞாளிக டிரிவதோர் மருங்கு நாமவெங்
கூளிக டிரிவதோர் மருங்கு கூளியர்
மீளிக டிரிவதோர் மருங்கு வென்றிடுங்
காளிக டிரிவதோர் மருங்கு கண்ணெலாம். (கசுஉ)

தேரிடை யுலந்தவன் சிரத்துந் துஞ்சிய
சாரதி தலையினும் புரவி தம்மினுஞ்
சோரிக ளிழிவன தொலைந்த வையமு
மாருயி ரெய்தியாங் கதுபெற் றென்னவே. (கசுங)

சினவலி யவுணர்தந் திகிரி பூண்டிடு
துனைவரு கேசரி துஞ்சச் சோரிநீர்
கனைகட லிடைசெலக் கண்டு தேரைதம்
மினமென வெதிர்தழீஇ யிரங்கு கின்றவே. (கசுச)

விரிந்தவித் திறமியல் வெங்க ளத்திடை
யிரிந்திடு தானவ ரிறந்து நீங்கினோர்
கருந்தலை யடுக்கலிற் கழலக டாகநறத
திரிந்தன ரயர்ந்தனர் சிலவர் துஞ்சினார்.

மழுக்களு மயில்களும் வாளு முத்தலைக்
கழுக்களுங் காலபடக் கவனுற் றார்சிலர்
விழுக்கொடு வளாரம விராய பூழியி
லிழுக்கின ரழுந்தின ரிறந்து ளார்சிலர். (கசுசு)

பாய்ந்திடு குருதியம் பரவை யாற்றிடை
நீந்தின ரொருசிலர் நீந்திக் காலெழா
தோய்ந்தன ரொருசில ரோடி னார்சிலர்
மாய்ந்தன ரொருசிலர் மாய வீரரே. (கசுஎ)

காண்டொறுங் காண்டொறு மவுணர் கண்ணிடை
யீண்டிய வெள்ளிடை யிளவன் மேனியாய்
நீண்டதோர் பையுளாய் நிகழ வேங்கியே
மாண்டனா சிலர்சிலர் வாய்வெ ரீஇயினார் (கசுஅ)

துப்புறு பூதர்பின் றொடரத் தாடொழா
மெய்ப்படை முழுவதும் வீசி யாயிடைத்
தப்பின ரிறுதியிற சாய்ந்து மாய்ந்தவர்
கைப்படை வாங்கியே கடிதுற் றார்சிலர். (கசுகூ)

எண்ணமில் படைக்கலம் யாவும் வீசியே
தண்ணுமை வருதுடி தக்கை பேரியாம்
பண்ணமை யியம்பல பற்றி யார்த்திடா
நண்ணினர் நடவினை நடிக்குந் தானவர். (கஎ0)

பரிக்குவை யரிக்குவை படைத்த மாமுகத்
திரக்கமி லவுணர்க ளிரதத்த் திற்றம
நெருக்குறு சிரத்தொகை நீட்டி மெய்யெலாங்
கரக்குந ரொருசில ருயிரின் காதலா. (கஎக)

சூளுறு போரிடைத் தொலைந்து போகியே
நீளிக லுறுகிலா நிருதா சமபுவா
யாளுடை வயவரு னருந்த வாயிடை
ஞாளிகள் கவர்தலு நடிக்குற றாசிலா. (கஎஉ)

தீயினை முருக்குறுந் திறல்வெம பூதர்க
டாயினர் தொடர்தலுஞ சாய்ந்து ளோாசிலர்
நாயின துருககொடு நடக்க ஞாளிக
ளாயின வடர்த்தலு மஞ்சி னாசிலர். (கஎங)

விசையொடு சாரதர் விரவ வேற்றுரு
விசைகில ரிறந்தவ ரினத்துண் மேயினார்
தசைகவர் ஞமலிக டலைச்சென் றீககவு
மசைவில ராகியே யழுங்கி னார்சிலா. (கஎச)

புண்டரு குருதிநீர் புறததுச் சிந்திட
மண்டமர் தனிடை மாண்ட கேளவரைக்
கண்டிலர் சிரந்தெரீஇக கவன்ற ரறறிய
வொண்டொடி மாதரி னுலவி னாசிலா. (கஎரு)

சூர்ததிடு நோக்கொடுந் துண்ணென் றெய்தியே
யார்ததிடு பூதர்வந் தணுக வாய்வெரீஇ
வோர்ததுடல் பனிப்பவீழ்ந் துதைததும் வெய்யதாள்
போததிட வின்றியும் பேதுற றாசிலர். (கஎசு)

அழிதரு வோர்தமை யவரின் முன்னரே
கழிதரு முயிரினர் கணங்க ளாகிவிண்
வழிதரு செலவினில வந்து பறறியெம்
பழிதரு வீரெனப் பணிககின் றார்சிலா. (கஎஎ)

வல்விரை பறவையை நோக்கி மற்றவட்
செல்லுதிர் பூதர்க டெரியக் கண்டிரே
யில்லையிந் நெறிதனி யிறந்து ளோரெனச்
சொல்லுதிரா நீரெனத் தொழுகின் றாசிலர். (௧௭௮)

காசினி யதனிடைக் கவிழ்ந்த கேள்வரை
யாசையி னெடுதழீஇ யலமந் தேங்கிய
பாசிழை மாதரிற பரவப் பூதாக
ளாசியீரந் திடிதலு நாணுற் றார்சிலர். (௧௭௯)

அடல்கெழு தூதனு லவுணர் யாவருங்
கெடுவது திண்ணமயாங் கெடுகி லோமெனக்
குடர்கெழு சோரியங் குடினைக் கண்ணுறீஇக்
கடலுறு வரையினுட் கலந்து ளாசிலர். (௧௮0)

சாரதர் குழுவினைத தப்பித தத்தம
தாருயி ருய்ந்தபி னங்கண் மாண்டவர்
சோரிய தாமிசை துதையப பூசியே
வீரர்க ளிவரென மேவு வார்சிலா. (௧௮௧)

இவ்வகை துஞ்சின ரன்றி யெண்ணிலா
வெவ்வலி யவுணர்கள வெருவி யோடலு
மைவரு நெறிமுயன் மகேந்தி ரப்புரங்
கௌவையி னரறறின கடலு டைந்தபோல. (௧௮௨)

அங்கது பொழுதினி லாடன் முறறியே
செங்கள நடுவுறு செமம றன்புடை
யெங்கணு நீங்கிய விலக்க வேந்தருஞ
சங்கையில் பூதருந் தலைச்சென் றீண்டினர். (௧௮௩)

எரிந்திடு கனன்முக னெய்த வெஞ்சர
மூரந்தனை யகழ்ந்திட வொருதன வன்மைபோ
யரந்தையின் மூழ்கியே யழிந்த வீரமா
புரந்தர னெழூந்தொரு புடையி லெய்தினான். (௧௮௪)

புண்டர கீறணி புனிதன் பாங்கரின்
மிண்டின ரிவரெலா மேவி நிறறலு
மெண்டகு மிளையவ ரெழுவா தமமையுங்
கண்டிலன கவன்றனன் கழறன் மேயினான் (௧௮௫)

ஆண்டகை வீரர்க ளடைய லார்க்கெதிர்
மூண்டம ரியறறிய மூவா நால்வரு
மாண்டன ரேகொலோ மயங்கி னார்கொலோ
யாண்டவர் கிடந்தன ரியம்பு வீரென்றான். (௧௮௬)

என்றலு முக்கிர னென்னுஞ் சாரத
னுன்றுணை யார்களை யொன்ன லன்மகன்
கொன்றன னவருயிர் கூற்றும் வௌவினான்
பொன்றிய வைபபினைப் புகலக் கேட்டியால். (௧௮௭)

இம்பரின் மூன்றுற வியம்பும் யோசனை
யைம்பதிற் றிரண்டின்மே லால மொன்றுள
தம்பருஞ் சிறிதென வோங்கு மாயிடைத்
தம்பியர் மாய்ந்தனா சரத மேயென்றான். (கஅகு)

உக்கிர னினையன வுரைபப யாரினு
மிககவன் வினவியே விழும நோயுறீஇப்
பக்கம தாயினர் படர மேவினான்
ஞெருக்குறு மிளைஞர்க டுஞ்சு மெல்லைவாய். (கஅசு)

வேறு.

ஓசனை நூறு நீங்கி யொலிகழல் வீர னெய்தப
பாசிலை வடதகின் பாங்கே பரிவுடைத் தமபி மார்கள்
காய்சின வங்கி செங்கண் கான்றிடக் கமைளவ ரத்து
வாசமென் பள்ளி மீது மாய்ந்தனர் கிடப்பக் கண்டான். (கசுO)

கண்டனன் விழிகள் செந்நீர் கான்றிட வீழ்ந்து புல்லிக்
கொண்டன னிளைஞர் தம்மைக் கூவின னரற்றிச செவ்வாய்
விண்டன னுயிர்தது மேனி வியர்த்தனன் வீர னவி
யுண்டில தென்னச் சோர்ந்தா னுணர்ந்துபின் னிரங்க லுற்றான். (கசுக)

தம்பிமீர் தம்பி மீரென் றுரைத்திடுந் தழுவிக் கொள்ளீ
ரெம்பிமீ ரென்னு மையோ வெங்ஙனஞ் சென்றீ ரென்னும்
வெம்பினே னென்னு மென்னை விட்டகன் றீரோ வென்னு
நமபினே னும்மை யென்னு நானுமக் கயலோ வென்னும். (கசுஉ)

அங்கிமா முகனே நும்மை யடல்செய வல்லா னென்னு
மிங்குநீா முடிந்தீ ரென்று லெனசெய்வன் றமியே னென்னுந்
துங்கவெம் படைக ளேந்திச் சூழ்ந்துடன் றனையாய் வந்த
வுங்களைத் தோற்றி யானே யுய்ந்தனன போலு மென்னும். (கசுங)

அம்மவோ விதியே யென்னு மாதகா துமக்கீ தென்னு
மிம்மெனச் செல்லா தின்னு மிருததியோ வுயிரே யென்னுஞ்
செம்மைகொள் குணததா ரோடு பிறபபரே சிலரிங் கென்னு
மெம்மையா ளுடைய வள்ளற் கெனனினி யுரைக்கே னென்னும். (கசுச)

சீரிள மைந்தர் துஞ்சச் சிலையொடு திரிவே னென்னி
னூரெனக் கொப்புண் டம்மா வழகிதென் றுற்ற லென்னுஞ்
சூரர்தங் கிளையை யெலலாந் துண்ணெனச சென்று சுறறி
வேரொடு முடித்தா லன்றி யகலுமோ வெகுளி யென்னும். (கசுரு)

துப்புடை வில்லின் கல்வித துணைவர்க ளீண்டு துஞ்ச
வெப்படை தூண்டி னானோ வெரிமுகத் தவுண னென்னு
மப்படை நலகு தேவ ராரகொலோ வறியே னென்னு
மெய்ப்படை வேலி னாருக் கடியரோ வினையே மென்னும். (கசுசு)

அடுவனோ வவுணர் சூழ்வை யென்றிடு மனலி யுண்ண
விடுவனோ விவ்வூ ரென்னு மெந்தைதன் படையைச் சூர்மேல்
விடுவனோ வெனனு மந்தோ வஞ்சினேன் வேலுக் கென்னும்
படுவனோ துயரத் தென்னுஞ் செய்வதென் பாவி யென்னும். (கசுஎ)

ஒன்றிய துணைவர் தம்மை யொருங்குடன் படுந்த தீரா
வின்றமர் செய்து பட்ட வெரிமுகன் றன்பா லன்றோ
வென்றிய தென்னு மென்றன் வீரமா சுண்ட தென்னும்
பொன்றில னளியன் போலப் புலம்பினன் வறிதே யென்னும். (கசுஅ)

வில்லினைப் பார்க்குஞ் செங்கேழ் வேலினைப் பார்க்கு மேனை
மல்லலம் படையைப் பார்க்கும் வாளியைப் பார்க்கும் வீரச்
சொல்லினைப் பார்க்கும் வந்து சூழ்தரு பழியைப் பார்க்குங்
கல்லென வெயிற்றின் பந்தி கறித்திடு கவலு மன்றே. (ககசு)

அருந்துய ரெய்தி யிவ்வா றழுங்கினோ னெளிய னாகி
யிருந்தன னல்ல னேங்கி யாதுமோர் செயலு மின்றி
வருந்தின னல்லன் காணின் மருந்தினுக் குழன்றா னல்லன்
விரைந்துதன் னிளையர் தம்மை யெழுப்பவோர் வினையங் கொண்டான்.()

நாற்றலை யுடைய வண்ண னாரணன் முதலோர் நல்க
வேறறிடு படையி லொன்றை யிளையர்க ளெழுவா மீது
மாற்றலன் விடுத்தா னென்னின் மற்றவ ராவி யுண்டோன்
கூறறுவ னன்றோ வென்னாக் குறித்திவை கூற லுற்றான். (உ0க)

வேறு.

ஊனோ டாவிக் கின்பம் விரும்பி யுழல்கின்ற
வானோ ரேபோற் றனவ ரேபோல் வழிசெல்லா
வேனோ ரேபோ லெண்ணின னேகொல மொராவி
தானோ வுண்பான் கூற்றுவ னென்னுந் தமியோனே (உ0உ)

விரியுமு ணாச்சியை மாற்றுவ தல்லால் விண்ணோரக
ளொருபடை தானு நங்களி னத்தை யுயிருண்ணா
தெரிமுக னென்பா னட்டன னன்றே யிளையோரைத்
தரியல னாகிக் கொன்றவ னம்மா தானன்றோ. (உ0ங)

போதத் துக்கோர் வைப்பிட மாயோர் பொறியாகி
மூதக் கோரெண் டாரக மூல மொழிகேட்டு
வேதத் தோனை வெஞ்சிறை பூட்டி விதியாற்று
மாதித் தேவன் றம்பிய ரென்ப தறியானோ. (உ0ச)

ஆறட் பட்ட வையிரு காலத் தரனுமங்
கூறிட் டோவாச் சேயுயிர வவ்வக் குறுகுங்காற்
சீறித் தாளாற் றுக்கிய சின்னஞ் சிறிதுந்தான்
மாறிற் றிலலைக் கூற்றது தானு மறந்தானோ. (உ0ரு)

சீலந் தன்னோ லோர்விழு போதைச் சிவனுக்கென்
றோலங் கொண்டே விண்ணிடை புக்கோ னுயிர்வௌவிச்
சூலந் தன்னிற் கண்ணுத லேறச் சுழலுற்றுக்
காலன் பன்னாட் டேங்கிய வண்ணங் காணானோ. (உ0சு)

நஞ்சிற் றீயன் வேட்டுவ னன்றோர் நாண்முற்றுந்
துஞ்சற் றாணற் றான்மிசை விலவந் தூர்த்தோனை
வெஞ்சொற் கூறிப் பற்றலும் யாங்கண் மிகவெற்ற
வஞ்சித் தன்றீ தாயினர் போன தறியானோ. (உ0எ)

அக்கா லத்தி னெல்லையின் மைந்தற் கரவென்றே
முக்கா லோதித் தீமை குறித்தே முடிவோனை
மெய்க்கா லன்றா தாயினர் பற்ற விடுவித்தே
யிக்கால் கொண்டே யவரை யுதைத்தேன் யானன்றோ. (உ0அ)

மெய்ச்சியல் கொள்ளாத் துன்மதி யாலு மிகவெய்ய
துச்சக னாலு மேனைய ராலுந் தொனனுளி
னிச்சக மாற்றுந் தன்னிறை நீங்கி யிடரெய்தி
யச்ச முழந்தே பட்டது சண்ட னயர்ததானே. (உ0கூ)

நீறு முகத்தார் கண்டிகை பூண்டார் நிமலன்பேர்
கூறு முகத்தார் தம்புடை செல்லக் குலைகூற்ற
னாறு முகத்தா னடியவ ராவி யலைத்தானே
சேறு முகததாழ் கரியை யடாதோ சிறுபுள்ளும். (உக0)

வேறு.

என்னு மாற்றங்க ளியம்பியே யிளையவ னெழுந்து
பின்னர் யாததிடு தூணியி லொருசரம் பிடுங்கித்
தன்ன கங்கொடே யன்னதன் றலைதனிற் றரும
மன்னர் மன்னவன் கண்டிட விததிறம் வரைவான். (உகக)

வேலு டைத்தனி நாயகற் கிளையவன் விடுததேன்
கால நாடுறு கூற்றுவ னென்பவன் காண்க
கோல வெஞ்சிலைத துணைவர்த மாருயிர் கொண்டாய்
வாலி தோவிது விடுக்குதி கடிதென வரைந்தான். (உகஉ)

செந்ந லங்கிளர் தன்னகத் தின்லவா தீட்டிப்
பொன்னெ டுஞ்சிலை வாங்கியப பகழியைப் பூட்டிப்
பன்னி ரண்டுதோள் விமலனை மனங்கொடு பரவி
மின்னெ னச்சென்றி யமபுரம் புகுமவகை விடுத்தான். (உகங)

கரந்தை சூடுவான் றிருமகற் கிளையவன் கணைமுன்
விரைந்து தெண்கட லேழையுங் கடந்துவிண் ணோங்கி
யிருந்த மானசோத தரகிரித தென்புறத தியம
புரந்த னிறசென்று மறலிதன் முனபுபோந் ததுவே. (உகச)

தொடுத்த வக்கணை யந்தகன் முன்புதுண் ணெனப்போ
யடுத்து வீழ்தலும் விமமித மெய்தியே யவன்சென்
றெடுத்து நோக்கினன் வீரவா குபபெய ரிளவல்
விடுதத தாகலு முற்றுற வுணாந்தனன் விரைவில். (உகரு)

அயிலெ டுங்கணைப் பாசுரத் தகலம துணாந்து
துயரு ழந்தஞசி யீண்டில ரிளையவன் றுணைவர்
பயில வெங்ஙனஞ் சென்றன ரோவெனப் பாததான்
கயிலை யேகியே யிருப்பதா வுணர்ச்சியிற் கண்டான். (உகசு)

கண்டு தேறினன் கடாமிசை யேறினன் கடுங்கால்
கொண்ட தானைகள் சூறையங் காலெனக் குழுமப்
பண்டு தானுறை பதியினை நீங்கினன் படரா
வண்டர் நாயகன் கயிலையஞ் சாரலை யடைந்தான். (உகஎ)

ஆன காலையி லாயிடைப் பொதும்பரோன் றதனின்
மான வேற்படை யவுணர்தம் படைகளின் மாண்ட
சேனை வீரர்கள் சூழ்தர வெழுவருஞ் சிறந்து
கான விஞ்சையர் பாடல்கேட் டிருப்பது கண்டான். (உகஅ)

தொழுது மற்றவர் முன்னுற மறலிபோய்த் துன்னி
முழுது ணர்ந்துளீர் நுங்களை நாடுவான் முன்னே
னழுகி தென்றிவ ணிருப்பதென் னென்னையு மயிராப்பா
னெழுவி ருங்கடி தெழுவிரிப பூதரோ டென்றான். (உகக)

என்ற காலையி னெழுவரு மெழுந்திரு மருங்கு
நின்ற பூதர்கள் யாவரும போந்திட நீங்கி
யொன்றொர் மாத்திரை யொடுங்குமுன் னவுணர்கோ னுறையு
மன்றன் மாநக ரடுகளம் புக்கனா மன்னோ. (உஉ0)

புக்க காலையி னெழுவருந் தம்முடல் புகுந்தார்
மிக்க பாரிடத் தலைவர்கள் யாவரும் விரைவிற
ருக்க வீழ்தரு மியாக்கைக ளூறறனர் சுராக
ளக்க ணந்தனிற் பூமழை தூவினின் றார்த்தார். (உஉக)

இன்ன வேலையி னெழுவரும் பதைபதைத் தெழுந்து
முன்ன வன்றன தடிக்கம லங்களை முறையாற்
சென்னி தாழ்வுற வணங்கினர் செங்கையா லெடுத்துப்
பொன்னின் மார்புறப் புல்லின னெல்லைநீர் புகழோன். (உஉஉ)

புல்லி னானிள வீரரைப் புயங்கமுண் டுமிழ்ந்த
வெல்லி னானென விளங்கின னவுணரை யினிநான்
வெல்லி னாலடல் செய்வதோ வரிதென விறலுஞ்
சொல்லி னான்மகிழ் வாயினான் புன்கணுந் தொலைந்தான். (உஉங)

அண்ட ருந்திற லெழுவரும் பிறருமுய்ந் தெழுதல
கண்டு வீரமா புரந்தர னுங்கணத் தவருந்
திண்டி றறபுனை யிலக்கரு மூவகையிற சிறந்து
கொண்டல் கண்டிடு சாதகம போலுளங் குளிர்ந்தார். (உஉச)

அன்ன தாகிய வெல்லையிற் கூற்றனு மணிகந்
துன்ன வாயிடை வந்தன னிளவலைத் தொழுது
மின்னு லாவிய வேலினய் தமியனை வெகுண்டாய்
முன்னி கழ்ந்திடு வரன்முறை கேளென மொழிவான். (உஉ(

எழுதி றத்தரு மிங்ஙனந் தம்முடல் விட்டுக்
குழுவி னோடுபோய்க் கயிலையஞ் சாரலிற குறுகி
வழிப டுஞ்சில பூதருஞ் சுற்றிட வதிந்தா
ரழிபெ ருந்துய ருழத்தலிற றெரிந்திலே யதனை. (உஉசு)

அங்க மீதினி னீறுகண் டிகையினை யணிந்தார்
தங்கள் பாலினுஞ் செல்லுதற் கஞ்சுறுந் தமியே
னிங்கு நின்னிளை யாருயிர் கொள்வனோ வெவரும்
வெங்க னற்பொறி யுண்பரோ பசிபபிணி மிகினும். (உஉஎ)

வினைய முன்னிநீ விடுகணை நோக்கியான் வெள்ளித்
தனிவ ரைப்பெருஞ் சாரலிற் போர்த்தசா ரதரோ
டுனது தம்பியர் தங்களை விளிதகிவ ணுய்த்தேன்
முனிவு கொள்ளலை யையவென் னிடையென மொழிந்தான். (உஉஅ)

அந்த நன்மொழி வினவலு மையனுக் கிளவ
னந்து யர்க்கடல் சுவற்றினை கயிலையி னமர்கள்
வந்த தன்மையைத் தேற்றில மயங்கியீண் டுறாம்
புந்தி கொள்ளலை யாவது நீயெனப் புகன்றான். (உஉகூ)

புகல லுற்றபின் விடைகொண்டு கூறறெனும் புத்தே
ளுவகை தன்னொடு தன்புரத் தேகின னென்னொ
ரிகலை வெஃகியே பூதருந் துணைவரு மேதத
கிகரி லாதவ னன்னதோர் களத்திடை நின்றான். (உ௩0)

நின்று மற்றிவை நாடிய வொற்றர்கீ ணகரிற்
சென்று சூரனைத் தொழுதுநின் மதலைபோர் செய்து
வென்றி மொய்ம்பினன் விடுத்திடு வீரன்மாப படையாற்
பொன்றி னன்பொடி யாகிவீழ்ந் தனனெனப புகனறார். (உ௩க)

வேறு.

அக்கா லைதனி லவுணாக் குளெலா
மிக்கான் புவியின் மிசைவீழ்ந் தயரா
வெக்கா லுமுறா தவிடாக் கடலுட்
புக்கான் மெலிவோ டுபுலம் புறுவான். (உ௩உ)

உண்ணே யமதா முயிரே யுறவே
கண்ணே மணியே கனன்மா முகனே
விண்ணே கினையோ விவண்மீள் கிலையா
லெண்ணே னுயிர்வாழ்க் கையையிங் கினியே. (உ௩௩)

எந்தைக் கிளையான் றனையிந் நகரின்
வந்துற் றதொர்தூ தன்மலைந் திடலா
னொந்துற் றனைமெய் யுநுடங கினையா
லந்தத் துயரிங் ஙனமா றியதோ. (உ௩ச)

தேறு விகல்செய் திடுதே வரெலா
மாறு மகிழ்வுற் றிடவைத துமனத்
தாறு விடரென் வயினுக கினையாற்
கூறு யிதுவுங் குமரற கியலபோ. (உ௩ரு)

காரோ திமருங் குளகா ரணனே
சீரோ திமனே திருமா லவனே
நேரோ தியவொற் றடநீ முடிகென்
றாரோ தினரோ வததிந் திலனே. (உ௩சு)

பொய்விட் டிடுதா தவர்போ ரிடைநீ
மெய்விட் டனையென் றுவிளம் பினரா
னெய்விட் டவயிற் படைநே ரலன்முன்
கைவிட் டெனையே குவதுன் கடனே. (உ௩எ)

தூதா னவன்வா ளிதுணித் திடவிண்
மீதே கினையென் றுவிளம் பினரப்
போதே யதுணர்ந் துபொறுத் தனனு
லேதே துபொரு தினனென னுயிரே. (௨௩௮)

ஆவா தமியே னயர்வுற் றிடவே
மூவா விளமைந் தமுடிந் தனையே
யோவா துமகப் பெறுவோங் குதவந்
தேய்வார் களுமுண் டுகொலின் னமுமே. (௨௩௯)

எல்லை யுனைநம் புவதென் னகலவாய்
சொல்லே துமுரைத் திலைதான் புறுவேன்
கல்லே புரைநின் கவினமார் பதனை
வல்லே தழுவிக் கொளவுந் தருமோ. (௨௪௦)

செய்யாய் கரியாய் திருவே சிறுவா
மெய்யா ருயிரே விடலா யடலவேற்
கையா யரசே களிமீற தமியேற
கையா வெனைநீ யுமயாத தனையோ. (௨௪௧)

என்றின் னனபன் னியிரங் குதலு
நன்றன் னையதோர்ந் துநடுங் கமுறுத்
துன்றுந் துயரக் கடறுன் னினளா
லன்றந் நகர்மிக் கதழுங் குரலே. (௨௪௨)

ஆக திருவிருத்தம் ௧,௫௪௯.

---

வசனம்

அவ்வாறடைந்த அக்கினிமுகன் தனது பிதாவினுத்தரவு பெற்று தன் படைக்கலமெல்லாமெடுத்துக்கொண்டு தேரேறி மிக்க சேனைகள்சூழ்ந்துவரப் பூதப்படைகள்நிறைந்திருக்கும் போர்க்களங்குறுகினன். பூதர்களும் அவுணர்களும் கைகலந்தனர். அவர்கள் அவ்வாறு போர்செய்கையில் இருநிறத்தாரில் இலக்கத்தவர்முனைந்து அவுணவெள்ளத்தைச் சின்னாபின்னப்படுத்த அவுணர்கள் எதிர்நிற்கமாட்டாமல் ஓடிப்போயினர். அவர்களோடக்கண்டு அவருள் மேகன் சோமன் முதலிய படைத்தலைவர் பூதப்படையை நெருங்கி மிகவு முக்கிரமாய்ப் போர்செய்தார்கள். அதைக்கண்டு நவவீரருளொருவனாகிய வீரபுரந்தரன் விரைந்து போர்செய்யத்துணிந்து அச்சேனைகளையும் சோமனையும் கொன்றனன். பின்னும் அவுணர்கள் இதைக்கண்டிரியல்போயினர் அக்கினிமுகன் கொதிப்புள்ள முகமுடையானாய்க் கூரியபாணங்களையேவி அநேகம் பூதரைக்கொன்றான். வீரபுரந்தரனே அவன்மேற் கோபமாய் எதிர்த்துக்கொலைத்தொழில்செய்யும் கூரியபாணங்களையேவ அதைக்கண்டு அக்கினிமுகனும் வீரபுரந்தரன் வில்லையுந்தேரையும் அம்பறாத்தூணியையுமறுத்ததுமன்றி அவன் மார்பிலும் அழுந்த அநேகமாயிரம் பாணங்களை யேவ அவன் மூர்ச்சையடைந்தான். இவன் இவ்வாறு மூர்ச்சையடையக்கண்டு வீரபுரந்தரனும் வீரவாகுதேவரு மொழிந்த வீரரெழுவருந் தத்தம் வில்லை வளைத்துப் பலபாணங்களைத்தொடுத்து எதிர்த்தார்கள். அக்கினிமுகனும் அஞ்சா நெஞ்சுபடைத்தவனாய் அவர்கள் தோளிற்பட அநேகமாயிரம் பாணங்களையேவி

ளுன். அதைக்கண்ட வீரர் எழுவரும் அநேகமாயிரம் பாணங்களைத்தொடுத்து அவனது நெ ்றிமுதலியவிடங்களில் தைக்கும்படி எய்ததன்றி அவன் தேரையு மழித்தனர். பி ்பு அவன் சிவாஸ்திரத்தைத்தொடுத்து அவ்வீரர்மேல்விடுத்தான். அவர்கள் இ ஆக்நேயாஸ்திரமென்று எண்ணி வருணாஸ்திரத்தை யேவினர். அது அதற்கு எதிர்நிற்கமாட்டாமல் பின்னிட்டமையால் அவ்வெழுவரையும் அந்தச்சிவாஸ்திரம் கொன்றுவிட்டது. பிறகு வீரவாகுதேவர் தம்தேரை அவனுக்கெதிரே செலுத்தி நெடுநேரம் பலபடைகளைக்கொண்டு போர்செய்து நிற்கையில், அவ்வக்கினிமுகன் சற்று மனந்தளர்ந்து தன் ஊரிலுள்ள காளியைநினைத்தான். அவளும் அவனுக்கெதிரேவந்து நீ யஞ்சவேண்டாம் என்று பூதர்கள்மேல் சென்று சூலப்படையை யேவினாள். அது ஆலகாலவிஷம்போலத் தோன்றுதலும் அதனை வீரவாகுதேவர் எழுபாணங்களால அறுத்துத்தள்ளினார்; பின்னும் ஒரு சூலத்தை யேவினாள், அதையும் தகர்த்துவிட்டார். பின்பு அக்காளியானவள் வீரவாகுதேவரது தேர்மீதுபாய்ந்தாள், வீரவாகுதேவர் அவளுடைய எட்டுக்கைகளையும் தன் ஒருகையால் சேர்த்துப்பிடித்துக்கொண்டு மற்றொருகையால் அவள் மார்பில் அறைந்தார். அதனால் அவள் உதிரங்கக்கி மூர்ச்சித்துவிழுந்து பிறகு எழுந்து வீரவாகுதேவரைத் துதித்துப்போயினாள். அக்கினிமுகன் இதைக்கண்டு வீரவாகுதேவரை வந்தெதிர்த்து இவரது தேரையழித்துச்சங்கத்தொனிசெய்தான். இவர் அநேகபாணங்களால் அவனது விலலையொடித்து அவன்தலையையும் அறுத்துத் தள்ளினார். அக்கினிமுகன் இறந்ததுகண்டு அவுணப்படைகள் வீரவாகுதேவரை யெதிர்த்து பலவகையாயுதங்களைக்கொண்டு போர்செய்தன. வீரவாகுதேவரும் பல கணைகளைவிடுத்து அவுணப்படைகளை யழித்துவிட்டனர். அதன்பின்னர்ப் பூதவீரரும் இலக்கத்தவரும் வீரவாகுதேவரை நெருங்கினர். இவரும் தன்தம்பியரெழுவர் இறந்துபட்டதாக உக்கிரன் சொல்லக்கேட்டு தம்கணகளில் நீர்சொரிய நின்று அவர்கள் சரீரத்தைநோககிப் புலம்பினார். பிறகு வீரவாகுதேவர் தன்தம்பிமாரை எழுப்பவேண்டுமென்று எண்ணிததகணையொன்றையெடுத்து அதன்முனையில் தமகத்தால் சண்முகப்பெருமானுக்கு இளையவன்விடுத்தது இது இயமன் காண்க. நீ என்தமபியர் உயிர்கொண்டது தகுதியன்று நீ அவர்களை விரைவில் அனுப்பக்கடவை என்று கோபத்தோடெழுதி அக்கணையை வில்லிற்பூட்டி இயமனிடததிற்குச் செலுத்தினர். அதை இயமன்பார்தது மிகவும அஞ்சித் தன்னுலக முழுதுந் தேடிப்பார்த்தும் காணப்படாமையால் கைலையிற்சென்றுபார்க்க அவ்வெழுவரும் அங்குவீற்றிருந்தனர். அவர்கள் அப்போரில இறந்த பூதர்களுடன் வீற்றிருக்கக்கண்டு வணங்கி நீங்கள் போர்க்களத்திலிராமையால் வீரவாகுதேவர் எனக்கு எழுதியனுப்பினார். நீங்கள் விரைந்து வரவேண்டுமென அவ்வீரர்கள் அப்படியே போர்க்களமடைந்து தத்தம் உடல்களிற்புகுந்து வீரவாகுதேவரை வணங்குகின்றனர். அவரும் அவர்களை அன்போடு தழுவிக்கொண்டு மனமகிழ்ந்தார். அப்போது இயமன் வீரவாகுதேவரை வணங்கிததேவரீர் என்மீது ஏன் கோபங்கொண்டீர்? அவர்கள் கைலாயத்திலிருந்தனர். நான் விரைந்துசென்று அவர்களை அழைததுவந்தேன் என்று விடைபெற்றுச்சென்றான். தூதர்களால் அக்கினிமுகனிறந்ததைச் சூரபன்மன் அறிந்து புலம்பும்போது அவன்மக்கள் மூவாயிரவரும் அவன்சமுகம் வந்தடைந்தார்கள்.

அக்கினிமுகாசுரன்வதைப்படலம் முற்றிற்று.

---

# மூவாயிரர்வதைப்படலம்.

ஆயதோர் காலைமூ வாயி ரத்தொகை
மேயின மைந்தர்கள் வினவி யீதெலா
மாயிரு விசும்பினை யளாவு மன்னவன்
கோயிலை யடைந்தனர் குழுவொ டேகினர். (க)

துன்னுறு பழியெனுஞ் சூறை யெற்றிட
வின்னலந் தெண்டிரை யெறிய வைகிய
மன்னிய னேக்கியே வணக்கஞ் செய்தெழீஇ
முன்னர்நின் றினையன மொழிதன் மேயினா. (உ)

உரமிகு மிலக்கரு மொழிந்த வெண்மரும்
பெருவிறன் மொய்ம்பனும பிறரு முற்றுழி
யெரிமுக னொருவனை யேவி னுயவன
செருவினை யவரொடு செய்ய வல்லனே. (ங)

வலியவர் தம்மையும் வரம்பின் மிக்குறின்
மெலியவ ராயினும் வென்று போவரா
லுலகினில் வழக்கமீ துணாந்தி லாய்கொலோ
கலைபயில கறபுடைக் காவன் மனனனே. (ச)

ஒட்டலர் குழுவினு ளொருவ னென்றனை
விட்டனை மேல்வரும் வினைய மோாந்திலை
யட்டுறு தாரினு யமரி லங்கவன்
பட்டன னென்றிடிற் பரிதற் பாலையோ. (ரு)

தீமுக னொருவனுக் கிரங்கித் தேம்பலை
யாமுள மிரணிய னின்னு முற்றுளன்
றாமரை மகிழ்நனை தளைப டுத்திய
கோமக னுளனொரு குறையுண் டாகுமோ. (சு)

நண்ணல ராயினோ நலிந்து செற்றிடக்
கண்ணகன் றோபரி களிறு தானவ
ரெண்ணில மாய்ந்தவென் றிறையு மாகுலம்
பண்ணலை யையவப பரிசு கேட்டிநீ. (எ)

ஏழெனுங் கடல்வறந் திடினு நின்னடி
சூழ்தரு படைக்கொரு தொலைவு மிலலையா
லூழியு மழிகுறு வொருவ நீயிவட்
பீழையி னுறுவதும் பெருமைப் பாலதோ. (அ)

நின்றுவா னளவெலா நிவந்த மேருவாங்
குன்றிமின் றிலைததுணை குறைந்த தன்னதாற்
றுன்றுநந தானையுட் டுன்ன லார்பொர
வின்றுகா றுகவே யிறந்த சேனையே. (கூ)

சிறந்திடு தலைமையுந் திறலு மாக்கமு
மறந்தனை யாகியே வலிய னுகுநீ
யிறந்தவர் தமைநினைந் திரங்கற் பாலையோ
புறந்தரு கின்றதோ ரமரர் போலவே. (கo)

அண்டர்த முதல்வனை யயனை மாயனைச்
சண்டனைப பவனனைத் தழலை யாரையும்
விண்டொடர் செலவினில் விரைந்து பற்றியே
கொண்டனை கின்றனங் குறிப்ப தாகுமேல். (கக)

விண்ணினை யலைக்கவு மேரு வெற்பொடு
மண்ணினை மறிக்கவும் வடவை மாற்றவு
மெண்ணினை யெண்ணினும் யாங்க ளெந்தைநின்
னுண்ணினை வின்படி முடித்து மொல்லையில். (கஉ)

பன்னுவ தென்பல பணித்தி யாங்கள்போய்
முன்னுறு பூதரை முரண்கொள் வீரரைப்
பின்னுறு கந்தனைப் பிறரை யீண்டொரு
கன்னலின் வென்றுநின் கழலகள் காண்டுமால். (கங)

என்றிவை புகறலு மிடுக்க ணீங்கியே
நன்றிது மைந்தர்கா ணடமின் போர்க்கென
வன்றிறன் முதலவனை வணங்கிக் கைதொழா
நின்றவ ரேவரு நீங்கி னாரரோ. (கச)

வேறு.

வன்னச் சிலைகொண் டனாவான் கவசந்
துன்னுற திடுவித் தனர்தூ ணியினை
வென்னிற செறிவித் தனாவெவ் விரலிற்
பொன்னுற திடுபுட் டில்புனைந் தனரால். (கரு)

சீர்புக் குறுகைப் படைசெங் கைகொளாத்
தார்புக் கமர்தும் மைதனைத் தரியா
மார்புக் கலமாக் கலன்வாக் கமிடாத
தோர்புக் கனர்வந் தனசே னைகளே. (கசு)

சங்கங் கண்முழங் கினதண் ணுமைகோ
டெங்கெங் குமியம் பினவெண் படகந்
துங்கங் கெழுபே ரிதுவைத் தனவா
லங்கங் குருமுற றனவா மெனவே. (கள)

அவுணப் படையெண் ணிலவாற் றன்மிகுங்
கவளக் கரியெண் ணிலகா மருசீ
ரிவுளித் தொகையெண் ணிலவீட் டமுரு
வுவணுற் றிடுதே ருமுலப் பிலவே. (கஅ)

முழங்குற் றனபல் லியமும் மதமாத்
தழங்குற் றனதே ரொலிதந் தனவா
லழுங்குற் றனவாம் பரியாங் கவைகள்
விழுங்குற் றனபா ரொடுவிண் ணினையே. (கசு)

நீடுற் றிடுதேர் களினீ டுவச
மாடுற் றனதா ரிலளித் தொகுதி
பாடுற் றனவெங் கொடிபா றுமிசை
கூடுற் றனகூ ளிகுனித் தனவே. (உ0)

தொகையா னைகடம் மொடுசூழ் கரியின்
றகையா யினதா னவர்தம் முருவஞ்
சிகையா ரழலா யினசென் னியெழும்
புகையா னதுவா னெழுபூ ழியதே. (௨௧)

இப்பான் மையதா கியெழுந் துபடை
யப்பால் விரவுற் றழியன் னதுகண்
டொப்பா ருமில்சூ ரனுகந் தருள்கூர்
மெய்ப்பா லகர்சென் றனர்வெய் தெனவே. (௨௨)

மூவா யிரர்தா னைகண்முந் துசெல
வேவா மெனவெம் மைகொடே குதலுந்
தேவா னவர்கண் டனர்சிந் தைவெரீஇ
யாவா வெனவஞ் சியழுங் கினரே. (௨௩)

அக்கா லையின்மூ வகையா யிரரு
மெய்க்கார் புவிசென் றுவிரைந் தனபோற்
றொக்கா டல்புரிந் திடுதொன் னிலமேற்
புக்கா ரதுகண் டனர்பூ தர்களே. (௨௪)

எதிர்கின் றனர்பூ தர்களேற் றனரான்
முதிர்கின் றசினங் கெழுமொய் யவுண
ரதிர்கின் றனபே ரிகளண் டமெலாம்
பிதிர்கின் றனநே மிபிளந் ததுவே. (௨௫)

வாள்கொண் டெறிகின் றனர்வல் லெழுவுத்
தோள்கொண் டிடுவெங் கதைதூண் டினராற்
றாள்கொண் டசிலைக் கணைதாஞ் சொரிவார
நீள்கொண் டலையன் னகிசா சரரே. (௨௬)

சூலப் படைவிட் டனர்தோல் பரிதிக்
கோலப் படைவிட் டனராகுந் தமுட
ஞாலப் படைவிட் டனரா டுகுடட்
சாலப் படைகின் றுதளர்ந் திடவே (௨௭)

அடுகுற் றிடுசூ லமடற் கதைக
டொடுகுற் றனர்நே மிகளேண் டிடுவார்
விடுகுற் றனாவெற் பினைவெவ் வசுரர்
படுகுற் றனரார்த் தனர்பா ரிடரே. (௨௮)

வீழ்கின் றனபட் டிடும்வீ ரருடற்
றாழ்கின் றனசெம் புனல்சாய்ந் தனவா
லாழ்கின் றனவே லையிலங் கதன்வாய்
மூழ்கின் றனபேய் கொடிமொய்த் தனவே. (௨௯)

மறக்குஞ் சரமா யினவாம் பரிதேர்
சிறக்கின் றனபட் டனதீ யவுணர்
துறக்கின் றனரா விதொலைந் திடுவா
ரிறக்கின் றகணங் களுமெண் ணிலவே. (௩0)

### வேறு.

காணாவது மூவாயிரர் கனல்வெஞ்சினந் திருகிக்
கோணாகம தெனவேயடல் கொடும்பூதரைக் குறுகி
நீணாகம தெனவிண்டொட நிமிர்வெஞ்சிலை குனியா
வேணாகுணத் தொலிகொண்டன ரிதுகொலுரு மெனவே. (௩௧)

வாங்குற்றிடு சிலைதன்னிடை வல்லேசர மாரி
தூங்குற்றிடு புயலாமெனச் சொரிந்தார்சொரிந் திடலும்
மேங்குற்றன பூதப்படை யிரிகின்றன வதுகண்
டாங்குற்றிடு கணவீரர்க ளவுணர்கெதிர் புகுந்தார். (௩௨)

தண்டத்தவர் தடந்தேரினைத் தகர்ப்பார்சிலர் தருவின்
றண்டத்தவர் பரியான்றொகை தொலைப்பார்சிலர் பாகன்
கண்டத்தலை யுருளும்படி யுதைப்பார்சிலர் கரத்தா
லண்டத்தினி லவர்தேரெடுத் தெறிவார்சில ரம்மா. (௩௩)

எழுக்கொண்டவர் தடமார்பினி லெறிவார்சில ரெரிவாய்
மழுக்கொண்டவர் சிலையிற்றிட வெறிவார்சிலர் வரையின்
குழுக்கொண்டவ ரனிகந்தனைக் கொல்வார்சிலர் வாவிற
பழுக்கொண்டிடு கவடாமெனப் பறிப்பார்சிலர் முறிப்பார். (௩௪)

தாவாதுயர் கணவீரர்கள் சமரிவ்வகை புரிய
மூவாயிர ரெனுமைந்தர்கண் முனியாச்சிலை குனியா
மேவாதுக முடிவெல்லையி லுருமுச்செறி வனபோற்
றீவாயுமிழ் கனல்வாளிகள் சொரிகின்றனர் தெரிந்தே (௩௫)

நேர்புற்றமர் புரிகின்றவர் நெடுந்தீவடிக் கணைகண்
மார்புற்றிடத் தடந்தோளினும் வரையுற்றிட முகத்தின்
சார்புற்றிடக் கரமுற்றிடத் தாளூறறிடச் செந்நீர்
சோர்புறறிடத் தளர்ந்தேமனந் துயருறறிட நின்றார். (௩௬)

கலக்கித்தட மலர்சிந்திடு களிறாமென வடல்செய்
விலக்கற்கரு மூவாயிரர் வில்லாண்மையும் வல்லா
ரலக்கட்படு கணவீரர்க ளழிகின்றது நோக்கி
யிலக்கத்தரி லோராயிர ரெரியாமெனச் செயிர்த்தார். (௩௭)

குன்றேயென மிசைபோகிய கொற்றப்புயத் தவன்முன்
சென்றேதொழு திப்போரினைச் சிறியேங்களுக் கருண்மோ
வென்றேயுரைத் தனர்வேண்டலு மினையோனது தறகிசையா
நன்றேயமர் செயநீவிர்க ணடமின்னென வகன்றார் (௩௮)

விசயன்சய னிடபன்கர வீரன்னதி கோர
னசலன்னதி குணன்வாமன னனந்தன்னக ளங்கன்
வசையில்புக ழனகன்சத வலிமாருதன் வருணன்
சசிகண்டகன் முதலாயிரர் சமரின்றலை புகுந்தார். (௩௯)

முந்துற்றிடு மவர்யாவரு மூவாயிர ரெதிர்போய்க்
கந்தக்கட வுளையன்பொடு கருத்திற்றொழு தேத்தி
மைந்துற்றிடு தவகார்முகம் வளையாவடி வாளி
யந்தத்தினின் முகிலாமென வவர்மேற்சொரிந் தார்த்தார். (௪0)

ஆர்க்கின்றதொர் பொழுதத்தினி லவர்வில்வலி தன்னை
மூர்க்கன்றரு மறமைந்தர்கண் மூவாயிரர் காணாக்
கூர்க்கின்றதொர் நெடுவாளிகள் குணிப்பில்லன பூட்டிச்
சூர்கொண்டல்க டம்மோடமர் புரிந்தாலெனச் சொரிந்தார். (௪௧)

மூவாயிரர் விடும்வாளிகண் முடுகிக்கடி தேகித்
தாவாவிற லோராயிரர் தம்வாளியை யடுமான்
மேவார்புகழ் விறன்மைந்தர்கள் வெவ்வாளிக ளவுண
ரேவானவை துணியும்படி யெதிர்சிந்திடும் விரைவில். (௪௨)

இவ்வாறமர் புரிகின்றுழி யிலக்கத்தவர் தேரைத்
தெவ்வாகிய மூவாயிரர் சிதைவித்தனர் சரத்தா
லவ்வாறுதெ ரிந்தேயெம ரவுணன்றரு மைந்தர்
கைவார்சிலை யொடுதேரினை யழித்தார்கணை தூண்டி. (௪௩)

இலக்கத்தவ ரெதிர்கின்றவ ரேமப்படு தேரைச்
சிலைக்கட்படு நெடுவெங்கணை சிந்திச்சிதை வித்தே
நிலக்கட்பட மூவாயிரர் தொகைதன்னையு நிறுவி
மலைக்கட்படு மரிபோற்புடை வருதேரிடைப் புகுந்தார். (௪௪)

சிலைபோய்க்கடு விச்சென்றிடு தேர்போயடல் செய்யுங்
கொலைபோயணி கம்போயுளங் கொள்ளும்பெரு மித்தத்தி
னிலைபோய்வெகு ளூற்றேபுவி நின்றோதமைப் பிணித்த
வலைபோகிய மானென்னென வளைத்தாரவ மைந்தர். (௪௫)

வேறு.

பொலம்படு தேரொடு பொன்ற வன்மைபோய்த்
தலம்படு மவுணர்க டளர்தன் மேயினா
ரிலம்படை வந்துழி யீதல சான்றவர்
குலம்படு துயரொடு குறையுந் தன்மைபோல். (௪௬)

பறித்தனர் வரைகளைப் பழும ரம்பல
முறித்தனர் வியப்புறு மொய்ம்பர் தம்மிசைச்
செறித்தன ரண்டமுந் திசையு ஞாலமு
மறைத்தன ரமரரு மருட்கை யெய்தினார். (௪௭)

தெவ்வரை யாகிய சிறாக டொன்மரங்
கைவரை வீசலுங் கணைக டூண்டியே
யிவ்வரை யெனுங்கணத் திறுத்து வீட்டினா
ரைவரை வென்றிகொ ளணிக வீரரே. (௪௮)

அட்டடல் கொண்டிடு மவுண ரிவ்வகை
விட்டன கிரியெலாங் கணையின் வீட்டியே
நெட்டழற் பகழிக ணிறத்தின் மூழ்குறத்
தொட்டன ருறுப்பெலாந் துளைத்தன் மேயினார். (௪௯)

துளைத்திடு கின்றுழிச் சோரி சாய்ந்திட
விளைத்தன ரொருசில ரிரிந்திட் டார்சிலர்
களைத்தன ரொருசிலர் கனன்று நின்றுபோர்
விளைத்தன ரொருசிலர் பிறங்கல வீசுவார். (௫௦)

தேவரை வென்றுளார் சிலவர் மால்வரைக்
காவலர் தேரினைக் கரங்க ளாலெடா
மேவரும் புணரியுள் வீசி யார்த்தன
ரோவென வமரர்கள் புலம்பி யோடவே. (ருக)

நீசர்க ளொருசிலர் நேமி சென்றிட
வீசிய தேரிலும் விரைவி னீங்குறுக்
காசினிப் பாலராய்க் கார்மு கம்வளைஇ
யாசுக மழைசொரிந் தார்த்துப் பொங்கினார். (ருஉ)

மீண்டிடு பொருநர்கள் விசிக மாமழை
தூண்டிட வவுணர்க டொகையிற் பற்பலர்
காண்டலும் வடவையின் கணத்திற் சீறியே
யாண்டெதிர் புகுந்தன ரசனி யாப்பினார். (ருங)

மறத்தொடு மருத்தின மரங்கொள் கொம்பரை
யிறுத்திடு தன்மைபோ லெந்தை பின்வரு
திறத்தவர் சிலைகளைச் செங்கை வன்மையாற்
பறித்தனர் முறித்தனர் படியில் வீசினார். (ருச)

பற்றலர் கொடிமரம் பறித்துச் சிந்துழிச்
செற்றமொ டெம்பிரான் சேனை வீரர்கண்
மற்றவ ரும்பதை பதைப்ப மரண்கையா
லெற்றின ரனையரு மிடியிற் றாக்கினார். (ருரு)

பரவிய வுவரியும் பாலின் வேலையுந்
திரைகளை யெதிரெதிர் சிதறி யார்த்தெழீஇப்
பொருதிற மேயெனப் பொருவின் மற்றொழி
விருதிற வயவரு மிகலி யாற்றினார். (ருசா)

கொடுந்தொழி லாரொடு கொற்ற வீரர்க
ளடைந்தன ரிவ்வகை யாண்மைப் போரினைத
தொடர்ந்துநின் றியற்றியே தொல்லை வன்மைபோ
யுடைந்தனர் விசயனங் கொருவ னன்றியே. (ருஎ)

இசையுறு தமரெலா மிரிந்து போதலும்
விசயனே யெனப்படும் வீரன் சீறியே
வசையுறு மவுணர்கோன் மகாரைக் கூற்றுவன்
றிசையுறு நகரிடைச் செலுத்து வேனென்றான். (ருஅ)

வேணியின் மதியுடை விமல னல்கிய
வேணுறு வரிசிலை யீறி லாதது
தூணியி னிடையுறத் துன்னிற் றன்னைட்
பாணியி லெடுத்தனன் சமரிற் பாணியான். (ருகூ)

கரதலத் தெடுத்திடு கார்மு கந்தனை
விரைவொடு கோட்டியே விசய னென்பவ
னொருதனி மாருதத் தோடிச் சூழ்வுறாச்
சரமழை பொழிந்தன னவுணர் தங்கண்மேல். (கூ0)

கரங்களை யறுத்தனன் கழல்க ளீர்ந்தனன்
னுரங்களை யறுத்தன னுயர்திண் டோளொடு
சிரங்களை யறுத்தனன் சிலரைக் கானிடை
மரங்களை யறுத்திடும வண்ண மென்னவே. (சுக)

அற்றன வுறுப்பெலா மனுகித் தம்மில்வந்
துற்றன கூடிய வுணர்வு மாவியு
மற்றவ ரெழுந்தனர் வாகை வீரன்மேற்
பொற்றைக ளாயின பொழிந்து போர்செய்தார். (சுஉ)

தலையொடு கரங்களுந் தாளுந் தோள்களு
மெலிவொடு துணிந்தவா மீட்டுங் கூடின
ரலர்தரு பங்கயத் தண்ண றன்னிடை
வலிதவர் பெற்றிடு வரத்தின் றன்மையால். (சுங)

கண்டமு மொய்ம்பருங் கழலும் வாளியாற்
றுண்டம தாயினர் தொக்கு மேயினா
சண்டவெங் கால்பொரத் தணந்து சிந்திய
தெண்டிரை நெடும்புனன் மீட்டுஞ் சேர்தல்போல். (சுச)

பன்னருந் திறலினன் பகழி பாய்தொறு
மன்னவன் மைந்தர்கண் மாண்டு தோன்றுவார்
மின்னது வந்துழி விளிந்து வெவ்விரு
டொன்னிலை யெய்தியே தொடர்ந்து தோன்றல்போல். (சுரு)

கையொடு சென்னியுங் கழலு மார்பமுங்
கொய்யுமுன் றொன்மைபோற் கூட மைந்தர்க
ளொய்யென வெழுந்தன ருலகிற் றேர்வுறிற்
செய்யுறு தவத்தினுஞ் சிறப்புண் டாங்கொலோ. (சுசு)

கண்டனன் விசயனுங் காளை யாவிபோய்த்
துண்டம தாகியே துஞ்சி னோரெழீஇ
மண்டமர் புரிவது மனத்தின் விம்மிதங்
கொண்டனன் பொருதிறல் குறைந்து நின்றனன் (சுஎ)

அகத்திடை விம்மித மடைந்து நின்றுளான்
றிகைத்தனன் வரங்கொலிச் செய்கை யென்றனன்
புகைத்தென வுயிர்த்தனன் பொங்கு கின்றன
னகைத்தன னிவாசெய னன்று நன்றெனா. (சுஅ)

தொட்டிடு பகழியாற் றுணிந்து போரிடைப்
பட்டவ ரெழுந்தனா பகழி பின்னரும்
விட்டிடி னுவதென் மேவ லார்தமை
யட்டிட லினறெனக் கரிது போலுமால். (சுகூ)

அன்னவர் தமையட லரிய தாமெனி
னென்னலர் படையொடு மொன்றிச் சுற்றியே
பன்னெடு நாளமர் பயின்று நிறபினு
மென்னுயிர் கொள்வது மெளிதன் றாலரோ. (எ0)

வென்றில னிவர்தமை வென்றி லேனெனிற்
சென்றெதிர் மாற்றலா செருவில் வன்மைபோய்ப்
பொன்றுதல் பெறறிலன் பொதுவ ஞோர்மகன்
கொன்றிடு முலவையின் கொள்கை யாயினேன். (எக)

பற்றலா தங்களைப் படுபபன் யானெனு
வெற்றிகொள் வானென விளம்பி வநதயான்
செறறில ஞகியே சிலையுங் கையுமாய்க்
கொறறவ ஞேடுபோய்க் கூட லாகுமோ. (எஉ)

மாற்றலர் வரத்தினர் மாயப பான்மைய
ராற்றவும் வலியரென் றறைந்து மீள்வனேற்
ஞேறறன னென்றெமா துறப்ப ரன்றியும்
போற்றலர் விடுவர்கொல் புறந்தந் தேகவும். (எங)

பித்தரின் மயங்கில னுணர்வும பெற்றுளே
னெய்த்திலன் வலியொடு மின்னு நின்றனன்
வைததிலன் புகழினை வசையொன் றெய்துவேன்
செததில னிருந்தனன் செயலற் றேனெனமுன். (எச)

விண்டினை மாறுகொள் விசய னிவ்வகை
யண்டருந் துன்புகொண் டகததி னுன்னுழி
யுண்டொரு செய்கையா னுய்யு மாறெனக்
கண்டனன் றியாககடல கடக்கும் பெற்றியான். (எரு)

ஆறுமா முகபபிரா னன்றி யிவ்விடை
வேறொரு துணையிலை மெய்மமை யீதெனத்
தேறின னவனடி சிந்தை செய்தனன்
மாறிழி யருவிநீா வழியுங் கணணினுன். (எசா)

அண்ணலங் குமரனை யகததுட் கொண்டுழி
யெண்ணிய வெண்ணியாங் கெவாக்கு நல்குவோன்
விண்ணிடை யொல்லையின் விசய னென்பவன்
கண்ணிடைத் தோன்றியே கழறன் மேயினுன். (எஎ)

வேறு.

கேளிது விசய வொன்னூர் கிளையினை முடிப்பா னுன்னித்
தாளொடு முடியுங கையுந் தடிந்தனை தடிந்த தெலலா
மீளவுந் தோன்றிற் றன்றோ மேவலா பெற்ற தோராய்
நீளமா வயமின் ருகி நின்றனை தளரே னெஞ்சம். (எஅ)

ஏற்றபல் படைக டமமா லிவர்தமைப் பண்ணு ணின்று
வீறறுவிற் றடுவை யேனும விளிகில ரொருங்கு வலலே
யாற்றலசோ படையொன் றுய்ககி னனைவரு முடிவ ரீது
நாறறலை யுடையோன் றென்னு ணலகிய வரம தென்றுன். (எகூ)

என்றிவை யுரைத்து வள்ள லிபபரை யளிததோன் சென்னி
யொன்றினை வாங்கி யேனே ருளமய லகற்று மெந்தை
வென்றிகொள படையை நலகி விசயனுக களிதது மேவார்
பொன்றிட விதனை யின்னே விடுகெனப புகன்று போனுன். (அ0)

தேர்ந்தனன் முருகன் வாய்மை சிறந்தனன் மகிழ்ச்சி யுள்ளஞ்
கூர்ந்தனன் ஞமலி யூர்தி கொற்றவெம் படையை வாங்கி
யார்ந்தநல் லன்பிற் பூசை யாற்றின னதனை யெல்லா
மோர்ந்தன னவுணர் தம்மு ளொருவனும் மதத னென்போன். (அக)

ஈண்டிவ னமர்க ளெல்லா மிசைவரப் படைய தொன்றான்
மாண்டிட வடுவான் போது மற்றதன் முன்னர் மாயம்
பூண்டிடு படையா லின்னோற் கிறுதியைப் புரிவ னென்னா
வாண்டுதன் னுளத்தி லுன்னி யவுணனப் படையை விட்டான். (அஉ)

மாயவள் படையை முன்னம் விடுதலும் வள்ள னோக்கித்
தீயுமிழ் கின்ற காரி திண்படை செலுத்தச் சென்று
பாயிருள் பரந்து நேரும் படையினைத் தடிந்து மூப்பா
லாயிரர் தமையுஞ் சுற்றி யடல்செய்து மீண்ட தன்றே. (அஙு)

ஒருகணப் பொழுதின் முன்ன ரோராயிர மூப்பா லோருஞ்
செருநிலத் தவிந்தா ரன்ன செய்கையை விசயன் காணா
முருகனைப் பரவி நின்றான் முழுமதி தன்னைக் கண்ட
பொருதிரைப புணரி யென்ன வார்த்தனர் பூத ரெல்லாம். (அச)

ஏமுறு மவுணர் தானை யிறந்திடா தெஞ்சிற ரெல்லாங்
காமரு திசைகண் முற்றுங் கதுமென விரிந்து போன
மாமலர் பொழிந்தார் விண்ணோர் மற்றிவை யனைத்து நாடிக்
கோமகன் முன்பு சென்றார் குரைகழ லவுணத் தூதர். (அரு)

வெய்யவன் பகைவன் றாளை வியன்கழல் பணிந்து தூத
ரையநின் மைந்தர் மூப்பா லாயிரர் தம்மை யெல்லா
மொய்யென விலக்கர் தம்மு ளொருவனே முடித்தா னீது
பொய்யல சாத மென்னப் பொருக்கெனப் புலம்பி வீழ்ந்தான். (அசு)

வீழ்ந்தனன் பதைத்துச் சோர்ந்து வெய்துயிர்த் தசைந்து விம்மிப
போழ்ந்திட நிலத்தைக் கையாற் புடைத்தனன் புரண்டு வெறுபிற்
றாழ்ந்திடு மருவி யென்ன விழிபுனற் றாரை பொங்கச்
சூழ்ந்தவ ரற்ற மன்னன் றுன்பமேற் றுன்பம் வைத்தான். (அஎ)

அன்னதோ ரெல்லை மைந்த ரனைவரு முடிந்த தோரா
மன்னவ னிசைமை நீங்கி மாயிருந் தவிசிற் றப்பி
யின்னலின் மறிந்த தென்ன விரவியங் கடவுண் மேல்பால்
பொன்னெடுங் கிரியி னெய்தி யொளியிலன் புணரி வீழ்ந்தான். (அஅ)

ஆக திருவிருத்தம் - க,சுஙுச.

---

வசனம்.

அந்தச்சமயத்தில் மூவாயிரபுத்திரர்களும் சூரபன்மனது சமுகத்தில் வந்தார்கள். அவர்களைக்கண்ட சூரபன்மன் வாய்விட்டுப்புலம்ப, அவர்கள் தந்தையைத் தேற்றி, நாங்கள் போர்க்களத்திற்சென்று பகைவரைவென்று வருகிறோமென்று விடைபெற்றுப்போய், பூதப்படைகள்மேல் பாணமழைபொழிந்தார்கள். பூதப்

படைவீரரும் அவ்வாறே பொழிந்தனர். இவ்வாறு இருபடைகளும் கைகலந்து போர்செய்கையில், இலக்கத்தவரில் ஆயிரவர்வந்து அவுணப்படைகளைச்சூழ்ந்து பாணமழைபொழிந்தார்கள். அம்மூவாயிரவரும் பூதவீரர்விடுத்த சரங்களால் கைவில் இழந்தவர்களாகி மலைகளைப்பிடுங்கிப் பூதவீராமேல் எறிந்தார்கள். அவற்றையெல்லாம் இவர்கள் தமதுபாணங்களால் பொடியாக்கினார்கள். அதுவேயன்றி அவுணர் மூவாயிரவரையும் கணைகளால் சல்லடைக்கண்போலத் தொளைத்துவிட்டார்கள். அப்போது அவர்கள் பூதவீரர்களை அவர்களேறியிருந்த தேர்களோடெடுத்துக் கடலில்விட்டெறிந்தார்கள். இவர்கள் கடலிலவிழுவதன்முன்பே, இலாகவமாய்க்குதித்துப் போர்செய்யததொடங்கினார்கள். அந்தப்போரில் அவுணர்கள் இளைத்து, மீண்டும்போர்செய்யத்தொடங்கினார்கள். அப்போது விசயனென்னும் வீரனொழிய மற்றவர்களெல்லாரும் அந்த மூவாயிரவரால் வருந்தினார்கள். அதைக் கண்ட விசயன் கோபங்கொண்டு சிலபாணங்களையேவி அம்மூவாயிரவரிற் சிலரைக் கையறுத்தும், சிலரைக் காலறுத்தும், சிலரை மார்பிளந்தும், சிலரைத் தலையறுத்தும் கொன்றான். கொல்லப்பட்டவர்கள் மறுபடியும் பிழைத்தெழுந்து போர்செய்யவருவதைக்கண்ட விசயன் அதிசயித்து, சண்முகப்பெருமானைத் தியானிக்க, அவர் எழுந்தருளி ஒருவயிரப்படையளித்துப் போயினர். இச்செய்தியையறிந்து மூவாயிரவருள் ஒருவன் மாயாஸ்திரத்தையேவ, விசயனும் வயிரக்கணையை யேவினான். அதுசென்று மாயாஸ்திரத்தையறுத்து அந்த மூவாயிரவரையுங் கொன்றது. அந்த மூவாயிரவரும் இறந்ததைத் தூதர்களால் அறிந்த சூரபன்மன் மிகவும் மனந்தளர்ந்து அழுது புலம்பினான்.

மூவாயிரர்வதைப்படலம் முற்றிற்று.

---

# தருமகோபன்வதைப்படலம்.

முடிவுறு புதல்வரை முன்னி முன்னியே
படிமிசை யுழந்திடு மிறைவன் றன்முனம்
படியறு நல்லறப பகைஞன் போந்திடா
வடிமுறை பணிந்துயின் றறைதன் மேயினான். (க)

மன்னவர் மன்னநீ மனத்தி லிவ்வகை
யின்னல்செய் தாறறவு மிரங்கு வாயெனிற்
றுன்னலர் மகிழுவர் சுரர்கள் யாவரு
நன்னகை செய்குவர் நமரும் வெள்குவார். (உ)

முந்துறு மாற்றலர் முனைவெம் போரிடைத்
தந்தையர் விளியினுந் தமர்கண் மாயினு
மைந்தர்கள் விளியினு மான வீரர்கள்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தீர்வரோ. (ஙு)

ஏற்றிகல் புரிந்திடு மெமரை வௌவிய
கூற்றுளான் றன்மைபோற் படைத்துக் கூட்டுவா
னாற்றிசை முகனுள னுமை ளோாநம
தாற்றலு மிருந்தன வயர்வும் வேண்டுமோ. (ச)

அந்தமில் வெறுக்கையு மழிவி லாயுளு
நந்தலில் வன்மையு நடாத்து மாணையு
மிந்திர ஞாலமு மிருக்க வெந்தைநீ
புந்தியி லமரர்போற் புலம்ப லாகுமோ. (௫)

விண்ணவர் சிறையினை விடாது வைத்திடக்
கண்ணிய விரதமுங் கழிந்த மானமு
நண்ணலர் தங்களை நலியுந் தன்மையு
மெண்ணலை யிடையறு திடுக்கண் போற்றுமோ. (௬)

மாற்றல ராகிய வமரர் மானவர்
கோற்றொடி மடந்தையர் குழவிப் பாலக
ராற்றிடு துயருனக் காவ தன்றெனத்
தேற்றின னமைச்சருட் டிமை மிக்குளான். (௭)

வேறு.

ஆற்றிடு தரும நீத்த வமைச்சன்வந் தினைய வாற்றாற்
றேற்றிடு கின்ற காலைச் சிறிதுதன் னவல நீத்துக்
கூற்றென யானே சென்று கூடலர் தொகையை விண்மே
லேற்றுவ னென்று சீறி யவுணர்கோ னெழுந்து சென்றான். (௮)

சென்றிடு மன்னர் மன்னன் சேவடி முறையிற் றாழா
வின்றிவ ணிருததி யானு மனிகமு மின்னே யேகி
வன்றிறற் பகைஞர் தம்மை வளைதருவல் விரைந்து சாடி
வென்றியுற் றிடுவ னென்ன வேண்டின னமைச்சர் மேலோன். (௯)

அறந்தவி ரமைச்சன் வேண்ட வவுணர்கண் முதல்வன் மீண்டு
சிறந்திடு மடங்க லாற்றுஞ் செம்பொன்செய் பீட மேவி
யுறைந்தன னினைய காலை யொல்லையில் விடைகொண் டேகிப்
புறந்தனில் வந்து வல்லே போர்பபெருங் கோலங் கொண்டான். (௧0)

போதகத் தரசு தம்முட் புண்டரீ கப்பேர் பெற்ற
மாதிரக் களிற்றை யன்னோன் வல்லையிற் கொணர்தி ரென்னத்
தூதுவர்க் குரைத்த லோடுந் துண்ணென வனைய ரோடி
மேதகு கிகள நீக்கி விடுத்துமுன னுய்த்து நின்றார். (௧௧)

புந்தியிற் குறிப்பிற் செல்லும் புண்டரீ கப்பேர் பெற்ற
தந்தியந் தலைவன் மீது தருமத்தை வெகுளும் வெய்யோ
னந்தமில் படைக ளோந்தி யமைச்சர்கள் பலருஞ் சூழ
விந்திர னிவன்கொ லென்ன வேறின னெழிலி போல்வான். (௧௨)

அறைந்தன படகம் பேரி யார்த்தன விரலை தீபஞ்
செறிந்தன கரிதேர் வாசி தெழித்தன வவுணர் தானை
நிறைந்தன பதாகை யீட்ட நெருங்கிய கவிகை வான
மறைந்தன வெழுந்த பூழி மாதிர மிருண்ட வன்றே. (௧௩)

எண்ணிலா வெள்ள மாவு மிபங்களு மிவுளித் தேரும்
வெண்ணிலா வெயிற்றுச் செங்கண் வீரரும் புடையிற் சுற்றப்
புண்ணுலா முசுத்துப் பேழ்வாய்ப் புண்டரீ கத்தை யூர்ந்தே
யண்ணன்மா நகரு நீங்கிப் போயின னறத்தை நீத்தோன். (௧௪)

ஆண்டவர்மற் றிதனை நோக்கி யம்மவோ வறத்தை நீத்த
கண்டகன் சிலையொன் றேந்தி மாதிரக் களிறு தன்னுட்
புண்டரீ கத்தை யூர்ந்து பொருமெனி லிவனை யாற்றல்
கொண்டிட லரிதா மென்ன விரங்கினர் குலைந்த மெய்யார். (க௫)

ஆவண மனந்த நீங்கி யனிகமுந் தானு மேகி
மூவிரு முகத்து வள்ளன் முழுதருள் பெற்ற சேனை
காவலன் வெகுண்டு நின்ற களத்திடை யணுக லோடு
மேவல ரெதிர்ந்தா ரென்னு வியன்கழற் பூத ரார்த்தார். (க௬)

பொற்றைக ளேந்தி யார்க்கும் பூதரை யிலக்கர் தம்மைச்
சுற்றுறு துணையி னோரைத் தொல்லைநா ணகரஞ் செற்ற
கொற்றவன் றனை யன்னோ வலியினைக் கொடியோ னோக்கி
யிற்றது கொல்லோ நந்தம் வாழ்க்கையென் றிரங்கிச் சொல்வான். (க௭)

வேறு.

பகைஞர்க ளாயினோர் பரவித் தன்மிசை
யிகல்செய வருவரே லிரங்கி யேங்குதன்
மிகுபழி யிங்கிது வினவின் மானவர்
நகைசெய்வர் பொருவதே நன்று போலுமால். (க௮)

எச்சமில் சேனையும் படையு மீண்டிய
கைச்சிலை யிருந்தது கரியு மொன்றுள
தச்சுறு கின்றதெ னுவ தாகுமாற்
பொச்சையர் கடனனி பொருமல் கொள்வதே. (க௯)

வெல்லினுஞ் செறுநர்முன் வெரிந தீயினு
மல்லது விளியினு மாக யானினி
மல்லலம் படையொடு மாற்ற லார்மிசைச்
செல்லுவ தன்றியே யிரங்கல் சீரிதோ. (உ0)

வேறு.

கண்ணுறு படையை நோக்கிக் கருத்திடைக் கவலை யெய்தி
யெண்ணுகின் றயர்தல் வீர ரியற்கைய தாமோ பின்னர்
நண்ணிய வாறு நண்ண நானினித் தளரே னென்னுத்
துண்ணெனத் தேரிச் சென்றான் சூரனுக் கமைச்ச னானோன். (உக)

இங்கிது பொழுது தன்னி லெங்கணு மிருட்கு ழாஞ்சூழ்
கங்குலும் பகலு மாலைக் காலமுங் கலந்த தென்ன
வங்கவன் றனை வெள்ளத் தவுணரும் பூதர் தாமும்
பொங்கொலிக் கடல்போ லார்த்துப் பொள்ளென வமரி னேற்றார். (உஉ)

வேறு.

தலைப்பட வெழுக்களிற றணைடிற் றாக்கினு
ரிலக்குற நேமிகள் கணிச்சி யேவினார்
மலைகுவை யெறிந்தனர் மரங்கள் வீசினார்
சிலைத்தனர் வயிர்த்துடி செறிவெம் பூதரே. (உ௩)

வில்லுமிழ் சரத்தினில் வேலில் வாளினிற்
கல்லினி னஞ்சினிற் கழுமு ளாயதில்
வல்லையத் தனிலுடை வாளில் வச்சிரச்
செல்லினி னுதிகெழு திகிரி நேமியில். (உ௪)

தண்டினிற் றோமரந் தன்னிற் சங்கினிற்
பிண்டிபா லத்தினி லாற்றப பீடமேல்
கொண்டதோ ரெழுவினிற் பிறவிற் கொட்புறா
வண்டரு மவுணரு மணிந்து போர்செய்தார். (உரு)

அயர்ப்புறு தானவ ரமைச்சர் யாவரும்
வியர்ப்பினில் வந்திடு வெங்கண் வீரரும்
வயப்பெருஞ் சிலையினை வணக்கி வாளிதூய்ப்
புயற்படு பெயலெனப் பொழிந்து போர்செய்தார். (உசு)

பெய்வதொத் தெங்கணும் பெரிதும் வீழ்தலா
லுய்வதெத் தன்மையென் றுலக மச்சுற
விவ்வகைத திறத்தின ரிரண்டு சாரினுந்
தெய்வதப் படைகளு மரபிற் சிந்தினர். (உஎ)

மாய்ந்தனர் பூதரும் வரம்பி றானவர்
சாய்ந்தனர் கரங்களுந் தலையுஞ் சிந்தினர்
வீந்தன கரிபரி விளிந்த தேர்நிரை
பாய்ந்தன செம்புனல் பரந்த கூளியே. (உஅ)

நொந்தன ரிலக்கரு நோன்மை நீங்கினர்
முந்துறு மமைச்சர்போர் முயன்று நின்றன
ரந்திலவ் வேலையி லதனை நோக்கியே
வெந்திறல் வெய்யவன் வெகுண்டு சென்றனன். (உகூ)

இடித்தென வுரப்பின னிமைப்பி லெய்திமுன்
வடித்திடு சிலையினை வாங்கித் தானவர்
முடித்தலை பனிததிட முழுதும் யாக்கைகள்
பொடித்தென வழுத்தினன் புங்க வாளியே. (௩0)

நீண்டதோர் சிலீமுக நெடிது மேலவன்
றாண்டிய காலையிற் றுணிந்த கையினர்
வீண்டிடு தலையினர் விளிதரு மெய்யினர்
மாண்டன ரமைச்சாகள் வறந்த தானையே. (௩க)

துறக்கம தலைத்திடு தொலைவி றானவர்
மறுக்கமுற றசைந்தனர் வந்து போர்செய
விறற்படு சாரதர் வெகுண்டு மேற்செலா
விறப்புறு வரைபல வெடுத்து வீசினர். (௩உ)

வீசிய வேலையில் வெதும்பி விம்மியே
மாசுறு தானவர் வாகை சிந்திய
யாசறு போனகத் தட்டில் சூடுறு
பூசைய தாமென வுடைந்து போயினர். (௩௩)

இடைந்தன ராகியே யவுணர் யாவரு
முடைந்தனர் போதலு முலப்பில் பூதர்கள்
படர்ந்தனர் தெழித்தனர் பையுண் மாலையிற்
றொடர்ந்தனர் பறறினர் தொலைத்தன் மேயினர். (௩ச)

கண்டன னுங்கவை யறந்தைக் காய்பவன்
புண்டிகழ்க் கணையகட் பூதர் மேறசெலா
விண்டொடர் பெருந்தனு வாங்கி வெவ்வுயி
ருண்டிடு சரந்தெரீஇ யுலப்பின் றேவினன். (௩௫)

ஏவிய நோன்கணை யாவு மேன்றெழு
தீவிழிப் பூதர்பாற் சேற லிந்திரன்
வாவிய வூர்திகள் வாரி நேமியிற்
றாவிய துள்ளியின் றோற்றம் போன்றதே. (௩௬)

கைச்சிலை யுகைததிடு கணைகள் யாவையு
நச்சென விடுததலு நடுங்கிப பூதாக
ளச்சுற மெலிந்தன ரமரர் கோமகன்
வச்சிர மெயதிய வரைகண் மானவே. (௩௭)

வேறு.

வானவர்கள் கோமகன் வயக்களிறி தென்னத்
தானவர்கள் போற்றுதரு மப்பகைஞ னூர்ந்த
வானையது பூதர்தமை யங்கைகொடு வாரி
யூனொடுயிர் சிந்திட வுடற்றியதை யன்றே. (௩௮)

கோடதொரு நான்குகொடு குத்தியது தாளி
னூடுற மிதிததவ னுழக்கியது வாலாற்
பாடுற வெறிந்தது பணைக்கையது கொண்டே
வீடுறமு னெற்றியது வீரபடை தன்னை. (௩௯)

மாறகலும் வெங்கரியிவ் வாறடல்செய் காலை
வீறுகெழு சாரதர்கள் வெற்புமிசை வீசி
யூறுசெய வங்கதி னுலப்பில்கணை யோச்சி
நாறுநடு வார்தொகையி னண்ணினர்கள் வீரர். (௪0)

காயமுழு தொனறிய கணைக்கலபடை யாவு
மூயதவ ளக்களிறு முற்றுமெழு சோரி
பாயவணை கிறபது பணிகருமுவு கவ்வச்
சேயபணி சுற்றமறை திங்கள்படர்ந் தென்ன. (௪௧)

வெந்திறல்கொள் புண்டரிக வேழமிது தன்மை
கொந்தநெனி னுந்தனது நோன்மையழி யாதாய்
முந்தியிடு சேனையை முருக்கவது நோக்கித
தந்திகிரை சாரதர் தமைத்தடித ஆற்ற. (௪௨)

கண்டைகெழு தாரிஞெலி கல்லென விரைப்ப
வண்டமுடைந் தென்னநனி யார்த்தவுண னூரும்
புண்டரிக வெங்களிறு போாத்தொழி லியற்ற
வுண்டைகெழு பூதகிரை யொய்யென வுடைந்த. (௪௩)

தண்டமுடை கின்றசெய றன்னைவிறல் வெய்யோன்
கண்டன னழுன்றுதன கார்முகம தொன்று
கொண்டன னெடுத்தது குனிததழலின் வாளி
யண்டர்ப்கை யூர்தியி னடைச்சிநனி யார்ததான். (௪௪)

ஆர்த்தடரும் வேலையி லடற்களிறு மங்கோர்
மூர்த்தமயர் வுற்றது முனிந்தவுணர் கோமான
பார்த்திறைபி னூறுகணை பாலமிசை யோச்சுத
தேர்த்தலவு சோரியொடு தேர்மிசை யிருந்தான். (சஙு)

இருந்ததிற லோன்மிசையொ ரெஃகமது வாங்கி
விரைந்துதரு மபபகை விடுத்திட லுநோக்கி
மருந்தெனமுன் வந்துதிறல வாசவனவ் வைவேன்
முரிந்துதுணி யாகவொா முரட்கணை தொடுத்தான். (சசு)

மத்தகய மன்னதிறல் வாசவன் விரைந்தே
பொததிரம தொன்றுகொடு போரயின் முருக்கிக்
குததிரம தொன்றவுணா கூவிவெருக் கொளள
வத்திரமென் மாரிகொட வனறனை மறைத்தான். (சஎ)

மறைத்தலு மறப்பகைஞன் வாளிமழை தூவிக
குறைததன னளபபில்கணை யேனவை குழீஇபபோய்ச்
செறுததவன தாகமிசை சென்றுசெருக் கின்றி
விறற்கவச நக்குபு விளிந்துபுடை வீழ்ந்த. (சஅ)

வேறு.

மீண்ட வேலையின் வெய்ய சூழ்ச்சியோன
மாண்டு ளானென வாகை வீரன்மேற்
பூண்ட யங்குறு பொன்னந் தண்டமொன்
றீண்ட வீசினன் யாரு மஞ்சவே. (சகூ)

எழுவி னீள்கதை யிமைப்பிற் சென்றவன்
பழுவின் மார்பகம் பட்ட வேலையின்
விழும நோயுறு விம்மி னைரோ
வழுவை மேலையோன் வயததின் மேவவே. (ருO)

கருத்தி னல்லறங் காய்ந்த வன்செய
றெரிதது நின்றிடுந் திறலகொள வாகினு
னுருகது நோககியே யுரையுந் தன்னுளக
கருததும பிறபடக் கடிது செல்லுவான். (ருக)

நின்னி லையதின் னோர லன்புயந்
தன்னை யாததுகிற் றருவம் யாமெனப
பன்னு மானவர் பௌவ நீத்தொராய்
முன்னு தானவர் முதல்வ னோபுக. (ருஉ)

எதிரி லாமையால் யாரு மஞ்சவே
யதிரு நோன்கழ லாடன் மொய்ம்பனை
மதியி ருனவன் மழைகண் மின்குழூச்
சிதறி யென்னதீச் சிந்த நோக்கினன். (ருங)

நோக்கி நீகொலோ நோன்மை யோடெனைத்
தாக்கு மாறுவந் தனையை யானுனை
யாக்கை சிந்திய வமைந்து நின்றனன்
காக்க வலலையேற காததி நீயென்றான். (ருச)

மொழியு மாடல்சேர் மொய்ம்பன் கேட்டிது
விழுமி தாரினும் வெற்றி பெற்றன
னழிவ னேனெனக் காடல் கொள்வன்யான்
கழியை நீந்துதல் கடலிற் பாடதோ. (ருரு)

மற்றுன் வன்மையு மதர்ப்பு நின்பெருங்
கொற்ற மானதும் வரத்தின் கொள்கையு
மிற்றை வைகலே யீறு செய்வனீ
கற்ற போரினைக் கடிது செய்கென. (ருசு)

வேறு.

கானக்களி வரிபம்பிய கமழ்தார்புனை யகல
வானக்கிறை தனதூர்திகண் மரபோடுசென் றிசைக்குந்
தீனக்குர லெனநாணொலி திசையெங்கணுஞ் செல்லக்
கூனற்சிலை தனையொலலையிற் றருமப்பகை குனித்தான். (ருஎ)

மற்கொண்டிடு மிடன்மொய்ம்புள மதியில்லவ னொருபா
லெற்கொண்டெழு களிற்றின்மிசைச் சிலைவாங்கின னிருத்தல்
கற்கொண்டதொா வெள்ளிக்கிரி மிசைகாணிய கணைதூய்
விற்கொண்டொரு பசுங்கார்முகின் மேவுற்றென லாமால். (ருஅ)

அதுவன்றியு மவனுந்திய வடிவெங்களி றலர்தண்
கதிரின்குழு முழுதொன்றுபு ககனந்தனி லெழுசெம்
மதியந்தன தொருபங்கையொர் வயவெம்பணி நுகரப்
புதிதொண்பிறை யதுவொன்றிடை புகுகின்றது பொருவும். (ருகூ)

முந்தேயவ னெடுக்கின்றதொர் முரன்வெஞ்சிலை குனியாக்
கந்தேயென கிமிரதோளுடைக் கடுஞ்சூழ்ச்சிய னொழுகுஞ்
செந்தேனுறழ் குணத்திற்சரஞ் செலுத்தாததிறன் மொய்ம்பற்
கந்தேயுமெய் வெளியின்றென வவனைக்கரந் தார்த்தான். (சு0)

கரக்கின்றவன் விடுவாளிகள் கந்தன்படை ஞன்மெய்
யரக்குன்றுபட் டயின்மாய்ந்தவை யயல்வீழ்ந்தன கண்டா
னிரக்கின்றவர்க் குதவான்கரந் தேற்காத்திரு வினர்பாற்
பரக்கும்பொரு ளுகுத்தன்னதிற் பயன்பெற்றில னெனவே. (சுக)

அயில்சிந்திட முரண்வெங்கணை யயல்வீழ்தலு மடுபோர்
முயலுந்திறல் கெழுமொய்ம்பினன் முனிந்தெஃகமொன் றெடுத்துப்
புயலன்னதொர் வடிவத்தவன் பூணுருநெஞ் செறியச்
செயலன்னது கண்டாங்கெதிர் தீவாளிக ளுய்த்தான். (சுஉ)

உய்க்குஞ்சுடர் வடிவாளிக ளொருங்கேதவ முருக்கி
மைக்கொண்டுலை நிகர்மேனியன் மனந்துண்ணென வணுகி
மெய்க்கொண்டதொர் நெடுஞ்சாலிகை விளியும்படி வீட்டிப்
புக்குள்ளுற மூழ்கித்தனி புறம்போந்தது விரைவில். (சுங)

புறம்போதலு மிகன்மந்திரி பொருமிப்புகை யுயிர்த்து
திறம்போகிய செந்நீரொடு நினைகின்றில னிருப்ப
மறம்போகிய தனிவெங்கரி மகிணன்செய லோரா
அறம்போகிய மனத்தான்றனை யடவுற்றதை யன்றே. (சுச)

முந்துற்றிடு கரிதிண்டிறன் மொய்ம்பன்னிர தத்தைத
தந்தத்தொகை கொடுதாக்குபு சமரத்திடை யிட்ட
துந்தொதததொ ரெழுவொன்றது கைக்கொண்டவன் வலவன்
சிந்தப்புடைத் ததுகாண்டலுஞ் செந்தியெனக் கனன்றான். (கூரு)

வையந்தன திருகலும் வறுந்தயல் பாயா
மெய்யங்கைய தொன்றாலவன் மேல்வந்திடும் வேழக்
கையங்குறப் பற்றுக்கடங் கலுழுங்கவுண் மோதி
யொய்யென்றெடுத தப்பாலையி னுலகம்புக வுய்ததான். (கூசு)

எறிந்தானெடுத் ததுகாலையி லிபம்விண்ணிடை யேகிப்
பிறிந்தாகவ மியற்றெல்லையிற் பெயர்காலையி னமைச்ச
னறிந்தான்கய மிழுந்தேன்கொலென் றயராவத னோடு
மறிந்தான்புனை கலந்தன்னொடு மணிமாமுடி சிந்த. (கூஎ)

வீழ்கின்றதொர் களிறுற்றவும் வெருவிபபதை பதைதது
மாழ்கின்றது புடைபோகிய மதியில்லவ னெழுந்தே
காழ்கொண்டதொர் கதையொன்றுதன் கைக்கொண்டிரத தெறியத்
தாழ்கொண்டதொா கரததிறகடித தலைகொண்டது தறிததான். (கூஅ)

வலிகொண்டதொர் தனிதததண்டது மடிவாதலு மற்றோர்
குலிசந்தனை விடவாங்கெதிர் குறுகக்கரம் பறறிப
புலிகண்டதொர் கலைமானெதிர் புக்காலென வவுணர்
தலைவன்றனை யடன்மொய்ம்பினன் றடமார்பிடைப் புடைத்தான். (கூகூ)

மூளாவுருத் தறைகின்றுழி முதலற்றிடு தருபபோல்
வாளாபுவி மிசைவீழ்தலும் வயமிக்கவ னொருகாற்
றாளாலுதைத் தனனததுணை தருமப்பகை விளிந்தான்
கேளாகிய வவுணப்படை கெட்டோடிய தன்றே. (எ0)

வேறு.

விழுந்தயர் புண்ட ரீக வெங்கரி யுயிர்தது மெல்ல
வெழுந்தது தரும கோப னிறந்தபா டதனை நோக்கி
யழுந்திடு மின்னல் வேலைக ககன்கரை கிடைத்தா லென்னத்
தொழுந்திறல் வீர வாகுத தலைவனை நோக்கி சொல்லும். (எக)

செய்யலை வெகுளி யெந்தாய் சிறியனை யருளிக் கேண்மோ
பொய்யென நினையல் வாழி புண்டரீ கப்பே ருள்ளேன்
வையகம் போற்றுஞ் சீரேன் மாதிரங் காவல் கொண்டேன்
கையனித் தரும கோபன் கடுஞ்சிறைப் பட்டேன் பன்னாள். (எஉ)

வன்றனை சூழ்குந் தீயேன் மதியிலா வமைச்சற் போற்றி
யின்றுகா றார்தி யானே னேவின பலவுஞ் செய்தே
னென்றுநான் மறுத்த துண்டே லுயிர்குடித் தூனும் வல்லே
தின்றிடு மென்றே யஞ்சித திரிந்தனன் செயலவே றில்லேன். (எங)

எட்டுள திசையில் வைகு மரக்கர்தன் னிகழ்ந்தா ரென்று
மட்டறு வெகுளி வீங்கி மற்றெனை யூர்ந்து தொன்னாட்
கிட்டின னவரை யெல்லாங் கிளையொடு முடித்தோன் றன்னை
யட்டனை நீயே யல்லா லவனையா ரடுதற் பாலார். (எச)

புந்தியி லறத்தைக் காயும் புரைநெறி யமைச்சன் றன்னை
வந்தநீ யழித லாலே வானவர் கவலை தீர்ந்தா
ருய்ந்தனன் சிறந்தே னெற்கு மூறிய மிதன்மே லுண்டோ
மூந்நூறு தளையி னீங்கி முத்திபெற் றூரை யொத்தேன். (எகு)

தீதுகொள் பவத்தி னீரா லவுணர்தஞ் சிறையிற் புக்கேன்
மாதவஞ் செய்தேன் கொல்லோ மற்றுனை யெதிரப் பெற்றே
னாதலி னுய்ந்தே னென்ற ஞைசையை யளிக்கு மாற்றாற்
போதவன் றமிய னென்று தொழுதது புண்ட ரீகம். (எசு)

புண்டரீ கத்தின் வாய்மை பொருக்கென வினவு வீர
னண்டரு முவகை பொங்க வகலுதி யிருக்கைக் கென்ன
விண்டொடர் நெறியிற் சென்றாங் கவுணர்க்கு வெருவ லின்றிப்
பண்டமர் திசையி னண்ணிப் பரிவற வைகிற றன்றே. (எஎ)

மாதிரங் காவல் பூண்ட மதக்களிற் றரசு செல்ல
வாதியி லறத்தைக் காயு மழிதக னிறுதி நோக்கிப
பூதர்க ளார்த்து வீரன் புயவலி புகழ்த லுற்றார்
தூதுவ ரதுகண் டோடிச் சூரனைத் தொழுது சொல்வார். (எஅ)

தண்டக முதல்வ கேண்மோ தானையுந் தானு மேகி
மண்டமர் புரிந்து வீர வாகுவா லமைச்சன் மாய்ந்தா
னுண்டையு மழித லுற்ற வுங்குவ னூர்ந்து சென்ற
புண்டரீ கப்பேர் பெற்ற தந்தியும் போய தென்றார். (எகூ)

வேறு.

பழுதுடைத்திறன் மந்திரி பட்டசொல் வினவி
முழுதுசுற்றிய வின்னலம் புணரியின் மூழ்கி
யழுதயிர்த்துமெய் யுயிர்பதை பதைத்திட வங்க
ணெழுதுசித்திரப் பாவைபோ லுணர்வுபோ யிருந்தான். (அ0)

ஆக திருவிருத்தம் - க,எகசு.

---

வசனம்.

மக்களின்மரணத்தால் மனமவருந்தியுள்ள சூரபன்மனிடம் தருமகோப னென்னும் மந்திரிசென்று வணங்கி அவனைத் தேற்றிப் போர்க்குச்செல்ல விடைபெற்று, புண்டரீகம் என்னும் திக்கியானையின்மேலேறிக்கொண்டு போர்க்களத்தையடைந்து போர்செய்கையில், இருபடைகளிலும் அநேகர் மாண்டனர், தருமகோபன் ஏறிவந்த யானையானது பூதப்படை வீரரிற் சிலரைக் கொம்பினாலும் சிலரைத் துதிக்கையாலும், சிலரைக் காலாலும் சிலரை வலாலும்கொன்று குவித்தது. இதைக்கண்ட பூதவீரர் அஞ்சியோடினர். இதை வீரமார்த்தாண்டன் கண்டு, அந்த யானையின்மேல் அநேகம் பாணங்களை யேவி அதை வருந்தச்செய்தான். தருமகோபன் வீரமார்த்தாண்டனுடைய நெற்றியிற்பட் டுருவிப்போம்படி நூறு பாணங்களை யேவினன் அதுவந்து நெற்றியிற்படுதலும் வீரமார்த்தாண்டன் மனங்கொதித்து ஒரு வேற்படையைத் தருமகோபனமேலேவினன். அதைக் கண்ட வீரபுரந்தரன் அவ்வேலைத் தடுத்துப் பாணங்களைப் பிரயோகித்தான். தருமகோபன் அவற்றைத்தடுத்து ஒரு கதாயுததத்தை யெறிந்தான். அதனால் வீரபுரந்தரன் மூர்ச்சை யடைந்தான். இதையறிந்த வீரவாகுதேவர் ஒரு வேற்படையை யெடுத்து தருமகோபன்மேல விடுத்தார். அதனால் அவன் மூர்ச்சையடைந்து

தானேறிவந்த யானைமேல் விழுந்தான். அந்தயானை வீரவாகுதேவரதுதேரைக் கொம்பாற்குத்தியழித்துத் தேர்ப்பாகனையுங் கொன்றது. பிறகு வீரவாகுதேவர் பக்கத்தில் வாளாகுதித்து அந்தயானையை மேலுலகிற்செல்லும்வண்ணம் எடுத்தெறியவே அது ஆகாயத்தினளவுஞ்சென்று பூமியில்வந்து விழுந்து மூர்ச்சித்தது. தருமகோபன் தெளிந்தெழுந்து வீரவாகு தேவர்மேல் ஒரு கதையை யெறிந்தான். அதைத் தமது கையாற்பற்றி அவன்மீதே யெறிந்தார். அது பட்டவுடனே தருமகோபன் பதைபதைத்து நிலத்தின்மேல்விழுந்தான், விழுதலும் வீரவாகுதேவர் காலாலும் உதைத்தார், உதை படுதலும் தருமகோபன் உயிர் நீங்கினான். அவன் படைகளெல்லாம் தலைவிரிகோலமா யோடிப்போயின, அந்த யானை வீரவாகு தேவரைப்புகழ்ந்து விடைபெற்று தனது திசையையடைந்தது; பூதப்படை வீரர்கள் மனமகிழ்ந்திருந்தார்கள். இச்செய்தியைத் தூதர் சொல்லக்கேட்ட சூரபன்மன் துன்பக்கடலில் அழுந்தினன்.

தருமகோபன்வதைப்படலம்முற்றிற்று.

## பானுகோபன்வதைப்படலம்.

எள்ளல் செய்தெனைப் பற்றியே சிறையகத் திட்ட
கள்வ னிப்பகன் முடிந்திடு மன்னது காண்பான்
பொள்ளெ னப்படர் வேலைனைய புந்திகொண் டவன்போ
லொள்ள முறகதிர் வீசியே யிரவிவந் துதித்தான். (க)

சுருதி நீங்கிய வவுணர்கோ னித்திறந் துயரம்
பெரிது மெய்தியே யிருந்துழிக் கண்டனா பெயர்ந்து
குருதி நோக்குடை யொற்றரி லொருசிலர் குறுகிப
பரிதி தன்பகை யடிபணிந் திவையன பகர்வார். (உ)

முன்ன மாயமாப படைக்கலந் தூண்டியே மொய்ம்பு
பன்னி ரண்டுளான் றானையைப் படையொடும் படுத்துத்
தொன்மை நுங்கட் லிட்டனை யிட்டதைச் சுரர்க
ளன்ன காலையே விளம்பின ராறுமுகத் தவற்கே. (ங)

வெங்கண் மால்கரிக் கிளையவ னுங்கது வினவிச்
செங்கை வேலினை யாயிடை யிருந்தனன் செலுத்த
வங்க தொல்லையின் மூவிரு புணரிக ளகன்று
பொங்கு தூயநீ ரளக்கரி னடுவுபுக் கதுவே. (ச)

புக்க வேலையின் மாயமாப் பெரும்படை புறந்தந்
தக்க ணந்தொலை வெய்திய தயாவுயிர்த் தறிந்து
தொக்க பாரிடர் யாவரும் வீரர்தந் தொகையு
மிக்க திண்டிறல் வாகுவு மெழுந்திவண் மீண்டார். (ரு)

ஆண்டவ் வெல்லைவந் திறுத்திடும் வேற்படை யருளி
மீண்டு கந்தவே ளிருந்துழிப் போந்தது விரைவா
லீண்டிம் மாநகர் சுற்றியே செறுநர்க ளிகலின்
மூண்டு போர்செய்வான் புரிசையுட் புகுந்தனர் மூரணல். (சு)

அரண முற்றுளா ரிந்நக ரலைத்தலு மவற்றைத்
தரணி காவலன் வினவியே தன்னய னின்ற
விரணி யன்றனைக் கனன்முகத் தண்ணலை யேனை
மூரணின் மக்களை யமைச்சனை விடுத்தனன் முறையால். (எ)

ஆன காலையில் வந்துவந் தடுசம ராற்றி
மான வேற்படைப் பண்ணவன் றூதனுன் மற்றை
யேனை யோர்களான் முத்திற வீரர்க ளிறந்தார்
மீன மாய்க்கடல் புகுந்தன னிரணியன் வெருவி. (௮)

மன்னர் மன்னவ னிவையெலாம் வினவியே மனத்தி
னுன்ன ருந்துயர் வேலைபுக் காற்றலா துழந்தா
னிங்க கர்ப்படை யாவையும் வறந்தன வின்னுந்
துன்ன லாரிவ ணின்றன ரென்றிவை சொற்றார். (௯)

சொற்ற வாசகம் வினவலுஞ் சூரியன் பகைஞ
னிற்ற வேகொலா நம்பெரும் வாழ்க்கையென் றிரங்கிச்
செறற மோடுதன் னெதிரெதிர் மலைந்திடச் செங்கேழ்ப
பொறறை யன்னதன் னிருக்கையை யொருவினன் போந்தான். (௧௦)

போந்து கோநக ரணுகியே தன்பொடு புணர்ந்த
வேந்தன் மாமல ரடிகளை யுச்சியின் மிலைச்சி
யாந்த ரங்கமா மளியொடு முந்துநின் றவுண
ரேந்த லிம்மொழி கேண்மியா நனகென விசைபபான். (௧௧)

மாயை தந்ததொல் படையினாற் செறுநரை மயக்கித்
தூய நீர்க்கட லிட்டனன் சுரரது புகல
வாய காலையில் வேலவிடுத் தவாதமை மீட்ட
சேயை வெல்வது கனவினு மில்லையாற் றெரியின். (௧௨)

தெரிந்த மற்றுனக் குரைபபதென் முற்பகற் செவ்வேல்
பொருந்து கைத்தலத தாறுமா முகனொடு பொருது
வருந்தி வன்புடை யாறறலு மிழந்தனை வறிதா
யிரிந்து மற்றிவண் வருதலா லுய்ந்தனை யெந்தாய். (௧௩)

ஏற்ற தோர்சிலை யிழந்தனை மானமு மின்றித்
தோற்று வந்தனை தொல்வரத தியற்கையுந் தொலைந்தாய்
சீற்ற முற்றிலன் முருகவே ளவன்சினஞ் செய்யி
னாற்று மோவெலா வண்டமும் புவனங்க ளனைத்தும். (௧௪)

ஆர ணன்றனை யுலகொடு முண்டுமுன் னளித்த
கார ணன்றனி யாழியைக் களத்திடை யணிந்த
தார கன்றனை நெடியமால் வரையொடுந் தடிந்த
வீர வீரனை யாவரே வன்மையால வெல்வார். (௧௫)

புல்லி தாகிய விலங்கினைப் படிபபவா புதலுள
வல்லி யந்தனக் குண்டியாய் மாய்ந்திடுங் கதைபோ
லெல்லை யில்பக லமரரை யலைத்திடும யாமுந்
தொல்லை நாள்வலி சிந்தியே குமரனாற் றொலைந்தோம். (௧௬)

கோட லுஞ்சுனைக் குவளையுங் குளவியுங் குரவு
மேட லர்ந்திடு நீபமும் புனைந்திடு மிளையோன்
பாட லந்திற லுரைப்பதென் னாங்கவன் பணித்த
வாட லம்புயத தண்ணலை வெலவது மரிதால். (௧௭)

நெடிது பற்பகல் செல்லினு நிரம்புவ தொன்றை
யிடைவி டாமலே முயன்றுபெற் றிடுகின்ற தியற்கை
யுடல்வ ருந்தியுந் தங்களான் முடிவுறா தொன்றை
முடியு மீதெனக் கொள்வது கயவர்தம் முறையே. (கஅ)

ஆற்றன் மைந்தரை யிழந்தனை நால்வகை யனிகத்
தேற்ற மற்றனை யென்னுட னொருவனி யிருந்தாய்
மேற்றி கழ்ந்தநின் குலத்தினை வேரொடு வீட்டக்
கூற்றம் வந்தது முணர்கிலை யிகலைமேற் கொண்டாய். (கக)

வெஞ்ச மஞ்செய வல்லவர் கிடைத்திடின் மிகவு
நெஞ்ச கந்தளிர்ப் பெய்துவ னேரலர் சமருக்
கஞ்சி னேனென்று கருதலை யரசநீ யின்னு
முஞ்சு வைகுதி யோவெனு மாசையா லுரைத்தேன். (உ0)

உறுதி யொன்றினி மொழிகுவன் பொன்னக ருள்ளார்
சிறைவி டுக்குதி நம்மிடைச் செற்றம தகற்றி
யறுமு கத்தவன் வந்துழி மீண்டிடு மதற்பி
னிறுதி யிலபக னிலைக்குநின் பெருவள மென்றான். (உக)

வெம்பு தொல்கதிர் வெகுண்டவ னுரைத்தசொல் வினவித்
தும்பை யந்தொடை மிலைச்சிய மணிமுடி துளக்கி
மொய்ம்பு மாகமுங் குலுங்கிட முறுவலித் துயிர்த்து
நம்பி மந்திரச் சூழ்ச்சிநன் றாலென நவில்வான். (உஉ)

வேறு.

என்னிவை யுரைத்தாய் மைந்த வின்றியா னெளிய னாகிப்
பொன்னுல குள்ள தேவர் புலம்புகொள் சிறையை நீக்கின்
மன்னவர் மன்ன னென்றே யாரெனை மதிக்கற் பாலா
ரன்னது மன்றி நீங்கா வசையுமொன் றடையு மாதோ. (உ௩)

கூறொடு வெதிரே பங்கு குறுகிபே ரூமை யானே
ரூனம தடைந்த புன்மை யாக்கையோ ெ ரறியு மம்மா
மானம தழிந்து தொலலை வலியிழுந் துலகில் வைகு
மேனையர் வசையின் மாற்ற மெழுமையு மகல்வ துண்டோ. (உச)

தேவரு மலர்மே லோனுஞ் செஙகண்மான் முதலா வுள்ள
வேவரு மானை போற்ற விருந்தர சியற்ற லுற்றேன்
மூவரின் முதலா முக்கண் மூர்த்திதன் வரங்கொண் டுள்ளேன்
மேவலர் சிறையை யின்று விடுவனோ விறலி லார்போல். (உரு)

பேரெழி லிளைமை யாற்றல் பெறலருஞ் வெறுக்கை வீர
நேரறு சுற்றம் யாக்கை யாவையு நிலைய வன்றே
சீரெனப் பட்ட தன்றோ நிற்பது செறுநர் போரி
லாருயிர் விடினும் வானோ ரருஞ்சிறை விடுவ துண்டோ. (உசு)

இறந்திட வரினு மல்லா விடுக்கனொன் றுறினுந் தம்பாற்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரிய ரானோர்
சிறந்திடு மிரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானுந்
துறந்திடேன் பிடித்த கொள்கை சூரனென் றொருபேர் பெற்றேன். (உ௭)

இன்னுமோ ரூழி கால மிருக்கினு மிறப்ப தல்லாற்
பின்னுமிங் கமர்வ துண்டோ பிறந்தவ ரிறக்கை திண்ண
மின்னெனும் வாழ்க்கை வேண்டி விண்ணவர்க் கஞ்சி யிந்த
மன்னுயிர் சுமக்கி லேன்யான் மாயவன் றனையும் வென்றேன். (௨௮)

அஞ்சினை போலு மைந்த வளியநின் னிருக்கை போகித்
துஞ்சுதி துஞ்ச லில்லா வரத்தினேன் றொலைவ திலலை
நெஞ்சிடை யிரங்கி யாது நினையலை நேர லார்மேல்
வெஞ்சமர் புரியப் போவே னென்றனன் வெகுளி மேலான். (௨௯)

இவ்வகை தாதை கூற விரவிதன் பகைஞன் கேளா
யுய்வகை யில்லை போலு முணர்ந்தில னுரைத்த தொன்று
மெய்வகை விதியை யாரே வென்றவர் வினையிற் கேற்ற
செய்வகை செய்வே னென்னாச் சிந்தைசெய் தினைய சொல்வான். (௩௦)

அறிவொரு சிறிது மில்லே னடியனேன் மொழிந்த தீமை
யிறையது முள்ளங் கொள்ளா தெந்தைநீ பொறுத்தி கண்டாய்
சிறியதோர் பருவப் பாலர் தீமொழி புகன்றா ரேனு
முறுவல்செய் திடுவ தன்றி முனிவரோ மூப்பின் மேலோர். (௩௧)

அத்தநீ வெகுள னம்மூ ரலைத்திடுங் கணங்க டம்மை
வித்தக வன்மை சான்ற விறற்புய னோடு மட்டுன்
சித்தமு மகிழு மாறு செய்குவன் விடுத்தி யென்னாக்
கைத்தல முகிழ்த்துத் தீயோன் கழலிணை பணிதல் செய்தான். (௩௨)

பணிந்திடு கின்ற காலைப் பதுமைதன் கேள்வன் செற்றந்
தணிந்தன னுவகை பெற்றான் றனயநின் னுள்ளம் போர்மேற்
றுணிந்தது போலு நன்றாற் றுன்னலார் தம்மை வெல்வா
னணிந்திடு தானை யோடு மகலுதி யைய வென்றான். (௩௩)

தொடையசை காமர் பொற்றோட் சூரிது புகல மைந்தன்
விடையது பெற்று மீண்டு மேதகு துயரி னோடு
கடிதுதன் கோயில் புக்குக் கடவுளர் பலருந் தந்த
வடனெடும் படைக ளெல்லா மாய்ந்தன னெடுத்தா னன்றே. (௩௪)

மையுறு தடங்கண் மாதர் வனமுலை திளைக்கு மார்பின்
மெய்யுறை யொன்று வீக்கி விரன்மிசைப் புட்டில் சேர்த்திக்
கையுற வொருவில் லேந்திக் கைப்புடை கட்டி வாளி
பெய்யுறு மாவ நாழி பின்னுற வீக்கி யார்த்தான். (௩௫)

சேமமா யுள்ள வெண்ணில் படைகளுந் தேருஞ் சுற்றத்
தாமநீள் கவிகை வேந்தன் றனிமகன் கடையிற் சென்று
காமர்சூழ் கனக வைய மொன்றின்மேற் கடிது புக்கா
னேமமால் வரையி னும்ப ரெழிலியே றணைந்த தேபோல். (௩௬)

மற்றது காலை தன்னில் வாம்பரி நிரையுந் தேருங்
கொற்றவெங் களிறும் வீரர் குழாங்களுங் குணிப்பில் வெள்ளஞ்
சுற்றின வியங்கண் முற்றுந் துவைத்தன துவச கோடி
செற்றின விரவி செல்லுந் தேயம தடைத்த வன்றே. (௩௭)

தேரிடைப் புகுந்து நின்றே னிப்பெருஞ் சேனை வெள்ளம்
பாரிடைக் கொண்டு நின்ற புணரியிற் பாங்கர் சூழச்
சூரிடைக் கொண்ட வன்புந் துயரமு முளத்தை யுண்ணப்
போருடைத் திசையை நோக்கிப் பொள்ளெனப் போத லுற்றான். (௩௮)

வேறு.

மாவாழ் தெருவு பலகோடிகள் வல்லை நீங்கி
மேவார் பொருத களத்தெல்லை விரைந்து நண்ணி
மூவா யிரரும் பிறருமுடி வான நோக்கி
யாவா வெனவே யிரங்கிக்கலுழ்ந் தல்லல் செய்வான். (௩௯)

தாளாண்மை மிக்க வசுரன்மகன் றுங்கல் செல்லா
நீளா குலத்தி னழிகின்றத னெஞ்சு தேற்றிக்
கேளார் தொகைமேற் பெருஞ்சீற்றங் கிளர்ந்து செல்லச்
சூளா லினைய தொருவாசகஞ் சொல்ல லுற்றான். (௪0)

மாசாத்த ரன்ன வயப்பூதரை மாய வாட்டித்
தேசார்க்கும் வேலோற் கிளையோனைச் செகுத்தி டேனேற்
காசாற் பொலியு மகலல்குலின் காமம் வெஃகி
வேசாக்கள் பின்செல் வழியானில் விளங்க யானே. (௪௧)

என்னு வொருகு ளிசையாவவ னேகை லோடு
மன்னுன் வரவு தனைநோக்கி யவுணர் தங்கண்
மன்னுகு நின்ற மகனுகு மலைவ தற்குப்
பின்னுர் வருவா ரெனபூதர்கள் பேச லுற்றார். (௪௨)

பேசுற்ற காலை யவுணப்படை பேர்ந்து சென்றுங்
காசற்ற பூதப் படைதமமெதி ரார்த்து நேரப்
பூசற் பறைக ளியம்புற்றன பூழி பொங்கி
மாசற்ற வானைத் திசையோடு மறைத்த தன்றே. (௪௩)

ஆர்த்தார் கிடைத்தா ரடற்பூத ரடுக்கன் மாரி
தூர்த்தார் படைகள சொரிந்தாமரந் தூவ லுற்றார்
பார்த்தா ரவுண ரெழுநாஞ்சில் பரசு தண்டஞ்
சீர்த்தா கியவில் லுமிழ்வாளி செலுத்தி விட்டார். (௪௪)

வேறு.

பொங்கு வன்மைகொள் பூதரும் விற்கொ ளம்பினை வேலினை
வெங்கொ டுந்தொழில் வினையரு யெறகொ ணுஞ்சி லெழுக்கதை
மிங்கிவ் வாறெதி ரேற்றிடா வர்க்க மானதை வன்கணர்
வங்கண் வெஞ்சம ராறறினர். (௪௫) கற்க ளாற்றுகள் கண்டனர். (௪௬)

ஆரிய வொண்பக லலலொடே சிவந்த பங்கிகொள் சென்னிக
பொருது பார்மிசை புக்கபோ ணிவந்த மொய்ம்பு நிலத்துகக்
லிருதி றத்தரு மிகலியே கவிழ்ந்து ருண்டு களத்திடை
விரவு பூசல் விளைத்தனர். (௪௭) யவிந்த பூத மனந்தமே. (௪௮)

உரங்கொள் பாரிட ருய்த்திடு நெஞ்ச மொய்ம்பு நெடும்பதஞ்
மரங்கள் குன்றுகண் மாண்டிட செஞ்செ வித்தலை சிந்தியே
நெருங்கி நேர்ந்த நிசாசரர் யெஞ்சு தானவ ரெண்ணிலார்
சரங்கள் கொண்டு தடிந்தனர். (௪௯) துஞ்சி னார்பழி துஞ்சவே. (௫0)

பாய்ந்த வாசிகள் பாரிடங்
காய்ந்த யானைகள் காசினி
யேய்ந்த தேர்களி யாவையு
மாய்ந்து பாரின் மறிந்தவே. (௫௧)

சோரி தூங்கிய தொலபிண
மேரு விண்ணை விழுங்கின
காரி யூர்தி கருங்கொடி
யோரி கங்க முலாயவே. (௫௨)

இந்த வாறிரு பாலரும்
வந்து நேர்ந்து மலைந்திடப்
புந்தி நோவறு பூதாதம்
மூந்து தூசி முரிந்ததே. (௫௩)

தாழு மொன்னலர் தாக்கலா
னீள்கொ டிப்படை நெக்கிடக்
கூழை நின்றிடு கூளிக
ளாழி யென்ன வடுத்தவே. (௫௪)

புடைநி ரம்பிய பூதர்வந்
திடைவி டாதெதி ரேற்றிடா
வடலின் மேதகு மவுணமாக்
கடலை நின்று கலக்கினார். (௫௫)

ஒடிந்த தேர்க ளுலந்துபார்
கிடந்த யானை கிளர்ந்தமா
மடிந்த தானவர் மாப்படை
தடிந்து லாயினர் சாரதர். (௫௬)

வேறு.

அதிருங் கழல்சே ரவுணப் படைகண்
முதிருங் குறளொற் றமுடிந் திடலு
மெதிருஞ் சமரத் திடையெய் தியதோர்
கதிரின் பகையங் கதுகண் டனனே. (௫௭)

சிந்தாய் வருமிச் சிலசா ரதரே
நந்தா னையெலா நலிகின் றனரோ
வந்தா வினிதென் றடுதோ கடவா
வந்தான் விரைவா லிமையோர் மறுக. (௫௮)

கடிதாய் வருகா லொடுகா ரெழிலி
படிமே லுறவே படர்கின் றதுபோற்
கொடிதா கியவிற் குனியா முனியா
வடிவா ளிகடூ யவுணன் வரலும். (௫௯)

வண்டார் தெரியல் வலியோன் வரவைத்
தண்டா தமாசெய் திடுசா ரதர்கள்
கண்டா ரெதிரே கடிதே நடவா
வண்டார் தொகையச் சுறவார்த் தனரே. (௬௦)

தருவுங் கதையுந் தருசூ லமுமால்
வரையுங் கொழுவு மழுவு மெழுவுஞ்
சொரிகின் றனாபல வளனுந் தொலையா
வெரியின் மிசையே யிடுமந் தணாபோல். (௬௧)

தொடுகின் றகபூற் றொருசா ரதர்கள்
விடுகின் றவெலா மிசைவந் திடலு
மடுகின் றசினத் தவுணன் றழலிற
படுகின் றசரம் பலதூண் டினனே. (௬௨)

பணிபட் டகனற் படைதூண் டிதலுங்
திணிபட் டகணத் திறலோர் வரைக
ளணிபட் டதருக் குலமா தியெலாங்
துணிபட் டனவே துகள்பட் டனவே. (௬௩)

கல்லுந் தருவுங் கதையும் பிறவுஞ்
சொல்லுந் திறலுந் துகள்பட் டிடலும்
வெல்லுந் தருவன் மிகுசா ரதர்மேற்
செல்லும் படிவெங் கணைசிந் தினனே. (சுச)

சிந்துற் றிடுசெங் கனல்வெங் கணைகள்
பொந்துற றிடுகின் றபுயங் கமென
வந்துற் றுடன்முற் றுமவருத் துதலா
னொந்துற் றனரற் றனர்நோன் மையெலாம். (சுரு)

விடுகின் றகனற் கணைவெந் திறலோ
ருடலம் புழைசெய் திடவுற் றனராற்
படருங் குறியோன் கதைபஃ றுளையா
வடுதொல் கிரவுஞ் சமதா மெனவே. (சுசா)

தெரிகுற் றகனற் கணைசென் றுபுகப்
பொருகொற் றமகற் றியபூ தாமிசைப்
பெருகுற் றதுசோ ரிபெருங் கருவிண்
டுருகுற் றிடுசெம் பொழுகும் படிபோல். (சுஎ)

கதிருங் கனல்வெங் கணைசா ரதர்மெய்
புதைகின் றுழிசெம் புனல்வந் தெழுவ
வுதிரம் பிறவுற் றிடுதீ யுறவா
லெதிர்வந் தவைதன் னிடனுய்ப் பதுபோல். (சுஅ)

விடமெய்க் கணைமா ரிகடம் மிசையே
படவெய்த் தனர்சிங் கைபதைத் திடுவார்
கடவுட் கதிரைக் கனலுங் கொடியோற்
குடைவுற் றனரா லுறுபூ தரெலாம். (சுகூ)

வேறு.

நிலைய ழிந்து நெடுங்கடற பாரிடந்
தொலைய முன்னந் தொலைந்திடு தானவர்
வலிதெ ரிந்து வயம்புனை தானவர்
தலைவன் முன்வந்து சார்ந்தன ரென்பவே. (எ0)

ஆய காலை யழிந்துவெம் பூதர்கள்
போய வாறும புரையறு சூர்தரு
சேய வன்றிற செய்கையு நோக்கினன்
காயும் வெவ்வெரி கான்றிடு கண்ணினன். (எக)

மலைக்கு லக்கொடி வாமத்தன் மைந்தரா
மிலக்க வீரரு ளேனைய மைந்தருட்
டலைக்க ணின்ற சயங்கெழு மொய்ம்பினன்
விலக்கி தேரொடும் வெய்தென வேகினன். (எஉ)

ஆதி தந்த வறுமுகத் தெம்பிரான்
பாத முன்னிப் பரவிக் கடிதுபோய்
மேத குங்கதிர் வெம்பகை தானையா
மோது முட்கக் குனித்தன னோர்சிலை. (எங)

காமர் மொய்ம்பினன் கைத்தனுக் கோட்டலுந்
தாமு னிந்து தகுவர்தந் தானைக
டோம ரங்கதை சூலம்வை வாளிவே
னேமி யார்தி நெருக்குற வீசினார். (எச)

வீசு கின்ற வியன்படை மாய்ந்துகத்
தேசு லாவு திறலுடை மொய்ம்பினோ
னோசை கொண்டதன் சாப முமிழ்ந்தென
வாசு கங்க ளளப்பில தூண்டினான். (எரு)

தூண்டும் வாளி துணிபடச் செய்தலு
மாண்டு போயின மற்றவர் வெம்படை
யீண்டு தானவர் யாரு மறைந்திட
மீண்டும் வார்கணை வீசினன் வீரனே. (எசு)

கற்றை வார்சடைக் கண்ணுத லோன்சுதன்
கொற்ற வில்லுமிழ் கூர்ங்கணை விட்டன
பற்ற லார்மெய் படுதலு மன்னவர்க்
கிற்ற தாண்முடி தோளபுயம் யாவுமே. (எஎ)

ஆர ழிந்தன வாழிய ழிந்தன
தேர ழிந்தன திண்பரி கைமுகக்
கார ழிந்தக டுந்தொழிற் றானவர்
போர ழிந்தபு குந்தன சோரியே. (எஅ)

மற்ற வெல்லை வலியநந் தானைக
ளிற்ற வேகொல் லிவன்சிலை யாலெனாச்
செற்ற நீரொடு செங்கதிர் மாற்றல
னெற்று தேர்வல வறகிவை யோதுவான். (எகூ)

அடுத்து நம்படை யட்டவன் முன்னுற
விடுத்தி தேரை வலவனை வெய்தென
வடித்த விஞ்சையன் வன்மையி னன்னதேர்
நடத்தி யார்த்தன னாகர் நடுங்கவே. (அ0)

மாண்ட கொள்கை யவுணன் வலவன்முன்
றாண்டு தேர்மிசைத் துண்ணென நண்ணியே
பூண்ட தன்சிலை கோட்டிப் பொருஞ்சின
மூண்டு மேலவன் முன்னிது கூறுவான். (அக)

எஞ்ச லின்றிய வென்பெருந் தானைக
டுஞ்சும் வண்ணந் தொலைத்தனை நீயினி
யுஞ்சு போகரி துன்றனை யட்டிட
வஞ்சி னங்கொடு வந்தனன் யானென்றான். (அஉ)

என்ற லோடு மிருந்திறன் மொய்ம்பினோன்
பொன்று வோரையும் போர்த்தொழில் செய்துபின்
வென்று ளோரையும் விண்ணவர் காண்குவர்
நின்று தாழ்க்கலை நேருதி பே[illegible]கென்றான். (அங)

விளைத்த சீற்றத்து வெந்திறற் சூர்மகன்
வளைத்த வில்லிடை வார்கணை யாயிரந்
தளைத்த பூந்தொடை வாகையன் றன்னுரந்
துளைத்தி டும்படி பூட்டுபு தூண்டினான். (அச)

ஆக மூழ்கி யடற்கணை போழ்ந்துபின்
னேக வென்று மிளையவன் பின்னவன்
சோக மோடுதன் றொல்சிலை வாங்கியே
நாகர் போற்றிட நாணொலிக் கொண்டனன். (அரு)

நாணொ லிக்கொடு நஞ்சமூல் கான்றெனத்
தூணி யுற்ற சுடுசர மாயிரம்
வேணு வுய்த்து விரைவினிற் றூண்டினா
னேணு டைக்கொடி யோன்புயத் தெய்தவே. (அசு)

ஆயி ரங்கணை யம்புய மூழ்கலு
நோயு முந்துள நொந்துநொ டிப்பினிற்
றீய வன்மகன் செஞ்சர நூற்றினாற்
றூய வன்விற் றுணிபடுத் தானரோ. (அஎ)

திண்டி றற்புயன் செஞ்சிலை யிற்றிட
வண்ட ரஞ்சின ரன்னவ னோரயில்
கொண்டு ருத்துக் கொடுந்தொழிற் சூர்மகன்
மூண்ட செற்றியின் மொய்ம்புடன் வீசினான். (அஅ)

வீசு வெம்படை வெய்யவற் சீறிய
நீசன் மாண்டரு நெற்றியுட் சேறலு
மாசில் வான்மிசை வந்தெழு செக்கர்போ
லாசில் செமபுன லாறெனச் சென்றதே. (அகூ)

சென்ற காலையிற் றீயவ னோரிறை
நின்று தேரி னிளைவில னாகியே
பின்றை முன்னுணர் வெய்தப் பெருந்தகை
யொன்றோர் வெஞ்சிலை யொல்லையில வாங்கினான். (கூ0)

வாங்கி வாயுவின் மாப்படை தூண்டலு
மாங்கவ் வெய்யனு மப்படை யேவியே
தாங்கி வன்மை தணித்தலுந் தாவிலோன்
றீங்க னற்படை யுய்த்தனன் சீறியே. (கூக)

மாரி யன்னகை மன்னவர் கோமக
னார மூற்படை யவ்வழி தூண்டலும்
வீர வாகு விடுத்திடு தீப்படை
போரி யற்றிப் பொருக்கென மீண்டதே. (கூஉ)

சுடுக னற்படை போந்திடச் சூர்மகன்
கடிது பின்னுங் கதிர்ப்படை தானொடா
வடுதி யன்னவ னியை நீயெனு
விடுத லோடும் விரைந்தது சென்றதே. (கூரு)

விரைந்து சென்றதை வீரமொய்ம் புள்ளவன்
றெரிந்து சேணிடைச் செங்கதி ரோன்படை
துரந்து நீக்கலுஞ் சூர்மகன் பங்கயத்
திருந்த வன்படை யேவின னென்பவே. (கூச)

தேன்மு கத்துத் திருமல ரோன்படை
வான்மு கததுவருதலு மாங்கவ
னான்மு கபபடை யொய்யெனத் தூண்டின
னான்மு கத்த னடற்கண நாயகன். (கூரு)

தூண்டு வேதன் படைக்கலஞ் சூர்மக
னூண்டு தொட்ட படையை யகற்றியே
மீண்டு வந்திட வெய்யவன் வீரனமே
னீண்ட மாய னெடும்படை வீசினான். (கூசு)

வீசு மப்படை தன்னை விலக்கினான்
கேச வன்படை யாற்கிளா மொய்ம்புடை
மாசில் கேளவியன் மற்றது நோக்கியே
நீசன் மாமக னுள்ள நினைகுவான். (கூஎ)

தொட்ட தொட்ட படைக டொலைவுற
விட்ட னன்படை மேலினி யாவையு
மட்டு நல்கு மரன்படை தூண்டுறி
னெட்ட லன்கரத் துண்டது கண்டதே. (கூஅ)

ஆத லாலியா னப்படை தூண்டிட
லூதி யத்தை யுடைத்தன்று மாயையா
லேதி லானை யினியடல் செய்வதே
நீதி யென்று நினைந்தன னேரலன். (கூகூ)

விஞ்சை மாய வியன்முது மந்திர
நெஞ்ச மீது நெறிபபட வெண்ணியே
செஞ்சு டர்க்கதி ரைச்சிறை செய்திடு
வஞ்ச மைந்தன் மறைந்தனன் றேரொடும். (கOO)

பாங்கு முன்னரும பின்னரும் பாய்கதிர்
தூங்கு தேரொடு தன்னல னேகுறு
வீங்கு மாற்றல் விறலுடை மொய்ம்பன்மேல்
வாங்கு விற்கணை மாரி வழங்கினான். (கOக)

சூறை யென்னத் திரிபவன் றூண்டிய
மாறில் வாளி படபபட வள்ளனமெய்
யூற தாகி யுலப்பறு செம்புன
லாற தென்ன வழிக்கொண்ட தாலரோ. (கOஉ)

அண்டர் நோக்கி யழிந்தனர் பாரிடர்
தண்ட மோடு தளர்ந்தனர் சார்பினோர்
விண்டு விண்டு வெருவின ரச்செயல்
கண்டு வீரன் கனலெனச் சீறினான். (கOங)

வேறு.

ஒன்றொரு மாயை தன்னை யுய்ந்துமுன் வென்று போனா
னின்றும தன்னி னுன்னே வினியது முடிக்க வறரோ
நன்றிது நன்றி தம்மா நானிவன் றனனே யின்னே
கொனறிடு கிற்பே னென்னாக் குறித்தனன் குமரன் பின்னேன். (கU௪)

ஈதுதன் புந்தி தேற்றி யீங்கிவன் சூழ்ச்சி மாய்ந்து
போதரு கின்ற வாறு புரிகுவன விரைவி னென்னாச்
சேதனங் கொண்ட துப்பிற் றெய்வதப் படையைப போற்றி
மேதகு வழிபா டாற்றி யவுணனைக் குறித்து விட்டான். (கUரு)

பொருவருந் திறலோன் விட்ட போதகப் படையே பானு
விருளினை யிரியல் செய்யு மிரவிபோற் சேற லோடும்
விரைவொடு விஞ்சை மாயம் விளிந்தது வேந்தன் மைந்த
னொருபெருந் தேருந் தானு மாகியே யும்பர் நின்றான். (கUசு)

தோன்றியே விண்ணி னின்ற சூர்மகன் றொலைவி லாற்றல்
சான்றதன் மாயம் போன தன்மையுந் தடந்தோள் வீர
னுன்றநல் வலியு நோக்கி யயர்ந்தன னயர்ந்து முன்ன
மான்றிடு மமரர் யாரு மனமகிழ் சிறந்து நின்றார். (கUஎ)

அவ்வழி வீர மொய்ம்ப னந்தர வழிக்க ணின்ற
மைவழி சிந்தை மைந்தன் மாண்பினை நோக்கி வஞ்ச
வெவ்வழி யினிநீ போதி யானிவ ணடுவ னென்னாக்
கைவழி வரிவில் வாங்கித தேரொடுங் ககனஞ் சென்றான். (கUஅ)

விண்ணிடைப் புகுந்த வீரன் வெலறகருஞ் சூரன் மைந்தன்
கண்ணுற முன்பு நேர்ந்து கணைபல கோடி தூர்த்தா
னண்ணல னவனுஞ் சீறி நவின்றதோர் சாபம் வாங்கித்
துண்ணென விசிக மாரி சொரிந்தனன் சுரர்க ளஞ்ச. (கUகூ)

நீரொடு கனலு மாறாய் நெடுஞ்சினந் திருகி நின்று
போரினை யிழைப்ப தென்ன விருவரும பொருது நின்றா
ரோரிறை யளவை தன்னி லொராயிர நூறு கோடி
சாரிகை திரிந்த வம்மா வனையவா நடமபொற றேர்கள். (ககU)

ஏற்றிகல் புரியும் வீர ரெதிரெதிர் துரக்கும் வாளி
நாறறிசை கொண்ட வண்டப பித்திகை காறு நண்ணி
மேற்றிகழ் பரிதிப் புத்தேள வியனகதி வரவு தன்னை
மாற்றியெவ் வுலகு ளோர்க்கு மலிதுயர் விளைத்த வன்றே. (ககக)

செற்றமொ டிவர்கள் வீசுந் திருநெடுங் கணைகள் யாண்டு
முற்றிடு கின்ற காலத துகுவன கவன மான்றே
ரற்றன புரவி மாலை யவிந்தன களிறறி னீட்ட
மிற்றன வவுணர் சென்னி யிறுவன பூதர் யாக்கை. (ககஉ)

கிட்டுவ சேணிற் செல்வ கிளருவ கிடைத்துப் பின்னு
முட்டுவ வொன்றை யொன்றை யிடம்வல முறையிற் சூழ்ந்து
வட்டணை புரிவ வானோர் மதிக்கவு மரிய வல்லே
யெட்டுள திசையும் விண்ணுந் திரிவன விருவர் தேரும். (ககங.)

இகழுவர் முனிவர் வெஞ்சூ ளியம்புவர் வன்மை நோக்கிப்
புகழுவ ரூரப்பி வீரம் புகன்றெடுத் தழைப்பர் பூசன்
மகிழுவர் நகைப்பர் வெற்றி வால்வளை முழக்கஞ் செய்து
திகழுவர் கணையின் மாரி சிந்துவர் தெழித்துச் செல்வர். (௧௧௪)

புரந்தனை யட்ட செல்வன் புதல்வனு மவுணன் சேயும்
விரைந்தெதிர் மலைந்த காலை முறைமுறை வெகுண்டு விட்ட
வரந்தெறு பகழி மாரி யகிலமும் விரவிச் செலலக்
கரந்தன னிரவி திங்கள் கலைகளுங் குறைந்த தன்றே. (௧௧௫)

வேறு.

காலொப்பன கூற்றொப்பன கனலொப்பன கடுவின்
பாலொப்பன வுருமொப்பன பணியாாபுரம பொடித்த
கோலொப்பன கதிரொபபன குன்றந்தனைக் கொன்ற
வேலொப்பன விருவீரரும் விடலுற்றிடு விசிகம். (௧௧௬)

வரைபுக்கன புயல்புக்கன வான்புக்கன மறிதெண்
டிரைபுக்கன கடல்புக்கன திசைபுக்கன திசைசூழ்
தரைபுக்கன வண்டத்துழை தனிற்புக்கன பிலகதி
னிரைபுக்கன விளையோனுட னவுணன்விடு நெடுங்கோல். (௧௧௭)

திரிகின்றன விருவோர்விடு தீவாளியு மவைபட்
டெரிகின்றன புயலின்குல மிருநாலறிசைக் கரியுங்
கரிகின்றன புவிவிண்டன கடல்வற்றின வுடுமீன்
பொரிகின்றன வுலகெங்கணும புகைவிம்மிய தன்றே. (௧௧௮)

பொடியோங்கிய திறன்மொய்ம்புடைப் புலவன்விடு சரத்தை
வடியோங்கிய கணைமாரியி னருக்கன்பகை மாறறுங்
கொடியோன்மகன் விடுவாளியைக குதைவெங்கணை மழையா
னெடியோன்றனித் துணையானவ னறுத்தேயுட னீக்கும. (௧௧௯)

போரிவ்வகை யிருவீரரும் பொரலுற்றிடு பொழுதிற்
பாரின்றலை நின்றோர்களு மிமையோர்களும் பார்த்தா
ராரிங்குள ரிவரேயென வமாசெய்தவ ரடுபோர்
வீரந்தனி லெவரேயிவர்க் கிணையென்று வியந்தார். (௧௨௦)

அவ்வேலையி னூறாயிர மடுவெங்கணை யதனான்
மைவேலையில் வருபானுவைத் தளைபூட்டிய மைந்தன்
செவ்வேலவன் றிருத்தூதுவன் றேரைபபொடி படுத்தி
யெவ்வேலையும் வெருக்கொண்டிட விடியேறென வார்த்தான். (௧௨௧)

ஆர்க்கின்றுழி திறன்மொய்ம்புடை யறிவன்சினந் திருகிச்
சீர்க்கின்றவிண் மிசைநின்றுதன சிலைகாலுற வாங்கிக்
கூர்க்குங்கணை யோராயிரங் கொளுவித்துரந் திட்டுக்
கார்க்கின்றமெய் யவுணர்க்கிறை கடுந்தேர்துகள் கண்டான். (௧௨௨)

வையந்துக ளாயிற்றிட வானத்திடை நின்ற
வெய்யன்பெருஞ் சினஞ்செய்துவில் வீரன்றனை தூரத்தி
னையஞ்சுநஞ் சயில்வாளிபுக் கழுந்தும்படி தூண்டிச்
சையந்தனைக் கடந்தேவளர் தடந்தோள்புடைத் தார்த்தான். (௧௨௩)

உரத்திற்புகு நெடுவாளியி னுளனொந்திடு முரவோன்
கரத்திற்சிலை தனிலேழிரு கணைபூட்டினன் செலுத்தி
வரத்திற்றனக் கிணையில்லதொர மன்னன்மகன் றனது
சிரத்திற்பொலி மகுடந்தனைச் சிந்தித்துகள் செய்தான். (கஉச)

மாண்கொண்டிடு முடிசிந்திட வறியானெனத் திகழு
மேண்கொண்டிடு சூரன்மக னேழேழ்கணை தூண்டித்
தூண்கொண்டிடு திறன்மொய்ம்புடைத் தொல்லோனுரம் பிணித்த
நாண்கொண்டிடு கவசந்தனை நடுவேதுணித் திட்டான். (கஉரு)

ஆகம்படு நெடுஞ்சாலிகை யழிவெய்தலு மழல்கா
னாகம்படு சடையோன்சுத னனறீதென நகையாப்
பாகம்படு பிறைபோலெழு பருவாய்க்கணை செலுத்தி
மேகம்படு மணிமேனியன் வில்லைத்துணி படுத்தான். (கஉசு)

வில்லொன்றிரு துணியாதலும் வெங்கூற்றினும் வெகுளா
வல்லொன்றிய மனத்தீயவ னயன்முன்கொடுத் துள்ள
வெல்லொன்றிய தனிவேலினை வெடித்தீங்கிவன் றன்னைக்
கொல்லென்றுரைத் துரவோன்மிசை குறித்துச்செல விடுத்தான்.(கஉஎ)

வேறு.

விடுத்த காலையி னித்திறந் தெரிந்திடும் விறலோ
னடறபெருங்கணை யாயிர கோடிக ளதனைத்
தடுத்தி டும்படி செலுத்தின னவையெலாந் தடிந்து
வடித்த வேற்படை வான்வழிக் கொண்டுவந் ததுவே. (கஉஅ)

வந்த காலையி லதன்வலி நோக்கியே வள்ள
லிந்து சேகர னுதவிய நாந்தக மெடுத்துக்
கந்த வேளடி வழுத்தியே கருகலன் விடுத்த
குந்த வெம்படை யிருதுணி பட்டிடக் குறைத்தான். (கஉகூ)

குறைத்த காலையி லமரர்க ளாடினர் கொடியோன்
றிறத்த ராகிய வவுணர்க ளேங்கியே திகைத்தா
ரறத்தை யாறறி பிளையவ னங்கது நோக்கி
யெறித்த ருஞ்சுடர் வாளினை யுறையகத் திட்டான். (கஙo)

அள்ளி லைத்தனி வேற்படை யிறுதலு மதனைக்
கள்ள விஞ்சைகள் பயின்றிடு சூரமகன் காணாத்
தெள்ளி தம்மவோ வென்படை வலியெனச் செப்பிப்
பொள்ளெ னக்கர வாளமொன் றெடுத்தனன் பொருவான். (கஙக)

கருமு கிற்புரை மேனியன் கரத்தில்வாள் பற்றி
விரவு மின்னுவின் கொடியென விதிர்த்துமுன் வீசி
யுருமி டிக்குலத் தாவலங் கொட்டியார்த் துருத்துச
செருமு யற்சியாற் சீரிளங் கோவின்முன் சென்றான். (கஙஉ)

சென்ற காலையி லிளையவன் றன்பெருஞ் சிலைகா
லொன்ற வாங்கியே பகழிபல் லாயிர முய்த்து
வென்றி வாட்படை யானுரங் கிழித்திட விடர்செய்
குன்றில் வீழ்தரு மருவிபோல் வீழ்ந்தது குருதி. (கஙங)

பரிதி மாற்றலன் மிசைவரு பகழியும் பாரான்
குருதி வீழ்வது முரம்பகா வுற்றதுங் குறியா
னொருதன் மானமுந் தானுமா யோடினன் குறுகிச்
சுருதி யன்னவன் சிலையினை வாளினாற் றுணித்தான். (கஙச)

வில்லி றுத்திடு விறலினோன் மிசைபடக் கிளர்ந்து
செலலெ னக்கெழிந் தொருதன்வாள் வீசினன் றிரிய
வல்ல லுமறிடு மிமையவ ரங்கது நோக்கி
யில்லை மாறில னிறந்தபின் னமரெண்ப தென்றார். (கஙரு)

அங்க வெல்லையில் வீரவா குபபெய ரறிஞன்
றிங்கள் சூடிய வுலகடுந் தாதையிற சீறித்
துங்க மிககதன் வாளுரீஇக் கறஙகெனச் சுற்றி
யெங்க ணேகுதி யென்றுபோ யவுணனை யெதிர்ந்தான். (கஙசா)

ஏற்றெ திர்ந்திடு மெல்லையி னிரவியம் பகைஞன்
காறறெ னச்சென்று நேர்ந்தன னிருவருங் கலந்து
சீறற நீர்மையால வாளம ருழந்தனர் செங்கட்
கூற்று மங்கியுஞ் சமர்புரி கின்றகோட் பென்ன. (கஙஎ)

மாறு மாறுசென் றடிமுத லுறுபபினை வாளால்
வேறு செய்திட வெறிதுவ ரன்னது விலக்கி
யூறு செய்திற னாடவ ரிடைதெரிந் தொருமற்
சூறை யாமெனச் சுற்றுவர் வட்டணை சூழ்வார். (கஙஅ)

இன்ன தன்மையி லிருவரும் வாளம ரியற்றி
மன்னு காலையிற் சூர்மகன் விஞ்சையின் வலியாற்
றன்னை நேரிலா விளையவன் றடக்கைவா ளகற்றி
யன்ன வன்றிருத் தோண்மிசை யெறிந்தன னன்றே. (கஙகூ)

மாற்ற லன்கர வாளினா லெறிதலும் வள்ள
லாற்றன் மொய்ம்பிடைக் குருதியா றிழிதர வதுகண்
டேற்ற மெய்தினன் சூர்மக னிவன்றனைக் கிளையோன்
றோற்றி டுங்கொலென் றிரங்கினர் வானவர் துளங்கி. (கச0)

அன்ன காலையி லிளையவ னறுமுகத் தமலன்
பொன்னின் சேவடி புந்தியி லுன்னியே புகழ்ந்து
மின்னு வானதன் வாட்படை வீசியே விரைந்து
துன்ன லன்வலத் தோளினை வலியொடு துணித்தான். (கசக)

துணித்த காலையில் வலதுகை தன்னொடு தொடர்ந்த
பணித்த னிச்சுடர் வாளினை யிடக்கையாற் பறித்து
மணிதத சுப்புகொண் மொய்ம்புடை யவுணர்கோன் மற்றுந்
தணிப்ப ருஞ்சினந் தன்னொடு முயன்றனன் சமரே. (கசஉ)

தீய வன்றனி முயற்சியை நோக்கியே திறலோன்
றாய வாள்கொடே யன்னவ னிடக்கையைத் துணிப்ப
மாயை தொல்படை விடுத்திடு வேனென மதித்தா
னாய காலையி லறிஞனு மவன்றலை யறுத்தான். (கசங)

வாளி லங்கவ னடுதலுஞ் சென்னியும் வரைநேர்
தோளும் யாக்கையும் வீழ்ந்தன சூரியன் பகைஞ
னுலந்தன னவனுயிர் வெளவியே நடுவ
னுளி மொய்ம்பனை வழுத்தியே தென்புலத் தடைந்தான். (கசச)

சூரன் மாமகன் முடிந்தது முனிவருஞ் சுரரு
மாரு நோக்கியே யாடினர் பாடின ரார்த்தார்
வீர வீரனீ யாமென விளவலை வியந்து
மாரி யாமென வவன்மிசை பொழிந்தனர் மலர்கள். (கசரு)

நுவல ருந்திறற் சூர்மகன் பட்டது நோக்கி
யவல மெய்தியே யழிந்திடு பூதர்க ளாதனுத
தவல ருந்திறல் வீரனை வழுத்தினர் தனது
கவலை நீங்கியே களித்தனன் செங்கதிர்க் கடவுள். (கசசு)

அன்ன காலையில் வீரவா குப்பெய ரறிஞன்
றனு ளஞ்சிறந் தகலிரு விசும்பினைத் தணவா
விங்கி லத்திடை வந்துதன் றுணைவர்தம் மினத்தைத்
துன்னி யாங்கவர் புகழ்ந்திட வினையன சொல்வான். (கசஎ)

ஆன தொல்பெரு மாயையா னம்மைமுன் னலைத்த
பானு கோபனை யட்டனம் பகர்ந்தகு னுறவு
தானு முற்றிய தாலினி யெம்பிரான றனமுன்
சேனை தன்னொடு மேவுதுஞ் செல்லுதி ரென்றான். (கசஅ)

மிக்க வீரனித் தன்மையை யுரைத்தலும் வினவி
முக்க ணாயகன் குமரவே ளிணையடி முன்னம்
புக்கு நென்னலுந் தொழுதில நன்றுநீ புகன்றாய்
தக்க தேயிது வென்றனர் துணைவராந் தலைவா. (கசகூ)

ஆங்கவ் வெல்லையி னம்பிதன் னிளைஞரு மடுபோர்
தாங்கு பூதருந் தானையந் தலைவருந் தழுவிப
பாங்கர் வந்திடப் பொருகள மொருவிமீ படர்ந்து
பூங்கி டங்குசூழ் பாசறை யிருக்கையுட் புகுந்தான். (கரு0)

சோதி நீடிய பாசறை புகுந்திடு தூயோன
பூதர் தம்மொடுந் துணைவர்க டம்மொடும் போந்து
காத லாகியே யறுமுகத் தையனைக் கண்டு
பாத பங்கயந் தன்னிடைப் பன்முறை பணிந்தான். (கருக)

பரிந்து பன்முறை வணங்கியே யெழுதலும் பகவ
றெரிந்து நோக்கிநீ சூர்மக னுடம்பார செய்து
வருந்தி யாங்கவற் செற்றனை யாதலின் மகிழ்ந்தாம்
விரைந்து கேண்மதி நல்குதும் வேண்டுவ தென்றான். (கருஉ)

என்று மூவிரு முகமுடைப் பண்ணவ னியம்ப
நின்று போற்றிடு மிளையவ னெம்பிரா னின்னை
யன்றி யான்செய்த செயலிலை யாயினு மடியேற்
கொன்றீ மற்றவ ணருளிய வேண்டுமென் றுரைப்பான். (கருங)

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை யிந்திர னரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்மையே வேண்டுவன் றமியேன். (கருச)

அந்த நல்வர முத்தியி னரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும் பெறுகிலர் சிறியே
னுய்ந்தி டும்வகை யருள்செய வேண்டுமென் றுரைப்ப
வெந்தை கந்தவே ளுனக்கது புரிந்தன மென்றான். (கருரு)

உடைய தொல்விறல் வாகுவுக் கிவ்வர முதவிப்
புடையி னிற்றொழு துணைவர்க்கு நல்லருள் புரியா
வடைய மற்றவ ரிருக்கைகள் வைகுவா னருளி
விடைபு ரிந்தனன் யாவர்க்கு மேலதாம் விமலன். (கருசு)

செங்க திர்ப்பகை யட்டவன் முதலிய திறலோர்
புங்க வன்றனைத் தொழுதுதம் மிருக்கையிற் போகு
ரிங்கு மற்றிது நின்றிட வவுணர்தம் மிறைவற்
கங்க ணுற்றிடு செய்கையை மேலினி யறைவாம். (கருஎ)

வேறு.

ஈதிவர் புரிந்ததே யிறைவன் றன்னையுங்
காதுவ ரென்பது கருத்துட் கொண்டெழா
வாதுவர் கவனமா வழிகொண் டாலெனத்
தூதுவ ரோடினர் துளங்கு நெஞ்சினர். (கருஅ)

மதிதொடு கடிமதின் மகேந்தி ரப்புரத்
ததிர்தரு முரசொலி யவிந்து துன்பினான்
முதிர்வுறு மழுகுரன் முழங்கும வீதிபோய்க்
கதுமென வரசவைக் களத்து ளேகினார். (கருகூ)

துன்னிய பெரும்புன றாண்டி கண்ணின
ருன்னருந் துயரின ருயிர்க்கு நாசியா
மன்னவ னிணையடி வணங்கி யுன்மகன்
முன்னுறு தூதனான் முடிவுற் றானென்றார். (கசுo)

தாழ்ந்தவர் மொழிந்திடு தன்மை கேட்டலுஞ்
சூழ்ந்திடு திருவுடைச் சூர னென்பவ
னாழ்ந்திடு துயர்க்கட லழுந்தி மயாவென
வீழ்ந்தனன் புரண்டன னுயிர்ப்பு வீங்கினான். (கசுக)

நக்குறு சுடரென நடுக்க முள்ளுற
மிகவெழு குருதிநீர் விழிகள் கான்றிடத்
தொக்குடல் வியர்ப்பொடு துளக்கங் கொண்டிட
வக்கண மயங்கின னறிவு சோர்ந்துளான். (கசுஉ)

தளர்ந்துடல் வெதும்புறத் தன்கண் சோர்வுற
வுளந்திரி வுறவுயி ருசலாடிட
விளிந்தவ ராமென வீழ்ந்து மான்றவன்
றெளிந்தன னிரங்கின னினைய செப்பினான். (கசுங)

வேறு.

மைந்தவோ வென்றன் மதகளிறே வல்வினையேன்
சிந்தையோ சிந்தை தெவிட்டாத தெள்ளமுதோ
தந்தையோ தந்தைக்குத் தந்தையிலான் கொன்றனனே
வெந்தையோ நின்னை யிதறகோ வளர்த்தனனே. (கசுச)

வன்னச் சிறுவர்பலர் மாய்ந்தா ரவர்மாய்ந்து
முன்னைத் துணையென் றுளங்கொண் டிருந்தனனு
லென்னைத் தனியேவைத் தெந்தையுமே குற்றனையேற்
பின்னைத் தமியேன் பிழைக்கும் படியுண்டோ. (கசுரு)

ஒன்னார் சிறையைவிடி னுய்வுண்டா மென்றுமுனஞ்
சொன்னு யதுவுமிகழ்ந் துன்னைத் தோற்றனனு
லென்னு மினியதனை யெண்ணுவதி யாவருக்குந்
தன்னால் வராத வினையுளதோ தக்கோனே. (கசுசு)

நன்றீ தலசமர்க்கு நண்ணுவது நண்ணலர்மே
லென்றீர மாக விசைததாயா னேகாமற்
சென்றீ யெனவே செலுததியுனை போக்கினனு
லொன்றீங் குளதோ பிழையுன மிசையையா. (கசுஎ)

கைப்போது கொண்டு கடவுளர்க ளெல்லோரு
முப்போதும் வந்து முறையால் வழிபடுவா
ரொப்போத வில்லா வுனதுமே னுளளபகை
யிப்போ துடனீங்கி யேமுற றிருந்தாரோ. (கசுஅ)

உன்னனைக் கஞ்சி யுறங்கா துழன்றிடுமா
லிந்தா டனினீ யிறந்தா யெனமகிழ்ந்து
பன்னகப் பாயல படுத்திருவர் கால்வருடத
தொன்னு ளெனவே கவலையின்றித துஞ்சானே. (கசுசு)

நந்தா னவர்குலதது நாயகமே நண்ணினர்க்கோர்
சிந்தா மணியே திருவேயென் றெள்ளமுதே
யெந்தாய் தனியேபோ யெங்கிருந்தா யங்கேயான்
வந்தாலு முன்றன் மதுரமொழி கேட்பேனே. (கஎ0)

சோராத சூழ்ச்சித துணைவர்சிறு ரெல்லாருஞ்
சேரார் பொருதலைபபச் சென்றொழிந்து போயினரா
லாராய்ந் தெனதுதுய ராற்றுவதற் காருமிலை
வாராய் புதல்வா கடிதோடி வாராயே. (கஎக)

நீடித் திகழ்கதிராற் றீண்டி னுது சிறை
வீடிச் சதுர்முகததோன் வேண்டிடநீ விட்டபின்னர்
வாடித் தளர்ந்து வசைபடைத்த வெய்யவனு
ரோடிக் ககனத்துளமகிழ்ந்து செல்லாரோ. (கஎஉ)

பற்று ரடிததொண்டு பேணிப் பரந்துழலு
மொற்று னவனே வுனைத்தா னடவல்லா
னற்றூர் தமதுடலுக் காவியாய்ச் சென்றிடவே
கற்றாயே லெனினை மறந்திடவுங் கற்றாயோ. (கஎங)

மாகொற்ற மைந்தன் மடிந்தா னெனக்கேட்டு
மேகிற் றிலையா லிருக்கின்ற தின்னுமுயிர்
வேகுற்ற துள்ள மிகுதுயரம் வந்தவழிச்
சாகுற்ற தோர்வரமுஞ் சங்கரன்பாற் பெற்றிலனே. (கஎச)

வெற்றி யுளமதலை வீந்தால் விளியாமன்
மற்று மெனதுயிரும் வைகும் வலிதாகச்
செற்றிடவு மாகாதென் செய்கே னழியாமற்
பெற்ற வரமும் பிழையாய் முடிந்ததுவே. (கஎரு)

ஆவியே கண்ணே யரசே யுனைச்சமருக்
கேவியே யிவ்வா றிரங்குதற்கோ விங்கிருந்தேன்
கூவியே கொண்டுசெலுங் கூற்றுவனெற் றேவறியேன்
பாவியே னிந்தப் பதிபுகுந்த தூதுவனே. (கஎசு)

கூற்றோ னகரிற் குறுகினையோ வன்னதன்றேல்
வேற்றோ ரிடந்தன்னின் மேவினையோ யாதொன்றுந்
தேற்றேன் றனியே தியங்குகின்றே னித்துயர
மாற்றே னரசேயென் னுருயிரே வாராயோ. (கஎஎ)

என்னா விரங்கி யிறைவன் வருந்துதலு
மன்னா னுழையி லவுணர் சிலரோடித
தன்னார் களத்திற் றுணிவுற்ற சீர்மதலை
பொன்னா ருடலங் கொடுபுலம்பிப் போந்தனரால். (கஎஅ)

வேறு.

சேர்ந்த குஞ்சிச் சிலதர்செஞ் ஞாயிறு
பாய்ந்த வண்ணல் படிவ மிசைக்கொளா
வேந்தன் முன்னுற வுய்த்து விரைந்தவன்
பூந்தண் சேவடி பூண்டு புலம்பினர். (கஎகூ)

அண்டர் தம்மை யருஞ்சிறை வீட்டியே
தண்ட கஞ்செய் தனிக்குடை மன்னவன்
றுண்ட மாகிய தோன்றறன் யாக்கையைக்
கண்ட ரற்றிக் கலுழ்ந்து கலங்கினன். (கஅ०)

அற்ற மைந்தன் சிரத்தினை யங்கையாற்
பற்று நல்லெழில் பார்த்திடுங் கண்களி
லொற்று முத்த முதவு முரனிலாப்
புற்ற ராவி லுயிர்க்கும புரளுமால். (கஅக)

துஞ்ச லாகித் துணிவுற்றுந் தெவ்வர்மே
னெஞ்சு கொண்ட நெடுஞ்சினந் தீர்கிலை
விஞ்சு மானமும் வீரமும் வன்மையு
மெஞ்சு மேகொ லினியுன்னை டென்னுமால். (கஅஉ)

கையி லொன்றைக் கதுமெனப் பற்றிடாச்
செய்ய கட்படு செம்புன லாட்டியே
வெய்ய வற்கொடு விண்ணினுந் தந்தகை
யைய வீதுகொ லோவென் றரற்றுமே. (கஅங)

வாள ரம்படு வாளிகண் மூழ்கலிற்
சாள ரங்க ளெனப்புழை தங்கிய
தோளை மார்பினை நோக்குந் தொலைவிலா
வாளை நீயல தாருள ரேயெனும். (க௮௪)

பாறு லாய பறந்தலை தன்னிடை
வேறு வேறது வாகநின் மெய்யினைக்
கூறு செய்தவ னுவி குடித்தலா
லாறு மோவென் னகத்துய ரென்றிடும். (க௮௫)

மூண்ட போர்த்தொழின் முற்றிய வென்மக
னீண்டு வந்ததோர் தூதுவ னெற்றிட
மாண்டு ளானென் றுரைத்திடின் மற்றியா
னுண்ட பேரர சாற்றனன் றேயெனும். (க௮௬)

சிரத்தை மார்பினைச் செங்கையைத் தொன்மைபோற்
பொருத்தி நோக்கிப் புரளுமென் புந்தியை
வருத்து மாகுல மற்றது கண்டுநீ
யிருத்தி யோவுயி ரேயின்னு மென்றிடும். (க௮௭)

மருளு மங்கை மறிக்கு மதலையை
யருளி னோக்கி யழும்விழுஞ் சோர்வுறும்
புரளும் வாயிற் புடைக்கும் புவியிடை
யுருளு நீட வுயிர்க்கும் வியர்க்குமே. (க௮௮)

மன்னர் மன்னவன் மற்றிது பான்மையா
லின்ன லெய்தி யிரங்கலு மச்செயல்
கன்னி மாநகர்க் காப்பினுள் வைகிய
வன்னை கேட்டன ளாகுல மெய்தினள். (க௮௯)

நிலத்தில் வீழ்ந்து சரிந்து நெடுமயிர்
குலைத்த கையள் குருதிபெய் கண்ணின
ளலைத்த வுந்திய ளாற்றருந் துனபினள்
வலைதத லைபபடு மஞ்ஞையி னேங்கினள். (க௯0)

அல்லல் கூர்ந்த வவுணன்றன் காதலி
தொலலை வைகிய சூழலை நீங்கியே
யில்லை யாகிய வெனமகற காணபனென்
றெல்லை யாவலித தோடின ளேகினள். (க௯க)

மாவ லிக்கு மடங்கலொப் பான்றனிக்
காவ லிக்குத் துயர்வந்த கன்னிமீர்
நாவ லிக்கண நண்ணுதி றென்றுகூ
யாவ லித்தன ராயிழை மாரெலாம். (க௯உ)

வாங்கு பூநுதன் மன்னவன் றேவிதன்
பாங்கர் மங்கையர் பற்பல ருங்குழீஇக்
கோங்க மன்ன முலைமுகங் கொட்டியே
யேங்கி யேதுய ரெய்தி யிரங்கினர். (க௯௩)

இந்தி ரைக்கு நிகர்வரு மேந்திழை
யந்த மில்லதொ ராயிழை மாரொடு
முந்தி யேகி முடிந்து துணிந்திடு
மைந்தன் மீமிசை வீழ்ந்து மயங்கினாள். (கசுச)

மயங்கி னாள்பின் மனந்தெளி வெய்தினா
ளுயங்கி னண்மிக வோவென் றரற்றினா
டியங்கி னாளுரு மேறு தினைத்திடு
புயங்க மென்னப் புரண்டு புலம்பினாள். (கசுரு)

வேறு.

வெய்யோ னென்றாழ் தீண்டுத லோடும விண்ணிற்போய்க்
கையோ டன்றை பறறினை வந்தென் கண்முன்னை
மொய்யோ டன்று வெஞ்சிறை செய்த முருகாவோ
வையோ கூற்றுக் கின்றிரை யாவ தறியேனே. (கசுசு)

பண்டே வானஞ் செந்தழன் மூட்டிப பகைமுற்றுங்
கொண்டே சென்று யப்பக னுன்றன் கோலததைக்
கண்டே னின்றே யிக்கிடை தானுங் காண்பேனோ
விண்டே னல்லே னிவ்வுயிர் தன்னை வினையேனே. (கசுஎ)

செந்தேன் மல்கும் பூமகள் செங்கைக் கிளியொன்று
முந்தே நின்னை வேண்டிட மொய்ம்பா லதுவாங்கித்
தந்தாய் நொந்தேற் கின்றொரு மாற்றந் தருகில்லா
யந்தோ வந்தோ செய்வகை யொன்று மறியேனே. (கசுஅ)

பாபத் தாலோ விண்ணவ ரானோர் பலர்கூறுஞ்
சாபத் தாலோ யாரினு மேலாந் தனிமூவர்
கோபத் தாலோ வெவ்வகை யாலோ குறியேன்யான்
சோபத் தீயால் வாடின னின்னைத தோற்றேனே. (கசுகூ)

பொன்போன் மேனிக் கந்தனை யிவ்வூர் புகுவித்துக்
கொன்போர் மூட்டி மைந்தரை யெலலாங் கொல்விததுந
துன்போ டிந்ரா ணியு மிறப்பச் சூழ்ந்தாரே
யென்போ லாக வானவர் மாத ரெல்லோரும். (உ00)

வான்று வுற்ற வச்சிர மொய்ம்பன் வடவைததீக்
கான்று லிக்கும் வன்னி முகததுக் கழல்வீரன்
மூன்று நூற்றுப் பததினர் யார்க்கு முதல்வந்த
தோன்று லென்றே நின்னை யிறைஞ்சிச் சூழ்ந்தாரோ. (உ0க)

துன்றோர் பெற்ற மெய்யொடு புந்தி துணிவாகச்
சென்றே வானிற் புக்கனை நின்பாற் செலும்வண்ண
மொன்றே யுள்ளந் தான்றுணி யாதா லுலைவெய்து
நன்றே நன்றே சிந்தையும் யானு நண்பம்மா. (உ0உ)

கருந்தேன் மொய்த்த வண்டென மின்னார் கட்கெல்லாம்
விருந்தே யாகு நின்னடை காணும் விதியற்றேன்
மருந்தே யன்னாய் நின்னை யிழந்தேன் மறறிங்ஙு
னிருந்தே னல்லேன் றுஞ்சின னன்றோ வினியானே. (உ0ந)

னையா கிற்குந் தேவர் தமக்கு நனிதுன்பஞ்
செய்யா கிற்ற னன்றல வென்றே னதுதேரா
தையா நின்னைத் தோற்றனன் மன்ன னவனுந்தா
னுய்வான் கொல்லோ தன்னுயிர் தானு மொழியாதே. (உ0ச)

வேறு.

என்றிவை பன்னித் தேவி யிரங்கினை ளிரங்க லோடு
நின்றிடு துணைவி மாரு நீடுதொல் கிளைஞர் யாருங்
கன்றொழி புனிறரு வென்னக கதறினா காமர் மூதூர்
வென்றியை நீங்கி யந்நாள் விழுமநோய் மிக்க தன்றே. (உ0ரு)

அன்னது காலை தன்னி லவுணர்கோ னிரக்க நீங்கிப
பன்னருஞ் சிறப்பின் மிக்க பதுமையே முதலோர் தம்மைத்
தொன்னிலை யிருக்கை யுயதது துண்ணெனச் சீற்றங் கொண்டு
தன்னுழைத தொழுது நின்ற தானவாக் கிதனைச் சொலவான். (உ0சு)

மாற்றலர் தொகையை யெல்லாம் வல்லையி னின்றே செறறுச்
சீற்றமாய்க் குருதி வீட்டித தீமக மொன்றை யாற்றி
யீற்றுறு மைந்தன் றன்னை யெழுப்புவ னிந்த மெய்யை
வீறறொரு சாரி னிட்டு விடாதுபோற் றிடுதி ரென்றான. (உ0எ)

அன்னது பலருங் கேளா வழுகிதென் றெடுத்து மைந்தன்
பொன்னுட லொருசா ருய்த்துப போற்றினா போற்ற லோடு
மன்னவன் வெகுண்டு நந்த மாறறலர் தொகையை யெலலா
மென்னினை யோனுக் கூணு வளிப்பனென் றெண்ணங் கொண்டான். ()

தும்பையஞ் சுழியல் வேய்ந்த சூர்முத லிவ்வா றுன்னிச்
செம்புன லொழுகு பைங்கட் டேரிற சிலரை நோக்கி
யம்புதி வடாது பாங்க ராசுரத தரசு செய்யு
மெம்பியை வல்லை யோடிக் கொணருதி ரீண்டை யென்றான். (உ0கூ)

ஆக திருவிருத்தம் - க,கூஉ௬.

---

வசனம்.

சூரபன்மன் இவ்வாறு வருந்துகையில, சூரியோதயமாயிற்று. இவன் வருந்துஞ்செய்தியைத் தூதர்கள் பானுகோபனுககறிவிக்க, அவனெழுந்து சூரபன் மனிடஞ்சென்று, இனிநமது வாழ்வழியுமென்பதற்குச் சந்தேகமில்லை, வீரவாகு வையும் சண்முகனையும் வெல்வதரிது, ஆதலால் நாம் தேவர்களைச் சிறைவிடுவதே நலமென்றான். அதைக்கேட்டசூரன், அவனை நோக்கி, நீ பயந்தனைபோலும், நீபோய்த் தூங்கிக்கொணடிருவென்றான். அதுகேட்ட பானுகோபன், நான்செய்த பிழையைப் பொறுக்கவேண்டுமென்று வணங்கி விடைபெற்றுப் போர்க்கோலங் கொண்டு போர்க்களத்தையடைந்தான்.

இவ்வாறு பானுகோபன் போர்க்களத்தையடைதலும் பூதவீரரும் அவுணவீரரும் எதிர்த்துப் போர்செய்கையில் பூதவீரர் தோற்றோடினர். அப்போது பிற் படையில்நின்ற பூதவீரர் அவுணர்கள் ஓடிப்போம்படி போர்செய்தனர். அதைக் கண்ட பானுகோபன் பூதவீரர்கள்மேல் கொடுங்கணைகளையேவினான். அதனால் பூதவீரா வருந்துவதைக்கண்ட வீரவாகுதேவா அவுணப்படை சிதறியோடும்படி

பாணப்பிரயோகஞ்செய்தார். அதன்பிறகு பானுகோபன் சில பாணங்களைவிடுத்து வீரவாகுதேவருடைய வில்லையொடித்தான். வீரவாகுதேவர் ஒரு வேற்படையேவினார். அது பானுகோபனது நெற்றியிற்பட்டது. அதற்குமேல் வாயு அஸ்திரம் அக்கினி அஸ்திரம் முதலிய தெய்வக்கணைகளை இருவருமேவிப் போர்செய்கையில், பானுகோபன் மாயையால் மறைந்துநின்று பாணமழைபொழிந்தான். வீரவாகுதேவர் ஞானஸ்திரமேவி அவன் மாயத்தை யழித்தார். இவ்வாறு இருவரும் நெடுநேரம் போர்செய்து முடிவில் வீரவாகுதேவர் பானுகோபன்தலையையுந் தோள்களையும வெட்டித்தள்ளினார். அவனும இறந்துபட்டான். வீரவாகுதேவர், பூதவீரர்*முதலியோர் சூழச்சென்று சண்முகன் சந்நிதியையடைந்து வணங்கினார். பெருமான் இவரைநோக்கி, பானுகோபனை வென்றுவந்தாய், உனக்குவேணடுவது யாதென்று கேட்க, எனக்கு உன்திருவடிக் கன்புசெய்தலே வேண்டுவது என்றுசொல்ல, சண்முகனும் அப்படியே யாகுகவென்று விடைதரப்பெற்றுத் தம்மிருக்கையையடைந்தார். பானுகோபன் இறந்துபட்ட செய்தியைத் தூதர்சொல்லக் கேட்ட சூரபன்மனும் அவன் மனைவியாகிய பதுமகோமளையும் மிகுதியாகிய துக்கசாகரத்தில் அழுந்தினார்கள்.

பானுகோபன்வதைப்படலம்முற்றிற்று.

---

## சிங்கமுகாசுரன்வதைப்படலம்.



என்னலு மொற்றர் கேளா விறைவனை யிறைஞ்சி யேகி
யுன்னுற லினைப்பின் முந்தி யுதகரத் தளக்கர் நண்ணி
மன்னகா புகுந்து ஞெளஎல கடந்துமந் திரத்துட் புக்குச்
சென்னியா யிரங்கொண் டுள்ள சிங்கமா முகவற் கண்டார். (க)

களித்தனர் மகிழ்ந்து தூதர் கான்முறை வணங்கி நிற்ப
வளித்திடு மரசின் வைகு மரிமுகன் வந்த தென்னை
விளத்திடு வீரக ளென்னக் கேடிலா வவுணர் மேலோன்
விளித்தன னைய நின்னை விரைந்தனை வருக வென்றார். (உ)

வேறு.

சரத்தினுங் கடியவ ரினைய சாற்றலு
மரித்திறன முகத்தவன் வினவி யாயிடை
விருத்தமுண் டேலது விளம்பு வீரென
வுரைத்தன னன்றென வொற்றர் கூறுவார். (௩)

நம்பியை வரையொடு நுதிகொள் வேலினு
லம்புவி வரைப்பில்வந் தட்ட கந்தவே
ளம்பதி முன்வட நகர்வந் தெய்தினன்
செம்பது மன்முதற் றேவர் சூழவே. (௪)

வந்திடு மெல்லைபோய் மலைந்து பையயப்
புந்திகொ ளமைச்சருஞ் சிறாரும் பொன்றினு
ருய்ந்தன னிரணிய னுததி யோடினு
னெந்தையந் திருந்தனன் புதுமை யீதென்றார். (௫)

தொழுந்துணைக் கையுடைத் தூத ரின்னண
மொழிந்தது வினவலு முனிவு மானமு
மழுந்திடு துயரமு மாகம் போழ்ந்திட
வெழுந்தன னவுணரோ டேகன் மேயினான். (௬)

முன்புறு கடையுறு மொய்த்த தூதரை
யென்பெருஞ் சேனையைக் கொணாதி ரீண்டெனத்
தென்புலக் கோமக னாற்றிற் செப்பலு
மன்பெருந் தானைகள வல்லை வந்தவே. (௭)

தூசிகொ ணாற்படை துவன்றிச் சேர்தலு
மாசுறு மரிமுகத தண்ணல கண்ணுறீஇப்
பாசன மன்னவா பாங்கர் சுற்றிடத
தேசுடை மணிநெடுந் தேரொன் றேறினான். (௮)

தாரொலி செய்தன தாள்வ யப்பரி
பேரொலி செய்தன பிறங்கு பூட்கைசோ
காரொலி செய்தன கண்டை யார்த்தன
தேரொலி செய்தன தெழித்த சில்லியே. (௯)

மூரட்டுடி சல்லிகை முரசங் காகள
முருட்டுறு சுரிமுக முடிக்கை துந்துபி
திரட்டுறு தண்ணுமை திமிலை யாதிக
ளிரட்டிய கேதன மெங்கு மீண்டிற்றே. (௧௦)

தழங்குரன் மால்கரி புரவி தானவ
ரழுங்குறு தேர்நிரை யனிகம் வானமே
வழங்குறு நெறியதா வலிதிற் சென்றன
முழங்கில பெயர்கில முகில்க ளஞ்சியே. (௧௧)

ஏயிது தன்மையி னீண்டு தானைகள்
பாயின சென்றிடப் பரிதி போலொளி
ராயிர மவுலிய னவுணர் நாயகன்
சேயுயர் விசும்பினி லெழுந்து சென்றனன். (௧௨)

கன்னலொன் றளவையிற் ககனத் தாற்றினூற
சென்னிகள் பலவுடைச் சீய மாமுகன்
மன்னவ னுறைதரு மகேந்தி ரபுரந்
துன்னினன் வெருவியே சுரர்க ளோடவே. (௧௩)

அடைத்தலை நீங்கிய வம்பொற் கோநகர்க்
கடைத்தலை வந்தனன் கனகத தேரொரீஇப
படைத்தலை மன்னவர் பரவ வுளபுகாக்
கிடைத்தலை மேயினன் கெழுமு சூரனை. (௧௪)

அரசியல் புரிந்திடு மவையை நண்ணிய
முரணுறு சிங்கமா முகததன் முன்னவன்
றிருவடி மலர்களிற் சென்னி தீண்டுறப்
பரிவொடு வணங்கினன் றொழுத பாணியான். (௧௫)

வணங்கிய தம்பியை மலர்க்கை தொட்டெடா
விணங்கிய மார்புறத் திறுகப் புல்லலு
மிணங்கவர் வேலினுய் நினது செம்முக
முணங்கிய துற்றதெ னுரைத்தி யாலென்ருன். (கசு)

என்னலு மவுணர்கோ னிளைய வன்றனை
முன்னுற விருத்தியே முரணின் மேலையோ
யென்னிடை யுற்றன விசைப்பன் கேளென
வன்னவ னுணர்வகை யறைதன் மேயினன். (கஎ)

அன்றுநீ போந்தபின் னயில்கொள் வேலினுற்
குன்றினை யெறிந்திடு குமர னென்பவன்
றன்றுணைச் சேனையுந் தானு மிந்நகர்
சென்றனன் பாசறை சேர்ந்து வைகினன். (கஅ)

மற்றவன் சேனைகண் மலைய மைந்தர்க
ளிற்றன ரமைச்சனு மிறந்து போயின
னற்றன தானையு மாட கப்பெய
ருற்றவ னிரிந்தன னுததி யோடினன். (கசு)

பொங்குளை யரிமுக புகுதி யின்னதாற்
சங்கையில் படையொடு சமரி னேகியே
யங்கவன் வலியினை யடர்தது மீளுதி
யிங்குனை விளித்தன னிதனுக் காவென்ருன். (உ0)

எஞ்சலில் சூரன்மற் றிதனைச் செப்பலும்
வெஞ்சின வரிமுக வீரன் றேர்வுறு
நெஞ்சினி லாகுல நிகழ முன்னவன்
செஞ்சரண் வீழ்ந்துகின் றிதனைச் செபபுவான். (உக)

மல்லலம் புயமுடை மைந்தர் தங்களைத்
தொலலையி லமைசசரைச் சுற்றத தோர்களை
யெலலவர் தம்மையு மிழந்து வைகினய்
புல்லிது புல்லிதுன் புந்தி யெண்ணமே. (உஉ)

மூலமு முடிவுமில் லாத மூர்த்தியைப்
பாலனென றெண்ணினை படுவ தோர்ந்திலை
யாலம தானதே யைய வென்மொழி
மேலையின் விதியையா ர வெல்லு நீரினர். (உங)

சென்றிடு புனலினைச் சிறைசெய் தாவதென்
னின்றினி யேகியே யெண்ண லாரெனத்
துன்றிய குழுவெலாந் துடைத்து நூங்கியே
நின்றிடு கின்றன னீயுங் காண்டியால். (உச)

கந்தனை மொருவனைக் கடக்கப் பெற்றிடின்
வந்துனைக் காண்பனுன் மற்ற தில்லையே
லந்தம தடைவரா லாரு மையநீ
புந்தியி னினைந்தன புரிதி யாலென்ருன். (உரு)

என்றுகை தொழுதுபின் னிறையு மவ்விடை
நின்றிலன் விடைகொடு நிருத னேகியே
துன்றிய தானைகள் சூழ மற்றவ
னென்றுதன் மந்திரத் துறையு ளெய்தினான். (உசு)

போனக மேருவும் புடையிற் சூழ்வரு
மூனெனும் வரைகளு முலப்பில் சோரிநீர்
தேனொடு பாறயிர் தேற லாதிக
ளானபல் கடல்களு மயிறன் மேயினான். (உஎ)

வாசநீர் தோய்ந்திடு நரந்த மான்மதம்
பூசினன் பாளித மிசைபு னைந்தனன்
வீசுபன் மதுமலர் மிலைச்சு கினறனன்
காசினி வரைப்பெலாங் கந்தஞ் சூழ்தர. (உஅ)

களைந்தனன் பழையன கவினப் பூண்டனன்
வளந்தரு கின்றதோர் யாணர் மாண்கலன்
மிளிர்ந்திடு தினகரர் புணரி வீழ்ந்துழி
யொளிர்ந்துடன் பலகதி ருதிக்கு மாறுபோல். (உகூ)

படிதவிர் பருப்பதம் பத்து நூற்றினின்
முடிதொறு மிளமபிறை முளைதத வாறுபோ
னெடுமைகொ ளரிமுக னெற்றி தோறும்வெண்
பொடிதனை யணிந்தனன் புனித மாயினான். (௩0)

தண்டமு நேமியுஞ் சங்க ரன்றரக்
கொண்டதோர் சூலமுங் குலிச மேமுத
லண்டர்தம் படைகளு மன்னை யீந்திடு
திண்டிறற் பாசமுஞ் செங்கை பற்றினான். (௩க)

கைததலம் யாவையுங் கதிர்கள் கான்றிட
வெததிறப் படைகளும் பின்ன ரேந்துறுப்
பத்துநூ ருயிரம் பரிகள் பூண்டதோர்
சித்திர மணிநெடுந் தேரி லேறினான். (௩உ)

தந்திரத் தலைவருந் தனயர் யாவருஞ்
சிந்துரத் தொகுதியுந் தேரு மாக்களு
மிந்திரப் பெருவளம் யாவுஞ் சூழ்தர
மந்திரத திருநகர் வாயி லெய்தினான். (௩௩)

வேறு.

மேற்படு கேசரி வெம்முக வீரன்
மாற்படு கோநகர் வாய்தலின் மேவ
நாற்படை யானவு நண்ணின வெம்போ
ரேற்புடை வெள்ளமி லக்கம தன்றே. (௩ச)

வானவ ரேற்றமு மண்ணவர் வாழ்வுந்
தானவ ரின்னலு நீக்கிய தக்கோ
ரூனமில் செய்கைய ரொள்ளெரி யுண்ணுங்
கானமெ னபமொலி காட்சியின் மிக்கோர். (௩ரு)

கார்பயில் கின்ற கருத்தினர் காமன்
கூர்பயில் கின்ற கொடுங்கணை யுண்ணுந்
தார்பயி ரோளார் சமர்த்தொழில் செய்தே
மார்பக மன்றி வடுப்புனை யாதோர். (௩௬)

எண்ணமி ரெல்லுயிர் யாவு மலைக்கு
மண்ணலை யனைவ ராரழல் காலுங்
கண்ணினர் வார்கழல் கட்டிய தாளார்
விண்ணினை யேனும் விழுங்கவும் வல்லோர். (௩௭)

நேருதி ரென்றெதி நேர்ந்தவ ராகங்
கூறுதி வேல்கொடு கூறு படுத்துப்
பேருதி ரந்தசை பெய்து கிரம்பா
வாரிதி யென்ன வகுத்திடும் வாயார். (௩௮)

தண்ட மழுப்படை தட்டை முசுண்டி
விண்டுயர் கொல்சிலை வேலெழு நாஞ்சி
லெண்டகு பல்படை யாவையு மேந்தி
யண்டமு டைந்திதி ரும்படி யார்த்தார். (௩௯)

அந்தர மாமுகி லாமென வார்க்குந்
தந்திகள் வீழ்த்துறு தானம தோடி
யுந்திக ளாயுல வைக்கதி கொண்டு
முந்திய தூசியின் முன்னுறு கின்ற. (௪௦)

வேலைய தன்னவி லாழிய வன்னிக்
கோலம தானகு ரங்கொள் பதத்த
கால்விசை கொண்டன கந்துக ராசி
மாலுறு பூழியின் வான்புவி செய்வ. (௪௧)

சூழ்வரு தேரிடை துன்று பதாகைக்
காழ்வரு கோனுதி கார்முகி லுந்தி
போழ்வன வாடுறு பூந்துகி லங்க
ணூழ்வரு பூழை யடைத்தன வன்றே. (௪௨)

வரங்கெழு சூர்துணை மாய்ந்திடு மென்றே
யுரங்கொடு முன்ன முணர்ந்தன கொல்லோ
துரங்கம முங்கின தோல்புலம் புற்ற
விரங்கின பல்லிய மேங்கின தேர்கள். (௪௩)

கட்புல னுசிக வின்செவி துன்னப்
பட்டன பூழிப தாகையு மற்றே
யொட்டலர் விண்செல வொட்டல ரென்னு
விட்டனர் தூக்கம் விரைந்தனர் வெய்யோர். (௪௪)

தேரின ரோர்பலர் திண்டிறல் வாசி
யூருந ரோர்பல ரோங்கிய வேழம்
பேருந ரோர்பலர் பேரடல் கொண்டு
பாரின ரோர்பல ராற்படை மள்ளர். (௪௫)

துங்கமில் சூர்துணை தொல்படை மன்ன
னங்கவ னென்னவ ரித்தலை கொண்டான்
மங்கல மாயவண் மாமக னுடற்
சிங்கனெ னப்படு சீர்ப்பெய ருள்ளான். (சகூ)

போர்ப்படை கொண்டு புறம்படர் கின்ற
தேர்ப்படை காற்படை சிந்துரம் வாசித்
தார்ப்படை கொண்டு தடங்கட லென்ன
வார்ப்படை நெற்றிய னுகி யகன்றுன். (சஎ)

நீள்வயிர் பேரி நிசாள முடுக்கை
தாளம் வழிப்படு தண்ணுமை தகைகை
காளம் வலம்புரி கைத்துடி யாதி
யாளி முகன்மு னளப்பில வார்ப்ப. (சஅ)

ஆகிய தால மறைதென யாமு
மேகுது மூண்டி யெமக்குள தென்னு
மாகநெ ருங்கின வன்கழு கீட்டங்
காகம் வருந்திய காளிகள் கூளி. (சகூ)

வேறு.

ஆழியை யொத்துய ரம்பொற் றேர்களி
லாழியை யுண்டெழு புயல்வந் தாததன
வாழிய நிலத்துருண டழுதி யோவெனு
வாழியை வினவியே யமர்தல் போலுமால். (ருo)

இவ்வகை சேனைகள் யாவு மேழ்பெரும்
பவவுறு மொருவழிப் படர்ந்த தேயென
வவ்வயிற் போந்திட வமரை முன்னியே
தெவ்வடு மரிமுகன் சேறன் மேயினுன. (ருக)

வேறு.

சேரல ராவிகொள் சீய முகத்தோன்
பேரணி கத்தொடு பேர்ந்திட லகாணூஉ
வாரிச மேலவன் வாசவன் வானோ
ராரும் வெரீஇயின ரச்சம டைந்தார். (ருஉ)

செய்ய கரத்தினர் சிந்தை வியாத்தே
மெய்யல சுற்றிட மேற்றுகில் சோர
வையுறு மெல்லையி லாகமி ரைப்ப
வொய்யென யாவரு மோடினர் போனுர். (ருங)

ஆவதொர் பாசறை யாலய வைப்பிற்
றேவர்க ளீண்டுறு சிற்சபை தன்னின்
மேவரு வேற்படை விண்ணவன் முன்போய்ப்
பூவடி தாழ்ந்து புகன்றிடு கின்றார். (ருச)

ஆயிர மான வகன்றலை கொண்டா
னாயிர மாயிர மங்கை படைத்தா
னாயிர மேற்படு மண்டமும் வென்று
னாயிரம் யோசனை யாவுயர் மெய்யான். (ருரு)

நெஞ்சி லெவர்க்கு நினைப்பரி தாகும
வஞ்சமு மாயையின் வன்மையும் வல்லோ
னெஞ்சவில் வன்மைய னிவ்வுல கெல்லாந்
துஞ்சினு மாருயிர் துஞ்சுத லில்லோன். (௩௬)

ஓங்க லினங்க ளுவாத்தொகை நாகம்
பாங்கம ராமை பரித்திடன் மாற்றி
யீங்குல கங்க ளெவற்றையு மோர்நா
ளாங்கொரு செங்கையி லாற்றிய தொல்லோன். (௩௭)

பாந்தள் புனைந்த பராபர மூர்த்தி
யீந்தது மாற்றல ரெல்லையி லோரைக்
காய்ந்துயி ருண்டு கறைப்பெரு நீத்தந்
தோய்ந்திடு கின்றதொர் சூல மெடுத்தான். (௩௮)

எண்டிசை மேதினி யேழ்பில மேனை
விண்டல மன்னதன் மேற்படு மெல்லை
யண்ட மனைத்துமொ ரங்கையில் வாரி
யுண்டிமிழ் கின்றதொர் வன்மையு முள்ளோன். (௩௯)

தூக்கொரு பால்வலி தூங்குற வோர்பான்
மேக்குயர் கோலென மேதினிப் பாங்கர்
தேக்கெறி வேலைகள் சிந்தி விசும்பிற்
றூக்குற வேநடை தந்திடு தாளான். (௪0)

தண்டமி தென்று தருக்கி னெடுத்தே
யண்ட கடாக மதன்புடை மோத
நுண்டுக ளாதலு நொய்திது வென்றே
விண்டொடு மேருவை மீளவும் வைத்தோன். (௪௧)

மாசறு நேமி வடாது புலத்தி
னசுர மென்னு மகன்பதி வாழ்வோன்
வீசிடி னெவ்வுல கத்தையும் வீக்கும்
பாச மிரண்டு பரித்திடு கையான். (௪௨)

துங்கம தாகிய சூர்துணை யானோ
னங்கவ னிற்பெரி தாற்றல் படைத்தோ
னங்க ளினங்களை நாளு நலித்தோன்
சிங்க முகாசுர னாகிய தீயோன். (௪௩)

அந்தமி லாவனி கக்கடல் சூழ
வெந்திற லோடு வியன்சம ராற்ற
வந்தனன் மற்றவன் மன்னுயிர் மாற்றி
யெந்தை யளித்தரு ளெங்களை யென்றார். (௪௪)

அன்னதை யோர்தலு மாறுமு கேசன்
றன்னய னின்றிடு தாவறு மோதை
மன்னனை நோக்கிநம் வாலிய தேரை
முன்னிவ னுய்க்குதி யென்று மொழிந்தான். (௪௫)

தீட்டிய வேற்படை செங்கை படைத்தோன்
மாட்டுற நின்ற வயம்புனை மொய்ம்பன்
கேட்டன னெந்தை கெழீஇயின முன்போய்த்
தாட்டுணை வீழ்ந்திது சாற்றுத லுற்றான். (சுசு)

தந்நிக ரற்ற சயம்புனை வீரர்
முன்னுறு தானைகண் மொய்த்திட யான்போ
யொன்னல னாவியை யுண்டிவண் மீள்வ
னென்னை விடுக்குதி யெந்தையை யென்றான். (சுஎ)

ஆண்டகை மூரலொ டம்மொழி கேளா
மாண்டிட வந்திடு மாற்றலன் வெம்போர்
வேண்டினை நன்று விடுத்தன முன்னீ
யீண்டுள தானையொ டேகுதி யென்றான். (சுஅ)

என்றலும் வீர னெழுந்துகை கூப்பி
வென்றிகொள் சாரதர் மெய்க்கிளை சூழ
மன்றம கன்று மணிக்கடை நண்ணி
யொன்றுதன் மாளிகை யூடு புகுந்தான். (சுகூ)

நேர்முக மான நிசாசரர் தம்மேற்
கூர்முக வாளி குணிப்பில கோடி
யோர்முக மாயுல வாதுமிழ் நீராற்
கார்முக மாயதொா காமுகங் கொண்டான். (எ0)

போதுற முங்குலி புட்டில் செறித்தான்
கோதைய தொன்று கொடுங்கை பிணித்தா
னேதமில் சாலிகை யாக்கையி னிட்டான்
மேதகு தூணி வெரிந்புடை யாத்தான். (எக)

மிக்குறு தெய்வ வியன்படை முற்றுந்
தொக்குற வேகொடு தும்பைதரித்துச்
செக்கரின் விஞ்சிய செய்யதொர் வையம்
புக்கனன் வல்லை புறங்கடை வந்தான். (எஉ)

எண்ம ரிலக்கர்க ளிச்செயல் காணா
வண்மை தரும்படை மாட்சிமை யெய்தித்
திண்மை யுறுந்தம தேர்களி லேறி
யண்மினர் வீரனை யார்ப்பொடு சூழ்ந்தார். (எங)

மேனிக ழாயிர வெள்ளம தாகுஞ்
சேனை யெழுந்து செறிந்து பிறங்கல்
வானுயர் தாரு வயப்படை பற்றித்
தானவர் கேசரி தன்புடை வந்த. (எச)

எறிந்தன பல்லிய மீண்டிய தானை
செறிந்தன மாண்கொடி செற்றின பூழி
யறந்தலை நின்றவ னன்னது நோக்கிப
பறந்தலை யொல்லை படர்ந்திட லுற்றான். (எரு)

ஆரும் வியப்புறு மாயிர வெள்ளம்
பாரிடர் தானை படைக்கிறை யானோர்
சாருறு கேளிர்க டன்னொடு செல்ல
வீர னடைந்தனன் வெஞ்சம ரெல்லை. (எசு)

ஆனதொர் காலையி லாளரி வெய்யோன்
சேனையும் வந்து செறிந்தது பூதர்
தானையு மங்கெதிர் சார்ந்தது கங்கை
வானதி சேர்தரும் வாரிதி யேபோல். (எஎ)

கோடு புலம்பின கொக்கரை யார்த்த
மோடுகொள் பேரி முழங்கின பீலிக்
காடு தழங்கின கண்டை கலித்த
வாடு பதாகைக ளார்த்தன வன்றே. (எஅ)

தேரொலி செய்தன திண்டிறன் மாவின்
றூரொலி செய்தன தந்தியி னீட்டம்
பேரொலி செய்த பெருங்கட லோடுங்
காரொலி செய்திடு காட்சிய தென்ன. (எகூ)

வேறு.

அந்த வேலையின் முருகவே டானையோ ரணுகி
முந்து வெஞ்சமர் முயன்றன ரதுகண்டு முனிந்து
சுந்த ரந்திகழ் சிங்கமா முகன்படைத் தொல்லோர்
தந்தி தேர்பரி யணியொடும் போர்செயச் சார்ந்தார். (அ0)

தண்ட மோச்சினர் கணிச்சிக ளோச்சினர் தடக்கைப்
பிண்டி பாலங்கள வீசினர் தோமரம் பெய்தார்
கொண்ட லாமெனத் தனித்தனி வார்சிலை குனித்துத்
துண்ட வெங்கணை தூரந்தனர் தானவத் தொகையோர். (அக)

விரைகள் வீசிய மலர்த்தரு வீசிய விண்டோய்
வரைகள் வீசிய தண்டெழு வீசிய மழுவி
னிரைகள் வீசிய நேமியி னிரந்தபல் வளனுந்
திரைகள் வீசிய தாமெனப் பூதர்தஞ் சேனை. (அஉ)

வரங்கள் சிந்தினர் வன்மைகள் சிந்தினர் வயத்தாள்
கரங்கள் சிந்தினா புயமலை சிந்தினர் கலன்சே
ருரங்கள் சிந்தினர் மணிமுடி சிந்தின ருருளுஞ்
சிரங்கள் சிந்தின ரவுணரும் பூதரிற் சிலரும். (அங)

வருதி நீயெனத் தனித்தனி யிகல்செயு மறவோர்
கருதி யேயடுங் களத்தினி லவருடற் காலுங்
குருதி யோடியே யெங்கணும் பரத்தலிற் கொடுந்தேர்ப்
பரிதி யோடிய குடதிசை நிகர்த்தது படியே. (அச)

கொலைசெ றிந்திடும் பூதரு மவுணருங் கொடும்போர்
நிலைசெ றிந்திடு களத்திடை நீடுசெந் நீரி
னலைசெ றிந்தவூன் செறிந்தன வடுகளே வரத்து
மலைசெ றிந்தன செறிந்தன கழுகுடன் மண்ணை. (அரு)

வேறு.

வெற்புறழ் தகுவர் சேனை வெள்ளமுங் கணத்து ளாருந்
தற்பமொ டெதிர்ந்திவ் வாறு சமர்புரிந் திட்ட வெல்லை
வற்புட னவுணன் றானை மள்ளர்வந் தடாப்ப மாய்ந்து
முற்படு கின்ற தூசிப் பூதர்கண் முரிய லுற்றார். (அசு)

செல்லுறழ் பகுவாய் வீரர் சிதைந்துழிப் பூதர் தம்முட்
கல்லுறழ் மொய்ம்பிற் சிங்கன் கனன்றொரு தண்ட மேந்திப
பல்லுறு தலைகள் சிந்தப் படிமிசை வீட்டிப் பானு
ளல்லுறு மதிபோ னேரு மவுணரை யடாத்துச் சென்றான். (அஎ)

அங்கவன் செல்லும் வேலை யவுணரி லொருவ னேமி
சங்கொடு தரித்தோ னன்னான் றசமுக னென்னும் பேரோ
னெங்குநீ போதி நில்லென் றெதிருறச் சென்று வாகைச்
செங்கைவார் சிலையைக் கோட்டித் திருந்துநா ணொலிசெய் திட்டான். ()

வேறு.

விட்டனன் மழையென விசிக மாங்கவை
பட்டிடத் தண்டினுற படியில் வீட்டியே
யட்டிபூந் தாரினு னடியொன் றாலவ
னிட்டதோர் கவசமு மிறுத்து நீக்கவே. (அகூ)

கூற்றுறழ் தசமுகன் கொடிய னுவிலை
மாற்றுவ னிவனென வலிதி னோர்கதை
யாற்றலின் விடுத்தலு மரியின் பேரினு
னேற்றனன் மார்புதண் டிற்று வீழ்ந்ததே. (கூ0)

வீண்டது நோக்கியே வீர வீரனு
மீண்டிவ னேகொலென் றெண்ணி யாமினிக்
காண்டகும் வல்லையேற் காததி யீதென
வாண்டொரு கணிச்சியை யவுண னேச்சினன். (கூக)

மாலொடு கடவுளர் மறுகத் தீயழற்
காலொடு போந்திடுங் கடுவின் வெம்மைபோன்
மேலுறு கணிச்சியை வீரன் செங்கையின்
பாலுறு தண்டினாற் படியில் வீட்டினன். (கூஉ)

நீக்கினன் கணிச்சியை நெடிய தோர்கதை
போக்கினன் றன்னொடு போர்செய் கின்றவன்
றாக்கணங் கமர்சிலை தன்னைச் சின்னமே
யாக்கின னவுணர்க ளலக்க ணெய்தினா. (கூக)

சிலமி றசமுகன யெய்யாததுக காயகனற
கோலமு தாகிய குந்த மொன்றினை
யாலம தெனவிட வரியின் பேரினன்
மேலுற வருவதை விரைந்து நோக்கினன். (கூச)

பூங்கழல் புனைகழற் பூத நாயக
னுங்கது காலையோ ராழி மாப்படை
யோங்கிய பரிதிபோ லுருட்டி னனரோ
பாங்குறு சாரதர் பலரும் போற்றவே. (கூரு)

விடுத்திடு கின்றதோர் வேலை யாழிபோய்ப்
படுத்தது தசமுகப் பதகன் றண்டமொன்
றெடுத்தது வீசலு மிமைப்பி லெய்தியே
யடற்புனை கழலினு னுகத் துற்றதே.         (கூகூ)

ஆகமே லடைதலு மரியின் பேரினுன்
சோகமேல் கொண்டுசெஞ் சோரி சோர்தர
மாகமேற் செம்புனன் மாரி கான்றிடு
மேகமே யாமென விளங்கி னுனரோ.         (கூள)

பரந்திழி குருதிநீர் பருப்ப தத்திடைப்
பிரிந்திடு நதியெனப் பெருக வோடியே
யருந்திறற் றசமுக னுகத தோர்வையால்
விரைந்தனன் புடைத்தலும் வீழ்ந்து பொன்றினுன்.         (கூஅ)

ஐந்திரு தலையுடை யவுணன் மாய்தலுந்
தந்திர வவுணர்தந் தானை யாவையுங்
கந்தடு தோளுடைக் கணங்கண் மேற்செலா
மூந்துறு பேரமர் முயல்வ தாயினா.         (கூகூ)

அவ்வழி யிலக்கரி லநக னென்பவன்
மைவழி சிந்தையன் மடிதத வாயினன்
கைவழி வில்லினன் கடியன் சேனையை
யெவ்வழி போதிரென் றெதிர்ந்து தாக்கினுன்.         (க00)

வெலற்கரும் வில்லுமிழ் வெங்கண் வாளியா
லலைக்குந ராகியே யடல்செய் மள்ளர்தந்
தலைக்குவை சிந்தியே தரையில் வீட்டியே
கலக்கினன் றிரைக்கடல் கடைந்த மாலென.         (க0க)

ஆடிய ருனையா னநக னென்பவன்
சாடினன் றிரிதலுந் தகுவர் யாவரு
மோடின ரன்னதை யுருத்து நோக்கினுன்
பீடுறு துன்முக னென்னும் பேரினுன்.         (க0உ)

வேறு.

தன்மு னோடிய வவுணரை நோக்கிநீர் தளரேன்
மின்மி னிக்குலங் கதிரினை வெல்லுமோ வெகுளி
னென்மு னிற்பரோ பூதர்கள் செருநதொழி லிழந்தார்
கின்மி னின்மினென் றுரைக்கவு மிறையுகின் றிலரால்.         (க0ங)

தானை பட்டன நோக்கினன் றுன்முகன் றழன்மே
லானெய் பட்டென முனிந்தனன் பூதர்க ளந்தோ
சேனை பட்டதென் றலமரக் குனித்தனன் சிலையைச்
சோனை பட்டன வாமென வடிக்கணை சொரிந்தான்.         (க0ச)

சொரிந்த காலையிற் பூதரும் பேரமா தொடங்கி
விரிந்த வெறபொடு தருக்களும் படைகளும் விடுப்ப
வெரிந்து போயின சிற்சில விற்றவுஞ் சிலவா
னெரிந்து போயின சிற்சில வெதிரெதிர் நெருக்க.         (க0ரு)

ஈறு செய்தில கணைமழை யிவரொடும் யானே
மாறு கொள்வதுந் தனிமையி லரிதென வலியோ
னூறு சேர்தரு மாயையா லொவ்வொர்பூ தர்க்கு
நூறு நூறுருக் கொண்டுதாக் குற்றன னொடிப்பில். (கOசா)

ஆய காலையிற் றன்முகன் வடிவமு மடருந்
தீயெ னக்கிளர் சாரத ரொடுசெருச் செய்யு
மேய கொற்றமு நோக்கினன் விம்மினன் வெருண்டான்
மாயை கொல்லென வுன்னினன் வாகையங் கதிரோன். (கOஎ)

மாற்று கின்றதெப் படைக்கல மோவென மதியாத்
தேற்று கின்றதோர் போதகப் பெரும்படை செலுத்தக்
காற்றின் முன்னுறு பூளையி னுருவெலாங் கரப்பக்
கூற்ற மன்னதோ ரான்முக னொருவனுய்க் கொதித்தான். (கOஅ)

கொதித்த தன்முகன் றன்பெருஞ் சிலையினைக் கோட்டி
நுதித்த னிக்கணை யாயிர மொருதொடை நூக்க
மதித்த வீரன்றன் னொருபெருஞ் சிலையினை வாங்கிக்
கதித்த நோன்கணை யாயிரஞ் சிதறினன் கடிதில். (கOகூ)

ஆயி ரஞ்சரத் தாலவன் விட்டகோ லறுத்துத்
தீய வன்றனிச் சிலையையேழ் வாளியாற் சிந்தி
மேய சாலிகை தன்னையோர் பகழியால் வீட்டிக்
காய மெங்கணு மழுத்தின னளவைதீர் கணைகள். (ககO)

வேறு.

அழுந்திடு வடிக்கணை யாகம் போழ்தலு
மெழுந்திடு குருதிநீ ரிரைத்துச் சென்றிடக்
கொழுந்தழல புரைவதோர் கொடிய தன்முகன்
விழுந்தனன் மயங்கினன் விளிந்து ளானெனை. (ககக)

ஊறிய குருதிய னுறுக ணெய்துவான்
றேறின னெல்லையிற் செருவி னேர்துமே
லீறினி வந்திடு மிரிந்திட் டுய்வதே
யாறெனை வுன்னின னமருக் கஞ்சுவான். (ககஉ)

சிந்தையின் வழிபடல் செய்து மாயையின்
மந்திர மொன்றினை மரபி னுன்னுறு
வெந்திரத் தேரினு மெழுந்து தன்முக
னந்தரத் தாறறினு லருவிற் போயினன். (ககங)

ஆயின காலையி லடல்வெம் பூதரிற்
றீயினை முருக்குறுஞ் சீற்றத் தோர்சிலர்
மாயையின் வலியினன் வஞ்சன் வல்லையிற்
போயினன் பற்றுதும் போது வீரென்றார். (ககச)

ஆங்கது கேட்டிடு மாடல் வெய்யவ
னீங்கிது தவிருதி ரிகலுக் கஞ்சியே
நீங்கின னொருவனை நெருக்கி யாருயிர்
வாங்குதல் புகழதோ வலியின் பாலதோ. (கக௫)

ஓடினர் தமமையு முற்றுத் தாண்மலர்
சூடினர் தம்மையுந் தொழுத கையராய்
வாடினர் தம்மையும் வலியி லோரையுஞ்
சாடின ரல்லரோ நவைக்கட் டங்குவார். (ககசு)

வீரரை யல்லரை வெகுள லீரெனப்
பேரடல் வெய்யவன் பேச வன்னது
காரிய மேயெனக் கருத்தி னுன்னியே
சாரதர் தொடார்ந்திடுந் தன்மை நீங்கினார். (ககஎ)

வேறு.

அந்நேர் காணு வாளரி மாமுக வடல்வெய்யோ
னின்னே நந்தந் தானைக ளெல்லா மிரிவாகும்
பின்னே நிற்ற லாவதெ னென்னுப் பெயர்குற்றே
முன்னே சென்றான் பூதரை நோக்கி முனிகின்றான். (ககஅ)

நந்தா வாற்றற் சிங்க முகத்தோ னவனம்முன்
வந்தான் யாமே மாற்றுது மன்னுன் வலியென்னுக்
கொந்தார் தாருச் சூழலும் வெற்புங் கொண்டேகி
முந்தா நின்ற பூதர்கள் வெம்போர் முயல்கின்றார். (ககசு)

மட்டா தொங்கற் சிங்க முகன்மேன் மதிதோய்வா
னெட்டா நின்ற வெற்புள யாவு மெறிகின்றார்
விட்டார் தாருச் சூழல்க ணிச்சி வீசுற்றார்
தொட்டார் சூலந் தண்டெழு நாஞ்சில் சொரிகின்றார். (கஉ0)

சொரியுங் காலைத தீயெழ நோக்கிச் சுடர்வேலோ
னெரியுங் காலுங் கால வுயிாப்ப வெதிாசெல்லாக்
கரியுந் தீயும் பூழிய தாகுங் ககனததே
திரியும் மீளும மப்படை செய்யுஞ் செயலீதால். (கஉக)

அன்னோ வன்னோ நமபடை யெல்லா மடல்வீரன்
முன்னோ செல்லா தீய வுயிர்ப்பின் முடிவாமாற்
பின்னே செய்வ தொன்றிலை யாம்பே ரமர்செய்வ
தென்னோ வென்னோ யாரினு மேலா னிவனென்றார். (கஉஉ)

என்றார் பூதர் சீற்றம் விளைத்தார் யாரும்போய்க்
குன்றா யங்க ணுற்றன யாவுங் குழுவுமற
வன்றா ருக்க ளானவு மாண்கைக் கொடுதொட்டுச்
சென்றா ராாததாா சீய முகன்மேற் செலவுய்த்தார். (கஉங)

வேறு.

கைக்கொடு சாரத கணங்க ளார்த்துட
னுய்க்குறு வரையெலா மொருங்கு சென்றிடாத்
திக்குள வரைப்பெலாஞ் செறிந்து ஞாயிறு
மெய்க்கதிர் வழங்குறும் விசும்பு தூர்த்தவே. (கஉச)

கல்லகத் தொகுதிகள் ககனந் தூர்ததுழி
யெல்லுடைச் செங்கதி ரிரவி மாய்ந்திட
வொல்லெனத் திமிரமவந் துறலு நோக்கியே
யல்லெனக் குடம்பையு ளடைவ புள்ளெலாம். (கஉரு)

வெற்பினை நிரத்தலு மறைய வெய்யவ
னெற்படு முன்னரே யிரவி யோடினு
னற்புத மற்புத மடைந்த தம்புயன்
கற்பமென் றறிஞருங் கலக்க மெய்தினர். (கஉசு)

போற்றலன் றன்மிசைப் பூதர் தூண்டிய
மாற்றரும் பதலைகண் மலிந்து வான்பட
ராற்றினை யடைத்தலு மஞ்சி நின்றனன்
காற்றினும் விரைந்துசெல் கதிரின் பண்ணவன். (கஉஎ)

இன்றுகா றவுணரா விடரு ழந்தன
மன்றியும் பூதரீண் டடுக்கல் வீசினர்
நின்றிடின் வருந்துது நிகழ்ச்சி தேரலாஞ்
சென்றிட றுணிவெனத் தேவ ரோடினர். (கஉஅ)

செருவலி வீரர்கள் செலுத்தச் சேண்படர்
பருவரை யிடையிடை பயின்று சுற்றிய
கருமுகி லுண்டநீர் கான்று தம்வயி
னுருமிடி யெங்கணு முகுத்து வீழ்ந்தவே. (கஉகூ)

வெதிர்படு சிலம்பினும் வழுக்கி வீழ்ந்திடு
மதிர்குர லரியின மண்டச் செற்றின
வெதிருறு தகுவனை யினமென் றுன்னியே
முதிர்தரு காதலான் முன்னுற றுலென. (கஙo)

மைம்மலை யிடைவிராய் வதிந்த மோட்டுடைக்
கைம்மலை யரற்றியே கவிழ்வ காசிபன்
செம்மலை யரியெனா நோக்கித் தேம்பியே
விம்மலை யெய்தியே வீழ்வ தென்னவே. (கஙக)

பொற்றையின் மரங்களிற் பொதிந்த கேசரம்
வெற்றிகொ ளரிமுகன் றொடையின மேவின
விற்றவர் தம்மைவிட் டேதி லார்தமைப்
பற்றொடு கலந்திடு பரத்தை மாதர்போல். (கஙஉ)

எறிந்திடு வரைகடந் தம்மி லெற்றிடச்
செறிந்திடு தீக்கனல் சென்ற திக்கெலாம்
பொறிந்தன புலகந்தன பொரித லுற்றன
மறிந்தன வுலந்தன மன்னு யிர்த்தொகை. (கஙங)

ஆயின பல்லிய லடையப் பூதர்க
ளேயின குன்றமுந் தருவு மேகியே
சீயமா முகமுடைச் செல்வற் சேர்ந்தன
தூயவன் கைலையைச் சூழ்ந்த கொண்டல்போல். (கஙச)

செடித்தலை யெயினரிற் றிகழு மாயிர
முடித்தலை யான்மிசைப் பட்ட மொய்வரை
பொடித்தில விற்றில பூழி யாய்த்தில
படித்தலம் வீழ்ந்தன நொய்ய பான்மையால். (கஙரு)

வேறு.

துன்னற் பட்ட குன்றெவை யுஞ்சூர் துணையானோன்
மின்னற் பட்ட மெய்யிடை பட்டே வெற்பின்கட்
பன்னற் பட்ட தாமென வீழ்கின் றதுபாரா
வின்னற் பட்டார் பூதர்கள் வானோ ரேங்குற்றார். (௧௩௬)

சீலம் புக்க பாரிடர் வெம்போர் செயல்காணூஉக்
கோலம் புக்க தேரிடை நின்றான் குப்புற்று
ஞாலம் புக்கான் பூதர்க டம்மை நலிதற்கோ
ராலம் புக்கா லென்ன நடந்தா னடல்செய்வான். (௧௩௭)

பார்மே லெற்றுஞ் சிற்சிலர் தம்மைப் பகைவிண்ணோ
ரூர்மே லெற்றுஞ் சிற்சிலர் தம்மை யுயர்பானுத்
தேர்மே லெற்றுஞ் சிறசிலர் தம்மைத் திரைசேர்முந்
நீர்மே லெற்றுஞ் சிற்சிலர் தம்மை நெடிதோச்சும. (௧௩௮)

பற்றா நிற்குஞ் சிலவரை மூரற் பகுவாயிற்
சுற்றா நிற்குஞ் சிலவரை வாரிக் குழுவோடுஞ்
சுற்றா நிற்குஞ் சிலவரை யண்டச் சுவரின்க
ணெற்றா நிற்குஞ் சிலவரை யள்ளி யெறிகிற்கும். (௧௩௯)

புண்டரி கன்கட் சிலவரை வீசும் பொருசெங்கைத்
தண்ட தரன்கட் சிலவரை வீசுஞ் சதவேள்வி
யண்டம தங்கட் சிலவரை வீசு மகிலஞ்சூ
ழெண்டிசை யின்கட் சிலவரை வீசு மிகலபேசும். (௧௪௦)

மாலெரி வைப்பிற் பலர்தமை வீசும் வானத்திற்
காலெறி வைப்பிற் பலர்தமை வீசுங் கரைதீர்ந்த
வேலைகண் முற்றும் பலர்தமை வீசும் வியன்மிக்க
ஞால மனைததும் பலர்தமை வீசு நனிதூர்க்கும். (௧௪௧)

சிங்கங் கொண்ட மாமுகன் வீசுஞ் செறிவாலே
துங்கங் கொண்ட பார்முதல் விண்ணின் றுணையுந்தா
னெங்கும் பூத மாயின வம்மா விதுகொண்டோ
வங்கங் கெல்லாம் பூதம தென்றா ரறிவுள்ளார். (௧௪௨)

மிதித்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை மிசையுந்திப்
பதத்திற் கொல்லுஞ் சிற்சிலர் தம்மைப் படிவதைச்
சிதைத்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மைச் செலலென்ன
வுதைத்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை யுலவுறறே. (௧௪௩)

விள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி விரன்மேலாற
றள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி தாமுற்றக்
கிள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி கிளையோடு
மள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி யடுகிற்கும். (௧௪௪)

தாக்கிற் கொல்லு மொருசிலர் தம்மைத் தடிகின்ற
வூக்கிற் கொல்லு மொருசிலர் தம்மை யுருமொத்த
வாக்கிற் கொல்லு மொருசிலர் தம்மை மருளுற்ற
நோக்கிற் கொல்லு மொருசிலர் தம்மை நொடிதன்னில். (௧௪௫)

வாரா நிற்கும் பாரிட ராசியை வாரிப்பின்
சேரா நிற்கும் வாய்தொறு மீண்டச் சேர்த்திட்டே
யாரா நிற்கு மார்ந்தபி னுகை வகன்மோட்டைத்
தூரா நிற்குந் தூர்த்தபி னுடற் றொழில்செய்யும். (கசசு)

எழுவிற் கொல்லு மொருசிலர் தம்மை யெரிகூர்வாய்
மழுவிற் கொல்லு மொருசிலர் தம்மை வயாஞ்சிற்
கொழுவிற் கொல்லு மொருசிலர் தம்மைக் கூர்சூலக்
கழுவிற் கொல்லு மொருசிலர் தம்மைக் கடிதோடி. (கசஎ)

கரத்திற் கொல்லுஞ் சிலவரை நோன்கார் முகமுய்க்குஞ்
சரத்திற் கொல்லுஞ் சிலவரை யம்பொற் றண்டத்தி
னுரத்திற் கொல்லுஞ் சிலவரை யங்க ணுசிக்கின்ற
மரத்திற் கொல்லுஞ் சிலவரை மண்மீ தினில்விட்டும். (கசஅ)

தேர்மே லானோ விண்ணுல் கானோ திசையானோ
பார்மே லானோ வார்கட லானோ பதுமத்தோ
னூர்மே லானோ மேருவி னுனோ வுயர்பூதர்
போர்மே லானோ தீயவ னென்றார் புலவோர்கள். (கசகூ)

அற்றார் தாள்கள் கைக ளிழந்தா ரடுதிண்டோ
ளிற்றார் சென்னி சிந்தினர் துண்ட மிலரானார்
பொற்றார் மார்பம் விண்டனர் வீழ்ந்து புரள்கின்றார்
செற்றார் தம்மை யட்டிடு பூதத் திறல்வீரர். (கரு0)

சொரியா நின்ற சோரிய ராற்றத் துயர்மேலார்
மரியா நின்று ரெண்ணில ரான்மற் றவர்தம்முட்
பிரியா நின்ற சென்னியர் பல்லோர் பெயர்வெய்தித
திரியா நின்று ராடுறு கின்ற செயல்கொண்டார். (கருக)

கருவந் தெய்து மாருயிர் முற்றுங் கவிழ்கின்ற
பருவந் தன்னிற் றீயவ னுண்ணும் படியேபோற்
செருவந் துற்ற சீய முகத்தூத திறன்மேலோ
னொருவன் றானே நின்றடு கின்று னுலவாதான். (கருஉ)

அந்நீ ராகிப் பூதரை வெய்யோ னடுகாலைச்
செந்நீர் நீத்த மாயிடை தோறுஞ் சென்றீண்டித்
தொன்னீர் வேலை புக்குவர் நீக்கித துவராக்கி
முந்நீ ரென்னுந் தொன்மையை வேறாய் முடிவித்த. (கருங)

ஆடா நின்று னிதந்திறம் வெய்யோ னளவில்லார்
வீடா நின்றார் கண்டனர் வெம்பூ தர்க்கெல்லாங்
கேடா நின்று னிங்கிவ னென்னக் கிளையோடு
மோடா நின்றார் வானவ ரெல்லா முலைவுற்றார். (கருச)

துன்னா நின்ற தொன்மரம் வெற்பின் றொகைவீசி
முன்னா குற்ற பூதர்கள் யாரு முடிவாகக்
கொன்னார் சிங்க மாமுக னட்டே குலவுற்று
மின்னார் செம்பொன் மேரு வெனுந்தேர் மிசைபுக்கான். (கருரு)

வேறு.

அவ்வேலை யன்று னமர்செய்வினை யாடல் பாரா
மைவேலை போல்வா னழற்கண்ணன் மனங்க னன்று
செவ்வே யெதிரபுக் கரிமாமுகற் சீறி வெய்யோ
யிவ்வேலை யுன்னை முடிப்பன்னிகன் முற்றி யென்றான். (கடுசு)

என்றங்குரை செய்திடு பூதனை யேந்த னோக்கி
யொன்றுஞ்சிறி துன்னலை யச்சமு முற்றி லாதாய்
நின்றிங்கிது கூறினை யென்னி னினக்கு நேரார்
நன்றுன்வலி யென்று நகைத்தன னாக ரஞ்ச. (கடுஎ)

அன்னானகை செய்தது காண்டலு மாழி நாப்பட்
கொன்னார்தழ லென்ன வெகுண்டனன் கூளி வேந்த
னின்னுடலை நீக்குவன் காணுதி நீயு மென்றோர்
மின்னார்கழு முட்படை யாங்கவன் மீது விட்டான். (கடுஅ)

கூற்றானவ னேவ வரும்படைக் கொள்கை நோக்கி
மாற்றானவ னோர்படை யும்வழங் காது நின்றான்
றேற்றானென வானவ ரார்த்தனர் சூல மார்பி
னேற்றான்வரை மேற்படு கண்டகத் திற்ற தன்றே. (கடுசு)

உறுகின்ற சூலப் படையூற்றமு மோங்கன் மார்பத்
திறுகின்றது மங்கவ னிறதும் யாவு நோக்கிப்
பெறுகின் றவரி லிவன்பெற்றது பேற தென்று
மறுகின்ற நெஞ்ச னொருதண்டினை வல்லை யுய்த்தான். (கசு0)

வேறு.

உய்த்தது மனையதண் டுருமுற் றாலென
வத்தலை யரிமுகத் தவுணன் சாரதி
மெய்த்தலை கோடலும் வெகுண்டு நோக்கியே
கைத்தல மிருந்ததோர் கதையை யேவினான். (கசுக)

மாவலி சேர்தரு மடங்கன் மாமுக
னேவிய வெங்கதை யிமைப்பிற் பூதர்கள்
காவல னகலமேற் கலந்து தாக்கிற்று
லோவென வனையனு முளம்வ ருந்தவே. (கசுஉ)

செயிரறத் திருத்திய செம்பொற் குன்றின்மேல்
வயிரமெய்ப படையது வந்தற் றுதலு
மயிருறப் புனைகல னுகங் கீண்டிட
வுயிரினுக் கவ்வழி யுலைவு மிகத்தே. (கசுங)

தாக்கிய வேலையிற் றழலி னுட்டதான்
மூக்கினின் மார்பினின் முழு மெரு வாயினிற்
றேக்கிய குருதிநீர் சிந்து கின்றது
மேக்குயர் கனன்மழை விரித்த தாரைபோல். (கசுச)

மறந்தனன் றோல்லுணர் வெனினும் வன்றிற
றுறந்திலன் வெவ்வழல் சொரியுங் கண்ணினான்
சிறந்திடு மூசலிற றிரிந்த தன்னுயி
ரிறந்தில னவற்கொரு கூறற மின்மையால். (கசுரு)

ஆரழன் முகத்தவ னயர்வுற் றவ்வழிச்
சோர்வொடு நிற்றலுஞ் சூரன் பின்வரும்
வீரம துடையவன் வேறோர் பாகனைத்
தேரிடை நிறுவினன் சேறன் மேயினன். (கசுசு)

வேறு.

மூண்டம ரியற்றச் சிய முகத்தவன் வரனு நோக்கித்
தூண்டிய வெகுளி மேலோன் சுமாலியென் றுரைக்குந் தொல்லோ
னீண்டிடு மேரு வென்ன நிவந்ததோ ரடுக்க றன்னைக்
கீண்டரி முகன்மேற செல்லக் கிளாந்தனன் வீசி யார்த்தான். (கசுஎ)

மற்றவன் விடுத்த குன்றை வாளரி முகத்து வீரன்
பற்றின னொருதன் கையாற் பந்தென மீட்டு முந்தப்
பொறறட மாாபிற் றாக்கப் புலம்பியே சுமாலி யென்பான்
செற்றமுந் தானு மாகச் செயலற்று நிலதத னுறுன். (கசுஅ)

நிலந்தனிற் சுமாலி வீழ நெடுஞ்சினந் திருகி யங்கைத்
தலந்தனிற் கதையொன் றேந்தித் தண்டிபோ யவுணன் றேரிற்
கலந்தவ னுரத்திற் செலலப் புடைத்தலுங் காமந் தன்னிற்
புலந்தவன் றனக்குக் காட்டு முணர்வெனப் பொடித்த தன்றே. (கசுகூ)

பொடித்தலும் வயிரத் தண்டம் பூதரின் முதல்வன் பொங்கிக்
கொடிததடந் தோமே னிறை கோளரி முகததன் றன்மே
லிடித்தெனக் கையா லெற்ற வெரியெழ நகைத்துத் தன்றோ
ரடித்தலங் கொண்டு தளளி யமரர்கள வெருவ வாததான். (கஎ0)

தாளினு லுந்தி விட்ட தண்டிசே னெழுந்து மெல்ல
மீளுவா னடுவ னென்னும் வெகுளியா னுயிர்பபு வீங்கி
யாளிசேர் வதனத தண்ண லாடக வயிரக் குன்றத
தோளின்மேற் குப்புற் றேதன் னடிகொடு துகைக்க லுற்றுன். (கஎக)

ஆடிய றனை மன்ன னுயிரத் திரட்டி தோளு
மோடினன் றுகைத்துத் தாளு மோய்ந்தன னவற்றை நோக்கி
நாடினன் றிரியா நின்று னுகநீள் குடுமிக் குன்றிற
கோடுயர் பொதும்பர் தன்னிற் பாய்ந்திடுங் குரங்கு போல்வான். (கஎஉ)

குரங்குளைக் குடுமிச் சூட்டுக் கோளரி முகத்து வெய்யோன்
கரங்களிற் பாயு மங்கட் கலந்திடு படையிற் பாயுஞ்
சிரங்களிற் பாயு மீளச் செவிதொறும பாயும பூந்தண்
மரங்களிற் பாய்ந்து செலலு மணிசசிறை வண்டும போன்றுன். (கஎரு)

செறிந்திடு கரமுந் தோளுஞ் சென்னியும் பூதன் செல்வ
தறிந்திலன் சிறியன் போலு மரிமுகத தவுண னம்மே
லெறிந்துல வுற்றுச் சூழு மீகொலென் றொருதன் கையாற்
சொறிந்தனன் இறிது பின்னர்த் தண்டியைத துடைத்து விட்டான். ()

ஒருதனிக் கரத்தாற் றீயோ னுருட்டினன் றுடைப்பத் தண்டி
பெரிதுநொந் தாற்றல் போகிப பின்றினன் பெயர்ந்து போனன்
றெரிதரு பூத ரஞ்சிச் சிந்தினர் செயலோன் றில்லா
ரரிதுசெய் தவமே யல்லா லாற்றல்பெற் றிடுவ துண்டோ. (கஎ௫)

பூதர்க ளிரிவு நோக்கிப் பொருதிற லிலக்கத் தெட்டு
மேதகு வீரர் யாரும் வெய்யதேர் கடாவிச் சென்று
தீதறு சிலைகள் வாங்கிச் சீயமா முகவற் சுற்றித்
தாதவிழ் மலர்பெய் தென்னச் சரமழை பொழித லுற்றார். (௧௭௬)

பொழிந்திடு பகழி யெல்லாம் புகுந்திடு சுவடின் றாகி
யழிந்தது மின்றி முன்போ லவன்புடை வீழ நோக்கி
யொழிந்ததெம் மாற்ற லென்னா வுட்கின ரொருதன் றேரி
னிழிந்தன னவுணர் கோமா னிடிபடத் தெழித்துச் சென்றான். (௧௭௭)

எடுத்தனன் சிலவர் தேரை யெறிந்தன னொன்றோ டொன்றி
னடித்தனன் சிலவர் தேரை யள்ளின னங்கை தன்னா
லொடித்தனன் சிலவர் தேரை யுதைத்தனன் சிலவர் தேரைப்
பொடித்தனன் சிலவர் தேரைப் புதைத்தனன் சிலவர் தேரை. (௧௭௮)

இத்திற மடங்கல் வீர னடுதலு மிலக்கத் தெண்மர்
தத்தம துயிரே தாங்கித் தனுவொடு படைகண் மான
மெய்த்திறல் சிந்திச் சாய்ந்தார் மேவலன் றேர்மேற் புக்கா
னத்தலை நின்ற வீர வாகுமற் றதனைக் கண்டான். (௧௭௯)

ஆளரி யனைய வீர னதுகண்டு பூதர் தம்முட்
கோளரி முகத்து வெய்யோன் கொன்றதோர் பாதி யுண்டாற்
றாளுடை வில்லி னாருஞ் சமரிடத் தழிந்தா ரிந்த
நாளினின் முடியும் போலு நம்பெரும் படையு மென்றான். (௧௮0)

அடல்பெறு புயத்து வள்ள லாடக வரைபோ லுள்ள
கொடுமர மான தொன்றைக் கோட்டினன் சினமேற் கொண்டான்
விடமுறு தறுகட் கேது விரைந்தொரு பாங்கர் புக்கு
நடுவெலாங் கவரத் தோன்று நாகிளங் கதிரே போல. (௧௮௧)

வாங்கிய சிலையிற் பூட்டி வடிக்கணை யநந்த கோடி
தூங்கலின் மழைகான் றென்ன வுலப்புறான் சொரிந்து நிற்ப
வாங்கெதி ரடர்த்துப் போர்செ யவுணாதங் தலைகள் பாறத்
தாங்கிய படைகள் சிந்தித் தரைமிசைத் துணிந்து வீழ்ந்தார். (௧௮௨)

பரித்தொகை முழுதும் பட்ட பாழியந் தேர்கள் பட்ட
வொருத்தலும் பிடியும் பட்ட வுலப்பிலா வவுணர் பட்டார்
பெருத்தன பிணத்தின் குன்றம் பிறங்கின பேய்கண் மொய்த்த
திரைத்தெழு சோரி நீத்தந் தெண்டிரை மடுத்த தம்மா. (௧௮௩)

தேரெனப் பட்ட வீரர் திறமெனப் பட்ட மாவின்
பேரெனப் பட்ட யானைப் பெருக்கெனப் பட்ட தம்முட்
போரிடைப் படாத வெல்லாம் பொருதிரைக் குருதி வாரி
வீரனுக் குதவி யாக வேலையு ளுய்த்த தன்றே. (௧௮௪)

பேரியி னொலியுந் தீய வவுணர்கள் பிடித்த வில்லி
னாரியி னொலியுஞ் சூழு நாற்படை யொலியு மாண்ட
காரியி னொலியு மோட்டுக் கணங்களி னொலியுஞ் செந்நீர்
வாரியி னொலியு மாகி யடிகளா மலிந்த வன்றே. (௧௮௫)

மலைகளை யறுக்கும் வேலை வாள[illegible]யறுக்குரு மசங்கைச்
சிலைகளை யறுக்கும் வெய்யோர் திண்டிறல் கொண்ட தோளி
னிலைகளை யறுக்கு மார்பி னிரைகளை யறுக்குங் கோடி
தலைகளை யறுக்கு மம்மா விளையவன் சரம தொன்றே. (கஅசு)

காழுறு மவுணர் சென்னி கரதல நெடுந்தோண் மார்பம்
வாழிய முருகன் றூதன் வாளிகள் வெளவி யேகி
யேழுள கடலு நீங்கி யெண்டிசைக் கிரிக டாவி
யாழியங் கிரிபோழ்ந் தப்பா லண்டமும் பிளந்து செல்லும். (கஅஎ)

கரண்டம தான செந்நீ ராற்றிடைக் கவிழ்ந்து மூழ்கித்
திரண்டவூன் வெளவி மீண்டு சிறகரை யுதறு கின்ற
முரண்டகு வீரர் சென்னி மூளைபுக் களைந்து வாரிக்
குரண்டமீ தென்ன லான கருநிறக் கொடிக ளெல்லாம். (கஅஅ)

இவ்வகை யவுணர் தானை யிறந்திட வீர வாகு
வவ்வயி னின்று சென்றாங் கடுதலு மதனைக் கண்டார்
தெவ்வரை முருக்கும் வைவேற் சீயமா முகத்தன் மைந்த
ரைவரை வெலலு மாற்ற லேம்பதிற் றிருவ ரென்பார். (கஅகூ)

சினத்தன ரிதழைப் பல்லாற் றின்றனர் நம்முன் வெம்போர்
வினைத்தொழி லியற்று வானை வெய்தென வடுது மென்னா
வினத்தொடு தேர்க டாவி யேகியே வீரன் றன்மேற்
றனித்தனி வார்விற் கோட்டிச் சரமழை சிதற லுற்றார். (ககூ0)

றூற்றுவ ரொருங்கு நேர்ந்து நோன்றலைச் சிலைகள் வாங்கி
மேற்றிகழ் முகில்கான் றென்ன வீசிய விசிகந் தன்னை
யாற்றல்சேர் வீரன் காணு வயிற்கணை யுகந்த கோடி
காற்றெனத் துரந்து மாற்றிக் கடவுளர் புகழ வார்த்தான். (ககூக)

தொலைவுறு மவுணன் மைந்தர் துண்ணெனக் கனன்று பின்னுங்
கொலையுடை நெடுங்கூர் வாளி கோடிகோ டிகணின் றுய்ப்ப
வலியுடை வீர வாகு மற்றவை மாற்றி யன்னோர்
சிலையொடு தேர்க டம்மைச் செஞ்சரந் தூண்டி வீழ்த்தான். (ககூஉ)

தேரொடு சிலைகண் மாயச் சீயமா முகத்தன் மைந்தர்
வீரனை யெதிர்ந்து வில்லால் வென்றிட லரிது போலுங்
கூருடை நுதிவாட் போரிற் கொல்லுது மிவனை யென்னாப்
பாரிடை வந்தோர் சூழ்ச்சி வகையினை பகர்த லுற்றார். (ககூங)

காட்புடைச் சிலையின் விஞ்சை கற்றதே யன்றி யெம்போல்
வாட்படை பயின்றி லாய்கொல் வல்லையே லப்போர் செய்யச்
சேட்படை யன்றி யெம்முன் சேர்தியால் வீர வென்னாத்
தோட்புடை கொட்டி யார்த்தார் கூற்றனுந் துளக்க மெய்த. (ககூச)

வன்றிற லவுணன் மைந்த ருரையினை வள்ளல் கேளா
நன்றிது புகன்றீ ரென்னா நகைசெய்து நாதன் றந்த
மின்றிகழ் சுடர்வாள் கொண்டு விரைந்துகீழ்த் தலத்திற் பாய்ந்து
சென்றன னதனை நோக்கித் தேவரு மிடுக்கண் செய்தார். (ககூரு)

வார்ந்திடு கழற்கால் வீரன வாள்ஞெரி வரலு நோக்கித்
தீர்ந்தன ஞவி யின்னே செருக்கலா மிவனை யென்னுக்
கூர்ந்திடு நாந்த கங்க டனித்தனி கொண்டு சென்று
சேர்ந்தனர் வளைந்து கொண்டார் மதியைச்சூழ் கிரியை யொப்பார். (கசுசு)

வளைந்தனர் வீரன் ரேளின் மார்பினிற் கரத்தின் மொய்ம்பிற்
களந்தனிற் சென்னி தன்னிற் கருதின ரிலக்க நாடிக்
கிளர்ந்திடு நாந்த கத்தாற் கிட்டின ரெறிந்த லோடு
முளர்ந்தளர் வில்லோன் மேனிக் குற்றில சிறிது மூறு. (கசுஎ)

ஊறிலாத் தன்மை நோக்கி யுவனையாம் பற்றி மெல்லக்
கோறலே கரும மென்னுக் குழுவொடு மவனைப் புல்லச்
சீறினன் றன்வா ளோச்சிச் சிறிதுமெய் தெரியா வண்ண
நூறினன் கொல்லோ வென்ன நூற்றுவா தமையு மட்டான். (கசுஅ)

அட்டிடு கின்ற வீர னமரர்கள் வழுத்த மீண்டு
தட்டுடை நெடுந்தேர் புக்கான் றன்மனக் கினிய மைந்தர்
பட்டிடு தன்மை நோக்கிப் பாடுறு மவுணர் கோமான்
மட்டறு துயரின் மூழ்கி மானத்தா லிரக்க முற்றான். (கசுகூ)

கோளுண்ட வரிமான் றுப்பிற் குமரரை யொருவன் கொண்ட
வாளுண்ட தென்று நெஞ்சம் வசையுண்டு வருந்தன் மன்னே
தாளுண்டு பரித்து நிற்கத் தலைகளுண் டெண்ணி லாத
தோளுண்டு கரங்க ளுண்டு சுமக்கலாம் போலு மன்றே. (உ00)

என்னுடை மைந்தர் தம்மை யாவருங் காண வீண்டென்
முன்னுற வொருவ னேதான் முடித்துயிர் கொண்டு நிற்பான்
பின்னினி யிதற்கு மேலும் பெற்றிடும் வசையொன் றுண்டோ
வொன்னலர் தங்கட் கெல்லா மொருநகை விளைத்தே னன்றே. (உ0க)

பொன்றினர் தம்மை யுன்னிப் பொருமியே புன்க ணெய்தி
நின்றிடி லுவ துண்டோ நேரலர் தொகுதி யெல்லாங்
கொன்றொரு கணத்தின் முன்னர்க் குழுவொடும் வாரி வாரித்
தின்றுதேக் கிட்டா லன்றித் தீருமோ வெனது சீற்றம். (உ0உ)

மேவல ராகு மின்னோர் குழுவினை விரைவி னட்டுத்
தாவறு சுடரவேல் கொண்ட பாலகன் றனையும் வென்று
தேவர்க ளெனப்பேர் பெற்றோர் யாரையு மின்றே செறறு
மூவுல கினையும் யானே முடிகருவன் விரைவி னென்றான். (உ0௩)

என்னவித் திறங்கள் பன்னி யெரியுமெய் விதிர்ப்பச் சீறித்
தன்னுறு தடந்தே ருய்க்குஞ் சாரதி தன்னை நோக்கிக்
கொன்னுனை யயில்வாட் செங்கைக் குமரர்தங் குழுவைக் கொன்றான்
முன்னுறக் கடவு கென்ன நன்றிது முதல்வ வென்றான். (உ0௪)

பாகுறா லுணர்ந்து வல்லோன் பரியினை யெழுப்பிப் பண்ணி
மாகமீ டடந்தேர் தூண்ட வரிமுகன் வருத லோடு
மேகசா யகனு மூர்த்தி யேவலா னதனை நோக்கி
யேழுகையாற் றனது மான்றே ரதனொடு மொல்லை நேர்ந்தான். (உ0ரு)

நேர்ந்திடு கின்ற காலை நிரைபடு விழிக டோறுஞ்
சார்ந்தழல் சிதற நோக்கித் தனைபடு தறுகட் சிய
மார்ந்திடு பகைகண் டென்ன வாற்றவுஞ் சினமீக் கொண்டு
சேர்ந்திடு வானை நோக்கிச் சிங்கமா முகத்தன் சொல்வான். (உ0௬)

ஆதிதந் தருளு மைந்த னறுமுக னவனீ யல்லை
யேதிலா விலக்க ரென்றே யிசைத்திடு வோர்க டம்மு
ளுதனோ வெண்மர் தம்மு ளொருவனோ நம்மூர் வந்த
தூதனோ வினையர் தம்முள் யாரைநீ சொல்லு கென்றான். (உ0எ)

அல்லுறழ் கண்டன் றந்த வறுமுகற் கடிய னேனென்
றொல்லைநம் மூதூ ரட்டுத் தூதனு மாகி மீண்டே
னெல்லையி னுமரை யெல்லா மீண்டொரு கணத்தி னட்டு
வெல்லுவ தமைந்து நின்றேன் வீரவா கென்பே ரென்றான். (உ0அ)

வேறு.

திண்டிறற் சேவகன் செபபு மிம்மொழி
விண்டிடு செவிதொறும் விடம்பெய் தாலெனக்
கொண்டனன் வெகுண்டொரு கூற்றங் கூறினு
னுண்டிடு மசனிக ளுமிழ்ந்திட் டாலென. (உ0௯)

உறுபடை யுழப்பினை யுணர்கு றுதரோர்
சிறுவரை வெல்வதுந் திருந்து மாநக
ருறைதரு மெளியரை யுடன்று கொல்வது
மறிகுதி யீதுமோ ராண்மைப் பாலதோ. (உ௧0)

றாற்றியற் குமரரை நொய்திற் கொன்றநின்
னாற்றலைக் கெடுக்குவ னுவி வாங்கியே
கூற்றுவற் குண்டியாக் கொடுப்பன் மெய்யினைப்
பாற்றினுக் குதவுவன் பாலன் காணவே. (உ௧௧)

உன்னுடை வன்மையு முனது நாயகன்
றன்னுடை வன்மையுந் தானை வன்மையும்
பின்னுடை யமரர்கள் பெற்ற வன்மையு
மென்னுடை வன்மையா லிறையி னீக்குவேன். (உ௧௨)

வானவர் சிறையினை மாற்ற வுன்னியே
தானையொ டேகியென் றன்முன் னெய்தினீ
ரூனுயிர் வாழ்க்கையு மொல்லை தீர்திரா
லானதொ ரூதிய மழகி தாற்றவே (உ௧௩)

மூண்டதொல் விதியினுன் முடிந்த மன்னுயிர்
மீண்டுதம் மியாக்கையுண் மேவு மென்னினு
மீண்டெனை மாறுகொண் டிகல்செய் கின்றவர்
மாண்டிடு மாறலான் மற்று முய்வரோ. (உ௧௪)

என்பதை யரிமுக னியம்ப வெம்பிரா
னன்பெருந் தூதுவ னகைசெய் தங்கையின்
மன்பெருஞ் சிலையினை வணக்கி வாளியோ
ரொன்பதொ டொன்பதை யுரத்திற் றாண்டினான். (உ௧௫)

விரைந்திடு செலவினால் விசிக மேவலா
னுரந்தனிற் படுதலு மொசிந்து வீழ்ந்தன
விரந்திடு தொழிலவ ரின்மை யாளர்போற்
கரந்தவ ரியற்கையைக் கருதி மீள்வபோல். (உகசு)

முருகன தேவலான் முன்னம் விட்டிடு
பொருகணை யகலமேற் புகாது வீழ்தலு
மரிகெழு முகமுடை யவுணர் நாயகன்
கரமிசை யிருந்ததோர் கதையொன் றேவினான். (உகஎ)

ஏவிய தண்டினை யேந்த லீரிரு
தூவயில் வாளியாற் றுண்டஞ் செய்திடா
வோவரும் பான்மையா லொராயி ரங்கணை
தேவரை யலைத்தவன் சிரத்தி லோச்சினான். (உகஅ)

சிரம்படு கின்றதோர் செய்ய வாளிகள்
பரம்படு பலதுணி பட்டு வீழ்ந்தன
வுரம்படு மவுணர்க ளுறைதற் கொத்தமுப்
புரம்படு கின்றதோ ரூழி யாமென. (உகக)

பொன்றிகழ் வடிக்கணை பொடிப்புப்ப வின்னுமுன்
னின்றலர் புரியுமோ வென்னமற் றாதுவ
னன்றென வரிமுக னகைத்துத் தன்கையின்
மின்றிகழ் சூலமே திரித்து வீசினான். (உஉ0)

காசினி யெரிகிளர் காட்சித் தாலென
வாசினி தனில்வரு சூலத் தாற்றலுந்
தேசுடை நிலைமையுந் திறலு நோக்கியே
வீசின னெதிருற விசிக மாயிரம். (உஉக)

நெட்டிலைச் சூலமே னிமலற் கன்பினோன்
விட்டிடு பகழியை வீட்டி மேற்செலப்
பட்டது நோக்கினன் பரிந்து பின்னருந்
தொட்டன னுயிரஞ் சுடர்கொள் வான்கணை. (உஉஉ)

ஏவிய வெல்லையி லெதிரும் வாளியைத்
தூவுறு கொன்னுனைச் சூலஞ் சிந்தியே
மேவலர் பரவுறும் வீர வாகுமேற்
றேவரு மருளுறக் கடிது சென்றதே. (உஉ௩)

இலக்கரு நடுங்கின ரெண்ப ரேங்கியே
கலக்கம தடைந்தனர் கணங்கள் யாவரு
மென ரமர ரிப்படை
விலக்கரி தேகொலென் றுயிர்த்து விம்மினார். (உஉச)

வேறு.

கோள்கொண்ட பகழிகளின் கொலைகொண்டு நிலைகொண்ட
தோளகொண்டு செல்லவருஞ் சூலத்தின் றிறனோக்கி
நீள்கொண்ட லன்னதொரு நீலமிட்டுற் றவன்றந்த
வாள்கொண்டு குறைத்திட்டான் வலிகொண்ட தகலாதான். (உஉரு)

சூலம்போ யிற்றிடலுந் துணைவர்களா யுள்ளோரு
ஞாலஞ்சேர் பூதர்களு நனிமகிழ்வு சிறந்தனரா
லாலம்போந் தடர்த்திடலு மமலனுண்டு தமைக்காத்த
காலம்போ லமரரெலாந் துயரம்போய்க் களிசிறந்தார். (உஉகூ)

அக்காலை வெள்ளிமலை யளிக்குநந்தி கணத்திறைவன்
மெய்க்கால வடவையினும் வெகுளியுறு பெற்றியனா
யிக்காலை யிவனுயிரை யானேயுண் குவனென்னா
மைக்காலன் றனைமுடித்த வள்ளறனிப் படைகொண்டான். (உஉஎ)

எந்திரித்த விருக்கைதனி லிருத்தியே கருவிகளான்
மந்திரத்தின் விதிமுறையின் மனப்படுபூ சனையியற்றி
யந்தரத்தி லிமையவர்க்கு மரியயற்கும் வெலற்கரிய
சுந்தரத்தோ ளரிமுகனை யடுதியெனத் தொழுதுய்த்தான். (உஉஅ)

உய்ப்பதொரு படையழல்கான் றுலகம்வெருக் கொளவரலு
மெப்படையோ விஃதென்று னிமையவர்தம படைவென்றான்
றப்படையுஞ் செஞ்சடிலத் தோன்றல்படை யெனத்தெரியா
வப்படையோ வடுவதென வண்டம்வெடி படநகைத்தான். (உஉகூ)

அற்பட்ட புலனுடைய வரிமுகத்தன் றானேற்று
முற்பட்ட பகற்கொண்ட முக்கணான் றனதுபடை
யெற்பட்ட மணிக்கடகத் தொருகரத்தி லிருந்ததனைச்
சொற்பட்ட மந்திரத்தால் வழிபட்டுத் தூண்டினனால். (உஙo)

தூண்டலுறு பரன்படையுந் தொல்லைவரு மப்படையு
மீண்டியெதி ரெதிர்துன்னி யிணைகொண்டோ ரிருதலைவர்
காண்டகைய கேண்மையினாற் கடிதுவந்து கலந்ததெபின்
மீண்டிடுவ தேபோல விடுத்தவர்பால் மேவினவால். (உஙக)

வேறு.

தன்படை மீடலுஞ் சயங்கொண் மொய்ம்பினான்
றன்புடை மனத்தனுச் சூர னென்பவன்
பின்புடை யானொடு பேசப பின்னொரு
முன்புடை யாரிலை யென்று முன்னினான். (உஙஉ)

ஆற்றலிற் குறைவில னழிவு றுதமா
பேற்றினிற் குறைவிலன் பிறரை யட்டிடு
கூற்றினிற் குறைவிலன் கோடி கூற்றுவ
ரேற்றெதிர் மலையினு மிமைப்பிற் கொல்வனால். (உஙங)

அவன்பெரு முயற்சியே யாற்ற லாமென்கோ
தவங்களின வன்மையே வன்மை தானென்கோ
சிவன்புரி வரமதே சீரி தாலென்கோ
வெவ்வன்பெரி தென்றியா னிசைக்க வல்லனே. (உஙச)

விடலுறு பகழியான் மெய்யி லூறிலா
னடலுறு படையினு மழிவு பெற்றிலான்
கொடியதோ ரரிமுகன் குமரன் செங்கையிற்
படைகளி னன்றியே படுகி லானரோ. (உஙரு)

தீயவ ருவியைச் சிந்தல் கூடுறு
தாயினும் வெஞ்சம ராற்றி யிங்கிவன்
சேயுயர் தேரினைப் படையைச் சேனையை
மாய்வுறு விப்பனுல் வல்லை யானென்ருன். (உ௩௬)

இத்திற மினையவ னியம்பி யேழிரு
பொத்திரந் தூண்டியே பொருவில் கேசரி
வத்திர முடையவன் வைய முந்துவான்
சித்திர நெடுந்தலை சிந்தி நீக்கினுன். (உ௩எ)

சாரதி தலையது தரையில் வீழுமுன்
சூரொடு தோன்றினன் சுளிந்தொர் தண்டினை
யோரிமை யொடுங்குமு னுருமி னுய்த்தலும்
வார்கழ லினையவன் மருமம் பாய்ந்ததே. (உ௩அ)

விடலருந் திறலுடை வீர வாகுவின்
றடமிகு முரம்புகு தண்டஞ் சாளரத்
திடையிடை கதிர்வரு மெல்லை காணுறும்
பொடியென லாகியே புகையிற் போயதே. (உ௩௯)

தோட்டினை வாகையான் சுளிந்து துண்ணென
வோட்டுறு நெடுங்கணை யுய்த்தொ ராயிர
மோட்டுடை விறலரி முகத்த னேறிய
சேட்டுடை மணிநெடுந் தேரை வீட்டினன். (உ௪0)

தேரழிந் திடுதலு மார்த்துச் சிங்கனை
யாருயிர் கொள்ளுது மற்ற மீதெனுப்
பாரிடர் வரைகளும் படையும் வீசியே
சாருற வளைந்தனர் சமரின் முந்தினர். (உ௪௧)

வெய்யவ னங்கது வெகுண்டு நோக்கியே
செய்யதோர் மணிநெடுஞ் சேமத் தேர்புகா
வையிரு நூறுவில் லதனை யாயிரங்
கையினி லெடுத்தனன் கடிதின் வாங்கினுன். (உ௪உ)

கருமணி வரைபுரை காமர் வில்லெலா
மரவுறழ் குணங்கள்கொண் டவுணன் கையுற
திருமுடி பலவுடைக் கிரியிற் செல்லின
முருகெழு மின்னெடு முறுவ போன்றவே. (உ௪௩)

பிடித்திடும் விற்களிற் பிறங்கு நாணொலி
யெடுத்தன னெடுதலு முயிர்கள் யாவையுந்
துடித்தன வண்டமுந் துளக்க முற்றன
முடித்தலை பனித்தனன் முளரித் தேவனும். (உ௪௪)

வணக்கிய விற்களின் மடங்கன் மாமுகன்
கணக்கில வாகிய கடல்கள் வானெழீஇத்
தணக்கில பொழிந்தெனச் சரங்கள் சிந்தலும்
பிணக்குவை யாயினர் பெயர்ந்த பூதர்கள். (உ௪௫)

தாள்களுங் கரங்களுந் தலையுஞ் சிந்தினர்
கோளுறு தசையொடு குருதி சிந்தினர்
மூளைகள் சிந்தினர் முடியுங் கால்பொரப்
பூளைகள் சிந்தின போலப் பூதர்கள். (உ௪௬)

தருப்பயில் பாற்கட றனது சீகரந்
திரைப்பெருங் கரங்களாற் சிந்தல் போன்றதா
லரிப்பெரு முகத்தவ னுயி ரங்கையாற்
றுரப்புறு கணைகளைத் தூண்டு கின்றதே. (உ௪௭)

மண்டல நிரந்தன வானந் தூர்த்தன
வெண்டிசை மறைத்தன கிரிக ளீண்டுவ
தெண்டிரை யெங்கணுஞ் செறிவ வப்புறத்
தண்டமும் போவன வவுணன் வாளிகள். (உ௪௮)

மருப்புயர் திசைக்கரி மருமம் பாய்வன
பருப்பத மேழையும் பகிர்வ மேருவாம்
பொருப்பையும் போழ்வன புணரி தோறமர்
நெருப்பையுந் தணிப்பன நீசன் வாளியே. (உ௪௯)

மாறுபட் டவன்விடும் வாளி மாரியா
லீறுபட் டிடாததோ ருயிரும் யாக்கைகள்
கூறுபட் டிடாததோ ருயிருங் கொம்மென
வாறுபட் டிடாததோ ருயிரு மில்லையே. (உ௫௦)

எண்படு மரிமுக னெடுத்த வில்லுமிழ்
புண்படு கணைமழை பொதிந்து போகுறு
விண்படு நெறியெலாம் விலக்கி மாற்றியே
யொண்புவி யாக்கிய துலகம் யாவையும். (உ௫௧)

தாக்குறு மரிமுகன் சரங்கள் பாரிடா
யாக்கைக ளுருவியே யெடுத்து நொய்தெனப்
போக்குறு கின்றன புலாலின் சூட்டினைக்
கோக்குறு சலாகையின் குழுவு போலவே. (உ௫௨)

மெய்ந்நெறி யுணர்கிலார் வெறுக்கை பெற்றது
துன்னிய கிளைக்கொரு துன்ப மாதல்போ
லொன்னலன் விடுங்கணை யுலப்பின் றோடலாற்
றன்னுறு படைகளைத் தானுங் கொன்றவே. (உ௫௩)

தீந்தொழி லரிமுகன் செறித்த வாளிகள்
வாய்ந்திடுஞ் சேணெறி பாற்றும் பான்மையாற்
காய்ந்திடுஞ் செங்கதிர்க் கடவுண் மேற்றிசைப்
போந்திலன் மீண்டிலன் புலம்பி நின்றுளான். (உ௫௪)

கொம்பொடு பேரியுங் குணிலு மேனைய
வெம்படை யாவையும் விரவி மேற்செலக்
கம்புளுங் கரண்டமுங் கனைந்து சுற்றிடச்
செம்புனல் கரும்புன லளக்கர் சென்றதே. (உ௫௫)

இத்திற மரிமுக னியற்றும் போரினை
மெய்த்திறன் மொய்ம்புடை வீரன் காணுறாச்
சித்திரத் தவனெதிர் சென்று வாங்கினான்
கைத்தலத் திருந்ததன் கடவுள் விலலினை. (உ௫௬)

வாக்கிய சிலைதனில் வறிது நாணொலி
யாக்கின னுக்கது மலைந்த தண்டமுந்
தீக்கிளர் குஞ்சியர செருச்செய் தானவ
ரேக்கம தடைந்தன ரிரிந்து போயினார். (உ௫௭)

மாக்களி னிருந்தவர் மதங்கொள் வெங்கரி
மேக்குற வைகினோர் தேரின் மேவினோர்
தாக்குறு படைகளுஞ் சயமுஞ் சிந்தியே
யாக்கைக ணடுக்குற யாரும் வீழ்ந்தனர். (உ௫௮)

வேறு.

அவ்வ ழிப்பட நாணொலி யுறுதலுமே யடலோன்
கைவ ழிப்படு சிலையினிற் கணைமழை சிதறித்
தெவ்வ ழிப்படு சீயமா முகத்தவன் செலுத்து
மெவ்வ ழிப்படு பகழியு மறுத்தன னிமைப்பில். (உ௫௯)

பிரம ரெண்ணிலர் பயந்திடு முயிர்களைப் பின்னா
ளொருவ னாகிய கண்ணுத றேலைக்குமா றேப்பச்
செருவ லாளனு மிளையவன் பகழிகள் சிதறி
யரியின் மாமுகன் விடுகணைத் தொகையெலா மறுத்தான். (உ௬0)

மிக்க நேமியிற் புவனியி னகலிரு விசும்பிற்
றிக்கின் மேருவின் வரைகளிற் றீயவன் பகழி
புக்க புக்கதோ ரிடங்களிற் றன்கணை பூட்டி
யக்க ணந்தனி லவன்விடு வாளிக ளறுத்தான். (உ௬௧)

புறத்த ராமென மன்னுயிர்க் கின்னலே புரியுந்
திறத்தன் வாளியை மைந்தனின் றட்டது தேவர்
குறித்து நோக்கியே சூர்முதற் கிளையெலாங் குமர
னறுத்த நாள்வரு மகிழ்ச்சியைக் கிடைத்துநின் றார்த்தார். (உ௬௨)

அகழி யார்கலி நொச்சிசூழ் முதுநக ரடர்த்தோன்
றிகழி யானைகள் வெருவரு மரிமுகத் திறலோன்
பகழி யாவையு மட்டதோ வங்கவன் படைத்த
புகழி யாவையு மட்டதன் றேவெனப் புகன்றார். (உ௬௩)

அள்ளல் செற்றிய வளக்காரூ ழாசுரத் தரசன்
றள்ள லுற்றிடு பகழியைத் தனதுகைச் சரத்தால்
வள்ள லத்துணை யறுத்தன னகற்றமற் றதனைக்
கள்ள லைத்தத ரரிமுக மேலையோன் கண்டான். (உ௬௪)

வில்லெ டுத்தது நின்பொருட் டாகுமால் விரைவின்
மல்லெ டுத்தநின் மொய்ம்பினைக் கரங்களை மார்பைப்
பல்லெ டுத்திடு தலையினை நாசியைப் பதத்தைச்
சொல்லெ டுத்திடு நாவினைச் சரங்களாற் றுணிக்கேன். (உ௬௫)

திரண்ட கையுளேன் சிலைத்தொழில் காட்டுறு செருவி
லிரண்டு கையுடை நீகொலா மென்முன மேற்பாய்
முரண்ட னிச்சிலை தொட்டநின் கையினை முடித்துக்
கரண்ட முண்ணிய புரிகுவன் முந்துநீ காண. (உ௬௬)

எமரி ருக்குறு மகேந்திர நகர்தனி லீண்டுஞ்
சமர கத்தினி லென்பெருந் தானைக டம்மிற்
குமரர் தங்களிற் கொற்றமாக் கொண்டன முற்று
மூமிழ விக்குவ னுன்னுயிர் தன்னையா னுண்பேன். (உ௬௭)

என்னு மாற்றங்க ளரிமுக னிசைத்தலு மேந்தல்
பன்னு கின்றதென் பறபல நினக்குள படையைத்
துன்னு தானைகள் யாவையுஞ் செற்றனைத் துரப்பே
னென்னு டைச்சிலை வன்மையைப பார்த்தியா லென்றான். (உ௬௮)

சொற்ற மாத்திரத தவுணனு ரழல்விழி தூண்டக்
கொறற வெஞ்சிலை பத்துநூ றொருதலை குனித்துப்
பொற்றை யீர்ங்கணை யாயிரத் தாயிரம் பூட்டி
வெற்றி மொய்ம்புடை யொருவன்மேற் சென்றிட விடுத்த ன். ()

சீறற மிக்கநம் மிளையவன் சிலையெனக் கொண்ட
கூற்றை வாங்கியே பத்துநூ றாயிரங் கொடுங்கோ
லாற்றன் மிக்கன தூண்டியே மேலவை யறுதது
வீற்று மாயிர மாயிரம் பகழிகள் விட்டான். (உ௭0)

நம்பி தொட்டிடு கணையினை மகேந்திர நகரோன்
றம்பி பததுநூ றாயிரங் கணைகளாற் சாய்த்து
வெம்பி யாயிர கோடிவெவ் வாளிகள் விடுபப
வெம்பி ராறகிளை யோனுமக் கணையினை யெய்தான். (உ௭௧)

குராவ ணிந்திடு குமரனுக் கிளையவன் கொடுங்கோல்
பராவ லன்விடு பகழியைப் பாரிடைப் படுத்தக்
கராச லங்களை யடுமுக னதற்குமுன் கணைக
ளிராயி ரந்தொடுத் தண்ணறன் சிலையினை யிறுத்தான். (உ௭௨)

மாறில் வெஞ்சிலை யிற்றுழி யிளையதோர் வள்ளல்
வேறொர் கார்முகம் வாங்குமுன் னகலத்தில் வெய்யோ
னூறு கோடிபுங் கவங்களை யழுத்தலு நொய்தி
னூறு கோடியொத் திழிந்தன வகலிருங் குருதி. (உ௭௩)

குருதி யாகத்தி னிழிந்திடத் தன்சிலை குனித்துப்
பரிதி யொண்கதி ரென்னநூ றாயிரம் பகழி
கருதி விட்டிடக் கருதல னங்கது காணு
விருது நாண்முகி லாமென வவைதொடுத் திறுத்தான். (உ௭௪)

அல்லி னேர்மதி யெழுந்தென வவுணரு ளுதித்த
மல்லல் வாலிய வரிமுகன் றொடுகணை மாரி
யொல்லென் வாளியான் மாற்றியா யிரங்கணை யுந்திச்
சில்லி யாழிக ளறுத்தவன் றேரினைச் சிதைத்தான். (உ௭௫)

ஏறு தேரழிந் திடுதலு மரிமுக னிமைப்பின்
மாறோர் வையமேற் பாய்ந்தனன் வார்சிலை வளைப்ப
வாறு மாமுகற் கிளையவன் கணைகளா லவுண
னூறு பத்தெனுஞ் சிலையையு மறுத்தன னொடிப்பில். (உ௭௬)

வில்லி ழந்தனன் மானமு மிழந்தனன் வீரச்
சொல்லி ழந்தனன் பெருமித மிழந்தனன் றொல்சீ
ரெல்லி ழந்தனன் பெருமையு மிழந்தன னிலங்கும்
பல்லி ழந்திடு விடவரா வொத்தனன் பதகன். (உ௭௭)

ஏதி லானொருங் காயிரஞ் சிலைகளு மிழந்து
மாது யர்ப்படு நிலைமையை நோக்கியே மறங்கொள்
பூத ரார்த்தன ரமரர்க ளார்த்தனர் புரைதீர்
வேத ரார்த்தனர் முகுந்தரு மார்த்தனர் விண்மேல். (உ௭௮)

ஆயி ரஞ்சிலை யொருதலை துணிந்தது மமரா
நாய கன்றனக் கடியவன் விற்றொழி லனு
மாய னுதிய ரிகழ்ச்சியும் பூதர்தம் வலியுங்
காயு நெஞ்சுடை மடங்கனமா முகத்தவன் கண்டான். (உ௭௯)

தேவ ரார்ப்பையு மிந்திர ரார்ப்பையுந் திசையின்
காவ லாளர்த மார்ப்பையு மெய்மையடக் கருது
மூவ ரார்ப்பையுஞ் சாரத ரார்ப்பையு முனிவோ
ரேவ ரார்ப்பையுந் துன்பினுக் குதவுவ னென்றான். (உ௮௰)

வேறு.

தீயா ருக்கோ ரெல்லைய தானான் றிறன்மேலான்
றாயா ருக்கே யின்னல் புரிந்தான் றொலைகில்லான்
றாயாய் மூழ்ந்தே தம்மை யளித்தா டருகின்ற
மாயா பாசந் தன்னை யெடுத்தான் மறமிக்கான். (உ௮௧)

ஓட்டிப் போர்செய் மாற்றலர் தம்மை யொருபாலாற்
கட்டிக் கொள்ளா வாருயி ருண்டு கடிதேகிக்
கிட்டித் தொல்லை ஞாயிறு தோன்றுங் கிரியுய்த்து
விட்டுப் பேரா தாண்டுறை தென்னா வீசுற்றான். (உ௮௨)

மறியா திற்குந் தெண்டிரை யேழும் வந்தொன்றாய்ச்
செறியா திற்குங் கொல்லிது வென்னத் திசைசூழ்போ
யெறியா திற்கும் பாச மிருட்கோ ரிடமாகிப்
பொறியா திற்குந் தீயழல் சிந்திப் புகுந்தன்றே. (உ௮௩)

சேணு நிற்றோர் யாரு மிரிந்தார் செருவாற்றல்
பூணு திற்கும் பூதரும் யாரும் பொருமுற்றா
ராணு யுற்றோ யாரினு மேலோ னதுதன்னைக்
காணு வீதோர் மாயைகொ லென்றே கருதுற்றான். (உ௮௪)

ஆர்ப்பா யுற்ற தெண்டிரை கொல்லோ வஃதன்றேற்
போர்ப்பான் வந்த பாயிருள் கொல்லோ புயம்வீக்கி
யீர்ப்பா னுற்ற நாணது கொல்லோ யாதேனுந்
தீர்ப்பேன் வல்லே யென்று நினைந்தான் றிறல்வாகு. (உ௮௫)

ஆற்றான் மற்றிவ் வாறு தெரிந்தே யதுதீர்ப்பான்
மாற்றா கின்ற தொல்படை தன்னை வாங்காமுன்
கூற்றாய் நின்றோன் வீசிய பாசங் குழுவோடுங்
காற்றாய் வந்திங் கியாவரை யுங்கட் டியதன்றே. (உ௮௬)

பல்லோ ராகிப் போர்புரி பூதப் படையோரும்
வில்லோ ராகு மெண்மரு மேனை விறலோருந்
தொல்லோர் கூறு மாடல்கொண் மொய்ம்பிற் றுணையோனு
மெல்லோர் தாமும் வீக்குறு பாசத திடையுற்றார். (உ௮௭)

மேற்றா னெய்தி வீக்கிய பாச மிடல்வீரர்
மாறறா நிற்பர் தொல்லுணர் வோடு மலிவாரே
லாற்றா ரென்னச் செய்குவன் யானென் றவாபுந்தி
தேற்றா வண்ணஞ் செய்துள தம்மா சிறுபோழ்தின். (உ௮௮)

வேறு.

தொன்னிலை யுணர்வு மாழ்கித் தொல்வலி சிந்திச் சோரு
மன்னவர் தெகையை யெலலா மந்தர நெறிக்கொண் டேகி
மின்னென வளக்கர் வாவி மேருமால் வரைபோ னின்ற
பொன்னவி ருதய மென்னும் பொருப்பிடைப் புகுந்த தன்றே. (உ௮௯)

கதிபடர் கின்ற காலிற் கருத்தினிற் கடிதி னேகித
துதியுறு திருவின் கேளவன் றுயில்புரி கடலிற் றுஞசு
முதயமால் வரையி னெய்தி யுயிர்ப்பிலா துறங்கு கின்ற
மதவலி வீரர் தம்மை வைதது டனிருந்த தன்றே. (உ௯0)

விழுமிய பூதர் யாரும் வீரரும் விளிந்து வெய்யோ
னெழுதரு முதயம் புககா ரென்பது தெரிந்து நோக்கிக
குழுவொடு பொருது ளாரைக் கொன்றயிா குடிகதேன் வல்லே
யழகிதென் றுற்ற லென்றா னமரரை யலக்கண் கண்டான். (உ௯௧)

ஓடினன் கொல்லோ போர்க்கென் றுறறது மிலேயோ வெங்குந்
தேடினேன் காண்கி லேனால் யாணடையான் சிறுவ னம்மா
சாடினன் சாடி னுனென் றுரைபபது சழக்கோ தம்பி
வீடின னல்ல னேவென் றண்டங்கள வெடிக்க வார்த்தான. (உ௯உ)

கேசரி முகனிவ் வாறு கிளத்தின னாககு மெல்லைத்
தூசியின் முந்துபோன தூதுவ னொருவ னண்ணி
யாசறு பூத வெள்ள மாயிரத தோடு செவ்வேள்
பாசறை யிருந்தான் யானும் பார்த்தனன் வந்தே னென்றான். (உ௯௩)

ஒற்றன துரையைக் கேளா வொள்ளெயி றிலங்க நக்குப
புற்றுறை யரவ மென்னப புதல்வனெற் பொருவா னஞ்சி
மற்றவ னுறைந்தான் கொல்லோ வல்லையில் யானே யேகி
யிற்றையோர் கணத்தி லன்னா னிருஞ்சமர் முடிப்ப னென்றான். (உ௯௪)

என்றனன் படரு மெல்லை யின்னதோர் நிகழ்ச்சி யாவு
மொன்றற நோககி வானோ ருயாஙகின ரோட லுற்றார்
சென்றன னதனை நாடிக் காலெனுந் திறலின் வெய்யோன்
குன்றெறி நெடுவே லண்ணல் குரைகழல் பணிந்து சொல்வான். (உ௯௫)

அத்தகேள் பூத ரோடு மடுபடைத் தலைவ ரேகி
மெய்த்திறற் பெரும்போ ராற்ற வெகுண்டரி முகத்து வெய்யோன்
கைத்தலத் திருந்த சூழ்ச்சிக் கயிற்றினு னமரை யெல்லா
மெய்த்திட வீக்கி வெய்யோ னுதயத்தி லிட்டா னென்றான். (௨௯௬)

ஆண்டகை வரம்பு சான்ற வறுமுக னவன்சொற் கேளா
யாண்டுளான் யாண்டு ளானவ் வரிமுகத் தவுண னென்னத்
தூண்டிடு கொடித்தேர் மேலான் சூழ்தரு படையின் சீரான்
மாண்டிடு பொறியா லிங்ஙன் வருகுவான் போலு மென்றான். (௨௯௭)

என்னலு நகைத்துச் செவ்வே ளரியணை யிருக்கை நீங்கிப்
பன்மணி குயின்ற செம்பொற் பாதுகை சரணஞ் சேர்த்திப்
பொன்னவிர் கழல்க ளார்ப்பப் புறங்கடை காறும் போந்து
தன்னயல் வந்த காலைத் தருதிறந் தேரை யென்றான். (௨௯௮)

ஆறுமா முகத்து வள்ள லருள்பணி தலைக்கொண் டேகி
மாறிலா முதல்வன் றந்த வையம தழைத்து வெங்கா
ரூறுசேர் கோலு நாணுந் தாங்கினன் கடாவி யுய்ப்ப
வேறினா னதன்மே லைய னிமையவர் யாரு மார்த்தார். (௨௯௯)

இந்திரன் கவரி சாய்ப்ப விமையவர் வட்டம் வீசச்
சந்திரன் றபன னென்போர் தண்ணிழற் கவிப்புத் தாங்க
வந்தக னுடைவாள் பற்ற வியக்கர்கோ னடப்பை கொள்ளச்
சிந்துநீ ரரசன் சொம்பொற் படியக மேந்தச் சென்றான். (௩௦௦)

நாயகன் குமரன் போர்மே னடப்பது தெரிந்து பூத
ராயிர வெள்ளத் தோரு மார்கலி நாண வார்த்துக்
காயெரி யுமிழுஞ் சூலங் கணிச்சிதண் டெழுவு நாஞ்சின்
மீயுயர் பழுவங் குன்றங் கொண்டனர் விரைந்து சூழ்ந்தார். (௩௦௧)

அடித்தனர் பறைகள் சங்க மார்த்தன ரையன் சீர்த்தி
படித்தனர் பாங்க ரெங்கும் பன்மணிக் கவிகை வட்டம்
பிடித்தனர் தமது வீரம் பேசினர் மூரி யேற்றுக்
கொடித்தொகை யநந்த கோடி கொண்டனர் குணிப்பில் பூதர். (௩௦௨)

மூவர்கண் முதல்வன் வந்தான் முக்கணன் குமரன் வந்தான்
மேவலர் மடங்கல் வந்தான் வேற்படை வீரன் வந்தா
னேவருந் தெரித றேற்றா திருந்திடு மொருவன் வந்தான்
றேவர்க டேவன் வந்தா னென்றன சின்ன மெல்லாம். (௩௦௩)

ஆசறு பூதர் சூழ வமரர்வாழ்த் தெடுப்ப வையன்
பாசறைக் களத்தை நீங்கிப் பறந்தலை நிலத்தி னெல்லை
வீசுறு மருத்து மின்னும் வெள்குற நொடிப்பிற செல்லக்
கேசரி முகத்தி னானுங் கிளர்படை யோடு நோந்தான். (௩௦௪)

பருப்புறு மெழுவும் வான்றோய் பழுவமும் பாசுந் தண்டு
நெருப்புமிழ் சூல வேலு நேமியுங் கொழுவுங் குன்றும்
பொருப்புறழ் பூதர் வீசிப் பொருக்கென வவுணர் தம்மை
மருப்புயர் களிற்றை மாவை வையத்தை யடுத லுற்றார். (௩௦௫)

குந்தமு மழுவுந் தண்டுங் குலிசமு மெழுவுங் கோலு
முந்திய கழுமுள் வேலு முசலமுங் கொழுவுஞ் சங்கு
மெந்திரக் கவண்வீழ் கல்லு மெஃகமும் பிறவு மெல்லா
மிந்திறன் றவுணர் பூதப் படையினைச் செறுதத லுற்றார். (௩0௬)

இருதிறப் படைக ளும்மி வித்திறம் பொருத வெல்லைக்
குருதிவந் தலைப்ப மார்பு சென்னிதோள் குறைந்து வேறாய்த்
தரையிடை மறிந்தார் பலலோர சங்கரன் விடுத்த மூரல்
விரிகனல் சிதறிப் பற்ற வெந்துவீழ் புரம தேபோல் (௩0எ)

கண்டன னனைய செய்கை கனல்பொழி பரிதிக் கண்ணன்
மண்டமர் புரியா நிற்கு மாற்றலர் தமமை வாரி
யுண்டன னெனது சீறற மொழிக்குவ னெல்லை யென்னா
வண்டமுந் திசையுந் தானே யாகவோர் வடிவங் கொண்டான். (௩0அ)

ஆயிர முடியின் மௌலி யண்டததின் முகட்டை நக்கப
பாயிருங் கரங்க ளண்டப் பாங்கரை யலைப்பப் பாருட்
போயின பதங்க ளண்டத் தடியினைப பூழை செய்ய
மாயையா லினைய வாறோர் வடிவுகொண டாரத்து வந்தான். (௩0௯)

வந்திடு சீற்றத தாபபின் மடங்கலின் றோறற நோககி
யந்தக னசைந்து நின்று னுதவ னிரிய லானு
னிந்திரன் றளக்க முற்று னெரிபதை பதைத்துச் சோர்ந்தான
சிந்தையின் மருட்கை யுற்றார் திசைமுகன் முதலாந் தேவா. (௩க0)

வேறு.

அன்னதொ ரெல்லையி லாளி முகததோன்
முன்னுறு பூத முழங்கொலி நீதத
மென்னது மங்கை யிராயிர மோச்சி
யுன்னுமுன் வாரின னுண்டல் பயின்றான். (௩கக)

ஈட்டுறு பூத ரிருங்குழு வத்தை
மோட்டுறு சிஙக முகன்கர முறறு
நீட்டின னள்ளுத னேமிகண் மாறாய்
மாட்டுறு கொண்டல்கள வாருவ போலும். (௩கஉ)

ஆயிர கோடியொ ரஙகையி னுகப
போயின பாணிகள் பூதரை யளளச
சீய முகங்கெழு செம்ம லகன்பேழ்
வாய்களி லிட்டு விழுங்கினன் மன்னோ. (௩க௩)

மீனம தாக வியன்படை யங்கைக்
கானுறு குன்று கறித்திற லாகை
வானபல் பூதரை யட்டிடு சாலைப்
பேரனக மாமிசைந் தான்புகை வாயான். (௩க௪)

அண்டமொ ராயிர மாங்கொரு பாஙகா
விண்டுவெவ் வேறு விளங்குவ போலுங்
கண்டகன் வெய்ய கணங்களை யெல்லா
மூண்டிடு கின்ற வுலப்பில பேழ்வாய். (௩க௫)

செப்பரும் வென்றிகொள் சீய முகத்தோன்
கைப்புகு பூத கணத்தினர் யாரு
மப்பெரு வாய்களி னுற்றுறு மாக்க
ளுப்பிடை சென்றென வுற்றன ரன்றே. (கூகசு)

தானவ னங்கை தனிற்படு பூதர்
மேனிகழ் வாய்தொறு மேவரு பான்மை
யூனமில் விண்ணவ ரூர்தொறு மிம்பர்
மானவ ரியாரும் வழிக்கொளல் போலும். (கூகஎ)

மண்ணிது வன்றெனின் வானவர் வைகும்
விண்ணிது வன்றெனின் வெவ்வசு ரேசர்
நண்ணுல கீதென நாடினர் தீயோன்
கண்ணகன் வாயது கண்டிடு பூதர். (கூகஅ)

வாய்க்கொளு மெல்லை மடங்கன் முகத்தோன்
மூக்குட னஞ்செவி மூலமும் வல்லே
நோக்கின ரிங்கிது நூழைகொ லென்னு
வூக்கொடு சிற்சில ரோடினர் போனார். (கூகக)

அந்தமில் சீய னகன்பெரு வாய்போய்க்
கந்தர நீங்கினர் நெஞ்சு கடந்தா
ருந்தி புகுந்தன ரொண்புவி யுள்ளோர்
சிந்துறு கீழ்நிலை சென்றுறு மாபோல. (கூஉ0)

சீய முகங்கெழு செம்ம லுயிரபபிற
போயின ருந்தி புகுந்தவா சில்லோ
ராயிரம் யோசனை யந்தர மீண்டு
மேயின ரங்கவன் மீண்ட வுயிர்ப்பால். (கூஉக)

வெவ்விட மென்ன விளங்கசு ரேசன்
றுவ்விட வேயக டுற்றிடு தொலலோ
ரவ்விடம் யாவினு மாதியை யுன்னற்
கிவ்விட மேயினி தென்றனர் சில்லோர். (கூஉஉ)

வேறு.

களிததவன் மடியுறு கணவ ராயிடைக
கிளைததனா கைகளிற் படையிற கீறினர்
துளைததனர் கெடாமையிற் றொலலை வன்மைபோ
யிளைத்தன ரொருசிலா யாது செய்வரால். (கூஉகூ)

ஆயிர வெள்ளமா மாடற் பூதரை
வாயிடைப பெயததன னகடடில் வைத்துள
சீயமா முகததவன் செயலைப பறபக
லோய்வற மொழியினு மொழிதற் பாலதோ. (கூஉச)

இததிற நிகழ்ந்திட வீண்டு பாரிடர்
பததுறு நெனபபடும் பரவை நீத்தமுங்
கைததலம் வாரினன் கயவன் மோடடினுள்
வைததலுங் கண்டனா வானு ளோரெலாம. (கூஉரு)

எண்கெழு பூதரை நுங்கி னனினி
மண்கெழு பொருளெலாம வாரி நுங்குமால
விண்கெழு நம்மையும் விரைவிற் பறறியே
யுண்குவ னெனமருண் டும்ப ரோடினார். (௩௨௬)

நேடிய வொற்றுவர் நின்றி லார்விரைந்
தோடின ரவுணர்கோ னுபயத் தாண்மலர்
சூடினர் சென்னியிற றொழுத கையினா
மாடுறு பலசன மகிழக் கூறுவார். (௩௨௭)

ஏதமி லரிமுகத் திளவல கந்தவே
டேனைப பிறாதமைத தொலைவில பூதரிற்
பாதியை நாண்வலைப படுத்து விட்டியே
யாதவ னெழுகிரி யகதத ராக்கினான். (௩௨௮)

ஈங்கிது வினவியே யீசன் றன்மகன்
றாங்கிய வேலொடு சாரி மேறறிட
வோங்குமோர வடிவுகொண் டுனது பின்னவ
னுங்கெதிர் பூதரை யள்ளி நுங்கினான். (௩௨௯)

இவ்வரை நிகழ்ந்தன வினைய வித்துணை
மைவரு மிடற்றினன் மதலை யோடுபோர்க்
கவ்வையை யியற்றிடுந கன்ன லொன்றினிற
றெவ்வாக ளிலரெனச செய்து மீளுமால. (௩௩௦)

என்னலு மரியணை யிகந்து போய்த்தழீஇ
நன்னய மொழிபல நவினறு தூதுவ
ருன்னினர் விழைந்தசீ ருதவி மன்னவன்
றன்னுழை யொருவனை நோக்கிச் சாறறுவான். (௩௩௧)

கந்தனொ டரிமுகன் கனன்று போர்செய்வான்
முந்துள தானையின் முடியும் பற்பல
விந்தநன் னகருறை படைகள் யாவையு
முந்துதி யாயிடை யொல்லை நீயென்றான். (௩௩௨)

சாற்றிய வுரைகொடு தாழ்ந்து கம்மியன்
காற்றென வேகியே கறங்கு தானையுட்
போற்றல னமரிடைப் போமின் போமினென்
றேற்றரி முரசினை யெறிவித் தானரோ. (௩௩௩)

பணையொலி கேட்டலும் பதியுள் வைகிய
வினையறு தானைகள் வெள்ளம் யாவையு
மணிகெழு வகுப்புட னார்த்துச் சென்றுசூர்த்
துணையவ னமர்புரி சூழல் புக்கவே. (௩௩௪)

அம்புதி யாமென வனிகஞ் சென்றுழித்
தம்பியஞ் சிகழிகைச் சூர னென்பவ
னெம்பிதன் போர்வலி காண்பன் யானெனாச்
செம்பொனந் தவிசினுந் தீர்ந்து போயினான். (௩௩௫)

தன்பெரு மந்திர கடிவட் டங்கிய
கொன்பெருஞ் சிகரியா மேருக் குன்றின்மே
லின்புறு திருவொடு மேறி னுனரோ
பொன்புனை யுதயமே லிரவி புக்கென. (ருருசு)

தாதவிழ் தார்முடித் தம்பி கொண்டதோர்
மேதகு வடிவமுந் தமியன் வேளுறப்
பூதாக ளுண்டியாய்ப் போன தன்மையுங்
காதலி னவுணர்கோன் கண்ணி னேக்கினன். (ருருஎ)

வருமித மென்றுமன் னுயிர்கட் கல்லல்செய்
கருமித வழிக்கொரு கனலிற் ருேன்றினுன்
பெருமிதம் விம்மிதம் பெரிது மெய்தினு
னுருமித மாமென நகைக்கு மோதையான். (ருரு அ)

இங்கிவ னின்றிட விதற்கு முன்னரே
சங்கையில் பாரிடத் தானை முறறவுரு
சிங்கமா முகத்தவ னுசருஞ் செவ்வியி
னங்குறு மறுமுக னதனை நோக்கினன். (ருருகூ)

ஒருத்தனை யாகியே யுலகெ லாமடு
திருத்தன தருண்மக னேர லாரொடுஞ்
செருத்தொழில் புரிவதோர் சிறிய வாடலைக்
கருத்திடை யுன்னினன் கணிபபி லாற்றலான். (ருசுO)

வேறு.

செய்ய தாமரை வனங்களுஞ் செங்கதிர்த தொகையு
மைய சேயொளி யினறிருந் தென்னவா றிரண்டு
கையு மூவிரு முகங்களு முடையவன் காலோன்
வைய முந்திட வடுதொழி லியற்றுவான் வந்தான். (ருசுக)

வேறு.

வந்திடு கின்ற காலை வயப்பெரும் பூதர் யாரு
மந்தமுற் றதனை போரா வடிகரி பரிதேர் செற்ற
வெந்திற லவுணர் கோன்றன் மேதகு படைஞர் முற்றுங்
கந்தவே டன்னைச் சூழ்ந்தார் கனலிசூழ கடலே யென்ன. (ருசுஉ)

சூழ்தரு மவுண வீரர் தொலைவிறம் படைகண் முற்று
மூழ்தரு முருமிற் பெய்ய வுலகுடை முதல்வன் காணுக்
காழ்தரு மேரு வன்ன கார்முக மொன்று வாங்கி
வீழ்தரு மருவி போலும் வியன்குண தோதை கொண்டான். (ருசுரு)

ஆயிர கோடி ஞாலத் தண்டங்கள் வெடித்த மற்றைப்
பாயிரும் புனலி னண்டப் பத்திகள் பகிர்ந்த பாங்கர்
தீயழ லண்டங் கீண்ட செறிமருத் தண்டம் விண்ட
மீயுயர் வெளிமூ தண்டம் வெய்தென வுடைந்த வன்றே. (ருசுச)

அப்பெரு நாணி னேதை யரிமுகன் றுனை மள்ளர்
செப்புறு கேள்வி யாற்றுஞ் செவிப்புலம் புகுத லோடுங்
கைபபடை சிந்தி வீழ்ந்தார் கவிழ்ந்தன களிறு மாவு
மொப்பில்சீ ருருளித் தேர்க ளொல்லென வுடைந்த வன்றே. (ருசுரு)

மூரிவிற் கொண்ட நாணின் முழக்கினை வினவி யற்றாற்
பாரிடைக் கவிழ்ந்த தானைப் பரப்பையு நோக்கி நின்றா
னாரிதைப் புரியு நீரா ரான்மக னிவனா முன்னந்
தாரகற் கடந்தா னென்கை சரதமே போலு மென்றான். (௧௪௬)

வாலுளை யலங்கு நெற்றி மடங்கலோ னினைய கூறிப்
பாலகன் வன்மை யானே படுத்தனன் மீள்வ னென்னாக்
காலுடை நெடுந்தே ரோடுங் கையனோர் கணத்தி னேர்ந்து
வேலுடை யண்ண றன்னை நோக்கினன் விளம்ப லுற்றான். (௧௪௭)

கண்ணுதன் முதல்வன் மைந்த கழறுவ னொன்று கேண்மோ
வெண்ணலர் வலியை மாற்ற லிறையவர் கடனே யற்றால்
விண்ணவர் தமைத்தண் டித்தோ மவர்க்குளு மல்லை வேறோர்
நண்ணல னெமருக்கில்லை நடந்ததென் னமருக் கென்றான். (௧௪௮)

உறைதரு மளியன் றன்னை வலியவ னொறுக்கி னாடி
முறைகெழு தண்ட மாற்றி யண்டங்கண் முழுவ துக்கு
மிறையினைப் புரிது மறரா னீவிர்க ளிமையோர்க் கிட்ட
சிறையினை யகற்ற வந்தேஞ் செருவுமத் திறத்துக் கென்றான். (௧௪௯)

எங்கணா யகமா யுள்ள விறையவ னினைய கூறச்
சிங்கமா முகத்து வீர னுருமிடி திளைத்த தொப்ப
வங்கையோ டங்கை தாக்கி யண்டமுங் குலுங்க நக்குப்
பொங்குவெஞ் சீற்ற மேலா னிங்கிவை புகல லுற்றான். (௧௫௦)

எங்கெமர் தமையும் வென்றா யிமையவர் சிறையு மின்றே
நீங்கின ராவர் நீயு நீக்குதி போலும் போலு
நாங்களு மளியர் தாமே நன்றுநின் சூழ்வே யாற்ற
லோங்கிய துனது மாட்டே யுண்மையி தன்றி யுண்டோ. (௧௫௧)

இந்திர குமரன் றன்னை யிமையவர் குழுவை வாரி
வெந்தளை மூழ்கு வித்து விட்டிய சிறையை நீக்கல்
சந்திர மௌலி யண்ண றன்னினு முடியா தென்றான்
மைந்தநீ யொருவன் கொல்லோ முடித்திட வல்லை மன்னோ. (௧௫௨)

கண்ணுத லுனக்குத் தந்த காமரு சுடர்வே லாற்ற
லெண்ணலன் மறலி யாகி யிகழ்ந்துபோ ரியற்றி னானை
யுண்ணிக ழாவி கொண்டா யோடினா லுய்தி யீண்டு
நண்ணிய தன்மை யெங்க ணல்வினை தந்த தன்றே. (௧௫௩)

கடம்பமர் கண்ணி யாய்கேள் கடவுள்வேல் கொண்ட வாற்ற
றிடம்படு நினது வன்மை யாவையுந் தெரிதந் துள்ளேன்
றடம்படு குவவுத் திண்டோட் டாரகன் போல ஞாட்பின்
மடம்படு கின்ற தில்லை வல்லைபோர் புரிதி மாதோ. (௧௫௪)

பொருதிறல் வயவர் யாரும் பூதரிற் பலரு மாய்ந்தே
யெரிகதி ருதயம் புக்கா ரேனையோர் நீயுங் காண
விரைவிலென் னகடு சேர்ந்து விளிந்தனர் தமிய னின்றாய்
செருவினை யிழைத்து மென்னு மூக்கமே சீரி தம்மா. (௧௫௫)

தாதவிழ் தருவி னீழற் சயந்தனை யமரர் தம்மைத்
தீதுறு சிறையி னீக்கச் சென்றநீ துணைவ ரோடு
பூதர்தந் தொகையை வாளா போக்கினை தமிய னின்று
யூதிய மிதன்மே லுண்டோ வுனக்கிது கிடைத்த தன்றே. (௩௫௬)

மூனைகெழு சமரின் வந்து முடிந்தனர் முடிவி லாதா
ரினைவொடு புறந்தந் தேகி யிரிந்துளார் தொகையு மஃதே
யனையதை யுணராய் கொல்லோ வமர்குறித் தீண்டு வந்தாய்
கனவினும் விடுவ துண்டோ கடவுளா சிறையை யென்றான். (௩௫௭)

என்றசொல் லிறுக்கு முன்ன மிராறுதோ ளுடைய வள்ள
லன்றிவன் கொண்ட தென்னு நகைசெய்து சிலையிற் பூட்டி
யொன்றொரு வயிர வாளி யொல்லென துரப்பத் தீயோன்
பொன்றிகழ் மருமம் புக்குப் புறத்துரீஇப போயதன்றே. (௩௫௮)

அருவிய ளுக மூள்ளா னகன்பெரு விழிகட் கூறு
யருவிய ளுக மன்ன வரிமுக னையன் செங்கோ
லருவிய ளுக மூழ்க வலக்கணுற் றிழியுஞ் செந்நீ
ரருவிய ளுக கின்று னமரர்மற் றதுகண் டார்த்தார். (௩௫௯)

கற்றையங் கதிர்வே லண்ணல் காமரு பகழி பாய
மற்றவன் புறனு மார்பும் வாயில்க ளாத லோடு
மற்றது நோக்கித் தீயோ னகட்டுறை கணங்கண் முறறும்
புற்றெழு சிதலை யென்ன வந்நெறி துருவிப் போந்த. (௩௬0)

உய்குறு கணத்தின் றானை யுந்தியை யொருவி வாளி
செய்குறு வாயி னீங்கித் தெழிப்பொடு புறததிற போக
மைகிளா புந்தி வெய்யோன் மற்றது கண்டு சீறிக்
கைகொடு நெறியை மாற்றிக் கந்தன்மே லொருதண் டெய்த்தான். (௩௬௧)

அண்டம்விண் டதுகொ லென்ன வணிமணித தொருதி யாப்பத்
தண்டம்வந் திடுத லோடுந் தன்னிக ரில்லா வண்ணல்
கண்டளா னிலமப்பி னுன்கு கணைதொடக் கதையைச் சிந்தி
யொண்டிறற் சூரன் பின்னே னெற்றிபுக கொளித்த வன்றே. (௩௬௨)

ஒளித்திடு கின்ற காலை யுருகெழு மடங்கற் பேரோன்
களித்திட லொருவி மேலைக் கடுஞ்சினக் கோட்புச் சிந்தித்
தெளித்திடு முணர்வு மின்றிச் செய்யகோல் செலுத்த மன்ன
னளித்திட லொழிந்த காலத் துலகம்போ லழுங்கி நின்றான். (௩௬௩)

வேறு.

போர்ந்திடு முணர்வொடும் பிரிவி றன்பொடுஞ்
சேர்ந்திடு மரிமுகத தீய னினறுழி
வார்ந்திடு குருதிதோய் வாயின் மூடுகை
சோர்ந்தன வருள்வரத் தொலைந்த மாயைபோல். (௩௬௪)

அறந்தவிர்ந் தொழுகினோ னுகந் தன்னிடைத்
திறந்திடு நெறிகளாற் சிறையின் லவப்பொரீஇப்
பறந்திடு புள்ளெனப் படர்ந்து கந்தவேள்
புறந்தனில் வந்தன பூதம் யாவுமே. (௩௬௫)

அன்றரி முகத்தவ னலைத்து நூங்கின
கொன்றன வெறிந்தன கூளி யாவையும்
வென்றிகொள் வேற்படை விமல னணையாற்
றன்றிவர் தடைந்தன தொன்மை கூடியே. (௩௬௬)

வேறு.

அன்னதொரு காலை யறுமா முகக்கடவு
டன்னிகரி லாத தனக்கிளையோர் தங்களையுந்
துன்னலுறு பூதத் தொகையோர்கள் யாவரையு
முன்னியவர் தம்பா லொருகோ ளுறுவித்தனனே. (௩௬௭)

உந்தும் பகழி யுததி பலகடந்து
முந்துங் கதிருதய முன்னுற்று மொய்ம்பர்தமைப்
பந்தங் கொடுசூழ்ந்த பாசவலை சிந்திடலுங்
கந்தன் றனதருளாற கண்டுயில்வார் போலெழுந்தார். (௩௬௮)

பாசத் தளையிற படுவா ரதுநீங்கி
மாசற்ற நல்லுணர்வு வந்தெய்த வுய்ந்தனராய்ப்
பேசற்கரிய வின்பம பெற்றோர்க டாமாகி
யீசற் கினியா னிணையடிகள் வாழ்த்தெடுத்தார். (௩௬௯)

ஆங்கதுகா லததி லறுமுகவே ளுய்த்தகணை
பூங்கமலத் தோனுதவு புட்பகத்தின் மாட்சியதாய்த்
தீங்கிலிள மைந்தர்தமைச் சேனை யொடுமுகந்து
தாங்கி விசும்பின் றலைக்கொண்டு சென்றதுவே. (௩௭௦)

என்று திகழ்வெற்பை யிகந்தேழ் கடனீங்கிச்
சென்று கடிது செருநிலத்திற் சேனையொடு
நின்ற குமர னெடுந்தாண் முனமுய்த்ததுத்
தன்று கணைபொதிந்த தூணியிடைப புக்கதுவே. (௩௭௧)

அந்த வமையத்தி லடல்வீர மொய்ம்பினனு
மிந்திரனும் போறறு மிலக்கருட னெண்மாகளு
மந்தமிலாப் பூத வனிகங் களுமளியாற்
கந்த னிணையடிகள் கைதொழுது தாழ்ந்தனரே. (௩௭௨)

நீக்கம் பெறுதுயிர்க்கு ணின்றுணைத தொல்வறிஞு
னூக்கம் பெற்றென்ன வடிவணங்கிப் போறறுதலும
வீக்குங் கனைகழற்கால் வீரர் தமைநோக்கித
தேக்குங் கருணையினு லீதொன்று செப்பினனால். (௩௭௩)

தொக்கீ ரவுணன் றொடுமாயைச் சூழ்வலையிற்
புகரீ புலர்ந்தீர் புலனழிந்தீர் யாப்புறவுந
தக்கீ ருதயந் தனிறபுகுந்தீ ரிவ்வாறு
மிக்கீரு நொந்தீாகள யோது மிகவென்றான். (௩௭௪)

முந்தை யுணாவு முடிந்தாலென் னுருயிர்போ
யந்த நிரயத தழுந்தி யயாந்தாலென்
வெந்துயர மூழ்கி வினைபபிறவி புக்காலென்
னெந்தை யருளுணம்ட லெமககென குறையென்றார். (௩௭௫)

ஆங்காகு மெல்லை யருமறையுந் தேறரிய
வோங்கார மூலத் துணர்வா யுறைபகவ
னீங்கா நெறியா னிறைபே ரருள்புரியப்
பாங்காக நின்ற பரிசனர்கள் போற்றினரே. (௩௭௬)

வேறு.

அன்னதொ ரமைதியி லண்ணல் வார்சிலை
துன்னுறு நாணொலி கேட்டுச் சோர்வுறா
முன்னுற வீழ்படை முதல்வ னுடலை
யுன்னுறு செய்கையா லெழுந்த வொல்லையில். (௩௭௭)

ஈங்கிவ னொருமக னெமையெ லாஞ்சிலை
தூங்கிய நாணினாற் றொலைக்குங் கொல்லெனத்
தாங்கிய படையுடைத் தருவர் தானைக
ளோங்கனல் பரந்தெனச் சினங்கொண் டார்த்தவே. (௩௭௮)

ஆழிமால் கடல்புரை யவுண மாப்படை
காழுலாம் பலபடைக் கலமுஞ் சிந்தியே
யூழிநா ளெல்லையி னுலகெ லாமடுங்
கேழிலான் மதலையைக் கிளர்ந்து சூழ்ந்தவே. (௩௭௯)

சுற்றிய வேலையின் முறுவ றேன்றிட
நெற்றியங் கண்ணுடை நிமலன் மாமகன்
கொற்றவெஞ் சிலையினைக் குனித்துப் பூட்டியே
செற்றிய கணைமழை சிதறி னனரோ. (௩௮௦)

அங்கியின் வடிவின வாலம் போல்வன
கங்குலை நிகர்ப்பன காலற் கொப்பன
பொங்கிய வெஞ்சினப் புயங்க நேர்வன
செங்கதிர் மலைவன செம்மல் வாளியே. (௩௮௧)

மின்னினுஞ் சுடரின வுருமின் வெய்யன
பொன்னுறழ் திறத்தன மணியின் பொற்பின
மன்னிய வானவின் மாறு கொள்வன
பன்னிறம் படைத்தன பகவன் வாளியே. (௩௮௨)

வேறு.

சூலம் போல்வன தோமரம் போல்வன சுடர்வா
யாலம் போல்வன நாந்தகம் போல்வன வடல்வேற்
கோலம் போல்வன கழுமுளும் போல்வன குலிச
சாலம் போல்வன வாறுமா முகன்விடு சரங்கள். (௩௮௩)

அறத்தை நல்கலி னந்தணன் போல்வன வகிலத்
திறத்தை யன்பொடு போற்றலிற் செங்கண்மால் போல்வ
வொறுத்து மன்னுயி ருண்குறு மவுணரை யொருங்கே
யிறுத்தல் செய்திடுந் தன்மையா லீசனே போல்வ. (௩௮௪)

காற்றிற் செவ்விதிற் செல்வன கறங்குவ கடுங்கட்
கூற்றிற் கொப்பன மனத்தினுங் கடியன கொடுந்தீ
நூற்றுக் கோடிக ளனுகினும் விசையினு ளெய்தின்
மாற்றத் தக்கன குமரவேள் விடுத்திடும் வாளி. (௩௮௫)

ஒன்று தொட்டிடிற் கோடியா மொல்லையி லவையுந்
தன்று கோடிமேற் கோடியா மேலுமத தொகையே
யன்றி யாரதற் கெண்கொடுத் துரைப்பவ ரநந்த
மென்று சொல்வதே முருகவே டொடுங்கணைக் கிலக்கம். (௩அசு)

கார்பி ளந்திடு மளக்கரை யுண்டிடுங் கதிரோன்
றேர்பி ளந்திடும் வடவையை விழுங்குறுந் தேவ
ரூர்பி ளந்திடு மேருவைப பிளந்திடு முலவாப
பார்பி ளந்திடு ஞானநா யகன்விடும் பகழி. (௩அஎ)

வரைகி ழிப்பதும் புவியினைப பிளப்பதும் வரம்பி
றிரைக டற்குடித் திடுவதும் பிறவுமோர சிறப்போ
வரிய வாயிர கோடியண் டங்களா மனைத்து
முருவி நிற்கில பின்னரு மோடுமென் றுரைக்கின். (௩அஅ)

தொடுநெ டுங்கணை யிவ்வகை செறிதலுஞ் சூழ்வா
ரடிது ணிந்தன கைததலந் துணிந்தன வணிதோண்
முடிது ணிந்தன வுரந்துணி வுற்றன முகிறோய்
கொடிது ணிந்தன விரதமுந் துணிந்தன குலைந்தே. (௩அகூ)

கரைகள் பட்டென வவுணர்கள் பட்டனர் கடலி
னிரைகள் பட்டெனக் களிறுகள் பட்டன நிரந்த
திரைகள் பட்டெனப புரவிகள் பட்டன செறிந்த
வரைகள் பட்டெனப் பட்டன வளவைதீர் மான்றேர். (௩கூ0)

ஒப்புக் கொண்டிடா மேலையோ னொன்றையொன் றுக்குந்
துப்புக் கொண்டிடு மறபுத முணர்ந்தவன் றொன்னாள்
வைப்புக் கொண்டபா ரண்டங்கண் முழுவதும் வரம்பி
லப்புக் கொண்டதோ ரண்டமே யாக்கிய வதனால். (௩கூக)

செப்பு றத்தகும் விம்மித மன்றிது தேவ
ரெப்பு றத்தருங் காண்கிலா ரெம்பிரான் கணைக
ளொப்பு றத்தரு மண்டதத்தின் றொகையெலா முரீஇப்போ
யப்பு றத்தினி லிடுவன வவுணர்தந் தலைகள். (௩கூஉ)

மூரி யண்டலர் யாக்கைக ளொடுத்துடன் முடிகிப்
பாரி யண்டங்க ளாயிர கோடியும் பகிர்ந்து
வாரி யண்டங்க ளிடையிடை சிந்திமற் றவற்றைச்
சோரி யண்டங்க ளாக்குவ வண்ணறொல் கணைகள். (௩கூ௩)

ஒண்டு ளிப்படு குருதியு மவுணர்க ளூரமுங்
கண்ட துண்டமுஞ் சென்னியுந் தோள்களுங் கரமு
முண்ட மாங்கரி பரிகளும் விளிந்ததேர் முற்று
மண்ட மெங்கணுஞ் செறிந்தன வட்டிய திறம்போல். (௩கூச)

புள்ளு லாவுவே லறுமுகன் பகழிபோர் புரிந்த
மள்ளர் மாப்படை யலைப்பதோ வரிதுவல் விரைவா
லள்ளல் வாரிசூ ழாயிர கோடியண் டத்தி
லுள்ள தானவர் தம்மையு முடிவுசெய் துலவும். (௩கூரு)

குமர நாயகன் றொடுசர நிரத்தலுங் குளிர்ந்த
கமல மாமலர் முகைபொரு முகததினர் கரத்தர்
தமர நேமிகொள் புகழ்ச்சியா வணங்குறு தலைய
ரமரர் யாவரும் வானிடைப பிழைததுநின் றார்த்தார. (௩௯௬)

கங்க முற்றன கொடிபிற வுற்றன கவந்த
சங்க முற்றன குணங்கரு முற்றன தகுவ
ரங்க மிற்றன கரிபரி யிரதமிற றனவாற்
சிங்க மாமுக னொருவனு நின்றனன் செருவில். (௩௯௭)

மீயு யர்ந்துசூ ழண்டத்தி னளவெலாம் விரவ
மாய வன்மையிற் கொண்டிடு பெருந்தகை வடிவந்
தூயன் வாளிகள் பட்டுணர் வழிதலாற் றொலைந்து
சீய மாமுகன் றன்மைம்பா னிலைறனன் றேர்மேல். (௩௯௮)

நின்ற தீயவன் றானுறு மயர்ச்சியை நீங்கிச்
சென்ற தன்படை யாவையுங் கண்டிலன் சிறுவன்
கொன்று வீட்டின னென்பது தெரிந்துளங் கொதியா
வொன்று போலவோ ராயிரஞ் சிலைகள்கொண் டுறறான். (௩௯௯)

அலைவ ளைந்தபாற் கடன்மிசைப் பத்துநூ றம்பொன்
மலைவ ளைந்தமர் தன்மைபோன் மன்னன்மாட் டன்றித்
தலைவ ளைந்திடா வரிமுகன் றனதுகைத் தலத்தாற
சிலைவ ளைந்திடக் குனித்தனன் சுடுசரந் தெரிந்தான். (௪00)

வேறு.

சீய மாமுகன் செஞ்சிலை பூட்டிநா
றாயி ரபபத தடுசர மேவலு
நாய கன்னது கண்டு நகைப்புறா
வோய்வில் வாளியொ ராயிரந் தூண்டினான். (௪0௧)

ஆற்றன் மேதகு மாயிரம் வாளியான்
மாறற லன்கணை மாரி விலக்கியே
சாற்று தறகரி தாகிய தன்மையான்
வீறறு மாயிரம் வெங்கணை யுந்தினான். (௪0௨)

உந்து கோலையொ ராயிரம் வாளியாற்
சிந்தி யேதிறற் சிங்க முகாசுர
னைந்து நூறிரண் டாயிரம் வெங்கணை
யெந்தை மேல்வர வேவின னென்பவே. (௪0௩)

பதகன் வாளிகள் பத்திலக் கத்தையு
நுதிகொள் வெங்கணை நூறுபத தாயிரங்
கதுமெ னததொடுத் தேமறை காண்கிலா
வதிர்க ருங்கழ லண்ண லகற்றினான். (௪0௪)

திருத்த குந்திறற் சீய முகததினா
னுருதது வாளியொ ராயிரந தூண்டுறாப்
பரத்தின் மேறபடு பண்ணவன் றேர்விடு
மருத்தின் மார்புற வல்லை யழுத்தினான். (௪0௫)

ஆர முற்சினத தாளரி மாமுகன்
கூரு டைக்கணை நெஞ்சு குளித்திட
மாரு தப்பெய ரோன்வலி சிந்திடாச்
சோரி மிக்கெழத் துன்புற வெய்தினன். (சு0சு)

பாகு பட்ட பருவர னோக்கியே
வாகை யண்ணல் வரிசிலை கால்வளைஇ
யேக நூறு பகழிதொட் டெண்ணலன
சேகை மாண்கொடித் தேரினை வீட்டினான். (சு0எ)

தேர ழிந்திடத் தீயரிற் றீயவ
னூர ழிந்த வுடுபதி போன்றுளான்
கார ழிந்திடக் கல்லெனை வார்புரூப்
பாரி ழிந்தனன் பல்கணை வீசினை. (சு0அ)

வீசு கின்ற வியன்கணை யாவையு
மாசில் காட்சியன் வாளியின மாற்றிடா
வாசில் வெஞ்சர மாயிரந் தூண்டியே
நீசன் விற்களை நீணிலஞ் சேர்த்தினன். (சு0கூ)

அண்ட லன்கொண்ட வாயிரஞ் சாபமுந்
துண்ட மாகித தொலைந்து நிலம்புக
விண்டு நான்முகத் தோனும்விண் ணோர்களுங்
கண்டு நின்று கரமெடுத்தார்த்தனர். (சுக0)

கோலு மிழ்ந்த குனிசிலைக் கூட்டறக்
கால வெவ்வழ லென்னக் கனன்றுளான்
சூல மொன்று துளக்கினன் வீசின
னால கால மளக்கருய்த்த தாலென, (சுகக)

றுன்ன லன்விடு சூலத்தை யேழிரு
கொன்னு னைக்கணை தூண்டிக் குறைத்திடாப்
பினனு மாயிரம் பேரழற் புங்கவ
மின்னெ னத்தரந் தானடல் வேலினன். (சுகஉ)

கொண்ட வேற்கைக் குமரன் சரங்களைக்
கண்டு தீயன் கனன்று கரந்தனிற்
றண்ட மொன்றிற் றரைபடச் சிந்தியே
யண்டம் விண்டிட வார்த்தன னேகினன் (சுகங)

விடுத்த வாளி பொடித்ததும் வெவ்வியோன்
பிடித்த தண்டொடு பேர்வதுங் காண்குரு
வடித்த வேழ்கணை தூண்டினன் வன்கதை
யெடுத்த கையை யிருநிலஞ் சேர்த்தினன். (சுகச)

சேர்த்து முன்னுறத் தீயவன் றோளினும்
போர்த்து மாங்கொா பெருங்கை புறப்படப்
பார்த்த லம்புகு தண்டினைப் பற்றியே
யார்த்து வீசின னுதியந் தேவன்மேல். (சுகரு)

ஓட்ட லன்றொட வுற்றதன் டத்தின்மே
னெட்ட முற்கு கிகர்க்ணை யாயிரம்
விட்ட றுததனன் மேல்வரு பார்த்தனை
யட்டி டுங்கதி ராதவ னென்னவே. (சகசு)

அண்டர் நாயக னுயிரம் வாளியாற
றண்டம் வீழத் தடிதலு மாற்றலன்
கண்டு சீறிக் கடுந்திறற் கூற்றிடைப்
பண்டை நாட்கொண்ட பாசத்தை வீசினன். (சகஎ)

சுற்று பாசத் தொடர்ச்சியை நோக்கிவேள்
செற்றொ ராயிரந் தீக்கணை தூண்டலும்
வற்றன் மாண்கொடி வன்னியின் றீச்சுட
ருற்ற தாமென வொண்பொடி யாயதே. (சகஅ)

வேறு.

நாணற் றதுகண் டனனு னுறுவா
னேனுற் றிடுசே யையிரா யிரமாம்
பாணித் தொகையைக் கொடுபற் றிடுவான்
பேணிச் சினமோடு பெயர்ந் தனனே. (சகக)

சிங்கத் திறலோன் வருசெய்கைதனை
யெங்கட் கிறைநோக் கியிரா யிரமாம்
வெங்கட் கணையாயி னவிட்டவுண
னங்கைத் தொகையா வுமறுத் தனனே. (சடுo)

கொற்றங் கெழுவுற் றருகன் கணையாற்
செற்றந் திகழா ளரிசெய் யகர
மற்றம் புவிவீ ழுமுனங் கைகிரை
முற்றும் புதிதா கமுளைத் தனவே. (சடுக)

அற்றுப் புவிவீழ் தருமங் கைகளை
மற்றத் துணைவந் தெழுமாண் கைகளாற்
பற்றிச் செலவன் னதுபார்த் தனனு
னெற்றிக் கணளித் திடுநீள் சுடரோன். (சடுஉ)

ஓரா யிரம்வா ளிகளுய்த் தவுண
னோரா யிரநீண் முடியொல் லையுற
வீரா யிரமவெஞ் சரமே வியவ
னீரா யிரமொய்ம் புமிறுத் தனனால். (சடுங)

அன்பற் றவன்மொய்ம் புகமற் றனகண்
டின்புற் றனர்வா னவரீண் டியவை
முன்புற் றதுபோ லமுளைத் தெழலுந்
துன்புற் றனர்யாக் கைதுளங் குறுவார். (சடுச)

கண்டா னிதுவின் னவர்காண் பரியோன்
பண்டா லவனத் திடைபா ணிசிரந்
தண்டா தழல்கொய் திடுதன் மையினு
லுண்டா கியவா றெனவுன் னினனே. (சடுரு)

உன்னும் பொழுதத் தினிலும் பரெலா
மென்னிங் கிவன்மாய் வதெனத் தளரா
முன்னம் பெயர்சிங் கமுகன் முனியாச்
செங்கின் றிஃதோர் மொழிசெப் பினனால். (௪௨௬)

உளைக்குங் கணைதன் னியுகம் பலநீ
கிளைக்குந் தலைமொய்ம் புகெடுத் திடினு
முளைக்கின் றதலான் முடிவுற் றிடுமோ
விளைக்கின் றனைநீ கொலெனைப் பொருவாய். (௪௨௭)

மொய்யுந் துதவத் தியன்முன் னலைநின்
னையன் றருமாற் றலறிந் திலைபோர்
செய்யும் படிவந் தனைசே யொருநீ
யுய்யும் படியன் றனதூக் கமுமே. (௪௨௮)

மாண்டே வர்தமைப் புரிவன் சிறைபோ
யாண்டே வருகின் றதுமாற் றலுளே
னீண்டே யழிகின் றதுமில் லையிவண்
மீண்டே குதிநின் னுயிர்விட் டனனால். (௪௨௯)

வேறு.

என்னலு மதனை யோரா வெம்பிரான் குமரன் சொல்வா
னுன்னுயி ரிழைத்த வெல்லை யொழிந்தது கூற்றும் வந்து
பின்னுற நின்றா னென்னீ பிதற்றுதி யுணர்வி லாதாய்
முன்னொரு கணத்தி னின்னை முடிக்குவன் காண்டி யென்றான் (௪௩௦)

படைப்பவன் குரவ னீது பகர்தலு மவுணர் கோமா
னிடிப்பென வார்த்துக் குன்ற மிராயிரம் பறித்து வீச
நொடிப்பினி லவற்றை வாளி நூற்றினுண் டுகளா தாக்கித்
தடப்பெரு மருமமூழ்கச் சரங்களா யிரதைதை யுய்த்தான். (௪௩௧)

மாயிரு நெடுங்கண் வாளி மார்பத்தை யகழ்ந்து தன்னக்
காயெரி கலுழுங் கண்ணான் கைகளா லவைவை தீர்த்த
பாயிருங் குன்ற நாடிப பறித்தலுங் கண்டு செவவே
ளாயிரங் கணைதொட் டன்னா னணிமுடித தொகையை வீழ்ததான். ()

அறுத்திடு தலைகள் வீழ வாயிரஞ் சென்னி வல்லே
மறித்தும்வந் தெழுத லோடு மடங்கன்மா முகத்தன் முன்னம்
பறித்திடு குன்றம் வீசிப பருவலித் தடந்தோள கொட்டி
யெறிதரு கதிரும் விண்ணோர் யாவரு முட்க வார்த்தான். (௪௩௩)

ஆர்த்திடு காலைச் செவ்வே ளாயிரத் திரட்டி கொண்ட
கூர்த்திடு பகழி தூண்டிக் குன்றங்கள் செற்று வெய்யோன்
றூர்த்தட மொய்ம்பு முற்றுந் தள்ளினன் றள்ளு முன்னர்ப்
பேர்த்தும்வந் தெழுந்த வம்மா தவத்தினும் பெரிதொன் றுண்டோ. ()

அத்திறங் காணா வீதோ ராடலா வுன்னி நூற்றுப்
பத்துட னெட்டின் காறும் பரஞ்சுட ருருவாய் நின்றான்
மொய்த்திடு பகழி மாரி முறைமுறை தூர்ந்து மொய்ம்பன்
கைத்தலஞ் சென்னி முற்றுங் கண்டதுண் டங்கள் செய்தான். (௪௩௫)

திசைகளிற் போகு நேமித் திறங்களிற் போகும் வெற்பின்
மிசைகளிற் போகும் பாரின் மீதினிற் போகு மாந்தர்
நசைகளிற் போகும விண்ணோர் நாட்டிடைப போகுஞ் சிங்க
னிசைகளிற் போகு மெங்கு மிற்றிடு சிரமுங் கையும. (௪௩௬)

அகரம தாதி யான வெழுத்தெலா மாகிப பின்னர்
மகரமு மான மேலோன் வடிக்கணை துணித்து வீசுஞ்
சிகரமுந் துகர முற்றுஞ் சேணிடைச் சென்று மாயோ
னகரமுந் தாவி யண்ட கோளகை நண்ணு கின்ற. (௪௩௭)

தூர்வுடை நெடுவே லண்ணல் சுடாக்கணை துணித்து வீச
மேவலன் றனது சென்னி மெல்லித ழுதுக்கி விண்மே
லாவலங் கொட்டிச் செல்ல வச்சமுற றங்க ணின்ற
தேவர்கண் மயக்க மெய்தித் திருநில வரைப்பின் வீழ்ந்தார். (௪௩௮)

வஞ்சரை வஞ்சஞ் செய்யும் வள்ளலார் குமரன் றொட்ட
செஞ்சர மநந்த கோடி சென்று சென் றறுத்து விட்ட
வெஞ்சலி லவுணன் மொய்ம்புந் தலைகளும் யாண்டுஞ் சிந்தி
விஞ்சைய ரமர்தற் கொத்த வரைகளின் மேவ லுற்ற. (௪௩௯)

தூயவன் விடுத்த வாளி துணித்திடு மொவ்வோர் சென்னி
வாயினை யடுபோர் தன்னில் வந்தசில் கணங்க ணேக்கி
யாயிர கோடி கொண்ட களேவர மதற்கு ளிட்டு
மாயிருஞ் சிகர மாட மற்றிதென் றுற்ற வன்றே. (௪௪0)

பாடுறு சிரத்தி லொன்று பதைத்துவாய் பகிர வங்க
ணூடுறு மலகை கோடி யகன்பிணக் குவைக ளுய்த்து
மாடமீ தென்று புக்கு மற்றது கடிதின் மூட
வோடியுள் ளலைந்த தக்கன் வேள்வியி லுறறு ளார்போல் (௪௪௧)

மன்புரி யவுணர் தோன்றல் வாய்பொதி சென்னி புக்குத்
துன்புறு மலகை துண்டஞ் செவிநெறி துருவிப் போன
முன்பொரு முனிவ னில்லை முயங்குவா னுறையுள புக்கோ
னின்பொடு வன்மை சிந்தி நுழையா விரிந்த வாபோல். (௪௪௨)

ஒன்னலன் றனது மொய்ம்பு முருகெழு சிரமும் வீழ்ந்து
பன்னெடுங் கிரிக ளாக வவற்றிடைப பலசூர்ப பேயுந்
துன்னுறு கொடியுஞ் சூழ்வ தொலலையிற் பொறிக ணீங்க
முன்னவள் பதாகை யோடு முறையிலவந் துற்ற வாபோல (௪௪௩)

அரண்டருங் கழலா னிவ்வா றறுத்தலு மவுணர் கோமான்
முரண்டகு சிரமுந் தோளும் பின்னரு முளைப்ப நோக்கித்
திரண்டபல் கணைக ளோச்சிச் சென்னியி லொன்றுங் கையி
விரண்டுமே கீறுவிப் பின்னர் யாவையுந் தடிந்தா னன்றே. (௪௪௪)

நீளுறு பதலை சிந்தி நின்றம ரியற்று கின்ற
கோளரி முகத்து வீரன் குறைந்திடு முடியு மிற்ற
தோள்களு முனைமீ ரபோற் றோன்றிடப் புகுத மொல்லை
யாளுடை முதல்வ னொரு மறுமுக னதனைக் கண்டான். (௪௪௫)

நாற்றிசை முகத்தி னுறு நாகரும் பிறரு முட்கச்
சீற்றம துளன்போ லையன் சிறிதவ னுரபப லோடு
மாற்றல னகி நின்ற மடங்கன்மா முகத்தன் றன்பால்
ரேற்றிடு சிரமுந் தோளுந் துளங்கிமீண் டொளித்த வன்றே. (சசசு)

ஐயன துங்கா ரத்தா லரிமுகன் சிரமு மொய்ம்பு
மெய்யிடை யொடுங்கிற றம்மா மேவினர் தம்மை நோக்கி
மையுறு கருந்தா தன்ன வன்புறக் கமடஞ் சென்னி
பொய்யென யாக்கை தன்னி னொளித்திடுந் தன்மை யேபோல். (சசஎ)

குன்றினை யெறிந்த வைவேற் குமரவேள் கணையா லிற்ற
தன்றலை பாணி தோன்றாத் தன்மையை யவுணன் பாரா
வொன்றற முந்து பன்னா ளுணர்ந்திடு விஞ்சை முற்று
மன்றிடை யயர்த்தோ னென்ன மானமுற் றழுங்கி நின்றான் (சசஅ)

அங்கது கண்டு செவ்வே ளருள்புரி கின்றா னந்தம
வெங்கணை பலவுஞ் சென்று வீட்டிய தலையு முன்றன்
செங்கையுந் தோன்றிற் றில்லை யெழுகெனச் செப்பு கைய
விங்குநீ பட்ட பின்கொன் முளைத்திட விருந்த தென்றான். (சசகூ)

இருதலை யயில்வே லண்ண லிற்றன சிரந்தோ ளொன்றே
கருதலை யென்பே ராற்றல் கடவுளா யாருந் தேர்வ
ரொருதலை யிருகை கொண்டே யுலகெலாந் தொலைப்ப னென்னாப்
பொருதலை யுன்னி யாங்கோர் பொருப்பினைப் பறித்து விட்டான். (ச௫0)

விட்டிடு பிறங்க றன்னை விரிஞ்சனுக் காசான் காணுஉ
நெட்டிலை வாளி யொன்றா னீறுசெய் திடுத லோடும
பட்டது தெரிந்து மாய்வோ னமரிடைப பாணி யோடு
மிட்டிடு தண்ட மொன்றை யெடுத்துநின் றிதனைச் சொற்றான். (ச௫க)

வேலினு லெறியு மாறும் வெஞசிலை வளைய வாங்கிக்
கோலினல் விடுதத தொன்றைக் குறைத்திடு மாறு மல்லாற்
பாலநீ படைகள் வேறு பயின்றதொன றிலைகொ லென்னு
மூலகா ரணமாய் நின்ற முதல்வன்மேற் கதையைத் தொட்டான். (ச௫உ)

வெஞ்சின வவுணன் சொற்ற தன்மையும் விடுத்த தண்டுஞ்
செஞ்சுடர் மேனி வள்ளல் சிந்தையின் மதித்து நோக்கிக்
கஞ்சம தனைய வோர்கைக் காமரு குலிசந் தனனை
வஞ்சக னுயிருண் டொல்லை வருகென விடுத்தான் மன்னோ. (ச௫ங)

விடுத்திடு குலிச மேகி விரைந்தெதிர் தண்டந் தன்னைப
பொடித்தது போலு மென்னப பூழிசெய் தடுக்கல செல்லு
மிடித்தொகை யென்ன மார்பத தெய்தியே யவுண னவி
குடித்தது புறத்துச் செந்நீர் கொப்பளித் தேகிற் றன்றே. (ச௫ச)

வேறு.

தூண்டா விடுகுலிசந் துண்ணென் றகன்மார்பம்
கீண்டாவி கொண்டு கிழித்ததுவெரிந் சென்றிடலும்
வீண்டான் படைபடைத்தான் வீழ்குருதி நீரலைப்ப
மாண்டானின் கிடந்தான் மடங்கன் முக வெய்யோனே. (ச௫௫)

அங்கப் பொழுதி லடற்குலிசம் வான்போகிக்
கங்கைப் புனலாழ்ந்து காமருபூந் தாதாடிச்
சங்கத் தவர்க்குட் டலையாந் தமிழ்ப்புலவன்
செங்கைக்குள் வந்து சிறப்புற் றிருந்துளதால். (சருசு)

பார்த்தாரிந் நீர்மைதனைப் பங்கயத்த ஞதிவிண்ணோ
ரார்த்தார் முறுவலித்தா ராடினார் பாடிமலர்
தூர்த்தார் மகிழ்ந்தார் தொழுதாரெங் கோன்புடையிற்
போர்த்தார் வணக்கம் புரிந்தார் புகழ்ந்திட்டார். (சருஎ)

என்று யகனவ் விமையோர்க ளெல்லோர்க்குந்
தன்று ரருள்செய்து சாரதவெள் ளததினொடு
மின்னார் புகரயில்வேல் வீரரொடு மீண்டனனூற்
பொன்று டெனவே புனைந்தபொலன் பாசறையில. (சருஅ)

பாசறையின் கண்ணேகிப் பாரிடத்தோர் சூழ்போத
வாசவனு நான்முகனு மற்றோரும் பாங்காகக்
கேசரிக டாங்குங் கிளர்செம்பொற் பீடிகைமே
லீச னெனவே யினிதருள்செய் துற்றனனே. (சருகூ)

வெற்றிநெடு வேலோன் வியன்பா சறையிருப்ப
மற்றவனொ டாடி மடங்கன் முகத்தவுணன்
செற்று கொடியுண்ணச் செருநிலததின் மாய்ந்ததனை
யொற்றர் தெரிகுற்றே மகேந்திரத்தி லோடினரால். (சசுO)

ஆட லிளையோ னவண்வீழ்ந் ததுநோக்கி
வீடினனோ மான்றனனோ வென்றைய மேல்கொண்டு
நீடு சிகரியிடை நின்றோன் பதங்கண்முடி
சூடி யவலித்துத் தொழுதிதனைச் சொல்லினரால். (சசுக)

குன்றம் பிளந்த குமரேசன் வச்சிரத்தா
லுன்றம்பி யாவி யொழிந்தா னவன்மிசையப்
பொன்றுங் கணத்தோர் பொருப்புற்று ரெல்லோருஞ்
சென்றுய்ந் தனரீது திண்ணமெனச் செப்பினரே. (சசுஉ)

வேயுற் றவர்சொல் வினவியுரோ மங்களெலாந்
தீயப் பொறிதுரப்பச் செங்கட் புனல்பெருக
வாயிற் புகைசெல்ல வாடிப் பதைபதைத்து
நோயுற்று வெங்கனலை நுங்கினர்போல் வீழ்ந்தனனே. (சசுங)

வண்ணச் சிகரம் வழுவுற்றுக் கீழ்தலத்திற்
கண்ணிற் பொழிந்த கடலினிடை வீழ்ந்தனனு
லொண்ணுற்ற காஞ்சி யுமையவள்கோட் டததினின்றுந்
தண்ணுற்ற நேமித் தடததிடையே வீழ்பவர்போல். (சசுச)

மங்குலென வீழ்ந்து மறிந்து நிலமிசையே
யங்கை புடைததிட் டலமந்து தொல்வலியுந்
துங்க விறலு நலனுந் தொலைவெய்தப்
பொங்கு துயர்க்கடலின் மூழ்கிப் புலம்புறுவான். (சசுரு)

என்னையோ வென்ற னிளவலோ தாரகற்கு
முன் ா சிங்க முகத்தவோ தானவாக
என்னையோ வென்ன வருள்புரியு மாண்டகையோ
வுன்னையோ தூதர் விளிந்தனையென் றோதியதே. (சகூகூ)

அன்று மகவான் முதலா மமரர்தமை
வென்று தமியேற்கு விசயந் தனையளித்தா
யின்று சமரி லிளம்பா லகனொருவன்
கொன்றனனோ வுன்னுயிரைக் கூற்றுவனுங் கொண்டானோ.(சகூஎ)

உண்டுபோ ரென்னி னுளங்களிக்கு முன்னுயிரைக்
கொண்டுபோ னின்று கூற்றனென வேகேட்கிற்
றண்டுழாய் மாலுஞ் சதுர்முகனு மிந்திரனும்
பண்டுபோற் றத்தம் பதியாளப் போகாரோ. (சகூஅ)

பொன்னை நிலந்தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை யெல்லாம் பெறலாகு
மென்னை யுடைய விளையோனே யிப்பிறப்பி
னுன்னை யினிப்பெறுவ துண்டோ வுரையாயே. (சகூகூ)

அண்டார் தமக்கோ ரரியே யரிமுகனே
விண்டா னடைந்தா யெனவே விளம்புகின்றார்
தண்டா ரகலத்துத் தாரகனை மக்களுடன்
கண்டாயோ யானிங் குறுதுயரங் காணுதாய். (சஎ0)

உண்டிக் கடனு மொருவயிற்றோ செய்கடனு
மெண்டிக்கும் போற்றியிட வினறுகழித் தேகினைநீ
யண்டத் தவரை யலைத்தவரு முன்றிறலைக்
கண்டுற் றிடவே கடனறேன நீயினே. (சஎக)

உற்றதுணை நீயென் னுயிர்நீ யுணர்ச்சியுநீ
சுற்றமுநீ தாதையுநீ யென்னிளைய தோன்றலுநீ
நற்றவமு நீயென்று நானினைந்தே னீயதனைச்
சற்றுநினை யாமற் றனித்திருக்கக் கற்றாயோ. (சஎஉ)

பொற்றைக் கயலிருந்த பூட்கைமுகன் றுஞ்சியபின்
னொற்றைப் புயம்போ யுளந்தளர்ந்து வைகினன்யா
னிற்றைப் பகனீ யிறந்தா யரிமுகனே
மற்றைப் புயமு மிழந்தேன் வறியேனே. (சஎரு)

என்னத் தனதண்டமெங்கு செவிபடத்
தன்னத் தனியோ னரற்றுமொலி தாங்கோரா
நன்னத் தவனு நளினத் தினிலுதித்த
வன்னத் தவனு மகத்தவனு மார்த்தனரே. (சஎச)

இத்தன்மை மன்ன னிரங்கித் தெளிந்தெழுந்தே
யுத்துங்க மிக்க வொருதன் றவிசேறி
நித்தன் குமரனுடனோபோய்ச் சமரியறச்
சித்தந் தனிலே நினைந்துசினஞ் செய்தனனே. (சஎரு)

ஆகூ திருவிருத்தம் - உ,ருகூஅ.

### வசனம்.

(சூரபன்மன் இவ்வாறு துக்கித்து, எதிரேயிருந்த சிலரைநோக்கி, நீங்கள் இந்தவுடம்பைச் சேமித்துவையுங்கள், நான் என்பகைவரையெல்லாங்கொன்றுயாகஞ்செய்து என்மகனை யெழுப்பிக்கொள்வேன் என்றுசொன்னான். அவரும் அவ்வாறே சேமித்தார். பிறகு சிலதூதரைநோக்கி, என்தம்பியாகிய சிங்கமுகாசுரனையழைத்து வாருங்களென்றான்) அவர்களும் அப்படியேபோயழைத்தலும் அவன் வந்து வணங்கிநின்றான். அவனைநோக்கி, நீபோய்ச் சண்முகனை வென்றுவாவென்று கட்டளையிட, அவனும் அப்படியேயாகுகவென்று விடைபெற்றுத் தன்மாளிகைக்குப்போய் ஊனருந்தி, தேரேறி இலக்கம் வெள்ளம் அவுணர்கள்சூழச்சென்றான். அவன் வருவதைக்கண்ட தேவர்கள் சண்முகப்பெருமான் சந்நிதியடைந்து விண்ணப்பஞ்செய்ய, அவர் போர்க்கெழநினைத்தலும், வீரவாகுதேவர் வந்துவணங்கி, நானேபோய் அந்தச் சிங்கமுகனை வென்றுவருகிறேனென்றுசொல்ல, அதற்கு அவர் புன்முறுவலசெய்து முன்னாநீ சேனையோடுபோகக்கடவாயென்று கட்டளையிட்டனர். இடுதலும் அவர் தம்மை நால்வகைப்படைகளுஞ் சூழச்சென்று போர்க்களங்குறுகினார். இருதிறப்படைகளும கைகலந்து போர்செய்தன. அநேகர் மடிந்தார்கள். அநேகர் ஓடினார்கள். பூதருள் சிஙகமுகன் என்பவன் தண்டாயுதங்கொண்டு அவுணரை மிகவும்வருத்த, அவுணரில் தசமுகன் என்பவன் வந்தெதிர்த்துப் போர்புரிந்தான். இப்படி அவுணவீரரும் பூதவீரரும் அவுணப்படைகளும் பூதப்படைகளும பலவகையான ஆயுதங்களைக்கொண்டு போர்புரிந்தார்கள். அப்பொழுது துன்முகன் என்னும் அவுணவீரன் மாயையால் பலவுருவங்கொண்டு போர்செய்ய, வீரமார்த்தாண்டன் என்னும பூதவீரன் ஞானக்கணைதொடுத்து அவனதுமாயையை அழித்து வெளியாக்கி ஆயிரமபாணங்களை யேவினான், அவை படுதலும் அவன் மூர்ச்சித்து, பிறகு தெளிந்தெழுந்து ஓடிப்போனான்.

அதைக்கண்ட சிங்கமுகாசுரன் பூதர்களைச் சிதறவடித்தான், அவர்கள் மரங்களையும் மலைகளையும் பிடுங்கி அவன்மேலெறிய, அவையாவும் அவனது மூச்சினால் அழிந்துபோயின. பூதவீரர்களில் அக்கினிககண்ணன் என்பவன், சிங்கமுகாசுரனுக்கெதிரேசென்று அவன்மேல் ஒரு தண்டாயுதத்தை யெறிந்தான். அது அவன் தேர்ப்பாகனைக்கொன்றது. சிங்கமுகாசுரனும் ஒரு தணடாயுதததை அக்கினிக்கண்ணன்மேலெறிந்து அவனை மூாசசையடையசசெய்தான். அதைக்கண்ட பூதவீரரில் சுமாலி, தணடி யென்னும இருவரும் வந்தெதிர்க்க, அவர்களை ஈயை நசுக்குவதுபோல நசுக்கித் துடைத்துவிட்டான். பிறகு வீரரெணமரும இலக்கத்தவரும் வந்தெதிாத்து அநேகமபாணங்களை யேவினா, அவைகளைப்பொடியாக்கி அவர்களையும் தோற்றோடும்படி செய்தான். இதைககணட வீரவாகுதேவர் அநேகமாயிரம் பாணங்களைவிடுத்து அவுணப்படைகளைச சின்னபின்னப்படுத்தினார். அதைக்கண்ட சிங்கமுகாசுரன்மக்கள் நூறுபேரும்வந்து இவரைப்பிடிக்க முயன்றார்கள், அவர்களையெல்லாம் தமது வாட்படையால் வீசிககொனறா. அவரைச் சிஙகமுகாசுரன் நீயாரென்றுகேட்க, வீரவாகுதேவா என்னை இன்னானென்றறியாய்போலும், நான் சணமுகப்பெருமானுக்குததொணடன், முனனேவந்து உங்களூரையழிததவன் நானே, இன்னமும் உங்களையெலலாம் கொலலவேவந்திருக்கிறேன், என்பெயர் வீரவாகு, எனறார்.

இதுகேட்ட சிங்கமுகாசுரன் வீரவாகுதேவரைநோக்கி, இதோ உன்னையொருநொடியில் உயிர்வாங்குகிறேன் பாரென்று ஒருதணடாயுததததை அவர்மே

லெறிந்தான். அதை வீரவாகுதேவர் சிலபாணங்களையேவிக் கண்டித்தார். மேலும் அவன் தலைதோறும்தைக்கும்படி ஆயிரம்பாணங்களை விடுத்தார். அவை அவன் தலைகளிற்பட்டு முறிந்துபோயின. பிறகு அவன் சூலமொன்றை விடுத்தான், அதை வீரவாகுதேவர் வாளாயுதத்தால் வெட்டித்தள்ளினர். அப்போது அவுணன் தன் மாயாபாசத்தால் வீரவாகுதேவர்முதலிய எல்லாரையும் பிணித்து திருப்பாற் கடலிலுள்ள உதயகிரியிலிட்டான். இதைக்கேட்ட சண்முகப்பெருமானவர் தேரேறிச் சிங்கமுகனுக்கெதிரேதோன்ற, அவன் அவரைநோக்கி, எங்களுக்கும் தேவர்களுக்கும் இயற்கையாகவே பகையுண்டு, நீ யெங்களுக்குப் பகைவனல்லை, நீ யெங்களோடு போர்செய்யவந்ததற்குக் காரணமென்னென்று கேட்க, வலியார் மெலியாரைவருத்தினுல் அவர்களைத் தண்டிப்பதே யெமது விரதம் ஆதலால், தேவர் களைவருத்தின உங்களைத் தண்டிக்கவந்தேனென்றார். அப்படியானுல் போர்செய்ய லாமென்று சிங்கமுகன்சொல்ல, சண்முகப்பெருமான் அவன்மார்பிற் பட்டுருவும் படி ஒருகணையை விடுத்தார். அவன்மார்பை அக்கணைதொளைத்துச் சென்றவழி யாகவே, முன்னே அவன்வயிற்றிலிட்டுக்கொண்ட பூதவீரரெல்லாரும் வெளிப் பட்டனர். பிறகு ஒரு பாணத்தையேவி அவனது மாயாபாசத்தையறுத்து அத னுல் கட்டுப்பட்டிருந்த வீரரெல்லாரையும் மீட்டுக்கொண்டார். சிங்கமுகனையும் மூர்ச்சிக்கச்செய்தார். அவன் மூர்ச்சைதெளிந்தெழுந்து, சண்முகப்பெருமான்மீது அநேகமாயிரம் பாணங்களையேவ, அவர் அவற்றையெல்லாம் அழித்து, அவன்விடு த்த சூலப்படையையுமறுத்தார். பிறகு அவனெறிந்த தண்டாயுதத்தையறுத்து அதைப்பிடித்திருந்த அவன்கையையுமறுத்தார். அறுபட்டகை வளரப்பெற்று இவரைப்பிடிக்கவரவே அவன் தலைகள் அறும்படி மூவாயிரங்கணைகளையேவ, அத் தலைகள் அறுபட்டும் மீளமுளைத்தன. இவ்வாறு நெடுநேரம் போர்செய்வதுகண்ட சண்முகப்பெருமான் ஒரு வயிரப்படையேவி அவனுயிரைக்கவர்ந்தார். அவனுயிர் கவர்ந்த வயிரப்படை ஆகாயகங்கையில் நீராடிக் குகப்பெருமான்கையில் வந்து சேர்ந்தது. தேவர்கள் பூமாரிபொழிந்தார்கள். முருகக்கடவுளும் பாசறையிற் சேர்ந்தார். சிங்கமுகன் இறந்ததைத் தூதரால் கேள்விப்பட்ட சூரபன்மன் மிகவுந் துக்கித்துப் புலம்பி யழுதுகொண்டிருந்தான்.

சிங்கமுகாசுரன்வதைப்படலம் முற்றிற்று.

---

# சூரபன்மன்வதைப்படலம்.



கொற்ற வேற்படை பரித்திடு மாயிர கோடி
யொற்றர் தங்களை நோக்கியே சூரனு முரவோன்
மற்றெ னுட்சியா மண்டங்க ளெங்கணும் வைகிச்
சுற்று தானையைத் தம்மினே கடிதெனச் சொன்னான். (க)

சொன்ன காலையி னன்றென வணங்கியே தூதர்
பன்ன ருங்கதி கொண்டனா் விண்டனா் படர்ந்து
பொன்னின் மேருத மண்டங்க ளிடைதொறும் புகுந்து
மன்னர் மன்னவ னன்பணி முறையினை யுரைத்தார். (உ)

வகுத்த காலையி லாண்டுறை யவுணமன் னவர்க
டொகுத்த நாற்பெருந் தானையங் கடலொடுந் துவன்றி
மிகுத்த வண்டத்தின் புடைதொறும் புடைதொறு மேனுட்
பகுத்து வைத்திடும் வாயிலி னெறிகளாற் படர்ந்தார். (ரு)

முந்தை யண்டத்தி னெறிதனின் முழங்கிருஞ் சேனை
வந்து வந்திவட் செறிவன விதியொடு மாருய்ச்
சுந்த ரங்கெழு மாயனிவ் வுலகுயிர் துய்ப்ப
வுந்தி யின்வழி யங்கவை தோன்றுமா ரொப்ப. (௬)

பூதம் யாவையு முயிர்களும் புவனமுள் ளனவும்
பேத நீங்கிய சுருதியா கமங்களும் பிறவு
மாதி காலத்தி னநாதியா மெம்பிரா னளப்பில்
பாத பங்கயத் துதிப்பவும் போன்றன பகரின். (௭)

இனைய தன்மையா லண்டத்தி னெறிதனி லேகும்
வினைக ருங்கழ லவுணர்தம் படையிவண் வரலுங்
கனலி தன்சுடர் மறைந்தன நடுங்கினன் கனலு
மனிலன் ருனுமெய் வியர்த்தன னெருக்கமுற் றயர்வான். (௮)

ஆர்த்த வோசையா லகிலமுந் துளங்கிய வவுணர்
கார்த்த மெய்யொளி கதுவலா லிருண்டன ககனந்
தூர்த்த பூழியா லாழிகள வறந்தன துணைத்தாள்
பேர்த்து வைத்திடு தன்மையா லண்டமும் பிளந்த. (௯)

கூடு மிப்பெருந் தானையை நோக்கிமெய் குலைவுற்
றோடு தற்கிட மின்றிநின் றிரங்கின ரும்பர்
வீடு ஞானென வாசவன் மருண்டனன் விதியு
நீடு மாயனு முடிவதென் னேவென நினைந்தார். (௧௦)

பூத லந்தனி லம்பர நெறிதனிற் புடைசூழ்
மாதி ரங்களி லளக்கரில வரைகளின் வழியிற்
பாத லங்களிற் பிறவினி லவுணர்தம் படைக
ளேதும் வெள்ளிடை யின்றியே சென்றன வீண்டி. (௧௧)

மலர யன்பத மால்பத முனிவர்கள் வைகு
முலகம் வாசவன் ஞென்னக் ரேனையோ ருறையு
ளலரி யாதியர் செல்கதி பிலங்களி லனிகம்
பலவு நின்றன செல்லிடம் பெறுதபான் மையினல். (௧௨)

மாறி லாதன தொல்லையண் டங்களின் வந்த
வீறி லாதம்தார் தூசிகள் படர்ந்திடு மெல்லை
நூறு கோடியோ சனைகளென் றறிஞாக ளுவன்றார்
வேறு பின்வருந் தானையின் பெருமையார் விதிப்பார். (௧௩)

குறுமை யாமுயிர் வாழ்க்கையர் கொண்டதொல் வளம்போற்
சிறுமை யோவிது விரித்திட வவுணர்கோன் சேனை
யறிஞர் கூறிய பெருந்தொகை தன்னினு மடங்கா
பிறிது மற்றிதற் குவமையு மொன்றிலை பேசின். (௧௪)

அஞ்சு பட்டிடு பூதங்கள் பல்லுரு வமைந்து
நெஞ்சு பட்டிடு முயிர்கொடு நேருமே னிகரு
மஞ்சு பட்டிடு பொருப்பெலாஞ் சூறைமுன் மயங்கும்
பஞ்சு பட்டிட நடந்திடு தூசிமுற் படையே. (௧௩)

அந்த மின்றியே யகன்புவி கொண்டவண் டத்தில்
வந்தி டுந்திறற் படைகளின் பெருமையார் வகுப்பார்
முந்து தூசிகண் மகேந்திரப் பெருநகர் முடி
யிந்த வண்டத்தி னிடமெலா நிறைந்தன விமைப்பில். (௧௪)

ஆன காலையி லொற்றர்போய்ச் சூரனை யடைந்து
பானன் மெல்லடி கைதொழு தையநீ படைத்த
சேனை வந்தய னின்றன தூசிமுற சென்று
வானு லாவுபே ரண்டத்தை நெருக்கின மன்னோ. (௧௫)

என்னு மெல்லையி னன்றென வவுணர்கோ னெழுந்து
தன்ன தாகிய வுறையுள்போய்த் தடம்புன லாடித்
துன்னு மைவகை யுணவுட னறுசுவை நுகர்ந்த
வன்ன முண்டன னஞ்சுகொன் மருந்துகொ லதுவே. (௧௬)

நீற ணிந்தன னெற்றிமெய்ந் நிறைவிரை களபச்
சேற ணிந்தனன் பூந்தொடை பங்கியிற் செறித்தான்
மாறில் பொற்சுடர்க் கலையுட னணிகலன் மாற்றி
வேறு வேறுநன் கினியன புனைந்தனன் விரைவில். (௧௭)

ஈசன் மாப்படை யேனையோர் பெரும்படை யாவு
மாசி லாயிர கோடிதேர் செலுத்தியே யவையுங்
கேச ரித்திறல் யானமுங் கேடில்பொற் றேரும்
பாச னத்திற லவுணர்கொண் டேகுவான் பணித்தான். (௧௮)

ஆங்க வெல்லையிற் சூரபன் மாவெனு மவுணன்
பாங்கர் வந்திடு வலவர்தந் தொகையினைப் பாரா
வோங்கு மோர்தடந் தேரினைக் கொணர்திரென் றுரைப்பப்
பூங்க ழற்றுணை வணங்கியே நன்றெனப் போனார். (௧௯)

வாட்டு கேசரி யெழுபதி னாயிரம் வயமாக
கூட்ட மங்கனே ரெழுபதி னாயிரங் கூளி
யீட்ட மாகிய தெழுபதி னாயிர மீர்ப்பப்
பூட்டி நன்குறப் பண்ணினா ராங்கொரு பொலன்றேர். (௨௦)

மண்ட லத்தினு மான்றபே ரிடத்தது மருங்கிற்
றெண்டி ரைக்கட லாமென வார்ப்பது செறிந்த
வண்ட மாயிர கோடியுந் தன்னிடத் தாற்றிக்
கொண்டு நின்றிடும் வலியது மடங்கலங் கொடித்தேர். (௨௧)

முடியு மெல்லையி லெழுதரு மருத்தினு முந்திக்
கடிது செல்வது சென்றிடு விசையினாற் ககுபத்
தடநெ டுங்கிரி யலமரத் தபனருங் குளிர
வடவை யங்கிகள் விளிந்திடப் புரிவதம் மான்றோர். (௨௨)

ஏழு நேமியு மிடைப்படு தீபமும் யாவுஞ்
சூழு கின்றபே ரடுக்கலு மொன்றிய தொடர்பிற்
கேழில் பன்மணி யோவியப் பததிகள் கெழுவு
மாழி தாங்கிய வண்டமொத் திலங்கிய தகன்றோர். (உங)

தொழுத குந்திற லவுணர்கோன் வேள்வியிற் றுஞ்சி
யெழுவ தாகிய வெல்லையிற் றோன்றிய தெதிர்ந்தார்
குழுவி ரிந்திடத் துரப்பது நான்முகக் குரிசி
லழியு நாளினு மழிந்திடா திருப்பதவ் வகன்றேர். (உச)

கண்ண கன்படை யளப்பில பரித்தது காமர்
விண்ண வர்க்குள வலியெலாங் கொண்டது மேனு
மெண்ண னல்கிய விந்திர ஞாலமு மனைய
தெண்ணின் மேற்படு மியாணர்பெற் றுடையதவ் விரதம். (உரு)

அனைய தாகிய தேரினை வலவர்கொண் டணைந்து
தினக ரன்றனை வெகுண்டவன் றுனைதமுன் செலுத்தத்
துனைய மற்றதி லிவர்ந்தன னிவர்தலுந் தொழுது
புனைதி வாகையென் றவுணர்கள் பூமழை பொழிந்தார். (உசா)

பொழிந்த காலையில வலவர்க ளங்கதிற் புக்குக்
கழிந்த சீர்ததியா ஞனையாற் றேரினைக் கடவத்
தழிந்த ழீமெனப் பல்லிய மியம்பின சகங்க
ளழிந்த நாளெழு கடலென வவுணர்க ளார்த்தார். (உஎ)

அங்கி யன்னபொற் படியகங் கோடிக மடைப்பை
திங்கள் வெண்குடை கவரிகொண் டொழுகினா ரிலதா
துங்க மிக்கவன் சீத்தியு மானையுந் தொடர்ந்து
மங்க லந்திக ழுருக்கொடு சூழ்ந்திடும் வகைபோல். (உஅ)

அண்ணன் மேவரு கோநக ரெல்லையு ளடைந்த
வெண்ணின் மாபபெருஞ் சிகரியின் வாயில்க ளிகந்தே
கண்ண கன்ஞெள்ள லாயிர கோடியுங் கடந்து
வண்ண மாமணிக் கோபுர முதற்கடை வந்தான். (உகூ)

வேறு.

தானவர் கோமகன் றடம்பொற் றேரொடு
மாநகர் முதற்கடை வாயில் போதலு
மானது நோக்கியே யங்கட் சூழ்தரு
சேனைக ளார்த்தன வுடுக்கள் சிந்தவே. (௩0)

ஞெலித்திடு பரவையி னீல வெவ்விட
மொலிததெழுந் தாலென வுலப்பி றானைகள்
கலித்தன படர்ந்தன கண்ண கன்புவி
சலிததது கொடியரைத் தரிக்கொ ணாமையால், (௩க)

நேரியம் பரியதோர் கிசாளஞ் சல்லிகை
பேரியம் பணவயிர் பிறங்கு தண்ணுமை
தூரியங் காகளந் துடிமு தற்படு
சீரியம் பலவுட னியம்பிச் சென்றவே. (௩உ)

சேயின குஞ்சிகள் செறிந்த தானவர்
பாயின தானையிற் படர்ந்த பூழிகள்
வாயின பரவைமேல் வடவைத் தீவிராய்ப்
போயின நாளெழு புகையைப் போன்றவே. (௩௩)

வானினு மண்ணினு மாதி ரத்தினுந்
தானிறை கடலினுந் தணப்பின் றாகியே
மேனிறை பூழிகண் மிடைய வெங்கணுஞ்
சோனைகொள் பின்பனித் தூவல் போன்றவே. (௩௪)

சூரனி கத்தெழு தூளி யங்கக
ராரகி லாவியும் யாரு மாடிய
பூரிகொள் சுண்ணமும் பொருந்திப் போவது
காரின மின்னொடு கடலுண் டேகல்போல். (௩௫)

திண்டிறற் கரிகளிற் றேரில் வெண்கொடி
மண்டுறு பூழிதோய் வானிற் செல்வன
கொண்டலி னிருந்துவிற கொக்கின் மாலைக
டண்டுளி யுறைபபுழிப் படருந் தன்மைபோல். (௩௬)

படைவகை திசையெலாம் படரப் பாயிரு
ளடைவது சூரறிந் தண்டம் யாவினு
மிடைதரு கதிர்களை விளிக்க வந்தெனக்
குடைநிரை யெங்கணுங் குழுமு கின்றவே. (௩௭)

வெம்பரி கரியுமிழ் விலாழி மாமத
மியபரி னகரெலாம் யாறறி னேகலா
லும்பர்மற் றல்லதை யொருவன் றானைக
ளமபுவி சென்றிடற் கரிய தானதே. (௩௮)

இவ்வகை தானைக ளீண்டிச் சென்றிடத்
தெவ்வலி யவுணர்கோன் செம்பொற் றேரின்மேன்
மைவரை மேருவின் வருவ நாமெனக்
கவ்வையி னமர்புரி களரி யேகினான். (௩௯)

பூசலி னெல்லையிற் புரவ லன்செலத்
தூசிய தாகியே தொடர்ந்த தானைக
ளீசன தருண்மக னினிது வைகிய
பாசறை சூழ்ந்தன படியும் வானுமாய். (௪0)

உரற்றிய கணமழை யும்பர் சூழ்ந்தென
விரறனொடு சூழ்படை யீட்ட நோககியே
மரற்றுறு பலங்களில் வாரி கண்வர
வரறறினர் வெருவின ரமரர் யாவரும். (௪௧)

அழுங்கினன் புரந்தர னகிலம் யாவையும்
விழுங்குறு மிருவரும் விம்மி னருளம்
புழுங்கினர் வீரர்கள் பூத ரேங்கினர்
கொழுங்கன லிடைப்படு விலங்கின் கொள்கைபோல். (௪௨)

ஆவதோர் காலையி லரியு நான்முகத்
தேவனு மேனைய திசையி னோர்களு
மூவிரு முகமுடை முதல்வன் றன்னிரு
பூவடி பணிந்திவை புகறன் மேயினார். (௪௩)

வேறு.*

அந்தமி லாத வண்ட மாயிரத் தெட்டுத தன்னில்
வந்திடு தானை யோடு மாபெருஞ் சூர பன்ம
னுந்திய தேரின் மேலா னுறுசமர் புரிவான் போந்தான்
முந்திய தூசி நந்தம் பாசறை மொய்த்த தென்றார். (௪௪)

என்னலு முறுவல் செய்தாங் கிலங்கெழிற் றவிசின் வைகும்
பன்னிரு கரத்து வள்ளல் பவனனைக் குறிப்பி னோக்க
முன்னம துணர்ந்து வல்லே முளவுகோல் கயிறு பற்றிப்
பொன்னவிர் மனவே கப்போர்ப் புரவிமான் றேர்மு னுய்த்தான். (௪௫)

உய்த்திடு கின்ற காலத் தொய்யென வெழுந்து காமர்
புத்தலர் நீபத் தாரான் புகர்மழுக் குலிசஞ் சூலஞ்
சத்திவாள் பலகை நேமி தண்டெழுச் சிலைகோல் கைவேல்
கைத்தலங் கொண்டா னென்னி னவன்றவங் கணிக்கற் பாற்றோ. (௪௬)

மாறிலா வருக்க னொப்பண் வைகிய பரம னேபோ
லாறுமா முகத்து வள்ள லலங்குளைப் புரவி மான்றே
ரேறினன் வீர வாகு விலக்கரோ டெண்ம ராகும்
பாறுலாங் குருதி வேலார் பாங்கராய்ப் பரசி வந்தார் (௪௭)

இராயிர வெள்ள மாகு மெண்டொகைப் பூதர் யாரு
மராமரம் பிறங்க லீட்டம் வரம்புறு படைகள் பற்றி
விராயினர் சூழ்ந்து சென்றார் விரிஞ்சனே முதலோர் யாரும்
பராவொடு புடையி னின்று பனிமலர் மாரி தூர்த்தார். (௪௮)

தூர்த்திடு கின்ற காலைச் சுருதியின் றொகைக்கு மெட்டாத்
தீர்த்தன்மான் றேர்மே லாகித் திண்புவி யண்டந் தன்னிற்
போத்திடு முயிர்கண் மாற்றப் பின்னுறு முன்னோன் போல
வார்த்திடு தானை வெள்ளத் தவுணர்கண் மீது போனான். (௪௯)

ஆங்கது காலை தன்னி லாறிரு தடந்தோ ளையன்
பாங்குறு பூதர் யாரும் பாரொடு திசையும் வானு
நீங்குத லின்றிச் சூழு நேரலன் படையை நோக்கி
யேங்கினர் தொல்லை வன்மை யிழந்தன ரினைய சொற்றார். (௫0)

தீயன புரியுஞ் சூரன் செய்திடு தவத்தாற் பெற்ற
வாயிர விருநான் கண்டத் தவுணரும் போந்தா ரன்றே
யேயதோ ரண்ட மொன்றி லிருந்தன ரிவர்மற் றன்றான்
மாயிருந் திசையும் விண்ணும் வையமுஞ் செறிந்து நின்றார். (௫௧)

வரத்தினிற் பெரியர் மாய வன்மையிற் பெரியர் மொய்ம்பி
னுரத்தினிற் பெரியர் வெம்போ ருக்கத்திற் பெரிய ரெண்ணில்
சிரத்தினிற் பெரியர் சீற்றச் செய்கையிற் பெரியர் தாங்குங்
கரத்தினிற் பெரியர் யாருங் காலனிற் பெரிய ரம்மா. (௫௨)

மாகத்தின் வதிந்த வானோர் வன்மையும் வளனும் வவ்விச்
சோகத்தை விளைத்து வெம்போர் தொடங்கியே தொலைவு செய்தோர்
மோகத்தின் வரம்பாய் நின்றோர் முழுதுயிர்க் கடலுண் வேட்கை
மேகத்தின் வலிந்த தீயோர் விரிஞ்சனேற் றிடினும் வெல்வோர். (௫௩)

கூற்றெனு நாமத் தண்ணல் கொண்டிடு மரசுஞ் செங்கேழ்
நூற்றிதழ்க் கமல மேலா னுனிதத்தனன் விதிக்கு மாறு
மாற்றிடுஞ் செய்கை வல்லோர மாநில முழுதுண் டாலு
மாற்றரும் பசிநோய் மிக்கோ ரண்டங்க ளலைக்குங் கையோர். (௫௪)

வெங்கனல் சொரியுங் கண்ணூர் விரிகடற் புரைபேழ் வாயார்
பங்கமில் வயமேற கொண்டோர் பவத்தினுக் குறையு ளானோர்
செங்கதிர் மதியந் தோயுஞ் சென்னியா செயிர்தீ ராறற
லங்கத விறையும் பேர வடிபெயாத துலவும வெய்யோர். (௫௫)

அங்கமா முகத்தி னன்போ லடைந்தனர் பல்லோர் யாளித்
துங்கமா முகத்தி னன்போற றோன்றினர் பல்லோர் சூழி
வெங்கைமா முகத்தி னன்போன் மேயினர் பல்லோர மேலாஞ்
சிங்கமா முகத்தி னன்போற் றிகழ்ந்தனர் பல்லோ ரன்றே. (௫௬)

மதுவொடு கைட பன்போல் வந்தனர் பல்லோர யாருந்
துதியுறு புகழ்ச்சுந் தோப சுந்தரிற் செறிந்தோர பல்லோ
ரதிர்கழற் சலந்த ரன்போ லார்த்தனர் பல்லோ ராறற
முதிர்சின மகிடன் போல மொய்த்தனர் பல்லோ ரம்மா. (௫௭)

அரன்படை பரித்தோர் பல்லோ ரம்புயத் தவிசின் மேவும்
வரன்படை பரித்தோர் பல்லோர் மழுவொடு தண்டந் தாங்குங்
கரன்படை பரித்தோர் பல்லோர் காலபடை பரித்தோர் பல்லோர்
முரன்படை பறித்த கொண்டன் முதுபடை பரித்தோர் பல்லோர். (௫௮)

ஆனதொ ரவுண வெள்ள மநந்தகோ டியதா மென்றே
தானுரை செய்வ தல்லாற் சாற்றவோ ரளவு முண்டோ
வானமு நிலனு மேனை மாதிர வரைபபு மெங்குஞ்
சேனைக ளாகிச் சூழின் யாமென்கொல் செய்வ தம்மா. (௫௯)

ஓரண்டத் தவுணர் போரா வுலைந்தயா மொருங்கே யெல்லாப்
பேரண்டத் தோருந் தாக்கிற் பிழைப்புறு பரிசு முண்டோ
காரண்ட வளக்கா சாடிக் கனவரை யெறியுங் கால்க
ளேரண்டச் சூழல் புக்கா லவைபின்னு மிருக்க வற்றோ. (௬0)

ஒருவரே யெம்மை யெல்லா முரப்பியே துரப்பர் பின்னை
யிருவரே சென்று தாக்கின் யாரிவ ணுய்ய வல்லார்
தருவரே யனைய துப்பிற் சூழுறு மவுணர் யாரும
பொருவரே யென்னி னோர்போய்ப் பூசலார் தொடங்கற் பாலார். (௬௧)

எல்லையி லாற்றல் கொண்ட வெம்முடைத் தலைவர் யாரு
மல்லன வீரர் தாமு மவுணரை யெதிர்க்க லாற்றார்
கலலொடு மரத்தால் யாமோ வவர்திறல் கடக்க வல்லே
மொல்லைநம் முயிரு மின்றே யொழிந்தன போலு மன்றே. (௬௨)

நாற்படை யவுணர் தாக்கி னுமெலாம் விளிதும் வீரர்
காற்படு பூளை யேபோற் கதுமென விரிவர் வாகைப்
பாறபடு திறலோ னிற்கிற் பழிபடு மினைய ரோடும்
வேற்படை யொருவ னன்றி வேறியா ரெதிர்க்க வல்லார். (௬௩)

நீடுறு திசையும் வானு நிலனும்வெள் ளிடைய தின்றிப்
பாடுற வளைந்து கொண்டார் பற்றல ரதனால் யாமு
மோடியு முய்ய லாகா வொல்லுமா றவரைத் தாக்கி
வீடித லுறுதி யென்றே விளம்பிமே றசேற லுற்றார். (௬௪)

மற்றது காலை தன்னின் மாபெரும் பூத சேனைக்
கொற்றவர் பலரு மேனை வீரர்தங் குழுவி னோரும்
வெற்றிகொண் மொய்ம்பன் றானு மிடைந்துசூழ் படையை நோக்கி
யிறறன கொல்லோ நந்தம் வன்மையென் றெண்ண முற்றார். (௬௫)

அண்டர்கண் முதலவன் றானு மமரரு மகில மெங்குந்
தண்டுத லின்றிச் சூழுந் தானவ ரனிக மெல்லாங்
கண்டனர் துளங்கி யஞ்சிக் கவன்றன ரவருட் காரி
வண்டுளை வலங்கற் சென்னி வானவற் கினைய சொல்வான். (௬௬)

ஆண்டகை முருகன் றன்மே லாயிர விருநா லண்டத்
தீண்டிய தானை யெல்லா மிறுத்தன விவுறறி னோடு
மூண்டம ரியற்றி வெல்ல வூழிநாண் முடியு மென்றான்
மாண்டிடு கின்ற தெங்ங னவுணர்கண் மன்னன் மன்னோ. (௬௭)

அடுதிறல் வலிபெற் றுள்ள வவுணராம் பானுட் கங்குல்
விடிவது மமரா தங்கள வெஞ்சிறை வீடு மாறு
நெடியதொல் வெறுக்கை தன்னை நீங்கிய நமது துன்ப
முடிவது மில்லை கொல்லோ மொழிந்தருண் முதல்வ வென்றான். (௬௮)

இந்திர னினைய தன்மை யிசைத்தது மிலங்கை காத்த
வைந்திரு சென்னி யானை யடுதிறல் கொண்டு நின்ற
செந்திரு மருமத தண்ண றேவரை யளிக்குந் தொல்லோன்
புந்திகொள கவலை நாடி யினையன புகலா நிற்றான். (௬௯)

காலமாய்க் கால மின்றிக் கருமமாய்க் கரும மின்றிக்
கோலமாய்க் கோல மின்றிக் குணங்களாய்க் குணங்க ளின்றி
ஞாலமாய் ஞால மின்றி யநாதியாய் நங்கட் கெல்லா
மூலமா யிருந்த வள்ளன் மூவிரு முகங்கொண் டுற்றான். (௭0)

குன்றுதொ ளாடல் செய்யுங் குமரவேண் மேரு வென்னும்
பொன்றிகழ் வெற்பின் வந்து புவனங்கண் முழுது மங்கட்
சென்றுறை யுயிர்கண் முறறுந் தேவருந் தன்பாற் காட்டி
யன்றொரு வடிவங் கொண்ட தயாததியோ வறிந்த நீதான். (௭௧)

பொன்னுரு வமைந்த கஞ்சப் புங்கவ னாகி நல்கு
மென்னுரு வாகிக் காக்கு மீசன்போ லிறுதி செய்யு
மின்னுரு வென்ன யார்கமும வெளிபபடை போலு மன்னன்
றன்னுரு மறைக ளாலுஞ் சாறறுதற் கரிய தன்றே. (௭௨)

பாயிருங் கடலிற் சூழ்ந்த பற்றலர் படையை யெல்லா
மேயெனு முன்னம் வீட்டுஞ் சிறுவனென் றெண்ண லைய
வாயிர கோடி கொண்ட வண்டத்தி னுயிர்கட் கெல்லா
நாயக னவன்கா ணுஞ்செய் நல்வினைப் பயனால் வந்தான். (எங)

சூரனே முதலோர் தம்மை யிமைப்பினிற் றொலைக்க வுன்னின்
மூரலா லடுவன் கொண்ட முனிவினா லடுவன் வாய்மைச்
சீரினா லடுவ னாட்டச் செய்கையா லடுவ னென்றா
னேரிலா முதல்வன் வன்மை யாவரே நிகழ்த்தற பாலார். (எச)

பாரிடர் சேனை யோடு படர்ந்தது மிலக்கத் தொன்பான்
வீரர்கள் புடையிற் போற்ற மேயதும் படைகள பற்றிச்
சூரனை யடுவான் வந்த சூழ்ச்சியுந் தூக்கின் மாதோ
வாரண முதலா மேலோர்க் கனைத்துமோ ராட லேகாண். (எரு)

துய்யதோர் குமர னேபோற் றோன்றிய முதல்வன் சூழ்ந்த
வெய்யதா னவரை யெல்லாம் விரைந்துட னறுத்து நீக்கிக்
கையில்வே லதனாற் சூர னாற்றலுங் கடக்கும் யாது
மையுறேல் காண்டி யென்றா னறிதுயி லமர்ந்த பெம்மான். (எசு)

மாலிவை பலவுங் கூறி மகபதி யுளத்தைத் தேற்றி
யோலமோ டவுண வெள்ள மும்பருஞ் செறிந்த செவ்வேள்
பாலுற நின்று போரின் பரிசினைப் பார்த்து மென்றே
வேலுடை முதலவன் பாங்கா விண்ணவ ரோடும் போந்தான். (எஎ)

வேறு.

அன்ன தன்மைகண் டறுமுகன் முறுவல்செய் தடுபோ
ருன்னி யேகலும் வானமும வையமு மொன்றாத
துன்னு தானவப் பெருங்கட லாததமர் தொடங்க
முன்ன மேகிய பாரிடா யாவரு முரிந்தார். (எஅ)

முரிந்த காலையிற் பூதரின் முதல்வர்கண் முரட்போர்
புரிந்து சாய்ந்தன ரிலக்கரோ டெண்மரும் பொருதே
யிரிந்து நீங்கின ரின்னதோர் தன்மைக ளெலலாந்
தெரிந்து திண்டிறன் மொய்ம்பினோன் சிலைகொடு சேர்ந்தான். (எகூ)

சேர்பு தன்சிலை வாங்கியே சரமழை சிதறி
நேர்பு சூழ்ந்திடு மவுணர்க ணெடுந்தலை புயங்கண்
மார்பு வெங்கரங் கழலடி வரைகளாய் வீழ
வீர்பு நின்றம ரியற்றினன் சிறுவரை யிகலி. (அ0)

மாக மேனிமி ராயிர கோடிமா கடலு
ளாக மொன்றுசென் றலைத்தென நண்ணல ரெதிர்போ
யாக வம்புரிந் தலைப்புறுத தன்மைகண் டழுங்கி
யேக நாயகன் றனதுபால் வந்தன னிளவல். (அக)

காலை யங்கதி லவுணர்தந் தானையோர் கணத்தின்
சால மோடின பூதரிற் றலைவருஞ் சாய்ந்தார்
கோல வெஞ்சிலை வீரரு முரிந்தனர் குழவிப்
பால னேயிவண் வருமெனச் சூழ்ந்தனர் பலரும். (அஉ)

தண்டு நேமியுங் குலிசமுஞ் சூலமுந் தனுக்க
ளுண்டு மிழ்ந்திடு வாளியு முடம்பிடித் தொகையும்
பிண்டி பாலமுங் கணிச்சியும் பாசமு பிறவு
மண்டர் தந்திடு படைகளுஞ் சொரிந்துநின் றூர்த்தார். (அ௩)

பாரி டங்களின் படைபெலா நெக்கதும் பாங்கர்
வீர மொய்ம்பனு மிளைஞரும் வருந்திமீண் டதுவுங்
காரி னம்புரை யவுணர்தஞ் செய்கையுங் காணு
மூரல் செய்தன னெவ்வகைத் தேவர்க்கு முதல்வன். (அ௪)

நாட்ட மூன்றுடைத் தாதைபோற் சிறிதிறை நகைத்து
நீட்ட மிக்கதோர் சிலையினை நெடுங்கரம் பற்றிக்
கோட்டி நாணொலி கொண்டிட வண்டருங் குலேந்தா
ரீட்ட மிக்கபல் லுயிர்களுந் துளக்கமெய் தினவே. (அ௫)

வேறு.

முக்கண னுதவிய திருமுருகன் முரணுறு வரிசிலை முதிரொலிபோய்த்
தொக்கன செவிதொறு நுழைதலுமே தொலைவறு மவுணர்கடொகைமுழுது
நெக்கன பகிர்வன விரதமெலா நிறைபட வருபரி புரள்வனவே
மைக்கரி தரைமிசை விழுவனவான் மதிதொடு நெடுவரை மறிவனபோல்.

மாசறு மறைகளின் மறையதனை மலைமுனி யுணர்வகை யருள்புரியுந்
தேசிக முதலவன் வரிசிலையிற் செறிமுகி லுறைவகை சிதறுவபோ
லாசுக மளவில கடவினனு லடல்கெழு மவுணர்கள் புடைவளையுங்
காசினி யகலமும் விரிகடலுங் ககனமு மிடைவன கணையெனவே. (அ௭)

கொடிகளை யடுவன வளவிலவே குடைகளை யடுவன வளவிலவே
படைகளை யடுவன வளவிலவே பரிகளை யடுவன வளவிலவே
கடகரி யடுவன வளவிலவே கனையொலி யிரதமொ டவுணர்கடம்
முடிகளை யடுவன வளவிலவே முழுதுல குடையவன் விடுசரமே. (அ௮)

பரவிய தருவின மெனவவுணப் படைநிரை விழுவன தொடுகடலிற்
றிரையென விழுவன புரவியினந் திருநெடு வரைகளின் விழுவனதேர்
கருமைகொண் மணிமுகி லினமெனவே கடகரி விழுவன கனவரைசூ
ழிரவியு மதியமும் விழுவனபோ லெழுவன கவிகையும் விழுவனவே. ()

செல்லுறு தாள்களு மடுபடைகள் சிந்திய செங்கைக ளுந்திறலே
சொல்லிய வாய்களும் விம்மலுறுந் தோள்களு நோக்குறு துணைவிழியுங்
கல்லென வார்த்திடு கந்தரமுங் கவசமும் வீராக டுவசமுட
னெல்லையி லாதமர் தனிமுதல்வ னெய்திடும் வாளிகள் கொய்திடுமே. ()

வேறு.

வட்டனை கொண்டிடு மால்வரையு
மெட்டெனு மோங்கலும் யானைகளும்
பட்டிரு விக்கணை பாறினவா
லொட்டல ரெங்ஙன முய்குவதே. (௬௧)

பொன்னுல கெல்லை புகுந்துலவு
மன்ன முயர்த்திடு மண்ணல்பதந்
துன்னுறு மசசுதர் தொல்லுலகின்
மின்னென வேசெலும் வேள்கணையே. (௬௨)

மேதினி கீண்டு விரைந்துபுகும்
பாதல மூடு பரந்துசெலு
மூதகு மண்ட முகட்டுருவு
மாதிர மேகுறும் வள்ளல்சரம். (௯௩)

மூவிரு செய்ய முகத்தொருவ
னேவிய செஞ்சர மெங்குமுரு
மேவலர் தங்களை வீட்டிடும்வே
றேவர்கள் கண்ணுமி றுத்திலவே. (௯௪)

ஆனன மாறுள வண்ணல்சரந்
தானவர் சென்னிக டள்ளுதலுப
வானிடை போயின மாண்கதிர்கண
மேனி மறைப்புறும் வெய்யவர்போல். (௯௫)

வாளெழு வேல்பிற வாங்கினர்தந்
தோள்களை வாளி துணித்தெறிய
நீளிடை சென்று நிரந்திடுதங்
கேளிரை யட்டன கீழ்மையர்போல். (௯௬)

மாசகல் வானக மாதிரவாய்
காசினி வேலைக ளத்தினகம்
பாசறை சுற்றிய பாடியெலா
மாசற வட்டன னறபுதனே. (௯௭)

அட்டிடு கின்றழி யம்புயன்மா
லொட்டுறு வாசவ னுண்மகிழாக்
கெட்டனர் தானவா கேடிறுயர்
விட்டன மென்று விளம்பினரே. (௯௮)

அடைந்தனர் விம்மித மாங்கவுணா
மிடைந்தது நோககினர் வேற்படையோன்
றடிந்தது காண்கிலர் தாரணிமேற
கிடந்தது கண்டனா கேசரரே. (௯௯)

அலமரு பாரிட ரவ்வவர்தந்
தலைவாக ளேனையர் தானவர்தப்
மலிபடை சாய்த்து வயம்புனைவிற
புலவனை யார்ப்பொடு போற்றினரே. (௧00)

வள்ளல் சரம்பட வான்முகடு
கொள்ளுறு தானை குழாந்தொலைய
வெளளிடை யாயின விண்ணவாதம
முள்ளக மாற்ற வுவப்புறவே. (௧0௧)

அண்ட கடாகம தப்புறமாய்க்
கொண்டிடு தானவர் கொள்கையிது
கண்டிறை வன்கழல் காணநெறி
யுண்டினி யென்றன ருண்மகிழவார். (௧0௨)

காற்றென வண்ட கடாகநெறி
தோற்றிய வாயி றொடர்ந்துபுகா
மேற்றிகழ் தேர்கரி வெம்பரியி
னேற்றமொ டொல்லென வேகினரால். (௧0௩)

அந்நெறி யேகியிவ் வண்டமெலாந்
துன்னினர் வான்புவி சூழ்ந்துவெள..
யென்னது மில்லென வீண்டினரான்
முன்னுற வந்து முடிந்தவர்போல் (௧0௪)

சூர னெனப்படு தொல்லிறைவன்
பேரம ராற்றிடு பெற்றியினுற்
றேரிடை வந்துறு செய்கைதெரீஇ
யார்வமொ டேநெடி தார்த்தனரே. (௧0௫)

ஆர்த்தனர் தம்மு னடைந்துளதாம்
போர்த்திடு கின்ற பிணக்கிரியா
யீர்த்திடு சோரி யிடைப்படுதல்
பார்த்தனர் சிந்தை பரிந்தனரே. (௧0௬)

பரிந்தனர் நம்படை பட்டிடவே
புரிந்திடு வாறெவ் போர்புரியா
விரைந்து வயங்கொடு மீடுமெனுத
தெரிந்தனர் சிந்தனை தேற்றினரே. (௧0௭)

தேற்றிடு கின்றுழி தேவரெலாம்
போற்றிட வீரர் புடைக்கணுற
வாற்றல்கொள் பூதர்க ளார்த்திடவே
தோற்றின னீறுடு தோற்றமிலான். (௧0௮)

சேயுரு வாகிய சீர்முதல்வன்
மேயது கண்டு மிகச்சிறியன்
பாய்பரி யானை படைத்துமிலா
னேயிவ னேநம தெண்ணலனே. (௧0௯)

ஆண்டகை மைந்தனிவ் வண்டமெலா
மீண்டிய தானை யிமைப்பொழுதின்
மாண்டிட வட்டனன் மற்றிதுதா
னீண்டிடு மற்புத நீர்மையதே. (௧௧0)

அன்னது நின்றிட வங்கவன்மேன்
மன்னவர் மன்னவன் வந்துபொரு
முன்னம ராறறி முடிக்குதுமயா
மென்ன வியம்பினா யாவருமே. (௧௧௧)

தப்பமொ டினனைய சாற்றியவண்
முறபடு தானவர் முக்கணுடைத
தற்பர னல்கிய சண்முகனை
வற்புட னார்த்து வளைந்தனரால். (௧௧௨)

வளைந்திடு காலையில் வானவர்க
ளுளைந்தனர் பூதர்க ளுட்கிமனந்
தளர்ந்தனர் வீரர் சலித்தனரால்
விளைந்தது பேரமர் மீட்டுமெனு. (௧௧௩)

வேறு.

ஐயன் மருத்தினை யத்துணை நோக்கிக்
கைபணி நெற்றி கடைக்குழை யாகி
வெய்யவா தானைகண் மேவுழி யெல்லாம்
வையம் விடுக்குதி வல்லையி லென்றான். (௧௧௪)

அட்டுறு நீப வலங்கல் புனைந்தோன்
கட்டுரை கொண்டு கரந்தொழு காலோ
னெட்டுறு நண்ணல ருற்றுழி காணு
விட்டன னம்ம விறற்பரி மான்றேர். (௧௧௫)

மண்ணிடை சென்றிடு மாதிர நீந்தும்
விண்ணிடை சூழ்தரும் வேலையின் மீதாங்
கண்ணுறு மெப்படி கைதொழும் வானே
ரெண்ணினு நாடரி தெந்தை பிரான்றேர். (௧௧௬)

சேயது காலை திறத்திற மாகி
மேயின தானவா மொய்மபுறு தானை
சாய்வுற வோர்தொடை தன்னி லகந்த
மாயிர கோடிக ளாக்கனை தொட்டான். (௧௧எ)

பரிந்தன சூழ்ந்தவர் பாணிகண் மொய்ம்பு
சிரந்துணி வுற்றன செமபுன லாழி
சொரிந்த பிணக்கிரி துற்றிய வற்று
னெரிந்தது வைய நெளிந்தது நாகம். (௧௧அ)

பொய்கொலை யாற்றிய பூரிய ருக்கார்
செய்குவா நன்மை செறிந்துள ரேனுங்
கைகெழு ஞாளிக ளோகறித துண்ட
மைகெழு தானவர் மாண்டிடும் யாக்கை. (௧௧௯)

ஒன்னலா மீதி னுயிர்க்குயி ரானோன்
மின்னென வீசிய வெஞ்சர மாரி
பின்னுற முந்து பெயர்ந்திடு மென்று
லன்னவன் றேர்விரை வார்கணிக் கின்றா. (௧உ0)

பரத்தினு மேதகு பண்ணவன் வார்விற்
கரத்தினை யும்விரை வாறகரந் தூண்டுஞ்
சரத்தினை யுந்தடந் தேரினை யுங்கா
லுரத்தினை யும்புகழ் வார்புடை யுள்ளார். (௧உ௧)

வெவ்விசை யப்படை வீட்டிடும் வாளிச்
செவ்விசை தேர்விசை நாடினர் செவ்வேள்
கைவிசை யோநெடுங் கால்விசை தானோ
வெவ்விசை யோவிசை யென்றனர் வானோர். (௧உஉ)

துய்யவன் வாளி துணித்திட வீரர்
கையொடு வானிடை செல்வ கணிப்பி
லையிரு வட்டம ராப்புடை பற்ற
வெய்யவர் பற்பலர் விண்ணெழல் போலும். (௧௨௩)

காலொரு பாங்கர் கழுத்தொரு பாங்கர்
வாலொரு பாங்கர் மருப்பொ டெருத்த
மேலொரு பாங்கர் வியன்கையொர் பாங்காத்
தோலின மிவ்வகை யேதுணி கின்ற. (௧௨௪)

பல்லண மற்றன பன்முழு தற்ற
செல்லுறு தாளொடு சென்னியு மற்ற
வொல்லொலி யற்ற வுரந்துணி வுற்ற
வல்லமர் நீந்துறு மாத்தொகை முற்றும். (௧௨௫)

மாமழைகொள் வைய மடிந்திட நேமி
யாழிகொள் சோரியி னாழ்வன மேருச்
சூழுறும் வெய்யவர் தொல்புவி யீண்டே
வீழுறு மெல்லை கெழீஇயின போலும். (௧௨௬)

ஏறிய தேர்களும் யானைகள் யாவுஞ்
சூறைகொள் வாசிக ளுந்துணி வுற்றே
வீறகல் வீரர் மிசைப்பட வீழ்ந்த
மாறவை யாற்றிடும் வல்வினை யேபோல். (௧௨௭)

ஞாலமும் வானமு நண்ணல ராவி
மாலொடு வாரி மடங்க வுலைந்தான்
சாலு மிவறகிது தாள்வலி யாறகொல்
கால னெனப்புகல் கட்டுரை பெற்றான். (௧௨௮)

எறிபடை யாவையு மேமம தாகச்
செறிபடை யாவையுஞ் சேயவ னேவான்
முறிபடு கின்ற முனிந்துவ ணப்புட்
கறிபட மெய்துணி கட்செவி யேபோல். (௧௨௯)

மூன்னுறு வார்கண் முரட்படை தூவிப்
பின்னுறு வாரெய ராது புடைக்கட்
டுன்னுறு வார்க ளெலாந்துணி வாக
மின்னென வெங்கணும் வேள்கணை தூர்த்தான். (௧௩௦)

சூலம தேகொல் கணிச்சிகொ ளொல்லை
மாலெறி நேமிகொல் வச்சிர மேகொல்
காலொடு சென்ற கனற்குழு வேகொல
வேலது கொல்லென வேள்கணை விட்டான். (௧௩௧)

வேறு.

மழைத்திடு மெய்யுடை மாற்றலர்க
ளிழைத்திடு மாய வியற்கைகளும்
விழுத்தக வீசும் விறற்படையும்
பிழைத்தன தாங்கள் பிழைத்திலரால். (௧௩௨)

மூக்கணன் மாமகன் மொய்கணைக
டொக்கவர் யாக்கை துணித்திடலு
மெய்க்கிடு பல்கலன் வின்விழல்போற்
றிக்குல விப்படி சிந்தினவே. (௧௩௩)

அண்ணல் சரங்க ளறுத்திடலு
மெண்ணலர் யாக்கைக ளிற்றவைதா
மண்ணை யளந்தயின் மாலெனவே
விண்ணை யளந்து விழுங்கினவே. (௧௩௪)

சூழுறு தானை துணிந்தவுட
லேமெனு நேமியு மெண்டகுபே
ராழியும் விண்ணு மடைதலிமையோர்
வாழுல கங்களை வெளவியவே. (௧௩௫)

காடி யிழந்து கவந்தமதா
யாடின வெள்ளமு மாயிரமா
கோடிய துண்டு குகன்கணையால்
வீடின வெல்லை விதிக்குநர்யார். (௧௩௬)

வீழுறு மாற்றலர் மெய்க்குருதி
யாழிக ளாகி யகன்புவியிற்
பூழைக ளோடு புகுந்துபில
மேழுள வெல்லையு மீண்டியதே. (௧௩௭)

வேறு.

பாதல வெல்லை பரந்திடு சோரி
பூதல மீண்டு புகுந்து பராவி
யோத நெடுங்கட லோங்கிய வாபோன்
மாதிர மெங்கு மறைத்தன வன்றே. (௧௩௮)

மீனுடு வாக விளங்கிய திங்கள்
பானு மலர்ந்திடு பங்கய மாகச்
சோனைகொண் மாமுகி றேணிய தாக
வானிமிர் செம்புனன் மாகட லொக்கும். (௧௩௯)

மாசறு கூற்றனு மற்றுளர்தாமுங்
கேசர ராகிய கிங்கரர் யாரும்
பாச மலைந்திடு பல்பிணி பற்றா
வீசின ராருயிர் மீன்கள் கவர்ந்தார். (௧௪௦)

பானுறு கின்ற பணிக்கிறை நாப்பண்
மாலரு ளிற்றுயின் மாட்சிமை யென்ன
நீனுறு திங்க ணிணங்கெழு செந்நீர்
வேலையின் மீது விளங்கிய தம்மா. (௧௪௧)

மட்டறு செம்புனல் வாரிதி நீந்தி
யொட்டலர் யாக்கையி னேங்க லறுத்துத்
தட்டிறு செங்கதிர் சண்முக மேலோன்
விட்டிடு நேமியின் விண்மிசை செல்லும். (௧௪௨)

சிறைபபுற வுக்கருள் செய்திட மெய்யூ
னறுப்பவ னென்ன வடைந்தனர் விண்ணி
னெறிப்படு வானவர் நேரலர் யாக்கை
யுறபபடு சோரிமெய் யுற்றிடு நீரால. (கசங)

ஆனதொ ரெல்லேயி லண்ட நிறைந்த
சேனைகள் வீந்தன செம்மல் சாத்தா
லூனுயிர் பூத மொழிந்தன முககண்
வானவன் மூரலின் மாய்ந்திடு மாபோல். (கசச)

வேறு.

அண்ட மீங்கிது முற்றொருங் கீண்டிய வவுணா
தண்ட மாய்தலு மேனைய வண்டங்க டம்மிற்
கொண்ட தானைகள் பின்னரும் வந்திடக் குமரன்
கண்டு மற்றவை தொலைத்தனன் செலுத்திடு கணையால். (கசரு)

அறுத்து வெம்முனைத் தானையை யாண்டுசெல் லனிக
மறித்தும் வந்துவந் தடைதரு மிவனென மனத்துட்
குறித்து வெங்கணை மாரியா லண்டகோ ளகையி
னெறிதத ரும்பெரு வாயிலை யடைத்தன னிமலன். (கசசு)

ஆண்டு சென்னெறி மாற்றியே யண்ணலவெங் கணையான்
மாண்ட தானைகள சோரியுங் களேவர மலிவு
நீண்ட பாதலங் கடற்புவி கொண்டுவா னிமிர்ந்தே
யீண்டு கின்றது கண்டனன் வரைபக வெறிந்தோன். (கசஎ)

நெற்றி நாட்டத்தி னுலகெலா மட்டிடு நிமலன்
பெற்ற மாமகன் பன்னிரு விழிகளும் பிறங்கு
கற்றை வெஞ்சுடர் வடவைபோ லாக்கியக் கணததி
னுற்று நோக்கின னெரிந்தன களேவரத் தோங்கல். (கசஅ)

வெந்து நுண்டுகள் பட்டன களேவரம் விசும்பி
னுந்து சோரிநீர் வறந்தன மூவகை யுலகு
முந்து போலவே யமைந்தன முளரியான முகுந்த
னிந்தி ராதிய ராரதனா குமரனை யேத்தி. (கசகூ)

பாறு லாவரு களேவரத் தமலையும் படிமேல்
வீறு சோணித நீத்தமும் வேவுற விழித்து
நீற தாக்கினன் சூரனை யட்டில னின்று
ளுறு மாமுக னடலை யுன்னின னுங்கொல். (கருo)

ஆகு மெல்லையி னெல்லையி னடிகளத தடைந்த
சேகு நெஞ்சுடைச் சூரனித் திறமெலாந் தெரிந்து
மாக நீடுநந் தானையை யலைததமாற் றலனை
நாகர் தம்மொடு முடிக்குவன் யானென நவின்றான். (கருக)

மாற்ற மித்திற மிசைததிடு மவுணர்கோன் மனத்திற்
சீற்ற மூண்டிட வமாவினை குறிததனன் றிகிரிக்
காற்றி னெல்லவந் தேற்றனு மருத்துவன் கடவிப்
போற்று தேர்மிசை முருகனுஞ் சென்றெதிர் புகுந்தான். (கருஉ)

புக்க காலையி லறுமுகன் றேற்றமும புடையின்
மிக்க பன்னிரு கரங்களும் வியன்படைக் கலனும்
தொக்க வீரமும் வன்மையு நோக்கியே தொல்லைத்
தக்க னேயென வவுணர்கோ னின்னன சாற்றும். (கருரு)

சிறந்த வான்மதி மிலைச்சினோ னருள்புரி செயலா
லிறந்தி டேனியா னென்றுமப் பெற்றியா யிருப்பேன்
மறந்து மென்னொடு பொருதிலர் தேவரு மலைந்தே
யிறந்து ளார்பல ருணார்ந்திலை போலுநீ யிதுவே (கருச)

உள்ள நொந்துநொந் தென்பணி யாற்றியே யுலைந்து
தள்ளு றுஞ்சுரர் மொழியினைச் சரதமென் றுன்னிப்
பிள்ளை மென்மதி யாலிவண் வந்தனை பெரிது
மள்ள லுற்றுழிப் புகுந்திடுங் கயமுனி யதுபோல். (கருரு)

உடைப்பெ ரும்படை செறுத்தனை பாலனென் றுன்னை
விடுப்ப தில்லையால் வெரிநது கொடுக்கினும் விரைவிற்
படுப்பன் வானவர் தொகையுடன் பாரிடா தமையுங்
கெடுப்ப னென்றனன் றன்பெருங் கிளையுடன் கெடுவான். (கருசு)

வெம்பு ரைத்தொழிற கொருவனுங் கயவநீ வெறிதே
வம்பு ரைத்தனை யாவதொன் றிலலைநின் மார்பஞ்
செம்பு ரைப்பட யாம்விடு கின்றதோர் திறல்வா
யம்பு ரைத்திடு மாறுனக் கென்றன னமலன் (கருஎ)

ஆரு நேரிலாப் புங்கவன் சேயின தரையச்
சூர னாகிய வவுணர்கோன் றண்ணெனச் செயிர்த்து
மேரு நேர்வதோர் வரிசிலை யெடுத்துவிண் ணிழியும
வாரி போன்றிடு நாணினை யேற்றியே வளைத்தான. (கருஅ)

வளைத்த டங்கிரி புரைவதோர் சிலையினை வயத்தால்
வளைத்த செய்கையைக் காண்டலும் பாரிடா வானோர்
வளைத்த டங்கடல் வந்திடு நனுசொடு மலைவான்
வளைத்த தன்மைபோ லவுணாத முதல்வனை வளைததார். (கருகூ)

சிலையை வீசினர் கொடுமரம் வீசினா செறிமூ
விலையை வீசினா படையெலாம வீசினா ரெதிர்ந்தா
ருலைய வீசியே யடலசெயு மும்மதத துவாலவை
வலையை வீசியே பிணித்திட மதித்துளா ரென்ன. (கசூ0)

கண்டு மற்றதை யவுணாசோன் வில்லுமிழ் கணையாங்
கொண்டலுண்டுளி சிதறியே கணங்களகூட் டறுத்து
விண்டு லாவர வரக்கினூற் குயின்றதோர் வெற்பைச்
சண்ட வெங்கன லுடைபபது போலவே தடிந்தான். (கசுக)

வீடி னாகளும் புயங்கரந் துணிந்திட மெலிந்து
வாடி னாகளு மயங்கிவீழ்ந் தாகளும வலலே
யோடி னார்களு மோடவும் வெருவிவேற றுருவங்
கூடி னார்களு மாயினர் பாரிடக் குழாததோா. (கசுஉ)

பூதர் சாய்ந்துழி யிலக்கரோ டெண்மரும் பொருவில்
வேத நாயகன் றாதனுஞ் சூழ்ந்துடன் மேவிக்
கோதை தூங்கிய கொடுமர மாயின குனித்துச்
சோதி வான்கணை மாரிக ளவுணன்மேற் சொரிந்தார். (கசுங)

சொரிந்த வெங்கணை யெங்கணும் வருதலுஞ் சூரன்
றெரிந்து வாளிதொட் டறுக்கல னின்றதோர் செவ்வி
விரைந்து வந்தவை யாங்கவன் மெய்ப்பட விளிந்து
பரிந்து போயின செய்ததொன் றில்லையப் பகழி. (கசுச)

பரப்பி னீண்டிய வீரர்தஞ் சூழ்ச்சியைப் பாரா
வுரப்பி யாவலங் கொட்டியே வெகுளிகொண் டொருதன்
பொருப்பு நேர்சிலை குனித்துவெஞ் சிலீமுகம் பொழிந்து
திருப்பெ ருந்தடந் தேரொடுஞ் சாரிகை திரிந்தான். (கசுரு)

நூறு கோடிவெஞ் சரமொரு தொடையுற றூக்கிச்
சூறை யாமென வட்டணை திரிந்துளான் சூழ்வோர்
மாறு தூண்டிய சரங்களைத் துணித்துமற் றவர்க
ளேறு தேருடன் பிடித்திடு சிலைகளை யிறுத்தான். (கசுசு)

வையம் வில்லுட னிற்றபின் மற்றவர் மலைவு
செய்ய வுன்னுமுன் மொய்ம்பினு முரத்தினுஞ் சிரத்துங்
கையி னுங்கணை யாயிர மாயிரங் கடுந்தீப்
பெய்யு மாரிபோற் செறித்தனன் செம்புனல் பெருக. (கசுஎ)

புரந்த னிற்செறி கறையினர் புலம்புகொண் மனத்தா
ருரந்த ளர்ந்துளார் வில்வலி யிழந்துளா ரொருங்கே
யிரிந்து நீங்கின ரிலக்கரோ டெண்மரு மிளவ
றிருந்த லன்றடந் தேர்மிசைப் பாய்ந்தனன் சினத்தால். (கசுஅ)

பாய்ந்து திண்டிறன் மொய்ம்பினன் பரமன்முன் னளித்த
நாந்த கந்தனை யுரீஇக்கொடு நண்ணலர்க் கிறைவ
னேந்து வில்லினைத் துணிததனன் றுணித்தலு மெரிபோற்
காய்ந்து வெய்யவன் புடைத்தன னுரத்திலோர் கரத்தால. (கசுகூ)

அங்கை கொண்டிகு ரொருபுடை புடைத்தலு மகலம்
பொங்கு சோணித மலைத்திட வாணையம் புயத்துச்
சிங்கம் வீழ்ந்தயர் வுற்றிடத தூதனைச் செகுத்த
வெங்கெ னக்கடா தென்றெடுத் தும்பரி னெறிந்தான. (கஎ0)

எறிந்த காலையில் விண்ணிடைப் படர்ந்திடு மேந்த
லறிந்து மீண்டுசென் றூறுமா முகன்புடை யடைந்தான
றறிந்து போகிய சிலையினைத் தரைமிசை யிட்டுச்
சிறந்த தோர்தனு வெடுத்தனன் றீயரிற் றீயோன். (கஎக)

அத்த மேல்கிரி யுதயமால் வரைதனை யான்று
வித்த லும்பிறர்க் கிடர்செய்து மேருவி னீண்டு
கொத்து நீடுபல் குவடுடைத் தாகியே குமரன்
சத்தி யாலட னின்றவெற் பனையதத் தனுவே.

வனைக ருங்கழ லவுணனக் கார்முகம வளைத்துப்
புனலு மங்கியுங் காலுட ளெலிப்பது புரைய
வெனைவ ருந்துளக் குறும்வகை நாணொலி யெடுத்தா
னனைய பெற்றியை யறிந்தன னமரரை யளித்தோன். (கஎங)

புயலின் மேனியன் புவிநுகர் காலையும் போதன்
றுயிலு மாலையுந் துஞ்சிய வேலையுந் தொலையா
தியலு மண்டத்தி னடிமுடி யுருவியின் றிலங்குங்
கயிலை போல்வதோர நெடுஞ்சிலை யெடுத்தனன் கந்தன். (கஎச)

வாரி யாலுல கழிந்திடு மெல்லையின் மருங்கின்
மேரு வாதியாம் வரைகளுங் கிரிகளும் விசும்பிற்
காரு மேலுள வுலகமு மமரருங் கைலைச்
சாரல் சூழ்தல்போல் விரவியார்ப் புடையதத தனுவே. (கஎரு)

நீட்ட மிக்கதோ ரபெருஞ் சிலையினை நிமலன்
ஞேட்டு ணைக்கொடு வாங்கியேழ் வகையினுந் ஞேன்று
மீட்ட மிக்கபல லுயிர்களும் வானுரு மேறறின்
கூட்ட மாகியே யாாத்தெனக் குணதொலி கொண்டான். (கஎசு)

குணங்கொள் பேரொலி கோடலு மிரலையூர் கொற்றத
தணங்கு லாவரு காாமுகங் குழைத்துளை யவதி
யிணங்க வாங்கியே பததுறா ருயிரத திரட்டி
கணங்கொள் வெஞ்சர முகைத்தனன் கூற்றினுங் கடியோன். (கஎஎ)

வான்ம றைத்தன மாதிர மறைத்தன மதிதோய்
மீன்ம றைததன கதிரவெயின் மறைததன வேலை
தான்ம றைததன வசுமதி மறைத்தன தருவார்
கான்ம றைத்தன வரைகளை மறைததன கணைகள். (கஎஅ)

காற்றிற் செல்வன வங்கியிற் படர்வன கடுங்கட்
கூறறிற் கொலவன வேலைவெவ் விடத்தினுங் கொடிய
பாறறுத தொல்சிறை யுள்ளன பஃறலை படைதத
நாற்றிக் கும்புக ழவுணர்கோ னணையி னடபப (கஎகூ)

பருமி தத்தன மேருவைத் துளைப்பன பாங்கர்
வரைகி ழிப்பன வண்டமும பொதுப்பன வான்றே
யுருமி டிக்குலம் பொருவன விடததையுண் டுமிழ்வ
கருமை பெறறன சேயன தீயவன் கணைகள். (கஅ0)

துண்ட வெண்பிறை வாளெயிற் றவுணர்கோன் றுரப்ப
மிண்டு வெங்கணை யெங்கணுஞ் செறிந்திட விண்ணோர்
கண்டு கண்ணனை யணுகியே கைகுலைத் தைய
வுண்டு கொன்னமக் கொளிப்பதோ ரிடமென வுரைத்தார். (கஅக)

உரைத்த ளார்க்குமான் மாறுரை வழங்குமுன் ஹெள்வேல்
கரதத லேந்திய குமரவே ளின்னது கண்ணுற்
றெரித்து வெங்கனல் விடுத்திடு மூதைபோற சிலதன்
கரத்தி னலவுன் றாண்டிய கணையெலாந் தடிந்தான். (கஅஉ)

மடிந்தி டும்படி மாற்றலன் சரங்களை வள்ள
றடிந்த தன்மைகண் டமரர்க ளுவகையிற் றழைத்தார்
படர்ந்து நீடிய கங்குலின் பாயிருள் புலர
விடிந்த காலையி னெழுங்கதிர் கண்டமே தினிபோல். (கஅ௬)

வேறு.

அங்க வெல்லை யவுணர்கோ
னெங்க ளாதை னெதிருற
மங்குல் போல்வ ரம்பிலாச்
செங்கண் வாளி சிதறினன். ()

ஆய காலை யறுமுகன்
றீய வூர்ந்து செறிகணை
மாய வாளி மாமழை
யேயெ னாமுன் னேவினன். (கஅ௯)

எங்க ளாதை னேவிய
துங்க வாளி சூர்விடும்
புங்க வங்க ளைப்புரத
தங்கி போல றுத்தவே. (கஅ௯)

அறுத்த பின்னு மறனிலான்
மறுத்தும் வாளி மாமழை
கறுத்த கண்டர் காளைமேற்
செறுத்து வல்லை சிந்தினன் (கஅஎ)

சிந்து கின்ற செஞ்சரம்
வந்து றாமுன் வந்தெனக்
கந்த னாறு கணைதொடா
வந்தில் பூழி யாக்கினன். (கஅஅ)

பூழி செய்து பொள்ளென
வூழி நாத னெண்சர
மேழு நூற தேவினன்
சூழு மாயை தோன்றன்மேல். ()

மாயை மைந்தன் மற்றதை
யாய வாளி யாலறுத
தேயி னுனி ராயிரஞ்
சேயின் முன்சி லீமுகம். (கக௦)

வேறு.

விட்டதனை யத்தொகை விறற்பகழி தன்னா
லட்டுவிரை விற்கடவு ளாயிர விரட்டி
கட்டழலை யொத்துள கடுங்கணைக ளமைத
தொட்டனன் வருத்தமொடு சூர்கிளை துளங்க. (கககக)

மூராரியுத வுஞ்சுதனை முந்துதளை யிட்டாண்
டொராயிர மளிததபரா னுய்ததகணை செலல
விராயிர நெடும்பகழி யேவியவை நீக்கி
யராவிறையும் வையமு மழுங்கவுற வாததான். (கக௨)

ஆர்த்தவன் விடுங்கணை யனைத்தினையு முக்கண்
மூர்ததிதரு காளமுளை செலசசெல முடிததான்
கார்த்தெழு புகைபபடலை கான்றுங்மிர் செந்தீச்
சேர்த்தினவை யாவையு மிசைந்திடுதி றம்போல். (ககக)

ஐயன்விடு வாளிகளை யவ்வசுர னீக்குமவ
வெய்யன்விடு வாளிகளை வேள்கடி தறுக்கு
மெய்யுநெடு வெம்பகழி யிற்றவைகள் சிந்தி
வையமிசை போகியன வானமணித் தென்ன. (ககச)

முற்றிய வமர்த்தலை முனிந்திவர் செலுத்துங்
கொற்றநெடு வாளிகள குறைந்துழி யெழுந்தீப்
பற்றியது பாரிடை பகிர்ந்தவரை முற்றும
வற்றிய வளக்கரும் வறந்துளது கங்கை. (கக௫)

தார்கெழுவு வேற்படை தடக்கையுடை யோனுஞ்
சூரனு மிவாறம ரியற்றுதொழில் காணு
வீரமட மாதுளம் வியந்திவர் தமக்கு
ளாரிடை நடத்துமென வையமொடு நின்றுள. (கசு௬)

ஆளரிதன் முன்னிளவ லானவத னததுக்
காளைமகிழ் பின்னிளவல் கார்முகமு தைக்கும்
வாளிமழை யேயலது மற்றவர்க டம்மை
நீள்விழியி னுற்றெறிகி லார்புடையி னின்றோர. (கசுஎ)

நீடுசம ரின்னண நிகழ்ச்சியுறு மெல்லை
மேடமிசை யூர்பரன் விடுத்தகணை யெல்லா
மீடுபட நூறியவ னேறிவரு மான்றே
ராடுறுப தாகையை யறுத்துவிரைந் தாரத்தான். (கசுஅ)

ஆர்த்துவிறல் வால்வளையை யம்பவள வாயிற்
சேர்த்தியிசைத் தான்றனது சீர்த்தியிசைத் தென்ன
மூர்த்தமது தாழ்க்கிலன் முனிந்துகணை பின்னுந்
தூர்த்துமுரு கன்றனது தோற்றமறைத் திட்டான். (கசுகூ)

மறைத்தபக ழித்தொகையை வாளிமழை தன்னாற்
குறைத்தவுண னூர்ந்திடு கொடிஞ்சிநெடு மான்றேர்
விறற்கொடி தனைக்கொடிய வெஞ்சரமொ ரேழா
லறுத்துமுரு கன்பரவை யாழ்கடலி னிட்டான். (உ00)

வேறு.

தான வர்க்குத்தலைவன் றனிக்கொடி
மீன வேலையி லறறுடன் வீழ்ந்துழிப்
பானு கம்ப னெனபபடு பாரிடர்
சேனை காவலன் றெற்றென நோக்கினான். (உ0க)

கண்டு சிந்தை களிதநுப் பெருமிதங்
கொண்டு குபபுற் றிசைத்துக் குனித்திடா
வண்டர் போற்றத்தன் னாயிரம் வாயினு
மொண்டி ரட்சங்க மொல்லைவைத தூதினான். (உ0உ)

கானு கம்படு கந்துகத் தேருடைப்
பானு கம்பன் பனிமதி யாயிர
மானு கம்பவை வாய்வைத் திசைத்தலுந்
தானு கம்பல தங்கிற்றவ் வோசையே. (உ0௩)

பாய்பெ ரும்புகழ்ப் பானுகம் பன்வளை
யாயி ரங்களு மார்த்திட வண்டர்த
நாய கன்றன் விறல்கண்டு நாரண
னாய சங்கு முழங்கிற்றுத் துண்ணென (உ0௪)

போத மங்கதிற் புங்கவர் யாவருஞ்
சோதி வேற்படைத் தூயவ னேறுதேர்
மீது கேதன மில்லை வியன்கொடி
யாதி°நீயென் றழுலினை யேவினா (உ0௫)

ஏவ லோடு மெரிதழற் பண்ணவன்
வாவு குக்குட மாண்கொடி யாகியே
தேவ தேவன் றிருநெடுந் தேர்மிசை
மேவி யார்த்தன னண்டம் வெடிபட. (உ0சு)

படியி லாதமர் பண்ணவன் றேர்மிசைக்
கொடிய தாய்நின்று குக்குடங் கூயது
கடிய தானவர் கங்குல் புலர்ந்திடும்
விடியல் வைகறை வேலையைக் காட்டல்போல். (உ0எ)

சங்க மோடு தபனனு மார்த்தனு
மங்குல் வண்ணத்து மாயவ னார்த்தனன்
பங்க யாசனப் பண்ணவ னார்த்தனன்
றிங்க ளார்த்தது செங்கதி ரார்ப்பவே. (உ0அ)

மறலி யார்த்தனன் மாருதங் கட்கெலா
மிறைவ னார்த்தன னிந்திர னார்த்தன
னறைக டற்கர சானவ னார்த்தனன்
குறைவில் செல்வக் குபேரனு மார்த்தனன். (உ0கூ)

ஆர்த்த வோசைபோ யண்டத்தை முட்டியே
சூர்த்த நோக்குடைச் சூரபன் மன்செவிச்
சேர்த்து ளக்குட் செறிதலுந் தேவரைப்
பார்த்த னன்கடு வுண்டன்ன பான்மையான். (உக0)

மாறி லென்முன் வருவதற் கஞ்சியே
பாறு போன்று பழுவத துலைந்துளார்
தேறி வந்து தெழித்தன ரென்முனு
மாறு மாமுக னாற்றல்கொண டேகொலாம். (உகக)

நன்று நன்றிது நான்முக னாதியா
நின்ற தேவர் நிலையழித் தொல்லையிற்
கொன்று பின்னாக் குமரனை வெல்வனு
லென்று சீறினன் யாரையு மெண்ணலான். (உகஉ)

இருக்க மைந்த னிகலிவண் விண்ணிடைச்
செருக்கு தேவர் திறலினைச் சிந்துவா
னருக்க னேடிய வந்தரத துய்க்குதி
தருக்கு தேரினைச் சாரதி நீயென்றுன். (உகங)

மற்றிவ் வாறு வலவனை நோக்கியே
சொற்ற காலைத தொழுதெந்தை நன்றெனப்
பொற்றை போலும் பொலன்மணித் தேரினை
வெற்றி யாகென விண்மிசைத் தூண்டினன். (உகச)

பாகன் றூண்டிய பாண்டிலந் தேரெழீஇ
மேகங் கீண்டு மிசைப்படு சூறையி
னாகங் கீறி யமரர்க ளீண்டிய
மாகஞ் சென்றது வானிழிந் தென்னவே. (உகரு)

சென்ற தேரொடு சேணிடைப் புக்குளான்
குன்ற மன்ன கொடுஞ்சிலை கோட்டியே
துன்று தேவர் தொகையிரிந் தோடுற
மன்ற வாளி மழைகளை வீசினான். (உகசு)

வீசு கின்றுழி விண்ணவர் மேற்சர
நீசன் விட்டிடு நீர்மையை நோக்கியே
யீசன் மாமக னீண்டுகின் றெண்ணிலா
வாசு கஙகளுயத் தஙகவை சிந்தினான். (உகஎ)

வேறு.

மற்றவை துணித்தபின் வடிக்கயிறு முட்கோல்
பற்றிய தடக்கையுள பாகுதனை நோக்கிக்
கொற்றவயி றாண்டியொரு குன்றைவெளி கண்டோன்
றெறறெனவிண் மேனமது தேர்விடுதி யென்றான். (உகஅ)

என்னலு மிறைஞ்சியிர லைப்பரியின் மேலோன்
பொன்னுலகு பாருலகு புக்கெழுவ தென்ன
மின்னின்மிளிர் தேரதனை விண்மிசைக டாவி
நன்னெறிசெ லாவவுணர் நாயகன்மு னுய்ததான். (உகக)

வையநெடு வானமிசை வல்லைபுகு மெல்லை
யையனிமை யோர்களயாந் தோடுவது நோக்கி
நையலிர் புலம்பலிர் நடுங்கலிர்க ளென்றோா
செய்யகர மேந்திமுரு கன்கருணை செய்தான். (உஉ0)

கந்தன்மொழி வானவர்க ணத்தவர்கள் கேளா
வெந்தையிவண் வந்திடலின் யாமுயிர்ப டைததே
யுய்ந்தனமெ னுவிரைவி லோடுவது நீஙகிச
சிந்தைமகிழ் வதெொடு திகந்தமுற நின்றார். (உஉக)

நின்றிடலும் வெவவவுண னீர்மையது நோக்கிப
பின்றிடுவ ராம்பிரம னேமுதல தேவ
ரொன்றொர்சிறு வன்கொலெனை யுறறெதிரு நீரா
னன்றிதென வேவெகுளி கொண்டுநகை செய்தான். (உஉஉ)

காய்சினமி குந்தவுணர் காவல னுநந்த
மாசுகம் விரைந்துபட ராசுகம தென்ன
வீசுதலும் வாளிபல விட்டவை விலக்கி
யீசனருண் மாமதலை பேறறிகல புரிந்தான். (உஉங)

சுறுக்கொள மயிர்ப்பொடி யுயிாபபுவிடு சூரன்
கறைக்கதி ரயிற்பொலிக ரத்தனிவர் தம்மிற
செறுததுடன் வடிக்கணை செலுத்தியகல் வான
மறைபபது மறுக்குவது மாஙமலை வுறறா. (உஉச)

வேறு.

விரைந்திரு வோர்களும் வியன்கணை மாரிகள்
சொரிந்தனர் பேரமா தொடர்ந்துசெய் போழ்தினி
னெரிந்தது மாதிர மிரஙகினா பாருளர்
திரிந்தன சாரிகை சிறந்தவா தேர்களே. (உஉரு)

கறங்கினம் போல்வன கலஞ்செய்கு லாலன்
திறங்கொளு மாழிக டிரிந்தன மானுவ
மறங்கெழு சூறைகண் மயங்கின போல்வன
துறுங்கணை மாரிகள் சொரிந்தவர் தேர்களே. (உஉசு)

பாதல மூழ்குவ பாரிடை சூழ்குவ
மாதிர மோடுவ வாரிதி சேர்குவ
பூதர மேவுவ பூமல ரோனகர்
மீதினு மேகுவ மீளுவ தேர்களே. (உஉஎ)

எண்டிசை சூழுமி ருங்கடல் பாய்வன
விண்டொடு நேமிவி யன்கிரி வாவுவ
கொண்டலி னூரிருள் கொண்டுழி போகுவ
வண்டமு னேகுவ வங்கவ ரேறுதேர். (உஉஅ)

பெயர்ந்திடு தேருறு பிழம்பவை காணுபு
தியங்கினர் நான்முகர் தெரிந்திலர் சீருரு
மயங்கின ராதவர் மருண்டனர் வானவ
ருயங்கினர் பாருள ருலைந்தனர் நாகரே. (உஉகூ)

முதிர்ந்திடு போரினர் முழங்கிய தேர்செல
வதிர்ந்தது பாருல கலைந்தன வேலைகள்
பிதிர்ந்தன மால்வரை பிளந்தது வான்முக
டுதிர்ந்தன தாரகை யுகுந்தன கார்களே. (உ௩௦)

வேறு.

தேரிவை யிரண்டு மாகித் திகழுமூ தண்ட மெங்குஞ்
சாரிகை வருத லோடுஞ் சண்முகன் மீது செல்லச்
சூரெனு மவுணர் கோமான் றுலையுநா ளெழிலி பொங்கி
யாரழன் மழைகான் றென்ன வடுசர மாரி தூர்த்தான். (உ௩க)

மழுப்படை யநந்த கோடி வச்சிரந் திகழ்முச் சென்னிக்
கழுப்படை யநந்த கோடி கப்பண மநந்த கோடி
கொழுப்படை யநந்த கோடி குலிசம்வே லநந்த கோடி
யெழுப்படை யநந்த கோடி யிடையிடை யிடிபோ லுய்த்தான். ()

கூற்றுயிர் குடிக்குந் துப்பிற் கொடும்படை மாரி தன்னை
யாற்றலி னவுணர் கோமான் விடுத்துழி யவற்றை யெல்லாங்
காற்றெனப் பகழி தூண்டி முறைமுறை கடிதிற் சிந்தி
மாற்றினன் றிரிந்தா னையன் மூதண்ட வரைப்பு முற்றும். (உ௩௩)

இத்திறந் திரிந்த செவ்வே ளிடைதெரிந் தேழொ டேழு
பொத்திரந் தன்னைத் தூண்டிப் புகழுறு மவுணர் செம்மல்
சித்திரத் தேரு மாவின் றொகுதியுஞ் சிந்தி நீக்கக்
கைத்தனு வோடுந் தீயோன் கதுமெனப் புவிக்க ணுற்றான். (உ௩௪)

நாணுடை வரிவில் வாங்கி நண்ணல னஞ்சு பில்கு
மேணுடை வயிர வாளி யெண்ணில தூண்டி யேற்பத்
தாணுவின் மதலை கண்டு தன்பெருஞ் சிலையைக் கோட்டித்
தூணிகொள் கணையின் மாரி தொடுத்தவை துணித்து விட்டான். ()

துணிப்புறு மெல்லை வல்லே சுடர்க்கணை யநந்த கோடி
தணப்பற விடுத்த லோடுஞ் சண்முக னவற்றை யெல்லாங்
கணைப்பெரு மழையான் மாற்றிக் காசிபன் றனது செம்ம
லணிப்படு தோண்மேற் பின்னு மாயிரம் பகழி யுய்த்தான். (உ௬௬)

ஊழியின் முதல்வன் மைந்த னொராயிரங் கணையுஞ் சூரன்
பாழியம் புயத்து மீது படுதலுங் கடிதே யிற்றுச்
சூழுறச் சிதறிற் றம்மா தொலைவிலா வயிரங்கொண்ட
காழ்கிளர் வரைமேல் வீழ்ந்த கன்மழைத் தன்மை யேபோல். (உ௬௭)

அந்தமில் வன்மை சான்ற வவுணன்மற் றதனை நோக்கி
முந்துறு வெகுளி தூண்ட முறுவலு முயிர்ப்புந் தோன்ற
வெந்தைதன் மொய்ம்பிற் செல்ல விராயிரம் பகழி வாங்கிச்
சிந்தையிற் கடிது தூண்டித் தேவரு மருள வார்த்தான். (உ௬௮)

உட்டெளி வுற்றோர் காணு மொப்பிலா முதல்வன் றோண்மேல்
விட்டிடு பகழி முற்றும் வெந்துவெந் துகள தாகிப்
பட்டன திசைகண் முற்றும் பரந்தன பரததின் மேலோன்
கட்டழ லதனுன் மாய்ந்த காமவேள் யாக்கை யேபோல். (உ௬௯)

ஆங்கது காலை தன்னி லறுமுகம் படைத்த வைய
னீங்கரு நெறியா லுய்த்த நெடுஞ்சர மனைத்து மாற்றிப்
பாங்கமர் வயவர் மீதும் பாரிடப் படைகண் மீதுந்
தீங்கணை யழுத்த லுற்றான் றேவரை யிடுக்கண் செய்தான். (உ௭0)

தன்னிணை தானே யாகி நின்றிடுந் தனிவேல் வீர
னன்னதோர் தன்மை கண்டோ னாயிரம் பகழி பூட்டித்
துன்னலன் குனித்த சாபந் துணித்தன னுணியா முன்னம்
பின்னுமோர் சிலையை யேந்திப் பெருமுகி லிரிய வார்த்தான். (உ௭க)

இம்பரின் மலைந்த சூர னிம்மென வருக்கொண் டேகி
யம்பரத் திடையே தோன்ற வன்னது குமரன் காணு
வும்பரிற் சென்று தாக்க வோரிறை யெதிர்ந்து நின்று
நம்பியொ டாடல் செய்வா னவிலரு மாயை சூழ்வான். (உ௭உ)

விண்ணிடை நின்ற சூரன் விரைந்துடன் கரந்து சென்று
மண்ணிடை மீட்டுஞ் செல்ல மாகில வரைப்பிற் செவ்வே
டுண்ணென வந்து வெம்போர் தொடங்கலுந் தோற்ற மாற்றிக்
கண்ணகன் றாய நீத்தக் கனைகட லுடுவ ணுற்றான். (உ௭௩)

ஆயிடை முருக வேள்சென் றடுசம ரியற்று மெல்லை
மாயையின் மறைந்து சூரன் மாதிர முடிவிற் றோன்ற
வேயென வாணடுஞ் செவ்வே ளேகியே நெடும்போ ராற்றக்
காய்கன லுமிழும் வேலான் கரந்துபா தலத்தி னின்றான். (உ௭௪)

ஆறிரு தடந்தோள் வள்ள லதுகண்டு பிலத்து ளேகி
மாறம ரியற்று மெல்லை வல்லைதன் னுருவ மாற்றி
வீறுள சிமையச் செம்பொன் மேருவின் குவட்டி னிற்ப
வேறடை முதல்வன் மைந்த னிம்மென வங்கட் சென்றான். (உ௭௫)

மேருவின் சிகர நண்ணி வேலுடைத் தடக்கை வீரன்
பேரம ரியற்றத் தீயோன் பின்னரு மாண்டு நீங்கி
நாரண னுலகிற் றோன்ற நம்பியுந் தொடர்ந்து போந்து
சூரெனு மவுண னோடு தொல்சம ராற்றி னின்றான். (உசசு)

ஆற்றிடு கின்ற காலத் தவுணர்கோ னண்ட கோள
மேற்றிகழ் வாயில் செல்ல விமலனு மங்க ணேகி
யேற்றெதிர் மலையா வன்னோ னேறிய விவுளித் தேரைக்
கூற்றுறழ் பகழி தன்னா லட்டனன் கொற்றங் கொண்டான். (உசஎ)

கந்துக விசய மான்றே ரிற்றலுங் கடுங்கோன் மன்ன
னிந்திர ஞால மென்னு மெறுழ்மணித் தடக்தேர் தன்னைச்
சிந்தனை செய்த லோடுஞ் சேண்கிளர் செலவிற் றாகி
வந்திட வதன்மே லேறி வல்லைபோர் புரித லுற்றான். (உசஅ)

மண்டமர் புரியு மெல்லை வள்ளறன் பகழி தன்னா
லண்டம தடைந்த வாயி லடைத்தது மப்பா லுள்ள
தண்டம தெலலாஞ் செல்லாத தன்மையுந் தகுவர் கோமான்
கண்டன னன்று நன்றென் னிறைதொழிற் காவ லென்றான். (உசகூ)

இறைத்தொழி லவுணர் செம்ம லேந்துதன் சிலையை வாங்கித்
திறத்தொடு மநந்த கோடி செஞ்சரந் தூண்டி யண்ட
நெறிப்படு வாயில் பொத்து நெடுங்கணைக் கதவ முற்று
மறுத்துறுண் டேளி யாக்கி யம்பரஞ் சுழல விட்டான். (உரு௦)

காவல னண்ட வாயிற் கணைகளின் கபாட நீக்கி
மாவொடு களிறுந் தேரும் வயவரும் வரம்பின் றாகி
யோவரு கெறியி னப்பா லுற்றதன் றானை தன்னைக்
கூவினன் வருக வென்று குவவுத்தோள் கொட்டி யார்த்தான். (உருக)

ஆர்த்திடு கின்ற காலத் தண்டத்தி னப்பா னின்ற
தேர்த்தொகை களிற்றி னீட்டந் திறலகெழு மிவுளிப பந்தி
சூர்த்திடு மவுண வெள்ளத் துண்ணென விணைடை யேகிப்
போர்த்தொழின் முயன்று செவ்வேற புடையுறத் தெழித்துச் சூழ்ந்த ()

நீணுதல் விழியின் வந்த நிருமலக் கடவு டன்னை
யேனொடு மண்டத் தப்பா லிருந்திடு தானை சுற்றச்
சேணுறு நெறிக்க ணின்ற திசைமுகன் முதலாந் தேவர்
காணுத லோடு முள்ளங் கலங்கிமற் றினைய சொல்வார். (உருங)

காலமோ டுலக முண்ணக் கனன்றெழு கரிய தீயின்
கோலமோ வண்டத் தப்பாற் குரைபுன னீத்தந் தானோ
வாலமோ வசனிக் கொண்மூ வாயிர கோடி சூழ்ந்த
சாலமோ யாதோ வென்று தலைபனித் திரியல போனார் (உருச)

ஆயின காலை தன்னி லண்டங்க டோறு நின்ற
மாயிருந் தகுவன் றானை வந்துதன் மருங்கு சுற்றிப்
பாய்புனன் முகில்கான் றென்னப் படைத்தொகை வீசி யார்ப்பத்
தீயுரு வான செம்மல் சிறிதுதன் னாட்டம் வைத்தான். (உருரு)

அடலையி னலத்தைவீட்டி யரும்பெற லாக்கஞ் சிந்தி
யடலையி னுணாவின் றாகு மவுணர்கோன் றானை முற்று
மடலையி னெடுவே லண்ண லழலெழ விழித்த லோடு
மடலையி னுருவா யண்டத் தொல்லுரு வழித்த மன்னோ. (உருசு)

முற்படு மனிக முற்று முடிதலு முடித லின்றி
யெற்படு மண்டத் தப்பா லீண்டிய பதாகி னிக்குட்
பிறபட வளப்பில் சேனை பெயர்ந்துமற் றீண்டை துன்னிச்
சிற்பரன் குமரன் றன்பாற் படைமுறை சிதறிச் சூழ்ந்த. (உருஎ)

பரப்பொடு மிடைந்த தானைப் பரவையை நோக்கி யைய
னொருபபுமிழ் தன்மைத் தென்ன நெட்டுயிர்ப் பனில முந்தி
யுரபபினன் சிறிதே யற்றா லும்பரிற குவிந்த பூளைப்
பொருப்பிடை யழல்புக் கென்னப் பூழியா யுலகம் போர்த்த. (உருஅ)

மாட்சியி னுலவு சேனை வடிவெலாம் விடுத்துத் தொல்லை
மாட்சியி னுயிரே தாங்கி மலைதுமென் றுன்னிப் பின்னுஞ்
சூட்சியின் வளைந்த வாபோற் சோதிவேற் குமரன் றன்பாற்
சூட்சியின் மேவிற் றம்மா தூயநுண் டுகளி னீட்டம். (உருகூ)

அந்தமி றானை முற்று மத்தனே ருங்கா ரத்தால்
வெந்துக ளாகப் பின்னு மேலையண் டத்து ணின்ற
தந்தியும் பரியுந் தேருந் தானவப் படையு மாத்து
வந்தவன் றயலிற் சூழ வரம்பிலா முதல்வன் கண்டான். (உசுO)

திருத்தமிழ் மதுரை தன்னிற் சிவன்பொரு ணிறுக்கு மாற்றா
லுருத்திர சரும னாகி யுற்றிடு மிமலன் வெம்போ
ரருத்திகொள் கணிச்சி சூல மாழிதண் டெழுவ தாகுங்
கரத்தினிற் படைகட் டம்மை நோக்கியே கழற லுற்றான். (உசுக)

வென்றியம் படைகாள் கேண்மோ விரைந்துடன் றழுவி நம்பாற்
சென்றிடு மனிகந் தன்னைச் செந்நெறி பெறும லப்பா
னின்றிடு படையை யெல்லா நீவிரப லுருககொண் டேகிக்
கொன்றிவண் வருதிரென்று கூறிமற் றிவற்றைத் தொட்டான். (உசுஉ)

ஆதிநா யகன்விட் டுள்ள படையெலா மனந்த கோடி
சோதியார் கதிருந் தீயும் பணிகளும் போலத் தோன்றி
யேதிலா னனிக மாகி யிம்பருற றனவி மைப்பின்
பாதியின் முன்ன மட்டுப் பெருவிறல் படைத்த மன்னோ (உசுங)

தூயதோர் குமரற் சூழ்ந்த படையைமுன் றொலைத்து வீட்டி
யேயின படையோ ரைந்து மிம்பரே யொழிய நின்ற
வாயிரத் தோரே ழண்டத் தகலமுஞ் சென்று சென்றாங்
கோய்வற வெழுந்த தானை முழுதுமட் டிலவு கின்ற. (உசுச)

ஐவகைப் படைகண் முற்று மண்டங்க டோறு நின்ற
வெவ்விய வவுணர்த் தேய்த்து விரைவொடு திரித லோடுந்
தெவ்விபு லவுணர் மன்னன் செயிர்த்துமற் றிதனை நோக்கி
யிவ்வொரு கணத்தின் முன்ன மிவணுயி ருண்ப னென்றான். (உசுரு)

சாற்றியித தன்மை தன்னைத தானவர்க் கரசன் முன்னங்
கூற்றுயிர் குடித்த நோன்முட் பண்ணவன் கொடுப்பக் கொண்ட
மாற்றருந் திகிரி தன்னை வாங்கினன் வழிபட் டேத்திக்
காற்றினுங கடிது செல்லக கந்தவேள் மீது விட்டான். (உசசு)

விட்டிடு திகிரி யாரும் வெருக்கொள விரைந்து சென்று
கிட்டிய காலைச செவ்வேள கிளர்ந்ததோர பாணி நீட்டி
வட்டணை நேமி தன்னை வருதியா லெனறு பறற
வொட்டல னதனை நோககி யுளந்தளர்ந் துயிர்த்து நின்றான். (உசஎ)

உண்ணிலா மாயை வல்ல வொருதனித் தோமே னின்றோ
னெண்ணிலா வுருவங் கொண்டே யிருங்கணை மாரி தூர்ப்பத்
தெண்ணிலா மௌலி யண்ண லுதவிய செம்ம லேககி
நண்ணலா னொருவன் மாய நன்றுநன றென்று நககான. (உசஅ)

சிறுநகை செய்து மேலாஞ் சேதனப பகழி பூட்டி
யறுமுக னவுணா செமமா லாறறிடு மாய முறறு
மிறைதனின முடித்தி யென்றே யேவலும விரைவி னேகி
முறைநெறி பிழைததோன் மாய முறறொருங் கட்ட தன்றே. (உசகூ)

மாயையி னுருவ நீங்க வலியழிந் துள்ள மாழ்கித்
தீயவ னொருவ னாகிச சேனுயா தேரி னின்றோ
னுயது தெரிந்து வாளோ ராறுமுகத் தவனைப போறறிட
பாய்புனற கடலி னார்த்துப பனிமலா மாரி தூர்த்தார. (உஎ0)

தூர்த்தலுந் தேருந் தானுந் துண்ணெனக் கரந்து சூரன்
பேர்த்திடு மண்ட கூடப பித்திகை வாயி லெய்தி
யார்த்தறை கூவிப புக்காங் கபபுறத் தண்டஞ் செல்லத
தீர்த்தனு மதனை நோககித் தீயனைத் தொடாந்து போனான். (உஎக)

தொடாந்துதன் மனத்திற செல்லுந் தொல்லைமா விரதத் தோடுங்
கடந்தபே ராடன மிகக காசிபன் றனய னினற
விடந்தலைப் படலு மனனு னெந்தையோ டிகறபோ ராறறி
யடுந்திறன் மாயை நீரா லப்புறத தண்டம போனான். (உஎஉ)

இந்நிலை யவுணா கோமா னிருநிலத் தண்ட முற்று
மின்னெனப் படாந்து தோனறி வெய்யபோா விளைத்து நின்று
பின்னருங் கரந்து செல்லப பிரானுமவ் வண்டந் தோறுந்
துன்னலன் றனைவி டாது தொடாந்தம ரியற்றிப போனான். (உஎங)

வேறு

ஆய காலை யயன்முதற் றேவாக
ணைய மிக்க குரவரை நீங்கிய
சேயி னோர்களிற் றேம்பித் திருமக
னுய கன்றனை நோக்கி நவிலுவார். (உஎச)

வலங்கை வாளுடை மாயைதன் மாமகன்
பொலன்கொ ளண்டப் புரைதனுட் போயினு
னிலங்கு வேற்படை யெந்தைதன் போரிடை
விலங்கி னுனல னென்றும் விளிகிலான். (உஎரு)

மாயை யாற்றவும் வல்லவ னீண்டொரீஇப்
போய தன்மை புணர்ச்சிய தேயலா
லாயின் வேறிலை யாறிரு மொய்ம்புடைத்
தூயன் மற்றது சூழ்ந்திலன் போலுமால். (உ௭௬)

வாடி னானென மாறற லைத்தொடர்ந்
தோடி னானெந்தை யொல்லையிற் சூரனைக்
கூடி னான்கொல் குறுகல னாகியே
நாடி னான்கொ லறிகில நாமெலாம். (உ௭௭)

மாக மேனிமி மறைந்தயண் டத்தினூ
சேகு லாவிய சிந்தையன் றன்னுட
னேகி னானைய னென்னினித் தான்விளை
வாகு மோவென்று மஞ்சுது மேழையேம். (உ௭௮)

என்ற காலை யிலங்கெழிற் பூவைபோ
னின்ற மாயவ னீண்மல ரோன்முதற்
றுன்றும் வானவர் சூழலை நோக்கியே
யொன்று மன்பொ டுளைபபட வோதுவான். (உ௭௯)

வேறு.

வஞ்ச மேதகு மவுணர்கோ னுற்றலை மதித்திண
டஞ்சி யஞ்சியே யிரங்கலி ரறுமுகத் தொருவனை
செஞ்சி லைத்தனி வன்மையும் வீரமுந் தெரிந்து
நெஞ்ச கத்திடை யையுறு கின்றது நெறியோ (உ௮0)

ஓதி யாகியு முணர்ந்தவாக் குணரவு மொணனு
நீதி யாகியு நிமலம தாகியே நிகழுஞ்
சோதி யாகியுந் தொழுதிடு மெய்மனோர் கோலமா
மாதியாகியு நின்றவ னறுமுக னென்றே. (உ௮௧)

ஈறி லாதமா பரமனே குழவியி னியலபா
யாறு மாமுகங் கொண்டிடுத் தாமெனன்ப தல்லால
வேறு செபபுதற் கியையுமோ மேலவன் றனமை
தேறி யுந்தெளி கின்றில வுமதுசிந் தையுமே. (உ௮உ)

ஐயமெய்தலி ராயிர கோடி யண்டத்தும
வெய்ய னேகினுந் தொடர்ந்துபோய் வெஞ்சம ரியற்றிச
செய்ய வேலவன் றுரந்துவர் திடுந்தினைத் துணையிற
கையி னெல்லிபோற் காட்டுவ னீவிருங் காண்மோ (உ௮௩)

என்று மாயவன் கழறலு மயன்முத லெவரு
நன்றெ னத்தெளி வுற்றன ரவ்வழி நண்ணுற
னென்றி னாயிர கோடியண் டத்தினு மோடி
நின்று நின்றம ராடினன் எந்தையை நோக்கு. (உ௮௪)

வெந்தி றற்சம ராற்றியே யவுணர்கோன் மீட்டு
மிந்த வண்டத்து மகேந்திர வரைப்பிலவந் திறுத்தான்
முந்து நீழலை விடாதுசெல் வோரென முனிந்து
கந்த னுந்தொடர்ந் தவனொடு போந்தனன் கடிது. (உ௮௫)

வேறு.

போந்திடு தன்மை நோக்கிப் புராரிதன் புதல்வ னங்க
ளேந்தலைத் தொடர்ந்தா னென்று விம்பரி லவுணர் தானை
தீந்தழ லென்னப் பொங்கிச் செங்கையிற் படைகள் வீசி
யாய்ந்திடு முணர்வின் மேலா மாதிதன் புடைசூழ்ந் தார்த்தார். (௨௮௬)

நாதனு மதனை நோக்கி நன்றிவர் முயற்சி யென்று
வோதினன் முறுவல் செய்ய வொன்னலன் றானை தொன்றுண்
மூதெயி லென்ன நீறாய் வெந்துடன் முடிந்த தம்மா
தாதைதன் செய்கை மைந்தன் செய்வது தக்க தன்றோ. (௨௮௭)

ஆன்தோர் காலைதன்னி லறுமுகம் படைத்த வண்ண
றாநகை யங்கி செல்லத் துண்ணெனப் பதைத்து வீழ்ந்து
தானவ ரனிகம் வெந்த சாம்பரின் குன்றை நோக்கி
வானவர் மகிழ்ந்து பூத்தூய் வள்ளலை வழுத்தி னின்றார். (௨௮௮)

முருகவிழ் தொடைய லான்றன் முறுவலா னனிக முற்றும்
விரைவினுண் டுகள தாகி வீழ்தலு மவுணர் வேந்த
னொருவனுந் தமிய னின்றா னெண்டமிழ் முனிவ னுண்ணத்
திரைகட லின்றித் தோன்றுந் தீப்பெருங் கடவு ளொத்தான். (௨௮௯)

முன்படை குமர னங்கண் முறுவலித் திட்ட வாறுந்
தன்படை யழிந்த வாறுந் தமியன்றா னின்ற வாறுங்
கொன்படை வீர ரோடு குறட்படை யாக்கு மாறுந்
துன்புடை யவுணன் கண்டாங் குளத்தொடுஞ் சொல்ல லுற்றான். ()

பின்னுறு துணைவர் மைந்தர் பேரிய லமைச்ச ரேனோர்
முன்னுற முடிந்தா ரின்று முடிவுறாத் தானை முற்றும்
பன்னிரு கரத்து மைந்தன் படுத்தனன் றமிய னானே
னென்னிவண் செய்வ தென்று வுயிர்த்தன னெண்ண மிக்கான். (௨௯௧)

மாயவ டன்னை மன்னன் மனத்திடை நினைத்த லோடு
மாயவள் வந்து தோன்றி யரும்பெற லாற்றன் மைந்த
நீயொரு தமிய னாகி நின்றுளந் தளர்ந்தே யென்னைக்
கூயினை முன்னிற் றென்னை தெரிவுறக் கூறு கென்றாள். (௨௯௨)

அறிந்திடு மாயை யிவ்வா றறைதலுங் குமரன் போரின்
மறந்தகு துணைவர் மைந்தா மந்திரி தானை முற்று
மிறந்திட வெஞ்சி னேன்யா னியாவரு மெழுதற் கொத்த
திறந்தனை யருண்மோ வென்ன நகைத்தவள் செப்ப லுற்றாள். (௨௯௩)

உறுபடை சுற்றந் துஞ்ச வொருவனே யாயும் விண்ணோர்
சிறைவிடுத் துய்யு மாறு சிந்தனை செய்தி லாய்நீ
யறுமுகன் றன்னோ டின்னு மமர்செயக் குறித்தி யாயி
னிறைபெருஞ் செல்வ வாழ்க்கை நீங்கினை போலு மன்றே. (௨௯௪)

பன்னிரு தடந்தோள் கொண்ட பகவனைப் பால னென்றே
யுன்னலை யவன்கை வேலா லொல்லையிற் படுதி கண்டா
யின்னுயிர் துறக்க நின்று யென்மொழி கேட்பா யன்றே
சென்னியில் விதியை யாவ ராயினுந் தீர்ந்தா ருண்டோ. (௨௯௫)

நின்றிட வனைய தன்மை நின்னுள மகிழு மாற்றாற்
பொன்றினரெழுதல் வேண்டிற் புறக்கடற் கொருசா ராக
மன்றல்கொ ளமுத சீத மந்தர கூட மென்றோர்
குன்றுள ததனை யீண்டே கொணருதி கூடு மென்றாள். (உசுரு)

இவ்வகை யுரைத்து மாயை யேகின ளேக லோடு
மைவரை யென்ன நின்ற மன்னவர் மன்னன் கேளா
வவ்வைதன் சூழ்ச்சி நன்று லடுகளத் தவிந்தோ ராரு
முய்வகை யிதுவே யென்னு வுன்னின னுவகை மிக்கான். (உசுஎ)

ஆவகை யுவகை கொள்ளா வமுதமந் தரங்கொண் டேக
வேவரை விடுத்து மென்றே யிறைப்பொழு தவுணர் தங்கள்
காவலன் முன்னி மாயக் கடுமுரண் டேரி னீங்கித
தேவிய லரிமா னேற்றுத் திறலுடை யெருத்தம் புக்கான். (உசுஅ)

இந்திர ஞாலந் தன்னை யிறையவன் விளித்து நீயென்
புந்தியின் விரைந்து சென்று புறக்கடன் மருங்கின் மேவி
யந்தம தடைந்தோர்க் காவி யளித்திடு மமுதங் கொண்ட
மந்தர கிரியைக் கீண்டு மறறிவட் கொணாதி யென்றான். (உசுகூ)

விழுமிய மாய மான்றேர் வினவியோர் கணத்தின் முனன
மெழுகட லினுக்கு மப்பா லிருந்திடு கடலின் சார்போ
யழிவுறு தங்க ணின்ற வமுதமந் தரததைக் கொண்டு
வழிபடர் கதியின் மீண்டு மகேந்திரம் புக்க தன்றே. (கூ00)

வேறு.

அக்காலையி லிரதந்தரு மமுதத்தனி வரையின்
மெய்க்கால்வர வந்நாள்வரை வெமபூச லியறறி
மைக்காலன்மெய் யுயிருண்டிட மறியும்படை முழுதுந்
தொக்காலம தெழுந்தாலெனத் துண்ணென்றெழுந் தனவே. (கூ0க)

பரியின்றொகை முழுதுய்ந்தன பனைபோலிய நெடுங்கைக்
கரியின்றொகை முழுதுய்ந்தன கடுந்தேர்ததொகை யீர்கரு
மரியின்றொகை முழுதுய்ந்தன வவுணபபடை யாகி
விரியுந்தொகை முழுதுய்ந்தன மெய்யூறது நீங்கி (கூ0உ)

வடிவற்றுட லழிந்திட்டிடு முயிரானவு மருமம
மடிகைததல முடிதோண்முத லங்கங்கள் குறைந்தே
முடிவுற்றிடு முயிரானவு முளரிக்கன னுண்ணப
பொடிபட்டிடு முயிரானவு மெழுந்திட்டன புவிமேல. (கூ0கூ)

மிண்டிக்கடி துயிர்பெறறெழு வெஞ்சூரமுத லனிக
மெண்டிக்கொடு புவிபாதல மிருநாறகட லெங்கு
மண்டிக்கக னத்தேழ்வகை யுலகங்களு மல்கி
யண்டத்தனி முடிகாறுமடைந்திட்டன மிடைந்தே. (கூ0௪)

மாதண்டமெ ழுத்தோமரம் வயிரப்படை வாள்கோல்
கோதண்டமு தற்பல்படை கொடுதானவ ரனிகம்
வேதண்டமெ னச்சேனுயர் வேழம்பரி நிரைகண்
மூதண்டம்வெ டிக்கும்படி முழங்குற்றன வன்றே. (கூ0ரு)

எழுந்தான்வயப் புலிமாமுக னிரவிப்பகை யெழுந்தா
னெழுந்தானெரி முகவெய்யவ னிளமைந்தனு மெழுந்தா
னெழுந்தானறத் தினைக்காய்பவ னிருபாலரு மெழுந்தா
ரெழுந்தாரொரு மூவாயிர ரேனோர்களு மெழுந்தார். (௩0௬)

சூர்க்கின்றதொல் வடிவங்கொடு துண்ணென்றெழு கின்றோர்
யார்க்கின்றன ரனிகங்களைப் பகுவாய்திறந் திடிபோ
லார்க்கின்றனர் தமதாடலை யறைகின்றனர் நம்மேற்
போர்க்கின்றுவந் தனாயாரெனப புகல்கின்றன ரிகலால். (௩0எ)

ஈடுற்றிடு சமரெல்லையி லிடையுற்றிடு படைக
ளூடுற்றிவ ணெடுத்திட்டனர் நறையுற்றிடு தும்பை
சூடுற்றிடு மணிமாமுடிச் சூரன்புடை தன்னிற்
கூடுற்றனர் வெமபோரசெயுங் குறிபபுற்றன ரன்றே. (௩0அ)

வேறு.

உய்ந்திவர் யாவரு மொல்லை யெழுந்தே
யந்தமில் சேனையொ டார்த்திடு காலை
யிந்திர ஞால மெனபபடு மான்றோர்
வந்தது தானவர் மன்னவன் முன்னம். (௩0௯)

பொறறையி னேடு பொலனகெழு மான்றே
ருற்றது மன்பின ருய்க்கெழு மாறு
பிற்ற பதாதியிரைத தெழுமாறுந்
தெற்றென மாயவள் செமம தெரிந்தான். (௩க0)

மகிழ்ந்தன ஞாததனன் வானவர் தமமை
யிகழ்ந்தனன விமமித மெய்தினன் யாயைப்
புகழ்ந்தனன் மேனி பொடிததன னெஞசந்
திகழ்ந்தன னன்னகை செய்தன னன்றே. (௩கக)

உந்தி கிரப்புறு முண்டிய தின்றி
முந்தி கிரபபிடை மூழ்கினன் வல்லே
வெந்திற லாளிவி யன்றவி சேறி
யிந்திர நலவள மெய்திய தொத்தான். (௩கஉ)

ஓங்கிய சென்னி யுயர்ந்தன மொய்ம்பு
வீங்கிய தாளுடன் மிக்கும தர்ப்புத
தேங்கிய சிந்தை சிலிர்ததவு ரோம
மாங்கவ னெய்திய தாரறை கிற்பார்.* (௩கங)

வஞ்சனி தந்திடு மைந்தனிவ் வாற்று
னெஞ்ச மகிழ்ந்தவ ணின்றிடு காலை
நஞ்சமெ ழுந்திடு நாள்கொலி தென்றே
யஞ்சி நடுங்கின ரண்டர்க ளெல்லாம். (௩கச)

பொன்னகர் வாழ்க்கை புவிததிசை வாழ்க்கை
பின்னுறு கின்ற பெரும்பத வாழ்க்கை
யெந்நகர் வாழ்கையு மெய்திய வின்னே
யொன்னலா கொலுமுன் னேடுது மென்றா. (௩க௫)

ஊர்ந்திடு மூர்திக ளோர்புடை தம்பாற்
சார்ந்தவ ரோர்புடை தாமொரு பாலாய்ச்
சேர்ந்திடு கைப்படை சிந்திவிண் ணோர்கள்
பேர்ந்திரி கின்றனர் பின்னது நோக்கா. (௩௧௬)

கிள்ளைபு றாமயில் கேழ்கிள ரன்னம்
பிள்ளை மணிக்குயில் பேரிசை யாந்தை
கள்ளுணும் வண்டு கரண்டம தாதிப்
புள்ளுரு வங்கொடு வானவர் போனார் (௩௧௭)

அங்கது நோக்கி யடற்கண வீரர்
மங்கிய தானையு மாண்டுளர் யாரு
மிங்கெழு கின்றனர் யாமிவண் வீந்தாஞ்
சங்கையி லென்று தளர்ந்தலை வுற்றார். (௩௧௮)

இலக்கரு மெண்மரு மேந்தலு நோக்கி
யலக்கணு மச்சமு மற்புத நீருங்
கலக்கமும் வெய்ய கடுஞ்சின முங்கொண்
டுலைக்கன லன்ன வுயிர்ப்பொடு நின்றார். (௩௧௯)

வேறு.

வென்றி கொண்டவேற் குமரனிவ் வினைவெலா நோக்கி
நின்ற வொன்னலன் சூழ்ச்சியும் வலமையுஞ் சொன்னெறியுங்
குன்றின் வன்மையு முய்ந்தெழு பரிசனார் குழுவு
நன்று நன்றெனக் கையெறிந் தழலெழ நகைத்தான். (௩௨௦)

ஆன காலையி லரிமுக னலரிதன் பகைஞ
னேனை மைந்தர்க ளறத்தினை வெகுண்டிடு மேந்தல்
சேனை காவலர் யாவருஞ் சூரன்முன் சென்று
மான வீரமோ டிறைஞ்சிநின் றினையன வகுப்பார். (௩௨௧)

எந்தை நீயிவ ணிருத்தி யாமெலா மேகிக்
கந்தவே ளுடன் வன்படை வீரரைக் கடிந்து
சிந்த ராகிய பூதர்தந் தொகையையுஞ் செகுத்து
வந்து நின்னடி வணங்குதும் வல்விரைந் தென்றார் (௩௨௨)

கொற்ற வீரர்க ளிவ்வகை யுரைத்தலுங் கொடியோன்
மற்றிவ் வாசக நன்றெனப் போற்றுவான் வந்தீர்
பற்றலன்பெரு வன்மையும் வீரமும் படுத்து
வெற்றி யின்றெனக் கருளுதி ராலென விடுத்தான் (௩௨௩)

விடுத்த காலையில் விடாதுசூ ழனிகங்கள் விரவி
யடுத்து வந்திடப் பொள்ளென வேகியே யார்த்துப்
பிடித்த பல்வகைப் படைகளு முருமெனப் பெய்து
வடித்த வேற்படை நம்பியை யனைவர் வளைத்தார் (௩௨௪)

தீங்க ளற்பெருங் கடவுள்பாற் செறியிருட் டொகைபோல்
வாங்கு விற்கரத் தையனை யவுணர்கள் வளைப்ப
வேங்க லுற்றனர் பாரிட ரேனையோ ரெம்மாற்
றாங்கு தற்கரி திப்பெரும் படையெனத் தளர்ந்தார். (௩௨௫)

விறலு டைப்பஃ றானையும் வெய்யவர் தொகையு
நொறிலு டைக்கதி கொண்டுசூழ் வுற்றது நோக்கி
யறுமு கத்தனிப் பண்ணவ னுயிர்த்தொகை யனைத்து
மிறுதி யைப்புரி கடவுண்மாப் படையினை யெடுத்தான். (கஉசு)

அங்கை யிறகொடு சிந்தையால் வழிபட லாற்றிச்
சிங்க மாமுக னுதியா மவுணர்தந் திறத்தைச்
சங்கை யின்றியே நின்றிடு தானைக டம்மை
யிங்கு வலலையி லடுதியா லெனவிடுத் திட்டான். (கஉஎ)

விடுத்த காலையிற் கட்செவி நிரைகளும் விடமு
மிடிக் குழாங்களு முருத்திர ருருக்களு மெரியுங்
கடற்பெ ருங்கணத தொகுதியு மளவிலாக் கடவுட்
படைக்க லங்களு மாய்விரிந் ததுசிவன் படையே. (கஉஅ)

இன்ன தன்மையா லரன்படை மூதண்ட மெங்குந்
துன்னி யார்த்தெழீஇத் துண்ணெனச் சென்றுசூழ் வுற்று
முன்ன ருய்ந்தெழு மவுணர்தம் படையெலா முருக்கி
யொன்ன லன்றமா யாரையு மொருங்குகொன் றதுவே. (கஉகூ)

முந்து வெய்யசூர்ப் பரிசனத் தொகையெலா முருக்கி
யிந்தி ரப்பெரு ஞாலமாந் தேர்மிசை யிருந்த
மந்த ரப்பெருங் கிரியினைத் துகளெழ மாய்த்துக்
கந்தவேள் புடைமீண் டதுசிவன் படைக்கலமே. (கஙo)

அரிமு கத்தவ னுதவன் றனைமுன மழன்றோ
னெரிமு கத்தவன் வச்சிர மொய்ம்ப னாற்றிருவர்
முரண் மிகுத்தழு வாயிரா றப்பகை முதலோர்
விரிக டற்படை வெறபொடு முடிந்தவண் வீழ்ந்தார். (கஙக)

தன்மை யங்கவை யாவையுங் கண்டனன் றளர்ந்தான்
வன்மை நீங்கினன் கவன்றன னிரங்கிமெய் மறந்தான்
புன்மை யாயின னுயிர்த்தனன செயிர்த்தனன் புலர்ந்தான்
றொன்மை போலவே தமித்தனன் றுணையிலாச் சூரன். (கஙஉ)

கண்ட கன்படை முற்றொருங் கிறந்தது காணூ
வெண்டொ கைப்படு பூதரு மேனைவீ ரர்களு
முண்ட கந்தனி லிருந்திடு புங்கவன் முதலா
மண்டர் யாவருந் துயரொரீஇ யுவகைபெற் றார்த்தார். (கஙங)

அழுந்து மார்ரு ளொருவி விண்மிசை தனிலடைவோர்
கழிந்த தோரிடை யூற்றினன் மீட்டுமக் கதியில்
விழுந்ததே யெனத் துன்பொடு நின்றனன் விளிவுற்
றெழுந்த தானையை யிழந்திடு மவுணருக் கிறைவன். (கஙச)

அனைய தன்மையி னின்றிடு மவுணர்கோ னற்றச்
சினம தெய்தியென் படையெலாஞ் சிதைத்தபா லனையுந்
தனிமை செய்துபின் வெல்வனென் றுளங்கொடு தழற்கண்
முனைவ னல்கிய தேரினை நோக்கியே மொழிவான். (கஙரு)

கொச்ச கத்தியற் குதலைவாய் மதலைபாற் குழீஇய
வச்சி ரத்தெயி றுடையவெம் பூதரை வயின்சூழ்
கைச்சி லைத்திறல் வீரரைக் கவர்ந்துபோ யண்டத்
துச்சி யிறகொடு வைததனை யிருததியென் றுரைத்தான். (௩௩௬)

உரைதத காலையி னன்றென வினவியே யோடித்
திருத்த குந்திறல் வாகுவை முதலினோர் திறத்தைக்
கிருததி மப்பெருந் தானையைக் கிளையொடும் வாரிக்
கருததை மாமயல் செய்தது கைதவன் கடுந்தேர். (௩௩௭)

கையர் தன்மையிற் கடற்படை முழுவதுங் கவர்ந்து
மையல் சிந்தையிற் செய்துதன வயினிடைத் தாங்கி
யொய்யெ னச்சென்று மூதண்ட கோளகை யுறிபபோய்
வெய்ய வன்பணி யாறறியாண் டிருந்தது வியன்றேர். (௩௩௮)

விமல னவ்வழித் தானையம் பெருங்கட னீங்கத
தமிய னின்றனை னுங்கது தருவாகோன் காணு
நமது தோவலி நன்றென வுவகையா னகைததா
னமர ரச்செய னோக்கியே பின்னரு மயர்ந்தார். (௩௩௯)

சூரி டத்துறு சூழ்ச்சியுந் துணைவர்க டம்மைப
பாரி டததொடு முகந்தெழீஇ மாயையிற் படந்த
தேரி டத்தியல் வன்மையு மாங்கனந் தெரிந்தா
னேரி டப்பிற ரின்றியே தமியனு நெடியோன். (௩௪0)

கண்டு சீறியோர் கார்முகம் வாங்கியே கடிதோர்
திண்டி றற்கணை பூட்டிநஞ் சேனையைப் பறறி
யண்ட கோளகை புக்குறு மடுமுரண் டேரைக்
கொண்டு வலலையின் வருகென விடுததனன குமரன. (௩௪௧)

விடுந்த னிக்கணை வேலெனச் சென்றுவில் விசி
யிடந்தி கழ்ந்திடு மேழவகை யுலகமு மிமைபபிற்
கடந்து மற்றுள பதஙகளு நீங்கியோா கணததிற்
றொடாந்து மூதண்ட கோளகை புகுந்தது துன்னி. (௩௪௨)

துன்னி வெஞ்சர மாயமான் றேர்வலி தொலைச்சி
யன்ன தைக்கொணர்ந் தொல்லையின் மீண்டுள தம்மா
மின்னு லாய்நிமி ரெழிலியை விண்ணினும் பற்றி
யிங்கி லத்தினிற் கொடுவரு மாருதத் தியல்போல். (௩௪௩)

வேறு.

வெந்திற னெடுங்கணை மீண்டு ஞாலமே
லிந்திர ஞாலமா மிரதத் தைக்கொடு
கொந்தவிழ் மாலைவேற் குமரன் றன்முனம்
வந்தது வானவர் வழுத்தி யார்பபவே. (௩௪௪)

முப்புர முடித்தவன் முருகன் றன்கணை
யிப்புவி வருதலு மிலக்கத் தெண்மரு
மொப்பரு மிளவலு மொல்லென் பூதருங்
குப்புற லுறறனர் கொடியன் றேரினும். (௩௪௫)

குதித்தனர் புடவியிற் குமர வேளிரு
பதத்திரு மலர்தனைப் பணிந்து பன்முறை
துதித்தனர் புடையராய்த் துன்னி நின்றனர்
கதித்திடு பேரருட் கடலின் மூழ்கியே. (௩சசு)

ஆவதோர் காலையி லகிலம் யாவுமா
மூவிரு முகனுடை முக்க ணான்மகன்
வாவியல் வனப்புடை மாயத் தேர்தெரீஇத்
தேவர்கள் பரசுற வினைய செப்புவான். (௩சஎ)

தொல்லையில் வரம்பெறு சூரன் றன்புடை
செல்லலே யாங்கவன் முடிகை திண்ணமான்
மல்லலந் திருவுடை மாயத் தேரநீ
நில்லிவ ணென்றன னிகரி லானையான். (௩சஅ)

ஆண்டது வினவுறு வவுணர் கோன்புடை
மீண்டிட லஞ்சியே மேலை வன்மைபோய்
மாண்டிடல் பிறப்பிலான் மதலை மாடுறப
பாண்டிலந் தேரது பணியி னின்றதே. (௩சகூ)

அண்டம தடைந்ததே ரையன் வாளியான்
மண்டல மிழிந்துதன் மருங்கு றுதது
மெண்டகு பூதரும் யாரு மீண்டதுங்
கண்டன னவுனர்கோன் கனலிற் சீறினன். (௩இ0)

அன்னது காண்டலு மவுண னங்கொரு
கொன்னெடுஞ் சிலையினைக் குனித்து வல்லையிற்
பன்னிரு கரமுடைப் பண்ண வன்மிசை
மின்னிகர் பகழிகண் மீட்டும் வீசினன். (௩இக)

மாசறு கங்கைதன் மதலை யவ்வழிக்
காய்சினங் கொண்டொரு கார்மு கம்வளைஇ
யாசுக மாரிபெய் தவுணர் கோமகன்
வீசிய கணையெலாம் விலக்கி னனரோ. (௩இஉ)

கையனு மத்துணை காய்சி னங்கொளீஇ
யொய்யென வெந்தைதே ருய்க்கும் வன்மையோன்
மெய்யிட மெங்கணும் வெளியு றுவகை
செய்யன பகழிகள் செறித்துப் போர்செய்தான். (௩இ௩)

பொருந்தலன் கணைபடப் புலம்பிக் காற்றினோன்
வருந்தினன் மயங்கினன் மாக்க டேண்டல
னிருந்தனன் வறிதவ னியற்கை யாவையுந்
தெரிந்தனன் குமரவே ளருளின் செய்கையான். (௩இச)

கண்டிடு முருகவேள் கணைக ளாயிரம்
விண்டொடா செலவினால் விடுத்து வெய்யசூர்
கொண்டிடு சிலையினைக் குறைத்துப் பல்பெருந்
துண்டம தாக்கின னமரர் துள்ளவே. (௩இ௫)

### வேறு.

கைச்சிலை முரியச் சூரன் கண்ணுதற் பெருமான் றந்த
முச்சிகைப் படையொன் றேந்தி முடங்குளை யூர்தி தன்னை
யுச்சியி னீபஞ் சூடி முலகுடை யொருவ னூர்ந்த
வச்சுறு தடந்தோ முன்ன ரணுகுறத் தூண்டிச் சென்றான். (௩௫௬)

தூண்டிய வரிமா னேறு சூரன துளத்திற் போந்து
மாண்டகு தனது தீய வளாளுகிர்க் கரத்தா லெந்தை
பாண்டிலந் தேரை யாற்றும் பரிததொகை பதைபப மோதி
யாண்டைய னின்ற பூத ரலமர வார்தத தன்றே. (௩௫௭)

அன்னது பொழுது தன்னி லரிமிசைச் சென்ற சூரன்
றன்னுடை வலக்கை கொண்ட தனிபபெருஞ் சூலந் தன்னைப்
பன்னிரு தடந்தோள் கொண்ட பகவன்மேற் றிரிதது வீச
மின்னென நிலவு கான்று விண்வழிப படர்ந்த தன்றே. (௩௫௮)

நீடிய சூலஞ் செலல கிமிர்ந்தன வெழுந்து செந்தீக்
கூடின வசனி யீட்டங் குழீஇயின படையின் கொள்ளை
யாடியல் கணங்க ளீண்டி யார்ததன வதனை நோக்கி
யோடின ரமர ரானோ ருலகெலாம வெருவிற் றமமா. (௩௫௯)

அண்ணலு மதனை நோக்கி யாயிர கோடி வாளி
கண்ணகன் சிலையிற பூட்டிக் கதுமென வெதிர்தந் துய்பப
துண்ணென வவற்றை யெல்லாஞ் சூலமே றுணித்து வீட்டி
நண்ணலன் வெகுளித தீயி னுருவென நடந்த தன்றே. (௩௬0)

நடத்தலு முகமா றுள்ளோன் ஞானநா யகனீந் துள்ள
படைததிறல வன்மை யுன்னிப் பாணியொன் றதனின் மேவி
யடித்திடு குலிசந் தனனை யடையல னுய்தத சூலம்
பிடித்தனை வருதி யென்று பேசினன் செல்ல விட்டான். (௩௬௧)

விட்டிடு கின்ற வெல்லை வியன்பெருங் குலிச மேகி
நெட்டழற் சிகைமீக கான்று கிமிர்ந்திடு சூலந் தன்னைக்
கிட்டுத லோடும பற்றிக் கிளர்ந்தமுத் தலையுங கவ்வி
யொட்டலன் சிந்தை யுட்க வொய்யென மீண்ட தன்றே. (௩௬௨)

முத்தலைப் படையைக் கொண்டு முரண்மிகு குலிசஞ் செவ்வேள்
கைத்தல முய்த்தது தானுங கதுமென விருந்த தம்மா
வைத்தலைப பாந்தள் போற்றும பருவரைச் சிகர மூன்று
மித்தலப் புணரி தன்னி லிடுமெருத தியற்கை யேபோல். (௩௬௩)

ஆண்டது காலை தன்னி லறுமுகத் தையன் கையிற
றாண்டிய குலிசத் தோடு சூலமும் வருத லோடுங்
காண்டகு மமர ரெல்லாங் கரதல முச்சி கூப்பி
யீண்டிவன் றன்னை யட்டே யெமையளித் திடுதி யென்றார். (௩௬௪)

என்னலு மெந்தை கேளா விராயிர மபகழி பூட்டி
யொன்னல னூர்ந்து செல்லு மொருபெரு மடங்க லேற்றின்
சென்னியி லழுந்த லோடுஞ் சேண்கிளர்ந் தரற்றி வீழ்ந்து
தன்னுயி ரொல்லை வீந்து தரையிடைப் பட்ட தன்றே. (௩௬௫)

ஊர்திய திறந்து வீழ வொருதனிச் சூரன் காணாப்
பார்தனிற் பாய்ந்து நின்று பராபரன் செம்மல் கையிற்
கூர்தரு சூலம் போன கொள்கையுந் தெரிந்து பின்னாட்
சேர்தரு வடவை யென்னச் செயிர்த்திவை சிந்தை செய்வான் (௩௬௬)

தேரொடு படையை வௌவித் திறலுடை மடங்கல் சிந்தி
நேரலன் வலிய னேபோ னின்றன னீனயன் றன்னைச்
சாரதர் தொகையை யேனைத் தலைவர்க டம்மை யெல்லா
மோருருக் கொண்டி யானே விழுங்குவ னொல்லை யென்றான். (௩௬௭)

என்றிவை மனத்தி லுன்னி யிணையறு மாயை நீரா
னின்றுள வவுணர் செம்மனேமியம் புளளே போல
வொன்றொரு வடிவ மெய்தி யொலிதிரைக் கடலி னார்த்துத்
தன்றுணைச் சிறகர் பெற்ற தனிப்பெருங் கிரிபோ லுற்றான். (௩௬௮)

கறையடித் தந்தி சிந்துங் காய்சின வரிமே லுய்க்கு
நறையடிக் கமலத் தையை ஞாட்பிடை யாடற் கொத்த
பறையடித் திட்ட தேம்பாற படிமக ளுடலம் விள்ளச்
சிறையடிக் கொண்டு தீயோன் சேணிடை யெழுத லுற்றான். (௩௬௯)

மண்ணிடை வரைப்பு முற்று மணிச்சிறை யதனான் மூடி
விண்ணிடைப் பரிதி யொள்வாள் விலக்கியே சுழலும் வேலைக்
கண்ணிடைப் பெருமீன் குப்பை கவர்ந்திட வூக்கி றென்னத்
துண்ணெனப் பூதர் தானைச் சூழல்புக் கெறியு மாதோ. (௩௭௰)

அடித்திடுஞ் சிறகர் தன்னா லளவையில் பூதர் தம்மைப்
பிடித்திடும் புலவு நாறும் பெருந்தனி மூக்கிற் குத்தி
மிடற்றிடைச் செறித்து மெல்ல விழுங்கிடும் விறலவே லண்ணல்
கொடித்தடந் தேரைச் சூழுங் கொடியபுள் வடிவங் கொற்றம். (௩௭௧)

சுற்றிடுங் குமரன் றேரைத் தூண்டிய வலவன் றன்னை
யெற்றிடுங் கொடிஞ்சி யெஞ்ச விறுத்திடும் பரிக டம்மைக்
குற்றிடு மூக்கிற் சென்னி கொய்திடுங் குழீஇய வீரர்ப்
பற்றிடும் படைகண் முற்று மறித்திடு முறித்து வீசும். (௩௭௨)

இத்திற மவுணர் செம்ம லிருஞ்சிறைப் புள்ள தாகி
யத்தலைக் கறங்கி வீழ்வுற் றநந்தநந் திரித லோடு
முத்தியை யுதவு நோன்றாண் மூவிரு முகத்தன் காணாக்
கைத்தலம் புடைத்து நக்கு நன்றிவன் கறபி தென்றான். (௩௭௩)

எறித்தரு சுடர்வே லண்ண லிம்மென வெகுண்டு போரி
னிறுத்திய மேரு வென்ன நிமிர்ந்ததோர் வரிவில் வாங்கி
யிறகணை யநந்த கோடி மிசைமிசைக் கடிது பூட்டித்
திறத்தியல் புள்ளாய்ச் சூழு மவுணன்மேற் செலல வுய்த்தான் (௩௭௪)

நெறித்திகழ் பகழி மாரி நிமலன்விட் டிடலும் வெய்யோன்
சிறைப்புடைக் கொண்டு பாங்கிற் சிந்திட வவற்றை மோதிக்
குறைத்திடுந் தண்டந் தன்னாற் கொய்திடுந் தாளிற் பற்றி
முறித்திடுங் கிளர்ந்து வான முழுவதுஞ் சுழன்று செல்லும். (௩௭௫)

வேலைக ளெல்லை முற்றும் படர்ந்திடும் விராவி மேவு
ஞாலம தகல முற்றும் படர்ந்திடு நாகர் வைகும்
வாலிய வுலக முற்றும் படர்ந்திடும் வந்து பூத
சாலம தெறிந்து கவ்வித் தலைத்தலை மயங்கிச் செல்லும். (௩௭௬)

சூரன்மற் றினைய வாற்றாற் சுலாய்க்கொடு திரித லோடும்
பூரண னதனைக் காணூஉப் புள்ளெனப் பெயர்வான் றன்னைத்
தேரொடுந் தொடர்ந்து கோறல் பழியெனச் சிந்தை செய்து
வாரண முயர்த்தோன் றன்னை நோக்கினன் வானோர் தம்முள். (௩௭௭)

இந்திர னனைய காலை யெம்பிரான் குறிப்புந் தன்மே
லந்தமி லருள்வைத் தாள்ள தன்மையு மறிந்து நோக்கிச்
சுந்தர நெடுங்கட் பீலித் தோகைமா மயிலாய்த் தோன்றி
வந்தனன் குமரற் போற்றி மரகத மலைபோ னின்றான். (௩௭௮)

நின்றிடு மஞ்ஞைப் புத்தே ணெடுநிலங் கிழிய மேருக்
குன்றமும் புறஞ்சூழ் வெற்புங் குலைந்திடக் கரிகள் வீழ
வன்றிரை யளக்கர் நீத்தம் வறந்திடப் பணிக ளஞ்சத்
தன்றுணைச் சிறகான் மோதி யினையன சாற்ற லுற்றான். (௩௭௯)

ஐயகே ளமர ரெல்லாம் வழிபட வளியன் றன்பாற்
செய்யபே ரருளை வைத்தா யாதலிற் சிறுமை நீங்கே
னுய்யலா நெறியுங் கண்டே னுன்னடி பரிக்கப் பெற்றேன்
பொய்யுலா மாய வாழ்க்கைப் புன்மையு மகல்வன் மன்னோ. (௩௮௦)

அல்லல்செய் தெமரை யெல்லா மருஞ்சிறைப் படுத்தி வீட்டிப்
பல்வகை யுலகை யாண்ட வவுணர்கோன் பறவை யாக்கை
செல்லுழிச் சென்று சென்று செருவினை யிழைத்து வெல்வா
னெல்லையி லடியேன் றன்மே லேறுதி யூர்தற் கென்றான். (௩௮௧)

என்னலு முளத்திற் செல்லு மிவுளிமான் றேரி னீங்கிப்
பன்னிரு நாட்டத் தண்ணல் படர்சிறை மயூர மாகி
முன்னுறு மகவான் றன்மேன் மொய்ம்புடன் புக்கு வைகி
யொன்னலன் செலவு நோக்கி யும்பரி லூர்த லுற்றான். (௩௮௨)

ஆறுமா முகத்தெம் மண்ண லசனிபோ லகவி யார்க்கு
மாறிலா மயூர மென்னும் வயப்பரி தனைந டாத்தி
யீறுசேர் பொழுதிற் சூழு மெரியினை யடுவான் முன்னிச்
சூறைமா ருதஞ்சென் றென்ன வவுணனைத் தொடர்ந்து சூழ்ந்தான். ()

ஆகிய பொழுது தன்னி லாழியம் புள்ளாய்த் தோன்றி
மாகம துலவு கின்ற மாற்றல னதனை நோக்கிச்
சீகர வளக்க ரென்னத் தெழித்துமேற் சென்று தாக்கக்
கேகய வரசன் றானுங் கிடைத்தமா புரித லுற்றான். (௩௮௪)

திறங்கிளர் பசலைத் துண்ட நீட்டியே யாக்கை முற்று
மறங்கொடு கிணங்கு செங்கீர் வாய்ப்படக் கவவி வாங்கிப்
புறங்கிளர் சிலைப்பக டம்மாற் புடைத்துவெங் காலிற் றாக்கிப்
பிறங்குபுள் ளுருவ மானோ ரிவ்வகை பெரும்போர் செய்தார். (௩௮௫)

இத்திறம் பொருத காலைப் பிணிமுகத் தேந்த றன்னைப்
பைத்தலை யுடைய தூவி பறித்திடா வதன முற்றுங்
குத்திவெங் குருதி வீட்டிக் குருமணிக் கலாப மீர்த்து
மெய்த்துயர் புரிந்தா னேமிப புளளுருக் கொண்ட வெய்யோன். (ந௲அசு)

அச்செயன் முருகன் காணு வாரழ லென்ன நக்குக்
கைச்சிலை யதனை வாங்கிக் கடுந்தொழி லவுணர் மன்ன
னுச்சியின் முகத்திற காலி லுரத்தினிற் சிறைக டம்மில்
வச்சிர நெடுங்கண் வாளி வரம்பில தொடுத்து விட்டான். (ந௲அஎ)

விட்டிடு கின்ற வாளி வெய்யவ னங்க மெங்கும்
பட்டிடு கின்ற காலைப் பதைபதைத் துதிரஞ் சிந்தி
யெட்டுள திசையும் வானு மிருங்கட லுலக மெங்குங்
கட்டழல் சிந்திச் சீறிக் கறங்கெனத் திரியா நின்றான். (ந௲அஅ)

திரிந்திடு கின்ற காலைச் செஞ்சுடர்த் தனிவே லண்ணல்
புரந்தர னுருவாய் நின்ற பொறிமயி லொத்தி யேகி
யரந்தெறு கணைக டேடி யங்கமு மவுணன் றன்னைத்
துரந்தம ரிழைக்க லுற்றான் விண்ணவர் தொழுது போற்ற. (ந௲அகூ)

அத்தகு மெல்லை தன்னி னவுணர்க ளெவர்க்கு மேலோ
னெய்த்துள மெலிந்து சால விடருழந் திரக்க மெய்தி
மெய்த்தழ லென்னச் சீறி வேற்படை கொண்ட செம்மல்
கைத்தலத் திருந்த விலலைக் கறிப்பது கருதி வந்தான். (ந௲கூ0)

வருவது நிமலன் காணு மலர்க்கர மொன்றில் வைகு
மொருதனி யொள்வாள வீசி யொன்னலன் பறவை யாக்கை
யிருதுணி யாகி வீழ வெறிந்தன னெறித லோடு
மரியயன் முதயாந் தேவ ரனைவரு மாடல் கொண்டார். (ந௲கூக)

வேறு.

தாரார் வாகை சூடிய வேலோன் றன்கையிற்
கூரார் வாளாற புளளுரு வதைக் குறைவிக்கச்
சூராம் வெய்யோ னண்ட முகட்டைத் தொடவோங்கிப்
பாராய் நின்றான் விண்ணவ ரியாரும் பரிவெய்த. (ந௲கூ௨)

ஏழுட் பட்ட வாழ்திரை நேமி யிடைதூர்த்துத்
தாழ்விற செலலு மாதவர் தேரைத் தடைசெய்து
சூழிக் காலகள வானெறி செல்லுந் துறைமாறிப்
பாழித் திக்கை மூடின னின்றான படியானோன். (ந௲கூ௩)

ஆறூர் சென்னிப பண்ணவன் மைந்த னதுகாணுச்
சீறா நன்றாற சூரபுரி மாயத் திறனென்னுக்
கூறா வங்கைச செஞ்சிலை தனனைக் குனிவித்தே
யூறா வெங்கோ லேழு தொடுத்தே யுரைசெய்வான். (ந௲கூ௪)

நெடுவா னத்தின் காறு மெழுந்தே நிமிர்வெய்தி
முடிவான் வெய்யோன் பாரக மாயென் முன்னின்றான்
கடலே ழென்னுந் தனமையி னீவிர் கடிதேகி
யடுவீ ரென்றே விட்டனன் யார்க்கு மறிவொண்ணா. (ந௲கூ௫)

ஒற்றைச் செவ்வே லோன்விடு வாளி யுலகெல்லாஞ்
சுற்றிக் கொண்டே யுண்டிடு நேமித் தொகைபோலாய்ச்
செற்றத் தோடு மார்ப்பொடு மேகித் திரைவீசி
மற்றச் சூரன் றன்னுரு வத்தை வளைவுற்ற. (௩௯௬)

வளையா வெஞ்சூர் மாயிரு ஞால வடிவத்தைக்
களையா வுண்டே யின்மைய தாக்கிக் கணையேழுந்
திளையார் நீத்தத் தொல்லுரு நீங்கிச் செருவின்கண்
விளையா டுற்ற வெம்பெரு மானபால் மீண்டுற்ற. (௩௯௭)

காணு வெய்யோன் பாருரு நீங்கிக் கடலெல்லா
மூணு வையம் வானொடு முண்டாற் கெழுமாபோ
லேணார் நீத்தத் தோரவடி வாகி யிறைமுன்னா
நீணு கத்தின் காறு நிமிர்ந்தே நின்றிட்டான். (௩௯௮)

நேரான் மாயத் தொல்லுரு வதனி னிலைநோக்கிக்
கூரார் வாளி நூறு தொடுத்தே கொடியோன்பாற்
சேரா வூழித் தீயியல் பாகிச் செறிவுற்றுப்
பேரா தட்டே வம்மென விட்டான் பெயர்வில்லான். (௩௯௯)

அவ்வா றுக வாளிக ணூறு மருணீரால்
லெவ்வா யங்கிப் பேருரு வாகி விரவிப்போய்த்
தெவ்வா யின்றே னீத்தம தாகுஞ் செயனீங்க
வெவ்வா யுஞ்சென் றுண்டன வமமா விறைதன்னின். (௪௦௦)

தண்டா தார்க்கு நீத்த வியற்கை தனையெல்லா
முண்டா வித்தே வாளிகண் மீண்டே யுறுகாலைக்
கண்டான் மாயத் தன்மை படைத்தோன் கனன்மேனி
கொண்டா னண்டங் காறு நிமிர்ந்தே குலவுற்றான். (௪௦௧)

குலவுங் காலைக் கண்டு நகைத்தே கூற்றென்ன
நிலவுஞ் செங்கோ லாயிரம வாங்கா நீடூழி
சுலவுஞ் சண்டச் சூறையி னேகிச் சூர்மாயம்
பலவுஞ் செற்றே வம்மென வுய்த்தான் பரமானோன். (௪௦௨)

உய்க்குங் காலத் தொய்யென வேகி யுலகெங்குந்
திக்கும வானுஞ் சூழு மருத்தின் றிறனெய்தி
மைக்குந் தூமம போல்பவன் மெய்த்தீ வடிவெல்லாம்
பொய்க்கும் வண்ணஞ் சாடின வையன் புகர்வாளி. (௪௦௩)

வேறு.

வண்டு லாவரு வாகையந் தாரினன்
கொண்டெ ழுந்தகொ ழுந்தழல யாக்கையை
யுண்டு வாளிக ளொய்யென மீண்டொரா
யண்டர் நாயகன் பாங்க ரணைந்தவே. (௪௦௪)

ஆங்க வெல்லையி லவ்வடி வத்தினை
நீங்கு மாற்றல னீள்சின மேற்கொளா
வோங்கு மோதை யுருவுகொண் டார்த்தனு
ஞாங்க ரெந்தை நகையொடு நோக்கினன். (௪௦௫)

ஆய்ந்து வாளியொ ராயிர நூற்றினை
வாய்ந்த கைக்கொடு மாற்றலன் வன்மையைப்
பார்த்த ளாகிப் படுத்ததுவம மோவெனு
வேந்தல் கூறி யிமைப்பினிற் றாண்டினான். (௬0௬)

அவ்வ யிற்கணை யந்தரத் திற்செலாச்
செவ்வி திற்கிளற் செந்தழல் போலெழீஇப்
பைவி ரித்த பஃறலைப் பன்னக
வெவ்வு ருக்கொடு சூர்மிசை மேயதே. (௬0௭)

கூற்ற மன்ன கொடுந்தொழின் மன்னவன்
காற்றின் யாக்கை கரப்ப மிசைந்திடா
வாறறன் மேவி யணைந்துடன் மீண்டன
வேற்ற டக்கை விமலன் புடைதனில. (௬0௮)

இன்ன தன்மையி லீரிரு நாள்வரைத
துன்ன லன்றொலை யாதம ராற்றியே
பின்னு மாயையின் பெற்றியைப புந்தியு
ளுன்னி யேபல் லுருக்கொடு தோன்றினான். (௬0௯)

வேறு.

ஓவா வியல்புரி மூவரி லொருசார் வருமொழியுந்
தேவா சுரர்பிற ராமென வொருசார் வருஞ்சேனை
கோவா மெனவொரு சார்வரு மொருசார் வருங்குறள்போ
லாவா வெனக்கொடுங் கூற்றென வொருசார் வருமன்றே. (௬௧0)

பேயா மெனவொரு பால்வரும் பிறழ்வெம் புகைப்படலைத்
தீயா மெனவொரு பால்வருந் திசையெங் கணுஞ்சுழலு
மோயா மருத்தின மாமென வொருபால் வருமகிலம்
பாயா வெழுதிரை யாழியி லொருபால வரும்பரவி. (௬௧௧)

ஒருசார் விடமென வந்திடு மொருசார் வரும்பணிபோ
லொருசார் முகிலென வந்திடு மொருசார வருமிருள்போ
லொருசா ருருமென வந்திடு மொருசார் வருமவரைபோ
லொருசார் தனதுரு வாய்வரு மொருசார் வருங்கதிர்போல். (௬௧௨)

தொக்கார் பலபடை யாமென வொருசார் வருஞ்சூழுந்
திக்கார் களிற்றின மாமென வொருசார் வருஞ்சினத்தா
னக்கார் தருமரி யேறென வொருசார் வருநவிவா
னக்கால் வருதனிப் புள்ளென வொருசார் வருமன்றே. (௬௧௩)

கரியின் முகத்துணை வன்னென வொருசார் வருங்கடுங்க
ணரியின் முகத்திறை யோனென வொருசார் வருமளக்கர்ப்
பரியின் முகத்தினில் வந்திடு பாழிக் கனலபடுக்கு
மெரியின் முகத்தனி மைந்தனி லொருசா ரிடையேகும். (௬௧௪)

எல்லோன் றனைவெகுண் டோனென வொருசார் வருமேனைச்
சொல்லோங் கியதிறன் மைந்தரி லொருசார் வருஞ்சூழ்ச்சி
வல்லோ னெனவொரு சார்வரு மானப் படைமள்ளர்
பல்லோர் களுஞ்செறிந் தாலென வொருசா ரிடைப்படரும். (௬௧௫)

இத்தன்மையி லவுணர்க்கிறை யாண்டுஞ்செறி வாகி
யத்தன்றனைப் பிடைசூழ்தலு மவைநோக்கிய விமையோர்
சித்தந்தளர்ந் திரிகுற்றனர் திரிகுற்றன ரம்மா
கத்துங்கடற் புவிமாய்ந்திடு காலத்துயி ரெனவே. (௪௧௬)

வேறு.

அங்கத னிலைமை நோக்கி யாயிர கோடி வாளி
செங்கையில் வாங்கி வாங்குந் திருநெடுஞ் சிலையிற் பூட்டி
யிங்குள வமரர் தங்க ளிருஞ்சிறை யகற்ற வந்து
பங்கயற் சிறைசெய் திட்ட பகவன்மற் றிதனைச் சொல்வான். (௪௧௭)

தெவ்வடு பகழி யென்னுந் தேவிர்கா ணீவி ரேகி
மெய்வலி படைத்து நின்ற மேவல னொருவன் கொண்ட
வவ்வுரு வனைத்து மெய்தி யாங்கவன் மாய முற்று
மிவ்விடை யட்டு நீக்கி யேகுதி ரென்று விட்டான். (௪௧௮)

விட்டிடு சிலீமு கங்கள் விரைந்துபோய் வெகுளி வீங்கி
யொட்டலன் கொண்ட வொவ்வொன் றுருவினுக் கெழுமையாகி
யெட்டுள புலமும் வானு மிருநில வரைப்பு மீண்டி
யட்டடல் பெற்ற வம்மா வனையவன் மாயந் தன்னை. (௪௧௯)

உடல்சின மோடு சூர னொருவனு யங்க ணின்று
னடல்வலி கொண்ட வாளி யந்தர நெறியான் மீண்டு
புடையுறு சரங்க ளோடு பொள்ளெனத் தூணி புக்க
சுடர்நெடுந் தனிவே லண்ண லவன்முக நோக்கிச் சொல்வான். (௪௨௦)

வெம்புய விடையிற் றோன்றி விளிந்திடு மின்னு வென்ன
விம்பரி லெமது முன்ன மெல்லையி லுருவங் கொண்டா
யம்பினி லவற்றை யெல்லா மட்டன மழிவி லாத
நம்பெரு வடிவங் கொள்வ நன்றுகண் டிடுதி யென்றான். (௪௨௧)

கூறிமற் றினைய தன்மை குரைகட லுலகந் திக்கு
மாறிலாப் புவன மண்டம் வானவ ருயிர்கள் யாவு
மாறுமா முகத்து வள்ளல் மேனியி லமைந்த தன்றி
வேறிலை யென்ன வாங்கோர் வியன்பெரு வடிவங் கொண்டான். (௪௨௨)

உள்ளடி வரைகள் யாவு மொண்புற வடியி னீதத்தம்
வள்ளுகிர் விரல்கண் முற்றும் வானுரு மேறு நாள்கோ
ளெள்ளரும் பரடு தன்னி லிரும்புனற் கிறைவன் சோம
னள்ளிரு ளனைய மேனி நிருதியோ டரக்கர் நண்ண. (௪௨௩)

அடிதிரள் கணைக்கா றன்னி லாரிடர் மணிகள் சானு
வடிவமை முழந்தாள் விஞ்சை வானவ ராதி யானோர்
தொடைதனின் மகவான் மைந்தன றொடைமுத னடுவன் காலன்
கடிதடத் தசுரர் பக்கங் கடவுளர் யாரு நிற்ப. (௪௨௪)

இருப்பினி னுக்ர் கோச வெல்லையின் மருந்தே யுந்திக்
கருப்படு முயிர்கண் மார்பிற் கலைகண்முந் நூலிற போத
மருப்பயி லுரோமத் தண்ட மங்கையி லகில போகந்
திருப்பெருந் தடந்தோள் வைப்பிற் செங்கண்மால் விரிஞ்சன் மேவ. ()

மெல்லிதழ் முனைய செங்கை விரன்மிசை யணங்கி னல்லா
ரொல்லொலி யங்கி கண்ட மொப்பிலா மணிவாய் வேதம்
பல்லிடை யெழுத்து நாவிற் பரமவா கமத்தின் பேத
நல்லிதழ் மனுவின் விஞ்சை நாசியிற் பவனன் மன்ன. (சஉ௬)

கருணைகொள் விழியிற் சோமன் கதிரவன் செவியிற் றிக்குத்
திருநுதற் குடிலை வைப்புச் சென்னியிற் பரம வான்மா
மரபினின் மேவித் தோன்ற மாறிலா திருக்குந் தொல்லை
யொருதன துருவங் காட்டி நிற்றலு மும்பர் கண்டார். (சஉஎ)

செஞ்சுட ரநந்த கோடி செறிந்தொருங் குதித்த தென்ன
விஞ்சிய கதிர்கான் றுள்ள வியன்பெரு வடிவை நோக்கி
நெஞ்சகந் துளங்கி விண்ணோர் நின்றனர் நிமல மூர்த்தி
யஞ்சன்மி னஞ்சன் மின்னென் றருளின னமைத்த கையான். (சஉஅ)

அண்டர்கள் யாரு மெந்தை யருண்முறை வினவி யுள்ள
முண்டிடு விதிர்பபு நீங்கி யுவகையாற் றொழுது நின்றார்
தண்டுளி வரைய தென்னத் தனைப்பறச் சிதறு மூழிக்
கொண்டலின் றோற்ற நோக்கிக் குலவுறு மஞ்ஞை யேபோல். (சஉ௯)

இறுதியு முதலு மில்லா விப்பெரு வடிவந் தன்னைக்
கறைவிட முறழுஞ் சூரன் கண்டுவிம் மிதத்தி னிறப
வறிவரு முணர்த றேற்றா வாறுமா முகத்து வள்ளல்
சிறிதுநல் லுணர்ச்சி நல்க வினையன செபப லுற்றான். (சந௦)

எண்ணிலா வவுணர் தானை யாவையு மிமைப்பிற் செற்று
விண்ணுலா வண்டந் தோறும வியன்சம ராறறி யென்பா
னண்ணினர் தம்மை யெலலா நாமறத் தடிந்து வீட்டி
வண்ணமான் றேரு மீண்டு வராநெறி தடுத்தான் மன்னோ. (சநக)

திண்டிற லுடையேன் றாண்டுந் திறற்படை யாவு நீக்கிக்
கொண்டவென் மாய முற்றுங் கொடுஞ்சர மதனுன் மாற்றி
யண்டமும் புவனம் யாவு மமரரும் பிறவுந் தன்பாற்
கண்டிடும் வடிவ மொன்று காட்டியென் கண்மு னின்றான். (சநஉ)

கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் றன்னைப்
பாலனென் றிருந்தே னந்நாட் பரிசிவை யுணாந்தி லேன்யான்
மாலயன் றனக்கு மேனை வானவர் தமக்கும் யார்க்கு
மூலகா ரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றோ. (சநந)

ஒற்றென முன்னம் வந்தோ னொருதனி வேலோன் றன்னைப்
பற்றிக லின்றி நின்ற பராபர முதல்வ னென்றே
சொற்றனன் சொற்ற வெல்லாந் துணிபெனக் கொண்டி லேனு
விற்றையிப் பொழுதி லீச னிவனெனுந் தன்மை கண்டேன். (சநச)

மீயுயர் வடிவங் கொண்டு மேவிய தூதன் சொற்ற
வாய்மைகள் சரத மம்மா மற்றியான் பெற்ற வண்ட
மாயவை முழுது மற்று மறுமுகம் படைத்த செம்ம
றூயபொற் பதரோ மத்திற் றோன்றியே நிற்கு மன்றே. (சநரு)

அண்டர்கண் முனிவ ரேனோ ரகிலமுங் காட்டி யண்ணல்
கொண்டிடு படிவ முற்றுங் குறித்தியார் தெரிதற் பாலா
ரெண்டரு விழிகள் யாக்கை யெங்கணும் படைத்தோர்க் கேனுங்
கண்டிட வநந்த கோடி கற்பமுங் கடக்கு மன்றே. (௪௩௬)

சீர்க்கும ரேசன் கொண்ட திருப்பெரு வடிவந் தன்னி
லேர்க்குறு மொளியுஞ் சீரு மிளமையு மெழிலு மெல்லா
மார்க்குள வுளகி லமமா வற்புதத் தோடும் பல்காற்
பார்க்கினுந் தெவிட்டிற் றில்லை யின்னுமென் பாவை தானும. (௪௩௭)

நேரில னாகி யீண்டே நின்றிடு முதல்வ னீடும்
பேருரு வதனை நோக்கிப் பெரிதுமச் சுறுவ தல்லா
லாரிது நின்று காண்பா ரமரரி லழிவி லாத
சீரிய வரங்கொண் டுள்ளோ னாதலிற றெரிகின் றேனல். (௪௩௮)

ஆயிர கோடி காம ரழகெலாந் திரண்டொன் றாகி
மேயின வெனினுஞ் செவவேள விமலமாஞ் சரணந் தன்னிற்
றாயநல லெழிலுக காற்றா தென்றிடி னினைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெலலா முவமையார் வகுகக வல்லார். (௪௩௯)

இங்கென துயிர்போ லுற்ற விளவலு மினைய சேயுஞ்
செங்கையில வேலோன் றன்னைச் சிறுவனென் றெண்ணல் கண்டாய்
பங்கயன் முதலோர் காணாப பரமனை யாகு மென்றா
ரங்கவா மொழிந்த வாறுஞ் சரதமே யான தன்றே. (௪௪0)

அண்ணலார் குமரன் மேனி யடிமுதன் முடிவின் காறு
மெண்ணிலா வூழி கால மெத்திற நோக்கி னாலுங்
கண்ணினா லடங்கா துன்னிற கருததினா லடங்கா தென்பா
னண்ணினா னமருக் கென்கை யருளென நாட்ட லாமே. (௪௪௧)

திருகிய வெகுளி முற்றுந் தீர்ந்தன செருவி னூக்க
மருகிய துரோமம் புள்ளி யாயின விழியிற் றாநீர்
பெருகிய திவன்பா லன்பு பிறந்தன தமியேற் குள்ள
முருகிய தென்பு தானு முலைமெழு காகு மன்றே. (௪௪௨)

போயின வகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளுங் கண்ணுந் துடித்தன புவன மெங்கு
மேயின பொருள்கண் முறறும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவங் கண்டே னற்றவப் பயனீ தன்றோ. (௪௪௩)

சூழுதல் வேண்டுந் தாள்க டொழுதிடல் வேண்டு மங்கை
தாழுதல வேண்டுஞ் சென்னி துதித்திடல் வேண்டுந் தாலு
வாழுதல் வேண்டுந் தீமை யகன்றுநா னிவற்கா ளாகி
வாழுதல் வேண்டு நெஞ்சந் தடுத்தது மான மொன்றே. (௪௪௪)

ஒன்னலர் பொருட்டா லேகி யுறுசம ரிழைத்த செம்ம
றன்னுரு வதனைக் காண்கின் முனிவதே தகுதி யாகும்
வன்னிகொள் வெண்ணெ யேபோல் வலியழிந் துருகிற் றென்றா
லென்னுடை வயதத வன்றோ வுணர்ச்சியு மியாக்கை முற்றும். (௪௪௫)

ஏடவி ழலங்கன் மார்ப னென்னுட னிந்நாள் காறு
நீடிய விகற்போ ராற்றி நீங்கலா னின்ற தெல்லா
மாடவி னியற்கை யென்றே யறிந்தன னஃதான் றன்னான்
சாடிய வேண்டு மென்னின் யாரது தாங்கற் பாலார். (௪௪௬)

ஏதமி லமரர் தம்மை யான்சிறை செய்த தெல்லாந்
தீதென வுரைத்தார் பலலோ ரன்னதன் செயற்கை யாலே
வேதமு மயனு மேனை விண்ணவர் பலருங் காணு
நாதனிங் கணுகப் பெற்றே னன்றதே யான தன்றே. (௪௪௭)

ஒன்றொரு முதல்வ னாகி யுறைதரு மூர்த்தி முன்ன
நின்றமா செய்தே னிந்தா ணெஞ்சினித் தளரே னம்மா
நன்றிதோர் பெருமை பெறறேன் வீரனு நானே யானே
னென்றுமிப் புகழே நிற்கு மிவ்வுட னிற்ப துண்டோ. (௪௪௮)

வானுளோர் சிறையை நீக்கி வள்ளலை வணங்கி யிந்த
வூனுலா முயிரைப் போற்றி யளியர்போ லுறுவ னென்னி
னானிதோ வெனக்கி தம்மா வாயிர கோடி யண்டம்
போனதோர் புகழும் வீரத் தன்மையும் பொன்றி டாவோ. (௪௪௯)

என்னவித் தகைய பன்னி நிற்றலு மெவர்க்கு மேலோ
னுன்னருந் தகைத்தாய் நின்ற வொருபெருந் தோறற நீதது
மின்னிவா கலாப மூர்ந்த வியனுருக் கொண்டு நண்ணித்
துன்னலன் போத மாறறித் தொன்மைபோ லாகச் செய்தான். (௪௫0)

காரண னாகித் தானே கருணையா லெவையு நல்கி
யாருயிர் முழுது மேவி யனைத்தையு மியறறி நிறகும்
பூரண முதல்வன் மைந்தன் போதக மளித்து மாற்றிச்
சூரனை மயக்கஞ் செய்யுஞ் சூழ்ச்சியோ வரிய தன்றே. (௪௫௧)

அத்தகு காலை தானே யவுணர்கோ னுணர்ச்சி நீங்கிச்
சித்தம திடையே தொல்லைச் சீறறமு மிகவு முறற
மெய்த்தகு குழுவித திங்கள் விண்ணெறி செலலச் செல்லு
மெத்திசை யிருளு மன்ன தகன்றுழி யெழுந்த தேபோல. (௪௫௨)

பிணிமுக முயர்த்து நின்ற பெருந்தகை தோற்றங் காணூஉத்
தணிவருஞ் சினமேற் கொண்டு சமரின்மே லூக்கஞ் சேர்த்தி
யணியதென் றிண்மை யென்னு வங்கையோ டங்கை தாக்கி
மணிமுடி துளக்கி நக்கு மற்றிவை புகல லுற்றான். (௪௫௩)

சேயுரு வமைந்த கள்வன் செருவினை யிழைக்க லாற்றான்
மாலையி னென்று காட்டி யெனையிவண் மையல் செய்தா
னுயது துடைத்தே னென்று லாரெனக் கொப்புண் டென்றுங்
காயம தழிவி லாதேன் கருத்தழி கின்ற துண்டோ. (௪௫௪)

குன்றினை யெறிந்த வேற்கைக் குமரனோ டமர தாற்றி
வென்றிடு கின்றேன் மெல்ல மேலது நிற்க விந்த
வன்றிறற் சமரை மூட்டி நின்றவா னவரை யெல்லாந்
தின்றுயிர் குடித்து முன்னென் சினஞ்சிறி தகல்வ னென்றான். (௪௫௫)

ஆயது துணிவாக் கொண்ட வவுணர்கண் மன்னன் பின்னுந்
தீயதோர் தொல்லை மாயச் சீர்கொண்டிமுந் திரத்தைப் பன்னி
ஞாயிறு மருட்கை கொள்ள ஞாலமுங் ககன முற்று
மாயிரு ளுருவங் கொண்டு மறைந்துநின் றூர்க்க லுற்றான். (௪௯௬)

தெண்டிரை நேமி தன்னிற் றீவிட மெழுந்த தென்ன
வெண்டிசை யெல்லை முற்று மிருநில வரைப்பு மெல்லா
வண்டமு மாகி யீண்டு மாரிருள வடிவை வானோர்
கண்டன ரவுணன் மாய மீதெனக் கலக்க முற்றார். (௪௯௭)

அத்துணை யவுணர் மன்ன னவ்விரு ளிடையே பாய்ந்து
பத்திகொள் சிகர மன்ன பல்மறலை யளவை தீர்ந்த
கைத்தல முளதோர் யாக்கை கதுமெனக் கொண்டு விண்ணோர்
மெய்த்தொகை நுகர்வா னுன்னி விண்ணிடைக் கிளர்ந்து சென்றான். ()

ஆடியல் கொண்ட சூர னந்தரத தெழலும் வானோர்
கூடிய வோதி தன்னாற் குறிப்பினாற் றெரிந்து நம்மைச்
சாடிய வருவ னென்னாத் தலைதலை சிதறி நில்லா
தோடினர் கூறறை நேர்ந்த வுயிரென விரங்க லுற்றார். (௪௯௯)

நண்ணினர்க் கினியா யோல ஞானநா யகனே யோலம்
பண்ணவர்க் கிறையே யோலம் பரஞ்சுடர் முதலே யோல
மெண்ணுதற் கரியா யோலம் யாவையும் படைத்தா யோலங்
கண்ணுதற் பெருமா னல்குங் கடவுளே யோல மோலம். (௫௦0)

தேவர்க டேவே யோலஞ் சிறந்தசிற் பரனே யோல
மேவலர்க் கிடியே யோலம் வேற்படை விமலா வோலம்
பாவலர்க் கெளியா யோலம் பன்னிரு புயத்தா யோல
மூவரு மாகி நின்ற மூர்த்தியே யோல மோலம். (௫௦௧)

கங்குலி னெழுந்த காரபோற கனையிருண் மறைவி னேகி
நுங்கிய செல்வான் சூர னோடவு நோன்மை யில்லே
மெங்கினி யுய்வ மைய விறையுநீ தாழ்க்கல் கண்டா
யங்கவ னுயிரை யுண்டெம் மாவியை யருளு கென்றார். (௫௦௨)

தேற்றலை போலு மீது சிறிதுநீ பாணிப் பாயே
லாற்றலின் மறைந்து நின்றே யகிலமுந் தானே யுண்ணு
மாறறல னுவி தன்னை வாங்குதி வலலை யென்னாப்
போற்றினன் முதல்வன றன்னை மயூரமாய்க் கொண்ட புத்தேள். ()

அங்கவர் மொழியும் வெய்யோ னாற்றலுந் தெரிந்து செவ்வேள்
செங்கைய தொன றில் வைகுந் திருநெடு வேலை நோக்கி
யிங்கிவ னகம் போழ்ந்தே யேகுதி யிமைப்பி னென்னாத்
துங்கம துடைய சீர்த்திச் சூரன்மேற் செல்லத் தொட்டான். (௫௦௪)

ஏயென முருகன் றொட்ட விருதலை படைதத ஞாங்க
ராயிர கோடி யென்னு மருக்கரிற் றிகழ்ந்து தோன்றித்
தீயழற் சிகழி கான்று சென்றிட வவுணன் கொண்ட
மாயிரு ளுருவ முற்றும் வலவிரைந் தகன்ற தன்றே. (௫௦௫)

அன்னவன் றனது மாய மழிந்தது மையன் வைவேன்
முன்னுறு மாறு நோக்கி முடிவிலா வரத்தி னோனை
யென்னிவட் செய்யு மம்மா விவன்விடு மெல்லை யென்னு
வுன்னினன் முறுவ லெய்தி யுருகெழு சீற்றங் கொண்டான். (௪௬௬)

வாரிதி வளாகந் தன்னை மாதிர வரைப்பை மீக்கீழ்ச்
சேருறு நிலயந் தன்னைத் திசைமுகன் முதலா வுள்ள
வாருயி ரோடும் வீட்டி யடுவன்மே லிதனை யென்னுச்
சூரெனு மவுணன் மற்றைத் தொடுகட னடுவ ணுறுன். (௪௬௭)

வன்னியி னலங்கல் கான்று வான்றமை புகையி னல்கிப்
பொன்னென விணர்க ளீன்று மரகதம் புரையக் காய்த்துச்
செந்நிற மணிக ளென்னத் தீம்பழங் கொண்டு கார்போற்
றுன்னுபல் கவடு போக்கிச் சூதமா யவுண னின்றுன். (௪௬௮)

மாசறு ககன கூட வரம்பத னளவு மேல்போ
யாசையி னெல்லை காறு மளவைதீ ருலவை யோச்சிக்
காசினி யகலந் தாங்குங் கச்சபத் துணைத்து ரோட்டிப்
பாசடை பொதுளி வெஞ்சூ பராரைமால் வரையி னின்றுன். (௪௬௯)

ஓராயிர நூற தென்னு மோசனை யளவை யான்ற
பராரைமா வுருவ மாகிப் பலவுடைச் சினைமாண் கொம்பர்
விராவிய சூழ்ச்சி தன்னுல் வேலைகண் முழுதும் விண்ணுந்
தராதல வரைப்பு மெலலாந் தண்ணிழல் பரபபி நின்றுன். (௪௭0)

நெடுங்கலை முயன்மான் கொண்டு நிலவுமம் புலியு நீதத
மடுங்கதிர் படைதத கோவு மளகையை யாளி தானுங்
கடங்கலுழ் கின்ற வாசைக் கரிகளுங் கடாவிற செல்லு
மடங்கலும் வெருவச் சூரன் மாவுருக் கொண்டு நின்றுன். (௪௭௧)

மிக்குய ருவண மன்ன மிசைப்படு மெகினப் புள்ளு
மைக்குயில் சேவ லாகி மயூரமாம் வலியன் றுனும்
புக்கமர் தெரிக்கு மாடற் பூவையுங் கொடிய தான
குக்குட முதலு மஞ்சக் கொக்குரு வாகி நின்றுன். (௪௭௨)

காலெனு மொய்ம்ப னுட்கக் கட்செவி கவிழ்ந்து சோர
வாலிய வசுக்க ளேங்கி மலர்க்கர மறிக்க வெய்யோன்
பாலர்மெய் வியரா நிற்பப் பணைமுலை யரிவை மார்கள்
சேலெனும் விழிகள் பொத்தச் சேகர மாகி நின்றுன். (௪௭௩)

அத்தியி னரசு பேர வாலமுந் தெரிக்கி லேங்க
மெய்த்திறல் வாகை வன்னி மெலிவுற வீரை யாவுந்
தத்தம திருப்பை நீங்கத் தாதவிழ் நீபத் தாரோ
னுய்த்திடு தனிவேன் முன்ன ரொருதனி மாவாய் நின்றுன். (௪௭௪)

நிலமிசை யினைய வாறேர் நெடும்பெருஞ் சூத மாகி
யுலவையின் செறிவு தன்னு லும்பருந் திசையு மெற்றித்
தலைமுத லடியின் காறுஞ் சாலவுந் தளர்ந்து தள்ளூற்
றலமரு வாரிற் றுனே யசைந்தன னசைவி லாதான். (௪௭௫)

பைவிரி பாந்தட் புத்தேள் பரம்பொரு தழுங்கப் பாரின்
மைவிரி படிவச் சூறை மாருத மெறிய மாழை
மெய்விரி குடுமிக் கோட்டு மேருவெற் பசைந்தா லென்ன
மொய்விரி யவுணன் யாக்கை யலேத்தனன் முடிவ தோரான். (௪௭௬)

இடிந்தன சரிந்த ஞால மேழ்வகைப் பிலங்கண் முற்றும்
பொடிந்தன கமட நாகம் புரண்டன புழைக்கை மாக்கண்
முடிந்தன மறிந்த வேலை முழுவது மொன்று சூற்ற
மடிந்தன வுயிரின் பொம்மல் வரைக்குல மறிந்த வன்றே. (௪௭௭)

தாரகை யுதிர்ந்த கோளுந் தலைபணித் திரிந்த வெய்யோன்
றேரொடு மாவுந் தானுந் தியங்கினன் றிங்கட் புத்தேள்
பேருறு மான நீங்கிப் பெயர்ந்தன னேனை வானோர்
மேருவுங் கைலை வெற்பும் புக்கனர் வெருவு நீரார். (௪௭௮)

ஏற்றமில் சுவர்க்க முற்று மிற்றன வதற்கு மப்பான்
மேற்றிகழ் முனிவர் வைகு முலகமும் பகிர்ந்து வீழ்ந்த
நாற்றிசை முகத்தன் மாயோ னண்ணிய வுலகு மற்றே
சாற்றுவ தென்கொ லண்டச் சூழலுந் தகர்ந்த தன்றே. (௪௭௯)

தெண்டிரை நடுவ ணின்ற தீயவன் செயலு மன்னான்
கொண்டிடு முருவு முள்ளக் கொள்கையும் வலியுஞ் சீரு
மண்டர்க ளெவர்க்கு மேலா மாதியம் பகவன் றெட்ட
விண்டொடர் தனிவேல் காணு வெஞ்சினம் விளைத்த தன்றே. (௪௮0)

தேயுவி னெடுத்த வண்டத் திறங்களும் பிறங்கு ஞாலத்
தாயிர கோடி யண்டத் தங்கியு மொன்றிற் றென்ன
மீயுயர்ந் தொழுகி யான்றோ வெருவருந் தோற்றங் கொண்டு
நாயகன் றனது தெய்வப் படைக்கல நடந்த தன்றே. (௪௮௧)

வயிர்த்திடு நிலைமை சான்ற வன்கணா னுயிரை வெளவச்
செயிர்த்திடுந் தெய்வச் செவ்வே றிணிதில வரைப்பி லண்ட
மயிர்த்தொகை யாக வேனைப் பூதமு மழிய வங்க
ணுயிர்த்தொகை முருகத் தோன்று மொருவனிற் சென்ற தன்றே. ()

மாறமரு ருழந்து பன்னாள் வரம்பறு பிரம மாவா
வேறிலை யாமே யென்ற விருவரும் வெருவி நீங்க
வீறொடு முதலு மின்றி யெழுகிரி விலக்கி விண்மேற்
சேறலி னிலைமை காட்டிப் படர்ந்தது கடவுட் செவ்வேல். (௪௮௩)

வேதனை யகத்த ராகும் விண்ணவர் படைகட் டம்முள்
யாதனை யிதற்கு நேரா வியம்புவ தெரியிற் றேன்றிப்
பூதனை யுயிருண் கள்வன் புண்டரீ கத்தன் வன்மை
சோதனை புரிந்த மேலோன் சூலமே யென்ப தல்லால். (௪௮௪)

மண்டல நிலத்தின் வைப்பும் வாரிதி யேழு மற்றைத்
தெண்டிரைக் கடலும் வானுஞ் சேணுயர் பிறங்கன் முற்று
மெண்டிசைப் புறமு மண்டத் தேணியின் பரப்பு மீண்ட
வொண்டழற் சிகையின் சுறறை யுமிழ்ந்ததா லொருங்கு ஞாங்கர். ()

பற்றிய ஞெகிழி பாரிற் படர்ந்தன பௌவம் யாவுஞ்
சுற்றிய திசையும் வானுஞ் சூழ்ந்தன சோதி வைகும்
பொற்றைய தொன்றே யல்லாப் பொருப்பெலாஞ் செறிந்த பொன்றோய்
கற்றையங் கதிரி னண்டச் சூழலுங் கதுவ லுற்ற. (௪௮௬)

விடம்பிடித் தமலன் செங்கண் வெங்கன லுறுத்திப் பாணி
யிடம்பிடித் திட்ட தீயிற் றோய்ததுமுன் னியற்றி யன்ன
வுடம்பிடித தெய்வ மிவ்வா றுருகெழு செலவி னேகி
மடம்பிடித திட்ட வெஞ்சூர் மாமுத றடிந்த தன்றே. (௪௮௭)

ஆடல்வே லெறித லோடு மாமிர வடிவா யண்ட
கூட்டமு மலைத்த கள்வ னரற்றொடு குறைந்து வீழ்ந்தும்
வீடில னென்ப மன்னோ மேலைநாள் வரத்தி னென்றாற்
பீடுறு தவமே யன்றி வலியது பிறிதொன் றுண்டோ. (௪௮௮)

கிள்ளையின் வதன மன்ன கேழ்கிளர் பசுங்காய் தூங்கித
தள்ளரு நிலைத்தாய் நின்ற மாவுருச் சாய்த லோடு
முள்ளுறு சினமீக் கொள்ள வொல்லைதொல் லுருவ மெய்தி
வள்ளுறை யுடைவாள் வாங்கி மலைவது கருதி யார்த்தான். (௪௮௯)

செங்கதி ரயில்வாள் கொண்டு செருமுயன் றுருமி னார்த்துத்
துங்கமோ டெதிர்ந்து சீறுஞ் சூருரங் கிழித்துப பின்னு
மங்கப திருகூ றாக்கி யலைகடல் வரைப்பில வீட்டி
யெங்கணு மறைக ளார்ப்ப வெஃகம்வான் போயிற் றம்மா. (௪௯0)

புங்கவர் வழுத்திச் சிந்தும் பூமழை யிடையி னேகி
யங்கியின் வடிவ நீங்கி யருளுருக் கொண்டு வான்றோய்
கங்கையிற் படிந்து மீண்டு கடவுள ரிடுக்கண் டீர்த்த
வெங்கடம் பெருமான் செங்கை யெய்தியீற் றிருந்த தவ்வேல். (௪௯௧)

தாவடி நெடுவேன் மீளத தற்பரன் வரத்தால் வீடா
மேவல னெழுந்து மீட்டு மெய்பகி ரிரண்டு கூறுஞ்
சேவலு மயிலு மாகிச் சினமொடு தேவர் சேனை
காவலன் றன்னை நாடி யமர்த்தொழில் கருதி வந்தான். (௪௯௨)

மணிகிளர் வரைய தொன்று மரகதப் பிறங்க லொன்றுந்
துணையடி சிறகா பெற்றுச் சூற்புய லழிய வார்த்துத்
திணிநில விசும்பின் மாட்டே சென்றெனச் சேவ லோடு
பிணிமுக வுருவாய் வந்து பெருந்தகை முன்னம் புக்கான். (௪௯௩)

ஆட்படு நெறியிற் சேர்த்து மாதியி னூழ்தந் தியக்கத
தாட்படை மயூர மாகித தன்னிக ரிலலாச் சூரன்
காட்படை யுளத்த னாகிக் கடவுள ரிரியல் போக
ஞாட்பியல் செருக்கில வந்தான் ஞானநா யகன்றன் முன்னம். (௪௯௪)

மருள்கெழு புள்ளே போல வந்திடு சூர னெந்தை
யருள்கெழு நாட்டஞ் சேர்த்த வாங்கவ னிகலை நீங்கித்
தெருள்கெழு மனத்த னாகி நின்றனன் சிறந்தார் நோக்கா
லிருள்கெழு கருமபொன் செயபொன் னாகிய வியற்கை யேபோல் ( )

தீயவை புரிந்தா ரேனுங் குமரவே டிருமு னுற்றாற்
றாயவ ராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை
யாயவும் வேண்டுங் கொல்லோ வடுசம ரிந்நாட் செய்த
மாயையின் மகனு மன்றே வரம்பிலா வருள்பெற் றுய்ந்தான் (௪௯௬)

அக்கண மெம்பி ரான்ற னருளினா லுணர்வு சான்ற
குக்குட வுருவை நோக்கிக் கடிதினீ கொடியே யாகி
மிக்குயர் நமது தேரின் மேவினை யார்த்தி யென்னத்
தக்கதே பணியி தென்னா வெழுந்தது தமித்து விண்மேல் (௪௯௭)

செந்நிறங் கெழீஇய சூட்டுச் சேவலங் கொடியோன் றாகி
முன்னுறு மனத்திற செல்லு முரண்டகு தடந்தேர் மீப்போ
யிந்நில வரைப்பி னண்ட மிடிபட வுருமே றட்க
வன்னியும் வெருவ வார்த்து மற்றவ னுற்ற தன்றே. (௪௯௮)

சீர்திகழ் குமர மூர்த்தி செறிவிற் கொண்ட தொல்லை
யூர்தியி னிருக்கை நீங்கி யுணர்வுகொண் டொழுகி நின்ற
சூர்திகழ் மஞ்ஞை யேறிச் சுமக்குதி யெம்மை யென்னாப்
பாரதிசை வான முற்றும் பரியென நடாத்த லுற்றான. (௪௯௯)

தடக்கட லுடைய மேருத் தடவரை யிடிய மற்றைப்
படித்தலம் வெடிப்பச் செந்தீப் பதைப்பதைத் தொடுங்கச் சூறை
துடித்திட வண்ட கூடந் துளக்குறக் கலாபம் வீசி
யிடித்தொகை புரள வார்த்திட் டெகிற்றுத் தோகை மஞ்ஞை. (௫௦௦)

படத்தினி லுலகம் போற்றும் பணிக்கிறை பதைப்பப் பாங்க
ரடுத்திடு புயங்க முற்று மலமர வவனி கேள்வ
னிடத்தமர் கின்ற பாம்பு மேங்குற விசும்பிற் செல்லு
முடற்குறை யரவு முட்க வுலாயது கலாப மஞ்ஞை. (௫௦௧)

பாரொடு விரிஞ்சன் றன்னைப் படைத்திடப் பன்னாண் மாயன்
காரென வந்து முக்கட் கடவுளைப் பரித்ததேபோல்
வீரருள் வீர னாகும் வேலுடைக் குமரன் றன்னைச்
சூருரு வாகி நின்ற தோகைமேல் கொண்ட தம்மா. (௫௦௨)

வெயில்விடு மநந்த கோடி வெய்யவர் திரண்டொன் றாகிப்
புயறவழ் கடவுள் வானிற் போந்திடு தன்மை யேபோ
லயிலினை யுடைய செவ்வேண் மரகதத் தழகு சான்ற
மயிலிடை வைகி யூர்ந்தான் மாகமுந் திசைகண் முற்றும். (௫௦௩)

நேமிக ளேழு மொன்றாய் நிமிர்ந்தெழும் வடவை முற்றுந்
தாமொரு வடிவா யங்கட் சார்ந்திடு நிலைமை யென்ன
மாமயி லுயர்த்துச் சென்ற வாகைவேல் வீரன் மீண்டு
தீமைகொ ளவுணன் மூதூர்ச் செருநிலத் தெல்லை புக்கான். (௫௦௪)

புக்குள குமர மூர்த்தி பொறிமயி லுருவ மாயுங்
குக்குட மாயு நின்ற வமரரைக் குறித்து நோக்கி
மிக்கநும் மியற்கை யாகி மேவுதிர் விரைவி னென்ன
வக்கண மவருந் தொல்லை வடிவுகொண் டடியில் வீழ்ந்தார். (௫௦௫)

வள்ளலை வணங்கிப் பல்கால் வழுத்தியே தொழுது தத்த
முள்ளமும் புறத்தி லென்பு முருகிட விழியிற் றாநீர்
தள்ளுற வுரைகண் முற்றுந் தவறிடப் பொடிப்ப யாக்கை
கள்ளுண வுற்ற வண்டிற் களிமகிழ் சிறந்து நின்றார். (௫0௬)

வீசுறு சுடர்வே லையன் வெய்யசூர் முதலைச் சாடித்
தேசுறு மஞ்ஞை யூர்ந்து வந்தது தெரிந்து போர்செய்
காசினி யிடையே நின்ற கணங்களும் வீரர் யாரு
மாசறு மிளவ லுஞ்சென் றடிதொழு தார்தழுச் சூழ்ந்தார். (௫0௭)

ஆ. திருவிருத்தம் ௨,௧0௫.

---

வசனம்.

சூரபன்மன் தான்கொண்ட துயரமொருவாறுநீங்கி, எல்லா அண்டங்களி லுமுள்ள அவுணவெள்ளங்களை வருவித்து, அவை தன்னைச்சூழ, எழுபதினுயிரம் குதிரைகளும் எழுபதினுயிரம் சிங்கங்களும் எழுபதினுயிரம் பூதங்களும்பூண்ட தேர்மேலேறிப் போர்க்களத்தையடைந்தான். இச்செய்தியை நான்முகனும் நாரணனும் ஏனைய தேவர்களும் முருகவேளுக்கு அறிவிக்க, அவர் தமது தேரேறி, வீரவாகுதேவர் முதலியோர் தம்மைச்சூழ்ந்துவரப் போர்க்களம் சேர்தலும், இரண்டு படைகளும் கைகலந்து போர்செய்ய அநேகரிறந்தார்கள். அவுணர்கள் அளவின்றிவருவதை வீரவாகுதேவர் சண்முகப்பெருமானுக்கறிவிக்க, அப்பெருமான் அநேகமாயிரம் பாணங்களையேவி அவுணப்படைகளைக்கொன்று பிணமலைகளாக்கி, அவுணர்வரும் வழியையும் அடைத்தனர். சூரபன்மன் குகப்பெருமானை நோக்கி, நீயென்னபாடுபட்டாலும் தேவர்களை விடமாட்டேன், உன்னையும்விடமாட்டேனென்றுசொல்ல, சண்முகப்பெருமானும் சூரனைநோக்கி, கொடியோனே! என்கணைகளே உனக்கு விடைகொடுக்குமென்றார். சூரபன்மனும் அநேகமாயிரம் பாணங்களால பூதரைவருத்தினன். அவர்கள் ஓடினதைக்கண்ட வீரவாகுதேவர், சூரன்கையிற் பிடித்திருந்தவில்லையொடித்தார். அவனும் இவரை மார்பிலறைந்து மூர்ச்சிக்கப்பண்ணினுன். அன்றியும் அவரையெடுத்து ஆகாயத்தில் எறிந்தான். வீரவாகுதேவர் மூர்ச்சைதெளிந்து முருகக்கடவுளின் சந்நிதியையடைந்தார். அவர் வீரவாகுதேவர் மெலிவடைந்ததைக்கண்டு மிகுகோபங்கொண்டு சூரனேடு கடும்போர்செய்து அவன் எங்கேபோனுலும் அவனைத் தாமும் தொடர்ந்துசென்றுவருத்த, அவன் எணுதனவெல்லாம் எண்ணி மனம் வருந்தி, தனக்குப் பரமசிவன்தந்த இந்திரஞாலத் தேரிலேறி அடைபட்டிருந்த அண்டத்தின்வழியைப் பாணங்களால் திறந்தான், அவ்வழியாக அநேகமான அவுணப்படைகள்வந்து குமரக்கடவுளைச் சூழ்ந்துகொண்டன.

இவ்வாறுவந்த சேனைகளைச் சண்முகப்பெருமான் கோபித்துநோக்குதலும் அவுணர்வந்தவழி தெரியாமற்போயிற்று. இப்படி தன்படைகளெல்லாம் அழியக் கண்ட சூரபன்மன், தனக்குப் பரமசிவன்கொடுத்த சக்கராயுதத்தை யேவினுன். அது குமாரக்கடவுளின்கையில் வந்தமர்ந்திருந்தது. பிறகு மாயயுத்தம்செய்தான்; அதையும் பிள்ளையார் ஞானஸ்திரத்தை யேவிக்கெடுத்தார். சூரன் தன்தாயாகிய மாயையை நினைத்தலும் அவளும் எதிரேவந்து தோன்றினுள். அவளைவணங்கி இறந்துபோன தன் சேனைகளெல்லாம் பிழைக்கும்படி ஒருபாயம் சொல்ல

வேண்டுமென்றான் அவனும் சஞ்சீவிமலையை யிஙகே கொண்டுவந்தால் எல்லா ரும் பிழைப்பார்களென்றுசொல்லி மறைந்துபோனாள். சூரன் தன் இந்திரஞா லத் தேரையனுப்பி அந்தமலையைத் தருவித்தலும், அதன்வாடைபட்டவுடனே முன்னே யிறந்துகிடந்த பானுகோபன் முதலியயாவருமெழுந்து போர்செய்ய, பூதப்படைகள் தளர்ந்தன. அதுகண்ட பிள்ளையார் தமதுவில்லில் சிவாஸ்திரத் தைத் தொடுத்தெய்ய அது சிங்கமுகன் முதலியோரைக்கொன்று மீண்டுவந்து குகப்பெருமான்கையிலிருந்தது, சூரபன்மன் தன் தேரைநோக்கி, நீபோய் வீர வாகு முதலியோரைமயக்கி அண்டமுகட்டிற்கப்புறஞ் செலுத்திவாவென்று கட்ட ளையிட, அந்த இந்திரஞாலத்தேர் அவ்வாறேசெய்தது, அதுகண்ட சண்முகப்பெரு மான் ஒருபாணத்தைப்போல, அதுசென்று அந்தத்தேரோடு வீரவாகுதேவர்.முத லாயினாரை நிலத்திற்கொண்டுவந்து சேர்த்தது, அத்தேரைநோக்கி, நீயிங்கே தானே அசையாதிருவென்று கட்டளையிட்டார். அது அவ்வாறே நின்றுவிட்டது. பிறகு சூரபன்மன் அநேகம் பாணங்களை குகப்பெருமான்மேலெய்ய, அவற்றையெ ல்லாம் தாமும் சிலபாணங்கள்விடுத்து அறுத்தார், பிறகு அவன் ஒரு சூலத்தை விடுக்க, அதற்கெதிரே வயிரப்படையைச் சண்முகப்பெருமான்விடுக்க, அது சென்று அச்சூலத்தைக் கவ்விக்கொண்டு அவர் திருக்கரஞ்சேர்ந்தது. பிள்ளையார் அநேகம் பாணங்களால் அவனேறிவந்த சிங்கத்தைக்கொன்றார். அவன் சக்ரவா கப்பறவையுருக்கொண்டு பூதர்களைவருத்த, அதன்மேலும் பெருமான் சிலபாணங் களையேவி அதன்பின்னே தம்கைவாளால் அதை வெட்டித்தள்ளினார். பிறகு அவன் பஞ்சபூதவுருவங்கொண்டு போர்செய்ய அவற்றையெல்லாம் குகப்பெரு மான் தடுத்தழித்தலும் சூரன் மிகத்தளர்ந்து அநேகவிதமான மாயைவடிவங்கொ ண்டு போர்செய்ய, அவற்றையெல்லாம் குமரநாயகன் எளிதில் அழித்து, எங்குந் தாமேயாயிருக்கிற தற்பரவடிவுகொண்டு நின்றார். அவ்வடிவைக்கண்ட சூரன் மிக வும் அதிசயமும் அச்சமுங்கொண்டு, இவரை நாம சிறுபாலகனென்று நினைத்தல் லவா மதிமோசம்போனோம். இந்தவடிவத்தில் எல்லா அண்டங்களும் அடங்கி யிருக்கின்றனவே, முன்னே தூதுவனாகவந்த வீரவாகு சொன்னதையும் நான் கவ னிக்காமற்போனேன்; என்தம்பியாகிய சிஙகமுகன் என்புதல்வனாகிய இரணியன் முதலியோர் சொன்ன புத்தியையுங கேளாமற்போனேன்; இவ்வுருவைக்கண்ட வுடனே என் செருக்குமுதலிய தீயகுணங்கள் அடங்கிவிட்டன; அன்புமேலிடு கின்றது, உடல்புளகியாநின்றது, நெஞ்சுருகாநின்றது, ஆநந்தக்கண்ணீர் பெருகா நின்றது. ஆதலால் நான் உடம்பெடுத்த பயனடைந்தேன், இனி யிவனுக்கு நான் அடிமைப்படுவதே தகுதியென்றெண்ணி நின்றான்.

இப்படிநின்ற சூரனைக் குமரநாயகன் தன்திருவருளால் மயக்குதலும், அவன், மாயையில் வல்லனாகிய என்னை மயக்கினானேயென்று மிகுகோபங்கொண்டு ஆல விடம்போற்சீறி இருளுருவங்கொண்டு நின்றான். அவ்வுருவைக்கண்டு தேவர்கள் அஞ்சியதைக்கண்ட குமரநாயகன் தன்வேற்படையையேவ, அவன் மாயைகளெல் லாம் ஒழிந்தன. அவனும் இந்தவேல் நம்மை யென்னசெய்யும் என்று புன்சிரி ப்புக்கொண்டு, கடலினிடையேசென்று ஒருமாமர வடிவமாய்நின்றனன். அந்த மாமரவுருவத்தைக்கண்டு தேவர் முதலியோர் மனங்கலங்கினார்கள். குமரநாயகன் விடுத்த வேற்படையானது கடனடுவே அவன்கீழே பல கவடுகள்விட்டுப் பூத்துக் காய்த்துப் பழுத்துத் தன்வேரால மேலுலகங்களையெல்லாம் வருத்தும்படியான மாமரவுருக்கொண்டிருக்கக்கண்டு அதனைவெட்டிப்பிளந்து அவன்மார்பையும் பிளந்து ஆகாய கங்கையிற்படிந்து குமரநாயகன் திருக்கரத்தே வந்திருந்தது. வேற்

படைமீளுதலும் சூரபன்மன் சேவலும மயிலுமாக வுருக்கொண்டு சண்முகப் பெருமானோடெதிர்க்க நினைத்து ஆரவாரித்துக்கொண்டுவரவே, குகப்பெருமான் கண்டு, மயிலைவாகனமாகவும் சேவலைக்கொடியாகவுங் கொண்டருளினார். பிறகு, போரில் தமக்குச் சேவற்கொடியாகவும் மயில்வாகனமாகவுமிருந்த அக்கினிதேவனை யும் இந்திரனையும்நோக்கி, உமது இயற்கையுருவங்கொள்ளுங்களென்று கட்டளை யிட, அவர்களும் அவ்வாறேகொண்டுநின்று வணங்கினார்கள். பிறகு தேவா முதலி யோர் குகப்பெருமானைப் போற்றுமாறு அவரது திருவடியை வணங்கிச்சூழ்ந்தனர்.

சூரபன்மன்வதைப்படலம் முற்றிற்று.

# தேவர்கள்போற்றுப்படலம்.

நேரொரு சிறிது மில்லா நின்மலன் றனது வேலாற்
சூருடல் பிளந்தி யாணா மஞ்ஞையிற மேன்று காலைப்
பாருல கயினற கண்ணன் பங்கய னமரர் கட்கோ
ராரமிர் தெய்திற் றென்ன வன்னது கண்டே யார்த்தார். (௧)

ஆர்த்தன ரெழுந்து துள்ளி யாடினர் பாடா நின்றார்
போர்த்தனர் பொடிப்பின் போர்லவ பொலங்கெழுபூவின் மாரி
தூர்த்தன ரருளை முன்னித் தொழுதனர் சுடாவேல் கொண்ட
தீரத்தனை யெய்திச் சூழ்ந்து சிறந்துவாழ்த் தெடுக்க லுற்றார். (௨)

வேறு.

கார்தடிந்து துய்க்குங் கனைகடலி னீரவறப்பப்
போர்தடிந்து செல்லும பூகாவே றனைவிடுத்துச்
சூர்தடிந்தா யன்றே தொழுமடியேம வல்வினையின்
வேர்தடிந்தாய் மறறெமக்கு வேறோர் குறையுண்டோ. (௩)

மாறுமுகங் கொண்டுபொரு வல்லவுணர் மாளரம
ணூறுமுக மெட்டு மோதக கனபுரியத்
தேறுமுக மின்றித திரிந்தேமை யாளவன்றோ
வாறுமுகங் கொண்டே யவதரித்தா யெம்பெருமான். (௪)

நீதி முறையதனி னில்லா வசுரர்புரி
தீது பலவுளவுந் தீர்ந்தோம் பழியகன்றோம்
வேத நெறிதொல்லை வெறுக்கையொடு பெற்றனமா
லேது மிலையா லெமக்கோர் குறையெந்தாய். (௫)

மன்ற வவுணர் வருத்திடவிந் நாள்வரையும்
பொன்றி னவரென்னப் புலம்பித் திரிந்தனமா
லின்று பகைமாற்றி யெமக்கருணீ செய்கையினாற்
சென்றவுயிர் மீண்ட திறம்பெற றனமையா. (௬)

செய்யுமவ னும்புலனுஞ் செய்வித்து நிற்போனு
மெய்த வரும்பொருளும் யாவையுநீ யேயென்கை
யைய வடியேங்க ளறிந்தனமா லன்னதனால
வெய்ய பவமகன்று வீடுமினிக் கூடுதுமால். (௭)

ஈண்டே யெமருக் கிடாசெ யவுணரெலா
மாண்டே விளியும் வகைபுரிந்து காத்தனையால்
வேண்டே மினியாது மேலாய நின்கழற்கே
பூண்டேந் தொழும்பு புகழேம் பிறாதமையே. (௮)

என்று வியம்பி யெவருமினி தேத்துதலுங்
கொன்று ரயில்வேற் குமர னதுகேளா
வந்நா ரணன்விரிஞ்ச னாதியாம வானோர்க்குத்
தன்று ரருளின் றலைமை புரிந்தனனே. (௯)

ஆ திருவிருத்தம் ௨,௯௧௪

---

வசனம்.

ஒப்பற்ற திருவேலாற் சூரனதுடலைப்பிளந்து அழகிய மயில்மீது முருகப்பிரான்றோற்றியதைக்கண்ட அரிபிரமாதி தேவர்கள் சிறந்தவமிர்தத்தைக்கண்டதுபோற் கோஷித்தனர், துள்ளியாடினர், பாடினர், மயிர்க்கூச்செறிந்தார், புஷ்பவருஷம்பெய்தனர், சூழ்ந்துபோற்றினர். அசுரரிழைத்த துன்பத்துக்காற்றாது தேறும்வகையின்றித் திரிந்த வெமையாள வாறுமுகங்கொண்ட வெம்பெருமானே! இதுவரையிலு முயிரற்றவுடலென்னத் திரிந்தவெமக்கு உயிரையும் வேதவொழுக்கத்தையும், பழையசெல்வத்தையும் நீரருளினமையால் எமக்கொரு குறையுமில்லை! எமக்கு வேறியாதும் வேண்டுவதில்லை; உமது சேவடிக்கே அடிமைபூண்டோமெனவிரந்தனர். அதுகேட்ட குமாரஸ்வாமி அவர்களுக் கருள் புரிந்தார்.

தேவர்கள்போற்றுப்படலம் முற்றிற்று.

---

# இரணியன்புலம்புறுபடலம்.

அதுநி கழ்ந்துழி யகன்பதி யவுணர்க ளொருசிலரோர்
கதுமெ னச்சென்று காவலன் கந்தவே ளுய்த்திட்ட
நுதிகொள் வேலினான் மாய்ந்தன னெனப்பகை நுவலுற்றார்
பதுமை யம்மொழி கேட்டன டுணைவியர் பலரோடும். (௧)

காவன் மன்னவ னிறந்தன னெனுமுரை கன்னத்துண்
மேவு மெல்லையி லசனிபெய் றுண்டவெம் பணிபோற்
றேவி யாகிய பதுமகோ மளையெனுந் திருமங்கை
யாவி நீங்கின டலையளி யாகிய தத்துவன்றே. (௨)

எவ்வெ வர்க்குமே லாகிய வவுணர்கோற் கில்லாகி
யவ்வி டத்துறை துணைவியர் வயிறலைத் தழுங்குறுறு
வெவ்வ ழற்பெருங் குண்டமொன் றாக்கியே விளிவுற
தெய்வ தப்பூவை வன்மகள் யாக்கைமுன் செலவுய்த்தார். (௩)

மீன்கி ளர்ந்தன வரிமதர் மழைக்கண்மெல் லியரெல்லாம்
வான்கி ளர்ந்தெழு கின்றதோர் மாபெருங் கனலூடே
கான்கி ளர்ந்திட மலர்தருந் தாமரைக் கானத்திற்
றேன்கி ளர்ந்ததும் மினத்தொடிய புகுந்தெனச் செல்லுற்றார். (௪)

செல்லல் போதுமென் றெழிந்திட வரற்றினோர் செந்தீயிற்
செல்லல் போதுநாண் மாலையு மங்கியிற் சேர்ந்தோங்கு
மல்லல் போதுமு னின்றிடு கிகியெலா மகன்றென்ன
வல்லல் போதுமா நகர்த்திரு வேகின ளதுகாலை. (௫)

இந்த வாறிவ ரங்கியுண் மாண்டன ரிதுகிறகத்
தந்தை பட்டதுஞ் சேவலு மஞ்ஞையுந் தானுகிக்
கந்த வேள்புடை வந்ததுங் கண்டனன் கலங்குற்றுப்
புந்தி நொந்துகின் றிரணியன் வானிடைப் புலம்புற்றுன். (௬)

வேறு.

நன்றென் பதையுணராய் நானுரைத்த வாசகங்க
ளொன்றுஞ் சிறிது முறுதியெனக் கொண்டிலையே
பொன்றும் படிக்கோ பொருதாய் புரவலனே
யென்றுன்னை முன்போ லிருந்திடநான் காண்பதுவே. (௭)

அன்புடையன் கொல்லென் றயலா ரெடுத்துரைப்பத்
துன்புடையேன் போலத் துயரா வயர்கின்றே
னென்புடையே மூன்ன ரெனதுயிர்கொண் டேகினுறு
னின்புடையே கின்று நெடும்பழியி னீங்காதேன். (௮)

மாற்றூர் வலிகண்டு மற்றுன்னை வன்செருவிற்
போற்று தொளித்த பொறியிலியேன் றன்முன்னந்
தோற்றும லெங்கொளித்தாய் சொல்லாய் சுதன் போலக்
கூற்று னவனையின்னுங் கூடமனங் கொள்ளுதியோ. (௯)

கையா ரழுலேந்துங் கண்ணுதலோன் றந்தவர
மெய்யா மொருகாலும் வீடா யஃதெல்லாம்
பொய்யாகும் வண்ணம் புதல்வனென வந்துதித்தோ
னையா வுனக்கோ ருருங்கூறற மாயினனே. (௧0)

கில்லா வுடலை கிலையா மெனக்கருதிப்
பல்லாருங் கண்டு பழிக்கும் படியுனக்குஞ்
சொல்லா தகன்றேனீ துஞ்சியபின் வந்தனுறு
னல்லார் களிற்றேரி னுனே தலையன்றே. (௧௧)

அத்திரனேர் கூறு மவுணர் தழக்குண் மிகக்
குத்திரனே யாருங் கொடியேனீ துஞ்சியபின்
மித்திரனே போன்றிரங்கி மீண்டே னுனக்கென்னைப்
புத்திரனே யென்கை புவிக்குப் பொறையன்றே. (௧௨)

ஆழியான் வேத னமரர்க் கிறைமுதலோர்
வாழியா யென்று வழித்தியிட வைகியநீ
பூழியார் மேனிப் புராரிசிறு வன்றேரிற்
கோழியாய் கின்று விலாவொடியக் கூவுதியோ. (௧௩)

ஓகையா லண்டத் துயிர்களெலாம் வந்திறைஞ்சச்
சேகையாய் மல்குந் திருத்தாள்கொண் டுற்றிடுநீ
வாகையார் கின்ற வடிவேற் கரத்தோனைத்
தொகையாய் கின்று சுமக்குதியோ தோன்றலே. (௧௪)

மேற்றான் விளையு மிஃதென்றே வினயமுட
னூற்றான் மொழிந்தே னதுசிறிதுங் கேட்டிலையே
மாற்றா னெனவந்த மைந்தனுடன் போர்செய்தே
தோற்றாயே யற்றான் மயிலாய்ச் சுமக்குதியோ. (கரு)

மாறுற் றிடாத்தொல் வடிவந் தனையிழந்து
வேறுற்ற புள்வடிவாய் மேவினை யாங்கதனு
லீறுற் றனையன்றே யென்செய்கை செய்வதற்கும்
பேறுற் றிலன்வாளா பேணினே னிவ்வுயிரே. (கசு)

பிள்ளைப் பிறைபுனைந்த பிஞ்ஞகன்றன் காதலனைப்
புள்ளிக் கலாபப் பொறிமயிலாய்ப் போற்றுமெல்லை
யெள்ளற் பொருட்டா வியான்முன் னுரைத்தவற்றை
யுள்ளத் திடையெந்தா யுண்ணுதியோ வுன்னுயோ. (கள)

பொங்குற்ற சீற்றம் பொரும்போ ரிகலுள்ளந்
தங்குற்ற மானஞ் சயமகந்தை வன்மையெலா
மங்குற்ற நின்னை யடைந்ததில்லை யவ்வனைத்து
மெங்குற்ற தையா வியம்பா யெனக்கதுவே. (கஅ)

என்று கனக னிரங்கி நெடுஞ்சேணி
னின்று தளர்ந்து நெடிதுயிர்த்துப பூதரனைத
தின்றுசினந் தீர்வா தெரியினெனச் சிந்தைசெய்து
துன்றுதிரை வேலையிடைத் தொன்மைபோற் புக்கனனே. (கசு)

புக்க கனகன் புலர்ந்து புகரோன்பா
லக்கணமே யெய்தி யழிவுற்ற தந்தையர்க்குந்
தக்க துணைவர்க்குந் தாயர்க்கு மேனையர்க்கு
மிக்க கடன்கள் விதிமுறையே செய்தனனே. (உ௦)

தாக்கிச் சமர்மலைந்த தானவர்க்குச் செய்பரிசே
தூக்கிப் புரிந்து துயரினுக்கோர் விதமென்றே
யாக்கத் தினைவெறுததே யாதிப்பி ரானையுள்ளே
நோக்கிக் கதியடைவா னேற்றொருசா ருற்றனனே. (உக)

ஆ. திருவிருத்தம் உ,கூஙகூ.

---

வசனம்.

இதனை மகேந்திரநகருக்கு சிலவசுரர் விரைந்துசென்று சூரபதுமன் கந்த வேளேவிய வேலாலிறந்தானெனச் சொலலக்கேட்ட சூரனது மனைவியாகிய பதும கோமளையென்பா ளுடனே வுயிர்துறந்தாள். மற்றமனைவியரியாவருந் தீயிற்குதித் திறந்தனர். இரணியன் தன்றந்தை சேவலுமயிலுமாய் நின்றமைகண்டுள்ளங் கலங்கி மனமொந்து நான்சொன்ன வாசகங்களெல்லாங்கேளாமற்போயினையே? என்றுன்னை முன்போற்காண்பன்; அன்புடையானென்று பிறர்சொல்லத் துன்ப முடையனுய்த் துயரங்கொண்டழுகின்றேன்; மாற்றலர் வலிகண்டு முன்னைப் போர்க்களத்திற் காவாதொளித்தேன்? நீ என்கட்புலனுக்குமுன் றோன்றுதொளித்தாய் யாருமுன்மகனென்றுசொல்லப் பூமியிற்றோற்றிய என்னையுங்கூட மனங்கொள் வாயோ? நில்லாதவுடம்பை நிலையென்று நினைத்துப் பலருங்கணபெழிக்க

உனக்குஞ் சொல்லாமலோடிப்போய் மறைந்திருந்தேனே. நீ இறந்தபின்னரன்றோவந்தேன். நானேயோவன்பினேனென் றிவ்வாறுபுலம்பி ஆகாயத்தில் வெகு தூரத்திலிருந்துகொண்டு மனந்தளர்ந்து பெருமூச்செறிந்து நான் புலப்பட்டால் பூதர்களென்னைக் கொன்றுதின்று கோபந்தீர்வாரென்று முன்போற் கடலிலொளித்தான். பின்பு சுக்ராசாரியையடைந்து போரிலிறந்த தாதையார்க்கும் சகோதரர்க்கும் மற்றுந் தாய்மார்கட்கும் ஈமக்கடனை விதிமுறைசெய்து அங்கிருப்பது துன்பத்திற்கிடமெனத்துணிந்து பரமசிவனைநாடி மோக்ஷத்தைவிரும்பி ஒருபக்கத்திற் றவஞ்செய்திருந்தான்.

இரணியன்புலம்புறுபடலம் முற்றிற்று.

---

## மீட்சிப்படலம்.

மற்றதுகா லத்து மணிதூங் கியபசும்பொற்
பொற்றை புரையும் பொறிமஞ்ஞை மீதுமைகும்
வெற்றிநெடு வேற்கை விமலன் விறலோனைப்
பற்றினொடு நோக்கி யினைய பகர்கின்றான். (௧)

கேட்டி யிதுவீர கெடலுற்ற வெஞ்சூர
னீட்டு திருவென்ன விருஞ்சிறையின் முன்வைப்ப
வாட்ட முறுசயந்தன் வானோர் தமையெல்லா
மீட்டு வருதி யெனவே விளம்பினனால். (௨)

குன்ற மெறிந்த குமரனிது கூறுதலு
நன்றி தெனவே தொழுது நனிமகிழ்ந்து
வென்றி விடலை விடைபெற்றுப போர்க்களத்தி
னின்று மவுண னெடுநகரத் தேகினனால். (௩)

மீதுபடு திண்டோள் விடலை யறந்திறம்புங்
கோதுபடு தீயோர் குழீஇயநக ருட்புக்குத்
தாதுபடு தண்டார்ச் சயந்த னமரருடன்
றீதுபடு வெய்ய சிறைக்களத்துச் சென்றனனே. (௪)

செல்லும் விறலோன் றிறத்தை நனிநோக்கி
யல்ல லகலு மரிசுதனும வானோர்க
ளெல்லவரு மற்புதநீ ரெய்திப பதம்பூட்டும்
வல்லி பரிய மலர்க்கை குவித்தனரே. (௫)

செங்கை குவித்தே திறலோய் சிறைபபட்ட
நங்க டுயரகற்ற நண்ணினையோ நீயென்றே
யங்கவர்க ளெல்லோரு மார்த்தெழுந்து கூறுதலு
மெங்கள் பெருமா னிளவ லிதுபுகன்றான். (௬)

வம்மின்கள் வம்மின்கள் வானத்தீ ரெல்லீரு
நும்மை யயர்வித்த நொறில்பரித்தேர் வெஞ்சூரை
யம்ம வவுண ரணிகத் தடனெங்கோ
னிம்மெனவே வேலா லிதுபோழ் தெறிந்தனனே. (௭)

என்றுங் கிசைப்ப விமையோ ரதுகேளாப்
பொன்றாத முத்தி புகுந்தோ ரெனமகிழ்ந்து
வனமுண் மிசைப்பிணித்த வல்லிகளின் மூட்டறுத்துச்
சென்று ரவுணன் றிருநகர் நீங்கினரே. (அ)

வேறு.

துணங்கு றாவுடை யிளையவன் முன்செல நொய்தென்ன
வணங்கி னேருடன் சயந்தனுந் தேவரு மவணீங்கிக்
குணங்க ரீண்டிய களத்திடை நணுகியே குமரன்றாள்
வணங்கி மும்முறை புகழ்ந்தனர் திகழ்ந்தனர் மகிழ்வுற்றார். (௯)

குன்றெ றிந்தவ னமரர்பாற் பேரருள் கொடுநோக்கி
நன்றி யிலவவன் சிறையிடைப் பலபக லனுகுறநீர்
துன்று பேரிடர் மூழ்கினீ ரீங்கினித் துயரின்றி
யென்றும் வாழ்குதிர் துறக்கமேல் வெறுக்கையி விருந்தென்றான். (௧௦)

கந்த னிம்மொழி வழங்கலுங் கடவுளர் களிப்பெய்தி
யுய்ந்த னம்மெனப் பின்னரும் வணங்கின ரதுகாலை
மூந்து தொல்லிடர் நீங்கியே புந்தியின் முதமெய்தி
யிந்தி ரன்றிருப் பெறறிடு ஞான்றினு மினிதுற்றான். (௧௧)

கண்ட னனொரேழு மைந்தனைப் புல்லினன் களிப்புள்ளங்
கொண்ட னனபுற நீவினன் பல்லுகங் கொடியோன்செய்
யொண்ட னைபபுகுந் தெய்ததனை போலுமென் றுரைசெய்யா
வண்டா யாரையு முறைமுறை தழீஇயின னமரேசன். (௧௨)

செற்ற மேதகு மவுனர்தங் காவலன் செருவத்தி
லறறை காறுமா விளிந்திடு பூதாத மனிகங்கண்
முறறு மாயிடை வரும்வகை முருகவேண் முன்னுற்றான்
மறற வெலலேயிற றுஞசிய கணமெலாம் வந்துற்ற. (௧௩)

முஞ்ச தானைக ளாரப்பொடு குழீஇக்குழீஇ முருகேசன்
செஞ்ச ரணமுனம பணிந்துதம மினததொடுஞ் செறிகின்ற
வெஞ்ச விலலமேரா ரெல்லைநீரப புணரியி லெண்ணிலலா
மஞசு கான்றிடு நீததமவந் திணடிய மரபென்ன. (௧௪)

கருணை யங்கட லாகியோன் கனைகடற றிறையாகும்
வருணனை மாமுக நோககியே வெய்யசூர னைவகுறற
முரணு றுந்திறன் மகேநதிர நகரினை முடிவெல்லைத
தரணி யாமென வுணகுதி யொலலையிற றடிந்தென்றான். (௧௫)

என்ற மாததிரைச சலபதி விழுமிதென் றிசைவுற்றுத்
துனறு பலவுயிர தமமொடு மகேந்திரத் தொல்லூரை
யன்று வனமைமேசா புணரியு ளழுததின னவனிக்கீழ்
நின்று மாயவ னடுவுல குண்டிடு நெறியேபோல். (௧௬)

ஆன காலையி லறுமுகன முகுந்தனு மலரோனும்
வானு ளோர்களு மிறைவனும வழுத்தினர் மருங்காக
வேனை வீரர்கள் யாவரும புடைவர விகற்பூதத
தானை யார்ததுடன் சென்றிடச் செருநிலந் தணப்புற்றான். (௧௭)

கலங்கல் கொண்டிடு மகேந்திர வரைப்பினைக் கடந்தேபின்
னிலங்கை மாநக ரொருவியே யளக்கரை யிகந்தேகி
நலங்கொள் சீருடைச் செந்தியிற் றொல்லைமா நகரெய்தி
யலங்க லஞ்சுடர் மஞ்ஞைநின் றிழிந்தன னயில்வேலோன். (௧௮)

கேக யததினின் றிழிந்துதொல் சினகரங் கிடைத்திட்டுப்
பாகசாதன னாதியா மமரர்கள் பணிந்தேத்த
வாகை சேரரித் தவிசின்மேல் வதனமூ விரண்டுள்ள
வேக நாயக னுலகருள் கருணையோ டினிதுற்றான். (௧௯)

வேறு.

ஈண்டிது நிகழ்ந்த வெல்லை யிப்பக லவுண ராகி
மாண்டவர் நமர்க ளன்றே மற்றவர் படிவ முற்றுந்
தீண்டினங் கதிர்க்கை யாலுந் தீர்விதற் கிதுவென் பான்போற்
பூண்டகு தடந்தேர் வெய்யோன் புனற்பெருங் கடலுட் புக்கான். (௨௦)

வேலையி னடுவு புக்கு மேவரும் வடவைச் செந்தீக்
காலம திறுதி யாகக் கடிதெழீஇக் ககன நக்கிப்
பாலுற விரிந்தி யாண்டும் படர்ந்துகொண் டென்னவந்தி
மாலையம் பொழுதிற் செக்கர் வான்முழு தீண்டிற் றன்றே (௨௧)

வேறு.

அன்னதொரு போழ்துதனி லாறிரு தடந்தோண்
முன்னவனை நான்முகவ னேமுதலதேவா
சென்னிகொடு தாழ்ந்துசிறி யேங்களிவ னுன்றன்
பொன்னடி யருச்சனை புரிந்திடுது மென்றார். (௨௨)

என்றுரைசெய் காலையெமை யாளுடைய வண்ண
னன்றென விசைந்திட நறைகொள புனல் சாந்தந்
துன்றுமலர் தீபமவி தூபமுத லெல்லா
மன்றொரு கணத்தின்மு னழைத்தனர்க ணங்கன். (௨௩)

எந்தையுமை தோர்ந்திட வியம்பிய குமார
தந்திர நெறிப்படி தவாதறு முகற்கு
முந்திய குடங்கர்முதன் மூவகை யிடத்தும்
புந்திமகிழ் பூசனை புரிந்தனர் பரிந்தே (௨௪)

எஞ்சலி லருச்சனை யியற்றியிணை யில்லோன்
செஞ்சர ணினைத்தமது சென்னிகொடு தாழா
வஞ்சலிசெய் தேத்திட லுமாங்கவரை நோக்கி
நெஞ்சுறு மகழ்ச்சியொடு நீடருள் புரிந்தான் (௨௫)

நீண்டவருள் செய்திடு நெடுந்தகை நுமக்கு
வேண்டுகுறை யுண்டெனின் விளம்புதிர்க ளென்னக்
காண்டகைய சூர்முதல் களைந்தெமை யளித்தா
யீண்டினருள் பெறற்றனமி யாதுகுறை மாதோ. (௨௬)

ஒன்றினி யளிப்பதுள துன்னடியம் யாக்கை
லின்றிடு பகற்றுணையு நின்னிருக ழற்கண்
மன்றதலை யன்புற வரந்தருதி யெந்தா
யென்றிட லுநன்றென விரங்கியருள் செய்தான். (௨௭)

வேறு.

மலரய னாதியாம் வரம்பி லோரெலாம்
பலர்புகழ் குமரனைப் பரவி வைகினா
ருலகினில் யாரையு மொறுத்த தானவர்
குலமென மாய்ந்தது கொடிய கங்குலே. (௨௯)

கங்குலுந் தாரகா கணமு மாய்ந்திடப்
பொங்கொளி வீசியே பொருவி லாதவ
னிங்குள வுலகெலா மீறு செய்திடுஞ்
சங்கர னாமெனத் தமியன் றோன்றினான். (௩௰)

குணதிசை யமர்புரி கொடிய ருய்த்திடுங்
கணையென விரிகதிர் காட்டி யங்கவை
யணைதலுங் குருதிநீ ரடைந்த தன்மைபோ
லிணையறு செககரோ டிரவி தோன்றினான். (௩௰)

அப்பொழு தவ்விடை யமரர் கம்மியன்
கைப்படு செய்கையாற் கந்த வேளொரு
செப்பரு நிகேதனஞ் செய்வித் தீசனை
வைப்புறு தானுவில் வருவித் தானரோ. (௩௧)

ஆமய முதலிய வைந்து கந்திகண்
மாமலர் மஞ்சன மமிர்தம வான்றுகி
றாமணி விளக்கொடு தூபங் கணாடி
சாமரை யாதிக ளமரர் தந்திட. (௩௨)

முழுதொருங் குணர்ந்திடு முருகன் யாவருந்
தொழுதகு மிறைவனாற் றொடர்பு நாடியே
விழுமிய கண்ணுதல் விமலன் றாண்மலா
வழிபடல் புரிந்தனன் மனங்கொள காதலால். (௩௩)

ஆக திருவிருத்தம் ௨,௬௬௮.

வசனம்.

பிறகு சண்முகப்பெருமான் வீரவாகுதேவரைநோக்கி, நீர்போய்த் தேவர்களைச்சிறைவிடுத்து வரக்கடவீரென்று கட்டளையிட அவரும் அவ்வாறே மகேந்திர நகரத்திற்சென்று தேவர்களையெல்லாம் சிறைவிடுத்தார்; அவர் யாவரும் வீரவாகு தேவரோடுசென்று குகப்பெருமானைவணங்கி வாழ்த்தினார்கள். அவர்களைநோக்கி நீங்கள் முன்போலவே உங்கள் செல்வமநுபவிக்கலாமென்றலும், சயந்தன் தன் தந்தையாகிய இந்திரனைவணங்க, அவன் இவனையெடுத்து மார்போடணைத்து முத்த மிட்டான். ஏனைய தேவரும்வணங்க அவர்களையுந் தழுவிக்கொண்டான், பிறகு சண்முகர் போர்க்களத்தில் இறந்துகிடக்கும பூதவீரரெல்லாரும் பிழைக்கும்படி யருள்செய்தலும் அவர்களும் பிழைத்தெழுந்துவந்து வணங்கினார்கள். பிறகு வருணனையழைத்து மகேந்திரநகரை யழித்துவிடவேண்டுமென, அவ்வாறே அவனும்

அதனைக் கடலில் மறையச்செய்தான். பிறகு சண்முகப்பெருமான் திருச்செந்தூரையடைந்து தமது திருக்கோயிலில் எழுந்தருளியிருந்தார். பிறகு தேவர்களெல்லாரும் இவரை அருச்சனைசெய்தார்கள். பெருமான் உங்களுக்குவேண்டிய தென்னவென்றுகேட்க, அவர்கள் சூரனைக்கொன்றதே யெங்களுக்குப் பெறுதற்கரிய பேருயிற்று, இனியாம் ஒன்றும்வேண்டிலேம், தேவரீர் கடைக்கண்பார்வையொன்றே எம்மீதிருக்கவேண்டுமென்றார்கள். அதன்பிறகு, தாமும் தமது தந்தையாகிய பரமசிவனை வழிபட்டுக்கொண்டு அந்தத்தலத்திலே யெழுந்தருளியிருந்தார். இதுநிற்க,

மீட்சிப்படலமுற்றிற்று.



யுத்தகாண்டமுற்றுப்பெற்றது.



ஆ காண்டம் நான்குக்குத் திருவிருத்தம் எ,அ௰அ.

கச்சியப்பசிவாசாரியர் திருவடிவாழ்க.



திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது.

# தேவகாண்டம்.

## திருப்பரங்குன்றுசேர்படலம்.

இன்ன பண்பினாற் சிவனடி வழிபட லியற்றி
யந்நி லைக்கள நீங்கியே யமரர்கண் முனிவர்
தன்ன தானையந் தலைவர்கள் புடைதழீஇச் சாரப்
பொன்னின் மஞ்ஞையி னெருத்தமேல் கொண்டனன் புனிதன் (க)

சீர்த யங்கிய மயூரமே லமர்தருஞ் செவ்வேள்
சார்த லுற்றிடு மாலயன் மகபதி தம்மை
நேர்த லில்படை வீரரை நோக்கியே நீவி
ரூர்தி மேலராய் வம்மினம் புடையென வுரைத்தான. (உ)

வேறு.

மற்றது காலையில் வண்டு மூய்முடிக்
கொற்றவன் முதலிய குழுககொ டேவரும்
வெற்றிகொள் வீரரும் வேறு தத்தமக்
குற்றிடு மூர்திமே லொருங்குற் றீண்டினர். (ங)

ஞாயிறு கறங்கென நணுகும் பொன்முடிக்
கோயிலின் மருங்கினிற குழீஇக் குழீஇயிரண்
டாயிர வெள்ளமா மடல்வெம பூதரு
மேயென வெழுந்தன ரெழுந்த பூழியே. (ச)

மிக்குய ரறிஞரை மேவிற் கீழ்மைசெய்
மக்களு மேனெறி யடைதல் வாய்மையே
தக்கதொல் பூதர்கள் சரணந் தோய்தலிற்
புக்கது பொன்னகர் புவியும் பூழியாய். (ரு)

அழற்றிய பல்கதி ராத பத்திர
நிழற்றிய விண்ணளாய் நிமிர்ந்த கேதனங
குழற்றிய தளைவயிர் கோடு காகள
மிழற்றிய பேரிகை மிகவு மார்த்தவே. (சா)

மேக்குயர் வட்டமும் விளங்கு காம்புமாய்
நீக்கமில் கவிகைக ணிழற்றி மல்குவ
மாக்கிளர் பஃறொடை வானக் கம்பலந்
தூக்கிய திறனெனத் தோன்று கின்றவே. (எ)

மேற்றலை கடவிய வெய்யன் வெம்மையா
னேற்றலை யெய்திவா னுணங்க நோன்றிரை
யாற்றலை முயன்றென வனிக வேலையுட்
கோற்றலை யசைவவெண் கொடியின் கானமே (அ)

பாங்கமை பதலையே முதல பல்லிய
மாங்கொலி வழங்குவ வவுணத் தீயரைத்
தாங்கினை யென்றிறை தண்டஞ் செய்திட
வாங்கிய திரைக்கடல் வாய்விட் டொக்குமால். (கூ)

காந்தளஞ் சென்னியன் கடவு மாமயில்
கூந்தொறுங் கூந்தொறுங் குலைந்து பஃறலைப்
பாந்தளங் கசைதலும் பசலை மூக்கினு
லாய்ந்திடு கின்றன வகிலங் குதத்தியே. (கய)

மூக்குடை யலகினுன் முகிலைக் கீறியே
யூக்கொடு பரலென வுருமுப பறறுமாற்
றீக்கிளர் வன்னமேதார் செய்ய சூட்டுடைக்
கூக்குரல் வாரணங் கொடிய தாகையால். (கக)

இங்கிசுழ் வுற்றிட வெழுந்த தானைகண்
முன்னயல கடைக்குழை மொய்ந்தநுச் சென்றிடப்
பன்னிரு மொய்ம்புடைப் பகவர் மேலவ
னங்நக ரத்தினு மகன்று போயினுன். (கஉ)

பொரியரை விளவுகால் புனிற்றுத் தீங்கனி
வருபயன் கொண்டுதாம் வறிது வீழ்தலெனக்
கரியினம் பாரிடக் கணங்க ளார்ப்பினல்
வெருவின வுணர்வில மயங்கி வீழ்ந்தவே. (கங)

சாற்றிடிற் றம்வினை தம்மைச் சூழுமா
லாற்றலில் பெற்றம தலைக்கும் வலலிய
மாற்றருந் துப்புடை வயவர் தானையு
னேற்றுரி முரசினுக் கிடைந்த றிந்தவே. (கச)

குஞ்சர மெறிந்திடுங் கொலைவல் கோளரி
யெஞ்சலில் கயமுக ரெண்ணில் பூதாகள
விஞ்சிய பிளிற்றொலி வினவி மெய்பனித்
தஞ்சின நஞ்செழ வயர்ந்த தேவர்போல். (கரு)

உரங்குறை போழ்தில்யா ரொடுங்க லிலலவர்
வரங்குறை மான்முக வயவ ரோதையாற்
கரங்குறை வின்றிநீள் கடுங்கண் யாளிபோய்க்
குரங்குறை சூழலுட் குலைந்து புக்கவே. (கசு)

வசைபடு பாரிடம் வழுக்க லில்வகை
மிசைபடு மூற்றமாய் மேற்கொண் டேற்றண
விசைபடு பாரிட மிடிக்குங் கொட்பினு
லசைபடு கின்றன வடுக்க லானவே. (௧எ)

உரகமு மடங்கலு மொடுங்கி யுட்கியே
வரைகளின் முழைபுக வானத் தார்ப்பண
வரிமுக வீரர்தம் மரவத தன்மையா
லிரிவன புரள்வன வெழிலி யேறெலாம். (௧அ)

காட்டக வெயினர்தங் கல்லென் சும்மையாற்
கூட்டுறை புட்குலங் குலைவுற் றுலெனச்
சூட்டுடை வாரணந் தோகை யார்ப்பது
கேட்டுள நடுங்கினர் கிலேசங் கொண்டுளார். (௧௯)

அரங்குறு மதலைமே லாடு நீரரின்
மரங்களை யலைத்திடு கடுவன் மந்திகள்
கரங்குலை வோடுபற காட்டி வாய்வெரீஇ
யிரங்கின சேவலங் கொடியி டிப்பினால். (௨0)

ஆரண முழங்கொலி யமரர் வாழ்த்தொலி
சீரண வியவொலி சேனை பேரொலி
காரண மிலவன் கடவு மாமயில
வாரண வொலிகளான் மறைத லுற்றவே. (௨௧)

இடனுறு குறிஞ்சியி லினைய தன்மையா
னடைவைகொள் பெரும்படை நடுவ ணேகியே
சுடர்பொழி வேலினன் றூய கூடலின்
குடதிசை யமர்பரங் குன்றை யெய்தினன். (௨௨)

ஆவதோர் பொழுதினி லங்கண் முன்னுறை
மூவிரு தவத்தரு முனிவ யான்முத
லேவரு மெர்தையை யிறைஞ்சி யிவ்விடை
வேவுதி சிறந்ததிவ் வெற்பென் றேத்தினார். (௨௩)

என்றலு முருகவேள் யாமு மிவ்வரைச்
சென்றிட கினைந்தன மதனைச் செபயினீர
நன்றும தெண்ணமு நமது சிந்தையு
மொன்றிய வேயென வுவபபிற் கூறினன். (௨௪)

மைம்மலை துழனியும் வடிவும் பெற்றுடைக்
கைம்மலை பொழிதரு கடாங்கொள் சாரலி
னம்மலை யேறின னமலை தன்னொரு
செம்மலை யாகிவந் துதித்த சிறபரன். (௨௫)

வற்றருந் திரைக்கடல் வடாது மாதிரப
பொறையுமை நுகர்ந்தெனப் பூத சேனைகள்
கொற்றவன வருபரங் குன்றின சாரலைச்
சுற்றிய மிசையினுந் துவன்றிப் புக்கவே (௨௬)

காலையங் கதுதனிற் கடவுட் கம்மியன்
மாலுறு கிரிதனில் வரம்பில் வீதியுங்
கோலநற் றெய்வதக் குலமுங் கோயிலுஞ்
சோலையும் வாவியுந் துவன்ற நல்கினன். (உள)

அத்துளை யெம்பிரா னமரர் கம்மியன்
கைத்தொழி னேக்கியே கருணை செய்துபோய்ச்
சித்திர மறுகிடைச் சேனை வீரரை
வைத்தனன் மந்திர வரைப்பை யெய்தினன். (உஅ)

ஏயின மஞ்ஞைநின் றிழிந்து நான்முகன்
மாயவன் மகபதி வயவர் மற்றையோ
ராயினர் புடைவர வவையி னூடுபோய்ச்
சீயமெல் லணைமிசைச் சிறப்பின் வைகினன். (உகூ)

பரீஇயயல் வந்திடு பங்க யன்முதன்
மரீஇயினர் தமையெலாம் வயின் வயின்றொறு
மொரீஇயின னமரரை யொல்லை யேவினன்
பொரீஇயின ரில்லதோர் புனித மேலையோன். (கூ0)

குலக்கிரி பொருவிய குறளின் வேந்தரும்
வெலற்கருந் திறலுடை வீர மொய்ம்பனு
மிலக்கரு மெணமரும யாரு மெந்தைதன
மலர்க்கழ றொழுதனர் மருங்கி னீண்டினா. (கூக)

ஏவலி னியன்றன ரினையர் நின்றிட
மூவிரு பராசர முனிசி றாகளுஞ்
சேவலை யுயரிய தேவ நாயகன்
பூவடி யருச்சனை புரிந்து போற்றினா. (கூஉ)

வழிபடு புதல்வாகள வழுத்தி நின்றுழி
யுழுவலன் பொடுகண் ணேடிச் செஞ்சடைக்
குழுவிவெண் பிறையினன கூறுந் தொல்லருண்
முழுவது நினைந்தனன முற்று ணர்ந்துளான். (கூ௩)

சலம்புரி யும்பரா சரனெ னும்முனி
குலம்புரி தவமெனுங் குமரா தேர்வுறப
புலமபுரி போதகப பொருண்மை யாவையு
நலம்புரி குமரவே ளவினறு வைகினன். (கூச)

பொருவரு மகேந்திர புரத்தை நீங்கியே
தரணியில் வந்தவா சாற்றி னுமினிப்
பெருமைகொ ளிந்திரன பெண்ணை யெம்பிரான்
றிருமணஞ் செய்திடுஞ் செய்கை செப்புவாம். (கூரு)

---

வசனம்.

குமரநாயகன் இவ்வாறு சிவார்ச்சனைசெய்து வழிபட்டபிறகு, மயில்வாகனத்திலெழுந்தருளி, பிரமன் முதலிய தேவர்களும் வீரவாகுதேவர் முதலியோரும் தம்மைச் சூழச்சென்று திருப்பரங்குன்றத்தையடைந்தார. அவ்விடத்தில் தெய்வதச்சனால் படைக்கப்பட்ட அதிவிநோதமான திருமாளிகையிற்சேர்ந்து, தேவர்கள் முதலானவர்களுக்கும் வீரவாகுதேவர் முதலானவர்களுக்கும் அமைக்கப்பட்ட விடுதிகளில் அவர்களைச் செல்லக்கட்டளையிட்டு, இனிது வீற்றிருக்கையில், பராசரமுனிவன் மக்கள் அறுவரும் முன்னே நம்பெருமான் கட்டளையிட்டிருந்தபடியே அப்பெருமானது திருவடியை அர்ச்சித்துநின்றனர். அவர்களைக் கடாக்ஷித்து, அவர்களுக்கு வேதசிவாகமாதிகளின்முடிவாகிய மெய்ப்பொருளை உபதேசித்தருளினார். இதுநிற்க,

திருப்பரங்குன்றுசேர்படலம் முற்றிற்று.

---

# தெய்வயானையம்மை திருமணப்படலம்.

காய்ந்திடு தம்பகை கடந்து பொன்னகர்
வேந்தியன் முறையருள் வேறகை வீரற்குக்
கூந்தலஞ் சிறுபுறக் குஞ்ச ரந்தனை
யீந்திட மகபதி யிதயத் தெண்ணினன். (௧)

விருத்தம தாகுமிவ் விழைவை யிந்திரன்
றிருத்தகு மாலயன் றேவர் தேர்வுற
வுரைத்தனன் வினவலு முவகை பெற்றுநின்
கருத்துநன் றெனக் கழறன் மேயினார். (௨)

பன்னிரு மொய்ம்புடைய பகவன் பாற்படப்
பின்னலஞ் சுரிகுழற் பிடியும் பொய்கைவாய்
முன்னுற வருந்தவ முயன்று வைத்தன
ளின்னுழி யதன்பய னெய்திற் றேகொலாம். (௩)

கயலுறழ் விழியுடைக் கடவுள் யானையை
வியலவரை யெறிந்திடு வேற்கை யண்ணலுக்
கியலபுளி வதுவையா லீதற் கிவ்விடை
முயலுதி கடிதென மொழிந்து வைகினர். (௪)

மறறது போழ்தினின் மகத்தின் செம்மலோ
ரொறறனை நோக்கியே யொல்லை மேருவாம்
பொற்றையின் மனைவியைப் புதல்வி தன்னுட
னிற்றுறையில் விளித்தனை யேகு நீயென்றான். (௫)

என்றலுந் தூதுவ னிசைந்து மேருவிற்
சென்றனன் புலோமசைத் தெரிவை முன்புபோய்
நின்றனன் வணங்கின னினது சிந்தைபோ
லொன்றிய கேளென வுரைத்தன் மேயினன். (௬)

மாண்டனன் வெய்யசூர் மதலை தன்னொடு
சேண்டொட ரமரருஞ் சிறையி னீங்கினு
ராண்டலை யுயர்த்தவ னனிகந் தன்னொடு
மீண்டனன் றிருப்பரங் குன்ற மேயினுன். (எ)

இன்றிட வினையது நினைது நாயக
னுனறனை மகளொடு மொல்லை யிற்பரங்
குன்றிடை யிருக்கையிற் கொண்டு செல்கெனு
வின்றெனை விடுத்தன னேகு நீயென்றான். (அ)

அம்மொழி வினவலு மணங்கி னல்லவள்
விம்மித முற்றனள் விழும நீங்கினு
ளெம்மையு மில்லதோ ரின்ப மெய்தினுள்
கொம்மென வெழுந்தனள் குமரி தன்னொடும். (கூ)

புடையுற வணங்கினர் போற்றி மேருவி
னிடையுறு புலோமசை யேம மாகியே
யடலயி ராவத வானை மேற்கெடு
மடமக டன்னொடும் வானத தேகினுள். (௧௦)

பொருப்பினும் மேலதாய்ப் புவியிற் பேர்பெறுந்
திருப்பரங் குன்றிடைச் சென்று தேவர்கோ
னிருப்பதோர் மந்திரத தெய்தி வைகினுண்
மருப்பிரண் டுடையதோர் வார ணத்துடன். (௧௧)

உறையுமவ் வெல்லையி னுயர்ம கேந்திரச்
சிறையினு மகன்றிடு தெய்வத் தையலா
ரிறைவியைப் பெற்றன மியாமுய்ந் தோமெனு
முறைமுறை வணங்கினுர் முகிழ்த்த கையினுர். (௧௨)

சேணுறு மெழிலிவாய் திறந்த மின்னுவைக்
காணுறு கின்றதோர் கலாப மஞ்ஞைபோன்
மாணுறு புலோமசை வரலு மாதரா
ரேணுறு கின்றன ரேமம் பெறறுளார். (௧௩)

கணடனண் மதலையைக் கருணை யாற்றழீஇக்
கொண்டனண மகிழ்ந்தனள கொங்கை பாலுக
விண்டனள் கவற்சியை வெறுமை யுற்றுளோர்
பண்டுள பெருநிதி படைதத பான்மைபோல். (௧௪)

ஆடுறு பசியினே ராக்கங கண்டுழி
நீடுறு மூவகையா னிறைவு பெற்றென
மாடுறு புலோமசை வடிவங காண்டலுங்
கூடினர் தன்மையுங் குரிசி லெய்தினன். (௧௫)

வேறு.

அப்போது வானோர் குழுவோடயி ராணி கேள்வன்
செப்போது கொங்கை மகளோடமணஞ் செப்பன் முன்னி
யொப்போது நீர்மை யிலதா மொருவன் கழற்கே
கைப்போது தூவிப் பணிந்தேத்திக் கழற லுற்றான். (௧௬)

கன்னின்ற மொய்ம்பி னவுணக்களை கட்டல் செய்தா
யிந்நின்ற தேவர் சிறைமீட் டனையென் றனக்கு
முன்னின்ற தொல்சீர் புரிந்தாயது முற்று நாடிச்
செய்ந்நன்றி யாகச் சிறியேன்செயத் தக்க துண்டோ. (௧௭)

முந்தே தமியேன் பெறுமங்கை யிம்மொய் வரைக்கண்
வந்தே யமர்வா ளவடன்னை வதுவை செய்து
கந்தே புரைநின் பெருந்தோளிற் கலத்தி யாங்க
ளுய்ந்தே பிறவிப் பயன்பெற்றன மோங்க வென்றான். (௧௮)

என்னுந் துணையி லமரேசனை யெந்தை நோக்கி
யந்நங்கை தானு மிகநோற்றன ளாத லானீ
முன்னும் படியே மணநாளை முடித்து மென்னத்
தன்னுங் கடந்த மகிழ்வெய்தித் தருக்கி னின்றான. (௧௯)

வடிக்கொண்ட வொள்வேற் படைநம்பி தன்வார் கழறகான்
முடிக்கொண் டடியேஞ் சிறந்தேங்கண் முதல்வ வென்னாக்
கடிக்கொண்ட வாய்தற் புடைவந்து கணிப்பில் காத
னொடிக்கொண்ட போழ்திற் படர்தூதரை நோக்கி னானல். (௨0)

முன்னாகி யுள்ள பலதூதர் முகத்தை நோக்க
வன்னா ரெவருந் தொழுதே பொன்னடி வணங்கி
யெந்நா யகனே தமியேஞ்செய் வதென்கொ லென்னப்
பொன்னா டுடையா னிஃதொன்று புகல லுற்றான். (௨௧)

மூவர்க்குண் மேலோன் கிரிசேர்முசு குந்த னாதிக்
காவற் கடவுட் டலைவர்க்குங் ககன மேவுந்
தேவர்க்கு மேனைத் திசையோர்க்கு முனிவ ராயோ
ரேவர்க்கு மெந்தை மணநாளை யெனச்சொல் வீரால. (௨௨)

கந்தக் கடவுண் மணத்தன்மை கழறி வல்லே
யிந்தப் பொருப்பி னிடையாவரு மீண்டும் வண்ணந்
தந்திட் டிடுங்க ளெனவாசவன் சாற்ற லோடு
மந்தக் கணத்திற் றொழுதொற்ற ரகன்று போனார். (௨௩)

வேறு.

போனபொழு திற்புலவர் செம்மல்புலன் மிக்க
வானவர்கள் கம்மியனை வல்லையில் விளித்துக
கானமர் கடம்புபுனை காளைதன் மணத்துக்
கானசெயன் முற்றுற வமைத்தியிவ ணென்றான். (௨௪)

புலவன துளங்கொடு பொருப்பினொரு சாரி
னிலமிசை வரைப்பக னிதிக்கொடு விதித்துக்
குலமணி குயிற்றிநனி கோலம தியற்றி
வலனுயர் சிறப்பினொரு மண்டப மமைத்தான். (௨௫)

மேலகில முற்றுற விதானவகை போக்கி
மாலையொடு பலகவரி வான்றுகில்க டூக்கி
யாலய நனந்தலையி லாறுமுகனை வைக
நூலின்முறை நாடியொரு நோன்றவி சமைத்தான். (௨௬)

வேதநெறி தந்திடு விசாகனயல் வந்த
மாதவன் விரிஞ்சன்முதல் வானவர்கள் யாரு
மேதிலரும் வைகவியல் கின்றவிடை தோறு
மாதனம் வரம்பில வமைத்தன னிமைப்பில். (உஎ)

மன்றல்பயில் கின்றவது வைக்களன் மருங்கிற்
குன்றுபுரை பல்சிகர கோபுரம் வகுத்தா
னன்றிமணி மண்டப மளப்பில வமைத்தா
னின்றியமை யாப்பொருவு மெண்ணில விழைத்தான். (உஅ)

காலம்வரை யாதுகரு துற்றபொழு தெல்லாஞ்
சாலவெவர் கண்ணுநனி தம்பயன் வழங்குஞ்
சோலைமலர் வாவிகள் சுனைத்தொகை தொகுத்தா
னேனும்வது வைக்குரிய வேனவு மளித்தான். (உகூ)

அவ்வகை யெலாம்புலவ னங்ஙனம் வகுப்பச்
செவ்விது தெரிந்துவகை செய்தமரர் செம்மன்
மெய்வதுவை யாற்றும்வழி வேண்டுகர ணங்க
ளெவ்வெவையு மங்கணெ ரிமைப்பில்வரு வித்தான். (௩0)

தேவர்முதல் வன்றனது செய்கையிது நிற்க
வேவல ரிசைத்திட லுமிவ்வதுவை காணக்
கோவியல் புரிந்தமுசு குந்தனெனு நேமிக்
காவலன் வரும்பரிசு கட்டுரைசெய் கிற்பாம். (௩க)

கல்லருவி தூங்குகயி லைப்பொழிலின் மேனா
ளல்லுறழ் மிடற்றவனு மம்பிகையு மாக
வெல்லையின் மகிழ்ச்சியொ டிருப்பமுசு வீட்டம்
வில்லுவ மரந்தொறும் வியன்சினையி லுற்ற. (௩உ)

முற்றுணர் கருத்தின்முனி வோர்களென முள்காந்
துற்றிடு முசுக்கலையு ளொன்றிருவர் மீது
மற்றொருவில் வத்திலை வரம்பில பறித்துத்
தூற்றிடுவ தென்னநனி தூர்த்துளதை யன்றே. (௩௩)

தூர்த்ததொரு காலைதனிற் சுந்தரிபொ ருளாய்ச்
சீர்த்திட லுமாங்கவள் செயற்கைதனை யண்ணல்
பார்த்துநமை யீண்டுவழி பட்டுளது தன்னை
வேர்த்திடுவ தென்னிது விடுத்தியினி யென்றான். (௩௪)

என்றிட லுமம்பிகை யிகற்சின மிலாளாய்
நன்றருள் புரிந்திட லு ஞானவடி வானோன்
வன்றிறன் முசுக்கலை மனத்திரு ளகற்றி
யொன்றியமர் வாலுணர் வொருங்குதவி னானெல். (௩௫)

மெய்யுணர்வு சேர்தலும் வியன்சினையி னின்று
மொய்யென விழிந்துமுசு வுட்குவர லெய்தி
யையனையு மாய்தனையு மார்வமொடு தாழ்ந்து
பொய்யடிய னேன்பிழை பொறுததிரென வோடும். (௩௬)

பிழையிதென வச்சமொடு பேசலெமை யீண்டே
விழுமியதொர் கூவிளையின் மெல்லிலைக ளிட்டு
வழிபடல் புரிந்தனை மனுக்குல முதித்து
முழுதுலகை யாளுகென முன்னவன் மொழிந்தான். (௩௭)

வேறு.

அம்மொழி தேர்தலு மாயதொர் கள்வன்
கைம்மிக லுற்ற கலங்களு ரெய்தி
விம்மி யிரங்கி விதிர்ப்பொ டெழுந்தே
யெம்மிறை வற்றொழு திவ்வினை செப்பும். (௩௮)

நுங்களை வைகலு நோக்கி யுவப்பா
யிங்குறை கின்ற திகந்து நிலம்போய்
மங்குறு செல்வ வலைப்படு வேனே
லெங்கள் பிரான்பினை யெங்ஙன முய்கேன். (௩௯)

என்னலு மன்னதை யெம்மிறை கேளா
நின்னுள நன்று நிலத்திடை வைகிப்
பின்னிவண் மீள்குதி பேதுற லெய்தி
முன்னலை யாது முசுக்கலை யென்றான். (௪௦)

பொய்ம்மறை யான புலாலுடல் போற்றி
யம்மையில் வாழ்விடை யற்றமு றாமே
யிம்முக னேடுற வெற்கரு ளென்னா
மெய்ம்முசு வின்கலை வேண்டிய தன்றே. (௪௧)

அற்றமி லவ்வர மைய னளிக்கப்
பெற்றருள் கொண்டு பெருங்கயி லாயப்
பொற்றை யகன்று பொருக்கென விம்பர்
மற்றொரு கணத்தினில் வந்தது மன்னோ. (௪௨)

ஆரணர் மூழ்கியு மாக்க மிழந்தும்
வாரி சுருங்கியும் வாய்மை சிறத்தித
தாரணி யாளரிச் சந்திர னென்போ
னோர்மரு மானென வேயுதித் தன்றே. (௪௩)

மாமுக மேமுசு மற்றுள வெல்லாங்
காமரி லோதரு காட்சிய தாகிக்
கோமுறை சேர்முசு குந்த னெனும்வோர்
நாம வியற்பெயா நண்ணிய தன்றே. (௪௪)

ஆய வழிப்படு மம்முசு குந்தன்
றாயபொ லன்முடி தொன்முறை சூடி
மாயிரு ஞால வளாகம துள்ள
தேயமெ லாமொர் செகிற்கொடு காத்தான். (௪௫)

ஓவறு சீர்க்கரு வூரிடை மேவிக்
கோவிய லோம்புறு கொள்கைய னாகித்
தேவரை யேவல்கொள் சீர்கெழு சூரன்
காவலி னானை கடக்கல னுற்றான். (௪௬)

சொற்றிறன் மேதகு சூரொனும் வெய்யோ
னுற்றிடும் வைப்பினி லோரிடை தன்னின்
மற்றொ ரிளம்பிறை வைகிய வாபோற்
கொற்றவ னுமுசு குந்த னிருந்தான். (௪எ)

சூரனை யெந்தை தொலைத்தது கேளா
வாரணர் நீங்கி யருஞ்சிறை பெற்ற
மேருவ தென்ன வியன்மிடல் பெற்றுச்
சீரிறை மாட்சி செலுததி யமர்ந்தான். (௪அ)

வேறு.

அமரு மெல்லையி னரசன் முன்னரோ
யிமைய வர்க்கிறை யேவு தூதர்போய்க்
கமல மன்னபொற் கழலகள் வாழ்த்தியே
தமது வன்மையாற் சாற்றன் மேயினர். (௪௯)

உனது நண்பனு யுறுபு ரந்தரன்
றனது தூதர்யாந் தாவில் சீர்பெறீஇ
யினது சுற்றமு நீயும் வாழிகே
ளினிது மங்கல மிசைப்ப வெய்தினேம். (௫0)

அடாத தீமைசெய் தமரர் தஞ்சிறை
விடாத சூரனை வீட்டி வேலவன்
வடாது பூமிவாய் வந்து கூடலின்
குடாது சேர்பரங் குன்றில் வைகினன். (௫௧)

கொற்ற வேற்படைக் குமரற் கிந்திரன்
றெற்றெ னததருந் தெய்வ யானையை
யிற்றை சென்றபி னீகின் றுனிது
சொற்றி டும்படி தூண்டி னுனைமை. (௫௨)

மாறி லாதவவ் வதுவை காணநீ
யீறில் சேனையோ டெழுந்து தென்றமிழ்க்
கூறு சீரப்பரங் குன்றந் தன்னிடைச்
சேறி யாலெனுச் சிலத ரோதினர். (௫௩)

ஓத வனனவ னுவகை சிந்தையின்
மீது பொங்குற மெய்ய னித்தெழீஇத
தூத னைத்தழீஇச் சோப னம்மிதற்
கேது மில்லையா லீயு மாறென்றான். (௫௪)

ஈணடை மாந்தி யாவு நலகுகோ
காண்ட குங்குடை கவரி நல்குகோ
வாண்டி ருந்தவென் னரசு நல்குகோ
வேண்டு கின்றதென் விளம்பு வீரென்றான். (௫௫)

கோதில் சீர்முசு குந்த னிந்தவா
றோது மெல்லையி னுவகை யுற்றவ
னுத ரத்தின தளவை நோக்கியே
தூத ராயினோர் வியந்து சொல்லுவார். (௫௬)

சொல்லி னைப்படுந் தூதர்க் கிவ்வெலா
மொல்வ தன்றிவை யுதவிற் றொக்குமால்
வல்லி ரைந்துநீ வாச வன்முனஞ்
செல்வ தேயெனச் செப்பிப் போயினார். (௫௭)

போய தூதுவர் புவியின் மன்னவ
ராயி னோர்க்கெலா மாறு மாமுகச்
சேய வன்மணஞ் செப்பி மாதிர
மேயி னோர்க்குமிங் கிதுவி ளம்பினார். (௫௮)

அகல்வி சும்பிடை யல்க லும்படர்
பகல வன்முதற் பகவர் யாவர்க்கு
மிகலின் மாதவ ரெவர்க்கு மிச்செயல்
விகல மின்றியே விளம்பி யேகினார். (௫௯)

வேறு.

ஆய காலையின் முரசுகுந்த னப்பதி தன்னின்
மேயி னார்களுந் தன்பெருஞ் சேனையும் வேற்கை
நாய கன்மணங் காணிய முன்னரே நடப்பான்
பாய்ம தக்கரி மிசைமுரா சறைந்திடப் பணித்தான். (௬௦)

அந்த நீர்மையை வள்ளுவ னகன்கரு வூரிற்
றந்தி யின்மிசை யேறியே தனிமுர சலறந்து
முந்து சீர்க்கம லாலயத் தரன்விழா மொழிந்தே
யிந்தி ரன்றிரிந் திடுதல்போற் றிரிந்தன னிசைத்தான். (௬௧)

வேறு.

ஆனதோர் பொழுதிலந் நகரின் மாக்களுஞ்
சேனையின் வெள்ளமுந் திசைக ளின்புறம்
போனதோர் பெரும்புறப புணரிக கேகுறு
மேனைய கடலென வெழுந லுற்றவே. (௬௨)

எண்டிசை யாற்றுவ விபங்க ளாதலி
னண்டமுந் தாங்குவா னயன்ப டைத்தென
விண்டொட கின்றிடும் வேழ மெண்ணில
கொண்டல்கள் சூழ்போற குலவச் சென்றவே. (௬௩)

வால்கிளர் கற்றைபு மதர்வ நோக்கமும்
பால்கிளர் செவிகளும பழிபயில் சென்னியுங்
கால்கிளர் செலவுமாய்க் கால்கள் சென்றென
மேல்கிளர் புரவியின் வெள்ளஞ் சென்றவே. (௬௪)

ஐயிரு திசையினு மணிந்து செல்வன
கொய்யுளை வயப்பரிக் குழாங்கள் பூண்டன
வெய்யவ ருதித்தென விளங்கு காட்சிய
வையமெண் ணில்லன வையம் போந்தவே. (௬௫)

வலிபுணர் யாக்கையர் வயங்கொள் வாகையர்
கொலைகெழு பல்படைக் கூட்டுண் வாட்கையர்
புலியுறழ் மானவப் பொருந ராயினார்
தலைவர்க டம்மொடு தழுவிப் போயினார். (௬௬)

அடல்வலி மானவ ரங்கை யேந்திய
படைவகை மின்னுவ பல்லி யங்களு
மிடியொலி காட்டுவ வீண்டு தானையுட்
கொடிநிரை விசும்புதோய் கொண்ட லாயவே. (௬௭)

தாளுறு கழலினர் சரம்பெய் தூணியா
தோளுறு வில்லினர் தொடையற் குஞ்சியர்
வாளுறு தடங்கணார் மருங்கு மன்மத
வேளென வொருசில் வீர ரேகினார். (௬௮)

கறுத்திடு பலகைவாட் கையா சாலிகை
பொறுத்திடு மெய்யின ராகிப் போகுவார்
மறுத்தவிர் மதிமுக மாதா நாட்டவே
லொறுத்திடு நமமையென் றுன்னி னார்கொலோ. (௬௯)

அடைந்திடு துன்பெலா மாற்றி யம்புவி
மடந்தைமுன் செய்திடு மாத வத்தினாற்
றொடாந்திடு பிடியினந் தொலையப பூமிசை
நடந்தனா வரம்பிலா நகைமென் கொம்பனார். (௭௦)

ஏரகன் மணந்தனக் கெய்து மாசையால்
வாரக முலையுடை மடந்தை மார்பலர்
பாரக மலிதரப் பரவிப் போயினா
தாரகை விண்ணெறி படருந் தன்மைபோல். (௭௧)

இடையிடை கால்களும் யாறுஞ் சேர்தலிற்
படிமிசை நடந்திடு பாவை மார்களை
விடலைக ளேந்தியே மெல்ல வேகினார்
கடலினும் பெரியதாங் காம மூழ்குவார். (௭௨)

தந்திக ளின்மிசைத் தைய லாருடன்
மைந்தாக ளேகினர் மாநி லந்தனி
லந்தமில் சீரயி ராணி தன்னொடு
மிந்திரர் போவதோ ரியற்கை போலவே. (௭௩)

அதிர்குரற தேர்களி லரிவை மாருடன்
கதமெனப் போயினர் கணிப்பில் காளையர்
மதிமுகத தாருடன் வரம்பில் வெய்யவா
முதுவரைச சிகரமேன் முடுகிச சென்றென. (௭௪)

கூற்றினை வென்றிடுங் கொலைக்க ணார்சில
ரேற்றமில் பிடிமிசை யேறிப் போந்தன
ராற்றல தின்மையா லவாந டைக்குமுன்
றோற்றன நாணியே சுமத்தல் போன்றவே. (௭௫)

காமரு கொங்கையாற் கரிம ருப்பினை
யேமுற வென்றுளார் யானைக் கோடுகண்
மாமருங் கடைதலு மருண்டங் கோடினார்
தாமுதற் செய்வினை தம்மைச் சூழ்ந்தென. (௭௬)

விரிதரு சேனையில் விண்ணிற் பாய்தரு
பரிகளின் மடந்தையர் பலருங் கேகினார்
கரையறு மமரர்கள் கடைந்த பாற்கடற்
றிரைதனில் வருபல திருவைப் போலவே. (௭௭)

மேகம தூர்ந்திடு மின்னின் மீமிசைப்
போகிய சிலையொடும் போந்த தன்மைபோற்
பாகினை யன்னசொற் பாவை மார்சில
வாகன மவைகளின் மருவி யேகினார். (௭௮)

அவிகையின் முழுமதி யளிப்பப பலபொறி
குவிகையி லம்புயங் குலவிச் சென்றெனக்
கவிகையி லாதபங் கரப்ப மூடுபொற்
சிவிகையி லேகினார் தெரிவை மார்சிலர். (௭௯)

வேறு.

பரதனங் கவரு மல்குற் பரதையர் தமைப் பாரா
விரதநன் முனிவர் தாமும் வேதியர் பலரு மீண்டிச்
சுரதநண் புடைய ராகுங் கணிகையர் தோளார் தோளா
யுரதனந் தன்னாற் றாக்க வுளைந்துளைந் தொதுங்கிப் போனார். (௮௰)

வேண்டிய மாற்றங் கொள்ளாள் வெகுண்டுசென் றிடுவாண் முன்ன
மாண்டொரு மதமால் யானை யடர்த்தவர் திடவு மஞ்சிப்
பூண்டிடு புலவி நீங்கிக் கணவனைப் புல்லிக் கொண்டா
டேண்டரு தோளி னானு மிபத்தினைத் தொழுது நின்றான். (௮௧)

ஏமருங் கலாப மஞ்ஞை யினமெனச் செல்லு மாதர்
மாமருங் கிறுங்கொ லின்றென் மதனர சிறக்கு மென்றே
காமருங் கவற்சி கொள்ளக் கரத்தினா லவரைப் புல்லித்
தாமருங் காகப் போனார் தார்முடி யிளைய ரானோர். (௮௨)

கணவனற் றனை பிழையை யுன்னிக் கனன்றிடுங் கணவன் றேறா
யணைவுறு நீர்மை யுன்னி யழுங்குறு மமல மாததி
மணவினை தன்னை யுன்னி மகிழ்ந்திடு மிவ்வா றாகிப்
புணர்கயிற் றாசல் போலும் புந்திகொண் டொருத்தி போனாள். (௮௩)

கையிலார் கைகள் பெற்றுங் காலிலார் கால்கள் பெற்று
மெய்யிலார் மெய்கள் பெற்று மூங்கைகண் மொழியைப் பெற்று
மையல்சேர் குருட ரானோர் வாள்விழி பெற்றுஞ் சென்றா
ரையன்மே லுள்ளம் வைத்தார்க் கரியதோ வரிது மாதோ. (௮௪)

விடந்தரு வேற்க ணல்லாள் வெளிப்படு கொங்கை தன்னைப்
படந்தனின் மறைத்த லோடும் பாங்கிலோர் காளை பாராத்
தொடர்ந்தன னவள்பின் போனான் றுணைமுலைப் படத்திற் சிக்கிக்
கிடந்ததன் மதியை மீட்கக் கிலேசமோ டேகு வான்போல். (௮௫)

நெய்தலுங் கமலப் போது நீலமு நெடுநீர்ப் பொய்கை
கொய்தனர் குமர ரானோர் கொடுங்குழை மடந்தை மார்தங்
கைதனிற் கொடுத்துச் செல்வார் கன்னிமீ ரிவையோ நுங்கண்
மைதிகழ் விழிக்குத் தோற்ற மலரெனக் காட்டு வார்போல். (௮௬)

அரிசன மேனி நல்லா ளணிதுகி லசைவின் றோற்
கரிசன மன்ன கொங்கை காண்டலுங் களர்க்கோர் காளை
தெரிசனந் தன்னி லிதென் சிந்தையைப் பிணித்த தென்றாற்
பரிசனந் தனிலென் னுமோ வென்றுயிர் பதைத்து நின்றான். (அஎ)

கற்பக வல்லி யன்னா ளொருத்திதன் காதன் மூழ்கி
யற்பக லேவல் செய்வா னங்கவள் செல்லும் போதிற்
பொற்புறு படாத்தி னீங்கிப பூண்முலை சிறிது தோன்றப்
பற்பக னேற்று வேண்டும் பரிசில்பெற் றுரை யொத்தான். (அஅ)

ஒப்பிலா வொருவேற் காளை யொள்ளெயிற் றாறு தாங்கித்
துப்புறு பவளச் செவ்வாய் திறக்கலள் சொல்லு மாடா
ளபபடி யொருத்தி வெல்ல வநங்கவே ளமுதம் வைத்த
செப்பினிற் குறியுண் டாங்கொ றிறக்கலீர் சிறிது மென்றான். (அகூ)

புடைதனி லொருத்தல் புல்லப் போவதோர் பிடியின் மேவு
மடவரல் வெருவ லோடு மற்றது கண்டோர் வள்ள
லிடையக றேரு மாவும் யானையும் படையுங் கொண்டோ
கடகரி யொன்றற் கஞ்சுங் காரணம் யாதோ வென்றான. (கூ௦)

ஆழியி லமுதம் பொங்கி யலையெறிந் தொழுகிற்றென்ன
வேழிசை நரம்பு கொண்ட மகரயா ழிசையப பண்ணி
வேழமுந் தேரு மூர்ந்து விறலிய ரோடு பாணர்
நீழலும் பருந்து மென்ன நெறிப்பட விசைத்துப் போனார். (கூக)

வெங்கரி நுதலி லப்பும வீரசிந் தூரம்வில் வீச
மங்கையர் மைந்தர் பூணும் படைகளும் வயங்க மாடே
தொங்கலுங் கவிகைக் காடுந் துவசமு மிருளைச் செய்யக்
கங்குலும் பகலு மாலைக் காலமும் போலு மாதோ. (கூ௨)

கொக்கரை படகம் பேரி குடமுழாக் கொம்பு காளந்
தக்கைதண் ணுமைத டாரி சல்லரி கிசாளந் தாளந்
மெய்க்குழ றுடியே பமபை வேறுபல் லியமுந் தாங்கி
மைக்கடல வாய்விட் டென்ன வரமபிலோ ரியம்பிப் போனார். (கூ௩)

ஆரண முனிவர் தாமு மமரரு மகல்வான் செல்வார்
சீரணி முசுகுந் தன்மேற் றிருமலர் சிதற லுற்றார்
காரண மில்லா வள்ளல் கடிமணந் தாமுங் காணபான்
றூரணி தன்னிற் செல்லுந் தாரகா கணங்கொ லென்ன. (கூ௪)

இன்னன சனங்க ளீண்டி யெங்குமா யேகு மெல்லைத்
தன்னுறு கிளைஞர் தாமுந் தந்திரக் கிழவர் யாரு
முன்னொடு பின்னும் பாங்கு மொய்த்துடன் செல்லத் தானோர்
பொன்னெடுந் தேர்மேல் கொண்டு முசுகுந்தன் போத லுற்றான். (கூ௫)

வேறு.

அடவியு மிகந்தன னகணி நாட்டுட
னிடையிடை யடுக்கலும் யாறு நீங்கினன்
படர்தலு மவன்வழிப் பரிதி நாயக
னடிவுறு முச்சிமே னண்ணி னானரோ. (கூ௬)

அண்ணலம் படைகளு மளப்பின் மாக்களு
முண்ணெகி ழுவகையோ டொல்லை வந்திடத்
தண்ணிழல் வெண்குடைத் தரணி காவலன்
பண்ணவன் மேவுறு பரங்குன் றெய்தினான். (௯௭)

முசுமுக முடையவன் முன்னர் வந்துழி
வசுமதி யிறைபுரி மன்ன ரேவரு
மசைவறு திருவொடு மணிகள் தன்னொடுந்
திசைதொறுந் திசைதொறுஞ் சென்றங் கெய்தினார். (௯௮)

முறைநெறி யாற்றிடு முசுகுந் தன்முத
லிறையவர் யாவரு மீண்டு தானையுங்
குறைதவிர் சனங்களுங் குன்றஞ் சூழ்ந்துற
நிறுவின ரொன்றிய நெஞ்சங் கொண்டுளார். (௯௯)

புழையுறு கரங்களாற் போத கஞ்சில
வுழைவரு பிடிதனக் கும்பா தாருவின்
குழைகளை முறித்தன கொடுத்துக் கோட்டினான்
மழைமுகில் கீறியே வாரி நல்குவ. (௧௦௦)

படாசிறை நீங்கிய பராரை வெறபெலா
மடிகளி னெற்றியே யசைந்து போந்தெனக்
கடிகமழ் மும்மதக கரிக ளோர்சில
விடலருந் தளையொடு மெலலச சென்றவே. (௧௦௧)

ஈடுறு கணமுகின் முழக்க ருததோர்
கோடுயா குன்றினைக் குறித்து நோக்கியே
யீடுறு திசைக்கரி யீதென் றுன்னியே
யோடுவ ததனமிசை யொன்றொ யானையே. (௧௦௨)

வேறு.

கலையக லல்கு லார்பாற காதலான் முயங்கி வல்லே
யுலைவுறு சேககைப போரி லுடைந்திடு குமர ரேபோன்
மலைபொரு பிடிக ளோடு மலைந்துதம மதநீா சிந்தி
நிலையழி வெய்தி வெள்கி நின்றதோர் நெடுநல வேழம். (௧௦௩)

உடம்பிடி புரையு மொண்கண் மோகினி யொருத்திக் காகத்
திடம்படு மவுணர் யாருந் திரண்டுடன் சென்ற வாபோன்
மடம்படு பிடியொன் றேக மையன்மேல கொண்டு மாடே
கடம்படு மொருத்தல் வேழங் கணிப்பில படர்ந்த வன்றே. (௧௦௪)

காழுற்ற தந்த மின்னக் கபோலத்து மதநீர் வீழ
ஊழிப்பே ருருமுத தன்னை யுமிழ்ந்தென வொலிமீக் கொள்ளக்
கேழுற்ற மணிவில் லென்னக் கிளர்நுத லோடை பொங்க
வேழத்தி னிரைக ளெலலா மேகம்போ லுலாவு கின்ற. (௧௦௫)

இருநெடு விசும்பிற் செல்லு மெழிலியை யெயிற்றாற் பாய்ந்து
சொரிதரு புனலை வாரித் துதிக்கையால் வீசுகின்ற
பருமணி யோடை யானை பாய்திரைப் பரவை யேழுங்
கரதல மெடுத்துச சிந்துங் கண்ணுதற் களிறு போலும். (௧௦௬)

கன்றொடு பிடிகள் சூழக் கடாம்படு கைமமா வொன்று
நின்றிடு கந்திற் சேர்ந்து நிகளத்தோ டமர்ந்த நீர்மை
குன்றுகள் புடையிற் சுற்றக் குருமணி நீலப பொற்றை
யொன்றொரு தமிய தாகி யுற்றவா றொத்த தம்மா. (௧௦௭)

எருத்தமே லிடிக்கும் பாக ரிசைக்குறி கொள்ளா தாகி
மருததினும் விசைமேற் கொண்டு வன்கரித் தண்ட நோக்கி
யுருததிடு கொடுஞ்சொற் றூய ரொறுக்கவு மொருவன் மாட்டே
கருத்துறு கணிகை நெஞ்சிற போவதோர் கடுங்கண் வேழம். (௧௦௮)

தூவகங் கொண்ட செங்கே ழங்குசந் தூண்டு பாகர்
நாவகங் கொண்ட சொல்லா னவிற்றுமந் திரத்தால் வாக்காற்
பாவகங் கொண்ட பைங்கட் பாரிடம வழிப்பட் டாங்குச்
சேவகங் கொண்ட பொங்கர் சேர்ந்தன சிலகைம் மாக்கள். (௧௦௯)

அந்தமி லாத செல்வத தவுணருக் கரசன் முன்னம்
வெந்திறற கால்க டமமை வியன்சிறைப படுத்தி யென்னக்
கந்திடைப் பிணிக்கப் பட்ட கடுநடைப புரவி யெல்லாம்
பந்தியி லொழுங்கு கொண்டு நின்றன பாங்க ரெங்கும். (௧௧௦)

வீரவேற் றடக்கை வள்ளல் விழாவினைக காண விண்ணோ
ரூரொடு திசையு மேனை யுலகமு மொருங்குற் றென்னக்
காரினு மொலிமேல் கொண்ட கலினவாம் புரவி பூண்ட
தேர்நிரை யனந்த கோடி செறிந்தன திசைக ளெங்கும் (௧௧௧)

விடங்கெழு வேற்க ணாரும் வெலற்கரும வீரர் தாமுந்
தடங்கெழு தானை வெள்ளத் தலைவரு மேனை யோரு
மிடங்கெழு துளைத்துன் னூசி யிழைதொடுத திசைக்கப் பட்ட
படங்கெழு மாட கூடத் தாவணம் பரவிப் புக்கார். (௧௧௨)

கன்னெடுந் தாரை கான்ற கார்முகில் வளைப்பச் செங்கண்
முன்னவ னிளையைக் காதத மூதவளா நிலைய தென்னப
பன்னிறப் பசுங்காய் சிந்தும பழுமரக் காமர் காவுட்
பொன்னிவர் புனைமாண் கோயிற புரவலற் கமைந்த தன்றே. (௧௧௩)

முத்தமுந் துகிரும் பொன்னு முழுமணிக் கலனுஞ் சந்துஞ்
சித்திரப் படமு மற்றுந் தெற்றிமே னிரைத்துச் சீசா
லுத்தம வணிக ருற்று ருணர்ச்சியுங் கறபுந் தூக்கி
யத்தகு பொருளை யார்க்கு மளிததிடுங் கொடையி னாபோல். (௧௧௪)

மடப்பிடி மான்றேர் நீங்கி வானிடைத் தவறி மின்னின்
கொடித்திரள் செல்லு மாபோற் குவலயம் படர்ந்து பொங்க
ரிடத்தினி லொதுங்கி வெற்பி னெதிரெதிர் கூவி மஞ்ஞை
நடித்திடு மாட னோக்கித் திரிந்தனா நங்கை மார்கள். (௧௧௫)

கோலொடு வில்லும் வாளுங் குந்தமும வயங்கப் பாத
சாலமுங் கழலு மார்பபத தபனிய மணிததார் தாழச்
சோலையி னுலவிச் சார லருவியுஞ் சுனையுங் கண்டு
மால்கரி மலைவு நோக்கி மடங்கலிற் றிரிந்தார் மைந்தர். (௧௧௬)

தாரிடைப் படிந்த வண்டு தடமலர்க் குவளை சேர
வாரிடைப் படிந்த கொங்கை மாதரு மைந்தர் தாமு
மூரிடைப் படிந்த செங்கே ழாதவ னுருப்பந் தீர
நீரிடைப் படிதல் வேட்டு நெடும்புனற் றுறையில் வந்தார். (௧௧௭)

வெண்ணிற முகிலி னும்பர் விஞ்சையர் வேந்தர் தாமு
மொண்ணுத லணங்கி னோரு மொருங்குடன் றிரண்ட தென்னக்
கண்ணகன் றடாகம் புக்க கனங்குழை மகளிர் மைந்தர்
தண்ணுறு புனலபாய்ந் தாடித் தலைதலை திரித லுற்றார். (௧௧௮)

கழியுண்ட வுவரிக் கானற் கடைசியர் நாட்ட மஞ்சிப்
பழியுண்டு மறைந்த வாபோ லொருசிறை பயிலு நெய்தற்
குழியுண்ட போதை நோக்கிக் குரைபுனற் றடத்துக் கம்மா
விழியுண்டு கொல்லோ வென்றே கொழுநரை வினவு கின்றார். (௧௧௯)

பங்கயம் வதன மென்பார் பாசியைக் கூந்த லென்பார்
செங்கிடை யதர மென்பார் புளொளி செபப லென்பார்
சங்கினைக் களமே யென்பார் தடாகமு மொருத்தி யல்ல
மங்கையர் பலரே யென்பார் திரைகளை மணித்து சென்பார். (௧௨௦)

தத்தையை யனைய சொல்லா ளொருத்திதன் னீழ றன்னை
யத்தடந் தன்னி னோக்கி யளியனை யறியா தீண்டோர்
மைத்தடங் கண்ணி னுளை மருவினை யென்று கேள்வன்
கைததலந் தன்னை விட்டு வெகுண்டனள் கரையிற போனள். (௧௨௧)

குளத்திடைப் புனல்வாய்ப் பெய்து கொபபளித திடுவான் றன்மே
லுளத்திடை வெகுளி யெய்தி யூடின ளொருத்தி யேகி
முளைத்திடு கமலக் கானின் முகமலா வுறுப்பு முறறு
மொளித்தன ளிறப நாடிக் காணகல னுலைத லுற்றான். (௧௨௨)

தாம்பெறு கொழுநா தம்மைத் தததமக் குரிய புததே
ளாம்பரி சுன்னுந் தன்மை யையம தில்லை யென்னக்
காம்புறழ் தடந்தோ ணல்லார் கணவாமேற் கரத்தா லள்ளிப்
பூம்புனல் வீசு கின்றார் பூசனை புரிகு வார்போல். (௧௨௩)

ஞெண்டொடு வராலுஞ் சேலும் யாலமயு கிலாவெண் சங்கும்
புண்டரீ கத்த டாகங் குடைந்திடும் பூச லஞ்சித்
தெண்டிரை யமுதச் சொல்லா சிற்சில வுறுப்புத தன்னைக்
கண்டுகண் டிரிவ தென்னத திரிவன கலகக மெய்தி. (௧௨௪)

ஏந்திழை மகளிர் தாமு மைந்தரு மிருநீர் தன்னுட்
பாய்ந்தன ராடு மெல்லைப் பங்கய விலைக டோறுஞ்
சோர்ந்திடு திவலை யீட்டஞ் சிறந்தவர் சேர்த லாலே
பூந்தடம் பொய்கை யாக்கை பொடித்தன போலு மன்றே. (௧௨௫)

நோக்கினு நுழைகு றாத நுண்டுகின் மறைத்த வல்கு
றேக்குதண் பொய்கை யாடுஞ் செவ்வியிற் றெரியத் தோன்ற
நீக்கரும் பெருநாண் கொண்டு கின்றிடா தொருத்தி யோடித்
தாக்கணங் கெனனப போய்த்தன் கொழுநனைத் தழுவிக் கொண்டாள்.()

உட்டெளி வில்லா கங்கை யொலிபுனற் றடத்தி னூடுங்
கட்டமு குளதோர் காளை கவிரிதழ் வெளுப்பு நோக்கிக்
கிட்டியா னிற்க வுன்றன் கேழ்கிள ரதரத் தெச்சி
விட்டனள் யாரிங் கென்னு வெகுளிகொண் டிகலிப் போனாள். (௩௨௭)

வேறு.

வெளுத்தன சேயிதழ் விழிசி வந்தன
வளித்தொகை யெழுந்தன வளகஞ் சோர்ந்தன
குளித்திடு மலர்த்தடங் கொடிய னார்க்கெலாங்
களித்திடு கணவருங் கள்ளு மொத்ததே. (௩௨௮)

பையர வல்குலார் படியும் பான்மையாற்
றுய்யதோர் குமிழிகள் செறிந்து தோன்றுவ
வையபூந் தடமெலா மவரை நோக்குவான்
மெய்யெலாம் விழிகளாய் விழித்தல் போன்றவே. (௩௨௯)

மன்னரு மகளிரும் படிந்த வாசநீர்
செங்கிறக் குங்கும நானஞ் சேர்தலான்
மின்னொடு கூடிய முகிலு மெல்லியற்
பொன்னொடு கூடிய மாலும் போலுமால். (௩௩0)

வேறு.

பூசு சாந்தமு நானமும பொய்கையில்
வாச நீரெங்கு மாகி மணங்கமழ்ந்
தாசை யெங்கு முலாவியவ் வானவர்
நாசி யூடு மடுத்து நடந்தவே. (௩௩௧)

இன்ன தன்மையி லேர்கெழு மைந்தரு
மன்ன மென்னடை யாகளு மகதடந்
தன்னி னுடித தடங்கரை யேறியே
பொன்னின் மாண்கலே பூணொடு தாங்கினார். (௩௩௨)

வெளிறு மென்னகை மெல்லியன் மாதரு
மொளிறு மேனி யுவாக்களு மொன்றியே
பிளிறு மையற் பிடியும் பெருமதக்
களிறு மென்னக் கடிபொழி லேகினா. (௩௩௩)

ஏகி னார்க்கவ் விரும்பொழின் மீச்செறி
மேக சாலமு மீன்றொகை யீண்டிய
மாக நாடுமவ் வானவர் வந்துசேர்
போக பூமிப் பொதும்பரும் போன்றதே. (௩௩௪)

பளிங்க டுத்திடு பாங்கரின் வேங்கைவீ
விளங்கு சாயையை மெய்யென நோக்கியிக்
குளங்கொள் பூமலர் கொய்துநல கீரெனுத
தளர்ந்தொ ருத்தி தலைவனை வேண்டினாள். (௩௩௫)

அங்கொ ருத்தியை நோக்கியொ ரண்ணலுன்
கொங்கை யொத்திடாக் கோங்கலர் கொள்கென
வெங்கை தன்முலைக் கொப்பதென் றெண்ணியோ
செங்கை யாற்பறித் தீரென்று சீறினாள். (௩௩௬)

வேறு.

மலர்ந்த வாண்முக மங்கையர் நோக்கலும் வறிதாய்ப
புலர்ந்து நின்றிடு தருக்களும் பொலிவினை யெய்தி
யலர்ந்த வேயெனி லுடைவா தங்களை யன்னார்
கலந்த போதுறு மின்பமார் கட்டுரைத் திடுவார். (௧௩௭)

மேற்ற லத்தெழு தாரகை மேதினி வரைப்பிற்
றோற்று காட்சியோ விங்கிவை யென்னவோா தோன்றல்
கூறற மன்னவேற் கண்ணிநின் கூரெயிற் றிற்குத்
தோற்ற முல்லையி னரும்புகா ணிவையெனச் சொன்னான். (௧௩௮)

மலையும் வேற்கணு ளொருத்திசொல் வினவிமற் றொருத்தி
முல்லையின் மேல்விழி வைத்தவன் முறிகளு முகையு
மிலையு மாப்பறித் துதவலு மூமக்குமா லீந்தா
டலையின் மேலிவை சூட்டுமென் றெறிந்தன டரியாள். (௧௩௯)

காதன் மங்கைபால் வைத்தசிந் தையன் கரவீரப்
போது கொய்யல னிலைகொய்து பொறகரத் தளிப்ப
வேதி லாளகிற் சேர்தலி னிங்கிவை நுகாந்து
சாத லேதலை யெனச்சினந் தாளொரு தையல். (௧௪0)

வேறு.

இங்குன் முலைநேர் குரும்பை யிவையாய் குயமபோற
றங்கும் மிளநீ ருவையனைவ டன்னை யின்றூா
கொங்கை நிகரு மடற்பாளைக் குழூவி தெனன்றூா
மங்கை நகைபப வவைகாட்டியொர் வளள னின்றான் (௧௪௧)

ஓவாத தெங்கி னிளம்பாளையி னென்று தன்னைத
தாவா வொருவன் கொடுவந்தொரு தையன் முனபோயப்
பாவாய் தமியே னுயிரே நின்பணை முலைக்காங்
கோவாத முததத் தொடையிங்கிது கொள்க வென்றான். (௧௪௨)

மின்னூர் தமக்கோ ரரசேவெறி வேங்கை வீயும்
புன்னை வீயுங் கொணர்ந்தேன்புனை கிற்றி யென்ன
மன்னு வுனக்குப் பலருண்டுகொன் மாத ரென்னுத
தன்னுவி யன்னான் றனைச்சீறியொர் தையல் போனாள். (௧௪௩)

பொன்பெற்ற மார்ப னொருவன்சில போது கொய்து
கொன்பெறற வேற்கண் மடவார்கைக் கொடுத்த லோடும்
பின்பெற்ற நங்கை வெகுண்டாள்பழு தென்று பேசி
முன்பெற் றவளு மவைசிந்தி முனிந்து போனாள். (௧௪௪)

அப்பூர் விழியா ளொருமூவகைத தாய பூவு
மைப்பூங் குழலிற் புனைந்தா ளதொர்வளள னோக்கி
மெய்ப்பூவை யன்னாய் மருங்குன்முடி வெய்த மென்கார்
முப்பூ விளைந்த படியென்கொன் மொழிக வென்றான். (௧௪௫)

இத்தன்மை மைந்தர் பலரும் மிகல்வேற்க ணாரு
மெய்த்தண் மலர்க்கா வுலவாவினை யாடி மீண்டு
தத்தம் படமா ளிகைபுக்கனர் தானு மாங்கே
யத்தம் மயவெற் படைந்தான்கதி ராயி ரத்தோன். (௧௪௬)

வேறு.

ஏலக் காவின் மாக்கள் புகுந்தே யினிதாடுங்
கோலச் செவ்வி நோக்கின னுங்கொல் குடபாலின்
மாலைச் செக்கர் வானம தாகு மலிதண்பூஞ்
சோலைக் குள்ளே தானு மடைந்தான் சுடர்வெய்யோன். (கசஎ)

முந்தைச் செக்க ராகிய புத்தேண் மொய்ம்பிற்சூழ்
தந்திப் போர்வை போலிரு ளீட்டஞ் சார்வெய்த
வந்தத் தேவன் மீமிசை யண்டத் தவர்வீசுங்
கந்தத் தண்போ தொப்பன தாரா கணமெல்லாம். (கசஅ)

படையா நேமிப் பண்ணவ னாடாற் கடலுக்கோர்
தடையா யுற்ற தொன்றிமை யோர்தண் டயிர்வேலை
கடையா நிற்ப வேதிரள் வெண்ணெய் கடிதேவந்
தடையா நிற்றல் போல வுதித்திட் டதுதிங்கள். (கசகூ)

காணப் பட்டான் விண்மதி யென்னக் காமத்திற்
பூணப் பட்ட மாமதி தோன்றப் புலாவெய்தி
யாணர்க் கிண்ணத் துண்ணிறை தேற லினிதட்டிப
பாணிக கொண்டே மேவுத லுற்றார் பலமாதா. (கரு0)

வேறு.

தூயதன் றாகிய புனலெலா நல்கியே சூழ்ந்த தெங்கின்
காயினவந் திங்பயன கொள்ளுவார் போற்சில காளை மார்க
ளாயதன் டேறலை யரிவைமா ருகருவா னருளி யன்னா
வாயின்வந் தூறுமெல லமிர்தினைக கொள்வதற் குள்ளம் வைத்தார். ()

தென்னுபே ரமிர்தநேர் சொலவினார் தேறல்பெய் கின்ற வெள்ளி
வள்ளமா னவையெலாம பொலிவன வானகத் திடையு திதத
வொள்ளிதா கியமதி யொன்றினை நோக்கியொண் புவியி னூடே
கொள்ளையாய் மதிபல மாறுமா றாயெழுங் கொள்கை போலும். (கருஉ)

அளியினுக குணவதாந் தேறலவாய்க கொண்டதோ ரரிவை யாற்றக
களிபயக கெய்துமா ளிந்துவை நோக்கியிக் கடிய தேறற
றுளியினைக் கோடியே யுனதுமா சுள்ளதுந் தொலையு மின்னு
மொளியினைப பெறுதியென னுளமுந் தவிதியென் றுரைசெய்கின்றாள்.

கருதியா னுண்டிடு நறவினைக் கண்டுகா மித்து நாளுந்
திரிதியான் மதியமே நாணமுற் றாய்கொலோ செப்பு கில்லாய்
பரிதியா தமயின்வீ றெய்துவா யன்னதைப் பகிர்வ னிங்ஙன்
வருதியா லென்றன டேறலாற றெளிவிலா மையல் பெற்றாள். (கருச)

என்னொடே தோன்றினை யானெனுந் தன்மையா யாதும் வேண்டாய்
பின்னரு முன்னுமாய் வைகலுக திரிகுவாய் பிரிகி லாதா
யின்னரு வுண்கென வுதவினுங் கொள்கிலா யென்றொ ருத்தி
தன்னதா நீழலோ டிடினாள வாடினா டளாத லுற்றாள். (கருரு)

அங்கையவ ளங்தனின் மதுவையுண் டயருவா ளன்ன தற்குட்
செங்கயல் விழியையும் வாளிதழ்ப் பொலிவையுந் தெரிய நோக்கி
யிங்கெனைக் கூடியே கணவர்போ யினர்கொலா மெனவொ ருததி
பொங்குசீற் றததளா யோடினா ளடிகுள் புலாத லுற்றாள். (கருகூ)

வேறு.

திருந்திழை மார்சிலர் செவ்வித் தேறலை
யருந்தினர் வெறுத்தன ரமுதந் தன்னையும்
பொருந்திடு கணவரைப் புணரு மாசையால்
வருந்தினர் தழலென மதியை யுன்னுவார். (௧௫௭)

வாடுகின் றார்சிலர் மகிழ்நர் வந்திட
வூடுகின் றார்சில ருவக்கின் றார்சிலர்
பாடுகின் றார்சிலர் பணிகின் றார்சில
ராடுகின் றார்சிலர் நறவ மார்ந்துளார். (௧௫௮)

அந்தரப் புள்ளொடு மளிக டம்மொடும்
வந்தடுத தவரொடு மடந்தை மார்சிலர்
சுந்தரத தேறலைத் துய்த்து வாமமாந்
தந்திரக் கிளைஞர்போற் றம்மி னீண்டினார். (௧௫௯)

விள்ளுறு நாணினர் வீழுந் தூசின
ருள்ளுறு களிப்பின ருரைம யங்கினர்
தள்ளுறு தம்முணர் வின்றிச் சாம்பினர்
கள்ளினு முளதுகொல் கருத்த ழிப்பதே. (௧௬0)

இததிற மதுவினை யினிதின் மாந்தினோர்
மத்தரின் மயங்கினர் மனந்தெ ளிந்தழித்
தத்தம திறைவருந் தாமுங் கூடியே
யததலை முயங்கின ரார்வ மிக்குளார். (௧௬௧)

ஏயுறு பரிசன மினைய தன்மையான்
மேயின விங்கிது விளம்பி னுமினி
யாயிடை வந்திடு மரசர் செய்கையு
நாயகன் வதுவையு நவிலு வாமரோ. (௧௬௨)

கொன்னுனை வேன்முசு குந்த னாதியா
மன்னவர் யாவரும் வைய நீங்கியே
தன்னிக ரிலாததோர் தலைவன் மேவிய
பொன்னிவர் குடுமியம் பொருப்பி லேறினார். (௧௬௩)

ஏறினர் வெற்பின்மே லெவருந் தெய்வத
நூறெறி கம்மிய னுனித்துச் செய்திடு
மாறக திருநகர் வளங்கண் டிந்திரன்
சாறயர் வதுவையஞ் சாலை நண்ணினார். (௧௬௪)

அம்முசு குந்தனை யாதி யாகிய
வெம்முடி மன்னரு மிமைய வர்க்கிறை
செம்மல ரடிகளைச் சென்னி சேர்த்தினார்
கைம்முறை தொழுதனர் களிப்பின் மேலுளார். (௧௬௫)

கயமலர் குவளையிற் கண்கண் மிக்குளா
னயவுறு மரசருக் கருளி யாங்கவர்
செயன்முறை வினவியே சிறப்பி னாகிய
நயமொழி பலவுட னவின்று மேவினான். (௧௬௬)

மேதகு கதியராய் விசும்பிற் சென்றிடு
மாதவன் மதிமுத லமரர் யாவரு
மாதிர விறைவரு மாத வத்தரும்
பாதல வாணரும் பரங்குன் றெய்தினர். (கசுஎ)

விண்டொடர் பிறங்கலின் மிசையி வர்ந்துபோ
யண்டரும் பிறருமா யமரர் கோன்றனைக்
கண்டனர் தொழுதனர் களிப்பின் மாதவ
ரெண்டகு மாசிக ளியம்பி யெய்தினர். (கசுஅ)

விறல்வரை மாதரும் விண்ணின் மாதருஞ்
செறிபுனன் மாதருந் திசையின் மாதரு
முறுதவ மாதரு முரக மாதரு
மறுவகல் புலோமசை வயின்வந் தீண்டினர். (கசுகூ)

சூரர மங்கையர் தொல்லை விண்ணவர்
பேரர சியற்றிய பிரான்றன் காதலி
சீரடி வந்தனை செய்து தெய்வத
வாரண மென்பவண் மருங்கி லெய்தினர். (கஎ0)

தெய்வத யானைகே டைய சூருயிர்
வவ்விய வேலினன் மனைவி யாதியா
லெவ்வுல கிற்குநீ யிறைவி யாமென
வவ்வவ ரடிபணிந் தன்பொ டேத்தினர். (கஎக)

கயறபுரை நோக்குடைக் கடவுள் யானைபா
லியறபடு திருநல னிருக்கப் பின்னருஞ்
செயறபடு கோலமுஞ் சிறிது செய்திட
மயற்பட வுன்னினர் மடநல் லாரெலாம். (கஎஉ)

பொன்னக மதனிடைப் புராரி சேயினைத
தன்னக மிசைகொடு தவத்தை யாற்றினள்
பின்னக மயிர்முடிப பிணையற் சூழலை
மென்னக விரல்களான் மெல்ல நீக்கினர். (கஎகூ)

காசறை விரவிய கடிமென் கூந்தலிற்
பூசினா நாவிநெய் புதிய சாந்தமு
மாசறு பனிதமு மற்று நீவியே
நேசமொ டொண்பனி நீர்கொண் டாட்டினர். (கஎச)

சேந்தமேதார் வெம்பனி சீற்றத் தாற்கரும்
பாந்தளை வாய்க்கொடு பற்று மாறெனப்
பூந்துகிற் கிழிகொடு புனல்வ றந்திடக்
கூந்தலை யொற்றினர் குழைமென் கொம்பனர். (கஎரு)

மாந்தளி ரேயென வனப்பு மென்மையுங்
காந்தியு மெய்தியே கடவுட் டன்மையாற்
றேய்ந்திட லின்றியுந் துப்பின் வண்ணமாம்
பூந்துகி லொன்றினைப் புனைந்து மிறியினர். (கஎசு)

ஈராறு கதிர்களு மிம்பர் சேர்தலி
னூரிருள் யாவையு மஞ்சி யவ்வைதன்
வாரொலி கூந்தலின் மறைபுக் காலெனக்
காரகி னறும்புகை கமழ வூட்டினார். (௧௭௭)

பொலம்புரி யுத்தியும் பொருத மனுேயும
வலம்புரி மகரமு மரபில் வானவா
குலம்புரி தவம்புரை கொம்பின் கூழையி
னலம்புரி மங்கல நவின்று சாத்தினார். (௧௭௮)

விரியிணர்க் கோங்கமும் வெட்சி யுஞ்செரீஇ
மருமல ரிதழிடை வைத்து வாசமா
தெரியலுந் தொடையலுஞ் செறியச் சூட்டியே
சுரிகுழன் முடித்தனா சுழியத தன்மையால். (௧௭௯)

ஒருமுயன் முழுமதி யுள்புக் காலென
விருவிழி புருவமா மினைய வறலொழி
கருநிறங் கண்டிடக் காமர் சாந்தினாற்
றிருநுத லதனிடைத் திலகந் தீட்டினா. (௧௮௦)

ஊட்டிய நறும்புகை யோதி யின்றெரீஇத
தீட்டிய திருநுதற் றிலகஞ் சேர்தரப்
பூட்டினர் சுட்டியைப் புயங்க மொன்றுநா
நீட்டிநஞ் சுமிழ்தரு நிலைமை யீதென. (௧௮௧)

கோல்வளை யந்நலார் குழையில் வல்லியரு
சூல்வளை மிடற்றினிற் றொடையன் முத்தணி
கால்வளை கஞ்சநோ கரத்துந் தோளினும
வால்வளை தொடியிவை வயங்கச் சோத்தினா. (௧௮௨)

கொட்டினர் கலவைகள் கொங்கை யினமிசை
மட்டிமிர் பிணையலு மணியின் கோவையு
மட்டினர் படாமுமொன் றதன்கட சோத்தினா
ரிட்டிடை யிடைதனக் கிரக்கம் வைககிலா. (௧௮௩)

மாடக யாழ்புரை மழலைப் பெண்பிளை
யாடக விரைமல ரனைய தாளிகளிற
பாடகம் பரிபுரம் பாத சாலங்கள
சூடக முன்கையாா தொழுது சூழவித்தார். (௧௮௪)

தெய்வத மடந்தையர் திருவின் செல்விபா
லிவ்வகை யொப்பனை யியற்றி யேத்தலு
மைவிரி குவளைநேர் வடிவக் கண்ணினு
னவ்விடை செய்திடு மமைதி கூறுவாம. (௧௮௫)

வேறு.

மேலை வானவர்க் கிறையவன் விரிஞ்சனை நோக்கிச
சாலை யாகிய தெவவெலாத தேவருஞ் சார்ந்தா
மாலை தாழ்முடி யெம்பெரு முதல்வற்கு மணஞ்செய்
காலை நாடியே யிஃதெனக் கழறுதி யென்றான். (௧௮௬)

அப்பு ரந்தரன் மொழிதனை யம்புயன் வினவிச்
செப்பு கின்றதென் னறுமுகப் பரன்மணஞ் செய்தற்
கெப்பெ ரும்பக லாயினு மினியதே யெனினு
மொப்ப கன்றிடு முகூர்த்தமிவ் வெல்லையென் றுரைத்தான். (௧௮௭)

ஈவ தேமுறை யாயுளா யிப்பகல் சிறந்த
தாவ தேயெனின் யான்பெறு மணங்கையீண் டளிப்பான்
றேவ தேவனு மறுமுகச் செம்மலைக் கொணரப்
போவ தேகட னெமக்கெனப் புரந்தரன் புகன்றான். (௧௮௮)

அனைய காலையி லச்சுதக் கடவுளு மயனு
மினிது போதுமென் றிந்திரன் றன்னொடு மெழுந்து
முனிவர் யாவருந் தேவருஞ் சூழ்ந்துமுன் படரப்
புனித நாயக னுலைய நோக்கியே போனார். (௧௮௯)

போந்து மற்றவர் பொலன்மணிக் கோயிலுட் புக்குச்
சேந்தன் மாமல ரடிகளை முடிகளிற் சேர்த்திக்
காந்தண் மெல்விரன் மடந்தைபாற் கடிமணம் புரிய
வேந்த நீயவண் வந்திட வேண்டுமென் றிசைத்தார். (௧௯௦)

இன்ன வாசகம் வினவலு மிராறுதோ ளுடையோ
னன்ன தாகவென் றருள்செய்து மடங்கலே றூற்றும்
பொன்னின் மாமணி யணையினும் பொருக்கென வெழுந்தான்
றுன்னு வீரரும் பாரிட முதல்வருந் துதிப்ப. (௧௯௧)

எழுந்து முன்னுறு மஞ்ஞையஞ் சேவன் மேலேறிச்
செழுந்த னிக்கம லத்தய னுதியாந் தேவர்
விழுந்து முன்பணிந் தேத்தியே விரைமலர் மாரி
பொழிந்து பாங்கராய் வந்திட வீதிவாய்ப் போந்தான். (௧௯௨)

கொற்ற வெண்குடை யெடுத்தனர் குளிர்பனிக் கவரிக்
கற்றை வீசின ராலவட் டங்கள்கா லசைத்தா
ரொற்றை வாட்படை யேந்தின ருடுபதிக் கடவுண்
மற்றை யாதவன் மருத்துவன் சலபதி மறலி. (௧௯௩)

ஆழி மாலய னுவணமு மன்னமு மழியா
வூழி நாயக னூர்தியி னொலிகொலென் றாட்கக்
கேழி லாமலர்க் கிஞ்சுகச் சூட்டொடுங் கிளர்ந்து
கோழி நீள்கொடி யார்த்ததெவ் வண்டமுங் குலுங்க. (௧௯௪)

வேத ரார்த்தனர் வேதமு மார்த்தன விண்ணோர்
மாத ரார்த்தனர் மாதவ ரார்த்தனர் வயவெம்
பூத ரார்த்தனர் பூதமைந் தார்த்தன புடவி
நாத ரார்த்தனர் நாதமிக் கார்த்தன நகமே. (௧௯௫)

திண்டி பேரிகை தண்ணுமை சல்லரி திமிலை
பண்டி யிற்பெயா குடமுழாக் காகளம் படகந்
தொண்ட கந்துடி துந்துபி வலம்புரித் தொகுதி
யண்டம் விண்டிட வியம்பினர் பூதரி லநேகர். (௧௯௬)

அஞ்சி லோதியின் மேனகை யுருப்பசி யரம்பை
இஞ்சு கச்செவ்வாய்த் திலோத்தமை முதலினோ ரெழுமி
மஞ்ச மீதினு மானத்து நின்றுவாள் விழிக
ளஞ்ச மிழ்ந்திட வழுதெனப் பாடியே நடித்தார். (௧௯௭)

யாணர் வண்டினஞ் சுரும்புட னலமரும் யாழும்
வீணை யுங்கரம் பற்றியே விஞ்சையர் முதலோர்
சேணு ரம்பையர் களிநடத் தோடுசீர் தூக்கும்
பாணி யும்மிசை வுற்றிட விசைத்தனர் பாடல். (௧௯௮)

பொருவில் வீரரும் பூதரும் புரந்தரன் முதலாஞ்
சுரரு மாதவர் யாவரும் பிறருமாய்த் துன்னி
யொருவர் மெய்யினை யொருவர்மெய் நெருக்கவுற் றிடலாற்
றெருவு முற்றமு மிடம்பெறு வாயின சிறிதும். (௧௯௯)

வேறு.

இன்ன தன்மைக ளியல வெல்லைதீர்
பொன்னின் வீதிவாய்ப் போந்து புங்கவா
மன்ன னுற்றிய மணத்தின் சாலையின்
முன்னர் வந்தனன் முடிவின் முன்னையோன். (௨00)

ஆவ தாகிய வண்ண றன்மிசைத்
தாவில் கும்பமேற் றருப்லப தோய்த்தநீர்
தூவி யாசிகள் சொற்று மாதவ
ரேவ ருந்திரண் டெதிர்கொண் டேத்தினர். (௨0௧)

செங்கை தன்னிடைத் தேவர் மாதவர்
நங்கை மாரெலா நாவி ரண்டெனு
மங்க லங்களு மரபி னேந்தியே
யெங்க ளையகற் கெதிர்ந்து போற்றினர். (௨0௨)

பஞ்சி தூயநெய் பளித நாவியாய
விஞ்சு தீஞ்சுடர் மிளிர்பொற் றட்டைக
ளஞ்சி லோதிய ரங்கை யேந்தியே
செஞ்செவ் வேண்முனஞ் சிறப்பித் தாரரோ. (௨0௩)

காலை யங்கதிற் காலை யங்கதிர்
மேலை விண்முகில் விட்ட கன்றெனக்
கோலஞ் செய்யநங் குமர நாயக
னீல மஞ்ஞைமே னின்று நீங்கினன். (௨0௪)

ஏய மஞ்ஞையின் றிழிந்து வேள்விசெய்
கோயின் முன்கடைக் குமரன் சேர்தலு
மாய போழ்தினி லரம்பை மாரொடுந்
தூய தோர்சசி தொழுதங் கெய்தினள். (௨0௫)

ஏதிர்பு குந்திடு மிந்தி ராணிதன்
புதிய தோர்பசுப் பொழிந்த தீயபா
னிதியின் கொள்கல நிரப்பி வந்துவேள்
பதயு கங்களிற் பரிவொ டாட்டினள். (௨0௬)

ஆட்டித் தீம்பய னலருங் கண்ணியுஞ்
சூட்டி மெல்லடி தொழுது பல்சுடர்
கூட்டி வைத்ததோர் கொள்க லந்தனைக்
காட்டி மும்முறை கடவுட் சுற்றினாள். (௨௦௭)

இனைய தன்மைக ளியற்றி யிந்திரன்
மனைவி வௌகியே மடமின் னாரொடுந்
தனது மந்திரந் தன்னிற் போதலு
மனகன் கண்டதற் கருள்செய் தேகினான். (௨௦௮)

கோல மாமணி குயிற்றிப் பொன்னரி
மாலை நாற்றியே வனப்புச் செய்திடுஞ்
சாலை புக்கனன் றனக்கு வேறொரு
மூல மில்லதோர் முதலின் வந்துளான். (௨௦௯)

வேறு.

பக்க மாயரி பங்கய னாதியோர்
தொக்கு வந்திடத் தொன்மணி மண்டபம்
புக்கு நம்பி புரந்தர னுய்த்திடு
மிக்க பீடத்தில் வீற்றிருந் தானரோ. (௨௧௦)

வீற்றி ருந்தபின் வேதனு மாயனுந்
தேற்ற மிக்க முனிவருந் தேவரு
மாற்றல் வீரரு மண்ணற னேவலா
லேற்ற வேற்ற விடந்தொறும் வைகினார். (௨௧௧)

அந்த வெல்லை யவனியில் வாழ்முசு
குந்த னேமுதற் கொற்றவர் யாவரும்
வந்து வந்து வணங்கி வழுத்திடக்
கந்த னெந்தை கருணைசெய் தானரோ. (௨௧௨)

ஆன காலை யரியய னாடொனா
ஞான நாயக னங்கையுந் தானுமோர்
மான மேல்கொண்டு மாயிருஞ் சாரதா
சேனை சூழ்தரச் சேணிடைத் தோன்றினான். (௨௧௩)

அம்மை யுந்தன தத்தனும் வந்தது
செம்மல் கண்டு சிறப்புடை யோகையாய்
விம்மி தங்கொண்டு மேதகு மன்பினா
விம்மெ னக்கடி தேயெழுந் தானரோ. (௨௧௪)

கண்ண னாதிக் கடவுளா யாவரு
மெண்ணி லாமுனி வோர்களு மெமபிரா
னண்ணி னானிங்கு நாமுய்ந் தனமெனாத்
துண்ணெ னாவெழுந் தாங்கை தொழுதுளார். (௨௧௫)

அனைய காலையி லாதியம் பண்ணவ
னினிது மானத் திழிந்து கணத்துடன்
புனித நீடு பொலன்மணிச் சாலையுள்
வனிதை யாளொடும் வந்துபுக் கானரோ. (௨௧௬)

வேறு.

அதுகண் டுடங் தறுமா முகவ
னெதிர்கொண் டுவிரைந் திருவோர் பதமு
முதிரன் பொடுதன் முடிசூ டினனாற்
கதிருங் கமலங் களுமே வியபோல். (௨௧௭)

வந்தஞ் சலிசெய் துவணங் கியதோர்
கந்தன் றனையங் கவர்கை கொடெடாத்
தந்தம் முரனா டுதழீஇ முறையே
முந்தன் பொடுயிர்த் தனர்முச் சியையே. (௨௧௮)

முதுவா னவரும் முனிவோ ரெவரும்
மதுசூ தனனும் மலர்மே லயனுஞ்
சதவேள் வியனுஞ் சகமீன் றவர்தம்
பதமீ மிசைவந் துபணிந் தனரால். (௨௧௯)

தாழ்வுற் றிடுவோ ருமைசங் கரனைச்
சூழ்வுற் றுவலஞ் செய்துசூழ் வினையூ
டாழ்வுற் றிடுபுன் மையகன் றடியேம
வாழ்வுற் றனமென் றுவழுத் தினரால். (௨௨௦)

உன்னற் கரிதா கியுயிர்க் குயிராய்
மன்னுற் றவனை மலைமங் கையுடன்
பொன்னிற் புனையும் புதுமன் றன்மனை
தன்னிற் குமரன் கொடுசார்ந் தனனால். (௨௨௧)

வேறு.

ஆகியதோர் போழ்துதனி லாணைமுறை தன்னான்
மாகநெறி வந்தொரு மணித்தவிசு நண்ணத்
தோகையுடை மஞ்ஞையுறழ் தோற்றமுடை மாதோர்
பாகமுற வாயிடை பராபர னிருந்தான். (௨௨௨)

மங்கையுமை யுஞ்சிவனும் வள்ளறனை நோக்கி
யிங்குவரு கென்றுபி னெடுத்தினிது புல்லித்
தங்கள்வயின் வைத்துநனி தண்ணளி புரிந்தா
ரங்கது தெரிந்துதொழு தம்புய னிசைப்பான். (௨௨௩)

முன்னமொரு வைகறனின் மூவிரு முகத்தோன்
றன்னையசு ரப்படை தடிந்திட விடுத்தா
யன்னபரி சேயவுண ராயுளரை வீட்டி
நென்னலிமை யோர்சிறையு நீக்கியருள் செய்தான். (௨௨௪)

நன்றியித னைக்கருதி நாங்கள்புரி கைம்மா
றொன்றுமிலை யென்னினு முளத்தெழும் விருப்பால்
வென்றியசு ரேசர்களை வீட்டுகும ரேசற்
கின்றுமக வான்மகளை யீந்திட நினைந்தான். (௨௨௫)

அற்றமி லிரக்கமுட னாருயிர்கண் முற்று
நிற்றலு மளித்தருளு நேரிழையு நீயு
மற்றிது பகற்பொழுதில் வந்தனிர்க ளென்றாற்
சிற்றடிய ரேங்கள்செயல் சீருளதை யன்றோ. (௨௨௬)

என்றிணைய நான்முக னிசைத்திடலு மீச
னன்றென மகிழ்ச்சிகொடு காமுமிது காண்பான்
மன்றன்மலர் சூழ்தன்மலை மங்கையுட னிங்ஙன்
சென்றன மிதறகுரிய செய்கவினி யென்றான். (உஉஎ)

நாதனிவை கூறுதலு நன்குமகிழ் வெய்தி
மாதவனு நான்முகனும் வாசவனை நோக்கி
வேதமுறை யான்முருகன் வேட்டருள வுன்றன்
கோதைதனை யன்பொடு கொணர்ந்திடுதி யென்றார். (உஉஅ)

அந்தவமை யந்தனி லதற்கிசைவு கொண்டே
பைந்தொடிநல் லார்களமர் பாங்கர்தனி லேகி
நந்தமை யளித்தருளு நங்கைவரு கென்று
விந்திரன் விளித்திடலு மேந்திழை யெழுந்தாள். (உஉகூ)

கல்லுயர் பொருப்பினிடை காமரடி செல்ல
வல்லனகொ லென்றுமணி நூபுர மரற்ற
மெல்லிடை வருந்துமென மேகலை யிரங்க
வெல்லவரு முண்மகிழ வெம்மனை நடந்தாள். (உ௩0)

பஞ்சிதனின் மெல்லடி பணிப்பவரை யின்பாற்
குஞ்சரி நடந்தசெயல் கூறுபுது மைத்தோ
செஞ்சுடர்வை வேலுடைய செம்மலடி தீயே
னெஞ்சக வடுக்கவினு நின்றுலவு மென்றால். (உ௩க)

தந்திமுன் வளர்ப்பவரு தையன்மிக நொய்ய
செந்தளி ரொதுங்கமிளிர் சீறடி யொதுங்கி
யிந்திரைபு நாமகளு மேனையரு மேத்தப்
புந்திகளி கூர்தரு புரந்தரன்முன் வந்தாள். (உ௩உ)

வேறு.

இன்ன வெல்லையி லிந்திரன் றெய்வதக்
கன்னி தன்னைக் கடிமணச் சாலையின்
முன்ன ருய்ப்ப முனிவருந் தேவரு
மன்னை வாழியென் றேயடி போற்றினர். (உ௩௩)

கணங்கொள் பேரவை கைதொழ வாண்டுறு
மணங்கு தன்னுட னுதியர் தேவனை
வணங்கி வேலுடை வள்ளலை நோக்கியே
சுணங்கு சேர்முலை துண்ணென வெள்கினள். (உ௩௪)

மங்கை தாழ்தலும் வாலிதி னோக்கியே
யங்க ணாத னருள்செய வண்ணலைக்
கொங்கை யாறகுழை வித்தவள் கோல்வளைச்
செங்கை யோச்சிச் சிறுபுற நீவினள். (உ௩௫)

திருத்த குந்திறற் சேயையுஞ் சேண்மிசை
யருத்தி பெற்ற வணங்கையு முற்படும்
பெருத்த பொன்மணிப் பீடிகை மீமிசை
யிருத்தி வைத்தனன் யாவையு மீன்றுளாள். (உ௩௬)

வேறு.

அதிர்கழ லீசனொ டம்மை யிருந்தாங்
கெதிரெதிர் விம்ப மிலங்கிய வாபோல்
வதுவை யணிந்திடு மைந்தனு மாதுங்
கதிர்மணி தோய்கன கத்தவி சுற்றார். (௨௩௭)

தெய்வத மாதொடு செங்கதிர் வேலோன்
வெவ்வரி யேற்றணை மேவுதல் காணு
மெவ்வெவ ருந்தொழு தேத்தின ரீன்ற
வவ்வையு மத்தனு மாரருள் செய்தார். (௨௩௮)

அண்டர் தமக்கிறை யாங்கவர் கோலங்
கண்டு புகழ்ந்து கரந்தொழு துச்சி
கொண்டு மிளிர்ந்து குளிர்ந்திடு தேற
லுண்ட சுரும்பினு முண்மகிழ் வுற்றான். (௨௩௯)

நெஞ்ச மகிழ்ந்த நெடுந்தகை சொல்லான்
மஞ்சன மாமலர் மற்றுள முற்று
மெஞ்சலி லாவகை யேந்தி யவைக்க
ணஞ்சமு மஞ்ச வருஞ்சசி வந்தாள். (௨௪0)

அன்னதொர் காலையி லந்தர நாதன்
பன்னிரு மொய்ம்பு படைத்திடு புத்தேண்
முன்ன ரிருந்து முறைப்பட வன்னான்
பொன்னடி பூசை புரிந்திட லுற்றான். (௨௪௧)

சொல்லரு நாணொடு தோகை மடந்தை
நல்லதொர் கன்ன னறும்புன லுய்ப்ப
வெல்ல வரும்புக ழிந்திர னையன்
மெல்லடி பற்றி விளக்கின னம்மா. (௨௪௨)

செம்மல் பதங்கள் செழும்புன லாட்டிக்
கைம்மலி யுங்கள பந்தனை யூட்டி
யம்மலர் சூட்டி யகிற்புகை காட்டி
நெய்ம்மலி பூஞ்சுடர் நீட்டின னன்றே. (௨௪௩)

இவ்வகை பூசை யியற்றுத லோடு
மவ்வயி ராணி யயிற்படை யோன்றாள்
செவ்விதி னூட்டிய தீர்த்திகை தன்னைக்
கைவகை யேந்தியொர் காப்பிடை யுய்த்தாள். (௨௪௪)

அன்னுழி யிந்திர னூறுமு கேசன்
றன்னொரு கையிடை தந்தியை நல்கி
யின்னடி யேனிவ ணோர்ந்தன னென்னக்
கன்ன லுமிழ்ந்த கடிப்புன லுய்த்தான். (௨௪௫)

மருத்துவன் மாமறை மந்திர நீரா
லொருத்தி பொருட்டினி லொண்புன லுய்ப்பக்
கரத்திடை யேற்றன னற்கழல் சேர்ந்தார்க்
கருத்திகொண் முத்தியு மாக்கமு மீவோன். (௨௪௬)

செங்கம லத்திறை சிந்தையி னூற்றி
யங்கையி னீந்திட வாண்டகை கொண்ட
மங்கல நாணை மணிக்கள மார்த்து
நங்கை முடிக்கொரு நறுந்தொடை சூழ்ந்தான். (௨௪௭)

மாவொடு வாழை வருக்கைகொள் பைங்காய்
தீவிய கன்னல் செறிந்திடு செந்தே
னுவருள் பாலிவை யண்டர்கள் செம்மன்
மூவிரு மாமுக னூநுகர் வித்தான். (௨௪௮)

வார்த்தொகை சூழ்தரு மத்தளி தக்கை
பேர்த்த வலம்புரி பேரி கலித்த
வாரத்தனா வீர ரருங்கண நாதர்
தீர்த்தனை வந்தனை செய்து களித்தார். (௨௪௯)

தண்டுள வண்ணல் சரோருக மேலோ
னெண்டிசை பாலக ரிந்திர னென்போ
னண்டர்க ளேனைய ராங்கவர் கோலங்
கண்டு சிறந்தது கட்புல மென்றார். (௨௫௦)

ஆயது போழ்தினி லம்புய முற்றோன்
காயெரி தந்து கலப்பைகள கூவித
தூய மணம்புரி தொன்முறை வேள்வி
நாயக னைகொடு நன்றுசெய் வித்தான். (௨௫௧)

உலகருள காரண னெண்ணுத லோடும்
வலமுறை யாக வயங்கனல சூழ்ந்து
சிலையிடை யன்னவள் சீறடி தந்தான்
மலரய னுச்சியின் மேலடி வைததான். (௨௫௨)

மாலினி காளிகண் மாமல ராட்டி
பாலி னிறத்தி பராயினர் சூழச்
சாலினி மங்கலை தன்னொடு கண்டான்
வேலினின் மாவினை வீழ வெறிந்தோன். (௨௫௩)

இவ்வகை மன்ற லியற்றிய பின்னைத்
தெய்வத மாதொடு செங்கதிர் வேலோ
னவ்வையொ டத்தனை யன்பொடு சூழ்ந்து
செவ்விதின் மும்முறை சேவடி தாழ்ந்தான். (௨௫௪)

வேறு.

அடித்த லத்தில்வீழ் மக்களை யிருவரு மார்வத்
தெடுத்த னைத்தருள் செய்துதம் பாங்கரி னிருத்தி
முடித்த லத்தினி னுயிர்த்துமக் கெம்முறு முதன்மை
கொடுத்து மென்றன ருவகையான் மிக்ககொள் கையினர். (௨௫௫)

மலைம டந்தையு மிறைவனு மைந்தற்கு மகட்குந்
தலைமை செய்தருள் புரிதலுஞ் சாலையு ளிருந்த
வலர வன்முத லமரரு முனிவரு மணங்கின்
குலம டங்கலு மவரடி முடிமிசைக் கொண்டார். (௨௫௬)

அறுமு கன்றனை யணங்கினை யவையுளோ ரெவரு
முறையில் வந்தனை செய்தலு முழுதருள் புரிந்து
கறைவி ளங்கிய கண்டனுங் கவுரியுங் கடிதின்
மறைத லுற்றனர் பரிசனந் தன்னொடு மன்னோ. (௨௫௭)

மறைந்த காலையில் விம்மித ராய்மணச் சாலை
யுறைந்த தேவரு முனிவரு முயிர்களுக் குயிராய்
நிறைந்த மேலையோர் நிலைமையை நினைந்துதம் வாயா
லறைந்து கைதொழு தவர்பெய ரெடுத்தெடுத் தார்த்தார். (௨௫௮)

வரைப டைத்தவர் மறைந்துழி வானவர் பலரு
நிரைப டைத்துள முனிவருங் கவன்றது நீத்தார்
திரைப டைத்துள வாழ்கடற் பட்டுளோர் சிறந்த
கரைப டைத்தென வணங்கொடு குமரனைக் கண்டு. (௨௫௯)

உமையு மீசனு மிருந்திடு பீடிகை யுமபர்க்
குமர நாயகன் றெய்வதக் களிற்றொடுங் கூடி
யமர வன்னது காண்டலு மகிழ்சிறந் தன்னா
கமல மெல்லடி தொழுதனர் வழுத்தினர் களிப்பால். (௨௬0)

இனைய காலையி லரியணைப் பீடநின் றிழியா
வனைவ ருந்தொழு துடன்வர வாறுமா முகத்துப
புனித நாயகன் மங்கல விசையொடும் போந்து
தனது கோயிலுட் புக்கன னிறைவியுந் தானும். (௨௬௧)

வேலை யன்னதிற் குமரவேள் வேள்விநா யகற்கு
மால யன்முத லமரர்க்கு மற்றுளார் தமக்கு
மேல வேவிடை தந்துதன் பரிசன மெவையு
மால யந்தனிற் கடைமுறை போற்றுமா றளித்தான். (௨௬௨)

இன்ன தன்மைய தாகவே யெம்மையீன் றெடுத்த
வன்னை தன்னுட னறுமுக னுறையுளி னடைந்து
பொன்னின் மஞ்சமேற் படுத்துமெல் லமளியிற் புவன
மன்னு யிர்த்தொகை யுய்ந்திட முயங்கிவை கினலை. (௨௬௩)

சேணு தித்திடு தெய்வதக் களிற்றினைச் செவ்வே
ஞாணி னிற்கட்டி நகரிடைத் தந்துநற் கலன்கள்
பூணு தற்றுறு மங்குசங் கைக்கொடு புயமாந்
தூணு றப்பிணித் தணைத்தன னருளெனுந் தொடரால். (௨௬௪)

மருந்து போன்மொழிக் குமரியுங் குமரனு மணந்தாங்
கிருந்த வெல்லையில் விரிஞ்சனு மாலுமே னையரும்
விரைந்து தத்தமக் கியன்றதொல் லிருக்கையின் மேவப்
புரந்த ரன்பரி சனரொடுந் தன்மனை புக்கான். (௨௬௫)

முகிலு யர்த்தவன் முசுகுந்த னேமுத லுள்ள
வகில மன்னர்க்குந் தேனுவின் பலபய னருத்தித்
துகிலு மாரமு மணிகளு மிருநிதித் தொகையும்
விகல மின்றியே கொடுத்தனன் யாரையும் விடுத்தான். (௨௬௬)

எல்லை யன்னதின் முசுகுந்த னுதியா மிறைவர்
கல்ல கந்தனி விழிந்துதஞ் சேனையின் கடலை
வொல்லை கூடியே வேறுபல் புலந்தொறு மொருவித்
தொல்லை யூர்புகுந் திருந்தனர் வீடுறுந் தொடாபால். (உகஎ)

மன்னர் யாவரும் விடைகொடு போதலு மகவான்
றன்ன தாகிய கடிமனைக் கிழத்தியுந் தானு
மின்ன றீர்தரு போகம தாற்றின னிருந்தா
னன்ன பான்மையிற சிலபக லகன்றன வன்றே. (உகஅ)

ஆ திருவிருத்தம் ௩0௩.

---

வசனம்.

இந்திரன், தன் பகைவனாகிய சூரனை வேரோடுமாய்த்த குமரநாயகனுக்குத் தன் மகளாகிய தெய்வயானையாரை மணமுடித்துக்கொடுக்க நினைத்துத் தன் கருத்தைத் திருமால் முதலிய தேவர்களுக்கறிவித்தான். அவர்களும் மிகு மகிழ்வோடு அவ்வாறு செய்வது உசிதமாமென்றனர். உடனே இந்திரன் ஒரு தூதனை யழைத்து, நீ மேருமலையிற்போய் என் மனைவியையும் புதல்வியையும் அழைத்து வாவென்றான். அத்தூதன் விரைந்துபோய் அவர்களை யழைத்துவந்தான். தாயாகிய இந்திராணியைச் சயந்தன் வணங்கினன். பின்பு இந்திரன் தன்கருத்தைச் சண்முகப்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்தான். குமரநாயகனும் இந்திரனை நோக்கி, உன் பெண்ணாகிய தெய்வயானையானவள் என்னைக் குறித்துத் தவஞ்செய்திருக்கிறாள். ஆகையால் உன் கருததின்படியே நாளைக்கே அவளை மணஞ்செய்துகொள்ளுகிறேனென்றார். அதைக்கேட்ட இந்திரன் மிகவுமனமகிழ்ந்து, சில தூதரையழைத்து, நீங்கள்சென்று தேவர்கள் அரசர்கள் முசுகுந்தன்முதலிய சக்ரவர்த்திகள், முனிவர்கள் ஆகிய எல்லாருக்கும், திருப்பரங்குன்றத்தில் நாளைக்குத் திருமணம் எமது சண்முகப்பெருமானுக்கு நடக்கப்போகிறதென்று தெரிவிக்கவேண்டுமென, அவ்வாறே அத்தூதர்கள்சென்று தெரிவித்தார்கள்.

பிறகு இந்திரன் தெய்வத்தச்சனைக்கொண்டு, திருக்கலியாணமண்டபம் அதனடுவே குமரநாயகன் வீற்றிருக்கச் சிங்காதநம், மணத்துக்கு வருகிற தேவர் முதலிய யாவருக்கும் தகுதியான விடுதிகள், கோபுரமண்டபவாபீ கூபதடாதிகள் முதலியவற்றை வெகு சிறப்பாகச்செய்து முடித்தான். இந்திரனும் விவாகத்துக்கு வேண்டிய உபகரணங்களைச் சேகரித்துக் கொண்டிருந்தான்.

இப்படி யிருக்கையில், சோணாட்டில் கருவூரிலிருந்து அரசாண்டு வருகிற முசுகுந்த மகாராஜனானவன் பிறந்த தன்மையைச் சொல்லலாயினேன். முற்காலத்தில் கயிலாயமலையில், உமாமகேசுரரிருவரும் அதிக சந்தோஷத்தோடோர் சோலையிலிருக்கும்போது, அநேகமான குரங்குகள் ஒரு வில்வமரத்தின்மேலேறி யிருந்தன, அவற்றுள் ஒரு குரங்கானது அந்த மரத்தழைகளை யுதிர்த்தது, அத்தழைகள் அங்கிருந்த அம்மையய்யர் மேல்விழ, இறைவி கோபித்தாள், அதைக்கண்ட இறைவன் இறைவியை நோக்கி, நீ கோபிப்பது தகுதியன்று. அக்குரங்கு நம்மை வழிபட்டதென்று சொல்ல, இறைவி கோபந்தணிந்தாள். இறைவன் அந்த முசுவிற்குத் தம்மேல் சொரிந்த வில்வத்தழைகளின் பொருட்டு மெய்யுணர்வளிக்க, அது அந்த மரத்திலிருந்திறங்கி உமாமகேசுவரரிருவரையும வணங்கி, என் பிழை பொ

றுக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, இறைவன் அதை நோக்கி, நீ யெம்மை வில்வத் தழைகளால் அருச்சித்ததற்காக, உனக்கு மூன்றுலகத்தையும் காக்கின்ற பெருஞ் செல்வத்தைத்தந்தோம் என்றுசொல்ல, முசுவானது, இறைவனே! எனக்குத தந் தைதாயாராகிய உங்களிருவரையும் தரிசித்துக்கொண்டிருப்பதே பெருஞ்செல்வ மாகும் இதைவிட்டு அற்பமாகிய பொருட்செல்வத்தை நாடிச்செல்வேனாயின், அளவற்ற துன்பங்களுக்கு ஆளாவேன் என்று சொல்லி, நான் எவ்வாறு உய்வேனெ ன்று சொல்ல, இறைவன் அதைநோக்கி, நீ யஞ்சவேண்டாம், நீ பூலோகத்திற் சென்று மீண்டுவரக்கடவையென்று சொல்ல, அதற்கு அக்குரங்கு நான் பூமியில் இந்த முகத்தோடிருக்கும்படி வரந்தாள வேண்டுமென, இறைவனும் அப்படியே தந்தோமென்றுசொல்ல, இவன் சோழமகாராஜனுக்குப் புதல்வனாய்ப்பிறந்து செங் கோல் செலுத்திக் கருவூரைத் தனது ராஜதானியாக்கிக்கொண்டு சூரபன்மனது ஆணையைக் கடவாமலிருந்தான். இப்படி அரசாட்சிசெய்துவருகையில், இந்திரன் அனுப்பின தூதர்கள்சென்று, குமரநாயகன் சூரனைக்கொன்று தேவர்களைச் சிறை விடுத்து அவர்களுக்கு இதஞ்செய்தமையால், இந்திரன் தன் மகளாகிய தெய்வ யானையை அவருக்கு மணமுடித்துக் கொடுப்பதாக நிச்சயித்திருப்பதால், அந்த மணம் நாளையே திருப்பரங்குன்றத்தில் நடக்கப்போகின்றது, அந்தத் திருமணத் திற்குத் தேவரீர் எழுந்தருளவேண்டுமென்று தெரிவித்தார்கள். அதுகேட்ட முசுகு ந்தன் மிகவுங் களிப்படைந்து அப்படியே யாகுகவென்று சொல்லுதலும, தூதர் கள் மற்ற அரசருக்கும் சொல்லப்போயினர். போனவர்கள் சொல்லவேண்டியவர் களுக்கெல்லாம் சொல்லிவிட்டுத் திருப்பரங்குன்றத்தையடைந்தார்கள். பிறகு முசு குந்தனும் மற்றையரசரும் தத்தம் படைகளோடும் திருப்பரங்குன்றத்தை யடைந் தார்கள். இந்திரன் அவர்களுக்குத் தகுதியான விடுதிகளமைத்துத்தர ஆவற்றி லிருந்தார்கள். பிறகு இந்திரன் பிரமனை நோக்கி, எல்லாரும் வந்து சேர்ந்தார்கள். இனித் திருமணம்நடப்பிக்கலாமேயென்றுசொல்ல, பிரமன் சண்முகப்பெருமானை யடைந்து வணங்கி விண்ணப்பஞ்செய்ய, அவரும் அவ்வாறே யாகுகவென்று தே வர்முதலிய யாவரும் சூழச்சென்று திருப்பரங்குன்றத்தை யடைந்தனர்.

அதன்பிறகு குமரநாயகன் மணக்கோலங்கொண்டு யாகசாலையிற் பிரவேசித் தனன். பிரவேசித்து இந்திரன் தன் பொருட்டாகவே யமைத்திருந்த சிங்காதனத் தில் வீற்றிருந்தான். தேவர்கள் முதலானவர்கள் தத்தமக் கேற்படுத்தப்பட்டிருந்த ஆசனங்களில் வீற்றிருந்தார்கள். முசுகுந்தன் முதலிய அரசரெல்லாரும் வந்து அவரவர்களுக்கிட்ட ஆசனங்களில் அமர்ந்திருந்தார்கள். பிறகு குமரநாயகன் மணத் தைக்கண்டுகளிக்கும்பொருட்டுச் சிவபிரான் உமாதேவியாரோடும எழுந்தருளினார்.

அப்பொழுது குமரநாயகனெழுந்து அப்பெருமானது திருவடியை வணங்கி நின்றான். இந்திரன் வந்து வணங்கி திருமணமண்டபத்திற் கழைத்துக்கொண்டு போய், விமானமொன்றின்மேல் எழுந்தருளப்பண்ணி, பின்பு குமரநாயகனையு மெழுந்தருளப்பண்ணினான். மூவரும சோமாஸ்கந்தமாக எழுந்தருளி யிருந்தார் கள். பிறகு பிரமன் இந்திரனைநோக்கி இனித்திருமணத்திற்குப் பிரயத்தனஞ்செய் யவேண்டுமென்றலும் அவன் தன் மகளாகிய தெய்வயானையார்க்குச் செய்தி யறி விக்க, அவரும் பூமகளும் நாமகளும் ஏத்தவும் சேடியார்புறஞ்சூழ்ந்து கைலாகு கொடுத்துவரவும் அன்னப்பெடைபோல நடந்து திருமணச்சாலையை யடைந்தார். அவரை உமாதேவியார், குமரநாயக னிருக்குமிடத்திருத்தினார். அந்தக்கோலத்தை க்கண்ட இந்திரன் மகிழ்ந்து தொழுதுநிற்க, இந்திராணியும் மஞ்சனநீர் கொண்டு

வா, இந்திரன் குமரநாயகன் திருவடிவிளக்கி, சந்தன புஷ்பாதிகளால் அலங்கரித்து, தெய்வயானையாரை வேதவிதிப்படி குமரநாயகன் திருக்கரத்தில் தாரை வார்த்துக்கொடுத்தான். பிறகு அப்பெருமான் தெய்வயானையார் திருக்கழுத்தில் மங்கலநாண்பூட்டி மணமாலையையும் அணிந்தான். அப்போது இந்திரன் முப்பழம் கருப்பஞ்சாறு தேன் பால்கலந்து குமரநாயகனுக்கு நகர்வித்தான். அப்பெருமானும் அக்கினிவலம் வருதல அம்மிமிதித்தல் அருந்ததிகாட்டல் முதலிய சடங்குகளையும் நிறைவேற்றி, உமாமகேசுவரரை வணங்கி நின்றான். அவ்விருவரும் குமரநாயகனுக்கும் தெய்வயானையார்க்கும் ஆசிகூறி அவ்விருவரையும் அவர்களுக்குரிய திருமாளிகையை யடைவித்துக் கைலையை யடைந்தார்கள். இவர்கள் இன்பம் நுகர்ந்திருந்தார்கள். இந்திரன் முசுகுந்தன் முதலானவர்களுக்கு வேண்டிய ஆடையாபரணாதிகள் கொடுத்து அவரவர் இருக்கைக் கனுப்பிவிட்டுத் தானும் இந்திராணியுடன் இனிது வீற்றிருந்தனன். இவ்வாறு சிலநாள் கழிந்தன.

தெய்வயானையம்மைதிருமணப்படலம் முற்றிற்று.



## விண்குடியேற்றுபடலம்.

ஆன சிற்சில வைகல்சென் றிடுதலு மணங்குந்
தானு முற்றிடு முறையினை யொருபகற் றணந்து
வான வர்க்கிறை வினைக்குறை கிரயபுதல் வலித்துக்
கோன கர்ப்பெரும் புதவினில் வந்தனன் குமரன். (௧)

உவாவின் மாதுட னுவா வினுக் கிளையவ னுவாவிற்
றிவாக ரன்மதி யாமென வருதலுந் தெரிந்து
தவாத வன்புடை வயவருஞ் சாரத ரொரு
மவாவொ டன்னவ ரடிமுறை வணங்கிநின் றார்த்தார். (௨)

அனிக மார்த்திடல் செவிப்புலம் படர்தலு மடல்வேற்
புனித நாயகன் போந்தனன் போந்தன னென்று
வனசமேலவன் மாலவன் மகபதி வானோர்
முனிவர் யாவரு மெழுந்தனர் விரைசெலன் முன்னி. (௩)

வேறு.

எழுதரு கின்றவர் யாரு மோரிமைப்
பொழுதுறு மளவையிற போந்து மன்னுயிர்
முழுதருள் புரிதரு முதல்வன் சேவடி
தொழுதன ரிறைஞ்சினர் சூழ்ந்து போற்றலும். (௪)

கொந்தவி ழலங்கலங் குவவுத் தோளினன்
வந்தவந் தனைபுரி வதனை நோக்கியே
நந்தனி யூர்தியை நடாததிச் செல்கெனச்
சிந்தையில விரைதரு தேர்கொண் டேகினன். (௫)

ஆசுக னுய்த்திடு மப்பொற் றேர்மிசை
வாசவ னருள்புரி மடந்தை தன்னுடன்
றேசுடை யறுமுகச் செம்மல் கண்ணுத
லீசனுங் கவுரியு மென்ன வெய்தினன். (௬)

வே று.

சூரி ஞேடு துணைபரித் தேர்மிசைச்
சூரி ஞேடு துணைவன்வந் தெய்தலு
வாரி வீசினர் மாமலர் பன்முறை
வாரி வீசினர் வானவர் யாருமே. (௭)

பூத வீரரும் போர்ப்படை மள்ளரு
மூது ணர்ந்த முனிவன் சிறார்களுங்
கோதை வேலுடைக் கொற்றவற காம்பணி
யேது மாற்றி யினிதயற் சுற்றினர். (அ)

மாகர் யாரும் வணங்க வவரவர்
சேக ரத்தினிற் சேவடி சூட்டியே
தோகை மாமயி றேன்றன்முன் னின்றதா
லாகை யாற்றவ மாற்றல தேயன்றே. (௯)

பூவி னன்முதற் புங்கவர் யாரையு
மூவி ரண்டு முகத்தவன் கண்ணுறீஇ
நீவி ரெல்லிரு நேர்ந்தநும் மூர்தியின்
மேவி யெம்மொடு செல்லுமின் விண்ணென்றான். (௧௦)

என்ன லோடு மினிதென நான்முக
னன்ன மீதினு மச்சுதப் பண்ணவன்
பன்ன கேசன் பகைஞன்றன் மீதினு
முன்ன ரேறி முதல்வனை யெய்தினர். (௧௧)

மாறில் வெள்ளி மலைப்படு தெண்கயத்
தூறு நீத்தத் தொழுக்கென மும்மதத
தாறு பாயு மடலயி ராவதத
தேறி வந்தன னிந்திர னென்பவன். (௧௨)

மற்று நின்றுள வானவர் யாவரு
முற்று ணர்ந்த முனிவருந் தத்தமக்
குற்ற வூர்திக ளூர்ந்தெம் மிறைவனைச்
சுற்றி நின்று துதித்துடன் மேயினர். (௧௩)

வள்ள லித்துணை வானுல கத்திடைப்
பொள்ளெ னப்புகப் போதுகின் றானெனுக்
கொள்கை யிற்பலர் கூறலுங் கூளியின்
வெள்ள முற்றும் விரைந்தெழுந் திட்டவே. (௧௪)

குடமு ழாப்பணை கொக்கரை தண்ணுமை
படக மாதிய பல்லிய மாற்றியே
புடைநெ ருங்கிய பூதரி லெண்ணிலா
ரிடிமு ழங்கிய தென்ன வியம்பினர். (௧௫)

ஈங்கித் தன்மையி னீண்டு பரிசனம்
பாங்குற் றேகப் பரஞ்சுடர்ப் பண்ணவ
னோங்கற கொணட வொருதனிக் கோநகர்
நீங்கிச் சேணி னெடுநெறிப் போயினன். (௧௬)

அந்த ரத்தி லமருல கந்தனைக்
கந்த னங்கொரு கன்னலி னீங்கியே
யிந்தி ரப்பெய ரெய்திய மாதுலன்
முந்தி ருந்த முதுநகா மேவினான். (௧௭)

வேறு.

விண்டொடர் பொன்னகர் மேலைச் சூர்மக
னுண்டுகள் செய்திட நொய்தி னுற்றது
மண்டர்க ளிறையவ னகங்கொள் வேட்கையுங்
கண்டனன் குமரவேள் கருணை யாழியான். (௧௮)

வீக்குறு கனைகழல் விமல நாயக
னுக்கமில் விண்ணுல களிக்கும் பெற்றியாற்
றேக்கிய விஞ்சையின் றெய்வத் தச்சனை
நோக்கின னினையன நுவறன் மேயினான். (௧௯)

செல்லலை யகன்றிடு தேவர் மன்னவ
னெல்லையில வளனொடி மிருக்கும் பான்மையாற்
றொல்லைய தாமெனத் துறக்க நல்குதி
வல்லையி லென்றலும் வணங்கிப் போயினான். (௨௦)

வேறு.

தூறெ ரிந்திடு நோன்மையோன்
மாறில் பொன்னகா மாடுற
வீறு மாமதில் விண்ணுலா
மாறு பாய வமைத்தனன். (௨௧)

ஆயி ரம்மல ரம்புயன்
சேய வாய்க டிறந்தென
ஞாயின் மாமதி னள்ளுற
வாயி னான்கு வகுத்தனன். (௨௨)

நாற்றி சைக்கண நாதரு
மாறற வேயரி தாமென
வேறற கோபுர மேழ்நிலை
யீற்று மீற்று விதித்தனன். (௨௩)

வண்ண மாமதில் வைப்பினு
ளண்ண லங்கிரி யாழிசூழ்
கண்ண கன்புவிக் காட்சிபோ
லெண்ணில் வீதி யியற்றினான். ()

பூவின் மேல்வரு புங்கவத்
தேவு நாணுறு செய்கையிற்
காவன் மாநக ரத்திடைக்
கோவி லொன்று குயிற்றினான். ()

தேவு காமுறு செய்வரை
காவி மல்கு கயத்தொடு
வாவி பொய்கை வரம்பில
வோவில் பான்மையி னுதவினான்.

மாட மாளிகை மண்டப
மீடு சேரரி யேற்றணை
பாடு சேர்தரு பாழிக
ளாடி யோர்தக நல்கினான். (௨௭)

வேறு.

ஏறுசீ ரிந்திர னிருக்குங் கோயிலு
மாறுமா முகப்பிரா னமருங் கோட்டமு
மாறிலா மாலயன் மந்தி ரங்களும்
வேறுளா ரிருக்கையும் விதித்திட் டானரோ. (௨௮)

கூன்முக வால்வளைக் குரிசி லூரினு
நான்முக னூரினு நலத்த தென்றிட
வான்முக வியனகர் வளமை சான்றிட
நூன்முக நாடியே நுனித்து நல்கினான். (௨௯)

வேறு.

பொன்னி னுக்குப் புகலிட மாகவான்
மன்னி னுக்குச்செய் மாநகர் வண்மையை
யென்னி னுக்கு மியம்பவற் றேகலை
மின்னி னுக்கும் விதிப்பருந் தன்மையே. (௩௦)

இனைத்தி யாவு மிமைபபிடைச் சிந்தையி
னினைபபிற் செய்த நிலைமையை நோக்கியே
நனைதது மாய்முடி நாரண னுன்முகன்
மனத்தி னூடு மகிழ்ச்சியை மேவினா. (௩௧)

வல்லை வேதன் வகுப்பது மற்றுனக்
கில்லை நேரென் றினிது புகழ்ந்திட
வல்ல நீரம ரர்க்கிறை காண்குறீஇப்
புல்லி னுனைப புனைவனை யென்பவே. (௩௨)

அணங்கு சால்புர மவ்வகை நல்கியே
நுணங்கு நூலவன் சண்முக னேன்கழல்
வணங்கி நிற்ப வருள்செய்து மாடுறு
கணங்க ளோடு கதுமெனப் போயினுன். (௩௩)

அன்ன காலை யரம்பைய ரோடொரு
பொன்னின் மானம் புகுந்து புலோமசை
கன்ன லொன்றினிற் காமரு பொன்னகர்
மன்னன் மந்திரம் வந்தடைந் தாளரோ. (௩௪)

அடையு மெல்லை யறுமுகப் பண்ணவ
னிடைநி லைபபடி மிந்திரன் கோநகர்க்
கடைமு தறசெலக் கஞ்சனை யாதியோ
ருடைய தததம வூர்தியி னீங்கினுர். (௩௫)

அக்க ணந்தனி லண்டர்கள் யாவருந்
தொக்கு டன்வரத தோகையன் னுளுடன்
செக்கர் மாமணித் தேரினுந் தீர்ந்தொராய்ப்
புக்கு மேயினன பொன்புனை மன்றமே. (௩௬)

வேறு.

தன்றுணை மஞ்ஞை யாகித் தாங்குத றெரிந்தி யானு
மின்றிவற் பரிபப னெனனு விளவலு மமைந்த தென்ன
மன்றிடை யிருந்த தெய்வ மடங்கலந் தவிசி னும்பர்
வென்றியந் தனிவே லண்ணல் வீற்றிருந் தருளி னுனே. (௩௭)

அன்னதோ ரளவை தன்னி லறுமுக னலரிற் புத்தேண்
முன்னவர் தம்மை யெல்லா முழுதருள் புரிந்து நோக்கி
யிந்நக ரரசு போற்ற விமையவ ரிறைவற் கின்னே
பொன்னணி மவுலி தன்னைப் பொள்ளெனப் புனைதி ரென்றுன். ()

என்றிவை குமரன் கூற வினிதென விசைவு கொள்ளா
வன்றொரு கணத்தின் முன்ன ரட்டமங் கலமுந் தந்து
மன்றலகொள் கவரி யொள்வாண் மணிமுடி கவிகை யோடு
நின்றுள வுறுப்பு மேனைப் பொருள்களு நெறியி னுய்த்தார். (௩௯)

அரசிய லுரிமைத் தெல்லா மாங்கவ ரழைத்துக் கங்கைத்
திரைசெறி தெண்ணீ ராட்டிச் செழுந்துகில் கலன்கள் சாந்தம்
விரைசெய்தார் புனைந்து சீய வியன்பெருந் தவிசி னேற்றி
வரிசையோ டிந்தி ரற்கு மணிமுடி சூட்டி னூரால். (௪0)

சுடர்த்தனி மவுலி தன்னைச் சூட்டலுந் துறக்கத தண்ண
லடித்துணை பணிந்தார் வானோ ரனைவரு மாசி தன்னை
யெடுதெடுத் தியம்ப லுற்றா ரிருடிக ளரம்பை மாதர்
நடித்தனர் விஞ்சை வேந்தர் நல்லியாழ் நவின்றி சைத்தார். (௪க)

இந்திர னனைய காலை யெம்பிரான் முன்ன ரேகி
வந்தனை புரிந்து போற்றி வளமலி துறக்க நாடு
முந்துள வரசுஞ் சீரு முழுதொருங் களித்தி யெந்தா
யுய்ந்தன னிதன்மே லுண்டோ வூதிய மொருவர்க் கென்றான். (௪௨)

என்றலு மருள்செய் தண்ண லிந்தக ரரசு போற்றி
நன்றிவ ணிருத்தி யென்னா நாகர்கோன் றன்னை வைத்து
நின்றுள வமரர் தம்மை நிலைப்படி யிருக்கைக் கேவித
தன்றுணை யணங்குந் தானுந் தன்பெருங் கோயில் போந்தான். (௪௩)

குறிநெடி லளவு சான்ற கூளியும் வயவர் யாரும்
வறியதோ ரணுவுஞ் செல்லா மரபினால் வாயில் போகற
வுறையுளி னிருக்கை நண்ணி யொருபெருந் தலைவி யோடு
மறுமுக வள்ளல பல்வே றுடல்செய் திருந்தா னன்றே. (௪௪)

தூவியந் தோகை மேலோன் றுணைவியோ டிருந்த காலைப
பூவினன் முதலோா தத்தம் புக்கிட மமர்ந்தா ரன்றே
தேவர்க ளிறைவன் றானுஞ் சேயிழை சசியு மாக
மேவின னின்பந் துய்த்து விண்ணுல கரசு செய்தான். (௪௫)

இனைதரியல் கின்ற வெல்லை யிந்திர வளனே யன்றி
யனைத்துல கத்து முள்ள வாக்கமுந் தாம்பெற் றென்ன
மனைதிடை யுவகை கொண்டு மாநக ரிருக்கை புக்குத்
தனித்தனி யமர ரெல்லாஞ் சாறயாந் தமர்த லுற்றார். (௪௬)

ஆ திருவிருத்தம் ௩௪௬.

---

வசனம்.

குமரநாயகன் இந்திரன் குறை நீக்க எண்ணங்கொண்டு, இந்திரலோகத் தைநாடிச் செலலும்பொருட்டுத் தன் தேரைக் கொண்டுவரும்படி கட்டளையிட, வாயுதேவன் கொண்டுவந்தான். அதன்மேல் தெய்வயானையாரோடும் ஏறி, தேவர், பூதவீரர் முதலியோர் சூழ அமராவதியை யடைந்தபிறகு அந்நகரம் பானு கோபனால் பாழ்பட்டுக்கிடப்பதைநோக்கி, தெய்வத்தச்சனை வரவழைத்து அவனால் அதை முன்போலப் புதுப்பித்து, அவனுக் கருள்செய்தனுப்பிவிட்டு, தான் இந்திரா ணியினது மாளிகையை நாடிவந்தான், அதைநோக்கிக் களித்தபிறகு தேவர்களைக்

கொண்டு இந்திரனுக்கு முடிசூட்டுவித்தனன்; பிறகு இந்திரனைநோக்கி, நீ இன்று போல என்றும் அரசாண்டிருவென்று கட்டளையிட்டுத் தானுந் தெய்வயானையாரோடு தன் இருக்கையை யடைந்தனன். இலக்கத்தொன்பதின்மரும பூதவீரரும் இவரது இருக்கையைக் காவல்பூண்டிருந்தனர்.

விண்குடியேற்றுபடலம் முற்றிற்று.

---

## கந்தவெற்புறுபடலம்.



இப்படி சிலநா ளேக விதன்மிசை வைக லொன்றி
லொப்பருங் கந்த வெற்பி லுறைவது கருதிச் செவ்வேள்
செப்புறழ் கொங்கை யோடுஞ் சினகரந் தணந்து செல்ல
வப்பரி சுணர்ந்து வேதா வாதியா யாரும் போந்தார். (௧)

பெருந்தகை யனைய காலைப் பிரமன்மான் முதலோர் யாரும்
விரைந்துதம் பதங்கள் செல்ல விடைபுரிந் தங்கண் வானத்
திருந்தர சியற்ற விண்ணோர்க் கிறைவனை நிறுவித் தெய்வத
திருந்திழை யணங்கி னோடுஞ் சென்றுதன் றேரிற் புக்கான். (௨)

தேரிடைப் புகுந்த வையன் றிறலுடை மொய்ம்பன் பாகாய்ப்
பாரிடைச் சென்று முட்கோல் பற்றினன் பணியா லுய்ப்ப
போருடைச் சிலைவல் லோரும் பூதர்தங் கடலுஞ் சுற்றக்
காருடைக் களத்துப் புதத்தேள் கைலைமால் வரையிற் போந்தான். (௩)

போனதோர் காலை வையம் பொள்ளென விழிந்து முக்கண்
வானவன் றன்னை யாயோ டடிகளை வணக்கஞ் செய்து
மேனதோர் கருணை யோடும் விடைபெறீஇ விண்ணு ளோர்கள்
சேனையந் தலைவன் கந்தச் சிலம்பினிற் கோயில் புக்கான். (௪)

புக்கதோர் குமர மூர்த்தி பொருதிறல் வயவர் யாருந்
தொக்கனர் பணியி னிற்பத் தொல்படைக் கணங்கள் போற்ற
மைக்கருங் குவளை யொண்கண் மடவர லோடு மேவி
மிக்குயர் மணிபபீ டத்தில் வீற்றிருந் தருளி னானே. (௫)

துய்யதோர் மறைக ளாலுந் துதித்திடற் கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க சேவலு மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க வன்னான்
பொய்யில்சீ ரடியார் வாழ்க வாழ்கவிப் புவன மெல்லாம். (௬)

ஆ. திருவிருத்தம் ௩௯௭.

---

வசனம்.

அங்கே இவ்வாறு சிலநாளிருந்து, கந்தவெற்புக்குப்போக்க நினைத்து, பிரமனுக்குந் திருமாலுக்குந் தத்தம் பதஙகளுக்குச்செல்ல வுத்தரவளித்து, இந்திரனை தேவநாட்டை யாளும்படியாகச்செய்து, வீரவாகுதேவராற் செலுத்தப்பட்ட தேரி

ன்மேல் தெய்வயானையுடன் செவ்வேள் ஏறினன். வீரர்களும் பூதர்களுங் கடல் போற் சூழ்ந்துவர தேரின்மேற்சென்று கைலையையடைந்து தேரினின்றிறங்கித் தாயையுந் தந்தையையும் வணங்கி அவரது விடைபெற்றுச்சென்று கந்தவெற் படைந்து படைவீரர் பணிவிடைசெய்ய, கணங்கள்போற்ற, தெய்வயானையோடு உயர்ந்த மணிப்பீடத்து வீற்றிருந்தார்.

கந்தவெற்புறுபடலம் முற்றிற்று.

---

# இந்திரபுரிப்படலம்.

காசினி வியத்தகு கந்த வெற்பிடைத
தேசுடை முருகவேள் சேர்ந்த செய்கையைப்
பேசின னிங்கினிப் பிறங்கு பொன்னகர்
வாசவ னியற்கையு மறறுங் கூறுகேன். (க)

துண்ணென வவுணரைத் தொலைத்த வேற்படைப்
பண்ணவ னருளினாற் பலரும் போற்றிட
விண்ணர சியற்றிய வேந்த னோர்பக
லெண்ணின னுளந்தனி லினைய நீரதே. (உ)

பற்றலர் சிறுதொழில் பலவு மாற்றியே
யுற்றது மளப்பிலா வுகமொ ளிதததது
மற்றத னிடையிடை வந்த தீமையும்
பெற்றிடு துன்பமும் பிறவு முன்னினான். (௩)

மறுத்தனன் சசியுடன் வைகும் வாழ்க்கையை
வெறுத்தனன் வெறுக்கையை வேந்தி யற்கையுஞ்
செறுத்தனன் றவத்தினை சேர்வன் வீடெனுத
துறத்தலை யுன்னினன் றுறக்க மேயினான். (௪)

இந்திர னியற்கையை யெண்ணி வானவர்
மந்திரி யாகியு மன்ன னாகியு
மந்தண னாகியு மமரும் பொன்னவன்
புந்தியி லீதொரு புணர்ப்பை யுன்னினான். (௫)

உன்னிய மேலவ னும்ப ருக்கெலா
மன்னவ னுழைதனில் வந்து வைகியே
கொன்னவில் வச்சிரங் கொண்ட பாணியா
யின்னன கேளென வியம்பன் மேயினான். (௬)

புன்றொழி லாகிய பொய்யும் வாய்மையா
மொன்றொரு பெரும்பய னுதவு மாயிடி
னென்றனர் சுரகுரு வேந்தி ரன்பத
நின்றிட வீதொரு நிகழ்ச்சி கூறுவான். (௭)

வேறு.

அன்பு நீங்கிய வவுணருக் கரசனாற் பட்ட
துன்ப மானதை யுன்னியே துறக்கமே லரசு
மின்ப வாழ்க்கையும் வெறுத்தனை யிவைவெறுத் தனையேற்
பின்பு நோற்றுநீ யாற்றலாற் பெறும்பயன் யாதோ. (௮)

சிந்தை வெந்துய ருழந்தவ ரல்லரோ திருவு
மந்த மில்பெரு வாழ்க்கையு மெய்துவ ரதுதான்
மைந்த வாழிகே ணின்னள வன்றுகாண் மதிக்கி
னிந்த மூவுல கந்தனில் வழங்கிய வியற்கை. (௯)

ஓவ ருந்தவ மியற்றிய முனிவரி னுலகத்
தேவர் தங்களிற் பாதலத் தோர்களிற் சிறந்த
மூவ ரென்றுபேர் பெற்றிடு முதல்வர்க டம்மி
லேவர் மங்கையர் முலைத்தலை போகம்விட் டிருந்தோர். (க0)

போன துன்பினுக் கஞ்சியே புகுந்தவித் திருவை
யூன மாமெனத் துறந்துநீ தமியைநோற் றுழலி
னான போதுறுந் துயரினுக் கவதியு முண்டோ
கான னீந்திட வெருவியே கடல்புக லறன்றே. (கக)

ஆகநோவுற வருத்தியே யைம்புல னவித்து
மோக மாதியா மூவிரு குற்றமு முருக்கி
யோகு செய்திடு மேலையோர் பெறும்பய னுரைக்கிற்
போக மன்றியொன் றிலைகா ணெல்லைதீர் புகழோய். (கஉ)

காண்ட கும்புல னொடுங்குமாங் கரணமு மிலையாம
பூண்ட செய்கையு மொழியுமா மியாக்கையும் போமா
மாண்டோர் பேரின்ப முண்டென்ப ரதனையா ரறிந்தா
ரீண்டு கண்டதே மெய்யென்ப ருலகுளோர் யாரும். (கந)

பொய்ம்மை யுற்றிடு கானலைப் புனலென விரும்பிக்
கைம்மி சைக்கொண்ட வமிர்தினை கமருகுத் தாங்கு
மெய்ம்மை யிற்சில ருண்டெனும வீடுபே றுன்னி
யிம்மை யிற்பய னிழக்குதி நன்றுநின் னெண்ணம். (கச)

மங்கை மாரிடத் தின்பமே யின்பமற் றவரோ
டிங்கு வாழ்வுறும் வாழ்க்கையே யியல்புறும் வாழ்க்கை
யங்க வர்பெறு செல்வமே செல்வமாங் கவர்தங்
கொங்கை புல்குறு வறுமையே கொடியதோர் வறுமை. (கரு)

மறுவி லாதவாண் மதிமுக மடந்தையர் புணர்ப்பைச்
சிறிய வின்பமென் றுரைசெய்வ ரென்னதன் சிறப்பை
யறிவ ரேயெனி னுங்கதே பேரின்ப மாகு
மிறைவ நீயது கேட்டியேன் மொழிகுவ னென்றான். (கசு)

ஏமஞ் சான்றிடு குரவன்மற் றிவையிவை யிசைப்ப
நாமஞ் சான்றிடு குலிசமாப் படையின னகையா
வோமஞ் சான்றிடு தீமுன்ன ரிழுதென வுடைந்து
காமஞ் சான்றிடு முளத்தனு மினையன கழறும். (கஎ)

பொருந்து மாசினை யகற்றிநற் காட்சியைப் புரியு
மருந்து போலுறு குரவநீ மடந்தையர் சிறப்புந்
திருந்து காமநல் லின்பமு மெனக்கருள் செய்யா
திருந்த காரண மென்கொலோ வின்றுகா றென்றான். (கஅ)

வேறு.

வெற்றுட லத்தில் விழித்தொகை பெற்ற
சிற்றறி வோனிவை செப்புத லோடு
மற்றிவ னுள்ள மயங்கின னெண்ணுக
கற்றுணா மந்திரி கட்டுரை செய்வான். (௧௯)

மாதர்கண் மேன்மைகண் மன்மத னென்னூ
லோதிடு முண்மையை யோர்ந்துணர் கின்ற
காதலி லாவழி கட்டுரை செய்யா
ராதலி னைய வறைந்தில னிந்நாள். (௨௦)

கோண்மதி யேகுடை யாவரு கோன்றன்
மாண்மதி நூலெனும வான்கடன் முற்று
நீண்மதி யாலுணர்ந் தேனத னீர்மை
கேண்மதி யென்று கிளத்திடு கின்றான். (௨௧)

ஈறில வென்று மியம்பினர் பத்தே
நூறுட னெட்டெனு நூலு நுவன்றார்
வேறுமி சைத்தனா மெய்ச்சம யந்தா
னுறென வோதின ராகமவை தமமுள். (௨௨)

சுதையமு தேயெனத் துய்த்திடு நீரார்க்
கிதமிக நல்குவ திமமையின் முத்திக்
கதியருள கிறபது காமரு லோகா
யதமென வேநெறி யொன்றுள தன்றே. (௨௩)

அச்சம யத்தலை யாற்றிடை நின்றே
யெச்சமில வீடுபெற் றின்புறு கின்றோர்
மெச்சிய லாடவர் மேலதை யீவோர்
நச்சுறு கூர்விழி நாரியர் தாமே. (௨௪)

அம்மட வாரிய லானவு மனனோ
தம்மை யடைந்திடு தன்மையு மேவுரு
செம்மைகொ ளாடவர் செய்கையு மெல்லா
மெய்மைய தாக விளம்பிடும் வேணூல். (௨௫)

சாதி யியற்கை கடத்துவ மாந்தர்
தீதில் குணத்தொடு தேச மவத்தை
போது கருத்திவை யாதிய போர்வேள்
வேத முணர்க்கும் விழுபபொருண் மாதோ. (௨௬)

வசைதவிர் மானினி மால்வட வைப்பே
ரிசையினி யததினி யேந்திழை யோர்க்கா
மசைவறு தொன்மர பாடவர் யார்க்குஞ்
சசனிட பன்னசு வன்னிவை தாமே. (௨௭)

முன்ன முரைத்திடு மும்மர புக்குட்
கன்னிய ராடவர் காமர் குறிக்கு
மன்னிய வாழமு நீளமு மற்று
மின்னன வென்றிட வேற்ப தியற்கை. (௨௮)

அந்தமி றேவ ரருந்தவர் நாகர்
கந்தரு வத்தர் கணங்கெழு பூதர்
முந்து மரக்க ரியக்கர் முரட்பேய்
தந்திற னுவது தத்துவ மாமே. (௨௯)

எண்மைகொ டத்துவ யாற்றிடை நின்ற
பெண்மைய ளாவளி பிதெதென வோதும்
வண்மைகொண் முக்குண மன்னினர் மற்றவ்
வுண்மை படைத்திட லொண்குண னுமே. (௩௦)

வேறு.

உருவும் வண்ணமு மோங்கு செயற்கையு
மரிவை மாாகட னாளு மனையவுந்
தெரிய நாடித தெளிந்தறி கிற்பரான்
மரபு தான்முதல் வான்குணத் தீறுமே. (௩௧)

ஏறு தேசந்தொ றீண்டிய மாதர்தம்
மூறு நீதியு முள்ளமுஞ் செய்கையும்
வேறு வேறு வினவியெல லோர்களுந்
தேற நிறபது தேச வியற்கையே. (௩௨)

தரித்த வாலை தருணை பிரவுடை
விருத்தை யாகும் வியன்பரு வங்களி
னுளாதத காலமு முளளததின் வேட்கையும்
பிரித்த றிந்திடப பெற்ற தவதகையே. (௩௩)

கோல மாமுக் குணத்தர்முப் பான்மையர்
நால்வ ரொண்மரா நாரியர் பற்றுற
வேனு மாடவ ரெய்துதற கேற்றபல்
கால முந்தெரி கிற்பது காலமே. (௩௪)

மக்கள் காமம் வடிவினில் வைகலும்
பக்கந் தோறு மிழிந்துயர் பான்மையாற்
புக்க தோரிடை நாடிப் புரையொரீஇத
தக்க செய்வதுஞ் சாற்றிய மேலதே. (௩௫)

பற்று ளோரையும் பறறிலர் தம்மையு
முற்று ளோரையு முற்றிலர் தம்மையு
மற்று ளோரையு மாந்தர்க டேற்றுமா
றுற்ற செய்கை யுளங்கொள் கருத்ததே. (௩௬)

வேறு.

இங்கிவை யாடவ ரியல்புஞ் சால்புறு
மங்கையர் பான்மையும் வகுத்த தன்னவர்
பொங்கிய புணர்வகை புணர்ச்சிக் கேற்பதோ
ரங்கிதம் பிறவுமே லறைய நின்றவே. (௩௭)

புல்லுதல் சுவைத்திடல் புணர்ந கக்குறி
பல்லுறன் மததனம் பயிலுந் தாடன
மொல்லொலி கரணமோ டுவகை யாதிய
வெல்லையில் புணர்நிலைக் கியைந்த வென்பவே. (௩௮)

வேறு.

விரைதலே சமந்தூக் கென்னும் வேகமு மூச்ச நீசம்
புரைதவிர் சமமென் றோதும் பொருணமையுங் குணத்திற்பற்றிப்
பரவுமை வகையி னீரைம் பகுதியாற் பிறவாற் சேர்த
லுரைதரு புணர்ச்சி யாகு முபரியு மனைய தொன்றே. (௩௯)

உறுத்தலே நெருக்கன் மெல்ல வுரோசுத லுறுதன் முன்னு
மறுத்தவிர் தருவு சூழ்ந்த வல்லியே மரமேற் கோடல்
செறித்தவெள் ளரிசி பாலார் தீம்புனல் செயிர்தீர் காட்சிப்
புறததிலோ ருறுப்பு றுத்தல் புணர்ச்சியிற புல்லற் பால. (௪௦)

வைத்தலே துடிகத லொற்று மரபொடபு விலங்கு சுற்றே
யுததர மதுக்க லுள்ளீ டோங்குசம் புடாதி தன்றாற்
பத்துட னென்று மேனைய பல்வகை யுறுபபு நாடி
முததிறத் தமிாத முண்டன் முன்மொழி சுவைத்த லாமே. (௪௧)

சுரிதக மெண்ணுட் டிங்க ளேமண் டலமே மஞ்ஞை
கிரலடி மூயலின் புன்கா னெய்தலி னிதழே வேங்கை
யுருகெழு நகவி ரேகை யுருவிலே மூறுப்பி லெனகும்
வரன்முறை நகததாற் றீட்டல் வளனுகிக் குறியதன்றே. (௪௨)

துவர்படு பவள மாலே சுனகமு டிகமே யேனக்
கவரடி மணிபோழ் வட்டக் கடிகண்டப் பிரத முற்று
மிவையல பிறவும போல வினனமு துண்ட தான
மவைதமி னெறியாற நந்த மழுத்தல்பற் குறிய தம்மா. (௪௩)

உரமுத லேந்தி லேம்பா லுணர்தொழின் முறையா லேற்பப்
பொருவரு புணர்ச்சி வேலே புடைத்திடல் புடைப்ப தாகுங்
கரிகர மாதி யாய கனங்குழை மகளிர வெஃக
மருவிய வழிபா டன்றே மததன மென்ப வல்லோர். (௪௪)

மயில்புற வன்னங் காடை வண்டுவா ரணஞ்செம் போத்துக்
குயிலென விசைக்கு மெட்டின் குரலினைப் பயின்று காம
ரியலுறு மகளிர பாங்க ரெய்துழி யிவையில் வேண்டுஞ்
செயல்வகை புரியு மாறு சிறந்தசீற் கார மாமே. (௪௫)

பாரியல் கிராமி யஞ்சேர்ப் பவுத்திக நாக பாச
மேரிய ளுகை ரீக மிந்திரா ணிகமே கூர்மஞ்
சாரித மாய்த மூர்ததஞ் சங்கிரா ணிகமண் டேகம்
பாரிசம் பிடிதஞ் சூலஞ் சுருமபிதம் பதும பீடம். (௪௬)

எண்டருஞ் சம்பு டம்வேட் டிதம்விசும் பிதமுற் புல்லம்
பிண்டிதம பீடி தம்மே பிரேதுகை யநுபா தந்தான்
புண்டதங் கடக மதத பத்மவா சனஞ்ச மூர்த்தங்
தண்டகம் லளிதம் வேணுச் சாரிதஞ் சமவே சன்னம். (௪௭)

ஆடவஞ் சமபு டத்தோ டமர்பரி வத்த கஞ்சங்
காடகந் தேனு கம்மற் கடகமைம் பதமே சானு
மாடமர் துகிலம் பீன மாதகிக மேகூர்ப் பன்னம்
பீடிதோ ருகமம் பீதம் பீடிகை யோடு பின்னும். (௪௮)

ஒட்டுவிக் கிரம மேகோ யூகக மென்னு நாற்பா
னெட்டுள திறத்தி னுனு மிவையல பிறவாற் முனு
மட்டமர் குழலி னாகண மகிழ்தர மதனூ றேருஞ்
சிட்டர்கள் புணரும் பான்மை சித்திரக கரண மாமே. (சகூ)

திணைநிலை மகளிர் தத்தந் திறங்களுஞ் சேர்தன் மாண்பு
மூணாகுவ ரெனினு மறம வொண்குழு வதனு ணின்ற
கணிகையிற் பரத்தை காமக் கன்னிய ரொழிந்தோர தம்மைப்
புணர்கையும் பிறவுந் தேர்தல் புலமையோர் கடனு மன்றே. (ருO)

முன்னுற மதன நூலின் முறையெலாந் தொகையிற் கூறி
யன்னதன் வகையுங் கூறி யகலமு மெடுத்துக் கூறிப்
பொன்னவ னிருத்த லோடும் புரந்தர னவற்றை யோர்ந்து
கன்னியைப் புணருங் காமக கலைமேற் கருத்தை வைத்தான். (ருக)

கொற்றவெங் குலிச வள்ளல் குரவனை யிறைஞ்சி யெந்தை
சொற்றிடு பான்மை யெலலாந் துணிவது வாகக் கொண்டேன்
மற்றொரு பொருளும வெஃகேன் வரமபிலா வின்பந் தன்னைப்
பெற்றனன் போது மென்னப் பெருமகிழ் வெய்திப் போனான். (ருஉ)

வேறு.

திரைசெறி கடலெனத் திளைக்கு மின்பநூ
லுரைசெய்து பொன்னவ னுவபபிற போந்திட
விரைசெறி தொங்கலான மேலைப பொன்னக
ரரசினை மதலைபா லாக்கி னனரோ. (ருங)

விண்ணுல காளுறும் வேந்தி யற்கையை
யண்ணலஞ் சயந்தனுக் கருளி யிந்திரன்
றண்ணுறு சசிமுகச் சசியைக் கூடியே
யெண்ணருமப் போகமுற றினிது வைகினான். (ருச)

அலைகட லமிர்தினை வெறுக்கு மாயிழை
யிலவித ழமுதமே யினிதென றுண்டிடுங்
கொலையயி ராவதந் துறக்குங் கோல்வளை
முலையயி ராவத முயங்கி மேவுமே. (ருரு)

வெல்குறும வலியுடை விருத்தி ரன்மிசைச்
செல்குறுந் தெய்வதத் தேரைச் சீறிடு
மொலகுறு நுசுபபினை யுடைய மங்கைத
னல்குலந் தேர்மிசை யசைந்து வைகுமே. (ருசு)

கருங்கடல் சூழ்புவி கவிழ்ந்து துன்புற
விரங்கிய விடிகொடி யிகழ்ந்து காய்ந்திடும்
பொருங்கணை விழியுடைப புலோம சைத்திரு
மருங்குன்மின் கொடியின்மேன் மகிழ்ச்சி கொள்ளுமே. (ருஎ)

இயற்படு தவமுனி யாக்கை யென்பினுற்
செயற்படு வச்சிரஞ் செங்கை நீத்திடு
மயிற்பெடை யன்னதோர் மடந்தை கண்ணெனு
மயிறபடை சேர்ந்திட வதனைத் தாங்குமே. (ருஅ)

இருணிற விசும்பினி லிடைய ருமலே
வருசிலை யிரண்டையு மறக்கு மாமலர்த்
திருநிகர் வனப்புடைத் தெய்வ மங்கைதன்
புருவவெஞ் சிலைகளே பொருளென் றுன்னுமால். (௫௯)

ஏந்தலம் புயவினை யிகழு மேந்திழை
கூந்தலம் புயன்மிசை யுவகை கூர்ந்திடும்
பூந்தரு வல்லியை முனியும் பூண்முலை
வாய்ந்திடு முரோமமாம் வல்லி புல்லுமே. (௬௦)

இத்திற மிந்திர னிந்தி ராணிபால்
வைத்திடு முளத்தினன் மறுமை யெய்தினுங்
கைத்திடு கருத்தினன் காமத் தின்பமே
துய்த்தனன மதனனூற் றுணிபு நாடியே. (௬௧)

வேறு.

அன்னதோர் நாளி லோர்நா ளமரர்கோ னுணை போற்றிப்
பொன்னகர் செங்கோ லோச்சிப் புரந்திடு சயந்த னென்போன்
றன்னயல் வந்து வைகுந் தாபத ரமரர் தம்முண்
முன்னுறு கின்ற வாசான் முகனெதிர் நோக்கிச் சொல்வான். (௬௨)

எந்தைகேண் மலரோ னாதி யியம்பிய வமரர் யாரு
மந்தமின் முனிவர் யாரு மாறறல்வெஞ் சூரன் றன்னால்
வெந்துய ருழந்து தொல்லை மேன்மையு மிழந்து தாழ
வந்தகா ரணம தென்கொ லென்றலு மறையோன் சொல்வான். (௬௩)

விண்ணவ ராயி னோர்க்கு மேதகு முனிவர் யார்க்கு
மெண்ணமில் சூரன் றன்னா லெய்திய தீமை யெல்லா
நண்ணலர் புரமுன் றட்ட நாதனை யன்றித் தக்கன்
பண்ணிய மகத்திற் புக்க பாவத்தால் விளைந்த தென்றான். (௬௪)

என்றலுஞ் சயந்தன் கேளா வீதுகா ரணமே லந்தப்
புன்றொழிற் றக்கன் வாழ்க்கை புரமெரி படுத்த தேவை
யன்றியே செய்த வேள்வி யாயிடை நிகழ்ச்சி யாவு
மொன்றற வுரைத்தல் வேண்டுஞ் சிறியனே னுணர்தற் கென்றான். (௬௫)

சயந்தனென் றுரைக்கும் வள்ளல் சாற்றிய துணரா வாற்ற
வயந்தனை யெய்தி வாழி மதலையே ளிதனை யென்னா
வியந்திடு மகத்தை தன்னுன் மிக்குறு தக்கன் காதை
நயந்தரு மொழியா லாசா னித்திற நவில லுற்றான். (௬௬)

ஆக திருவிருத்தம் ௪௨௧.

---

வசனம்.

அவுணர் குலத்தை வேரோடு களைந்து தனக்கு முன்போல் விண்ணரசு அருள்புரிந்த குமரநாயகன் திருவடியைத் தியானித்துக்கொண்டு, அமராவதிநகரத்தையாண்டுவரும் இந்திரன் ஒருநாள், தான் சூரபன்மனுக்குஅடிமைபட்டுச்செய்யத்தகாதகாரியங்களையெல்லாம் செய்ததையும் தன்பெருமைகுன்றினதையும் நினைத்து, இப்படிப்பட்ட அவமானங்களுக்குப் பாத்திரனுயும் இன்னமும் இப்போக

போக்கியங்களில் நான் மனம்வைப்பது தகுதியன்று. இனித்துறவறத்தை யடைந்து தவஞ்செய்து முத்திச்செல்வத்தை யடைவதே தகுதியென்று மனந்துணிந்தான், இந்தத் துணிவைத் தமது முற்றுணர்ச்சியால் அறிந்துகொண்ட பிருகற்பதி பகவான் இந்திரனைநோக்கி, தேவராஜனே! நீ யெண்ணின எண்ணத்தை ஆராயுமிடத்தில் உன்னைப்போன்ற பித்தன்ஒருவ னுலகம் பதினான்கினு மிருப்பானென்று நான் நினைக்கவில்லை. இப்படிப்பட்ட பெருஞ்செல்வ நுகர்ச்சியை வெறுத்துத் துறவறம்பூண்டு நீ பெறப்போகிற இன்பம யாதோ அறியேன். முத்தியுலகச்செல்வம் இந்த இந்திரச்செல்வத்துக்கு நிகராகுமோ? இந்தச் செல்வத்தை ஐம்பொறிகளை யொறுத்தடக்கவேண்டாமலே நுகரலாகும். முத்திச்செல்வத்தை விரும்பினால், துறவுபூண்டு ஐம்பொறிகளையடக்கி, உணவு முதலியவற்றை வெறுத்துச் சருகுசலபக்ஷணம்பண்ணி, துயில்முதலியவைகளாகிய சுகத்தை வெறுத்துப் படாதபாடுகளெல்லாம் படவேண்டும்; அப்படிபட்டும் அந்தத்தவம் கைகூடுவது மிகவும்துர்லபம். ஆகையால்,மாதர்போகமே வீடுபேறுரும், இதையறியாத அறிவிலிகள் மோக்ஷமென்று ஒரு பெருங்கதி யிருக்கின்றது; அதிற் சிறந்ததொன் றிருக்கவில்லையென்று சிலர் சொல்லிப்புலம்புவார்கள். அதை நம்பவேண்டாம். இந்த மாதரது ஏற்றத்தைக்குறித்துச் சொல்லுகிற மதநாகமம் என்கிற நூலொன்றுளது, அதன் வரலாற்றைச் சொல்லுகிறேன்கேள். இந்த மதநாகமம் என்னும்நூலைக் கைலாயமலைக் காவலனாகிய நந்திப்பெருமான் மிகவும் விரிவாயருளினான். சில நாளைக்குப் பிறகு அதை நூற்றெட்டுச் சாகைகளாகக் குறுக்கினார்கள். அந்தச் சாத்திரக் கருத்தின்படி நடக்கிறவர்களே மஹா புருஷராவர். மாதரின்பமே முத்தியின்பம் என்றிவ்வாறு போதித்து இந்திரனது மனம் மாதரிடத்துப் பதியும்படி செய்தலும், அவன் அதற்கு உடன்பட்டு, தான் சிறந்ததாயெண்ணின துறவறத்தை யிகழ்ந்து இந்திராணியின் போகந் துய்த்திருந்தான். அப்போது இந்திரன் மகனாகிய சயந்தன் பிருகற்பதியை நோக்கி வணங்கி, எம்பெருமானே! சூரபன்மனுக்கு என் பிதா முதலானவர்கள் பயந்து வருந்தவேண்டியதற்குக் காரணமென்னென்று வினவ, பிருகற்பதி பகவான், அந்தச் சயந்தனை நோக்கி, தேவர்களுக்கும் சூரபன்மனால் நேரிட்ட துன்பங்களெல்லாம் பரமசிவனை யொழித்துத் தக்கன்செய்த யாகத்திற்போய் அவனுக்குதவிசெய்த தீமையாலேயாம் என்றுசொல்ல, அதுகேட்ட சயந்தன், அப்படியானால் அந்தத் தக்கன் யாகஞ்செய்த வரலாறு முழுதும் அடியேனுக்கு விவரமாய்ச் சொல்லவேண்டுமென்று வணங்க, பிருகற்பதிபகவான் சொல்லத்தொடங்கினார்.

இந்திரபுரிப்படலம் முற்றிற்று.

---

## தேவகாண்ட முற்றுப்பெற்றது.

---

ஆ காண்டம் ஐந்துக்குத் திருவிருத்தம் அ,உஎகூ.

கச்சியப்பசிவாசாரியர் திருவடிவாழ்க.

---

உ

திருச்சிற்றம்பலம்

---

ஆறாவது

# தக்ஷ காண்டம்.

## உபதேசப்படலம்.

மாயையின் வலியோ னாகி மான்முத லோரை வென்றே
யாயிரத் தோரெட் டண்ட மரசுசெய் துகநூற் றெட்டுக்
காயம தழிவின் றாகிக் கடவுளர்க் கலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற குமரன்றாள் சென்னி வைப்பாம். (௧)

உலகினுண் மேல தாகி யோங்குபே ரொளியாய் வான்மேற்
றலைமைய தாகி வைகுஞ் சத்திய வுலகந் தன்னிற்
புலனுணர் முனிவர் தேவர் புதல்வர்கள் புடையிற் போற்ற
மலரயன் றனது கோயின் மன்றில்வீற் றிருந்தா னன்றே. (௨)

இருந்திடு காலை வேதா யாவையு மளிப்ப மேனாட்
டெரிந்தருள் பதின்ம ராகுஞ் சீர்கெழு குமரா தம்முட்
பொருந்திய தக்க னென்னும் புந்தியின் மேலோன் முன்செய்
யருந்தவ நெறியா லீதொன் றையனை வினவ லுற்றான் (௩)

தேவரின் முதலவ ராகிச் சிற்குணத் தலைவ ராகி
மூவரி னுயர்ந்தோ ராகி முடிவிலா வொருவ ராகி
யோவற வுயிர்க டோறு முயிரென வுறைவோ ராகி
மேவினர் தம்மைத் தேற விளம்புதி மேலோ யென்றான். (௪)

என்றுதன் மைந்த னிவ்வா றியம்பலு மலரோன் கேளா
நன்றிது மொழிவன் கேட்டி நாரண னானும் யானு
மன்றம ரியற்று மெல்லை யழலென வெழுந்து வானிற்
சென்றதோர் சிவனே யார்க்கு மேலவன் றெளிநீ யென்றான் (௫)

தருசெயல் வல்லோ னீது சாற்றலுஞ் செயலோர் மூன்றி
னிருசெயல் புரியு நீவி ரேதில ராகப் பின்ன
ரொருசெயல் புரியு மீச னுங்களுக் கிறைவ னாகி
வருசெய லென்னே சிந்தை மயக்கற வுரைத்தி யென்றான். (௬)

தற்புகழ் கருத்தின் மிக்க தக்கனீ துரைத்த லோடுஞ்
சிற்பர னிலைமை யன்னோ னருளினாற் றெரிந்த வேதாச்
சொற்படு மறைகண் முன்னீ துகளறக் கற்றுத் தூய
நற்பொரு டெரிந்த வாறு நன்றுநன் றென்ன நக்கான். (௭)

பின்னுற முடிப்பான் றன்னைப் பிரானெனத் தேற்றுந் தன்மை
யென்னென வுரைத்தி மைந்த வெங்களைச் சுரரை யேனைத்
துன்னிய வுயிர்க டம்மைத் தொலைவுசெய் திடுவ னீற்றி
லன்னவ னென்னின் முன்ன மளித்தவ னவனே யன்றோ. (அ)

அந்தரா ளொருவ னாகி யாருயிர்த் தொகையைத் தொன்னாள்
வந்தவா றுருடங்கச் செய்து மன்னியே மீட்டு மன்னை
தந்தையா யுயிர்கட்கேற்ற தனுமுத லளிக்கு முக்க
ணெந்தைதன் செய்கை முற்று மிலையதென் றிசைக்கற் பாற்றோ. (கூ)

செங்கண்மா றன்னை யென்னைத் திண்டிறன் மொய்ம்பி னல்கி
யங்கண்மா ஞாலங் காப்பு மளிப்பது முதவி யாமு
முங்கள்பா லிருத்து மென்றெம் முயிருணின் றியற்று நின்று
னெங்களான் முடியுஞ் செய்கை யாவது மில்லை கண்டாய். (க0)

உயிருணின் றியற்ற லன்றி யுற்றநஞ் சிந்தை யுள்ளு
மியன்முறை வழாது காப்போ னிருவிழி யகத்து மானன்
மயலுறு பொழுது மெம்பால் வந்தருள் செய்வன் றூனோர்
செயல்புரி கின்றான் போல வெம்மொடு செறிவ னன்றே. (கக)

எள்ளுறு மெண்ணெ யென்ன வெறிமணி யரவ மென்னக்
கள்ளுறு போது கான்ற கடியெனச் சலாகை தன்னிற்
றள்ளுற வரிய சோதி தானென வுலக மெங்கு
முள்ளொடு புறமு மாகி யொருமையாற் பரவு மன்றே. (கஉ)

வேதமே முதலா வுள்ள வியன்கலை யனைத்துந் தொன்னு
ளோதினு னவனே யெங்கட் குரைத்திட வுணர்ந்தா மன்றே
யீதுநீ யவற்றிற் காண்டி யாருமொன் றூகக் கொண்டாய்
பேதையோ பெரிது மென்னப் பிதாமக னினைய சொற்றான். (கங)

அவனிது புகற லோடு மருண்மக னிசைப்பான் மேலாஞ்
சிவனருள் வேதம் பூதத் திறத்தையு முயிர்க ளோடு
மெவரையும் பிரம மென்றே யிசைப்பதென் னெனது நெஞ்சங்
கவலுறு கின்ற தெந்தை கழறுதி கடிதி னென்றான். (கச)

என்னலுங் கமலத் தண்ண லியாவருந் தெரித றேற்று
வுன்னரும்பெற்றி யீதென் றுணர்தரக் கேட்டி யன்னன்
சொன்னதோர் மறைக டம்மிற் றுணிபுகே ளிறுதி யில்லா
முன்னவற் காத லுண்மை யொழிந்தன முகம னுமால். (கரு)

ஆதலா லீச னல்லா வனைவர்க்கு முயிர்க்கு மைந்தாம்
பூதமா னவைக்கு மேற்றம் புகலுதன் முகம னாகு
மோதலா மேல தாக வொருபொருள் புகழ வேண்டின்
வேதபா ரகரை யன்றோ யானென விளம்பு கின்றார். (கசு)

யாதொரு பொருளை யாவ ரிறைஞ்சினு மதுபோய் முக்க
ணாதியை யடையு மம்மா வங்கது போலத் தொல்லை
வேதம தரைக்க நின்ற வியன்புக ழனைத்து மேலா
னாதனை யணுகு மெல்லா நதிகளுங் கடல்சென் றென்ன. (கஎ)

கேளினி மைந்த வேதக் கிளையெலா மியம்பு கின்ற
சூளுரை சிவனே யெல்லாந் தோற்றுவித் தளித்து மாற்றி
மீளவுந் தருகின் றானும் வியனுயிர்க் கருளை நல்கி
யாளுநா யகனு மாதி யந்தமி லோனு மென்னும். (௧அ)

அத்தனும் பகவன் றானு மருவமு முருவு மாகுஞ்
சுத்தனு முணர்தற் கொண்ணுச் சோதியு மியாண்டு மேவுஞ்
சித்தனு மநாதி தானுந் தேவர்க டேவு மென்று
நித்தனு முயிர்க்கு ணீங்கா நிருத்தனு மவனே யென்னும். (௧௯)

மூன்றெனு முலகந் தன்னின் முளைத்திடு பொருளை யெல்லா
மீன்றருள் புரியுந் தாதை யெனுந்திரயம் பகனும் யார்க்குஞ்
சான்றென நிற்கின் றோனுந் தானுவும் பரனுந் தன்னைப்
போன்றவ ருயர்ந்தோ ரில்லாப் புங்கவன் றானு மென்னும். (௨௦)

அண்ணலு மேகன் றானு மளப்பருங் குணத்தி னானுங்
கண்ணனு மயனுந் தம்மாற் காணிய நில்லான் றானும்
பெண்ணொடா ணலிய தென்னும் பெற்றியி லோனும் யாரு
மெண்ணிய வெண்ணி யாங்கே யீபவன் றானு மென்னும். (௨௧)

விதிமுத லுரைக்க நின்ற வியனுயிர்த் தொகைகட் கெல்லாம்
பதியென வருளுந் தொன்மைப் பசுபதி தானு மன்னோர்க்
கதிகனென் றெவருந் தேற வாங்கவர் துஞ்ச வெந்த
பொதிதரு பலியு மென்பும் புனைபவன் றானு மென்னும். (௨௨)

ஊன்புகு மெவரை யுந்தன் னெண்குணத் தொடுக்கித் தானே
வான்புக லாகி நின்று மற்றவர் குணங்க ளோடு
தான்புக லில்லா தோனுந் தன்னிய லினைய தென்றே
யான்புக லரிய தேவு மீசனு மவனே யென்னும். (௨௩)

அன்றியு மொன்று கேண்மோ வம்புய னாதி யாகி
நின்றவர் தம்மை யெல்லா நீக்கியச் சிவனென் றுள்ள
வொன்றொரு முதல்வன் றனே யுய்த்திடு முத்தி வேண்டி
னென்றுமஃ தியம்பிற் றென்னின் யாவரே தேவ ராவார். (௨௪)

பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையு மென்றும்
விரவிய துயர்க்கி றெய்தி வீடுபே றடைது மென்ற
லுருவமில் விசும்பிற் றோலை யுரித்துடுப பதற்கொப் பென்றே
பெருமறை யியம்பிற் றென்னிற் பின்னுமோர் சான்று முண்டோ. (௨௫)

இன்னமும் பலவுண் டன்னாற் கியம்பிய மறையின் வாய்மை
யன்னதை யெனக்கு முன்னி யறையொணு தறைவ னென்னிற்
பன்னெடுங் காலந் தேயும் பகரினு முலவா தென்பான்
முன்னமீ துணர்ந்தா யேனு மோகமுற் றாய்கொ லையா. (௨௬)

காரெழில் புலாயு மேனிக கண்ணனை யென்னைப் பின்னை
யாரையும புகழும் வேத மரன்றனைத் துதித்த தேபோ
லோருரை விளம்பிற் றுண்டோ வுரைத்தது முகம னென்றே
பேருல கறியு முன்னும பின்னரும் விலக்கிற் றன்றே. (௨எ)

நான்மறை தனிலோர் பாக நாரமார் கடவுட் சென்னி
மேன்மைய தியம்பு மெய்ம்மை விண்ணவா தம்மை யேனைப்
பான்மைகொள பூதந் தன்னைப பலபொரு டனையும் பாதி
தான்மொழிந் திடுமா லீது தவறல வுணர்தி தக்கோய். (௨௮)

நம்மையும் பரமென் றுன்னி நாதனிற் சிறப்புச் செய்யும்
வெம்மைகொ ணெஞ்சர் தீரா விழுமவெந் நிரயம் வீழ்வர்
தம்மையஃ தெடுத்தல செய்யா சமமெனப் புகல்கிற் போர்க
ளெம்மையுந் துயர மென்னு மிருங்கடற் படுப்ப ரன்றே. (௨௯)

கானுறு புலித்தோ லாடைக் கண்ணுதற் கடவுட் கன்ப
ரானவ ரென்று மன்னுற் கடிததொழில் புரிந்து வாழும
வானவ ரென்று மெமமை வழுத்தினாக் கருள்வோ மல்லா
மேனையா தம்மைத் தெவ்வென் றெண்ணியே யிருத்தும் யாமே. (௩0)

பதியரன் பாசந் தன்னிற் பட்டுழல் பசுநா மென்றே
விதியொடு மறைகள் கூறு மெய்ம்மையைத் தெளிய வேண்டி
னிதுவென வுரைபபன் யாங்க ளிவ்வர சியற்ற வீச
னதிகழ லருச்சித தேத்து மாலயம் பலவுங் காண்டி. (௩௧)

அவனருள் பெறுது முத்தி யடைந்தன ரில்லை யல்லா
லவனரு ளின்றி வாழு மமரரும் யாரு மில்லை
யவனரு ளெய்தி னெய்தா வருமபொரு ளில்லை யானை
யவனல திறைவ னில்லை யவனைநீ யடைதி யென்றான். (௩௨)

---

வசனம்.

பிரமலோகத்தில, பிரமன் சகல சாம்ராஜ்யஙகளோடு வீற்றிருந்தான். அப்பொழுது அவன் மக்களில் ஒருவனாகிய தக்கன, தன் தந்தையாகிய பிரமனைநோக்கி, இவ்வுலகஙகளுக்கெல்லாம மூலகாரணன் இனனானென்று எனக்குத தெரிவிககவேணடுமென்றான். அதுகேட்ட பிரமன், அத் தக்கனை நோக்கி, முற்காலத்தில நானும திருமாலும அகங்கரித்து நான் பெரியன் நான் பெரியன் என்று சொல்லிப் பொருதபோது, எங்க ளிருவருக்கு மிடையே நெருப்புருவாய்த் தோன்றி எஙகள அகஙகாரததை யொழித்தவனாகிய சிவபெருமானே எலலா வுலகஙகளுக்கும மூலகாரணன் என்றான். அதைககேட்ட தக்கன், படைத்தல் காத்தல்களையுடைய வுங்களைக்காட்டிலும அந்தச் சஙகாரகாததாவாகியசிவபிரான் எப்படி சிறந்தவனானன என்று கேட்க, பிரமன் தக்கனை நோக்கி, அந்தச் சிவபெருமான் எள்ளிலெணணெய்போலவும், பூவில் மணமபோலவும எலலாச் சீவராசிகளுக்குள்ளும் வியாபிதது விளஙகுவான், வேதாகமப் பொருள்களையெல்லாம் எங்களுக்குப் போதித்தவன் அவனே, அவனன்றி எங்களால் ஒரு அணுவு மசையாது என்று கூற, தக்கனவன் பிரமனை நோக்கி, அப்படியாயின், அவ்வேதங்கள் பூதப்பிரேத பிசாசங்களையும் பிரமமெனப் பேசுவ தென்னையென, பிரமன் சொல்லுகிறான், புதல்வனே! எல்லாவுயிர்களுள்ளும் விளங்குவோன் அவனாதலால், அந்தப் பூதப்பிரேதாதிகளும் பிரமமென்று சொல்வதற்குத் தடை யாது, சர்வசங்காரகாலத்தில் எல்லா வுயிர்களையும் சுட்டு நீறாக்கி அதனைத் தன் திருமேனிமீது பூசிக்கொள்வோனாதலால், அவனிற் சிறந்தவரும் எனறும் அறியாதவரும் யாவர்? அந்தப்

பரமசிவனது திருவடியை யடைந்தவருக்கே முத்தியுண்டாகும; அறிவில்லாத சிலர் எம்மோடு அவரையும் சமமாக்குவர், அது அவர்களுக்கு மீளாத நரகுக் கேதுவாகும்; அவரை யடையாமல் முத்தியடைந்தவர் ஒருவருமிலர்; அவரை யடுத்தவர்க்குக் கிடையாத பொருள் ஒன்றுமில்லை. என்று பலவகையாய்ச் சிவனது பரத்துவத்தையே போதித்தான்.

உபதேசப்படலமுற்றிற்று.



# தக்கன்றவஞ்செய்படலம்,

தந்தை யிவ்வகை யுரைத்தலுங் கேட்டுணர் தக்கன்
முந்து வீடுசேர் நெறியினை முன்னலன் முக்க
ணெந்தை யாலயன் முதலவா தம்மினும் யானேற்
றந்த மில்வளம் பெறுவனென் றுன்னின னகததுள். (௧)

ஏத வல்வினை யுழந்திடு மூழினு லிதனைக்
காத லோடுனித் தந்தையை வணங்கிநீ கழறு
மாதி தன்னையான் பரமென வறிந்தன னவன்பான்
மாத வத்தினாற் பெற்றிட வேண்டினன் வளனே. (௨)

கணிப்பின் மாதவம் புரிதர வோரிடங் கடிதிற்
பணித்து நல்குதி விடையென நான்முகப பகவ
னிணைப்பி லாததன் மனத்திடைத் தொலைநா ளெழுந்த
மணிப்பெ ருந்தடத் தேகென விடுத்தனன மன்னோ. (௩)

ஈச னல்லரு ளன்னதோர் மானத மென்னும்
வாச நீர்த்தடம் போகியோர் சாரிடை வைகி
வீசு கான்மழை யாதபம் பனிபட மெலியாப்
பாச நீக்குந ராமென வருந்தவம் பயின்றான. (௪)

காலை நேர்பெற வோட்டியே கனைவினை மூட்டிய
பால மார்பயன் வீட்டிய தன்னுறு ப்படிவத்
தேனு மன்பினின் மஞ்சன மாட்டியே யிறைக்குச்
சீல மாமலர் சூட்டியுட் பூசனை செய்தான். (௫)

சுத்த நீடிய தன்னுள மொருமையிற் றொடர
வித்தி றத்தினு லெம்பிராற் கருச்சனை யியற்றிச்
சித்த மேலவ னுமமும் விதிமுறை செப்பிப்
பத்து நூறியாண் டருந்தவம் புரிந்தனன் பழையோன். (௬)

அன்ன மூர்த்திசே யன்னமா தவஞ்செயு மதனை
முன்னி நல்வள னுதவுவான் மூரிவெள் ளேற்றிற்
பொன்னின் மால்வரை வெள்ளியங் கிரிமிசைப் போந்தா
லென்ன வந்தன னுமையுட னெம்மையா ளிறைவன். (௭)

வந்த செய்கையைத் தெரிதலும் விரைந்தெழீஇ மற்றென்
சிந்தை யெண்ணமு முடிந்தன வாலெனச் செப்பி
யுந்து காதலுங் களிப்புமுள் புக்குநின் றுலவ
வெந்தை தன்னடி பரவுவல் யானென வெதிர்ந்தான். (அ)

சென்று கண்ணுத லடிமுறை வணங்கியே சிறப்பித
தொன்று போலிய வாயிரந் துதிமுறை யுரையா
நின்ற காலையி லுன்செயன் மகிழ்ந்தன நினக்கென்
னின்று வேண்டிய தியம்புதி யாற்கடி தெனலும். (க)

ஆற்று தற்கருந் தோன்மைய னாகியோ னமலன்
பேற்றின் வேண்டுவ கொள்கென விசைத்தலும் பிறவி
மாற்று முத்திய திரந்திலன் றால்விதி வழியே
யேற்ற புந்தியுஞ் சேறலின் மயங்கியீ திசைப்பான். (க0)

வேறு.

நீணி லம்பெரு வைப்பு நிகரிலா
வீணை வல்லவ ரேனையர் மேவிய
சேணு மாலய னாருந் திசையுமென்
னாணை செல்ல வளித்தருள் செய்தியால். (கக)

உன்னை வந்து வழுத்து முயிரெலா
மென்னை வந்து வழுததவும் யானினி
நின்னை யன்றிநெஞ் சாலும் பிறர்தமைப்
பின்னை வந்தியாப் பெற்றியு மீதியால். (கஉ)

ஆய தேவ ரவுணர்கள் யாரும்யா
னேய செய்கை யியற்றவு மெற்குறற்
சேயி னோர்களுஞ் சிற்றிடை மாதரு
மாய்வில் கொள்கையின் மல்கவு நல்குதி (கங)

ஆதி யாகி யனைத்தையு மீன்றநின்
பாதி யான பராபரை யான்பெறு
மாத ராக மறையவ னாகிநீ
காத லாகக் கடிமணஞ் செய்தியால. (கச)

என்று தக்க னியம்பலு மிங்கிது
நன்று னக்கது நல்கின னன்னெறி
யின்றி யென்னி னிலைக்குமிச் சீரெனு
மன்று ளாடிய வானவன் போயினன். (கரு)

ஈச னவ்வர மீந்தன னேகலு
நேச மோடவ னீர்மையைப போற்றியே
தேசின் மிக்க சிறுவிதி யாரினும்
பேசொ ணாத பெருமகிழ் வெய்தினன். (கசு)

ஓகை மேயவ னேதிம வூர்திமே
லேகு மையனை யெண்ணலு மச்செய
லாக மீதுகண் டன்னவன் மங்கையோர்
பாக னீந்த பரிசுணர்ந் தானரோ. (கஎ)

வேறு.

பெற்றிடு மதலை யெய்தும் பேற்றினை யவன்பான் மேல்வந்
துற்றிடு திறதனை யெல்லா மொருங்குற வுணர்வா னடித
தெற்றென வுணர்ந்து தக்கன் சிவனடி யுன்னிப் பன்னா
ணற்றவம் புரிந்த வாறு நன்றேன வுயிர்த்து நக்கான். (௧௮)

முப்புர முடிய முனனுண் முளிந்தவ னிலைமை யான
மெய்ப்பொருள் பகர்ந்தேன் மைந்தன் வீடுபெற் றுய்ய வன்னு
னிப்பரி சானு னந்தோ வென்னினிச் செய்கே னிம்பங்
கைப்பது போமோ நாளுங் கடலமிர் துதவி னாலும். (௧௯)

ஆலமார் களத்தோன் றனே யாதியென் றுணர்ந்து போந்து
சாலவே யிந்நாள் காறுந் தலையதாந் தவத்துட் டங்கி
ஞாலமே லென்று நீங்கா நவையொடு பவமும் பெற்றான்
மேலைநாள் வினைக்கீ டுற்ற விதியையார் விலக்க வல்லார். (௨௦)

செய்வதென் னினியா னென்னாச் சிந்தையி னவலஞ் செய்து
மைவளா தீய புந்தி மைந்தனை யடைந்து வல்லே
மெய்வகை யாசி கூறி மேவலும் வெய்ய தக்க
னிவ்விடை நகர மொன்றை யியற்றுதி யைய வென்றான். (௨௧)

என்னவத் தக்கன் கூற விமைப்பினி லமைப்ப னென்றே
கொன்னுறு கமலத தண்ணல் குறிப்பொடு கரங்க ளாலே
தன்னக ரென்ன வொன்று தக்கமா புரியீ தென்றே
பொன்னகர் நாணுக் கொள்ளப் புவியிடைப் புரிந்தா னன்றே. (௨௨)

அந்தமா நகரந் தன்னி லருந்தவத் தக்கன் சென்று
சிந்தையு ளுவகை பூததுச் சேனகர் தன்னு ளொன்று
மிந்தவா றணிய தன்றா லிணையிதற் கிஃதெ யென்னாத்
தந்தைபா லன்பு செய்து தன்பெருங் கோயில் புக்கான். (௨௩)

தன்பெருங் கோயி லெய்தித் தவமுனி வரர்வந் தேத்த
மன்பெருந் தன்மை கூரு மடங்கலந் தவிசி னும்ப
ரின்புறு திருவி னோடு மினிதுவீற் றிருந்தா னென்ப
பொன்புனை கிரியின் மீது பொலஞ்சுடர்க் கதிருற் றென்ன. (௨௪)

கேசரி யணையின் மீது கெழீஇயின தக்க னெண்டோ
ளீசனல் வரம்பெற் றுள்ள வியற்கையை யேமஞ் சான்ற
தேசிக னாகும் பொன்போய்ச் செபபலுந் துணுக்க மெய்தி
வாசவன் முதலா வுள்ள வானவா யாரும் போந்தார். (௨௫)

வானவர் போந்த பான்மை வரன்முறை தெரிந்து மற்றைத்
தானவர் குரவ னேனை றயித்தியர்க் கிறையைச் சார்ந்து
போனதுன் னவல மஞ்சேல் புரந்தரன் றனக்குத் தக்க
னனவன் றலைவ னானு னன்னவற் சேர்தி யென்றான். (௨௬)

சேருதி யென்னு மாற்றஞ் செவிதனிற் பெய்தக் கேளா
வாரமிர் தருந்தி னன்போ லகமுறு முவகை பொங்க
மேருவி னெருசா வைகும் வெந்திற லவுணர் கோமான்
காரென வெழுந்து தொலலைக் கிளைஞரைக் கலந்து போந்தான். (௨௭)

ஆளரி யேறு போலு மவுணர்கோன் சேற லோடும்
வாளுறு கதிர்ப்புத் தேளு மதியமு மற்று முள்ள
கோளொடு நாளு மேனைக் குழுவுறு கணத்தி னோரு
நீளிருந் தடந்தேர் மீது மானத்து நெறியிற் சென்றார். (உ௯)

மங்குறோய் விண்ணின் பாலார் மாதிரங் காவ லோர்க
ளங்கத னிலயத் துள்ளா ரனையவர் பிறரு முற்றா
ரிங்கிவர் யாருந் தக்க னிணையடி வணங்கி யீசன்
பொங்குபே ரருளி னாற்றல் புகழ்ந்தன ராகி நின்றார். (௩௰)

அவ்வகை முளரி யண்ண லாதியா மமரர் தத்தஞ்
செய்வினை யாக வுன்னி வைகலுஞ் செறிந்து போற்ற
மெய்வகை யுணராத் தக்கன் வியன்மதிக் குடையுங் கோலு
மெவ்வகை யுலகுஞ் செல்ல விருந்தர சியற்றல் செய்தான். (௩௧)

ஆ திருவிருத்தம் ௬௨.

---

வசனம்.

பிதாவாகிய பிரமனவ்வாறுகூறக்கேட்ட தக்கன் பிதாவை நோக்கி ஐயனே! உன் சொல்லால் ஐயமொழிந்து சிவனே பரனெனத் தெளிந்தேன்; எனக்கு முத்தி வேண்டியதில்லை; மேலானவனாய் நான் விளங்கும்பொருட்டு அந்தப் பரமனைக் குறித்துத் தவஞ்செய்யத் தகுந்த இடம் இன்னதென்று காட்டியருள வேண்டுமென்றான். அதற்குப் பிரமன், மானதவாவியினிடஞ் சேர்ந்து தவஞ்செய்யலாமென்றான். அப்படியே மானதவாவிக்கரையையடைந்து ஆயிர வருடங்கள் அரிய தவத்தைச் செய்துகொண்டிருந்தான். அந்தத் தவத்திற்குத் திருவுள்ளங் கரைந்த பரமசிவன் அவனுக்குப் பிரத்தியக்ஷமா யெழுந்தருளி, உனக்கென்ன வேணுமென்று வினவ, தக்கனவன் இறைவனை நோக்கி, சுவாமி! திருமால் முதலான தேவர்கள் என் ஆணையிற்கட்டுப்பட்டு நடக்கவும், நற்புதல்வரைப்பெறவும், அளவற்ற செல்வத்தைப் பெறவும் கருணைசெய்யவேண்டும். இதுவுமன்றி, உனது இடப்பாகத்திலிருக்கிற உமாதேவியானவள் என் பெண்ணாய்ப் பிறக்கவும் நீ மறையவன் உருவமாய் வந்து அவளை மணஞ்செய்துகொள்ளவும் வேணுமென்றான். அதற்குப் பரமசிவன் மகிழ்ந்து அப்படியே யாகுகவென்றருளிச் செய்து, உன் மனம் நமது பததிமையிற் குறையுமாயின் நமது வரம உனக்குப் பலிக்காதென்றருளிச் செய்தார்.

பிறகு தக்கன் மனமகிழ்ந்து தன் தந்தையாகிய பிரமனை நினைக்க, அவனும் தக்கனெதிரே தோன்றி ஆசீர்வதித்தான். தக்கன் பிரமனை நோக்கி, நானிருக்கத் தகுந்த சிறந்த நகரமொன்றை நிருமித்துத் தருகவென்றான். அப்படியே பிரமன் அதி விசித்திரமான நகரமொன்றை யேற்படுத்திக் கொடுக்க, அதில் வீற்றிருந்தான். இந்தச் செய்தியை அவுணர்க்கரசன் கேள்விப்பட்டு அளவற்ற மகிழ்ச்சியடைந்து தக்கமாபுரிக்கு வந்து தக்கனைக்கண்டு நண்புகொண்டு துயரற்றிருந்தான். அந்தத் தருணத்தில் இந்திரன் முதலான தேவர்களும் ஏனையோரும் வந்து நெருங்கிப் புடை சூழ்ந்திருந்தார்கள். தக்கன் வெண்கொற்றக் குடை நிழலிலிருந்து முச்சகங்களையும் அரசாண்டிருந்தான்.

தக்கன்றவஞ்செய்படலம் முற்றிற்று.

---

# தக்கன்மகப்பெறுபடலம்.



ஆங்கவன் றேவி யானா ளருந்ததிக் கற்பின் மிக்காள்
வாங்கிய நுசுப்பி னல்லாண் மறைக்கொடி யெனுநா மத்தாள்
பூங்கம லத்துப் புத்தேள் பொன்னடி தன்னில் வந்தா
ளோங்குதொல் லுலகுக் கெல்லா மொருதனி முதல்வி யானாள். (௧)

வேறு.

சேயிழை யவளொடு செறிந்து புல்லியே
மீயுயர் கமலமேல் விரிஞ்சன் காதலன்
மாயிரும் பணிபதி மணிக ளீன்றென
வாயிர மைந்தரை யருளி னானரோ. (௨)

அப்பெரு மைந்தர்க ளாயி னோர்க்கெலா
முப்புரி நூல்விதி முறையி னாற்றியே
செப்பரு மறைகளின் றிறமு மீந்துபின்
னிப்பரி சொன்றினை யிசைத்தன் மேயினான். (௩)

நல்லதோர் மானத நணுகி நீவிர்க
ளெல்லிரு மீசனை யெண்ணி நோற்றிரீஇப
பல்லுயி ருந்தரும் பரிசு பெற்றிவட்
செல்லுதி ராலெனச் செப்பி யேவினான். (௪)

ஏயின காலையி லிறைஞ்சி மைந்தர்கள்
போயினர் மானதப் பொய்கை புக்கன
ராயிடைப் படிந்தன ரரனை யுன்னியே
மாயிரு நோன்பினை யியற்றி வைகினார். (௫)

நேரற வின்னண நெடிது நோற்புழி
நாரத னென்பவ னண்ணி யாயிடை
வாரியு ளாறறவும் வருந்து கிற்றிராற்
காரியம் யாவது கழறு வீரென்றான். (௬)

என்னலு முனிவகே ளியாங்க ணல்கிடு
முன்னுற நல்குவான் முயன்று முக்கணன்
றன்னடி யுன்னியே தவத்தை யாற்றுது
மன்னது மெந்தைதன் னாணை யாலென்றார். (௭)

அறிந்திடு முனிவர னதனைக் கேட்டலுஞ்
செறிந்திடு கரத்தொடு செங்கை தாக்குறா
வெறிந்தன னகைத்தன னிதுகொ லீசனாற்
பெறும்பரி சேயெனப் பின்னுங் கூறினான். (௮)

ஈசனை யேகினை யிறைஞ்சி யேத்தியே
பேசரு மருந்தவம் பிடித்தது மூவகைப
பாசம தகனெறி படரச் சிந்தியீ
ராசுறு படைபபினுக் கார்வஞ் செய்திரோ. (௯)

சிறப்புள வருந்தவஞ் செய்து நீரினி
யுறப்படு கதிமுறை யுரைப்பக் கேட்டிராற்
பிறப்புள திடருள தன்றிப் பின்னரு
மிறப்புள ததுநுமக் கினிய தாகுமோ. (௧௦)

இன்றுநீர் வெஃகிய தியற்று நான்முகன்
றன்றலை யைந்தினி லொன்று சங்கரன்
பொன்றிகழ் கரங்கொளப் புகுந்த தீமையு
நின்றதோர் பழியையு நினைக்கி லீர்கொலோ. (௧௧)

என்னல திறையவ ரில்லை யார்க்கும்யான்
முன்னவ னென்றுநான் முகத்தன் மாலொடு
பன்னெடு நாளமர் பயின்று சோதிகண்
டன்னம தானது மறிந்தி லீர்கொலோ. (௧௨)

நேயமெண் ணுற்றென நிறைந்த கண்ணுத
னாயகன் விதித்திட நம்மில் யாவையு
மாயவென் றகந்தையுற் றமர்வ னன்னவன்
மாயமென் றுரைத்திடுந் தனையின் வன்மையால். (௧௩)

பற்றொடு முழுதுயிர் படைக்கும் பான்மையாற்
பெற்றிடு பயனெவன் பெருமை யல்லது
நற்றவ முனிவிர்கா ணங்கி தென்றொரு
பொற்றனை தம்பதம் பூட்ட லாகுமோ. (௧௪)

எத்துணை யெத்துணை யின்பம் வெண்டுநர்க்
கத்துணை யலக்கண்வந் தடையு மாங்கது
மெய்த்திற நீவிரும் விதியி னிற்றிரேற்
கைத்துறு துயரெனுங் கடலிற் சார்திரால். (௧௫)

அன்றியு மீசனை யயர்த்தி யாமிறை
யென்றுள முன்னுதி ரிசைவி றீவினை
மன்றவு மாறறுதிர் மயக்கங் கொள்ளுதி
ரொன்றிய பேருணர் வொருவிப் போதிரால். (௧௬)

வீட்டிடு மிச்செயல் வீடு சேர்தர
மோட்டுறு நிலைகொடு முயன்று கூடுதி
ரீட்டுறு நன்னெறிக் கியைவ தொன்றினைக்
காட்டியே யினைத்தெனக் கழற லாகுமோ. (௧௭)

அற்றமி றவம்புரிந் தரிய வீட்டினைப்
பெற்றவ ரளப்பிலர் பெறுவ தாகியே
யுற்றவ ரளப்பில ருலகிற சிற்சில
மற்றவர் தமதியல் வகுப்பக் கேண்மினோ. (௧௮)

சுற்றம தரனடித் தொண்ட ரல்லது
மற்றில ரவனடி மலர்க ளேயலாற்
பற்றிலர் சாலவு மினிய பண்பினர்
குற்றம தகன்றதோர் கொள்கை பேசினர். (௧௯)

நேசமுற் றடைபவர் நினைப்பி னீக்கரு
மாசறுத் தருள்பொழி யறிவின் மேலையோ
ரீசனைக் குறுகியெஞ் ஞான்றும் வாழ்பவா
பேசுதற் கரியதோர் பெருமை யெய்தினர். (உ0)

ஆதலி னவரென வவாவின் றுற்றிடு
மேதகு நெறியுறீஇ வீடு சேருதி
ரேதமில் வெறுக்கைபெற் றெண்ணந் தீர்ந்திடுந்
தாதைதன் பணியினைத தவிர்தி ரென்னவே. (உக)

அந்தமில் வீடுபே றடையு மூழுடை
மைந்தர்க ளோர்புடை வந்து தேர்வுறுத
தந்தைசொல் லினுமிது தக்க தேயெனப
புந்திகொண் டடிகளை வணங்கிப போற்றினர். (உஉ)

வேறு.

போற்றுமைந்த ரைப்பெரும் புறந்தழீஇ யரன்புகழ்
சாற்றிவீடு வெஃகுறுந் தவத்திறோக ணிலையினைத்
தேற்றிமந்தி ரங்களுஞ் செயற்கையும புணாத்தியே
மாற்றினன்றொல் லுணர்வுதன்னை மற்றொருண்மை யுதவினான். (உ௩)

வேறொருண்மை யுதவல்செய்து விதியினுடி வேதநூல்
கூறுகின்ற முறைபுரிந்து குமரர்யாரு மின்னண
மீறின்மாத வங்களாற்றி யெல்லைதீர்ந்த முத்தியிற்
சேறிரென்று முனிவனெல்லை சேணெழுந்து போயினான். (உ௪)

போகுநார தற்புகழ்ந்து பொன்னடித்த லத்தின்மே
லோகையோடு தாழ்ந்துமுன் னுணர்ததுபான்மை யுன்னியே
மோகமாதி யானதீமை முழுதுமாற்றி மோனிக
ளாகிமைந்த ரெவருமஙக ணுறறின ரருந்தவம. (உ௫)

அருந்தவங்கள் பலவுமாற்றி யவாகளவீடு சோதலு
மிருந்தவம் புரிந்ததக்க னிளைஞர்பெற்றி யின்னமுந்
தெரிந்ததில்லை யென்றுசிந்தை செய்துபோத வுணாவினாற்
பொருந்தநோக்க லுற்றவட் புகுந்தபான்மை கணடனன. (உ௬)

மானதத தடத்தினும் மாறறருந தவததராய
மோனமுற்ற சிறுவாபாலின் முன்னிவந்து நாரதன்
ஞானமுற்று மோதியென்சொ னவையதென்று மாறறியே
மேனிலைக்க ணுய்ததுமீணடு விண்படாந்து போயினான் (உ௭)

மிக்கமைந்த ரவனுரைதத விதியினின்று வீடுபே
றொக்கலோடு மேயினர்க ளொருவரின்றி யெற்கினி
மக்களின்றெ னத்தெரீஇ வருத்தமுற் றிருந்திடுந்
தக்கன்மற்று மாயிரந் தவசசிறுரை யுதவினான். (உ௮)

பெற்றமைந்த ரைததழீஇப பிறங்குகாமர் மீசசெல
வற்றமில் சிறபபினவேத மறிவுறுததி யாதியா
தெற்றியஙக ணுனையுனனி ம்மியாயாவு நல்குவா
னற்றவஞ்செய் தனைதிமான தத்தடததி லென்னவே. (உ௯)

கேட்டமைந்தர் தாதைதாள் கெழீஇயதங்கள் சென்னியிற்
சூட்டியேவல் போற்றியன்ன தூமலர்த்த டத்திடை
யீட்டமோடு சென்றிருந் திருந்தவம் புரிந்தனர்
காட்டிலுள்ள கயமுனிக் கணங்களங்க ணுற்றென. (௩௦)

வேறு.

ஆன காலையி லனைய மைந்தர்க
ளூன மின்றிநோற் றொழுக முன்னரே
போன நாரதன் புணர்ப்பொன் றோர்ந்திடா
மான தத்தட மருங்கி லெய்தினான். (௩௧)

எய்தி யாவர்நீர் யாரு மாதவஞ்
செய்தி ரெப்பொருள் சேர்தல் வெஃகினீர்
நொய்தி லன்னது நுவல வேண்டுமாற்
கைத வம்பெறுக் கருத்தி னீரென. (௩௨)

தந்தை யாகியோன் றக்க னாங்கவற்
கந்தி வண்ணனா ரருளும் பேற்றினால்
வந்த மைந்தரேம் யாங்கண் மற்றவ
னிந்த வான்றடத் தெம்மை யேவினான். (௩௩)

தேவ தேவனைச் சிந்தை யிற்கொடே
யாவி யோடுட லசை நோறறிரீஇ
யோவில் பல்லுயி ருதவல் பெற்றிட
வேவி னானெமை யென்று சொற்றனர். (௩௪)

சொற்ற காலையிற் றுகளி றாயவ
னற்ற வஞ்செய்வீர் நாதன் றாளையே
பற்ற தாவுளீர் பயனென் றுன்னலீர்
குற்றம யாவரே கூறுக லார்களே. (௩௫)

நோற்றி யாவையு நோக்கிச் செய்வினைப்
பேறதை யெய்துவீர் பிறப்பு மாய்வது
மாற்று வீரலீர் மயக்கந் தீர்திரோ
வேறற மென்கொனீ ரீங்கின் றீரினும். (௩௬)

மேய மாசுதோய் விழைவின் மெய்யினர்
தூய தோர்தடந் துறையை யெய்தியுஞ்
சேய சேதகந் தினைத்தல் போலுமா
நீயிர் கொண்டதோர் நிலைமை தானுமே. (௩௭)

தலைய தாகிய தவந்த னக்குநீர்
விலைய தாப்பெறும் விதியின் செய்கையு
நிலைய தாகுமோ நீடு காளொடே
யுலக மீதுசி ருறுவ தன்றியே. (௩௮)

வேறு.

போவதும் வருவதும் பொருமலு நன்குமின்
றுவதோர் கதியதே யாருயிர்க் குறுதியா
நீவிரக் கதியினை நினைகிலீ ரிறுதியு
மோவரும் பிறவியு மும்மைவிட் டகலுமோ. (௩௯)

சிறுவர்தம் முள்ளமுஞ் சேயிழை மகளிர்தம்
மறிவுமா லெய்தினோர் சிந்தையு மானவா
லுறுவதோா பனுவலு முற்றிடும் பெற்றியே
பெறுவதா மன்றியே பின்னரோன் றுருகுமோ (௪0)

ஆதலா லுங்களுக் கருள்செயுந் தன்மையான்
றூதையா கின்றதோர் தகைமே யெனினவன்
பேதையா மீசனுற பெருவளம் பெற்றவன்
பாததா மரையினிற் பரிவுறு நெறிமையால. (௪௧)

ஆங்கவன் மையலோ ருதலா லவனரு
ணீங்களு மனையரே நெறிதருந் தேசிகன
நீங்கெலா நீக்கியே சிவகதிப பாற்பட
வோங்குபே ரருளொடு முணாத்துவா னல்லனோ. (௪௨)

முந்துமா யிரவரு முன்பரிப பொய்கைவாய்த
தந்தைதன் பணியினுமு தந்தைபோ னலகவே
வந்துளார் நோறறுழி மயலறத் தேற்றியே
யந்தமா நெறிகிறீஇ யரியவீ டருளினும். (௪௩)

என்னலு நாரத னெழின்மலாத தாளினை
சென்னிமேற் சேர்த்தியே சிறியரே முய்யவே
யுன்னியீண் டேகிநீ ருணர்த்துமெய்ந் நெறியினை
யின்னதென் றுணாகிலே மெமக்கருள புரிதிரால. (௪௪)

என்பவர்க் கருளபுரிந் தெண்ணிலார் வதமொடு
நன்பொருட் காட்சியை நானுமக் குதவியே
வன்புலத தாறுபோய் மதிமருண் டின்பமுந்
துன்புமுற் றுழல்பவந் தொலைவுசெய் திடுவனால். (௪௫)

ஆதியார் தாளினை யருளொடே வழிபடு
நீதியா நீரினோர் நிலைமையாய் நின்றிடும்
பாதநான் கவாபெறும் பதமுநான் கதனுளே
யோதியா பெறுவதோ ருயாபெருங் கதியதே. (௪௬)

முத்தியென் றிடுவதே மொழிவதோர் நாமமா
மத்திறங் கடவுளாக் காயினுந் தெரிவதோ
நித்தனன் புறுவதோர் நெறியரா யிருவினை
யொத்தபண் போாகளா லுணரலா மல்லதே. (௪எ)

அந்நிலைக் கண்ணுளா ராதியார் தாளடைந்
தின்னலுக கிடையதா மிபபெரும் பிறவியுட்
பின்னரும் றிடுகிலர் பேசுதற் கரியதோர்
நன்னலத தொடுகெழீஇ நாளுமின் புறுவரே. (௪அ)

ஆதலா னீவிரு மந்நெறிப் பாலுறீஇ
மேதைசால் யோகினால் வீடுசே ருதிரென
வாதியா மிறைவனா லறையுமுண் மைகளெலா
நாதனா ரருளினா னாரத னுரைசெய்தான். (௪௯)

அன்றுநா ரதமுனி யவரெலா மவ்வழி
யின்றியும் படிகிறீஇ நெறிகொள்வா னுலகமேற்
சென்றனன் பின்னரச் சிறுவரா யிரவரு
மொன்றுசிந் தனையினு யுயர்தவத் தொழுகினர். (௩௰)

உயர்தவக் கிழமையி லொழுகியே யுற்றுளோர்
மயறுேலைத் தருள்சிவன் மன்னுபே ரருளினல்
வியனெறிப் பாலதாம் வீடுபே றெய்தினு
ரயன்மகற் கினிமைகூ ராயிரங் குமரரும். (௩௧)

உங்ஙன நாரத னோதிய துணர்வுறு
மிங்ஙனம் வீடுபே றெய்தலுஞ் சிறுவர்க
ளெங்ஙனம் போயின ரின்னும்வந் திலரென
வங்ஙனஞ் சிறுவிதி யயருவா னுயினன். (௩௨)

வேறு.

போதத் துணர்வா லவர்க்கண்ணு றும் போழ்து தன்னின்
மேதக்க மைந்தர் தமைநாரதன் மேவி மேலா
மோதித் திறமுள் ளனகூற வுணர்ந்து நோற்றுத்
தீதற்று வீடு புகுதன்மை தெரிந்த தன்றே. (௩௩)

தெரிகின்ற வேலைக் கிளர்கின்றது சீற்ற முள்ளம்
பரிகின்ற தாவி பதைக்கின்றது பையுண் மாலை
விரிகின்ற தம்மா வியர்க்கின்றது மேனி விண்ணின்
றிரிகின் றதுகோ ளிரங்குற்றது ஞால மெல்லாம். (௩௪)

தன்பா லகர்தஞ் செயல்கண்டு தளர்ந்து சோரும்
வன்பா லினனு கியதக்கன் வரதனை வேண்டு
மென்பால ரென்பா லிலதாக்கின னெண்ண மிக்கு
நன்பா லுலகத் துழல்வானினி நாளு மென்றான். (௩௫)

மேனா ரதன்செய் புணர்ப்புன்னி வெகுண்டு தக்க
னேனாது சாப நுவன்றேநனி நோற்க மைந்த
ரானாரை நல்கேன் மகப்பெறற தமையு மென்னு
மானூர் தமையே புரியத்தன் மனம் வலித்தான். (௩௬)

வேறு.

இருபதின் மேலு மூவ ரேந்திழை மாரை நல்கிப்
பெருமைகொ டக்கன் றன்மன் பிருகுவே மரீசி யென்போன்
கருணைகொள் புலத்தி யன்னங் கிராப்புல கன்வ சிட்டன்
றிரிவிலத் திரிதீ வேள்வி சேர்ப்பித ராவுக் கீந்தான். (௩௭)

துய்யதோர் சுபுத்தி புத்தி சுரசையே திருதி துட்டை
செய்யநற் கிரியை கீர்த்தி சிரத்தையோ டிலச்சை மேதா
மைவிழிக் கத்தி சாந்தை வபுவைமுன் றருமன் வேட்டுப்
பொய்தவி ரிருபா னேழு புதல்வரை யளித்தான் மன்னோ. (௩௮)

கேதமில் பிருகு வென்பான் கியாதியைக் கொண்டு புல்லி
யேதமில் விதாதாத் தாதா வென்றிரு சிறாரை யீன்று
சீதள வனசங் கொண்ட செந்திரு வையுமுன் றந்து
மாதவன் றனக்கு நல்கி மாதவத் திருந்தான் மாதோ. (௩௯)

தாரணி புகழும ரீசி சம்பூதி தன்னை வேட்டாங்
கிரிரு பிணைக்க ளீந்தா னிவர்வழிப் பிறந்தார் பல்லோர்
போரியல் புலத்தை வென்ற புலத்திய முனிவ னென்பா
னரிசன் னதியை வேட்டு நன்மகார் பலரைத் தந்தான். (௬0)

அங்கிரா மிருதி யென்னு மாயிழை தனைம ணந்து
பங்கமி லங்கி தீரன் பரதனு மகாரைப் பெற்று
மங்கையர் நால்வர் தம்மை மகிழ்ந்துட னளித்தா னன்னோர்
தங்குடிப் பிறந்த மேலைத் தவத்தரு மளப்பி லோரால். (௬க)

பெருமைகொள் புலக னென்போன் பிருதியைக் கொண்டு தத்தாத்
திரிதனைப் பயந்தா னன்னோன் சீர்வழிக் கும்பன் போந்தா
னொருமைசேர் வசிட்ட னென்போ னூற்சையை மணஞ்செய் தாங்கோர்
தெரிவையை நல்கி மைந்த ரெழுவரைச் சிறப்பிற் றந்தான். (௬உ)

அத்திரி யென்னு மேலோ னனசூயை தன்னை வேட்டுச்
சத்திநேத் திரனே திங்கள் சனிசங்க தான னென்னும்
புத்திரர் தம்மைத் தந்தான் பொங்குதீச் சுவாவை வேட்டு
மெய்த்திறல் படைத்த மைந்தர் மூவரை விரைவொ டீந்தான். (௬௩)

கவிபுகழ் கிரது வானோன் கமைதனை மணத்திற் கூடி
யுவகையின் மூன்று பால ருதவினன் பிதரா வென்போன்
சுவதையென் றிசைக்க நின்ற துடியிடை தன்னை வேட்டுத்
தவலருஞ் சிறபபின் மேனை தரணிமங் கையரைத் தந்தான். (௬௪)

அந்தநன் மேனை தன்னை யார்வமோ டிமவான் கொண்டான்
முந்துறு தரணி தன்னை முறையினன் மேரு வேட்டு
மந்தர கிரியை நல்க மற்றது நோற்று முக்க
ணெந்தைதன் னிடதநெஞ் ஞான்று மிருந்திடப பெற்ற தன்றே. (௬௫)

விண்ணுயர் மேருப் பின்னர் வேலையென் பவளை நல்கித்
தண்ணுறு கடற்கு நல்கச் சரவணி யென்ன வாங்கோர்
பெண்ணினை யனையன் பெற்றுப் பெரும்புகழ்ப் பிராசி னப்பே
ரண்ணலுக் குதவ வன்னோ னையிரு மகாரைத தந்தான். (௬௬)

ஆ திருவிருத்தம ௧உ௮.

---

வசனம்.

சிலகாலத்திற்குப் பின்பு, பிரமன் பாதத்தில் உதித்த வேதவல்லியென்னும் பெண்ணை மணம்புரிந்து வாழுங்காலத்தில், அவள் வயிற்றில் ஆயிரம்பிள்ளைகள் தோன்றினார்கள். அவர்களைநோக்கி, நீங்கள் மானதமடுக்கரையிற் சென்று பரம சிவனைக்கருதித் தவஞ்செய்து, சீவராசிகளைப் படைக்கும் வரம்பெற்று வாருங்க ளென்று கட்டளையிட அவர்களும் அப்படியேபோய்த் தவஞ்செய்யும்போது, நார தர் வந்து, நீங்கள் யாதுகருதித் தவஞ்செய்கிறீர்களென்று கேட்க, அவர்களும் எங் கள் தந்தையின் கட்டளைப்படியே பிரபஞ்சங்களைச் சிருட்டிக்கும் ஆற்றலைப் பெற விரும்பித் தவஞ்செய்கிறோமென்றார்கள். அதைக்கேட்ட நாரதர், அவர்களை

நோக்கி, பிள்ளைகாள்! நீங்கள் பெறவிரும்பின செல்வத்துக்கும், மோட்ச செல்வத்துக்கும் மிகுதியாகிய பேதமுண்டு, நீங்கள் அரியதவஞ்செய்தும் அதற்குத் தகுதியாகிய மோட்சலாபத்தையடைந்தாலன்றோ அழகாகும். அதைவிட்டு, சிருட்டித் தொழிலை விரும்பினீர்கள், இது மிகவும் பேதைமையாகும்.

இதுவுமன்றிச், சிவகாருண்யம் முதலியவற்றை யுடையவர்களாய், இறைவனிடத் தன்புசெய்பவர்கள் முத்திச்செல்வம் பெறுதற் குரியராவர்கள். அப்படியே நீங்களும் பெற முயல்வீராக, தக்கன்சொன்னதை மறந்து இதனைக் கடைப்பிடித்தொழுகி ஈடேறக்கடவீரென்று நாரதர் போதித்தலும், அந்தப் பிள்ளைகள் ஆலோசித்து, முனிவர் போதித்தது மேலான மார்க்கமென்று துணிந்து அவர்திருவடியை வணங்கி, தேவரீர் திருவுளப்படியே செய்யக்கடவோம், அதற் கடுத்தவற்றையும் போதித்தருளவேண்டுமென்று வேண்ட, அவர்களிடத்து அன்புகூர்ந்து அவர்களை யாசீர்வதித்துச் சிவபெருமானது பெருமையை விளங்கக்கூறி, மற்றைய எண்ணங்களை மாற்றி, அவனது சீர்பாதங்களை யடையக்கடவீரென்று சொல்லி மறைந்தார். அதன்பிறகு அந்தக் குமாரர் அந்த முனிவர் சொல்லியவண்ணமே அரியதவத்தைச் செய்து முத்தியடைந்தனர். பிறகு தக்கன் தன் பிள்ளைகள் செய்தி தெரியாமல் வருந்தி, நாரதர் போதனையால் முத்தியடைந்தார்களென் றறிந்து மனம் வருந்தி, மீட்டும் ஆயிரம் பிள்ளைகளைப் படைத்து, அவர்களைநோக்கி, நீங்கள் மானதவாவிக் கரையில் பரமசிவனைக்குறித்துத் தவஞ்செய்து சிருஷ்டிக்கத்தகுந்த வரம்பெற்று வாருங்களென்று சொல்லியனுப்ப, அப்படியே அவர்கள்போய்த் தவஞ்செய்கையில், நாரதமுனிவர் அவர்களிடத்தில் வந்து, நீங்கள் எதைக்குறித்துத் தவஞ்செய்கிறீர்களென்று கேட்க, அவர்கள் உண்மையாகிய செய்தியைச் சொன்னார்கள். அதைக்கேட்ட நாரதர் புன்னகைசெய்து உங்கள் தமையன்மார் இவ்வாறே தவஞ்செய்திருந்தபோது யாம் வந்து உண்மையாகிய ஞானநெறியைப் போதித்து சாயுச்சியபதம் பெறச்செய்தோம். நீங்களும் அப்படியே பெறக்கடவீரென்று சொல்ல, அவர்களும் அவ்வாறே அருந்தவஞ்செய்து சாயுச்சியபதவியைப்பெற்று இறைவனது பாததாமரைநிழலில் வீற்றிருந்தார்கள்.

இந்தச் செய்தியைத் தக்கனறிந்து, மிகுகோபங்கொண்டு, என் பிள்ளைகளை இப்படி மோசஞ்செய்த நாரதன் ஓரிடத்தில் நிலைதரிராமல், எல்லாவிடங்களினுஞ் சென்று திரியக்கடவனென்று சபித்துவிட்டு, இனிப் பெண்களைப் பெற்று அவர்களைக்கொண்டு சிருட்டி பெருகச்செய்வது தகுதியென்று இருபத்துமூன்று பெண்களைப் பெற்றுத் தருமன் பிருகு, மரீசி, புலத்தியன், ஆங்கிரசன், புலகன், வசிட்டன், அத்திரி முதலான தபோதனருக்கு மணஞ்செய்துகொடுத்தான். தருமன் சுபுத்தி, புத்தி, சுரசை முதலானவர்களை மணந்து இருபத்தேழு பிள்ளைகளைப் பெற்றான். பிருகு கியாதியை மணந்து விதாதா தாதா என்னும் இரண்டு புதல்வரையும் இலக்குமியென்னும் ஒரு பெண்ணையும் பெற்று அந்தப் பெண்ணை விண்டுவுக்குக் கொடுத்துத் தான் தவஞ்செய்துகொண்டிருந்தான். மரீசி சம்பூதியைப் புணர்ந்து நான்கு பெண்களைப் பெற்றான். புலத்தியன் முதலானவர்கள் சன்னதி முதலானவர்களைக் கூடிப் பல புதல்வரையும் புதல்வியையும் பெற்றார்கள்.

தக்கன் மகப்பெறுபடலம் முற்றிற்று.

---

# சந்திரசாபப்படலம்.



இன்னபல் கிளைகண் மல்க விருந்திடுந் தக்கன் பின்னர்த்
துன்னிய நாண்மீ னத்துட் டொகைபெறு மிருபா னேழு
கன்னியர் தம்மை நல்கிக் கடிமண விதியி னீராற்
றன்னிக ரில்லாப் பொற்பிற் றண்மதிக் கடவுட் கீந்தான். (௧)

ஈந்தபின் மதியை நோக்கி யார்க்குமோர் பெற்றித் தாக
வாய்ந்திடு மார்வ முய்த்து மருவுதி சிலாபா லன்பிற்
றேய்ந்தொரு சிலரை யெள்ளிச் சுளிகிற்பா யலலை யென்னா
வாய்ந்திவை புகன்று தேற்றி யனையரோ டேகச் செய்தான. (௨)

ஏகிய கடவுட் டிங்க ளிலங்கெழின் மானத் தேறி
மாகநீ ணெறியிற் போந்து மடந்தைய ரவரை யெல்லா
மோகையான் மேவ வுன்னி யோர்பகற் கொருவர் பாலாய்ப்
போகமா ரின்ப மாற்றி வைகலும் புணர்ச்சி செய்தான். (௩)

இன்னணம் புணர்ச்சி போற்றி யேகிய திங்கட் புத்தேள்
பன்னிய ரனையர் தம்மிற் பழுதிலா வார ருனும்
பின்னவ டானு மாற்றப் பேரெழி லுடைய ராக
வன்னவர் திறத்து மேலா மார்வமோ டணுக லுற்றான். (௪)

ஏனையர் தம்பாற் சேரா னிருதுவின் வேலை பூத்த
தேனிமிர் சொல்லார் மாட்டுச் சேருறுக் கணவ ரேபோல்
வானிடை மதியப் புத்தேண் மற்றதனன் றிரியும் வேலை
யானதோர் பான்மை நோக்கி யவரெலா முனிந்து போனார். (௫)

போந்தனர் தக்கன் றன்பாற் பொருமியே பொலம்பூட் கொங்கை
யேந்திழை மாதர் தங்கள் கேள்வன தியற்கை கூறக்
காந்திய வுளத்த னாகிக் கனன்றவன் கலைக ளெல்லாந்
தேய்ந்தில வாக வென்று தீமொழிச் சாபஞ் செய்தான். (௬)

செப்பருந் திருவில் வைகுஞ் சிறுவிதி யெனப்பான சொற்ற
விப்பெருஞ் சாபந் தன்னா லென்றுமெஞ் சாதத் திங்க
ளொப்பருங் கலைகள் வைகற் கோரொரு கலையா யஃகாப்
பொய்ப்பெருஞ் செல்வம் பெற்றோன் புகழெனக் குறைந்த வன்றே. (௭)

மூன்றுற வைந்து வைகன் முடிந்துழி மதிய மென்போ
னான்றதண் கலையின் மூவைந் தழிதலு மவனை யென்னச்
சான்றுணை செய்தல் போலோ தண்கலை யிருத்த லோடு
மான்றனன் மெலிந்து வெள்கி வானவர் கோனை யுற்றான். (௮)

தக்கனென் மவன்சா பத்தாற் றண்கலை யனைத்தும் போகி
யிக்கலை யொன்று நின்ற தீதுமின் றிறக்கு மென்னின்
மிக்கவெவ் வியல்புங் குன்றும் வியன்பெயர் தொலையும் யாண்டும்
புக்கதொல் புகழு [illegible] ரசர் புகல்வகை யாரு மன்றே. (௯)

ஈங்கினிச் செய்வ தென்னே வுணர்கிலே னெற்கோர் புந்தி
தீங்கற வுரைத்தி யென்னச் செப்பின னிரங்கி யேங்கித்
தாங்கரும் பையுள் வேலை சார்தலுந் தழுவி யெற்கோர்
பாங்களை யஞ்ச லென்று விவைசில பகர்த லுற்றான். (௧௦)

எந்தைவாழ் கயிலை தன்னி லிபமுகன் முதினா யாவுந்
தந்தபே ரகடி மங்கைச் சுருவியு நோக்கி நக்கா
யந்தநா ளனையான் சீறி யாருநிற் காண ராகி
நிந்தைசெய் தகல வேநீ நீசரிற் றிகழ்தி யென்றான். (௧௧)

என்றவச் சாபந் தன்னு லியாவரு மிறப்ப வெள்ளி
யன்றுதொட் டினைநோக் காரா யகலநீ வெள்கி விண்மேற்
சென்றிலை யொடுங்க லுடித் திசைமுகன் முதலோர் வெள்ளிக்
குன்றிடை யேகி முன்னேன் குரைகழல் பணிந்து சொல்வார். (௧௨)

காண்டகு கினதுமேன்மை கருதிடா னிகழ்ந்து மாசு
பூண்டன னதனுற் றிங்கள் பொருமலுற் றொடுங்கு மன்னுன்
வேண்டுமிவ் வுலகிற் கெந்தை விதித்திடு சாபந் தன்மை
யாண்டொரு வைகல் போற்ற வருளபுரிந் தளித்தி யென்றார். (௧௩)

ஐங்கர னதனைக் கேளா வவ்வகை யருள வெய்யோன்
றிங்களின் முதலாம் பாலிற் செல்லுறு நாலாம் வைகன்
மங்குல்சூ ழுலக நோக்கா மரபினுல் வதிந்தாய் மற்றப்
புங்கவற் கந்நாண் மிக்க பூசனை புரிய மேலோர். (௧௪)

இதுபழி யொன்று நிற்க வின்றுநீ தக்கன் றன்னுற்
புதியதோர் குறையும் பெற்றாய் பொலிவொடு திருவுந் தீர்ந்தாய்
மதியினை மதிய தற்றாய் மறறினி வல்லை சென்று
விதியொடு பகர்தி சேயை வேண்டியீ தகறறு மென்றான். (௧௫)

வச்சிர மெடுத்த செம்மன் மற்றிவை புகலு மெல்லை
யச்செய லினிது வல்லே யேகுவ லவ்வா றென்று
வச்செல வெழுந்து திங்க ளவன்பணி தலைக்கொண் டேகி
முச்சகந் தன்னின் மேலா முளரியா னுலகம் புக்கான். (௧௬)

தாமரை யென்னுந் தண்பூந் தவிசிடைத் திகழ்ந்த வண்ணன்
மாமல ரடியின் வீழா மாதுலன் வெகுண்டு சொற்ற
தீமொழி யுணர்த்தி யுன்றன் சேயினைத் தெருட்டித் தீயேன்
றேமுறு கவலை மாற்றித் துடைத்தியிச் சாப மென்றான். (௧௭)

அன்னது மொழிந்த திங்கட் கம்புயன் மொழிவா னீண்டுத்
தன்னுள நெறிப்பா லன்றிச் சாரிலன் றக்க னென்பா
னென்னுரை யிறையுங் கொள்ளான் யானவன் மாட்டுஞ் செல்லேன்
முன்னுள னல்லன் யார்க்கு முதல்வனே யாகி நின்றான். (௧௮)

சொல்லுவ பிறவென் வேறு தொல்லைநாள் யானே கூற
வல்லுறழ் கண்டத் தெந்தை யரும்பெருந் தன்மை யாவு
மொல்லையி னுணர்ந்து பன்னு ளுழந்ததோர் தவத்தா லிந்த
வெல்லையி றிருவின் வைகி யிறையுமங் கவனை யெண்ணான். (௧௯)

வேறு.

செக்கரிற் படர்சடைத் தீயின் ஞூற்றமா
மூக்கணு யகனெதிர் மொழிந்து வேண்டலா
மெக்குறை யாயினு மெவரு மீண்டையிற்
றக்கன்முன் னொருனா சாறற லாகுமோ. (௨0)

அண்ணலந் திருவிடை யழுந்தி யாரையு
மெண்ணலன் செந்நெறி யியறற வோர்கிலன்
கண்ணிலன் மதியினன் களிபபி னோர்மகன்
மன்னிடை விரைவொடும் வழிக்கொண் டாலென. (௨௧)

களியுறு பெற்றியன் கறுவு சிந்தைய
னளியறு மூகததின னருளில் வாய்மையன்
றெளிதரு முணர்விலன் சிதைந்து மேலிவன்
விளிவுறு பொருட்டினிம் மேன்மை பெற்றுளான். (௨௨)

ஈண்டிவன் விளிதலு மின்றி யெம்மனோர்
பூண்டநன் னிலைகளும் போக்கல் சிந்தியா
னீண்டசெஞ் சடைமுடி நிமல னன்னவன்
வேண்டிய வரமெலாம் விரைவி னல்கினான். (௨௩)

அன்னது நிற்கயா மவனை வேண்டுவ
மென்னினு முனிவுறு மிகழு மெம்மையு
நின்னுறு சாபமு நீகக லானினிப்
பின்னொரு நெறியுள பேசக்கேண்மியா (௨௪)

செய்யனைக் கண்ணுதற் சிவனை யெம்மனோர்க்
கையனை யடிகளை யமல னாகிய
மெய்யனை யடைந்துநின் மேனி மாசினை
யொய்யென வகற்றிலை யுணர்வி லாய்கொலோ. (௨௫)

ஈதவன் முன்புசென் றிசைக்க நீக்குநின்
பேதற வனையது பேசல் வேண்டுமோ
மேதகு மிருளினுல் விளங்கி டாதவை
யாதவன் காட்டுதற் கையஞ் செய்வரோ. (௨௬)

சிறுரென நமையெலாஞ் சிறப்பி னல்கிய
விறல்புரை சடைமுடி யெந்தைக் கன்பரா
யுறுதவர் தம்மையு முற்ற பான்மையர்
பெறுதரோர் பொருளையும் பேச வல்லமோ. (௨௭)

தெருளொடு தன்னடி சேருந் தொண்டினோர்
பருவர லொழித்திடும் பான்மைக் கல்லவோ
விரிசுடர் கெழுவிய வெள்ளி யோங்கலி
னருளுரு வெய்தியே யமலன் மேயதே. (௨௮)

இடுக்கணங் கொருவர்மாட் டெய்தி னெந்தைதன்
னடித்துணை யரணமென் றடைவ ரேயெனிற்
றுடைத்தவர் வினைகளுந் தொலைக்கு மிப்பொருள்
பிடித்திலை யாற்றவும் பேதை நீரைநீ. (௨௯)

அந்தியஞ் சடைமுடி யண்ண றன்னடி
சிந்தைசெய் தடைந்திடு சிறுவன் மேல்வரு
வெந்திற னடுவனை விலக்கி யன்றுமுன்
வந்தருள புரிந்தது மறத்தி போலுமால். (௩0)

விஞ்சிய திரைகெழு வேலை தன்வயி
னஞ்சமன் றெழுதலு நடுங்கி நாமவன்
றஞ்செனு வடியிணை சாரத தான்மிசைந்
தஞ்சலென் றருளிய தயர்ககு லாகுமோ (௩௧)

வார்த்தன வுமையவண் மலர்க்கைத தோன்றியே
யார்த்தெழு கங்கையிவ வகில மெங்கணும்
போரததிட வெருவியாம் போற்றச் சென்னியிற்
சேர்த்தியன் றளித்ததுந் தேற்றி லாய்கொலோ. (௩௨)

அளப்பருங் குணத்திறைம் மண்ண லன்பராற்
கொளப்படும் பேரருள் கூற்றின் பாலதோ
கிளத்திட வரியதேற் கேடில் பல்பக
லுளப்பட வுன்னினு முலவிற் றுருகுமோ. (௩௩)

ஆதலி னீண்டுநின் றுதி நாயகன்
காதலின் மேயவக் கயிலை யுற்றவன்
பாதமிங் கரணெனப் பற்றி வல்லைநின்
பேதுற வொழிமதி பெருந்தண் மாமதி. (௩௪)

என்றலு மயன்பதத் திறைஞ்சி யெம்பிரா
னன்றிவை புகன்றனை ஞான மூர்த்திபாற்
சென்றடை வேனெனச் செப்பி வெள்ளியங்
குன்றினை யணைந்துபொற் கோயின் மேயினன். (௩௫)

தன்னுறு பருவரல் சாற்றக் காவலோன்
மன்னரு ணிலையொடு மரபி னுய்த்திடப்
பொன்னவிர் செஞ்சடைப் புனித நாயகன்
முன்னுற வணங்கினன் முடிவி லன்பினால். (௩௬)

மேற்றிக ழுபநிட வேத வாய்மையாற்
போற்றலும் வந்ததென் புகறி யாலெனச்
சாற்றின னுயிர்தொறுந் தங்கித் தொல்வினை
தேற்றுபு வினைமுறை செலுத்துந் தொன்மையோன். (௩௭)

நங்களை யலைத்திடு நண்ண லன்றனை
யிங்கிவ ணடுதுமென் றிருட்கள் சூழ்ந்தென
மங்குலி னிறங்கொடு வடிவம் வேறதாந்
திங்களின் றெம்பிரார் கினைய செப்புவான். (௩௮)

வன்றிறற் றக்கன்முன் வழங்கு தீச்சொலாற்
றன்றிருங் கலையெலாந் தொலைந்து போந்திட
வொன்றிவ ணிருந்ததா லுதுவுந் தேய்ந்திடு
மின்றினி வினையினே னியாது செய்வதே. (௩௯)

எஞ்சிய விக்கலை யிருக்கத் தேய்தரு
விஞ்சிய கலையெலா மேவ நல்குதி
தஞ்சநின் னலதிலை யென்னத் தண்மதி
யஞ்சலை யென்றன னருளி னூழியான். (௪0)

தீர்ந்தன வன்றியே திங்க டன்னிடை
யார்ந்திடு கலையினை யங்கை யாற்கொளா
வார்ந்திடு சடைமிசை வயங்கச் சேர்த்தினன்
சார்ந்தில தவ்வழித தக்கன் சாபமே. (௪க)

மேக்குயர் தலைவராம் விண்ணு ளோர்கள்பாற்
ரூக்குறு வினையையுஞ் சாபம் யாவையு
நீக்கிய தலைவனிந் நிலவின் சாபத்தைப
போக்கின னென்பது புகழின் பாலதோ. (௪௨)

நெற்றியங் கண்ணுடை நிமலத் தெம்பிரா
னுற்றவர்க் கருள்புரி கின்ற வுண்மையைத்
தெற்றென வுணர்த்தல்போற் றிங்க ளின்கலை
கற்றையஞ் சடைமிசைக் கவின்று பூதததே. (௪௩)

வேறு.

எந்தை யவ்வழி மதியினை நோக்கிநீ யாதுஞ்
சிந்தை செய்திடே லெம்முடிச் சேர்த்திய சிறப்பா
லந்த மில்லையிக் கலையிவ ணிருந்திடு மதனால்
வந்து தோன்றுநின் கலையெலா நாடொறு மரபால். (௪௪)

நின்ன தொல்கலை யைந்துமுப் பகலிடை நிரம்பிப்
பின்ன ரவ்வழி தேய்ந்துவந் தோர்கலை பிரியா
தின்ன பான்மையே நிகழுமெக் காலமு மென்றான
முன்னை யாவிதோ திருந்தெலா மியற்றிய முதல்வன். (௪௫)

முதல்வ னிவ்வகை யருள்புரிந் திடுதலு முளரிப்
பதயு கங்களில் வணங்கினன் விடைகொடு படரா
மதிய வானவன் றன்னுல கடைந்துதொன் மரபிற்
கதிகொள் செய்வினை புரிந்தனன் வளர்ந்தன கலையே. (௪௬)

ஒன்று வைகலுக் கோர்கலை யாய்நிறைந் தோங்கி
நின்ற தொன்னிலை நிரம்பியே பின்னுற நெறியே
சென்று தேய்ந்துவந் தொருகலை சிதைவுறு தாகி
யென்று மாவது மழிவதும் போன்றன னிரவோன். (௪௭)

செங்க ணன்முத லனைவரு மம்மதித் திறத்தை
யங்க ணுடியே தக்கனு லிவன்கலை யனைத்து
மங்கு மாறுமேல் வளர்வது மியற்கையா வருத்தா
னெங்க ணயகன் செய்கையா ரறிந்தன ரென்றார். (௪அ)

செக்கர் வானமேற் கிளர்ந்தெழு திங்களின் செயலை
யொக்க நாடிய சிந்தையாந் தூதினு னுணர்ந்து
தக்கனென்பவன் கனன்றியா னுரைத்தசா பத்தை
நக்க னேகொலாந் தடுக்கவல் லானென நகைத்தான். (௪௯)

எந்தை தன்றந்தை யாவரு மருகனுக் கியான்முன்
றந்த வாய்மையை விலக்கிலர் விலக்கவென் றன்முன்
வந்தும் வேண்டில ரச்சமுற் றிருந்தனர் மற்றத்
தந்தை தாயிலா வொருவனு மென்னுரை தடுப்பான். (௫௰)

நன்று நன்றியாம் பரம்பொரு ணான்முகன் முதலாக்
துன்று தொல்லுயிர் யாவையு மழித்துமைந் தொழிலு
நின்று நாம் புரிகின்றன மெங்கணு நீங்கா
மென்று தன்மனத் தகந்தையுற் றான்கொலோ வீசன். (௫௧)

அன்ன தன்றியே யின்னமொன் றுண்டுபா ரகத்திற்
றன்னை யேநிகர் தக்கனு நோற்றிடு தவத்தா
னென்ன வித்திரு வுதவின மென்பதை நினைந்தோ
வென்ன தாணையை யிகழ்ந்தன னித்திற மிழைத்தான். (௫௨)

செய்ய தோர்பரம் பொருளியா மென்பது தெளிந்தும்
வைய மீதிவித் திருவெலாம் பெறறுநம் மலர்த்தாள்
கையி னாற்றொழா னென்றுகொன் முன்னியான் கழறும்
வெய்ய வாய்மையை விலக்கினன் சிவனென வெகுண்டான். (௫௩)

தகவு மீரமு நீங்கிய புரைநெறித் தக்கன்
புகலும் வாய்மையைத் தேர்ந்துழிப புலகனென் றுரைப்போ
னிகரில் கண்ணுதற் கடவுளை யெள்ளலை நின்னை
யிகழ்வர் யாவரு மெஞ்சுமுன் வெறுக்கையு மென்றான். (௫௪)

என்ற வன்முக நோக்கியே தவத்தினா லெங்க
ணின்ற வித்திரு நீங்குமோ நெடியமான் முதலோ
ரொன்று மென்பணி மறுத்தில ரெள்ளுவ துண்டோ
நன்று நன்றுநின் னுணர்வெனச் சிறுவிதி நக்கான். (௫௫)

முறுவ லித்திடு தக்கனைக் கண்ணுறீஇ முனிவன்
பிறரி ழிப்புரை கூடுறு தென்னினும் பெருஞ்சீர்
குறைவு பெற்றிடா தென்னினு நினக்கருள் கொடுத்த
விறைவ னைப்பழித் திடுவது தகுவதோ வென்றான். (௫௬)

புலக னென்றிடு முனிவர னினையன புகல
விலகு தீநெறி யாற்றிய சிறுவிதி வினவி
யலகி லாததன் னாற்றலும் பெருந்திரு வனைத்து
முலகி னீங்குவான் பெருமிதங் கொண்டிவை யுரைப்பான். (௫௭)

நோற்று முன்னியான் பெற்றவித் திருநுகர்ந் திடுமுன்
மாற்று வானலன் செய்வினை முறையலால் வலிதி
னேற்ற மாகவொன் றிழைக்கல னாதலா லென்பா
லாற்ற லாலரன் செய்கின்ற தென்னென வறைந்தான். (௫௮)

அறைத லோடுமப் புலகனென் றுரைப்பவ னனைத்தே
யுறுதி யாயினு மீசனை யிகழ்ந்தவ ருய்யார்
மறையெ லாமவை சொற்றது மற்றவன் றன்னை
யிறையு மெள்ளலை மனங்கொடு பராவுதி யினிநீ. (௫௯)

தன்ன டைந்தவ ராகுல மாற்றியே தகவா
லென்ன தோர்பொருள் வெஃகினு மீகின்ற தியற்கை
யன்ன வற்கது மதிதெரிந் தடைதலு மவன்பா
னின்னி னுற்றசா பத்தினை நீக்கின னெறியால். (௩௰)

கற்றை வான்கலை நிறைந்தபின் மூன்னநீ கனன்று
சொற்ற வாய்மையு நிறுவின னுடொறுஞ் சுருங்கச்
செற்ற மென்னினித் திங்கணின் மருகனச் சிவனும்
பெற்ற மூர்த்தியு மம்முறை யாவனும் பின்னுள். (௩௧)

என்ன விததிற மொழிதலுஞ் சினமகன் றிமையோ
ரன்ன மூர்த்தியோ னியாவரும் புகழ்தர வனையான்
பன்னெ டிம்பக லரசின்வீற் றிருந்தனன் பனையாங்
கன்னி மறறவன் மகண்மையாய் வருதல்கட் டுரைப்பாம். (௩௨)

ஆ திருவிருத்தம் ௧௩௰.

---

வசனம்.

இவ்வாறு புத்திர பௌத்திராதிகளுண்டாகி அவர்களால் சிருஷ்டி விருத்தியாகிவருங் காலத்தில், தக்கனுனவன் மீணடும் இருபத்தேழு பெண்களைப்பெற்றுச் சந்திரனுக்கு மணஞ்செய்துகொடுத்து, அந்த மருமகனைநோக்கி, உன் தேவிமாரெல்லாரையும ஒரேவிதமாய்த் தழுவிக் களித்திருப்பாயாகவென்று சொல்லியனுப்ப, அவனும தினமொரு கன்னிகையைக்கூடிக் களித்துவருங்காலத்தில், கார்த்திகை உரோகணி இவ்விருவரும் பேரழகுடையவராதலால், அவர்களிடத்தே அதிகமையல்பூண்டு, மற்றையோரைக் கண்ணெடுத்துப்பாராமலிருந்தான். அதைக் கண்ட மற்றை மாதாகள் பொறாமல் கோவித்துவந்து தம்பிதாவாகிய தக்கனிடத்தில் இந்தச் செய்தியைச்சொல்லி முறையிட்டார்கள்.

அவர்கள் முறையிடுவதைக்கண்ட தக்கன் மிகவுங் கோபங்கொண்டு, சந்திரனைநோக்கி, நீயென் கட்டளைப்படியே நடவாமையால் இன்றுமுதல் தினமொரு கலையாகக்குறைந்து ஒளிமழுங்கிப் பலராலும் இகழப்படுவாயென்று சபிக்க, அப்படியே சந்திரன் நாளுக்குநாள் தேய்ந்து ஒரு கலையாயிருக்கும்போது, மிகவும் மனவருத்தத்தோடு இந்திரனிடத்திற்சென்று, நிகழ்ந்த செய்திகளெல்லாஞ்சொல்லி, இத்துன்பத்தையொழித்து என்னைக்காக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். இந்திரன் இவனைத் தழுவிக்கொண்டு, என்மனதுக்கினிமையாகிய நண்பனே, அஞ்சவேண்டாமென்று சில இன்சொற்கள்சொல்லிச் சந்திரன்மனத்தைத்தேற்றி, சந்திரனே! முன்னொருகாலத்தில், சிவபெருமானெழுந்தருளியிருக்கிற திருக்கைலாயத்துக்கு நாமிருவரும் போகையில், விநாயகர் வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி, அப்பம், எள்ளுண்டை, பயற்றுண்டை முதலிய வுணவுகளையுண்டு வயிறுபெருத்திருப்பதை நீபார்த்துச் சிரித்தாய், அவர் கோபித்து, உன்னை யாவரும்பாராம லிகழும்படியான சண்டாளத்துவம் உனக்குண்டாகும்படி சபித்தார். அதுதொடங்கி, உன் சாயைபட்டால் பாவம் நேருமென்று எல்லாரும் வசைகூறி யிகழ்வதைக்கண்டு வெட்கி நீமறைந்ததைப் பிரமன் முதலானோர் அறிந்து கைலைக்குச்சென்று, விநாயகரைவணங்கித் தேவரீருடைய பெருமையை யறியாமல் சந்திரன் அபசாரப்பட்டதனுல் தேவரீர் சபிக்க, அதனால் அவன் நீசத்

துவத்தையடைந்து பலராலும் இகழப்பட்டு வருந்தி மறைந்துவருந்துகிறான். இவ்வுலகத்துக்கு அவனுதவி வேண்டியிருப்பதனால், தேவரீரது சாபத்தின்றிறத்தை வழுவாமல் வருடத்துக்கொருநாள் பெறக் கட்டளையிடவேண்டுமென்று துதிக்க, அவ்வாறே அக்கடவுள் அநுக்கிரகஞ்செய்து அச்சாபத்தைப் பெறுங்காலமும் நியமித்தருளினார்.

அப்படியே வருடந்தோறும் ஆவணிமாதம் பூருவபக்ஷம் நான்காந்திதியில் உலகத்தார் உன்னைப்பார்த்தால் சண்டாளத்துவமும் மகாபாதகமும் உண்டாகுமென்று பயந்து பாராமலிகழ்ந்து, உன்சாயை பூவுலகத்திற்படுதலால் உண்டாகுங் குற்றம் நீங்கும்பொருட்டு விநாயகக்கடவுளைப் பூசித்துவருகிறார்கள். அந்தநாள் விநாயகசதுர்த்தியென்று கூறப்படுகின்றது அந்தப்பழி நீடித்திருக்க, மேலும் ஒரு குறையைத் தக்கனாற்பெற்று உன் மேன்மையிழந்தாய், ஆதலால் பிரமனிடத்திற் சென்று முறையிட்டுக்கொள்வையாயின் உன்றுன்பந் தொலையுமென்றுசொல்ல, சந்திரன் அவ்வாறேபோய்ப் பிரமனிடத்தில் விண்ணப்பஞ்செய்து இரங்குகின்றான். பிரமன் மனமிரங்கி சந்திரனைநோக்கி, தக்கன் தன்மனத்தின்படியல்லது ஒருவர் சொல்லுவது கேட்பவனல்லன். நமக்கடங்கிப் பேசமாட்டான். பரமசிவனைக்குறித்துத் தவஞ்செய்து இப்படிப்பட்ட மஹைசுவரியத்தைப்பெற்றான். இப்பொழுது அவரையும் அவமதிக்கிறான். இவன் விரைவில் நசித்துப்போதற்கு முற்குறியாக இப்படிப்பட்ட தீக்குணங்கள் இவனுக்குண்டாயிருக்கின்றன. பல சொல்லிப்பயனென்ன ? பரமசிவனைச் சரணடைந்து உன் மனக்கவலையைச்சொல்லிக்கொண்டால், அருளுருவாகிய அந்தப்பெருமான் உன் மனக்கவலையைப் போக்கியருளுவான். முற்காலத்தில மார்க்கண்டனைப் பற்றவந்தநமனையுதைத்து அந்த முனி புத்திரனைக் காத்தருளினதும், பாற்கடலிற் றோன்றிய நஞ்சையுண்டு தேவர்களைக் காத்தருளினதும் முதலான அவனது அருட்குணங்களைக் கேட்டிலையா, என்றிப்படி பிரமன் போதித்தமொழிகளைச் சிரசாவகித்து, கைலைக்குப்போய்ப் பரமசிவனைத் தரிசித்து வணங்கிநின்று, தனக்குத் தக்கனால் நேரிட்ட சாபமுதலிய காரியங்களை விண்ணப்பஞ்செய்தலும், அப்பெருமானனவர் திருவுளமிரங்கிச் சந்திரனைநோக்கி நீயஞ்சவேண்டாமென்று சொல்லி அவனது ஒற்றைக்கலையினைத் தமது திருமுடியிற் புனைந்துகொண்டனர். அதைக்கண்ட தக்கன் சாபம் சந்திரனைக் கிட்டுதற்கஞ்சி யோடிப்போயிற்று. சிவபெருமான் சந்திரனைநோக்கி, இந்த ஒருகலை யிப்படியேயிருக்க, நாளுக்குநாள் வளர்ந்து இரண்டுமுதற் பதினாறுகலையளவும் நிறைந்தும், பதினாறுமுதல் நாளுக்குநாள் ஒவ்வொருகலை குறைந்தும் பட்சங்கள்தோறும் மாறிவிளங்கும், என்று திருவாய்மலர்ந்தருள, சந்திரன் மனங்களித்து, முன்போலவே தனது தொழிலை நடத்திவந்தான், இந்தச் செய்தியைத் தக்கன் உணர்ந்து சிவபெருமானைப் பலவாறு நிந்திக்கக்கண்ட புலகர் அவனுக்கு இறைவனது பெருமைகளையும் அருட்குணங்களையும் வற்புறுத்திச்சொல்லி அவன் கோபத்தைத்தணித்தார். தக்கனும் கோபந்தணிந்து, தனது அரசுசெய்துவந்தான். இனி, பராசத்தி அந்தத் தக்கனுக்குப் பெண்ணாகத்தோன்றுங் கதையைக் கூறுவாம்.

சந்திரசாபப்படலமுற்றிற்று.

---

# உமைகயிலைநீங்குபடலம்.



கமல மூர்த்தியுங் கண்ணனுங் காண்கிலா
வமல மேனியை யன்பினர் காணுற
நிமல மாகிய நீள்கயி லாயமேல்
விமல நாயகன் வீற்றிருந் தானரோ. (க)

வீற்றி ருந்தவன் மெல்லடி கைதொழூஉப்
போற்றி யுன்றன் பொருவரு மெய்ம்மையைச்
சாற்று வாயெனச் சங்கரி வேண்டலு
மாற்ற வன்புசெய் தாங்கருள் செய்குவான். (உ)

வேறு.

உருவொடு குணஞ்செய லொன்று மின்றியே
நிருமல மாய்ச்சிவ னிறைந்து நின்றதும்
பரவிய வுயிர்த்தொகைப் பந்த நீக்குவா
னொருதனிச் சத்தியா லுன்ன லுற்றதும். (ங)

ஐந்தியற் சத்திக ளாயி னோர்தமைத
தந்தது மருவுருத் தாங்கி யவ்வழிச்
சிந்தனை யருச்சனை செய்தி யாவரு
முய்ந்திடச் சதாசிவ வுருவைக் துற்றதும். (ச)

இருபதின் மேலுமைந் தீசன் கேவல
வுருவம தாகியே யுறைந்த பெற்றியும்
விரவிய குடிலையின் விளைவு செய்துபின்
னருள்புரி மூர்த்திக ளாய பேதமும். (ரு)

முந்திய மாயைகண் மூல மாகவே
யந்தமி றத்துவ மாறெ டாறுமுன்
வந்திட வளித்தது மரபி னைந்தொழில்
சிந்தைகொள் கருணையா னடாத்துஞ் செய்கையும். (சு)

விதித்திடு மூவகை வியனு யிர்த்தொகை
கதித்திடு தத்துவக் கணங்க ளங்குளா
ருதித்திடு முறைமையி னொடுங்கச் செய்துதான்
மதித்தொரு தன்மையாய் மன்னி நிற்பதும். (எ)

ஆனதன் னியற்கைக ளனைத்துங் கண்ணுதல்
வானவ னாகம மறையின் வாய்மையான்
மேனிகழ் தொகைவகை விரிய தாகவே
தானருள் புரிந்தனன் றலைவி கேட்கவே. (அ)

சுந்தரி யிவ்வகை யுணர்ந்து தோமிலா
வெந்தைநிற் குருவிலை யென்றி பின்னுற
வைந்தொடு பலவுரு வடைந்த தென்னெனக்
கந்தனை யருளுவான் கழறன் மேயினன். (கூ)

உருவிலை நமக்கென வொன்று நம்வயி
னருளுரு வவையெலா மென்ன வன்னதோர்
பொருளென வுன்னியே புவன மீன்றவள்
பெருமகிழ் வெய்தியிப் பெற்றி கூறினள். (௧0)

அங்கிலை வடிவெலா மருளி னுதலா
லுன்னருள் யானென வுரைப்ப தன்மையே
யென்னுரு வாமவை யென்று பாகமர்
கன்னிகை வியந்தனள் கழறும் வேலையே. (௧௧)

கயந்தன தீருரி கவின்று பொற்புறப
புயந்தனி லணிந்தருள் புனித னங்கைநீ
நயந்தரு நின்புகழ் நாடி நம்முனம்
வியந்தனை யுனேயென விளம்பி மேலுமே. (௧௨)

இருளுறு முயிர்தொறு மிருந்து மற்றவை
தெருளுற வியற்றுது மதனை தீர்துமேன்
மருளுறு சடமதாய் மாயு மேனைய
பொருளுறு நிலைமையைப் புகல வேண்டுமோ. (௧௩)

உன்னிடை தன்னும்யா முறுத
நின்னுயி ருணாவுரு நினக்குக் காட்டுது
மன்னது காண்கெனு வயனை யாதிய
மன்னுயி ரியற்றிடும் வண்ண நீங்கினன். (௧௪)

தேவர்க ணுயகன் செயலி லாமையா
லாவிகள் யாவையுஞ் சடம தாகியே
யோவிய மேயென வுணாவின் றுறறன
பூவுல கேமுதற புவனம் யாவினும. (௧௫)

ஆட்டுவித் திடுபவ னதுசெ யாவழிக்
கூட்டுடைப பாவைகள் குலைந்து வீழ்ந்தென
நாட்டிய பரனரு ணடாதத வின்மையா
வீட்டுபல் லுயிர்த்தொகை யெனைதது மாய்ந்தவே. (௧௬)

இந்தவா றுயிர்தொகை யாவு மொல்லையி
னந்தியே சடமதாய் நணிய வெல்லையிற
சிந்தைசெய் தினையது தெருமந் தஞ்சியே
சுந்தரி யரனடி தொழுது சொல்லுவாள். (௧௭)

அறிகில னெந்தைநீ யனைதது மாகியே
செறிவது முழுதுயிர்த் திறனி யறறியே
யுறுவதை யென்பொருட் டொருவி நின்றனை
யிறுதியி னவையெலா மிருளின் மூழ்கவே. (௧௮)

ஓரிறை யாகுமீ துனக்கு யிர்க்கெலாம்
பேருக மளப்பில பெயரு மென்பிழை
சீரிய வுளங்கொள றேறறம் பெற்றெழீஇ
யாருயிர் மல்குமா றருளு வாயெனு. (௧௯)

பன்முறை பரவினள் பணிந்து கிற்றலு
மன்மலி கூந்தலுக் கருளி யாவிக
டொன்மையில் வினைப்பயன் றுய்ப்ப நல்குவா
னின்மல னினைந்தனன் கருணை நீர்மையால். (௨௦)

திருத்தகு தனதருள் சேர்ந்த பல்வகை
யுருத்திரர் தமக்குமுன் னுணாவு செய்துழி
கிருத்தனை யவ்வழி கினைவுற றிச்செயல்
கருத்திடை யாதெனக் கருதி நாடினார். (௨௧)

நாடிய வெல்லையி னுன்முக ததன்பா
றேடிய வண்ணறன் செய்கை யீதெனக்
கூடிய வோதியாற் குறித்து முன்னுற
வீடிய வுயிர்த்தொகை யெழுபப வெஃகியே. (௨௨)

கண்ணுத லெந்தைதன் கழல்க ளர்ச்சனை
பண்ணுத லுன்னியப் பகவன் றொல்சுடா
விண்ணிடை யின்மையின் வேலை காண்கிலா
மண்ணிடை யருச்சுன வட்டத் தெய்தினார். (௨௩)

எங்கணுங் கனையிரு ளிறப்ப வீசவிற
கங்குலே போன்றதிக் காலை கண்ணுதற்
புங்கவற் கேற்றிடு பூசை செய்துமென்
றங்கவர் யாவரு மாய்தன் மேயினார். (௨௪)

முண்டக மலர்கெழு முக்கண் மேலையோன்
கொண்டதோ ரைம்பெருங் கோலத தேவரு
மெண்டகு மூவகை யியலபு ளாங்கவா
மண்டல விதியினல் வடிவ தாக்கியே. (௨௫)

எண்ணிரு திறததவா யியன்ற நற்பொரு
ளுண்ணிக ழுளியொடு முய்த்து வேதனுங்
கண்ணனும் வழிபடு கங்குற் பூசையைப்
பண்ணுதன் முயன்றனர் பரிவின் மேலையோர். (௨௬)

ஆறிரு நாழுட னஞ்செ ழுதத்தையுங்
கூறின ரெண்ணினா கோதில் கண்டிகை
நீறொடு புனைந்திறை கிலைமை யுட்கொளா
வேறுள முறையெலாம் விதியிற செய்துபின். (௨௭)

வான்குலாம் வில்லுவ மருமென் பாசடை
தேன்குலா மரையிதழ் செய்ய சாதிவீ
கான்குலாம் வலம்புரி கடவுட் டொல்பெயர்
நான்கியா மத்தினு நவின்று சாததியே. (௨௮)

ஏய்வான் பயறுபா லெண்ண லோதனந்
தூயநல் லுணவிவை தொகுததுக் கண்ணுத
னாயகன் முன்னுற நான்கி யாமத்து
நேயமொ டம்முறை நிவேதித் தேத்தியே. (௨௯)

பின்னரு மியற்றிடு பெற்றி யாவையுந்
தொன்னிலை விதிகளிற் றேமு ருவகை
யுன்னினர் புரிந்தழி யுவந்து ருத்திரர்
முன்னுற வந்தனன் முக்கண் மூர்த்தியே. (௩௦)

அவ்விடை மருதினி லைந்து மாறுமா
மெய்வகை யுருத்திரர் வேண்டி யாங்கருள்
செய்வதொர் கண்ணுதற் றேவன் றென்மைபோ
லெவ்வகை யுயிரையு மியற்ற வுன்னலும். (௩௧)

எழுந்தனர் மாலய னிந்தி ராதிய
ரெழுந்தன ரெழுந்தனர் யாரும் வானவ
ரெழுந்தனர் முனிவர ரேனை யோர்களு
மெழுந்தென வுயிர்த்தொகை யிருளு நீங்கிற்றால். (௩௨)

அல்லிடை யுறங்கின ரறிவு சேர்ந்தழி
மெல்லென வயர்ந்தகண் விழித்தெ ழுந்தபோ
லெல்லையி லுயிர்த்தொகை யாவு மவ்வழி
யொல்லையி லெழுந்தன வுலகி லெங்கணும். (௩௩)

ஓங்கலுங் கரிகளு முலப்பி னாகமுந்
தாங்கின தரணிபா தலத்திற் கூர்மமா
மாங்கது போறறிய தண்டந் தன்னிடை
தீங்கதிர் மதியுடப் பிறவுஞ் சென்றவே. (௩௪)

அன்னதொா திறமெலா மமல னுணையாற்
றென்னிலை யமைந்தவத் தொடர்பு நோக்கியே
யிந்நெறி யாவையு மீசன் செய்கையே
பின்னிலை யென்றனர் பிரம னாதியோர். (௩௫)

வேறு.

மறறுவை நிகழும் வேலை மன்னுயிர்க் குணர்ச்சி நல்கி
யுற்றன னெந்தை யென்றே யுருத்திர ருணர்ந்து தம்முன்
பற்றல ரெயின்மூன் றட்ட பண்ணவன் வரநேர் சென்று
பொற்றிரு வடியில் வீழ்ந்து போற்றலு மமலன் சொல்வான். (௩௬)

ஈண்டெமை யருச்சித் திட்ட வியல்பினு லுயிர்கட் கெல்லா
மாண்டதொல் லுணர்ச்சி நல்கி யெழுபபின மற்று நீவிர்
வேண்டின யாவுங் கேண்மின் விரைந்தென வமலன் றன்கட்
பூண்டதொ ரன்பு மிக்கோ ரினையன புகல லுற்றார். (௩௭)

சிற்றது மல்லி லெம்போ னின்னடி யெனைய ரேனும்
பற்றுட னருச்சித் தோர்க்குப பழிதவிர் மாகத் திங்க
ளுற்றிரு கதிருமொன்று மொண்பகன் முதனாட் கங்குல்
பெற்றிடு சிறப்பு நல்க வேண்டுமொற் பெரும வென்றார். (௩௮)

நீவிர்செய் பூசை [illegible] நெடிதுநா மகிழ்ந்த வாற்று
லாவிக ளனைத்து [illegible]ந்த வருவினை யகன்று நும்போற்
பூவினி லென்றும் பூசை புரிந்தவர்க் கெல்லா முத்தி
மேவர வளித்து மென்றே வியனருள் புரிந்து போந்தான். (௩௯)

எம்பெருந் தலைவ னேக வுருத்திரர் யாரு மீண்டித்
தம்பதங் குறுகி முன்போற் சார்ந்தன ரனைய காலை
யம்புய னாதி வானோ ரனைவருங் கயிலை புக்கு
நம்பனை வணக்கஞ் செய்து தொழுதிவை நவில லுற்றார். (௪௦)

மன்னுயிர்க் குயிரா யுற்ற வள்ளல்கேள் யாமக ளெல்லா
முன்னரு ளுருத நீரா லுணர்வொரீஇச் சடம தாகிப்
பன்னெடுங் காலம் வாளா கிடந்தனம் பவமுழ் குற்றே
மன்னது தனக்குத் தீர்வொன் றருளென வண்ணல் சொல்வான். (௪௧)

மங்கியே யுணர்வு சிந்தி மறைமுறை புரியா நீரா
லுங்கள் பால் வருவ வெல்லா முமையிடத் தாகு மன்றே
யிங்குநீ ரின்று பற்றி யியற்றுநுங் கடன்க ளென்னப்
பங்கயா சனனுந் தேவர் யாவரும் பணிந்து போனார். (௪௨)

வேறு.

வாலி தாமயன் முதலினோர் வணங்கின ரேகு
வேல வார்குழ லுமையவள் பிரான்கழ லிறைஞ்சி
மேலை நாளுயிர்த் தொகையினுக் கெய்திய வினையென்
பால்வ ரும்பரி சென்கொலோ பணித்தரு ளென்ன. (௪௩)

முன்பு நீயுனை வியந்தனை யத்துணை முனிந்து
நின்பொ ருட்டினு லுயிர்கடம முணர்ச்சியை நீக்கிய
பின்பு ஞர்ததின மாதலி னன்னவை பெற்ற
மன்பெ ரும்பவம் யாவையு நின்னிடை வருமால். (௪௪)

முறைய தாகுமாற் பின்னுமொன் றுண்டுயிர் முற்றும்
பெறுவ தாமனக் கல்லது பெரும்பவ மவற்றாற்
பொறைபு ரிந்திடற கெளியவோ போறறுநீ யென்றான்
சிறுவி திக்கருள் பரிசினை முடிவுறச் செய்வான். (௪௫)

நாத னவ்வுரை யியம்பலு முளநடு நடுங்கிப்
பேதை யேன்செயும் பிழைதணித் தென்வயிற் பெருகு
மேத மாற்றவோர் பரிசினை யுணர்த்துதி யென்றுபை
பாத பங்கயந் தொழுதலு மினையன பகர்வான். (௪௬)

ஆல மேபுரை கிறத்ததா யமிழ்தினுஞ் சுவைத்தாய்
ஞால மார்தர வொழுகிய காளிந்தி நதிபோய்
மூல மெய்யெழுத் தன்னதோர் முதுவலம் புரியின்
கோல மாகிநோற் றிருதியா லுலகருள் குறிப்பால். (௪௭)

அந்த திக்குணி பற்பக லிருந்துழி யயன்சே
யென்ன கின்றிடு தக்கனென் பவனவ ணெய்தி
யுன்னை நேர்ந்துசென் றெடுத்தலுங் குழவியி னுருவாய்
மன்னி யாங்கவன் பன்னிபாற் சிறுமியாய் வளர்தி. (௪௮)

ஐந்தி யாண்டொடு மளவைநிற் ககன்றுழி யதற்பின்
புந்தி யாவமோ டெமைநினைந் தருந்தவம புரிதி
வந்தி யாமது காணுறு மணஞ்செய்து மறையா
லிந்த மால்வரை யிடையுனைத் தருதுமென் றிசைததான். (௪௯)

இசைத்த வாசக முணர்தலு மிறையுரத் தழுந்தத்
தசைத்த பூண்முலை யுமையவ ளன்னவன் சரணின்
மிசைத்தன் வார்குழ றைவர வணங்கியே விடைபெற்
றசைத்த சிந்தைய ணீங்கின ளுலகுநோற் றதனல். (௫௦)

ஆதி தேவனை யொருவியே புடவியி லணுகி
யோத வேலையை மாறுகொள் காளிந்தி யுழிப்போய்
வேத மூலநேர் வால்வளை யுருக்கொடு விளங்கி
யேத மிலலதோர் பதுமபீ டத்தின்மே லிருந்தாள். (௫௧)

தெளித ருஞ்சிவ மந்திரஞ் சிந்தனை செய்தே
யளவில் பற்பக லன்னைநோற் றிருந்தன ளவட்கண்
டுளம கிழ்ந்தெடுத் தேகுவா னேங்குகா ளிந்தி
நளிகொள் சிந்துவிற் றக்கனுற் றனைவினி நவில்வாம். (௫௨)

திருவிருத்தம உ௪௨.

வசனம்.

பின்பு, திருக்கயிலாயததில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை அவர் இடப்பாகத்தில் அமர்ந்திருக்கும பராசத்தியானவள் வணங்கி, இறைவனே! உன் உண்மைஞானத்தை அடியேனுக்குப் போதித்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, இறைவனும் அவ்வாறே தனது ஒப்பற்ற ஞானநிலையைப் பலவகையாய்த் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் அருளிச்செய்ய, அதைககேட்ட சுந்தரியானவள், சுவாமி! தேவரீருக்கு உருவமில்லையென்றருளினீர், பின்பு, பஞ்சமூர்த்திகளாகிய தோற்றங்களைக்காட்டிய காரணம் யாதென்றுவினவ, இறைவன் சொலலலாயினா, எமக்கு எக்காலத்தும் உருவமில்லையாயினும் பஞ்சமூர்த்தங்களும் எமதருளுருவமென்றருளிச்செய்ய இறைவியும் மனமகளித்து, அவ்வகையுருவெல்லாம் தேவரீா அருளினல் உண்டாகின்றதனல் தேவரீர் அருளே எனதுருவென்பதை மெய்யாயுணர்ந்தேன். அவையாவும் என்னிடத்தில் தோன்றினவேயாம என்று மகிழ்ந்தபோது, இறைவன், அவளைநோக்கி, பெணணே! எமக்கெதிரே உனபுகழைப் பெரிதாகப் பேசினய். எல்லாவுயிர்களுள்ளும் வியாபித்துவிளங்குவோம. யாம நீங்குவோமாயின் அவையாவும் அசைவற்றுச் சடமாயிருக்கும், ஆதலால் உன்னிடத்தும யாம் பொருந்தாதபோது உன்னுயிரும் உணர்ச்சிபெறுது அதனைக்காட்டுவோம், குறிப்பாயறிந்துகொள்வாயென்று பிரமன் முதலாகிய உயிர்களைப் படைக்குந்தொழிலை நீத்தினர். உடனே எல்லாவுயிர்களும் இயங்காது மாய்ந்துபோயின. இதைக்கண்ட புகவதி பயந்து சுவாமீ, தேவரீர் என்பொருட்டு உமது சர்வவியாபகத்தையொழிந்ததனல் எல்லாவுயிர்களும இயக்கமொழிந்தன. அடியேன்செய்த பிழையைப் பொறுத்துச் சகலப்பிராணிகளையும முன்போலவே இயஙகுவிக்கவேணடுமென்று வேண்ட, இறைவன் திருவுளமிரஙகி, சிருஷ்டி விருத்தியாகும்பொருட்டுத தமதருள பெற்ற உருத்திரகோடி வருக்கத்தார்க்கு முன்புணாவுணடாகக அவர்கள் படைப்பு மல்குவதாகப் பரமசிவத்தை அருச்சிக்கிறபோது இறைவன் தோற்றங்காணுது வருந்திப் பூமியில், திருவிடைமருதூரிற்சென்று, வானிற்கதிரோனின்றி எஙகும் பேரிருள் மூடினமையால், இந்நாள் பரமசிவத்தைப் பூசிக்கக்கடவோமென்று துணி

ந்து, பூசைக்குரிய உபகரணங்களையமைத்து பிரம விட்டுணுக்கள் இரவில் ஆராதித்தவாறே வழிபடக்கருதி, விபூதிருத்ராக்ஷங்களை யணிந்து, பஞ்சாக்ஷரத்தை யுச்சரித்து, இறைவனை ஆவாகநம்பண்ணி, திருமஞ்சநாதி ஷோடசோபசாரங்களுஞ்செய்து, கொன்றைமலர் முதலியவற்றால அருச்சித்து, நான்குசாமங்களினும் இறைவன் திருமந்திரங்களை யுச்சரித்துப் பூசித்து, திரட்டுப்பால் பாற்சோறு முதலியவற்றால் நிவேதித்துப் போற்றிவருங்காலத்தில், அந்தப் பூசையைவிரும்பி, உருத்திரகோடிகளுக்குப் பிரசந்நமாய், அவர்கள் எண்ணத்தை யீடேற்றத் திருவுளமபற்றி, சகல சீவராசிகளையும் சிருஷ்டிக்க நினைத்தவுடன், பிரமன், விட்டுணு, இந்திரன் முதலிய தேவர்களும் மற்றைய நரகர் மானிடர் முதலியோர்களும், விலங்குகள் பறவைகள் முதலாயினவும் நித்திரைநீங்கி யெழுந்தாற்போல எழுந்திருக்க, சூரியசந்திராதிக் கிரகங்களும் அஷ்டதிக்குப்பாலகரும் சேடன் முதலியோரும தததம் தொழில்களைச்செய்ய முயன்றனர். இறைவனுணையால் எல்லாவுயிர்களும் முன்போலவே நிலைபெற்றுவிளங்கின. இச்செயல்களெல்லாவற்றையுங் கண்ட தேவாகள் இறைவனைவாழ்த்தினார்கள். உருத்திரக்ணங்கள் எத்தினார்கள். அவர்களைநோக்கி, நீஙகள் பக்தியோடு பூசித்தீர்கள். உஙகளுக்குவேண்டிய வரங்களைத்தருவோம். கேட்கக்கடவீரென்றலும், அவர்கள் சுவாமீ! இப்படியே சாமங்கடோறும் இரவில பூசிப்போருக்கு, சிவராத்திரிப் புண்யகாலப்பயனைத் தரல் வேண்டுமென்றார்கள். அவ்வாறே யாகவென்றருள்செய்து, கயிலைக்கெழுந்தருளினார். உருத்திரகணங்களும தத்தம் பதங்களிற்சேர்ந்து தமது தொழிலைநடத்தியிருந்தார்கள். பிரம விட்டுணுக்கள் முதலியோரும் விடைபெற்றுப்போய்த் தமது தொழில்களை நடத்திவந்தார்கள். பிறகு பராசத்தியானவள் இறைவனைநோக்கி, சீவராசிகள்செய்யும வினைகள் என்னைச்சேரக் காரணமென்னவென்றுகேட்க, நீ என்னையிகழ்ந்தகாரணத்தால் யாம் விகற்பித்து உயிர்களிடத்துலவாமல் நீங்கினேம, ஆதலால் அவையுணர்வற்றுப் பிறகு எமதருளால எழுந்துணர்வுற்றன. ஆதலால் அப்பாதகம் உன்னை யணுகிற்று, என்று அருளிச்செய்ய. இறைவி அஞ்சி, என்பிழையைப் பொறுக்கவெனப்போற்ற, இறைவர் அவளைநோக்கி, நீ காளிந்திநதியில் பிரணவவடிவாகிய வலம்புரிச்சங்கின்வடிவுகொண்டு தவஞ்செய்யக்கடவை, சிலநாளில் தக்கன் அங்குவந்து உன்னையெடுக்க நீ குழந்தையாவாய்; அவனிடத்தில நீ வளருங்காலத்தில் உனக்கறிவுதோன்றி எம்மைக்கருதித் தவஞ்செய்வை, அப்போது யாம்வந்து உன்னைமணந்து இங்கே யழைத்துவருவோமென்றருள அப்படியே இறைவியுமபோய்த தவஞ்செய்திருந்தாள். இனி அந்தப் பராசத்தியானவள் தக்கனிடத்தையடையுஞ் சரித்திரத்தைச் சொல்லுவோம்.

உமைகயிலைநீங்குபடலமுற்றிற்று.

---

# காளிந்திப்படலம்.



நீளுந் தகைசேர் நிலமா மகடன்
கோளுந் தியபூங் குழல்வார்ந் தெனலாய்
நாளுந் தியவி நனுகிக் கரிதாங்
காளிந் தியெனுங் கடிமா நதியே. (௧)

முத்துங் கதிரும் முழுமா மணியுந்
தொத்துந் தியசெந் துகிரும் மகிலு
நத்தும் பிறவுந் தனிநல குவபோ
லொத்துந் துவதவ் வொலிநீர் நதியே. (௨)

எண்மே னிமிரும் மிருநீர் பெருகி
விண்மே லுலவா விரிகின் றதொரீஇ
மண்மே லொலியா மலிகார் தழுவிக்
கொண்மூ வரவொத் துளதக் குடிஞை. (௩)

மீனூர் விழிமங் கையர்விண் ணுறைவோர்
வானூர் செலவின் வருநீ ளிடையிற்
கானு மெனவுங் கடலா மெனவுந்
தானு குவதத் தடமா நதியே. (௪)

பாரின் புடையே படரந் நதியை
நேரும் படியோர் நெடுநீ ருளதோ
காருந் தெளியாக் கடலீ தெனவே
யாரும் பெருமைத் தஃதா யிடவே. (௫)

துப்பா யினதாய்த் துவரத் தகைசே
ரப்பா யுவரற் றழிவில் பொருளின்
வைப்பா யருளால் வருமவ் வொலியற்
கொப்பா குவதோ வுவரா ழியதே. (௬)

பாலோங் கியவிற் பணிலம் படர்வா
ணீலோங் கியவம் பொடுநே மியெலா
மேலோங் கியதன் மையின்மெய்த் துயில்கூர்
மாலோன் றனையொத் ததுமற் றதுவே. (௭)

மீன்பட் டமையால் விரியுந் தொழுதிக்
கான்பட் டிடவுங் கழுநீ ருறலாற்
றேன்பட் டிடவுந் திரைபட் டிடவும்
வான்பட் டிடுமோ சைமலிந் ததுவே. (௮)

ஊன்பெற் றலகில் லுயிர்பெற் றகிலம்
வான்பெற் றவள்வால் வளையா யுறவெங்
கோன்பெற் றிடுமக் கொடிமெய் யுருவந்
தான்பெற் றதையொத் ததுமா நதியே. (௯)

வேறு.

நஞ்செனக் கொலைசெய் கூர்ங்க ணங்கையர் குடையக் கூந்தல்
விஞ்சிய நானச் சேறும் விரைகெழு சாந்து மார்ந்து
தஞ்செனக் கொண்ட நீலத் தன்மைகுன் றாது மேலோ
ரஞ்சனப் போர்வை போர்த்தா லன்னதா லனைய நீத்தம். (௧௦)

இவ்வுல கத்தோ ருள்ளத் தெய்திய விருளு மன்னோர்
வெவ்வினை யிருளுந் தன்பா லீழ்த்தியே விளங்கி யேக
வவ்விரு ளனைத்துந் தான்பெற் றணைந்தென வங்கங் காராய்ச
செவ்விதி னொழுகிற றம்மா சீர்திகழ் யமுனை யாறே. (௧௧)

எத்திறத் தோரு மஞ்ச வெழுந்துமால் வரையிற் சார்ந்து
மெய்த்தலை பலவு நீடி விரிகதிர் மணிகள் கான்றிட்
டொத்திடு கால்கண் மேவி யொலிகெழு செலவிற் றாகி
மைத்துறு புனறகா ளிந்தி வாசுகி நிகர்தத தன்றே. (௧௨)

நிலமக ளுரோம வல்லி நிலையென நகிலி னுப்ப
ணிலகிய மணித்தா ரென்ன விருங்கடற் கேள்வன் வெஃகுங்
குலமக ளென்ன நீலக் கோலவா ரமுத மென்ன
வுலவிய யமுனை யெம்மா லுரைக்கலாந் தகைமைத் தாமோ. (௧௩)

இன்னபல் வகைத்தாய் நீடு மிரும்புனல் யமுனை யின்கண்
மன்னிய நெறிசேர் மாசி மகப்புன லாட வேண்டி
யங்கிலத் தவாகள யாரு மடைந்தன ருலக மெல்லாந்
தன்னிக ரின்றி யாளுந் தக்கனித் தன்மை தேர்ந்தான். (௧௪)

மெய்ப்பய னெய்து கின்ற வினைப்படு மூழின் பாலா
லப்பெரு நதியி லஞ்ஞான் றாடலை வெஃகித் தக்கன்
மைப்படு கூர்ங்கண் வேத வல்லியை மகளி ரோடு
மொப்பில்பல் சனத்தி னோடு மொல்லைமுன் செல்ல வுய்த்தான். (௧௫)

மாற்றமர் செம்பொற் கோயில் வயப்புலித் தவிசின் மீதாய்
வீற்றிருந் தருட னீங்கி விரிஞ்சனு முனிவர் யாரு
மேற்றதோ ராசி கூற விமையவர் கணமா யுள்ளோர்
போற்றிட யமுனை யென்னும் புனலியா றதன்கட் போனான். (௧௬)

போனதோர் தக்க னென்போன் புரைதவிர் புனற்கா ளிந்தித்
தூநதி யிடைபோய் மூழ்கித் துண்ணென வரனு மோர்பாற்
றேனிமிர் கமல மொன்றிற் சிவனிடத் திருந்த தெய்வ
வானிமிர் பணிலம் வைக மற்றவ னதுகண் ணுற்றான். (௧௭)

வேறு.

கண்ணுறுவா னனிமகிழ்ந்தே கையினையுய்த் தெடுத்திடுங்காற் றாமர் பெற்ற
பெண்ணுருவத் தொருகுழவி யாதலும்விம மிதப்பட்டுப் பிறைதாழ் வேணி
யண்ணலருள் புரிவரத்தாற் கவுரியே நம்புதல்வி யானா ளென்னு
வுண்ணிகழ்பே ருணர்ச்சியினாற் காணுற்றுத் தேவர்குழா மொருவிப் போனான்.

அந்நதியின் பான்முன்ன ரவன்பணியாற் சசிமுதலா மணங்கி னோர்க
டுன்னினராய் வாழ்த்தெடுப்பத் துவன்றுபெரு மினஞரோடே தூசி ராட
மன்னுமகன் கரையணுகி மறையிசைகேட் டமர்வேத வல்லி யென்னும்
பன்னிதனை யெய்தியவள் கரத்தளித்தா னுலகீன்ற பாவை தன்னை. (௧௯)

ஏந்துதனிக் குழவியினைத் தழீஇக்கொண்டு மகிழ்ந்துருயத் திழிபா லார்த்திக்
கார்தண்மலர் புரைசெங்கைச் சூரமகளிர் போற்றிசைப்பக் கடிதி னேகி
வாய்ந்ததன திருக்கையிடைப் புக்கனளாற் றக்கனுகண் வானோரோடும்
போர்துமணிக் கோயிலபுக்குத் தொன்முறைபோ லரசியற்கை புரிந்திருந்தான்.

ஆக திருவிருத்தம் ௨௬௨.

வசனம்.

காளிந்தியென்றொரு நதியுண்டு, அந்நதியில் மாசிமகத்தில் நீராடுதற்கு உலகிலுள்ள ஜனங்களெல்லாரும் போவதைக்கண்ட தக்கன், தானும் அதில் மூழ்கவேண்டுமென்ற ஆவலுடையவனாகி முந்தித் தன் மனைவியை யனுப்பிப் பின் தானும்போய் அதின் முழுகிவரும்போது, பராசத்தியானவள் சங்கினுருவங்கொண்டு அந்நதியில் தவஞ்செய்திருப்பது கண்டுகளித்துத் தன்கையிலெடுத்தவுடனே, அது கோடிசூரியப்பிரகாசமாய்ப் பெணகுழந்தையாக விளங்கக்கண்டு, இது பரமசிவனது கருணையால் நமக்குக் கிடைத்ததென்று மனமகிழ்ந்து, கங்கையில் மூழ்கிவந்து குழந்தையைத் தன்தேவிகையிற் கொடுக்க, அவள் விருப்பத்தோடுவாங்கி அக்குழந்தையின் அழகைக்கண்டு உடல்பூரித்துத் தழுவி முத்தமிட்டுப் பாலூட்டித் தெய்வமாதரோடு விரைந்து தன்மாளிகையை யடைந்தனள். தக்கனும் தன் அரண்மனையையடைந்து சபாமண்டபத்தில் வீற்றிருந்து அரசு செலுத்துவானாயினன்.

காளிந்திப்படலமுற்றிற்று.

# உமைதவம்புரிபடலம்.



கொண்டுதன தில்லிற் குறுகியபின் வேதவல்லி
மண்டுபெருங் காதலொடு மகண்மையா வளர்த்தனளா
லண்டமள வில்லனவு மலகிலா வுயிர்தொகையும்
பண்டுதன துந்தியினுற் படைத்தருளும பராபரையை. (௧)

வளருமதிக் குழவியென மாநிலமேற் றவழ்தலொடுந்
தளருநடை பயில்கின்ற தாறுமுடன் றப்பியபின்
முளையெயிறுள் ளெழுபோத முளைத்ததெனத் தோன்றுதலு
மளவிலுயிர் முழுதீன்ற ளோந்தாண்டு கிரம்பினளால். (௨)

ஆறுன வாண்டெல்லை யணைதலுமம் பிகைதனக்கோர்
கூறுன பிரான்றன்னைக் கோடன்முறை குணித்தனளாய்
மாறுது நோற்பலென மனங்கொண்டி யாய்தனக்கும்
பேறுன தக்கனெனும் பெருந்தவற்கு மிஃதுரைத்தாள். (௩)

கூறுவதொன் றுமக்குண்டாற் குரவீர்கா ளிதுகேண்மி
னூறுபுனை செஞ்சடிலத் தண்ணலுக்கே யுரித்தாகும்
பேறுடையே னவன்வதுவை பெறுவதற்கு நோற்பலியான்
வேறொருசார் கடிமாடம் விதித்திகென் னைவிடுதிரென. (௪)

நன்றென்று மகிழ்சிறந்து நல்லாயுந் தந்தையுமாய்ப்
பொன்றுஞ்சு தமதிருக்கைப் பொருவினகர்ப் புறத்தொருசா
ரன்றங்கோர் கடிமாட மணிசிறக்கப் புனைவித்துச்
சென்றங்கட் டவமியற்றச் சேயிழையை விடுக்கின்றார். (௫)

முச்சகமுந் தருகின்ற முதல்விதனைத் தம்மகளென்
றிச்சைகொடு நனிபோற்றி யிருவருநா ரொடுநோக்கி
யுச்சியினைப் பன்முறைமோந் துயிர்த்தம்மோ வுன்னுளத்தி
னச்சியநோன் பியற்றுகென நாரியரோ டேகுவித்தார். (௬)

மாதவர்பால் விடைபெற்று வல்விரைவுற் றேகுதலும்
வேதவல்லி யதுகாணு மெய்க்கணவன் றனைநோக்கிப
பேதையிவள் சிவனையுணர் பெற்றிமையென மொழிகென்ன
வீதனைய ணிலைமையென யாவுமெடுத் தியம்புகின்றான். (௭)

பொங்குபுனற் றடத்திடையான் புரிகின்ற தவங்காணூஉச்
சங்கரனங் கெய்திடலுந் தாழ்வில்வரம் பலகொண்டுன்
பங்கினளென் மகளாகப் பண்ணவநீ யென்மருகாய்
மங்கலநல் வதுவையுற மறையவனாய் வருகெனறேன். (௮)

ஆற்றாக நின்பாலென் றருள் செய்தா னம்முறையே
கற்றாவி னேறுயாத்த கண்ணுதலோன் முழுதுலகும்
பெற்றாளை யமுனையென்னும் பெருநதியி னுய்ப்பநம்பா
லுற்றாண்மற் றென்னான்று முணர்வினொடு வைகினளால். (௯)

மாதவமோர் சிலவைகல் பயினறுமதிக் கோடுபுனை
யாதிதனக் கன்பினளா யருந்துணைவி யாகின்றாள
பேதையென நினையற்க பெருமாட்டி தனையென்னக்
காதலிவிம் மிதமெய்திக் கரையிலா மகிழ்சிறந்தாள. (௧௦)

இந்நிலைசேர் முதுகுரவ ரேவலினாற் சிலதியராங்
கன்னியர்கள் சூழ்போதக் கடிமாடம் போந்துமையாள
சென்னிநதி புனைந்தபிரான் றிருநாம முள்ளுறுத்தி
நன்னியமந் தலைநின்று நாளுநனி நோற்கின்றாள். (௧௧)

வேறு.

ஈண்டுறு மடவார் சூழ விமமுறை யிருத்த லோடு
மாண்டுபன் னிரண்டு சென்ற வம்பிகைக் கனைய காலை
வேண்டிய வேண்டியாங்கு விரதருக் குதவும வண்மை
பூண்டிடு பரம னன்னாள் புரிந்திடு தவத்தைக் கண்டான். (௧௨)

கண்டுமற் றவளை யாளக் கருதியே கயிலை யென்னும்
விண்டினை யிகந்து முந்நூல் வியன்கிழி தருபபை யார்த்த
தண்டுகைக் கொண்டு வேதத் தலைநெறி யொழுக்கம் பூண்ட
முண்டவே தியனிற் றோன்றி முக்கணெம் பெருமான் வந்தான். (௧௩)

தொக்குலாஞ் சூலத் தண்ண றெல்புவி யுய்ய வேதச்
செக்கானூ புரத்தாள் பின்னுஞ் சேப்புற மண்மேற் போந்து
தக்கமா புரத்தி னண்ணிச் சங்கரி யென்னுந் தொல்பேர்
மைக்கணா ளோங்குந் தெய்வ மல்லன்மா ளிகையிற் புக்கான். (௧௪)

அன்னதோற் றின்ற கோட்டத் தணுகியே யளப்பின் மாதர்
முன்னுறு காவல் போற்று முதற்பெருங் கடையிற் சாரக்
கன்னிய ரெவரும் வந்து கழலிணை பணித லோடு
மென்னிலை தலைவிக் கம்ம வியம்புகென் றிசைத்து நின்றான். (௧௫)

நிற்றலுங் கடைகாக் கின்ற நேரிழை மகளிர் சில்லோர்
பொற்றொடி யுமைபா லெய்திப் பொன்னடி வணங்கி யீண்டோர்
நற்றவ மறையோ னின்பா னண்ணுவான் விடுத்தா னென்ன
மற்றவன் றன்னை முன்கூய் வல்லைநீர் தம்மி னென்றாள். (௧௬)

தம்மினீ ரென்ற லோடுந் தாழ்ந்தனர் விடைபெற் றேகி
யம்மினோர் நின்ற நாப்ப ணரிவையர் கடைமுன் னேகி
வம்மினோ வடிக ளெம்மோய் வரவருள் புரிந்தா ளென்னச்
செம்மலும் விரைவிற் சென்று தேவிதன் னிருக்கை சேர்ந்தான். (௧௭)

தேவர்க டேவ னங்கோர் சீர்கெழு மறையோன் போலாய்
மேவிய காலை யம்மை விரைந்தெதி ரேகி மற்றென்
காவலர் தம்பா லன்ப ரிவரெனக் கருதி யன்னான்
பூவடி வணங்கி வேண்டும் பூசனை புரிந்து நின்றாள். (௧௮)

சேயமொ டருச்சித் தேத்தி நின்றவ டன்னை நீல
ஞாயிறு நிகாத்த மேனி நகைமதி முகத்தா யீண்டியா
மேயின தொன்றை வெஃகி விரைந்தருள் புரிதி யென்னி
னுயது புகல்வ மென்ன வம்மையிங் கிதனைச் சொல்வாள். (௧௯)

எனக்கிசை கின்ற தொன்றை யிசைததியே யென்னி னின்னே
நினக்கது கூடு மிங்க னினைததெதென் மொழிதி யென்ன
வுனக்கடி மணததி னெய்த வுற்றன னதுவே நீயென்
றனக்கருள் புரியு மாறு தடுதெதிர் மொழிய லென்றான். (௨0)

வேறு.

அத்தனீ துரைத்தலோடு மம்மையங்கை யாற்செவி
பொத்திவெய்தெ னக்கனன்று புந்திநொந் துயிர்த்துநீ
யித்திறம் புகன்றதென்னை யென்னையாளு கின்றதோர்
நித்தன்வந்து வதுவைசெய்ய நீடவஞ்செய் தேனியான். (௨௧)

என்னலோடு மினையனென்றி யாருமென்று மிறையுமே
முன்னறைத நின்றவாதி முதலவனின்னை வதுவையான்
மன்னுகின்ற தரிதுபோலு மாதவங்க ளாற்றியே
கன்னிநீ வருந்தலென்று கழறமாது புகலுவாள். (௨௨)

பரமனே விரும்பிவந்து பாரின்மா மணஞ்செய
வரியமாத வங்கள்செய்வ லன்னதற்கு முன்னவன்
வருகிலாது தவிர்வனென்னின் வவிதினவி நீப்பன்யான்
சரதமீது பித்தனே சழக்குரைத் திருத்திநீ. (௨௩)

போதிபோதி யென்றுதானோர் புடையினேக வுவகையாய்
மாதுநின்ற னன்புமுள்ள வன்மைதானு நன்றெனு
வாதிதேவ னேனையோர்க ளறிவுறாத வகையவள்
காதனீடு தனதுதொல் கவின்கொண்மேனி காட்டினான். (௨௪)

ஆதிதன்றொ ருருவுகாட்ட வமலைகண்டு மெய்பனித்
தேதிலாரை ளாகினேன் திகழ்ந்தனன் னெனாவவன்
பாதபங் கயங்களிற் பணிந்துபோற்றி செய்தியான்
பேதையே னுணர்ந்திலேன் பிரான்மறைந்து வந்ததே. (உ௫)

உன்னருட்க ணெய்துமே லுணர்ச்சியெய்தி நிற்பன்யான்
பின்னொர்பெற்றி யில்லையாற் பிழைதததுண்டு தணிதிநீ
யென்னுநற் றவத்திதன்னை யினிதினெந்தை கண்ணுறீஇ
நின்னியற்கை நன்றுநன்று நீதுளங்க லென்றனன். (உ௬)

என்றநாத னைப்பினு மிறைஞ்சியெம் பிராட்டிபா
னின்றமாத ரைத்தனாது நேத்திரத்தி னோக்கலா
ளொன்றுமுன்னல் செய்திலா ளுலப்பிலெந்தை தொல்புகழ்
நன்றுபோற் றெடுத்துநிற்ப நாட்டநீ ருகுத்தரோ. (உஎ)

கண்டுபாங்க ராயமாதர் கன்னியெம்மை நோக்கலாண்
மண்டுகாத லந்தணாளன் மாயம்வல்ல னேகொலோ
பண்டுநோந்து ளாரையுற்ற பான்மைபோலு மேவியா
முண்டுதேரு மாறதென் றுளததிலைய மெய்தினர். (உஅ)

சிலதியர்க்குள் விரைவிரைந்து சிலவர்சென்று தக்கனென்
றுலகுரைக்கு மொருவன்வைகு முறையுணண்ணி யுன்மக
ளிலைமையீது கேளென நிகழ்ந்தயாவு முறையினால்
வலிதுகூற மற்றவன் மனத்திலோர்த லுற்றனன். (உ௯)

போதநீடு புந்தியாற் புலப்படத் தெரிந்துழி
யாதியந்த மின்றிநின்ற வண்ணல்வந்த தாகலு
மேதிலா மகிழ்ச்சிபெற் றெழுந்துதுள்ளி யான்பெறு
மாதையங்க வற்களிப்பன் வதுவையாற்றி யென்றனன். (௩0)

ஆ. திருவிருத்தம் உ௬உ.

---

வசனம்.

பிறகு அந்தக் குழந்தையைச் சகல சவுக்கியத்தோடும், தக்கன் மனைவியாகிய வேதவல்லி யென்பவள் வளர்த்துவருங்காலத்தில், சந்திரன் போல காளொருமேனியாய் வளர்ந்து தளர்நடைப் பருவந்தாண்டி, ஞானம் அருமபினதை நிகர்த்துப் பல்வரிசைதோன்றி ஐந்தாண்டு நிரம்பியபின், பரமசிவனைச் சேரத் தவஞ்செய்யக்கருதி, தாய்தந்தையரைநோக்கி, நான் பரமசிவனைநோக்கித் தவஞ்செய்து அவரை மணக்கவேண்டும். தவஞ்செய்யத்தகுதியான இடமொன்றை யெனக்குக் காட்டவேண்டுமென்று கேட்க, அவர்களும் தங்கள் அரண்மனைக் கருகில் கன்னிமாடமொன்றைச் செய்வித்து, அம்மா! உன் கருத்தின்படி தவஞ்செய்யக்கடவையென்று அன்போடு சொல்ல, உமையும் விடைபெற்றுப் போருந் தருணத்தில், வேதவல்லியானவள் தன் கணவனாகிய தக்கனை நோக்கி, நமது பெண்ணானவள் அதிபால்யையாயிருந்தும தவஞ்செய்யக்காரணமென்னவென்று கேட்க, ஆதிகாலத்தில் நான் மானதமடுக்கரையில் தவஞ்செய்தபோது பரமசிவன் தோன்றி, உனக்கு என்ன வேண்டுமென்று கேட்க, நான் அவரை வணங்கி, தேவ

நீர் எனக்கு மருமகனாகவும் உமது இடப்பாகத்திலிருக்கும் உமையவள் எனக்குப் பெண்ணாகவும் வரங்கொடுக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டேன். அவர் அவ்வாறே இவளைக் காளிந்தி மடுவிற்செலுத்த, அங்கு நான் சென்றபோது கண்டெடுத்து வந்தேனென்று தக்கன் சொல்ல, வேதவல்லி வியப்படைந்து மகிழ்ந்திருந்தாள். பிறகு உமையவள் கன்னிமாடத்தைச்சேர்ந்து அரியதவஞ்செய்து கொண்டிருக்கையில், மங்கைப்பருவமடைந்தனள். அப்போது பரமசிவன் இவளுடைய தவவுறுதியைச் சோதிக்கத் திருவுளங்கொண்டு, ஒரு கிழவேதியனாகித் தள்ளாடிக்கொண்டுவர, அவர்வரவைத் தாதியர் அறிவிக்க அறிந்த உமையவள் எதிர்கொண்டுவந்து அன்புடனேயழைத்துப்போய் உபசரித்து வணங்கிநிற்க, இறைவா அவளைநோக்கி, பெண்ணே! யாமொரு பொருளைவிரும்பி யிங்குவந்தோம். அதனைமறுக்காமல் கொடுப்பதானால் சொல்வோமென்றார். அதுகேட்ட உமையவளும் தடையிராது, சொல்லக்கடவீரென்றாள். அதுகேட்ட பிராமணர், நாம் உம்மை மணம்புணர வந்தோம், அதற்கு நீ சம்மதிக்கவேண்டுமென்றார். அதுகேட்ட வுமையவள் ஓ கிழப்பிராமணா! நான் சிவபெருமானை மணக்கவிரும்பித தவஞ்செய்யாநின்றேன், நீ யிந்தவார்த்தைகள் சொல்லத்தகாது போவென்று மிகுகோபங்கொண்டு சொன்னாள். அதுகேட்ட பிராமணன், அவளைநோக்கி, பெண்ணே! மகாத்துமாக்களாலுங்காணப்படாத இறைவன் உன்னை மணஞ்செய்துகொள்வானென்கிற எண்ணத்தை விட்டுவிடு; ஏன் வீணாக வுன் இளமைப்பருவததைக் கழித்துவிடுகிறாய், நான் சொன்னபடியே சம்மதிப்பையானால் பெரும்பேற்றை யடைவாயென்றுசொல்ல, இறைவி மிகச்சினந்து, நீர் வெளியேபோமென்று சொல்லிவிட்டு, அயலில் ஓரிடத்திலிருந்தாள். அப்போது இறைவா அவர்களுக்குக் காட்சிகொடுத்தருள, இறைவியானவள், சிவபிரானது தரிசனத்தால் மெய்யுணர்வுபெற்று, சுவாமீ! உம்மை யாரோ ஒருகிழவேதியனென்றெண்ணி அவமதித்துப்பேசின பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று வணங்கிநின்றாள். இதைக்கண்ட சேடியர்போய்த் தக்கனிடத்தில் இந்தச் செய்தியைச்சொல்ல, அவன் அவ்வேதியரூபமாய் வந்தவர் பரமசிவனேயென்றறிந்து மனமகிழ்ந்து, ஆநந்தக்கூத்தாடி, என்புதல்வியை அந்தப் பரமசிவனுக்கே மணமுடிததுக்கொடுப்பேனென்று மனவுறுதிகொண்டான்.

உமைதவம்புரிபடலமுற்றிற்று.

---

# திருமணப்படலம்.

தொல்லையில் வதுவையந் தொழி னடாத்திட
வொல்லுவ தெற்றையென் றுளங்கொண் டாய்வுழி
நல்லன யாவுமங் நாளி னண்ணலு
மெல்லையி லுவகைமிக் கேம்ப லெய்தினான். (க)

அண்ணலுக் கிப்பக லணங்கை யீவனென்
றுண்ணிக மூர்வமோ லைத்திற் றாக்கியே
விண்ணவர் யாவரும் விரைந்து செல்லிய
தண்ணென வொற்றரைத் தூண்டி னானரோ. (உ)

தன்னக ரணிபெறச் சமைப்பித் தாங்கதற்
பின்னுற முன்னினும் பெரிது மோர்தக
மன்னுறு கோயிலே வதுவைக் கேற்றிடப்
பொன்னகர் நாணுறப் புனைவித் தானரோ. (௩)

கடிவினை புரிதரக் காசின் றுக்கிய
படியறு திருநகர் பைய
கொடியுறழ் மெல்லிடைக் குமரி பால்வரு
மடிகளை யணுகின னடிகள் போற்றியே. (௪)

அணுகின னண்ணனீ யணைந்து மற்றிவண்
மணநய வேட்கையான் மாது நோற்றன
ணணுகுதி யடியனே னகரின் பாலெனு
நுணுகிய கேள்வியா னுவன்று வேண்டவே. (௫)

இறையவ னன்றென வெழுந்து சென்றொராய்
நறைமலர் செறிகுழ னங்கை யாளொடு
மறலகெழு மனத்தினன் மனையுற் றனரோ
வறைதரு நூபுரத் தடிகள் சேப்பவே. (௬)

பூந்திரு கிலவிய பொருவில் கோயின்முன்
காந்தியொ டேகலுங் கடவுண் முன்னரே
வாய்ந்ததொ ரெண்வகை மங்க லங்களு
மேந்தின ரேந்திழை மார்க ளெய்தினார். (௭)

தையலர் மங்கலத் தன்மை நோக்கியே
வையக முதவிய மங்கை தன்னுட
னையனு முறையுளி னடைந்து தானொரு
செய்யபொற் பீடமேற் சிறப்பின் வைகினன். (௮)

அன்னது காலையி லாற்று நோன்புடைக்
கன்னியை மறைக்கொடி கண்டு புல்லியே
தன்னுறு மந்திரந் தந்து மற்றவள்
பின்னலே மென்மெலப் பிணிப்ப நீக்கினள். (௯)

சிற்பரை யோதியின் செறிவை யாய்ந்தபின்
பொற்புறு நானநெய் பூசிப் பூந்துவர்
நற்பொடி தீற்றியே நவையில் கங்கைநீர்
பற்பல குடங்களின் பாலுய்த் தாட்டினள். (௧0)

ஆட்டினன் மஞ்சன மணிய பூந்தொடை
சூட்டினள் பொற்கலை சூழ்ந்து பல்கலன்
பூட்டின ளெம்பிரான் புடையி லுய்த்தன
ளீட்டிறு முயிர்த்தொகை யீன்ற வாய்தனை. (௧௧)

மண்வணி முற்றுறு மாது போந்துதன்
கணவன தொருபுடை கலந்த காலையிற்
பணைமுத லாகிய பல்லி யங்களு
மிணையற வியம்பின ரியாரு மேத்தவே. (௧௨)

தூதுவ ருரைகொளீஇத் தூண்ணென் றேகியே
மாதவன் முதலிய வானு ளோரெலாம்
போதினை வளைதரு பொறிவண் டாமென
வாதியை யடைந்தன ரடிப ணிந்துளார். (௧௩)

வீழ்குறு மிழுதெனும் வெய்ய நோன்குரற்
காழ்கிளர் திவவுடைக் கடிகொள் யாழினை
யூழ்கிளர் கின்னர ருவண ரேந்துபு
கேழ்கிளர் மங்கல கீதம் பாடினார். (௧௪)

கானுறு பஃறலைக் காவு கான்றிடு
தேனுறு விரைமல ரடிகள் சிந்துபு
வானவர் மகளிர்கள் வணங்கி வாழ்த்துரை
யானவை புகன்றன ரமலை பாங்கரில். (௧௫)

எல்லைய தாகலு மிருந்த தக்கனுங்
கொல்லையின் மறைமொழி யுரைத்துத தன்மனை
வல்லிபோற் சிரகநீர் மரபின் வாக்குற
மெல்லென வரனடி விளக்கி னானரோ. (௧௬)

விளக்கிய பின்றையில் விரைகொள் வீமுதற்
கொளப்படு பரிசெலாங் கொணர்ந்து மற்றவற்
குளப்படு பூசனை யுதவி மாதினை
யளித்திட வுன்னின னமரர் போற்றவே. (௧௭)

சிற்கன வடிவினன் செங்கை யுள்ளுமை
நற்கர நல்குபு நன்று போற்றுதி
நிற்கிவ டன்னையா னேர்ந்த னன்னெனாப்
பொற்கர கந்தரு புனலொ டீந்தனன். (௧௮)

மூர்த்தமங் கதனிடை முதல்வ னம்பிகை
சீர்த்திடு மணவணி தெரிந்து கைதொழூஉ
நீர்த்தொகை கதிரொடு நிலவு கண்டுழி
யார்த்தென வழுத்தின ரமரர் யாவரும். (௧௯)

மாடுறு திசைமுகன் மணஞ்செய் வேள்வியிற்
கூடுறு கலப்பைகள் கொணர்ந்து நான்முறை
நேடினன் சடங்கெலா நிரப்ப மான்முத
லாடவ ரிசைத்தன ரமலன் வாய்மையே. (௨௦)

அன்னுழி யுருவமு மருவு மாகியு
முன்னுரு முணர்வுமா யுலகம் யாவிற்கு
நன்னயம் புணர்த்தியே நண்ணு நாயகன்
றன்னுரு வொளித்தன னருளின் றன்மையால். (௨௧)

மறைந்தன னிருத்தலு மகிணற் காண்கிலா
ளறந்தனை வளாக்குமெம் மன்னை நோற்றுமுன்
பெறும்பெரு நிதியினைப் பிழைத்து ளோரெனத்
துறந்தன ளுவகையைத் துளங்கி மாழ்கியே. (௨௨)

பொருக்கென வெழுந்தனள் பூவின் மீமிசைத்
திருக்கிளர் திருமுதற் றெரிவை மாதர்க
ணெருக்குறு சூழல்போய் நிறங்கொ டமுகத
துருக்கிய பொன்னென வுருகி விம்மினாள். (உங)

உயிர்த்தனள் கலுழ்ந்தன ளுணர்வு மாழ்கியே
யயர்த்தனள் புலர்ந்தன ளலமந் தங்கமும்
வியர்த்தனள் வெதும்பினள் விமலன் கோலமே
மயிர்த்தொகை பொடிப்புற மனங்கொண் டின்னுவாள். (உச)

புரந்தரன் மாலயன் புலவர் யாவரு
நிரந்திடு மவையிடை நிறுக்கும் வேள்விவா
யிருந்தனன் மாயையா லிறைவன் றண்ணெனக்
கரந்தன னுதவிற் கள்வன் போலுமால். (உரு)

எய்தியெற் கொண்டதோ ரிறைவன் றன்னையான்
கைதவ னேயெனக் கருத லாகுமோ
மெய்தளர் பான்மையின் வினையி னேனிவட்
செய்தவஞ் சிறிதெனத் தேற்ற லின்றியே. (உசு)

வேறு.

என்றென் றுன்னி யுயிர்த்திரங்கு மிறைவி செய்கை யெதிர்நோக்கி
மன்ற னாறுங் குழல்வேத வல்லி புல்லி மனந்தளரே
லுன்றன் கணவற் பெறும்வாயி றவமே யின்னு முஞற்றுகென
நின்ற திருவு நாமகளும் பிறரு மினைய நிகழ்த்தினரால். (உஎ)

அன்னை வாழி யிதுகேண்மோ வகில முழுது மளித்தனையா
லென்ன பொருளு நின்னுருவே யாண்டு நீங்கா நின்கணவன்
றன்னை மறைக்கு மறையுளதோ தவத்தை யளிப்பா னினைந்தனையோ
வுன்ன லரிதா நுமதாடன் முழுதும் யாரே யுணர்கிற்பார். (உஅ)

வாக்கின் மனத்திற் றொடர்வருநின் மகிணன் றனையு முன்றனையு
நோக்க முற்றோந் தஞ்சமென நுவறல் செய்யா வினையாவும்
போக்க லுறலோந் தோற்றமுறும் புரையுந் தீர்ந்தோம் போதமனந்
தேக்க லுற்றோ முய்ந்துமியாஞ் செய்யுந் தவமுஞ் சிறிதன்றே. (உகூ)

என்னா வியம்பி வாழ்த்தெடுப்ப விறைவி யவர்க்கண் டினிதருள்செய்
தன்னார் பொய்த லொருவிப்போ யருமா தவமே புரிவாளாய்
முன்னா முன்னைக் கடிமாட முயன்று போந்தா ளிவ்வனைத்து
நன்னா ரணனே முதலானோர் நோக்கி நனிவிம் மிதரானார். (ஙo)

எங்குற் றனன்கொ லிறையென்பா ரிஃதோர் மாய மெனவுரைப்பார்
மங்கைக் கொளித்த தென்னென்பார் வாரி காண்டு மேலென்பா
ரங்கித் தகைய பலபலசொற் றலமந் தேங்கி யதிசயித்துக்
கங்குற் போதின் மாசூர்ந்த கதிர்போன் மாழ்கிக் கவலுற்றார். (ஙக)

நோக்குற் றனைய பான்மைதனை நொய்திற் றக்க னனிகனன்று
தீக்கட் கறங்க வெய்துயிர்த்துச் செம்பொற் கடகக் கைபுடைத்து
மூக்கிற் கரந்தொட் டகம்புழுங்க முறுவல் செய்து முடிதுளக்கி
யாக்கத் தொடியாம் புரிவதுவை யாற்ற வழகி தாமென்றான். (ஙஉ)

வரந்தா னுதவும் பெற்றியினுன் மற்றென் மகடூஉ வயின்வாரா
விரந்தா னதனை யான்வினவி யியல்பின் வதுவை முறைநாடி
யிரந்தார் கின்ற சுரர்காண நெறியா னேர்ந்தே னேர்ந்ததற்பின்
கரந்தான் யாரு மானமுற நவையொன் றென்பாற் கண்டானே. (௩௩)

புனையுந் தொன்மைக் கடிவினையைப் புன்மை யாக்கி யூறுபுணர்த்
தெனையும் பழியின் மூழ்குவித்ததே யிறையு மெண்ணு தொளித்தானே
யனையுந் தாதை யுந்தமரு·மாரு மின்றி யகன்பொதுவே
மனையென் றுடு மொருபித்தன் மறையோ னுகின் மயல்போமோ. (௩௪)

ஆயிற் றீதே யவனியற்கை யறிந்தே னிந்நாள் யானென்று
தீயுற் றெனவே யுளம்வெதும்பித் திருமான் முதலாந் தேவர்தமைப்
போயுற் றிடுநும் புரதனென்று போக விடுத்துப் புனிதன்செய்
மாயத னையே யுன்னியுன்னி வதிந்தான் செற்றம் பொதிந்தானே. (௩௫)

பொன்னார் மேனிக் கவுரிமுன்னைப் பொலன்மா ளிகையிற் போந்துலப்பின்
மின்னார் செறிந்த பண்ணையுடன் மேவி யங்கண் வீற்றிருந்து
பன்னா ளீசன் றனையெய்தப பரிந்து நோற்கப் பண்ணவனோர்
நன்னா ளதனிற் றுபதன்போ னடந்தா னவட னிடந்தானே. (௩௬)

நலனேந் தியவெண் டலைக்கலனு நறிய களப நீற்றணியுங்
கலனேந் தியகண் டிகைதொடுத்த கவின்சேர் வடமுங் கடிப்பிணையு
மிலனேந் தியதா ளிடைமிழற்று நீடு மறையின் பரியகமும்
வலனேந் தியசூ லமும்பின்னல் வனப்புங் காட்டி வந்தனனே. (௩௭)

வேறு.

வந்துமை முற்பட வந்தவ னைக்கண்
டெந்தை பிராற்கினி யாரிவ ரென்னாச்
சிந்தனை செய்தெதிர் சென்றுகை கூப்பி
யந்தரி போற்றின ளன்புறு நீரால். (௩௮)

பற்றொடு சென்று பராய்த்தொழு மெல்லைப்
பெற்றம தன்மிசை பெண்ணிட மன்றி
மற்றுள தொல்வடி வத்தொடு சித்த
னுற்றன னவ்விடை யொண்டொடி காண. (௩௯)

பார்ப்பதி யாகிய பாவை நுதற்க
ணாற்புய னென்வயி னண்ணின னென்னா
வேற்புறு சிந்தைகொ டின்ன லிகந்தே
மேற்படு மோகையின் வீற்றின ளானாள். (௪0)

பன்முறை வீழ்ந்து பணிந்து பராவி
யென்முன முந்தை யிகந்தனை யின்றிப்
புன்மையை நீக்குதி போந்தனை கொல்லோ
சின்மய வென்றெதி ரென்றுரை செய்தாள். (௪௧)

அம்முறை செப்பு மணங்கு தனைக்கூய்
மைம்மலி கண்டன் மலர்க்கர மோச்சித்
தெம்முனை சாடுறு சீர்விடை மேற்கொண்
டிம்மென வேத னிடத்தினில் வைத்தான். (௪௨)

நீல்விட மேயின னேரிழை யோடும்
பால்விடை யூர்ந்து படர்ந்தனன் வெள்ளி
மால்வரை யேகினன் மற்றவள் பாங்கர்
வேல்விழி மாதர் விரைந்தது கண்டார். (௪௩)

இக்கென வுட்கி யிரங்கின ரேகித்
தக்க னிருந்திடு சங்கமு ளுகிச்
செக்க ரெனத்திகழ் செஞ்சடை யண்ணல்
புக்கன ளெலொரு புண்ணிய னேபோல். (௪௪)

கண்டன னின்மகள் கைதவ மோரா
ளண்டினள் சேர்தலு மாயவன் வல்லே
பண்டை யுருக்கொடு பாறபட வன்னாட்
கொண்டுசெல் வானிது கூறுவ தென்றார். (௪௫)

பாங்கிய ரின்ன பகர்ந்தன கேளாத்
தீங்கனன் மீமிசை தீயதொர் தூநெய்
யாங்குபெய் தென்ன வளப்பில செற்றந்
தாங்கி யுயிர்ப்பொடு தக்க னிருந்தான் (௪௬)

அக்கணம் வானவ ராயின ரெல்லாந்
தொக்கனர் வந்து தொழுங்கட னாற்றிப்
பக்கம தாடு பராவினர் வைகத்
தக்க னவர்க்கிவை சாற்றுத லுற்றான். (௪௭)

என்புகல் வேனினி யென்மக டன்னை
யன்புற வேட்டரு ளால மிடற்றோன்
மன்புனை யுங்கடி மன்ற லியற்று
முன்பு கரந்தனன் முன்னரி தாகி. (௪௮)

அற்றல தின்று மெனுடவள் பாங்கிற்
கற்றை முடிக்கொள் கபாலி யெனச்சென்
றுற்றன னென்மு னுறும லொளித்தான்
பற்றின னன்ன வளைப்படர் கின்றான். (௪௯)

அன்னையு மத்தனு மார்வ மொடைய
மன்னிய கேளிர் மகிழ்ந்தனர் வாழ்த்தப்
பின்னர் மகட்கொடு பேர்ந்தில னீன்றோர்
தன்னை மறைத்திது செய்வது சால்போ. (௫௦)

இங்கிது போல்வன யாவர்செய் கிற்பார்
சங்கர னேலிது தான்செய லாமோ
நங்கள் குலத்தை நவைக்க ணுறுத்தா
னங்கது மன்றியென் னாணையு நீத்தான். (௫௧)

வேறு.

இரந்தனன் சிவனெனு மேத மெங்கணு
நிரந்தது மற்றது நிற்க விவ்விடை
கரந்தன னென்பதோ ருரையுங் காசினி
பரந்தது வேறுமோர் பழியுண் டாயதே. (௫௨)

பண்டொரு பாவையைப் பரிந்து மன்றல்வா
யொண்டொடிச் செங்கையி னுதக மேவுறக்
கொண்டில னென்பதுங் கொள்ளு நீரரைக்
கண்டில னென்பதுங் காட்டி னரோ. (௯௩)

என்றிவை பற்பல விசைத்துச் செய்நலங்
கொன்றிடு சிறுவிதி குழுமித் தன்புடைத்
துன்றிய சுரர்தமைத் தொல்லைத் ததததமூர்
சென்றிட வேவினன் செயிர்த்து வைகினான். (௯௪)

கறுவுகொ ணெஞ்சொடு கயவ னன்றுதொட்
டிறைவனை நினைக்கில னெள்ளுநீர்மையா
னுறுதலுஞ் சிலபக லுயங்கி யிச்செய
லறிதரு மயன்முத லமரர் தேர்குவார். (௯௫)

ஆக திருவருத்தம் ௩௪௭.

---

வசனம்.

அதன்பின்பு திருமணஞ்செய்யக் காலம்பார்க்கவேண்டுமென்று தன் பெண்ணுக்கும் சிவபெருமானுக்கும் பொருத்த முதலியவை பார்க்கையில், அந்தத் தினமே உத்தமதினமாயிருக்கக்கண்டு, தக்கன் விரைவாய்க் கன்னிமாடத்துக்குப் போய் அங்கே வேதியவடிவினரா யெழுந்தருளியிருக்கிற பரமசிவனைக் கண்டு வணங்கி, அடியேன்செய்த பாக்கியமே பாக்கியம், என் புதல்விசெய்த தவமே தவம், இனித் தாமதஞ்செய்யாமல் என்புதல்வியை நான் தாரைவார்த்துக்கொடுக்க ஏற்றுக்கொண்டு அடியேனைக் கிருதார்த்தனாக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, இறைவர் உமையவளோடு தவச்சாலையைக்கடந்து தக்கனது அரண்மனையினுள்ளே பிரவேசித்து, கலியாணமண்டபத்தில் மணிமயமாகிய சிங்காதனத்தில் எழுந்தருளினார்.

அத்தருணத்தில் வேதவல்லியானவள், உமையவளை வரவழைத்து, மணக்கோலத்துக்குரியவளாக அலங்கரித்துப் பரமசிவனது இடப்பாகத்தில் சேர்த்தினாள். பிரமன் விட்டுணு முதலிய தேவர்கள் முனிவர்கள் மற்றுமுள்ளவர்கள் எல்லாருமிருந்து மங்கள வாழ்த்தெடுக்க, அக்கினி சாக்ஷியாக தாரைவார்த்துக்கொடுக்கப் பெற்றுக்கொண்டவுடனே, மணமகனாகியபரமசிவன் மறைந்துபோதலும், தக்கன் மிகவும் துன்புற்று, இந்தச் சுடலையாடியானவன் இப்படி வருவானேன்? இப்படி மறைவானேன். இவனது பொல்லாவொழுக்கத்தையின்று கண்டேன். என்று சொல்லி மணத்துக்கு வந்த விட்டுணு முதலியவர்களை அனுப்பிவிட்டுத் தனது அரசு செலுத்தி வந்தான்.

அதன்பிறகு கலியாண மண்டபத்தை நீங்கிச் சென்ற பராத்பரையானவள் முன்போலவே அருந்தவஞ்செய்து வருங்காலத்தில், ஒரு சுப தினத்தில், சிவபெருமான் தவவேடம்பூண்டு அங்கே யெழுந்தருளக்கண்டு, விரைந்தெழுந்து அவரைப் பலவகையாலும் உபசரித்தாள். அவளது அன்புக்கிரங்கி சிவபெருமான் தமது மான் மழு முதலிய சின்னங்களோடுமே வெள்விடைமேல் தோன்றி, அம்மையைத் தமது திருக்கரத்தாலெடுத்து இடப்பாகத்தில் வைத்துக்கொண்டு கயிலையை யடைந்து தமது ஆலயத்தில் உமாமகேசுவர மூர்த்தமாய் வீற்றிருந்தனர்.

இதைக்கண்ட தோழியர் தக்கனிடத்திற் போய், நடந்த செய்தியைச் சொல்லுத லும், அவன் மிகு சினங்கொண்டு அருகிருந்த தேவர்களைப் பார்த்து. இந்தக் காள கண்டன் பித்தனென்பது சரியாயிருக்கின்றது. ஆதியில் என் பெண்ணை மண முடித்துக்கொடுப்பதற்குமுன்னே மறைந்துபோய், இப்பொழுது அவள் தவஞ் செய்யுமிடத்தில் கபட சந்யாசி வேடம்பூண்டு வந்து அவளை மயக்கிக் கொண்டு போய்விட்டது தகுதியோ? தாய்தந்தையர் சந்தோஷத்தோடு அனுப்பக் கொண்டு போவதல்லவா தகுதி. இவன் என்குலத்துக்கு வடுவுண்டாக்கித் தானும் பெரும் பழி பூண்டானென்றிவ்வாறு பலபடியாய் நிந்தித்து, தேவர் முதலியோரை அவ ரவரிடங்களுக் கனுப்பிவிட்டு அதுமுதல் சிவபெருமானை மதியாமலும் நினையா மலும் செல்வப்பெருக்கால் இறுமாந்திருந்தான். இப்படி சிலநாள்கழிய, விட் டுணு முதலிய தேவர்கள் ஆலோசிக்கத் தொடங்கினார்கள்.

திருமணப்படலமுற்றிற்று.

---

# தக்கன்கயிலைசெல்படலம்.

மெய்ம்மா தவத்தாற் றிருத்தக்கு விளங்கு தக்க
னெம்மான் றனையெண் ணலனுவி யிழுபபன் வலலே
யம்மா வியாமு மவனேவலை யாற்று கின்று
நம்மா ருயிர்க்கு மிறுவாய்நனு குறற போலும். (௧)

ஆனு லினித்தக் கனையெண்ணல மாயி னன்னுன்
மேனு ளானுற் பெறுகின்றதோர் மேன்மை தன்னுன்
மானுத சீற்றங் கொடுநம்பத மாற்று மென்னு
வோநா மினிச்செய் பரிசென்றிவை யோர்ந்து சொல்வார். (௨)

ஈசன் கயிலை தனிற்றக்க னெழுந்துசெல்ல
மாசொன்று சிந்தை கொளத்தேற்றினம் வல்லை யென்னி
னேசங் கொடுபோ யவற்காணி னிலைக்கு மிச்சீர்
நாசம் படலு மொழிவாகு நமக்கு மென்றார் (௩)

வேதா முதலோ ரிதுதன்னை விதியி னுடித்
தீதான தக்கன் றனைமேவிநின் செய்த வத்தின்
மாதா னவளைச் சிவனோடு மறத்தி போலா
மேதா முனது நிலைக்கமம வினைய தொன்றே. (௪)

குற்றந் தெரித லஃதேகுண னென்று கொள்ளிற்
சுற்றம் மொருவற் கெவனுண்டு துறந்து நீங்கிச்
செற்றஞ் செய்கண்ணு மகிழ்வுண்டிது சிந்தியாயேன்
மற்றுன்னை வந்தோர் வகைசூழ்தரும் வள்ள லென்றார். (௫)

முன்னின் றவாகூறியபான்மை முறையி னுடி
யென்னிங் கியான்செய் கடனென்ன விறைவி யோடும்
பொன்னஞ் சடையோன் றனைக்கண்டனை போதி யென்ன
மன்னுங் கயிலை வரையேக மனம்வ லித்தான். (௬)

கானார் கமலத் தயனிந்திரன் காமர் பூத்த
வானாடர் யாரு மவனாற்றிடும் வண்ண நல்கி
யானாத முன்பிற் றுணையோரொ டகன்று தக்கன்
போனா னமல னமர்வெள்ளியம் பொற்றை புக்கான். (௭)

வெள்ளிச் சயிலந் தனிலெய்தி விமலன் மேய
நள்ளுற்ற செம்பொற் பெருங்கோயிலை நண்ணி நந்தி
வள்ளற் குறையு ளெனுங்கோபுர வாயில் சாரத்
தள்ளற்ற காவன் முறைப்பூதர் தடுத்தல் செய்தார். (௮)

கடிக்கொண்ட பூதர் நிரைதன்னைக் கனன்றி யான்முன்
கொடுக்கின்ற காதன் மடமான்றன் கொழுந னோடு
மடுக்கின்ற பான்மை யிவனாடி யறிவ னீவிர்
தடுக்கின்ற தென்கொ லெனக்கூறினன் றக்க னென்போன். (௯)

அவ்வா சகஞ்சொல் கொடியோனை யழன்று நோக்கி
மெய்வாயில் போற்றும் பெருஞ்சாரதர் மேலை ஞான்று
மைவாழுங் கண்டன் றனையெள ளினை மற்று நீயீண்
டெவ்வா றணைகின் றனைசால விழுதை நீராய். (௧௦)

முந்துற்ற தொல்லை யெயின்மூன்றுறை மொய்ம்பி னோர்க
ணந்துற்ற வையந் தனைவானை நலிவ ரேனு
மெந்தைக்கு நல்ல ரவரன்பி லிறையு நின்பால்
வந்துற்ற தில்லை யெவனோவினி வாழ்தி மன்னோ. (௧௧)

இறக்கின்ற வேலை யிமையோர்க டின்ன னீக்கிக்
கறுக்கின்ற நீல மிடற்றெந்தை கருணை செய்த
சிறக்கின்ற செல்வ மிசைந்தன்னவன் செய்கை யாவு
மறக்கின் றனைநீ யெவன் செய்குதி மாயை யுற்றாய். (௧௨)

ஈசன் றனது மலர்த்தாளை யிறைஞ்சி யாற்ற
நேசங் கொடுபோற் றலர்தம்மொடு நேர்த லொல்லா
பாசந் தனில்வீழ் கொடியோயுனைப் பார்த்தி யாங்கள்
பேசும் படியுந் தகவோபவப் பெற்றி யன்றோ. (௧௩)

ஆமேனு மின்னு மொருமாற்றமுண் டண்ணன் முன்னர்
நீமேவி யன்பிற் பணிவாயெனி னிற்றி யன்றேற்
பூமே லுனது நகரந்தனிற் போதி யென்னத்
தீமேல் கிளர்ந்தா லெனவாற்றவுஞ் சீற்ற முற்றான். (௧௪)

பல்லா யிரவர் பெருஞ்சாரதர் பாது காக்கு
மெல்லார் செழும்பொன் மணிவாயி லிகந்து செல்ல
வல்லா னனிகா ணினனுள்ளம் வருந்தி யங்க
ணில்லாது மீள்வா னிதுவொன்று நிகழ்த்து கின்றான். (௧௫)

கொன்னாருஞ் செம்பொற் கடைகாக்குங் குழாங்கள் கேண்மி
னெந்நாளு முங்க ளிறைதன்னை யிறைஞ்ச லேன்யா
னன்னா னெனது மருகோனி தறிந்தி லீரோ
விந்நா ரணனு மயனும்மெனக் கேவல் செய்வார். (௧௬)

கின்றா ரெவரு மெனதொண்டர்க ணீடு ஞாலம்
பின்றாது போற்று மிறையான்பெயர் தக்க னென்பா
ரொன்றாய வுங்கள் பெரும்பித்தனை யொல்லை மேவி
யின்றா மரபிற் பணிந்தேதொழு தேத்து கின்றேன. (௧௭)

கில்லிங் கெனவே தடைசெய்த நிலைமை நும்மாற்
செல்லும் பரிசோ மருகோனுஞ் சிறுமி தானுஞ்
சொல்லும் படியல் லதுசெய்வதென் றெண்ட ரானி
ரொல்லும் படியாற் றுதலுங்கட் குறுதி யன்றோ. (௧௮)

தேற்றாம வின்ன வகைசூழ்ந்தநுந் தேவை யாரும்
போற்றா மல்வந்து பணியாமற புகழ்ந்து மேன்மை
சாற்றாம லெள்ளல் புரிபான்மை சமைப்ப னென்னு
மேற்றா னிழைத்த வினையுய்த்திட மீண்டு போனான. (௧௯)

வேறு.

மீண்டுதன் பதியை யெய்தி விரிஞ்சனை யாதி யாக
வீண்டுபண் ணவரை நோக்கி யென்மக ளீசன் றன்பாற்
பூண்டபே ரார்வத் தொன்றிப புணர்ப்பதொன் றுன்னித் தங்கண்
மாண்டகு வாயி லோரான் மற்றெமைத் தடுப்பச் செய்தார (௨௦)

பின்னரும் பலவுண் டம்மா பேசவித் தனவு மவ்வா
றென்னையென் றுரைப்ப னந்தோ வெண்ணினு நாணுக் கொள்வே
னன்னவீங் கிசைப்ப னேனு மாவதென் னவர்பாற போந்தேன்
றன்னைநொந் திடுவ தன்றித தாழ்வுண்டோ வனையா தம்பால. (௨௧)

நன்றாநன் றென்னை யெண்ணு நக்கனை யுமையை நீவி
ரின்றுமுன் னாக வென்று மிறைஞ்சியே பரவு கிலவீ
ரன்றியு மதிததீ ரல்வீ ரப்பணி மறுததீ ராயின்
மன்றநும் முரிமை யின்னே மாற்றுவன் வல்லை யென்றான். (௨௨)

கறுததிவை யுரைத்தோன் றன்னைக் கடவுளர் யாரு நோக்கி
வெறுததெமை யுரைத்தாய் போலு மேலுநின் னேவ றன்னின்
மறுத்தன வுளவோ வின்றே யற்றுநின் பணியி னிற்றுஞ்
செறுத்திட லென்னாத தத்தஞ் சேணகர் சென்று சேர்ந்தார. (௨௩)

ஆகதிருவிருததம ௩௭௦.

---

வசனம்.

அவ்வாறாலோசிக்கத்தொடங்கிய தேவாகள் தக்கன் அருந்தவஞ்செய்து பெற்ற பெருஞ்செல்வத்தை விரைவில இழந்துபோவான். இவன் தனக்கிப்படிப் பட்ட பெருஞ்செல்வத்தை யருள்செய்த சிவபெருமானை மதியாதிருததலால் இவ னுக்கு நாசம்நேரிடுவேது உண்மை. இவன்கட்டளைப்படியே நடக்கிற நமக்குந் துன் பம் நேரிடும். ஆதலால் இவன் மனத்தைத் திருத்திச் சிவபெருமானை வழிப்படுமே யும்வண்ணஞ் செய்யவேண்டுமென்று ஆலோசித்துக்கொண்டு தக்கனிடம்போய்ச் சேர்ந்தார்கள். அவ்வாறுசென்ற தேவர்கள் தக்கனைநோக்கி, அரிதாகப்பெற்ற வுன் மகளையும் மருமகனாகிய பரமசிவனையும் பாராமலிருக்கலாமா? குற்றம்பார்க்கிற் சுற்றமுண்டா? கோபமுள்ள இடத்திலேதான் குணமிருக்கும்; வயிரத்தைவிட்டு

நாங்கள் சொல்லுகிறபடியே நடந்துகொள்ளாவிட்டால் உனக்குப் பழிப்புண்டாமென்றிவ்வாறு சொல்லக்கேட்ட தக்கனவன் அவர்களைநோக்கி, நான்செய்யவேண்டிய காரியமென்னென்றுகேட்க, நீ கயிலைக்குப்போய் உன் மகளையும் மருமகனையும் கண்டு விசாரித்துவருவது உத்தமமென்றவர்கள்சொல்ல, தக்கனும் அவ்வாறே சம்மதித்துக் கயிலைக்குப்போய், இறைவன் சந்நிதிக்குப்போக யத்தனிக்கையில் அவ்வாயிற் காவலாளராகிய பூதகணங்கள் தடுத்தலும் அவர்களைக் கோபித்து, என்மகளையும் மருமகனையும் பார்த்து விசாரிக்கவந்த என்னைத் தடுக்கலாமாவென்றான், அதற்கு அவர்கள் இவனைநோக்கி, அடாமூடா, பரமசிவன் அநுக்கிரகித்த செல்வச்செருக்கால் அவரை மறந்தும் நிந்தித்தும பாவியாயிருக்கிற நீயிப்போது அவரைப் பார்க்கவந்தாயோ, வெட்கங்கெட்டவனே, நாங்கள் அவருக்கு அறிவித்து விடைபெற்று வருமளவும் இங்கேநிற்கக்கடவை, அன்றி உன்னிடத்திற்குப் போகக்கடவையென்றார்கள். தக்கன் அவர்களைநோக்கி, பலி தேடித்திரியும் பூதங்களே! கேளுங்கள், உங்கள் தலைவனை யொருபோதும் வணங்கமாட்டேன், எவ்வுலகத்தும் வியாபித்துவிளங்கும் பெருங்கீர்த்தியைப்பெற்றிருக்கிற நான் இந்தப் பித்தனை வணங்குவேனே, இன்னம் சிலநாளில் உங்களிறைவனை எவரும் வழிபடாமல் இகழும்படிசெய்வேனென்று சொல்லிவிட்டுத் தன்னிடத்திற்குவந்து, பிரமன் முதலானோரைப்பார்த்து, நீங்கள் சொன்னசொல்லைக்கேட்டுக் கைலைக்குப்போனதில், பூதர்களால் தடைசெய்யப்பட்டும் அவமதித்துப்பேசப்பட்டும் மீண்டுவந்தேன், இனி, அந்தப் பித்தனையும் என்பெண்ணையும் நீங்கள் வழிபடவேண்டுவதில்லை, கட்டளையைமீறி நடப்பீர்களானால் உங்களதிகாரங்களை வாங்கிவிடுவேனென்றுசொல்ல, தேவர்கள் அவனைவணங்கி, அவ்வாறே உமது கட்டளைக்கு விரோதமில்லாமல் நடந்துகொள்ளுகிறோமென்று சொல்லி விடைபெற்றுத் தங்கள் தங்கள் பதங்களையடைந்தார்கள்.

தக்கன்கயிலைசெல்படலமுற்றிற்று.

---

## பிரமயாகப்படலம்.

இப்படிப் பன்னாள் யாரு மிவன்றனி யாணைக் கஞ்சி
யப்பணி யியற்ற லோடு மம்புய மலர்மே லண்ணன்
முப்புர முனிந்த செங்கண் முதல்வன தருளா லாங்கோர்
செப்பரும் வேள்வி யாற்ற முயன்றனன் சிந்தை செய்தான். (க)

வேண்டிய கலப்பை யாவும் விதியுளி மரபி னோடு
தேண்டின னுய்த்துத் தக்கன் செப்பிய துன்னி யானே
மாண்டிட வரினு முக்கண் மதிமுடிப் பரமன் றன்னை
யீண்டுதன் தவிமுன் னீவ லெனக்கிது துணிபா மென்றான். (உ)

இனையன புகன்று சிந்தை யாப்புறத் தேவல் போற்றுந்
தனையர்தங் குழுவைக் கூவித் தண்டுழாய் முகுந்த னாதி
யனைவரு மவிப்பால் கொள்ள வழைத்துநீர் தம்மி னென்னாத்
துனையவே தூண்டிப் போதன் றொல்பெருங் கயிலை புக்கான். (ங)

கயிலையி னடுவ ணுள்ள கடவுண்மா நகரி லெய்தி
யயிலுறு கணிச்சி நந்தி யருணெறி யுய்ப்ப முன்போய்ப்
பயிலுமன் பொடுவின் றேத்திப் பணிதலுஞ் சிவனீண் டுற்ற
செயலதென் மொழிதி யென்னத் திசைமுக னுரைப்ப தானான். (௪)

அடியனேன் வேள்வி யொன்றை யாற்றுவ லரண மூன்றும்
பொடிபட முனிந்த சீற்றப் புனிதநீ போந்தென் செய்கை
முடிவுற வருதி யென்ன முறுவல்செய் திறைவ னந்தம்
வடிவுள நந்தி யங்கண் வருவனீ போதி யென்றான். (௫)

போகென விடுத்த லோடும் பொன்னடி பணிந்து வல்லே
யேகிய தாதை தக்க னிருந்துழி யெய்தி யேயான்
பாகநல் வேள்வி யொன்று பண்ணுவன் முனிவர் விண்ணோ
ராகிய திறத்த ரோடு மணுகுதி யைய வென்றான். (௬)

என்னலு நன்று முன்போ யியற்றுதி மகத்தை யென்னப்
பொன்னவிர் கமலத் தண்ணன் மனோவதி யதனிற் போந்து
செந்நெறி பயக்கும் வேள்விச் செய்கடன் புரித லுற்றா
னன்னதோர் செய்கை மாலோ னாதிய ரெவருந் தேர்ந்தார். (௭)

வேறு.

அக்க ணந்தனின் மாயவ னிமையவர்க் கரசன்
மிக்க தேவர்கண் முனிவரர் யாவரும் விரைந்து
தக்கன் முன்னுற மேவலு மவரொடுந் தழுவி
முக்க ணாயகற் கவியினை விலக்குவான் முயன்றான். (௮)

ஏற்ற நீங்குறு தக்கனக் கடவுளா ரியாரும்
போற்றி யேதனைச் சூழ்தரத் தாதைதன் புரத்தி
லாற்றும் வேள்வியி லணைதலு மயனெழுந் தாசி
சாற்றி யார்வமொ டிருத்தினன் பாங்கரோர் தவிசின். (௯)

காணு லாவுதண் டுளவினா னடிகளை தொழுதே
யான பான்மையி லோர்தவி சிருத்தின னல்லா
வேனை யோருக்கும் வீற்றுவீற் றுதவின னிடையிற்
றானோ ராசனத் திருந்தனன் மறையெலாந் தழங்க. (௧௦)

வேறு.

அங்கண் ஞாலம தளித்தவ னிவ்வகை யமர்தலு மதுபோழ்தி
னங்கை யாளொரு பங்கின னருளொடு நந்திதே வனைநோக்கிப்
பங்க யாசனன் வேள்வியிற் சென்றுநம் பாகமுங் கொடுவல்லே
யிங்கு நீவரு கென்றலும் வணங்கியே யிசைந்தவ னேகுற்றான். (௧௧)

நூற்றுக் கோடிவெங் கணத்தவர் சூழ்தர நொய்தினக் கிரிநீங்கி
யேற்றின் மேல்வரு மண்ணலை யுளமுறுத் தேர்கொள்பங் கயப்போதிற்
றோற்று நான்முகக் கடவுண்முன் னடைதலுந் துண்ணென வெழுந்தன்பிற்
போற்றி யேதொழு திருத்தின னென்பவோர் பொலன்மணித் தவிசின்கண்.

நின்ற பாரிடத் தலைவர்க்கும் வரன்முறை நிரந்தவா சனநேர்ந்து
பின்றை நான்முகன் வேள்விய தியற்றலும் பிறங்கெரி யுறநோக்கி
நன்றி யில்லதோர் தக்கனக் கிரியுறை நக்கனுக் காளாகிச்
சென்ற வன்கொலா மிவனென நகைத்தனன் செயிர்த்திவை யுளாக்கின்றான்;

காரணன்முத லாகிய கடவுளர் நளினமா மகளாதிச்
சீரணங்கினர் மாமுனி கணத்தவர் செறிகுந ருறைகின்ற
வாரணன்புரி வேள்வியில் விடாநுகர்ந் தாடல்செய் பவனுளுஞ்
சாரதங்களு மோரடி யுறுவது தக்கதே யிதுவென்றான். (௧௪)

மேவ லாரெயின் முனிந்ததீ விழியினன் வெள்ளிமால் வரைகாக்குங்
காவ லாளனு நந்தியுங் கணத்தருங் கதுமென விவண்மேவக்
கூவி னாரெவ ரோவென வுளத்திடைக் குறித்தனன் றெரிகுற்றான்
றேவர் யாவரும் வெருவுற வயன்றனைச் செயிர்த்திவை யுரைக்கின்றான்.

ஆதி நான்முகக் கடவுளை யாகுநீ யழன்மகம் புரிசெய்கை
பேதை பாகனுக் குரைத்தனை யவன்விடப் பெயருநந் தியையென்முன்
காத லோடிகை தொழுதுநள் ளிருத்தினை கடவதோ நினக்கீது
தாதை யாதலிற் பிழைத்தனை யல்லதுன் றலையினைத் தடியேனோ. (௧௬)

இன்ன மொன்றியா னுரைப்பதுண் டஞ்ஞைசே ளீமமே யிடனாகத்
துன்னு பாரிடஞ் சூழ்தரக் கழியுடல் சூலமீ மிசையேந்தி
வன்னி யூடின் றாடுவான் றனக்குநீ மகத்திடை யவிக்கூற்ற
முன்னை வைகலின் வழங்கலை யிப்பகன் முதலவன் றனக்கின்றால். (௧௭)

அத்தி வெம்பணி தலைக்கலன் றாங்கியே யடலைமேற் கொண்டுற்ற
பித்தன் வேள்வியி லவிகொளற் குரியனோ பெயர்ந்தவிப் பகல்காறு
மெத்தி றத்தரு மறையொழுக் கெனநினைந் தியாவது மோராமற்
சுத்த நீடவி யளித்தன ரனைதே தொன்மையாக் கொளற் பாற்றோ. ()

மற்றை வானவர் தமக்கெலா நல்குதி மாலையே முதலாக
விற்றை நாண்முதற் கொள்ளுதி யிவற்குமுன் னீகுதி யவிதன்னைக்
கற்றை வாசடை யுடையதோ கண்ணுதற் கடவுளே பரமென்றே
சொற்ற மாமறைச் சுருதிகள் விலக்குதி துணிவுனக் கிதுவென்றான். ()

என்ற வாசகங் கேட்டலு நந்திதன் னிருகரஞ் செவிபொத்தி
யொன்று கொள்கையி னுதிநா மந்தனை யுளத்திடை நனியுன்னி
யின்றி வன்சொலுங் கேட்பவுய்த் தனைகொலா மெம்பிரா னெனையென்னாத்
துன்று பையுளின் மூழ்குறா வாயிடைத் துண்ணென வெகுளுற்றான். ()

பண்டு மூவெயி லழலெழ நகைத்திடு பரம்பர னருணீராற்
றண்ட நாயகஞ் செய்திடு சிலாதனார் தனிமகன் முனிவெய்தக்
கண்ட வானவர் யாவரு முட்கினா கனலுமுட் கவலுற்றா
னண்டம் யாவையு நடுநடுக் குற்றன வசைந்தன வுயிர்யாவும். (௨௧)

ஏற்றின் மேயகம் மண்ணறன் சீர்த்தியி லிறையுமே நூறிக்கொள்ளா
தாற்ற லோடவி விலக்கிய தக்கனுக் கஞ்சின மிசைந்தோமான்
மாற்ற மொன்றுமிங் குரைத்திட றகாதென மற்றது பொறுத்தந்தோ
சீற்ற முற்றன னந்தியென் றுட்கினர் திசைமுக னெடுமாலோன். (௨௨)

ஈது வேலையி னந்தியத் தக்கனை யெரிவிழித் தெதிர்நோக்கி
மாது பாகனை யிகழ்ந்தனை யீண்டுநின் வாய்துளைத் திடுவேனு
லாதி தன்னரு ளன்றென விடுத்தன னாதலி னுய்ந்தாய்நீ
தீது மற்றினி யுரைத்தியேல் வல்லைநின் சிரந்துணிக் குவனென்றான். ()

இவைய யன்மக னுள்ளமுந் துண்ணென விசைத்துமா மகந்தன்னி
லவிய தெம்பிராற் கிலதென விலக்கினை யதற்கிறை யவனன்றேற்
புவன மீதுமற் றெவருளா ரரிதனைப் பொருளெனக் கொண்டாய்நீ
சிவனை யன்றியே வேள்விசெய் கின்றவர் சிரமறக் கடிதென்றான். (உச)

வேறு.

இன்னதொர் சாபம தியம்பி யாங்கதற்
பின்னரு மிசைத்தனன் பிறைமு டிப்பிரான்
றன்னியன் மதிக்கிலாத் தக்க னிற்கிவண்
மன்னிய திருவெலாம் வல்லை தீர்கவே. (உரு)

ஏறுடை யண்ணலை யிறைஞ்ச லின்றியே
மாறுகொ டிகழ்தரு வாய்கொள் புன்றலை
யீறுற வுன்றனக் கெவருங் காண்டக
வேறொரு சிறுசிரம் விரைவின் மேவவே. (உசு)

ஈரமில் புன்மனத் திழுதை மற்றுனைச்
சாருறு கடவுளர் தாமு மோரபக
லாருயிர் மாண்டெழீஇ யளப்பி லாவுகஞ்
சூரெனு மவுணனாற் றுயரின் மூழ்கவே. (உஎ)

என்றுமற் றினையது மியம்பி யோர்புறீஇத்
துன்றிருங் கணமிரை சூழ வெள்ளியங்
குன்றிடை யிறைக்கிது கூறிக் கீழ்த்திசை
முன்றிரு வாயிலின் முறையின் மேவினான். (உஅ)

முன்னுற நந்தியம் முளரி மேலவன்
மன்னுறு கடிநகர் மகத்தை நீங்கலு
மன்னதொ ரவையிடை யமரர் யாவரு
மென்னிது விளைந்ததென் றிரங்கி யேங்கினார். (உகூ)

நந்தியெம் மடிகண்முன் னவின்ற மெய்யுரை
சிந்தைசெய் தேங்கினன் சிரம்ப னிப்புற
மைந்தன துரையையு மறுத்தற் கஞ்சினான்
வெந்துய ருழந்தனன் விரிஞ்ச னென்பவன். (௩௦)

முடித்திட வுன்னியே முயலும் வேள்வியை
நடத்திய வஞ்சின னவின்று செய்கடன்
விடுத்தன னன்னதை விமலற் கின்னவி
தடுத்தவன் கண்டரோ யாதுஞ் சாற்றலன். (௩௧)

கறுவுகொள் பெற்றியான் கவற்சி கொண்டுளான்
வறியதோ ருவகையான் மனத்தி லச்சமுஞ்
சிறிதுகொள் பான்மையான் றேவ ரோடெழாக்
குறுகினன் றன்னகர்க் கோயின் மேயினான். (௩௨)

அலர்ந்திடு பங்கயத் தண்ண றன்மகங்
குலைந்திட வாயிடைக் குழீஇய தேவர்கள்
சலந்தனி னந்திசெய் சாபஞ் சிந்தியாப்
புலர்ந்தனர் தத்தம புரத்துப போயினார். (௩௩)

ஆக திருவிருத்தம் சஎ௩.

வசனம்.

அதன்பிறகு, நெடுங்காலம்வரையில் பிரமன் முதலிய யாவரும் தக்கனை யஞ்சி நடந்துவந்தார்கள். அதற்குமேல் பிரமன் ஒரு யாகத்தைச்செய்ய விரும்பி, அதற்குவேண்டிய உபகரணங்களைச்சேகரித்து, தன் பிள்ளைகளைநோக்கி நமது யாகத்துக்குவரும்படி விட்டுணு முதலிய தேவர்களுக்கு அறிவித்துவாருங்களென்றான். அவர்களும் அவ்வாறே யறிவிக்கச்சென்றார்கள், தான் திருக்கயிலைக்குப்போய்த் தெரிவித்து, அந்த யாகத்தைப் பாதுகாக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, இறைவன் எமக்குப்பதிலாய் எமதுருவாகிய நந்திவருவான், நீபோய் நிர்ப்பயமாக யாகத்தை நடத்தக்கடவையென்றருளிச்செய்ய, விடைபெற்றுத் தக்கமாபுரத்துக்குவந்து தக்கனைக்கண்டுசொல்ல, அவனும் அவ்வாறேசெய்யலாம், நீர் முன்னேபோம், நான் இருடியர் முதலானவர்களோடும் உடனே வருகிறேன் என்று சொல்ல, பிரமன் மனோவதியையடைந்து யாகஞ்செய்யத்தொடங்கினான். விண்டு முதலானவர்கள் தக்கனிடஞ்சேர்ந்தார்கள். அவர்களையழைத்துக்கொண்டு பிரமனிடத்திற்குவருதலும், பிரமனும் யாகத்தையாரம்பித்துச் செய்துவரும்போது, கயிலையில் பரமசிவன் நந்தியைநோக்கி, நீபோய்ப் பிரமன்செய்யும் யாகத்தில் எமக்குரிய அவிர்ப்பாகத்தைப்பெற்று வரக்கடவையென்று கட்டளையிட, அவ்வாறே நந்தியும்போய்ப் பிரமனைக்கண்டு அவனால் உபசரிக்கப்பெற்று, வீற்றிருந்தகாலத்தில், தக்கன் தன்பிதாவாகிய பிரமனைநோக்கி, என்பெண்ணைத் திருடன்போலக் கவர்ந்துகொண்டுபோன பித்தனுக்கு ஆளாய்வந்தவனை உபசரித்து இந்த மஹாசபையில்வைத்தாயே, அந்தச் சுடலையாடியின் படைகளாகிய பூதங்கள் இந்தச் சிறந்த வைதிகசபையில் வந்திருக்கலாமோ, அந்தச் சிறுவனுக்குப் பழையபடி அவிர்ப்பாகங் கொடுக்கவேண்டுவதில்லை. இன்றுமுதல் திருமாலைப்பரமாகக்கொண்டு, அக்கிரபூசைசெய்து, அவருக்கே முதல் அவிர்ப்பாகத்தையுங்கொடுத்து வரக்கடவையென்று சொல்லக்கேட்ட நந்திதேவரானவர் மிகச்சினந்து தக்கனைநோக்கி, எம்மிறைவனையிகழ்ந்த வுனதுநாவை இப்போதே யறுத்துப்போடுவேன். இறைவன் கட்டளையிடாமையால் மன்னித்தேன் நீயும் உயிரோடிருக்கிறாய். இனியொருதரமிகந்தால் உன்தலையை வெட்டித்தள்ளுவேனென்றுசொல்லி, பரமசிவனையொழித்து யாகஞ்செய்கிறவ ருயிரொழியக்கடவதென்றுரைத்துத் தக்கனைநோக்கி நீ பெற்றசெல்வம் சிலநாளில் அழியக்கடவது, நீ உன் தலையற்று வேறு தலையைப் பெறக்கடவை, உனக்கிசைந்துநடக்கிற இந்தத்தேவர்கள் ஒருகாலத்தில் மாண்டெழுந்து சூரனால் நெடுங்காலம் துன்புறக்கடவர்கள் என்று கடுஞ்சாபமிட்டுக் கயிலைக்குப்போய்த் தமது காவற்றொழில்பூண்டிருந்தார். பிறகு சபையிலிருந்த பிரமன் முதலானோர் பயந்து, இனியென்ன விளையுமோவென்று திகிலடைந்திருந்தார்கள். பிரமன் தான் செய்யத்தொடங்கின யாகத்தை நிறுத்திவிட்டான். தக்கன் மனத்துள்ளே துன்புற்றிருந்தாலும் வெளிக்குக் களித்திருப்பவன்போலக் காட்டித் தனது நகரையடைந்தான். விட்டுணு முதலிய தேவரும் தங்கள்தங்கள் பதவிகளையடைந்தார்கள்.

பிரமயாகப்படலமுற்றிற்று.

---

# சாலைசெய்படலம்.



அன்றுமுன் னாகவே யளப்பில் காலமா
வொன்றுமவ் வேள்வியி லோம்பு கின்றிலா
துன்றிய முனிவருஞ் சுரரும பார்தனின்
முன்றிக மந்தணா முதலி னோர்களும். (௧)

ஓர்ந்தன னன்னதை யூழின் றீநெறி
சார்ந்திடு தக்கனோ வைக றன்முனஞ்
சேர்ந்திடு மிமையவர் திறத்தை நோக்கியே
யீர்ந்திடு தீயதொன் றியம்பு கின்றனன். (௨)

எடுத்திடு சுருதியி னியற்கை முற்றுற
வடுத்திடு தேவிர்காள் வரம்பில காலமா
விடுத்திடும் வேள்விய தாற்ற லின்றியே
விடுத்ததெ னனையது விளம்பு வீரென்றான். (௩)

வேறு.

எய்யாது வெய்ய வினையீட்டு தக்க னிவைசெப்ப லோடு மிமையோர்
மெய்யா ரணத்தன் முதனூ லியற்று வேள்விக் களதற் லவியூ
ணையா னனத்தர் பெறநல்க லென்றி யதனாலு நந்தி யடிகள்
பொய்யாத சாப வுரையாலும் யாங்கள் புரியா திருந்து மெனவே. (௪)

அந்நாளி லீசன் விடுகின்ற நந்தி யறைகின்ற சாப மதனுக்
கிந்நாளு மஞ்சி மகவேள்வி தன்னில் யாதுஞ் செயாது திரிவீர்
முன்னாக யானொர் பெருமா மகத்தை முறைசெய்வன் முற்றி விடுமேற்
பின்னாக நீவிர் புரிமின்க ளென்று பேடில்ல வன்பு கலவே. (௫)

நீமுன்னொர் வேள்வி புரிகின்ற தைய நெறியென் றிசைப்ப வவரைப்
போமின்கள் யாரு மெனவே புகன்று புரிதோறு மேவி மிகவு
மேமங்கொள் சிந்தை யுளதக்க னூழி னியல்பா லதற்பி னொருநா
ளோமஞ்செய் வேள்வி புரிவான் விரும்பி யுள்ளத்தி லுன்னி முயல்வான்.

தொட்டா மனுத்தொன் மயனைத் தனது சுதரென்ன முன்ன முதவிக்
கட்டா மறைக்குள் விதிபோல நல்கு கலைகற் றுளானை விளியா
முட்டாத வேள்வி யதுவொன்று செய்வன் முனிவோர்க டேவ ருறைவா
னெட்டாத வெல்லை தனிலின்றொர் சாலை யியல்பால் விதித்தி யெனவே. ()

வேறு.

இனிதென விறைஞ்சியே யேகிக் கங்கையம்
புனனதி யதனொரு புடைய தாகிய
கனகல மென்பதோர் கவின்கொள் வைப்பிடை,
வினைபுரி கம்மியன் விதித்தன் மேயினான். (௮)

பத்துநூ றியோசனைப் பரப்பு நீளமு
மொத்திடும் வகையதா வொல்லை நாடியே
வித்தக வன்மையான் வேள்விக் கோரர
ணத்தகு பொழுதினி லமைத்து நல்கினான். (௯)

நாற்றிசை மருங்கினு நான்கு கோபுரம்
வீற்றுவீற் றுதவிய வியன்கொ ணொச்சியி
லேற்றிடு ஞாயில்க ளியற்றி யன்னதை
யாற்றலை யுடையதோ ரரண மாக்கினான். (௧௦)

உள்ளுற வணங்கின ருறைதற் கோரிடை
தெள்ளிதி னல்கியே தேவர் தம்மொடு
வள்ளுறை வேற்கணா மருவி யாடுவான்
புள்ளுறை வாவியும் பொழிலு மாக்கினான். (௧௧)

அப்பரி சமைத்துமே லமரர் வேதிய
ரெப்பரி சனரும்வந் தீண்டி வைகின
துய்ப்பதற கொத்திடு சுவைகொ டம்பதம்
வைப்பதோ ரிருக்கையு மரபிற் றந்தனன். (௧௨)

அந்தண ராதியோ ரமரர் யாவரும்
வந்தணை வருந்துவான் வரம்பில சாலைக
ளிந்திர வுலகென விமைப்பி னீந்தனன்
முந்தையின் மகவிதி முழுது நாடினான். (௧௩)

விருந்தினர் பெற்றிட விரைமென் பாளித
நரந்தமொ டாரம்வீ நறைகொண் மான்மத
மருந்துறு வெள்ளடை யான பாகினை
யிருந்திடு சாலையு மியற்றி னானரோ. (௧௪)

ஆனபல் வகையுடை யாடை செய்யபூண்
மேனதொ ரம்பொனின் வியன்கொள் குப்பைக
ளேனைய வெறுக்கைகண் மணிகள் யாவையுந்
தானம தியற்றிடத் தான நல்கினான். (௧௫)

கடிகெழு சததளக் கமல மேலுறை
யடிகடன் னகர்கொலெ்ன் றையஞ் செய்திட
நடைதரு வேளவிசெய் நலங்கொள் சாலைய
திடையுற வமைத்தனன் யாரும் போற்றவே. (௧௬)

நூறெனும் யோசனை நுவலு மெல்லையின்
மாறகல் சாலையின் வன்னி சேர்தரக்
கூறிய மூவகைக் குண்டம் வேதிகை
வேறுள பரிசெலாம் விதித்தல் செய்தனன். (௧௭)

மேலொடு கீழ்புடை வெறுக்கை யின்மிசைக்
கோலநன் மணிகளாற் குயிற்றி வாவியுஞ்
சோலையும் பறவையுந் தோமி றேவரும்
போலிய வோவியம் புனைந்திட் டானரோ. (௧௮)

புண்டரீ காசனம் பொருந்து நான்முகன்
றண்டுளை வோனிவர் தமக்கி ருக்கையு
மெண்டிசை வாணருக் கியலி ருக்கையு
மண்டருக் கிருக்கையு மருளல் செய்துமேல். (௧௯)

தொக்குறு முனிவரர் தொல்லை வேதிய
ரொக்கலின் மேயின ருறையி ருக்கையுந்
தக்கனுக் கிருக்கையுஞ் சமைத்து நல்கினான்
மைகுறு தவிசினான் மரபி னுடியே. (௨0)

தக்கனை வணங்கிநின் சாலை முற்றிய
புக்கனை காண்கெனப் புனைவன் செப்பலு
மக்கண மதுதெரிந் தளவி லாதர
மிக்கனன் மகிழ்ந்தனன் விம்மி தத்தினான். (௨௧)

பூங்கம லத்தமர் புனிதன் கான்முளை
பாங்கரின் முனிவரிற் பலரைக் கூவியே
தீங்கனன் மாமகஞ் செய்ய நூன்முறை
யாங்கனம் வலித்தன னவர்க்குச் செப்புவான். (௨௨)

தருவுறு சமிதைகள் சாகை தண்ணடை
பரிதிகண் மதலைநாண் பறப்பை பல்பசு
வரணிநன் முதிரைக ளாதி யாவிதற
குரியன வுய்த்திரென் றுலலை யேவினான். (௨௩)

ஆனொடு நிதிகளை மணியை யைந்தருக்
கானிலை யழைத்துநம் மகத்தைக் காணிய
மாநிலத் தந்தணா வருவ ருண்டியு
மேனைய பொருள்களு மீமென் றேதினான். (௨௪)

நல்விடை கொண்டுபோய் நவையி லான்முதற
பல்வகை யவையெலாம் படர்ந்து வீற்றுவீற்
றொல்வதோ ரிடந்தொறு முறற வாயிடைச்
செல்வதோர் பொருளெலாஞ் சிறப்பி னல்கவே. (௨௫)

தனதுறு கிளைஞராய்த் தணப்பி லாததோர்
முனிவரர் தங்களின் முப்ப தாயிரா
துனியறு வோர்தமைச் சொன்றி யேனவை
யனைவரும் விருப்புற வளித்தி ரென்றனன். (௨௬)

மற்றவர்க் கிருதிற மாத வத்தரை
யுற்றனர் யாவரு முண்டி யன்றியே
சொற்றன யாவையுந் தொலைவின் றீமென
நற்றவத் தயன்மக னயப்புற் றேவினான். (௨௭)

தீதிலை நன்றெனத் தெளியு நான்முகன்
காதல னோர்மகங் கடிதி யற்றுவான்
வேதியா விண்ணவர் யாரு மேவுவான்
றாதரை நோக்கியே யினைய சொல்லுவான். (௨௮)

என்றலுங் கண்ணுத லிறைவன் யாமிவட்
சென்றது பலிக்குநின் றிருந்து சென்னியி
லொன்றிய குருதியே யுதவு வாயென
நன்றென நாரண னவின்று போற்றியே. (௧௮௬)

தன்னுத லதனிடைத் தனது செங்கையி
னன்னகத் தாலொரு நாடி வாங்கியே
யன்னதோர் பொழுதினி லரியுய்த் தானரோ
துன்னிய குருதிநீர் சூலி யேற்பவே. (௧௮௭)

வீண்டிடு சோரியின் வெள்ளம் வெம்பணி
பூண்டதோர் கண்ணுதல் பொலங்கைச் சென்னிமே
லாண்டொரு நூறுநா றவதி யுய்த்தலு
மாண்டது வேறொரு மயக்கம் வந்ததே. (௧௮௮)

பாதியு நிறைந்தது மில்லை பாணியின்
மீதுறு பலிக்கலன் மிக்க வன்மைபோய்ச்
சீதரன் சோர்தலுந் திருவு ளாலமுங்
காதல னிலைமையைக் கண்டிரங்கினார். (௧௮௯)

செஞ்சர ணடைந்தயர் தெரிவை மார்தமை
யஞ்சலென் றருளியெம் மண்ண லச்சுத
னெஞ்சுறு மயலினை நீக்கி யாங்கவ
னுஞ்செழு மாறுசெய் துறையு ணீங்கினன். (௧௯௰)

நீங்கினன் பின்வரு நெடிய மாயனை
யீங்கினி திருத்தியென் றியம்ப வன்னவ
னோங்குநின் சூலமே லுற்று ளான்றனைப்
பாங்குற வருள்கெனப் பகர்ந்து வேண்டவே. (௧௯௧)

கைத்தலை யயன்றலைக் கபால்கொண் டிற்றவன்
முத்தலை வேலினு முடிந்த சேனையின்
மெய்த்தலை வன்றனை விடுத்துத் தொல்லுயி
ரத்தலை நல்கியே யருள்செய் தானரோ. (௧௯௨)

மானுல கொருவியே வடுக னன்னதோர்
கோலமொ டேகணங் குழுமிச் சூழ்தர
மேலுள புவனமேன் மேவி வைகலும்
பாலனஞ் செய்தனன் பலவண் டங்களும். (௧௯௩)

அடுவதொ ரிறுதியி லமல னாணையாற்
கடவுளர் சென்னியுங் கமல னாதியோர்
முடிகளு மட்டியிர் முற்று மாறழி நுண்
பொடிபட வியற்றுமாற புவனம் யாவையும். (௧௯௪)

பொறியுறு முயிர்களும் புவனம் யாவையு
மிறுதியா யழிவுறு மீமத் தெல்லையின்
மறையெனு ஞாளியை யுயர்த்து மற்றவ
னுறுவதோர் மகிழ்ச்சியா னுலவு மென்பவே. (௧௯௫)

இவ

வேறு.

கண்ட கங்கொள் கபால்கொடு காசினி
விண்ட கந்தொறும் வெம்பலிக் குற்றது
முண்ட கன்முத லோர்தமை யெம்பிரான்
றண்ட கஞ்செய் தலையளி யாகுமால். (௧௯௬)

ஆற்றின் மலகு மயிர்சடை யண்ணல்பாற
றேற்று கின்றதோர் தூயவன் சோரிநீ
ரேற்ற தன்மை யியம்பின மீங்கினி
வேற்று ருககொண்ட தன்மை விளம்புவாம். (௧௯௭)

வேறு.

முன்னொரு ஞான்றுமூ வுலகும் போற்றிடு
மிந்திர னிமையவ ரினதொ டேகியே
யந்தமில் கயிலையி லரனைப் போற்றுவான்
வந்தன னகந்தையு மனத்திற் றாங்கியே. (௧௯௮)

பொன்கெழு கடிமதிற பொன்னங் கோயின்முன்
மின்கெழு வச்சிர வேந்தன் சோதலுங்
கொன்கெழு பாரிடக் கோலந் தாங்கியே
முன்கடை நின்றனன் முடிவின் முன்னையோன். (௧௯௯)

நின்றிடு மொருவனை நெடிது நோக்கியே
யின்றுனைக் கண்டனன் யாரை யையநீ
மன்றவும விருந்தினை வள்ள லைதொழச்
சென்றனன் வேலையென் செபபு கென்னவே. (௨௦௦)

மற்றது காலையின் மகேசன் யாவதுஞ்
சொற்றில னாகியே சூர்த்த நோக்குட
னுற்றிட மேல்வரு மூற்ற முன்னலன்
செற்றம தாயினன் றேவர் செம்மலே. (௨௦௧)

அண்டரு மகந்தைய னுற்ற வுந்திறல்
கொண்டன னென்றுதன் குலிச மாப்படை
கண்டக னெறிதலுங் கடவுண் மேற்படா
துண்டுக ளாகியே நொய்தின் மாய்ந்ததே. (௨௦௨)

மருத்துவன் வச்சிர மாய்ந்து போதலும்
புரத்தினை யட்டருள் புனித னவ்வழிக்
கிருத்திம வுருவினை நீங்கிக் கேழ்கிள
ருருத்திர வடிவினை யொல்லை தாங்கினான். (௨௦௩)

உயர்ப்புறு சடிலநின் றாறு தண்புன
லயர்ப்புறு மகபதி யகந்தை கண்டட
மயிர்ப்புற மெங்கணும் வந்து தோன்றலின்
வியர்ப்புவந் தடைந்தன மேனி முற்றுமே. (௨௦௪)

எள்ளுதல் செய்திடு மிவன்ற னாருயிர்
கொள்ளுது மெனச்சினங் கொண்ட தீயொடு
முள்ளுறு காலெழீஇ யொருங்கு சென்றெனப
பொள்ளென வுயிர்ப்பழல் புகையொ டுற்றதே. (௨௦௫)

குறுகினன் றாற்றலாற் குலிச மாப்படை
யெறிதரு கொடியனை யெய்த வேலெனச்
செறுகனல் விழியெனச் செபபச் சேறல்போ
னெறிதரு புருவமு நெற்றி சேர்ந்தவே. (உ0சு)

பற்றலர் புரங்களோ வுலகின் பன்மையோ
முற்றுயி ரீட்டமோ முடிக்கப் பேதையைச்
செற்றிடல் வசையவன் செயலைக் காண்டுமென்
றற்றனன் முறுவலு முதித்த தொல்லையில். (உ0எ)

துடித்தன துவரித ழூரப்பித தூயவா
யிடித்தன சேந்தன விரண்டு கண்களும்
விடததினை நுகர்ந்தவன் வெகுளித் தீயினுக்
கடுததிடு துணைவாத மமைதி போலவே. (உ0அ)

அக்கண மிவ்வகை யார்க்கு மாதியா
முக்கண ஞன்முகன் முதல தேவரு
மிக்குள வுயிர்களும் வெருவ வெய்யதோ
ருக்கிர வடிவுகொண் டிருத்து நின்றனன் (உ0கூ)

வேறு.

நிற்கின்ற வெம்பெருமான் பெருஞ்சீற்றந் தனைநோக்கி நெஞ்ச மாகுஞ்
சற்குன்ற நடுநடுங்கப் பதைபதையா வஞ்சியவன் கழலின் வீழ்ந்தே
யெற்குன்றன் மாயமெலாந் தெரிந்திடுமோ மாலயனு மின்னுந் தேரு
பொற்குன்றச் சிலையானே வினையேன்செய் பிழையதனைப் பொறுத்தி யென்றான்.

போற்றிப்பன் முறைதாழும் புரந்தரனை யஞ்சலென்று புரிந்து நோக்கி
மேற்றிக்கில் வீழ்கின்ற செங்கதிரோ விதுவெனன வேலை மேற்றன்
சீறறத்தீ யினைவீசி யாங்கவற்கு விடைகொடுததுச் செல்கென் றேவி
யேற்றிற்செ யரியணைமே லுறையுள்புகுந் துமையோடுமவீற்றிருந்தானெங்கோன.

வேறு.

கூற்று வன்றனிக் கூற்றன் மந்திரம
வீற்றி ருந்திடும் வேலை வாய்தனி
லாறறல சோபுனற் கரசன் பால்விடு
சீற்ற மானதோா சிறுவ னனதே (உகஉ)

ஆன பாலனை யம்பு ராசிதன்
கானு லாந்திரைக் கரங்க ளாற்றழீஇத்
தான வேசனென் றனய னயினு
ஞன் லாதியார் நறறவஞ் செய்தாா. (உகங)

ஊழி பேரினு முலகம் பேரினும்
வாழி வாழியென் மைந்த நீயெனுக
கேழி லாசிகள் கிளததிப போறறினு
ஞழி மால்கடற் கரச னென்பவே. (உகச)

நசைகு லாவிய நகலை காத்திட
விசைவி லான்சிறி தழுத வேலையில்
வசையி லாதுயர் வானு மண்ணுமெண்
டிசையும் யானையுஞ செவிடு பட்டவே. (உகரு)

நான்மு கத்தினோர் நுனித்துக் காணுறு
நான்மு கத்தினோ னொடி யிவ்வொலி
வான்மு கத்திடை வருமி தேதெனா
மீன்மு கத்துலாம் வேலை மேவினான், (உகசு)

வேலை சேரவவ் வேலை வேலையுஞ்
சால வன்பினாற் றவிசொன் றிட்டுநீ
யேல மேவுகென் றிருத்தி யான்பெறுஞ்
பால னீங்கிவன் பார்த்தி யாலெனா. (உகஎ)

கையி னீட்டலுங் கடிது வாங்கியே
யையன் றன்மடி யதனிற் சேர்த்திடத்
துய்ய புல்லணைந் தொடர்ந்து பற்றினான்
மையன் மைந்தனுந் தனது வன்மையால. (உகஅ)

நார்தொ டுத்தெனு நான்கு தாடியு
மீர்த்துத் தூங்கலு மிணையில் வேதனு
மார்த்தி யெய்தினா னவன்க ணையவன்
சீர்த்தி கான்றெனச் சிந்திற் றெண்புனல். (உககூ)

காறொ டார்ந்திழி கலங்கு கட்புன
லாறு போலிய வகலந் தன்வழிச்
சேறன் மேயது செறிவுற் றீண்டியே
வேறோர் வேலைபோல் வேலை புக்கதே. (உஉ0)

முக்க ணாயகன் முனிவு தன்னிடைப்
புக்க காலையிற் புனல்வ றந்திடு
மைக்க ருங்கடல் வறுமை நீங்கிற்றான்
மிக்க நான்முகன் விழியி னீரினால். (உஉக)

பதும னவ்வழிப் படாம யிர்த்தொகை
மதலை கையினு மரபி னீக்கியே
சதுமெ னப்பல கரங்க ளாலெடுத்
துதகி தன்கையி னுயிர்த்து நீட்டினான். (உஉஉ)

நீட்டி யோரிறை நினைந்து நீயிது
கேட்டி யொன்றியாங் கிளத்து வோமிவ
னேட்டு லாயதே னிதழி சென்னியிற்
சூட்டு மெம்பிரான் முனிவிற் றோன்றினான். (உஉந)

கருதி டாதொரு கடவு டன்னையும்
வரமும் வேண்டல னேது மற்றிவ
னொருவ ராலுமீ றுற்றி டானரோ
பரமன் சிறறமே யான பான்மையால். (உஉச)

தேவர் தேவர்கோன் றிசையி னோரெவரிப
போவ ரேயெனிற் பொருகிற் பாரெவர்
நீவி ரேனுமுன் னிற்ற லஞ்சுவீ
ரேவ ரேயிவ னெதிர்நிற் பார்களே. (உஉரு)

ஆயுந் தொன்னெறி யமரர் யாவரு
மீயுஞ் சாபம்வந் திவனை நேருமோ
காயுந் திண்டிறற் கடவுட் டன்மைசோ
தீயுந் தீயுமின் சிறுவன் வெம்மையால். (௨௨௬)

நானு மஞ்சுவ னளிளை காவலன்
றானு மஞ்சுவன் றவறில வேள்விசெய
கோனு மஞ்சுமவெங் கூற்று மஞ்சுமவ
வானு மஞ்சுமிம மண்ணு மஞ்சுமே. (௨௨௭)

பாச னங்களை பரவ ஞாலமேற
றேசில் வெய்யகோல் செலுத்தி யாங்கவ
ராசி செய்யநீ டரசு செய்வனு
லீச னன்றியா ரிவனை வீட்டுவார். (௨௨௮)

என்னு மாத்திரத் திவன்ற னக்குநீ
நன்ன லந்திகழ் நாம மொன்றினைப
பன்னு கென்னநீ பரித்த லாலிவன
றன்ன தொண்பெயா சலந்த ரன்னெனு. (௨௨௯)

பேரிட் டொல்லையிற பிரமன் றனுறை
யூரிற் போயினு னுத்தி பறபகல்
சீரிற் போற்றலுஞ் சிறுவன் காளையாய்ப
பாரிற் சோந்தன னவுணர் பாறபட (௨௩௦)

சென்று பாரிடைத் திசைகள் யாவையும
வென்று வாசவன் விண்ணு ளோர்நிதிக
குன்று சேர்தரக் கொடுமை செய்தனன
றன்று கின்றதொல் லவுணா சூழவே (௨௩௧)

பொன்னெ டுங்கிரி தனிற்புத் தேளிரு
மன்னும் வைகலும் வான நாடெலாந்
தன்னை நேரிலான் றான வாக்கெலா
நன்ன யப்பொடு நலகி னனரோ. (௨௩௨)

வச்சி ரப்படை மன்னன் பொன்னகர்
நச்சும் வண்ணமோர் நகரஞ் செய்கென
வச்ச லந்தர னருளத தானவர்
தச்ச னவ்வழி சமைத்து நல்கினன். (௨௩௩)

பாந்தண் மீமிசை பரிக்கு நேமிசா
லாந்த ரம்மென வறையு நின்றதோ
ரேந்தன் மாநக ரிடையிற் றானவர்
வேந்தர் போற்றிட வரசின் மேயினன். (௨௩௪)

கால நேமியா மவுணன் கன்னிகை
வேலை நேர்விழி விருந்தை யென்பவள்
கோல நாடியே குரவன் கூறிட
வேலை வேமணந் தின்ப மெய்தினன், (௨௩௫)

பாரி லவ்வழிப் பன்னெ டும்பகல்
சீரின் வைகினன் றேவர் யாவரு
மேரு வுற்றன ரவரை மேவியாம்
போர்செய் வோமெனப் புகன்று போயினன். (௨௩௬)

துங்க வீரர்க டொழுச லந்தர
னங்கண் மேவலு மமரர் வெய்யவ
னிங்கும் வந்தன னென்செய் வோமெனாச்
சிங்கங் கண்டதோர் கரியிற் றேம்பினார். (௨௩௭)

தேம்பு கின்றவர் செய்வ தோர்கிலார்
பாம்ப ணைததுயில் பவனை யுன்னியே
யோம்பு கென்றலு முவண மீமிசை
யேம்ப லோடுமவந் திமைப்பி லெய்தினன். (௨௩௮)

வருச லந்தரன் யாறு கொண்டெழு
விருப தாயிரம யாண்டு பல்படை
யுரிய மாயைகொண் டுருத்தெ ழுந்துமால்
பொருதும் வென்றிலன் புகழ்ந்து போயினன். (௨௩௯)

கொண்டன் மேனியன் கொடியன் றன்னொடு
மண்டு போரிடை மலையும் வேலையி
லண்டர் வாசவ னஞ்சி யாலமார்
கண்டன் மேவிய கயிலை யெய்தினார். (௨௪௦)

வேறு.

அற்று கின்ற வேலையின் வேலை யருண்மைந்தன்
பற்றார் தம்மை நாடினன் யாண்டும் பார்க்கின்றான்
கற்றா ரேத்துங் கண்ணுதன் மேய கயிலாயத்
துற்றார் கொல்லென் றுன்னி வெகுண்டா னூர்போந்தான். (௨௪௧)

தூண்டா வெற்றுற் பெறறிடு சேனைத் தொகையோடு
மீண்டா கிற்பான் றென்கயி லைக்கென் றெழும்வேலை
வேண்டா வேண்டா கிதத னுடன்வெஞ் சமர்செய்யின்
மாண்டா யென்று ளில்லென வாழு மதிவல்லி. (௨௪௨)

குலந்தனில் வந்தார் கூறிய மாற்றங் குறிக்கொள்ளா
னலந்தரு கின்ற செய்வினை யேகூரா னவைபாரான்
புலந்தரு செறற மீக்கொள யாதும பொறையின்றிச்
சலந்தர னும்பே ருண்மைய தென்னச் சாதித்தான். (௨௪௩)

சேனை மேகம் போற்படை மாரி சொரிகின்ற
சேனை யூகஞ் சூழ்தர வாழித் திருமைந்தன்
போனா னெங்கோன் றென்க யிலைக்கோர் புடையாக
வானோ டுள்ளோ ரங்கது காணா மறுகுற்றான். (௨௪௪)

தாண்டும் பாய்மாத் தேர்கரி வீரர் தற்சூழ
வீண்டும் வந்தான் றீயவ னவி யிறும்வண்ணங்
காண்டும் மென்னா வாசவன் வானோர் கணமோடும்
வேண்டும் வெள்ளிக் குன்றுறு கோயின் மேவுற்றான். (௨௪௫)

வேறு.

முந்திய வாயிலின் முறைபு ரிந்திடு
நந்தியை வணங்கியுண் ணடுக்கரு செபபனு
மந்தமில் பண்ணவ னருளை நாடியே
யுந்திட விந்திர னுறையுள போயினான். (உசசு)

குணங்களின் மேற்படு குழகன் மால்வரை
யணங்கொடு வீற்றிருந் தருளு மெல்லைபோய்
வணங்கினன் றொழுதனன் வலிய தூன்பினு
லுணங்குதன் மனக்குறை யுரைததன் மேயினான். (உசஎ)

நிலந்தனை வளைந்தமுந் நீரில வந்தவன்
சலந்தர னெனும்பெயாத தறுகட் டானவன்
மலைந்தெமை வென்றிட மாசுற் றோடினே
னலந்தரு கின்றபொன் னுடு நீத்தனன். (உசஅ)

வெந்துய ரெய்தியே மேரு வின்புடை
யுய்ந்தனன் யானென வொளித்து மேவின
னந்தவண் ணதனையு மறிகுற் றுங்கவன்
வந்தன னவவழி மாலை யுன்னினன் (உசகூ)

மாலும்வந் தணுகியே மலைந்து தோற்றிடா
மேலுமங் கவன்றனை வியந்து போயினு
னீலகண் டத்தனே நினது மால்வரை
யேலவந் துற்றன னிதுவுங் கேட்டனன். (உருo)

ஈங்கும்வந் துற்றன னியாவ துன்னியோ
வாங்கது தெரிகிலே னளியன் றுன்பமுந்
தீங்குறு சலந்தரன் றிறலும் வாழ்க்கையு
நீங்குத லுன்னுதி நிமல நீயென்றான். (உருக)

வலரெயு றி படையினன் மாற்றங் கேட்டலின்
பருவர லொழிகெனப் பகர்ந்து போக்கியே
கருணையி னீர்மையாற் கணிச்சி வானவ
னொருதனி யாடலை யுள்ளத் துன்னினான். (உருஉ)

நான்றகுண் டிகையின னரைகொள் யாக்கைய
னூன்றிய கோலின னோலைக் கையினன்
மூன்றனல் வளர்ப்புறு முனிவ ரேயெனத்
தோன்றினன் றனக்கொரு தோற்றம் வேறிலான். (உருங)

விம்மலை யுற்றிடு விரதர்க் காகமுன்
கைம்மலை யுரித்தவன் கயிலை யென்றிடு
மம்மலை யொருபுடை யணுகுந் தானவர்
செம்மலை யெதிர்கொடு செலலன் மேயினான். (உருச)

இந்திர னிமையவ ரினத்தொ டண்டியே
வந்தனை செய்தனன் மறைந்து பின்வர
வந்தணா வடிவுமகாண் டவுணா காவலன்
முந்துற வெய்தியே முதல்வன் கூறுவான். (உருரு)

எங்குளை யாரைநீ யெவரை நாடியே
யிங்குறு கின்றனை யியம்பு வாயென
வங்கணன் மொழிதலு மந்தண் வேதிய
சங்கைய தில்வகை சாற்றக் கேளென்றான். (உ௲ச)

கிலந்தனி லுற்றுளா னேமி காதலன்
சலந்தர னென்பவன் றமியன் வானவ
ருலேந்திட நுதல்விழி யொருவன் றன்னுடன்
மலேந்திட வந்தனன் வல்லையீண் டென்றான். (உ௲எ)

அவ்வுரை வினவியே யண்ண லெண்ணமுஞ்
செவ்விது செவ்விது தீதுண் டோவெனு
வெவ்வமில் புகழ்ச்சிபோ லிகழ்ந்து காட்டிடா
நவ்வியங் கைத்தல னகைத்துச் செப்புவான். (உ௲அ)

கயிலேயங் கிரியுறை கண்ணு தற்பிரா
னையனுற விருபபன்யா னவனெ டேயமா
முயனுது கிற்றியேன் முடிதி யுய்ந்திடுஞ்
செயலினே நினேததியேற் செல்க மீண்டென்றான். (உ௲௯)

பண்ணவ னினையன பகாதல் கேட்டலு
மெண்ணமில் சலந்தர னெரியிற் சீறியே
கண்ணழல் கதுவுறக் காயம் வேர்வெழத்
துண்ணென வுயிர்த்திவை சொற்றன் மேயினன். (உ௬௦)

சிறியவன் போலெனேச் சிந்தித் தீரியான்
பெறுவதோர் சயமெலாம பேசி யாவதென்
னிறைவரை யீண்டுநின் றெனது வன்மையை
யறிகுதி ரறிகுதி ரந்த ணீரென்றான். (உ௬க)

என்றிவை சலந்தர னிசைப்ப யாமுமுன்
வன்றிறல் காணிய வந்த னம்மெனுத்
தன்றிரு வடியினுற் றரணி யின்மிசை
யொன்றெரு திகிரியை யொல்லே கீறினன். (உ௬உ)

ஆங்கது திகிரியொன் றுக வந்தண
னீங்கிது சென்னியி லேற்றி வன்மையாற்
றாங்குதல் வல்லேயோ வென்று சாற்றலுந்
தீங்குறு சலந்தர னினைய செப்புவான். (உ௬௩)

புங்கவர் யாரையும் புறங்கண் டேன்வரு
கங்கையை யடைத்தனன் கார்கொள் வேலேயி
லங்கியை யவித்தன னரியை வென்றன
னிங்கிது தாங்குவ தரிய தோவெனு. (உ௬௪)

புரத்தழல் கொளுவியோன் பொறித்த நேமியைக்
கரத்திடை யெடுத்தனன் கனங்கொண் டெய்தலி
னுரத்திடைப் புயத்திடை யுயிர்த்துத் தாங்கியே
சிரத்திடை வைத்தனன் றேவ ரார்க்கவே. (உ௬௫)

செழுஞ்சுடர்ப் பரிதியைச் சென்னி கோடலா
லொழிந்திடு சலந்தர னுச்சி யேமுதற்
கிழிந்தது முழுதுடல் கிளர்ந்து சோரிநீ
ரிழிந்தது புவிதனி லிழுமெ னோசையால். (உசுசு)

பரிதியங் கடவுளப் பதகன் றன்னுட
லிருபிள வாக்கியே யிறைவன் றன்னிடை
யுருவுகொண் டுற்றதிவ் வுலகம் யாவையுங்
குருதியம் பெருங்கடல் வளைந்து கொண்டதே. (உசுஎ)

பாதல நிரயமாம் பாழி யூடுநீ
போதென வெருவைநீர் போந்த தாயிடை
யாதியங் கடவுளவ் வவுணன் சேனையைக்
காதினன் விழிபொழி கனலின் ஞானையால். (உசுஅ)

பரந்திடு மவுணர்தம் பகுதி வீட்டியே
கரந்ததொல் வடிவினைக் காட்டி நிற்றலும்
புரந்தரன் முதலினோர் வணங்கிப் போற்றியெம்
மரந்தையை யகற்றினை யைய நீயென்றார். (உசுகூ)

முன்புறு புரந்தரன் முதலி னோர்க்கெலா
மின்புறு தொல்லர சியற்ற நல்கியே
யன்புடன் விடைகொடுத் தமல நாயகன்
றென்பெருங் கயிலைமே சேர்ந்து வைகினான். (உஎ0)

ஆவியை யிழந்திடு மவுணர் காவலன்
றேவியை விரும்பியே திருவி னாயகன்
மாவிர தியரென மற்ற வன்மனைக்
காவினு ளிருந்தனன் கைத வத்தினான். (உஎக)

இருந்திடு மெல்லையி லேமக றபுடை
விருந்தையென் றிடுமவள் வேந்தன் செய்கையைத்
தெரிந்தில ளாற்றவுஞ் சிந்தை நொந்துமெய்
வருந்தின ளுய்ந்திடும் வண்ணங் காண்கிலாள். (உஎஉ)

பரிதலுற் றிரங்கினள் பதைத்துச் சோர்ந்தன
ளொருதனித் திருக்கில ளுரையு மாடல
டிரிதலுற் றலவினள் செய்வ தோர்கில
ளிருதலைக் கொள்ளியி னெறும்பு போன்றுளாள். (உஎங)

கல்வரை யேந்திய காளை யைப்புணர்
தொல்வரை யூழினாற் றுன்ப நீங்கலா
மெல்வரை யன்னதோள் விருந்தை மேவினா
ளில்வரை யிகந்திடா வேமக் காவினுள். (உஎச)

மடவரல் வருதலும் வைகுண் டந்தனிற்
கடைமுறை போற்றிடு மிருவர் காவல
ரடலரி யாகியே யார்த்து முன்னுற
விடியுறு மரவுபோ லேங்கி யோடினாள். (உஎரு)

மடந்தையங் கிரிதலு மடங்க லானவர்
தொடர்ந்தனர் பின்வரத் துளங்கிச் சோலையி
னிடந்தனின் முனியென விருந்த வெய்யனை
யடைந்தன ளடைதலு மஞ்ச லீயென்றான். (உஎசு)

என்றருள் புரிதலு மிகல்வெஞ் சீயமாய்ப்
பின்றொடர் காவலர் பெயர்வுற் றோடினார்
நின்றவ ளிருந்தவ னிலைமை நோக்கியே
நன்றிவ னியல்பென நவில்வ தாயினாள். (உஎஎ)

எந்தையெம் பெருமகே ளெனது காதல
னந்தமி லீசன்மே லமருக் கேகினான்
வந்தில னின்னமு மாய்வுற் றான்கொலோ
வுய்ந்துள னேகொலோ வுரைத்தி நீயென்றாள். (உஎஅ)

இரங்கின ளிவ்வகை யிசைப்ப மாதவன்
வரங்கெழு தானையின் மன்னர் மாயையாற்
குரங்கென வீருருக் கொண்டு கொம்மென
வுரங்கிளர் சலந்தர னுடல்கொண் டெய்தினார். (உஎகூ)

இருபிள வாமவ னியாக்கை கொண்டுசென்
றரிவைமுன் னிட்டன ரதனைக காண்டலும்
வெருவினள் பதைத்தனள் வீழ்ந்த ரற்றினா
ளொருவின ளுயிரென வுணர்வு நீங்கினாள். (உஅ0)

வருந்தலை வருந்தலை மங்கை நீயெனக்
கரந்தனை யோச்சியே காத னீர்மையா
லிருந்தவ னெழுபபலு மெழுந்து தேறியே
விருந்தைகை தொழுதிவை விளம்பன மேயினாள். (உஅக)

நின்னிகர் மாதவர் நிலத்தி னில்லையா
லென்னுயிர் காத்தியே லெனது நாயகன்
பொன்னுட லத்தனைப் பொருத்தி யவ்வுயிர்
தன்னையு மமைத்தனை தருதி நீயென்றாள். (உஅஉ)

ஆயது காலையி லவுணன் யாக்கையை
யேயென வொன்றுமா றியற்றி மாதவன்
மாயம தாகியே மறைந்து மற்றவன்
காயம திடைதனிற் கலந்து வைகினான். (உஅக)

புல்லிய குரங்கெனப் புகுந்த கள்வரு
மொல்லையின் மறைந்தன ருயர்ச லந்தரன்
றொல்லுடல் புகுந்தரி துஞ்ஞென் றேயெழு
மெல்லியல் கண்டனள் வியந்து துள்ளினாள். (உஅச)

உய்ந்தனன் கணவனென் றுளத்தி லுன்னியே
வெந்துய ரகன்றனள் விருந்தை யென்பவள்
வந்தனை போலுமென் மன்ன நீயென
வந்தமி லுவகையா லவனைப புல்லினாள். (உஅரு)

புல்லிய விருந்தையைப் புணர்ந்து மாயவ
னெல்லியும் பகலுமோ ரிறையு நீங்கலா
னல்லியந் தேனுக ரளியைப் போலவண்
மெல்லித ழமுதமே மிசைந்து மேவினான். (௨௭௬)

காய்கதிர் நுழைவுறாக் கடிமென் காவினுண்
மேயினன் பலபகல் வேளி னூல்வழி
யாயதோர் வைகலி னரன தாணையான்
மாயம தயர்த்தனன் மலர்க்கண் டுஞ்சினான். (௨௭௭)

துஞ்சிய வேலையிற் றுணைவி யாகிய
பஞ்சினின் மெல்லடிப் பாவை பார்த்திவன்
வஞ்சகன் வஞ்சகன் மாய னேயெனா
வஞ்சின னெஞ்சக மழன்று நீங்கினாள். (௨௭௮)

அருந்ததி யன்னகற் பழிந்த தன்மையால்
வருந்தின ளுயிர்த்தனண் மாயம யாவையும
பொருந்திய தன்னுயிர்ப் போத நீர்மையாற்
றெரிந்தனள் சீதரற் கிதனைச் செப்புவாள். (௨௭௯)

மாவலி யுடையதோர் மடங்க லாயினோ
காவல ரிருவரக காவ லாளருன்
மேவல ராயுப வேந்த னாகிநீ
யோவலை குரங்கொடு திரிதி யொண்புவி. (௨௮௦)

பொறபுறு கணையினைப் போல வந்தெனைப்
பறபகல் புணர்ந்தனை பகைவர் மாயையாற்
கற்புடை மனைவியைக் கவர்ந்து போகநீ
சொற்படு பழியினைச் சுமத்தி யாலென்றாள். (௨௮௧)

இக்கொடு மொழிபுகன் றெரியை மூட்டியே
புகவுயிர் துறந்தனள் புலம்பி யாங்கவ
ளாகவுறு சுடலைநீ றாடி வாடினான்
மைக்கடன் மேனியன் மாலின் மூழ்கியே. (௨௮௨)

வேறு.

அத்துணை தன்னின் வானோ ரம்புயன் கயிலை யேகி
யித்தனை யிறைஞ்சி மாயோ னிலைமையை யுணர்த்தும் போழ்திற்
சத்தியங் கதனைத் தேர்ந்து தலையளி செய்து தானோர்
வித்தினை யுதவி யீது விண்டுமுன் னிடுதி ரென்றாள். (௨௮௩)

ஈதலு மதனை வேதா விருகையா லேந்திச் சென்னி
மீதுறக் கொண்டு போந்து விருந்தைதன் னீமந் தன்னிற்
றூதுறு பலியின் வித்தித் தடங்கட லமுதம் பெய்ய
மாதவன் முன்ன மாங்கோர் துளவமாய் மலிந்த தன்றே. (௨௮௪)

தண்டுளா வான தாங்கோர் தையலாய் நின்ற காலைக்
கண்டனன் றிருவின் கேள்வன் கனலிடைப் புகுந்தாண் மீது
கொண்டிடு காத னீங்கி யவள்வயிற் கூட்டம் வெஃக
வண்டறு மயனு மாலுக் கருங்கடி யியற்றி யிந்தார். (௨௮௫)

கடியுறு துளவ மென்னுங் கன்னியைக் கொண்டு கஞ்சக்
கொடியுறு தகைமைத தான கோநகர் குறுகி வேறோர்
படியுறு பெற்றித் தல்லாப் பல்பெரும் போக மாற்றி
முடியுறு சூட்டு மாக முடித்தனன் முளரிக் கண்ணன். (உகூகூ)

அவன்சலந் தரனை வீட்டு மாழியை வாங்கப் பன்னாட்
சிவன்கழல் வழிபட் டோர்நாட் செஙகணை மலராச் சாத்த
வுவந்தனன் விடைமேற றோன்றி யப்படை யுதவப் பெற்று
கிவந்தன னதனால் வைய நேமியா னென்ப மாதோ. (உ.கூஎ)

வேறு.

போற்ற லார்தம் புரமடு புங்கவன்
வேற்று ருக்கொள வியனருட் டன்மையைச்
சாற்றி னுமினித் தன்னிக ரில்லதோ
ரேற்றின் மேலவருந் தன்மை யியம்புவாம். (உகூஅ)

இன்ன நான்குகத் தெல்லையி ராயிர
மன்னு கின்றதொர் வைகலவ் வைகறுன்
றுனனு முபபது தொக்கதொர் திங்களா
மன்ன தாறிரண் டால்வரு மாண்டரோ. (உகூகூ)

ஆண்டு நூறுசென் றுலயற் காயுவு
மாண்டு போமது மாற்கொரு வைகலா
மீண்டு நூல்க ளெலாமிவை கூறுமாற்
காண்டி யாலிவை கற்றுணர் பேதைகீ. (௩00)

ஆய தன்மையி லச்சுதற் காயுவு
மாயு மெல்லையின் மன்னுயிர் யாவையுந்
தேயு மண்டரு சிதைந்திடு மெங்கணும்
பாயி ருங்கன லேபரந் துண்ணுமால். (௩0க)

ஆன காலை யகிலமு மீமமாய்த
தூந லங்கொடு தோன்றுமச் சூழலிற்
றுனு லாவித தனிநடஞ் செய்திடு
ஞான நாயக னுயகி காணவே. (௩0உ)

பெருகு தேயுப பிரளய மன்னதிற்
றருமட யாவினுக் குந்தனித் தெய்வதம்
வெருமி யாமிவண் வீடுது மேலினிப்
புரிவ தேதெனப் புந்தியிற் சூழ்ந்ததே. (௩0௩)

ஆறு லாஞ்சடை யண்ணலைச் சேர்வனே
வீறி லாதென்று முற்றிடு வேனெனுத்
தேறி யேயறத தெய்வதனு செங்கணு
னேற தாயொ ரெழிலுருக் கொண்டதே. (௩0௪)

ஏற்றின் மேனிகொண் டீசன்முன் னேகியே
போறறி யானின்று பொன்றிடுந் தன்மையை
யாற்றி யாற்றல் வழங்கிதிற் கூர்தியாம்
பேறமை யெற்குப பிரானரு ளென்னவே. (௩0௫)

வேறு.

இறத்தலை யின்மையும் யான மாய்ததனைப்
பொறுத்திடுந் தன்மையும் பொருவில் வன்மையு
முறைதத்திடு மன்புமவா லுணர்வு நல்கியே
யறத்தனிக் கடவுளுக் கண்ணல் கூறுவான். (௩0௬)

முதலய விடைகடை மொழிய தின்றிடுஞ்
சதுர்வித யுகந்தனிற் றருமத தின்றிற
மிது வென நான்குமுன் றிரண்டொன் றாகிய
பதமுறை யூன்றியே படியிற் சேறிமேல். (௩0௭)

ஈங்குன திடந்தனில் யாமெக காலமு
நீங்கல மிருந்தன நீயும் வந்துநம்
பாங்கரி னடைந்தனை பரிவொ டோர்தியாய்த்
தாங்குதி யாரினுந் தலைமை பெற்றுளாய். (௩0௮)

எண்ணுநந் தொண்டர்க ளியற்று பாவமும
புண்ணிய மாநமைப் புறக்க ணித்துளார்
பண்ணிய வறமெலாம் பாவ மாகுமாற்
றிண்ணமீ தருமறை தானுஞ் செப்புமே. (௩0௯)

மைதவி ரடியர்செய் பவமு மற்றுளார்
செய்திடு தருமமுந் திரிப தாகியே
யெய்திடு கின்றதி யாமுன் றன்னிடை
மெய்திக ழுயிரென மேவும் பான்மையால். (௩௧0)

கின்னிடை யாமுளோ நீயு மோதியாய்
மன்னுதி யெமதுபான் மற்றி தல்லதை
யின்னுமோர் வடிவுகொண் டெம்மைப் போற்றுதி
யன்னது முணர்கென வருளிச் செய்தரோ. (௩௧௧)

வேறு.

கூர்ந்த சூலக் கொடும்படை வானவன்
சார்ந்து போற்றுந் தருமக் கடவுளை
யூர்ந்தி டுந்தனி யூர்திய தாகியே
சேர்ந்தி டும்படி சீரருள் செய்தனன். (௩௧௨)

அந்த நாண்முத லாதிப் பிரான்றனைச்
சிந்தை மேல்கொண்ட சீருடை யன்பர்முன்
னந்தி யாகு நலம்பெறு மூர்திமேல்
வந்து தோன்றும் வரம்புரி பான்மையால. (௩௧௩)

சாற்று மவ்விடைக் கேதனைத் தாங்குபே
ராற்ற லீந்த செயலறிந் தல்லவோ
மாறற லார்புரஞ் செற்றுழி மாயவ
னேறின் மேனிகொண் டெந்தையைத தாங்கினான். (௩௧௪)

ஆத லாலர னவ்விடை யூர்ந்திட
லேத மோவன் றிதுகிற்க தெண்டிரை
மீது தோன்றும் விடததையுண் டானென
வோதி னுயத னுண்மையைக் கேட்டிநீ. (௩௧௫)

வேறு.

நிருதர் தம்முட னவுணரு மமரரு நேர்ந்து
திருகு வெஞ்சினத் தொருபகன் முந்துபோர் செய்ய
விருதி றத்தினும் பற்பலர் வல்லையி லிறப்ப
வெருவி யன்னது கண்டன ரமரினை விடுத்தார். (௩௧௬)

மேலை வானவ ரவுணர்தங் கோவொடு விரவிக்
கால மெண்ணில விருந்துபோர் செய்வது கருதி
நாலு மாமுகத் திறையவன் பதத்தினை நணுகிச்
சீல மோடவன் றாண்மலர் பணிந்துரை செய்வார். (௩௧௭)

ஒல்கு மாயையை யுடையரேம பற்பக லுஞற்று
மல்கு பேரம ரியற்றுவான் பாற்கடன் மதியா
வல்க லின்றிய வமிர்தினை வாங்கியே யடிகே
ளல்கு வாயெமக் கென்றலு மயனிவை நவில்வான். (௩௧௮)

ஆதி மாயவற கிச்செயன் மொழிகுவ மவனே
யோத வேலையைக் கடைந்தமு தளித்திடு மூண்டாற்
சாதல் வல்லையில் வந்திடா தென்றயன் சாற்றிப்
போது நாமென வவரொடும் பாற்கடல் புகுந்தான். (௩௧௯)

நனந்த லைப்படு பயங்கெழு தெண்டிரை நடுவ
ணனந்தன் மீமிசைத் துயிலுறு மூர்த்தியை யணுகி
மனந்த வாதபே ரன்பொடு நான்முகன் வழுத்த
நினைந்து கண்விழித் தொய்யென வெழுந்தன னெடியோன். (௩௨0)

நீவி ரிவ்விடை வந்தவா றென்னென நெடியோன்
பூவின் மேல்வரு பண்ணவ னவுணர்கள் பொருவி
றேவர் வேந்தர்கள் வேண்டிய குறையினைச் செப்ப
வாவ தென்றதற கியைந்தன னளித்திடு மருளால். (௩௨௧)

அருள்பு ரிந்தெழு மாயவன் மந்தர மதனை
யுருள்பு ரிந்திடு மத்தென நிறுவியே யுடலாம்
பொருள்பு ரிந்திடு மதியினை மதலையாப் புரியா
விருளபு ரிந்தவா சுகிதனை நாணென யாத்தான். (௩௨௨)

ஒருபு றத்தினி லமரர்க ளொருபுறத் தவுண
ரிருபு றத்தினு மீர்த்திட நல்கியப் புவிசூழ்
தருபு றக்கிரி யனையமத் தடிமுடி தன்மெய்
வருபு றத்தினுங் கரத்தினும் பரித்தனன் மாலோன். (௩௨௩)

ஆன தன்மையின் மாயவன் பரித்துழி யமரர்
கோனும் வானவர் யாவரு மவுணருங் கோமான்
றானும் வாசுகி பற்றியே வலியுறுந் தகவால்
வானி லாவுமிழ் பாற்கடன் மறுகிட மதித்தார். (௩௨௪)

மதித்த வேலையவ் வேலையி லுடைந்தென வாய்விட்
டதிர்த்த தேவரு முலைந்தனர் குலைந்தன வகிலங்
கதித்த மேருவுஞ் சலித்தன வொலித்தன கரிகள்
பதைத்து வெய்துயிர்த் தொடுங்கின நடுங்கின பணியே. (௩௨௫)

உடைந்து போவது கொல்லென வமரர்க ளொருங்கே
தொடர்ந்த தம்பெரு வலிகொடே மந்தரஞ் சுழலக்
கடைந்து வேலையைக் கலக்குழி யீர்த்திடுங் கயிறு
யடைந்த வாசுகி பொறுக்கலா தயர்ந்ததை யன்றே. (௧௨௬)

ஊன்று பேதுற வெய்தியே யாற்றவெய் துயிர்த்துத்
தோன்று வெஞ்சினங் கொண்டுமெய் பதைத்துநாத் துடிப்ப
வான்ற வாயிரம் வாய்தொறு மாலகா லத்தைக்
கான்ற தத்துணை யளக்கரு முமிழ்ந்தது கடுவே. (௧௨௭)

ஈற்றுக் கோடியி னெழுமுகிற் கோடியி னிருண்டு
கூற்றுக் கோடியின் மறங்கொடு திசைதொறுங் குலவுங்
காற்றுக் கோடியின் விரைவினல் வடவையங் கடுந்தீ
நூற்றுக் கோடியிற் பரந்ததவ் விடமெலா நொய்தின். (௧௨௮)

ஓட லுற்றெழுந் தவ்விடஞ் சூழ்தலு முலையா
வோட லுற்றனர் தானவ ருமபரா யுள்ளோ
ரோட லுற்றனர் முனிவர ரோட லுற் றனரா
லோட லுற்றன ருலகெலாம படைததிடு முரமேவா. (௧௨௯)

தண்டு பூாய்முடிப் பண்ணவ னினையதோர் தன்மை
கண்டு மந்தரங் காப்புவிட் டுள்ளமேற் சுவறசி
கொண்டு நாமின்று போற்றுது மீதெனக் குறியா
வண்ட ராதியர் மேறசெலும் விடத்தின்முன் னடுததான். (௧௩௦)

மேல்வ ருங்கொடு விடத்தின்முன் னூறுதலும் வெகுண்டு
சால வங்கது தாமரைக் கண்ணன் மேற் றூக்கி
மூல முள்ளதோர் வச்சிர மணிநிற முருக்கி
நீல வண்ணமே யாகிய தவனுகின் றிலனால. (௧௩௧)

கோல காலமா யுலகெலா மடுந்தொழில் கொண்ட
வால காலமுன் னிற்கலா ரரிமுத லாரோ
மூல காலமு மிறுதியு மின்றியே மூவாக்
கால காலன்வாழ் கயிலையை யடைந்தனா கடிதில். (௧௩௨)

முந்து வெவ்விடஞ் சுடுதலா லிரிந்தவர் முக்க
ணைந்தை யெம்பெரு மாட்டிவாழ் கயிலையி லெவருமட
வந்த தற்புத நீரதோ வெருவினன் மைந்தர்
தந்தை தாயிடத் தன்றியே யாங்கனை சாரவார. (௧௩௩)

வேறு.

ஆயவர் கயிலையி லமலற காகிய
கோயிலின் முதற்பெருங் கோபு ரத்திடை
நாயக நந்தியந் தேவை நண்ணியே
பேயதெந் துயரெனப் புகன்று போற்றினர். (௧௩௪)

போற்றிய பின்னுறப் புகுந்த வாறெலாஞ்
சாற்றினர் கேட்டலுந் தகுவர் தேவர்கள்
வீற்றுற வவணிறீஇ வேதன் மாறிசைக்
கொற்றொழி லார்தமைக் கொண்டு போயினன். (௧௩௫)

நடைநெறி யருள்புரி நந்தி யெம்பிரான்
கடைநிலை யைந்தவாங் காப்பி லெண்டிசை
யடைதரு மன்னரை யருளி னேக்கியிவ்
விடைதனி னுறுதிரென் றியம்பி யேகியே. (௩௩௬)

அருண்முறை நாடிமா லயனென் றுள்ளதோ
ரிருவரை யமலன்முன் னெய்த வுய்த்தலுங்
கருணையங் கடறனைக் கண்டு போற்றினார்
பரவச மாயினா பணிந்து பன்முறை. (௩௩௭)

போற்றினர் நிற்றலும் புரத்தை மூன்னடு
மாற்றலி னும்பரா னரிகின் மேனிதான்
வேற்றுரு வாயிவண் மேவிற் றென்னெனச்
சாற்றினன் யாவையு முணருந் தன்மையான். (௩௩௮)

மெய்வழி பாடுசெய் மேலை யோர்க்கெலா
முய்வழி புரிபவ னினைய வோதலு
மைவழி மேனியன் மான முள்ளுற
வவ்வழி யினையன வறைதன் மேயினன். (௩௩௯)

வஞ்சின வவுணர்கள் வான மேலவர்
வெஞ்சின வமரினில் விளிந்த வேலையி
லெஞ்சலி லாயுவுற் றிகல்செய் வாமெனப
புஞ்சமொ டயனொடு புகறன் மேயினர். (௩௪௦)

அன்னமென் கொடியின னனைய ரோடுபோந்
தென்னொடு கூறினன் யானெ மூந்தரோ
வுன்னருள் பெற்றில னுணர்ந்தி டாமலே
மன்னிய வமிழ்திவண் வருதல் வேண்டினேன் (௩௪௧)

தானவ ரமரர்கள் சதுர்முகத்தவ
னேனையர் தமமுட னிபானின் றெய்தியே
பானிறை கடல்கடை பொழுதிற் பாவெரி
யானது மருளுற வாலம் போந்ததே. (௩௪௨)

உன்றன தருள்பெறு வுண்மை நாடியே
யின்றல குயிரெலா மிறக்க வவ்விடஞ்
சென்றதி யாவருந் தெருமந் தோடினா
நின்றவென் மெய்யையிந் நிறம தாக்கிற்றே. (௩௪௩)

வேற்றுரு வாக்கியென் மெய்யிற் றுக்கலு
மாற்றல னகன்றன னனையர் தம்மொடே
யேற்றம தானவெம் மிடர்கள் யாவையு
மாற்றுநர் யாருளர் மற்று நீயலால். (௩௪௪)

உன்னருள் பெறுமலவ் வுததி சேர்தலா
லின்னதோ ரின்னல்வந் தெய்திற் றுதலா
னின்னடி யடைந்தன நீடு தீயெனத
துன்னிய கொடுவிடந் தொலைக்கச் செல்லுமால். (௩௪(

ஆரணம் யாவையு மறிந்த நாடொறும்
பூரண வுமையொடு பொருந்தி யின்னதா
மோரண வுருவுகொண் டிருக்கை யெம்மையாள்
காரண மன்றியே கருமம் யாவதோ. (௧௪௬)

தீயென வெழுதரு சீற்ற வெவ்விட
மாயதை மாற்றியே யளியர் தங்களை
நீயருள் புரிகென நீணி றந்திகழ்
மாயவ னுரைத்தனன் வழுத்தி நிற்கவே. (௧௪௭)

மாதிர விறைவரும் வானு ளோர்களு
நீதியி லவுணரு நின்ற வெல்லையி
னோதனை வழுத்தலு நம்பன் கேட்டரோ
வேதிவை யரவமென் றியம்ப லோடுமே. (௧௪௮)

வானவ ரவுணர்கண் மாதி ரத்தவ
ரேனையர் வல்விடத் தின்ன லுற்றுளார
கோநகர்க் கடைதொறுங் குழுமி யேத்தினு
ரானதிவ் வொலியென வயன்வி ளம்பவே. (௧௪௯)

கறுத்திடு மிடறுடைக் கடவு ணந்தியைக்
குறிப்பொடு நோக்கியே கொணர்தி யாலெனப்
புறத்திலம் மேலவன் போந்து மற்றவர்
திறத்துட னுறையுளிற் செல்ல வுய்ப்பவே. (௧௫௦)

வந்தவர் யாவரும் வணங்கி யீசனைப்
புந்தியி லன்பொடு போற்றி யாற்றவு
நொந்தனம் விடத்தினு னெய்தி லன்னதைச்
சிந்தினை யொக்கருள் செய்தி யென்னவே. (௧௫௧)

வேறு.

ஈதெலாங் கேட்ட மேலோ னிறைவியை நோக்கி யின்னோ
ரோர்தலா பாற்ற முன்ற னுளத்தினுக் கியைவ தாமோ
மாதுநீ புகறி யென்ன வந்துநின் னடைந்தார் வானோ
ராதலா லவாக்கு வல்லே யருள்புரிந் திடுதி யென்றாள். (௧௫௨)

வண்டமர் குழலெம் மன்னை மற்றிவை யிசைத்த லோடு
மண்டரு மகிழ்ச்சி யெய்தி யாதியங் கடவு டன்பாற்
றொண்டுசெய் தொழுகு கின்ற சுந்தரன் றன்னை நோக்கிக்
கொண்டிவண் வருதி யாலக் கொடுவிடந் தன்னை யென்றான். (௧௫௩)

என்றலு மினிதே யென்று விறைஞ்சின னேகி யாண்டுந்
துன்றிய விடத்தைப் பற்றிச் சுந்தரன் கொடுவந் துய்ப்ப
வொன்றொரு திவலை யேபோ லொடுங்குற மலர்க்கை வாங்கி
நின்றிடு மமரர் தம்மை நோக்கியே விமலன் சொல்வான். (௧௫௪)

காளக வுருவு கொண்ட கடுவினை யுண்கோ வன்றே
னீளிடை யதனிற் செல்ல நிறுப்பட வெறிகோ வென்று
வாளுறு மதிதோய் சென்னி வானவ னருள வன்னோன்
றாளுற வணங்கி நின்று சதுர்முகன் முதலோர் சொல்வார். (௧௫௫)

ஐயநீ யன்றி யாரிவ் வனல்விட மாற்று நீரார்
செய்யகைக் கொண்ட வாற்றாற் சிறிதெனக் காட்டிற் றன்றே
வெய்யதோ ரிதனை யின்னே விட்டனை யென்னிற் பின்னை
யுய்வரோ யாரு மின்னே யொருங்குடன் முடிந்தி டாரோ. (௫௫௬)

முடிவிலா வுனக்கே யலஃறோ முன்னுறு பாக மெல்லாம்
விடமதே யெனினு மாக வேண்டுது மிதனை வல்லே
யடியரே முய்யு மாற்றா லருந்தினை யருண்மோ வென்னக்
கடிகம ழிதழி வேய்ந்தோன் கலங்கலீ ரினிநீ ரென்றான். (௫௫௭)

என்றனன் விரைவிற் றன்கை யேந்திய விடமுட் கொள்ளச்
சென்றது மிடற்றி லன்ன திறத்தினை யாரு நோக்கி
யின்றெம துயிர்நீ காத்தற் கிங்கிது சான்றா யங்க
ணின்றிட வருடி யென்றே நிமலனைப் போற்ற லுற்றார். (௫௫௮)

போற்றலு மிடற்றி லெங்கோன் பொலன்மணி யணிய தென்ன
மாற்றருந் தகைமைத் தான வல்விட நிறுவி யன்னார்க்
கேற்றநல் லருளைச் செய்ய யாவரு மிறந்தே யின்று
தோற்றின ராகு மென்னச் சொலலரு மகிழ்ச்சி கொண்டார். (௫௫௯)

மாமகிழ் சிறந்து நிற்கு மாலயன் முதலோர் தம்மைத்
தூமதி மிலைச்சுஞ் சென்னித் தொல்லையோ னருளா னோக்கிக்
காமரு கடலை யின்னுங் கடைதிரா லமுதுண் டாகும்
போமினீ ரின்னே யென்னப் போற்றினர் வணங்கிப் போனார். (௫௬0)

போனவர் தொன்மை போலப் புணரியைக் கடைந்த காலை
மேனிக ழமிர்த மேனை வியன்பொருள் பலவும் வந்த
வானவர் தாமே பெற்றார் மற்றவை தம்மை யால
மானதை யமல னுண்ட தவருயி ரளித்த தன்றே. (௫௬௧)

கடல்விட நுகர்ந்த தொல்லைக் கடவுள்பின் னழிக்குங் காலை
யுடலுயி ரகிலம் யாவு மொடுங்கிய விடம தன்றோ
சுடலைய தாகு பந்தச் சுடலைகா ணனைய சோதி
நடநவில் கின்ற வெல்லை நாடருந் தகைமைத் தஃதே. (௫௬௨)

அங்கது மன்றி யெந்தை யகிலமு முடித்த ஞான்றி
னெங்கும்வெள் ளிடைய தாகி யீமமா மவ்வீ மத்து
மங்கையுந் தானு மேவு மற்றிது தவறோ வன்னான்
கங்கையை முடிமேற் கொண்ட காதைமே லுரைத்து மன்றே. (௫௬௩)

ஈசனை யொருஞான் றம்மை யெழில்பெறு கயிலைக் காவிற்
பேசல ளாட லுன்னிப் பின்வரா விழியி ரண்டுந்
தேசுறு கரத்தாற் பொத்தச் செறிதரு புவனம் யாவு
மாசிருள் பரந்த தெல்லா வுயிர்களும் வருத்தங் கொள்ள. (௫௬௪)

திங்களின் கதிரு மேனைத் தினகரன் வெயிலுந் தீயின்
பொங்குசெஞ் சுடரு மேனைப் புலவர்தங் கதிரு மற்று
மெங்குள வொளியு மாய்வுற் றிருணிறம் படைத்த மாதோ
சங்கரன் விழியா லெல்லாச் சோதியுந் தழைத்த நீரால். (௫௬௫)

தன்னிகர் பிறரி லாத தற்பரன் விழியி ரண்டுங்
கன்னிகை கமலக் கையாற் புதைபபவக் கணமு தொன்றின்
மன்னுயிர்த் தொகைகட் கெல்லாம் வரம்பிலா வூழி யாக
வன்னதோர் பான்மை நோக்கி யருளுவா னினைந்தா னன்றே. (௧௬௬)

ஓங்குதன் னுதலி னுப்ப ணொருதனி நாட்ட நல்கி
யாங்கது கொண்டு நாத னருள்கொடு நோக்கி யாண்டு
நீங்கரு நிலைமைத் தாகி நின்றபே ரிருளை மாற்றித
தீங்கதிர் முதலா னோர்க்குச் சிறந்தபே ரொளியை யீந்தான். (௧௬௭)

மண்ணுறு புவனத் துள்ள மாயிருண் முழுது நீங்க
வுண்ணிக ழுவகை மேல்கொண் டுயிர்த்தொகை சிறத்த லோடுங்
கண்ணுத லிறைவன் செய்கை கவுரிகண் டச்ச மெய்தித
துண்ணென விழிகண் மூடுந் துணைக்கரம் வாங்கி னாளால். (௧௬௮)

சங்கரன் விழிகண் மூடுந் தனதுகை திறக்கு மெல்லை
யங்குலி யவையி னைந்து மச்சத்தால் வியர்ப்புத தோன்ற
மங்கையத் தகைமை காணூஉ மற்றவை விதிரபபப் போந்து
கங்கையோர் பத்தா யாண்டுங் கடல்களிற் செறிந்த வன்றே. (௧௬௯)

ஆயிர நூறு கோடி யணிமுகம் படைத்தி யாண்டும்
பாயிரு நீத்தமாகிப் பரவலு மதுகண் டஞ்சி
மாயனு மயனும வானோர் மன்னனும் பிறரும் போற்றி
மீயுயர் கயிலை நண்ணி விமலனை யடைந்து தாழ்ந்தார். (௧௭௦)

அடிமலர் தொழுதே யெந்தா யறிகிலே மிதுவோர் நீத்தங்
கடல்களு மன்றுல யாண்டுங் கலலென விரைதத யாரு
முடிவுறு திறததா லண்ட முழுவதுங் கவர்ந்த முன்னுள்
விடமெனப் பரித்தே யீது விமலநீ காததி யென்றார். (௧௭௧)

என்றலு நதிக டோற்ற மியம்பியெவ் வுலகுஞ் சூழ்போய்
நின்றவந் நீததந் தன்னை நினைததவ ணழைதது நாத
னென்றுதன் வேணி மேலோ ருரோமததி னுமப ருய்பப
மன்றலங் கமலத தோனு மாலுமிந் திரனுஞ் சொல்வார். (௧௭௨)

மேதினி யண்ட முற்றும் விழுங்கிய கங்கை யுன்றன்
பாதியாள் கரத்திற் றோன்றும பான்மையா லுனது சென்னி
மீதினிற செறிக்கும் பண்பால் விமலமா மதனி லெங்கண்
மூதெயி னகரம் வைகச் சிறிதருண் முதலவ வென்றார். (௧௭௩)

இறையவன் வேணி யுள்புக் கிருந்ததோர் கங்கை தன்னிற்
சிறுவதை வாங்கி மூவர் செங்கையுஞ் செறிய நல்க
நிறைதரு மன்பாற் றாழ்ந்து நிகழ்விடை பெற்றுத் தததம்
முறைநக ரெய்தி யங்க ணுய்த்தன ரனைய நீத்தம். (௧௭௪)

அந்நதி மூன்று தன்னி லயனகர் புகுந்த கங்கை
பன்னருந் திறலின் மிக்க பகீரதன் றவத்தான் மீளப்
பின்னரு மிமையா முக்கட் பெருந்தகை முடிமேற் றாங்கி
யிந்நில வரைபபிற செலல விறையதில விடுததல செய்தான். (௧௭௫)

நானில மிசையே யுய்த்த நன்னதி சகர ரெல்லாம்
வானுயர் கதிபெற் றுய்ய மற்றவ ரென்பிற பாய்ந்து
மீனெறி தரங்க வேலை மேவிய திஃதொன் றல்லா
லேனைய நதிக டொல்லை யிடந்தனி லிருந்த வன்றே. (௩எகூ)

தொல்லையி னிறைவி யங்கைத் தோன்றிய கங்கை நீத்த
மொல்லையி னுலகங் கொள்ளா தடக்கிய வுண்மை யன்றோ
வல்லிரு ளனைய கண்டத் தாதியங் கடவுண் முன்னோர்
மெல்லிய றன்னை வேணி மிசைக்கொண்டா னென்னு மாறே. (௩எஎ)

மாதுமை வசத்த னாகி மருவுவா னென்றி யன்னா
னாதன தருளே யெல்லா நண்ணுவித் தருளும் வண்ணம்
பேதக மாகித் தானோர் பெண்ணுருக் கொண்டு மேவு
மாதலி னவள்வந் துற்ற தன்மையை யறைவன் கேட்டி. (௩எஅ)

தொல்லையோர் கமலத் தண்ண றோன்றியே யிருந்த காலைப்
பல்லுயிர்த் தொகுதி தன்னைப் படைப்பது கருதி முன்னர்
வல்லையிற் சனக னாதி மைந்தர்நால வரையு நல்க
நல்லுணர் வெய்தி யன்னோர் நற்றவ ராகி யுற்றார். (௩எகூ)

அன்னதற் பின்னர் வேத னளிப்பது மல்கா தாக
வின்னலுற் றிரக்க மெய்தி யாதினிச் செய்வ தென்னா
முன்னுறு குமர ரோடு முகுந்தன திடத்தி லெய்திப
பொன்னடி வணக்கஞ் செய்து தன்குறை புகன்று நின்றான். (௩அ0)

நின்றிடு கின்ற காலை நேமியங் கரத்து வள்ள
லின்றிது நம்மான் முற்றா தீசனா லன்றி யென்னா
நன்றுணர் முனிவ ரோடு நான்முக னோடும் வெள்ளிக்
குன்றினி லேகி நாதன் குரைகழல் பணிந்து சொல்வான். (௩அக)

அண்டர்கண் முதல்வ கேண்மோ வம்புயன் படைப்பி னுள்ளங்
கொண்டன னதுமல் காதாற் குறையிது நீக்கு கென்ன
வண்டுளவ த்தி னானை மைந்தரை யயனை நோக்கி
தண்டுகள் படவே யீச னெய்தென வீறு செய்தான். (௩அஉ)

ஏகனே யாகி வைகு மெந்தைதன் னிடப்பா லான
வாகுவை நோக்கு மெல்லை மற்றவ ளுமையா டோன்றப
பாகம திருத்தி யன்னாட் பரிவொடு கலந்து மேவிக்
கோகன தக்கண் ணானைக் குமரரை யயனைத் தந்தான் (௩அ௩)

தந்துழி யீசன் றன்னைத் தனயரு மயனு மாலும்
வந்தனை செய்து போற்ற மாயவன் வதன நோக்கி
நந்தம தருள தாகு நங்கையோ டினிது சேர்ந்தா
முந்தையின் வேதாச் செய்கை முற்றிடும் போதி யென்றான். (௩அச)

என்னலு முவகை யெய்தி யாமினி யுய்ந்தோ மென்னா
வன்னையொ டத்தன் றன்னை யளியொடு வலஞ்செய் தேத்திப்
பின்னரும் வணக்கஞ் செய்து பெயர்ந்தனர் பின்பு வேதா
மன்னுயிர்த் தொகுதி யெல்லாம் வான்முறை படைக்க லுற்றான். (௩அரு)

மாற்றலர் புரமூன் றட்ட வானவ னுமையா ளோடும்
வீற்றிருந் தருளா லாலே விழைவுட னொண்பெண் மேவி
யாற்றவு மின்ப மெய்தி யாவிகள பெரிது மல்க
நாற்றிசை முகத்தன் செய்கை நன்றுற நடந்த தன்றே. (௬௭௬)

தேனமர் கமலத் தண்ணல் செய்தொழின் முற்று மாற்று
லானதன் னருளை யாங்கோ ராயிழை யாக நல்கி
மேனிகழ் கருணை தன்னான் மேவுவ துணரா யேனோ
வானவா போலெங் கோனை மதித்தலை மதியி லாதாய் (௬௭௭)

காமரு வடிவா யெங்குங் காண்பது சத்தி யங்கண்
மாமய மாகி நின்றான் மன்னிய சிவனு மீது
தூமறை முதலா வுள்ள தொல்லைநூல் புகலு மன்றோ
தாமொரு புதல்வன் றன்னைத் தந்தவா சாற்று கின்றாம். (௬௭௮)

ஆக திருவிருத்தம் கூ௦எ.

---

வசனம்.

இவ்வாறாகத் ததீசிமுனிவர், பரமசிவத்தினது ஒப்பற்ற குணாதிசயங்களை யும், பரத்துவ நிர்ணயங்களில் சிலவற்றையும் விவரித்து உரைக்க வதனைக்கேட்ட தக்கன் நகைத்து நீ சொல்லிய மேலான பரம் ஊர்ப்புறமபுகளிலிருக்கும சுடுகாட்டிற் கிடக்கின்ற எலும்பையும, தலைகளையும், சாம்பலையும அணியுமோ! புலால் நாறும் பிரேதத்தை வந்தித்திரியுமோ! கழிந்த கேசத்தை முப்புரிநூலாக அணியுமோ! வராகத்தின் கோடும் ஆமையோடும் தரிக்குமோ! உலகமழிய உயிர்களைச் சங்கரிக்குமோ! புலியதளுடுக்குமோ! யானைத்தோலைப் போர்க்குமோ! கொடிய அனல் மான் சூலமுமேந்தி பிச்சைக் கெங்கும உழலுமோ! பேயனைப்போல் நடனமும் செய்யுமோ! பூதங்களைப் படையாகக்கொண்டு உலாவுமோ! காளமாநாகங்களை யாபரணமாகச் சூடுமோ! நகுவெண்டலையைச் சிரத்திலே தாங்குமோ! வேறறுக்கொள்ளுமோ! மாட்டின்மீதேறுமோ! ஆலத்தை யுண்ணுமோ! பேய்கள் சூழச் சுடலையி லாடுமோ! ஒருத்தியைச் சடையிலும மற்றொருத்தியை இடையிலுமிருத்துமோ! பிள்ளைகளையும பெறுமோ! தாமதகுணத்தைப் படைக்குமோ! இன்னம் அளவற்ற துர்க்குணங்களைப் பெறுமோ! இவ்வாறான செய்கைகளினால் உங்கள் ஈசன் ஒருவகைப்பட்ட குணமுள்ளவன் அலலன், பரமாயிருப்பவன் பரிசுத்தனாய்த் தயாநிதியாய்ச் சகல மங்கலகுணங்களையும பெற்றிருக்கவேண்டும்; இதனால் மூலமென்னும் பெயர்பெறலாம். இதற்குப் புறமபானவனாதலால் அவனுக்குச் சிறந்த யாகத்தில் அவிப்பாகம் தரவேமாட்டேன். இதனை உறுதியாகக் கொள்ளக்கடவாயென்று அஞ்சாது சொல்லிய தக்கன் மனததுணிவை அறிந்து தபோநிதியாகிய ததீசிமுனிவன் எமதிறைவனை இவன் பழிகூறலாமோவென்று சீற்றங்கொண்டு ஆலகாலத்தைப்போலச் சீறி இறைவன் உண்மைகளிற் சிறிதும் இவன் உணர்ந்தவன் அல்லன். இப்பாதகனுடன் வார்த்தையாடல் யோக்கியமன்று. ஆயினும் பிரமன் விண்டுமுதலானதேவர் முனிவர் முதலானவர்கள் நெருங்கியிருக்கும் இச்சபையில் விச்சுவநாயகனாகிய சிவபிரானைப் பழித்திகழ்ந்தபடியால் அவற்றின் காரணங்களை யாவரும் அறியத் தெருட்டுவது எமது கட

னென்றெண்ணி அடா தக்கா? இம்மகாசபையில் ஏமதிறைவனுய்த் தேவாதிதேவனுய் விச்சுவநாயகனுய் விளங்கும் பரமசிவனிடத்திற் சில குற்றங்களைக்காட்டிப் பேசினுயே, அவைவந்த விவரம் யாதுமறியாதவனைப்போற் பெருஞ்செல்வச்செருக்கினுல் மயங்கிய மூடனே கேளென்று சொல்லுவார்:—

சர்வாந்தரியாமியாய் அருளுருக்கொண்ட நிருமலன் பஞ்சகிருத்தியங்களில் ஒன்ருகிய அனுக்கிரகத்தினுல் தேவர்களில் முதன்மையாகிய பிரம விஷ்ணுக்களைப்படைத்துப் பிரமனிடத்திருந்து சராசரப்பிரபஞ்சத்தைப்படைப்பித்து விண்டுவினிடத்திற்பொருந்தி அவைகளைக்காத்து அவைகளுக்குரிய வினைப்போகங்களையூட்டி நடிப்பித்து அவைகள் பெறும்பதங்களிற்சேர்த்து இவ்வாருகச் சனனமரணதுக்கத்திற்பட்டு அலையுஞ் சீவகோடிகள் சிலகாலம் அல்லலற்றுச் சுகாதீத எல்லையைச் சேர்ந்து களித்திருக்கத் திருவுளங்கொண்டு உருத்திரனுக அண்டாண்டபுவனசராசரங்களையும் அழித்தொடுக்கிப் பின்பு சிருட்டி திதி கருத்தாக்களையொடுக்கி ஏகனுய் நின்று மீளவும இப்படியே உலகங்களை யுண்டாக்கி, தன் னுெப்பற்ற திருவிளையாடல்களை நடததிவருவான். இச்சர்வசஙகாரங்கடோறும் மரித்துப் பிறக்கும சிருட்டி திதி தலைவரைப் பரமென்றெணணித் திரோபவத்தினுழ்ந்து பவத்திற்பட்டு உழலு மூடாகள் சுருதி குரு சுவாநுபவங்களினுலே தெளிதற்குக் காரணமாக மாய னென்புகளையும் பிரமன் சிரஙகளையும மாலையாகவும கேசங்களை உபவீதமாகவும் அணிவான். இவ்விருவா செய்த தவமுயற்சியினுல் சர்வசங்காரகாலத்தில் அவர்கள் களேபரங்களைச் சூலத்திலேந்தி நெற்றிவிழியினுலே நீருககி அந்நீற்றைப் பூதியாகவணிவான். கிருபாநிதியாதலால் தமமையடுத்த உயிர்கள் பாபரகிதமாய் முத்திபெற்று உய்யுமபொருட்டு இவையனைத்தையும் அணிந்ததேயல்லது இவைகளாலே தம்மைப் புகழும்படியன்று; அகந்தையிற் சிறந்தவனே! மற்றவைகளையும விவரமாக அறிவிப்போம் கேள். முன்னுளில் இரணியாக்கனென்னும் அசுரன் பூமியைப் பாயாகச்சுருட்டிச் சீவராசிகள் வருந்தப் பாதாளத்தில் மறைந்திருந்தான். அதைக்கண்ட தேவர்கள் நடுநடுங்கி விஷ்ணுவைத் துதித்தார்கள். அவர்கள் வேணடுகோளின்படி மாதவன் வராகவுருவஙகொண்டு பாதலத்திற்சென்று தன் கூரிய தந்தங்களினுற் பாய்ந்து அவ்வசுரனைக் கொன்று பூமியைய முன்போல் தாபித்து அசசெய்கையைப் பெரிதாக நினைந்தவனுய்த் தானே பரமென மதித்துச் செருக்கிப் பூமியைத் தன் கூரிய கோட்டினுற் கல்லி உபத்திரவப் படுத்துகையினுலே பிராணிகளவாடிப் பரமசிவத்தைக்குறித்து முறையிட்டார்கள். அத்தருணத்திற்சிவபிரான் எழுந்தருளி வராகததின் கோடுகளைப் பறித்தான். அதனுல் விஷ்ணு தன் செருக்கடங்கி இறைவனைச் சரணடைந்து போற்றிசெய்யப் பொறுத்துத் திருக்கைலைக் கெழுந்தருளி அககோடுகளைச் சினனமாக வணிந்தான். அவை பிறையைப்போல இப்போதுந் திருமாபிற பிரகாசித்திருக்கின்றன. இது நிற்க, மற்றச்செய்கைகளையும வேதபூர்வமாகச் சொல்லுவோம், கவனமாய்க்கேள்! முன்னெருகாலத்திலே தேவர் அசுரர் இரணடு திருப்பாற்கடலைக் கடையும்போது மத்தாக நாட்டிய மந்தரகிரி தாழவதைககண்டு விஷ்ணு கூர்மமாய்த் தாங்கிநிற்க மீளவும் கடைகையில் அமுதம் தோன்றிற்று, அதனைத் தேவர்களும் அரக்கரும் கண்டு எமதெமதெனப் பொருவதையும பாராமல் தான் மந்தரந் தாங்கிய வலியைப் பெரிதாகஎண்ணி அகந்தைகொண்டு சிரம் வானத்தைமுட்ட ஓங்கிப்பாய்ந்து பூமி தத்தளிக்க கடலைக் கலக்குகையில் யாவரும இவ்வுபாதிக் கஞ்சி எமதிறைவனைத் துதித்தாகள். அத்தருணத்திற் பரமசிவன் அவ்விடத்துக கெழுந்தருளி

ஆமையினேட்டையும் பெருமிதத்தையும் ஏககாலத்திற் பறித்தபோது விஷ்ணு சோர்ந்து நடுங்குற்றுத் துதிக்க இரங்கிக் கிருபாநோக்கமளித்து அமுதத்தினைத் தேவருக்கு பகிரக் கட்டளையிட்டு வெள்ளியங்கிரியைச் சேர்ந்தனன். இறைவன் அநுக்கிரகப்படி மாயன் மோகினிவடிவெடுத்து அரக்கரை வஞ்சித்து அடக்கி விண்ணவர்க்கு அமுதமீந்தான். அக்கமடத்தினேட்டையும் எமமிறைவன் பன்றிக்கோடுகளுடன் தரித்தான்; ஆமையோடு அணிந்த திருவிளையாடல் இதுவாகும்.

இனிச் சிவபிரான் ஐயமேற்ற சரித்திரத்தைச் சொல்லுவோம். ஆதியிலே தாருகவனத்து இருடிகள் இறைவன் மாயையிற்பட்டு மயங்கிப் பரமசிவனிடத்து அன்பு செலுத்துவதிற் பிரயோசனமில்லையென்றும், யாகங்கள் செய்தலே மோட்சம் அடைதற்குக் காரணமென்றும் நினைந்து அவ்வாறே நடத்திவருகையில் இவர்கள் செய்கையைச் சிவபிரானறிந்து விஷ்ணுவைத் திருவுளத்திற் கருதினர். விஷ்ணு அக்கணத்தி லனந்தசயனத்தை நீங்கி வெள்ளியங்கிரியையடைந்து நந்திதேவர் அனுமதிபெற்று இறைவன் சன்னிதானத்தைச்சேர்ந்து மும்முறை வணங்கித் துதித்துநிற்க, சிவபிரான் தனது எண்ணத்தைக் குறித்துக்காட்டி சிங்காதனத்தை நீங்கினவராய் விஷ்ணு கரத்தைப் பற்றிக்கொண்டு வெள்ளிமலையைக் கடந்துபோய்க் கண்ணனைப்பார்த்து பஞ்சசத்திகளில ஒன்றாகிய உன்னுருவைக்கொள்ளென்று திருவாய்மலர்ந்தருளினன். அவ்வாறே மாயன் கோடிசூரியப்பிரகாசமாய் இலக்கணத்துக்குமேற்பட்ட வடிவுடன மோகினியுருவெடுத்து மாயைக்கரசியான பார்வதி கண்டாலும் மயஙகத்தக்க நடைநொடிப்பாவனையைப் பெற்றுநிற்க தாமுஞ் சிறந்த பிச்சாடனவேடங் கொண்டார். அவ்வடிவின் சீரை மோகினி கண்டு காமவிகாரத்தினற் சோர்ந்து காத்தன் அனுக்கிரகத்தினல் உணர்வுபெற்றதனல் அன்றுமுதல் வைகுந்தவாசிக்கு மாலென்னுந் திருநாம முண்டாயிற்று; ஆதலாற் பரமன் திருவடிவின் சுந்தரத்தை யாவராலும் ஒப்பிட்டுப் புகழப்படுமோ? பின்பு பரமன் திருமால் தம்முடன்வர முனிவர்களுக் கிருப்பிடமாய்த் தராதலம்புகழும் சிறப்பையுடைய தாருகாவனத்தருகிற் புகுந்து திருமாலைநோக்கி நம்மை மதியாமல் தவமே பெரிதென்றெண்ணி நோற்கின்ற முனிவர்கள் வாசஞ்செய்யும் சோலைகடோறும் சென்று மையலுண்டாக்கி, அவர்கள் கொண்ட விரதங்களை யழித்து நம்மிடத்துக்கு வருக என்றனுக்கிரகஞ்செய்ய, அவ்வாறே மாயன் விடைபெற்றுப் போய் வேள்வியுந் தவமுமே மோக்ஷத்தைத் தருமென்றெண்ணி நடாத்தும் இருடிகள் வாசமாகிய இடஙகளிற்சென்று அளவற்ற மன்மதர் ஏககாலத்திற் கரவேகமாய்ப் பிரயோகிக்கும் புட்பபாணஙகளைப்போல விழிமலர்களைச் சுழற்றிப்பார்த்துப் புன்முறுவல் விளைத்துச் செம்பஞ்சூட்டிய பாதங்களி லணிந்த சிலம்புகளுங் கரங்களிலமைந்த வளையல்களும் கலிக்க அன்னத்தைப்போல மெல்லென நடந்து கிளியைநிகர்த்துக் கொஞ்சியாண்டும் திரிவதை இருடிகள் கண்டவுடன் காமவிகாரந் தலைமேற்கொண்டு •மதிமயஙகினவராய் விரதவுறுதிகளை மறந்து வேள்வியிலைகள்கலைந்து உடைசோர்ந்து காமவெள்ளம் பெருக வருந்தி யானையுண்ட விளங்கனியைப்போல உள்ளுடைந்து மோகினியின் இலக்கணவடிவைப் பாதாதிகேசபரியந்தமும் நோக்கி நோக்கித் தவவொழுக்கத்தைத் துறந்து சுடரைக் கண்ட விட்டிலைப்போலப் பலதிசையினின்றும் விரைந்தவந்து சூழ்ந்துகொண்டவராய்ப் பெண்கள்நாயகமே! உமது திருநாமம யாது! நீர் இருக்கும் தானமெது! திருவாய்மலர்ந்தருளும பெண்ணரசே! நீர் வசிப்பது பூவுலகமோ, பொன்னகரோ, பிரமனுலகோ, மன்மதன்பதியோ, வைகுந்தவளநாடோ, அல்லது அசுரரைவஞ்சித்தழித்துத் தேவர்களுக் கமுதம்பகிர்ந்த மோகினியோ, பெண்ணே கண்ணே உமது

பெருமைகள் யாவராற் புகழப்படும்? எங்கள் தவப்பேற்றினால் இவ்விடமெழுந்தருளினீர் அடியோங்களிடத்திற் கருணைசெய்து உமதிணக்கத்தை யளிக்கவேண்டும் நீரிட்ட பணிவிடைகளைச் செய்யக் காத்திருக்கின்றோம். நீர் விரும்பிய அனைத்தையும் இந்நிமிஷத்திலே தரவல்லோம். யாங்கள் காமநோயினாற் பிராணனை யிழப்பதற்குமுன்னே நீர் தயைசெய்து அதற்குரிய இன்பரசத்தைக் கடாட்சித்துப் பாதுகாப்பதன்றியும் மன்மதபாணத்துக் கிரையாகாமலும் உமது கடககங்கணங்களணிந்த திருக்கரத்தினாலே சற்றணைத்து ஆதரிக்கத் தயையில்லையோ என்று வெளுத்த முறுவலைத்திறந்து, கரங்களைநீட்டிப் பலபலவிதங்களாகக் கெஞ்சிக்கெஞ்சி இரந்து தொடர்ந்து, அக்கினியிற்பட்ட காந்தண்மலரையொத்து மெய்கருகி விரகாக்கினியினால் இறந்தவர்களைப்போலவுஞ் சித்திரத்தையொத்தும் பொற்பாவையைநிகர்த்தும் அறிவழிந்து, பின்பற்றித் தொடர்ந்தும் நின்றும் விழுந்தும் இவ்வகைகயாக அலைந்து உழலுகின்றார்கள். இவ்விருடியர் இப்பாடுபட்டிருக்குந்தருணத்தில் இவர்கள் பத்தினிமார் வாசஞ்செய்யுமிடத்திற் பரமசிவன் செய்த திருவிளையாடல்களிற் சில சொல்லுவோம்:—மோகினிவடிவுகொண்ட விண்டுவைத் தவசிகள் பக்கலுக்கேவியபின்பு எமது இறைவன் சிவந்த சடைகள் அசைய சர்வாங்கதூளிதராய்த் திருக்கரங்களிற் சூலமும்.பாத்திரமுமேந்தி வேதப்பாதுகைகளைக் கால்களிற்றொடுத்து, ரிஷிபத்தினிகள் வாசஞ்செய்யும் பர்ணசாலைகளில் அவர் மனதுக்கினிய சுந்தரமிகுந்த புருடனாகிப்போய்ப்பண்களுடன் சுருதிகளைப்பாடிக்கொண்டு ஐயமேற்பாரைப்போலத் திரிகின்றபோதில் உயிருக்குயிராய் எங்கும் பரிபூரணமாய் நிறைந்தாட்டும பரமசிவத்தின் கீதங்களினோசையை, தவத்தர் தேவிமார் கேட்டவுடன் மனமுருகி யாரம்மா நம்முடைய வீதிகளில் இப்படி அற்புதமாகப் பாடிவருகின்றவர்; அந்தப் புண்ணியனைக் காண மனம் விருமபுகினறது; வாரும் வாருமென்று ஒருவரையொருவர் கூவிக் கூட்டங்கூட்டமாய் வீதிகளில்நெருங்கி, எமதிறைவனைத் தரிசித்தவுடன் காமமுற்று மன்மதபாணங்கள் சாடப் பொறிகலங்கி நாண மட மச்சவரம்புகளைக்கடந்து மனமருண்டு, காமலாகிரிகொண்டு சோர்ந்து, இறைவனிடத்து ஆசையென்னும வலையிற்சிக்கினார்கள். அவர் செய்கைகளிற் சிலபேசுவோம். இந்தத் தவசியினது கீதங்கள் செவிகளுக்கு அமுதமாகப் புகுந்தவுடன் தேகம் பரவசமாய்க் கொங்கைகள்விம்மிச் சரீரம்பூரித்து அவயவங்களில் அணிந்திருக்கும் ஆபரணமுதலியவைகள் சிதறிப்போன இடம் தெரியவில்லை. காமக்கவலையிற்பட்டு உழல்கின்றோம். இதனால் இக்கோலம் அற்புதவடிவாய்க் காணுகின்றதென்று சிலர் சொல்லித் தொடரவும், இவ்வையருடைய செய்கைகளை யோசிக்குமிடத்துப் பிச்சைவேண்டி இவ்விடம் வந்தாரெனக் காணவில்லை; என்றிப்படி பலவகையாய் வருந்தும்போது, இறைவன், அழகிய திருவடிகள் சிவக்க நடக்குங்காலையில், இருடியர் மனைவியர் பரமசிவன் பாதங்களிற்சொரிந்த மலர்களும் கழன்ற வளைகளும் பல ஆபரணங்களும் மன்மதபாணங்களும அந்த வீதிகளிலெல்லாம நிறைந்து விளங்கின.

பரமசிவன் கொண்ட கோலத்தைத திருமாலாகிய மோகினி கண்டு மையல் கொண்டு சோர்வாளாயின், தவத்தியர்செய்கைகளைச் சொல்லவுமவேண்டுமோ? அப்பெண்களுடைய எண்ணமபோலவேஇறைவன் அவர்களுக்கு மாநதப்புணர்ச்சியைக் கொடுக்க, அதனால் அவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் இருடியரைப் பெற்றார்கள். அவாகள் சிவபெருமான் கட்டளைப்படியே தவஞ்செய்திருந்தார்கள். பிறகு இறைவன் இருடியர் வாசம்பண்ணுகிற சாலையில் வருமபோது மோகினி

யானவன் எதிர்ப்பட்டான். அப்பொழுது இறைவன் தனதுருவம் முனிவருக்குத் தோன்றாது வேறுருவங்கொண்டிருக்க, இருடியர் சிவானுக்கிரகத்தினால் மயக்க மொழிந்து, தங்கள் தேவிமாரும் கற்பிழந்தமைகண்டு, மோகினியாய்வந்த அந்தத் திருமால் நமது தவத்தைக் கெடுத்தான், இந்தப் பிச்சாண்டி நமது தேவிமாருடைய கற்பையழித்தான், இதற்கென்னசெய்யலாம என்று தமது தேவியரை அதட்ட, அவர்கள் பயந்து தமதிடங்களைச் சேர்ந்தார்கள். பிறகு அந்த இருடியர், இறைவனைக் கொல்லும்பொருட்டு ஒரு அபிசாரஹோமஞ்செய்தார்கள். அந்த ஹோமாக்கினியில் பயங்கரரூபமான ஒரு புலியானது தோன்றிற்று. அதனை யுபசரித்து, சிவனைக்கொன்றுவாவென்றேவினார்கள். அது இறைவன்மீது பாய வருவதுகண்டு அதனைக் கொன்றுரித்து அந்தத்தோலை அரையிலுடுத்திக்கொண்டார். அதன்பிறகு ஒரு சூலத்தையுண்டாக்கியேவினார்கள். அதைத் தமகரத்தில் ஆயுதமாகத் தாங்கினார். பிறகு ஒரு மானைப் படைத்தனுப்ப அதைத் தமது இடக்கரத்தில் தாங்கினார். பிறகு அநேகமான பாம்புகளையுண்டாக்கி யனுப்ப, அவற்றையெல்லாம் ஆபரணமாகத்தரித்துக்கொண்டார். பிறகு பூதவெள்ளங்களைச் சிருட்டித்து அனுப்பினார்கள். அவைகளை வசப்படுத்தித் தமக்குச் சேனைகளா யமைத்துக்கொண்டார். அதற்குமேல் கருவெண்டலை துடி, முயலகன் முதலியவற்றை யுண்டாக்கியனுப்ப, அவற்றை முறையே எத்தியும் அணிந்தும பாதத்தில் மிதித்தும அவற்றின் வேகத்தைத் தடுத்தார். இன்னும் அளவற்ற தீமைகள் செய்தும இறைவனிடத்துச் செல்லாமற்போயினமையால் மனங்கலங்கி இனியென்செய்வோமென்றேங்கி, இறைவனை வணங்கி, யாம்செய்தகுற்றத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று வேண்டுதலும், இறைவர் மனமிரங்கி, இன்றுமுதல் எமது திருவைந்தெழுத்தை யுச்சரித்துத் தவஞ்செய்யக்கடவீரென்று கட்டளையிட்டுத் திருக்கயிலைக் கெழுந்தருளினார். பூர்வகாலத்தில் கயாசுரன் என்னும ஓரவுணன் பிரமனைநோக்கித் தவஞ்செய்து அளவற்ற செல்வத்தையும சிவபெருமானொழிய மற்றவரையெல்லாம் வெல்லத்தகுந்த வலியையும்பெற்று, உலகத்திலுள்ள சகலபிராணிகளையும் வருத்திக்கொண்டே வந்து காசியையடைந்தான். இவனைக்கண்ட அந்த நகரஜனங்களும் மற்றோரும் அஞ்சியோடி விசுவநாதர் ஆலயத்தையடைந்து முறையிட, அவர் அந்தயானையுருவையுடைய அவுணனைக் கொன்று உரித்துத் தோலைப்போர்த்துக்கொண்டு முன்போலவே ஆலயத்திலெழுந்தருளி, அவர்களுடைய அச்சத்தையொழித்தருளினர்.

முன்னொருகாலத்தில், இந்திரன் முதலியதேவர்கள் பிரமவிஷ்ணுக்களை யடைந்து, உங்களில் பிரமமாவார் யாரென்று வினவ, அவ்விருவரும் நானே பிரமம் நானே பிரமம் எனறு வாதிட்டு, முடிவில் சண்டைசெய்யத்தொடங்க, இவ்விருவருடைய அகம்பாவத்தை யடக்கும்பொருட்டு, சிவபெருமான் இருவருக்கிடையே ஒரு பெருஞ்சோதியுருவாய்த் தோன்றிநின்றார். பிறகு அந்தச் சோதியினிடையில் உமாமஹேசுவரமூர்த்தம் தோன்றக்கண்ட விஷ்ணுவானவர் அவரைப் போற்றிநின்றார். பிரமன் திரோபவத்தில் முழுகியுணர்ந்திலனாதலால் அவனகந்தையையும் தேவர்செருக்கையும் அடக்கத்திருவுளங்கொண்டு, வயிரவரையுண்டாக்கி, அவரைநோக்கி, இந்தப் பிரமனது நடுத்தலையைக்கிள்ளிக்கரத்திலேந்தி, அவனுயிரைக் காத்துத் தேவர்முதலியோரிடத்திற்போய் அவர்களுதிரத்தையும் பலியேந்தி உயிரைக்காத்து, அவர்கள் அகந்தையையொழித்தபிறகு, அண்டமுகட்டிலமர்ந்து பிராணிகளைக் காத்துவரக்கடவையென்று கட்டளையிட்டருளி, அந்தச்சோதியில் மறைந்தார். விஷ்ணு தமதுலகத்தை யடைந்தார். வயிரவரும் இறைவனது கட்டளையின்படியே பிரமன்தலையைக் கிள்ளுதல்முதலிய காரியங்களைச்செய்து அண்ட

முகட்டிற்சென்றமைந்திருந்தார். இதுநிற்க, முன்னொருகாலத்தில் இந்திரன் தனக்கு மேற்பட்டவரொருவருமில்லையென்று செருக்கி அரசுபுரிந்துவருங்காலத்தில், ஒருநாள் பரமசிவனைக் கண்டுவரவேண்டுமென்ற எண்ணத்தோடு அயிராவதத்தின்மேலேறிக் கயிலையைக் கிட்டினான். இறைவன் அதையறிந்து, அவன் செருக்கையடக்கத் திருவுளங்கொண்டு, பாரிடவேடந்தாங்கி ஆலயமுகவாயிலில்வந்து நின்றார். அவரை இந்திரன்பார்த்து, நீர் யார் பரமசிவனைச் சேவிப்பதற்கு இது சமயந்தானோ சொல்லுமென்றான். அதற்கு இறைவர் மறுமொழிகொடாமலிருக்க, இந்திரன் மிகுகோபங்கொண்டு தன்கையிலிருந்த வச்சிராயுதத்தை வீசினான். அது இறைவர் திருமேனியிற்பட்டுச்சாம்பலாய்விட்டது. பிறகு இறைவர் கணத்தராகி, திரிபுராதிகளை யெரித்தவகை விளங்கத் தோன்றினார். அதைக்கண்ட இந்திரன் அஞ்சிப் பலவிதமாகத் தோத்திரம்பண்ண, இறைவர் தமது கோபத்தைக் கடலிலெறிந்து அவன் பயந்தவிர்த்து அவனுக்குப் படையும் விடையுந்தந்தருளித் தமதாலயத்தில் பார்வதி மகிழவீற்றிருந்தார்.

அதன்பிறகு, கடலிலெறியப்பட்ட இறைவரது கோபத்தீயானது ஒரு குழந்தை யுருவாய் விளையாடுவதை வருணன் கண்டு மகிழ்ந்து பரிவோடெடுத்து வளர்த்துவருங்காலத்தில், ஒருநாள் அக்குழந்தை பசியால் வீறிட்டழ, அவ்வழுகையோசை அண்டங்களெல்லாங்நடுங்கச்செய்தது. அதைக்கேட்ட பிரமன் அதிசயித்து வருணனிடத்திற்குவந்து, அவனுக்குச் சிவபெருமையெல்லாஞ்சொல்லி, இதற்குச் சலந்தரனென்று பெயரிடக்கடவையென்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். பிறகு சலந்தரன் காளைப்பருவம் வாய்க்கப்பெற்று, வில்வித்தை முதலியவைகளில் மிகுசமர்த்தனாகி, சகலலோகங்களையுமடக்கி, அசுரராஜனாய்க் கொடுங்கொல் செலுத்தி வருங்காலத்தில், தன் குலக்கம்மியனைவருவித்து, அவனைக்கொண்டு சலந்தரபுரம் என்றொரு நகரத்தை யுண்டாக்கி, அதிலிருந்து அரசுசெய்கையில், காலநேமியென்னும் அவுணன்மகளாகிய பிருந்தையையமணஞ்செய்துகொண்டு அவளோடு கூடி யின்பநுகர்ந்து வந்தான். அக்காலத்தில் இந்திரன் முதலிய தேவர்கள் மேருமலைச் சாரலில கூடியிருப்பதாகச் சிலதூதர்கள் வந்து சொல்லக்கேட்டு, அவ்விடத்திற்குப் போதலும் அவர்கள் பயந்து விஷ்ணுவைத் தியானித்தவுடனே அவர் கருடவாகனத்தின் மேலேறிவந்து இவனோடு நெடுங்காலம் யுத்தம்பண்ணியும் வெல்லமாட்டாமையால், இவனைச் சிநேகம் பண்ணிக்கொண்டு தமது லோகத்தை யடைந்தார். பிறகு இந்திரன் முதலான தேவர்கள் கயிலாயத்தையடைந்து அவ்விடத்திலொளித்துக்கொண்டிருந்தார்கள். *அதையறிந்து அவ்விடத்துச் சென்றான். இந்தச்செய்தியை* இறைவனிடத்தில் விண்ணப்பஞ்செய்து முறையிட்டார்கள். இறைவரும் அவர்களுக்கிரங்கி, ஒரு விருத்த சந்நியாசியாகி, சலந்தரனெதிரில் வந்து நீயார், எங்கிருந்துவந்தாய், யாரைத் தேடி வந்தாய், சொல்லென்று கேட்க, அதற்கவன் சந்நியாசியே, நான் சமுத்ர ராஜகுமாரனாகிய சலந்தரன், தேவர்களையும் அவர்களுக்கிடந்தந்த சிவனையும் கொல்லவந்தேனென்று சொல்ல, அவர் நகைத்து, அய்யா, நாம் இறைவர் சந்நிதியிலிருந்து அவர் பெருமைகளெல்லாம் அறிந்திருக்கிறோம். அவரோடு போர்செய்வையாயின் நீ யிறந்துபோவாய். இன்னுஞ் சிலகாலம் உயிரோடிருக்க விரும்பினையானால் திரும்பிப்போய்விடுவதேநலமென்றார். அதைக்கேட்ட சலந்தரன் பெருங்கோபங்கொண்டு பெரியவரே, நீர் என் வலியறியாமற்பேசுகின்றீர். சற்றுநேரம் இங்கிருந்து பாரும் என்று சொல்ல, இறைவரும், யாம் அதைப்பார்க்கத்தான்வந்தோமென்று

சொல்லி, தமது காற்பெருவிரலாலே பூமியில்வட்டமாகக் கீறி, இதையெடுத்து உன் சிரசினால் தாங்குவையாயின், நீ பராக்கிரமசாலியென்பது விளங்குமென்று சொல்ல, சலந்தரன் நகைத்து, விஷ்ணு முதலிய தேவர்களை யெல்லாம் எளிதில் வென்ற எனக்கு இது ஒரு பெரியகாரியமோவென்று கூறி அந்தச் சக்கரத்தை ஒரு கையால்ஏந்தி மற்றொருகையால் தூக்கப்படாமையால் மார்பிலணைத்தெடுத்துத் தலையில்வைத்தலும், அது அவனுடம்பை யிருகூறாகப் பிளந்து தள்ளி விட்டு இறைவர் திருக்கரத்தை யடைந்தது. இறைவருந் தமதாலயத்தையடைந்தார். பிறகு சலந்தரன் மனைவியாகிய பிருந்தையின் பேரழகைக்கண்டு ஆதியில் மையல்கொண்டிருந்த விஷ்ணுவானவர், இது நல்லசமயமெனறெண்ணி ஒருகபட சந்நியாசியாகி, சலந்தரன் அரண்மனையிலுள்ள நந்தவனத்தில் ஒரு குருக்கத்திநிழலில் தவஞ்செய்பவன்போலிருக்க, பிருந்தையானவள், நமது கணவன்போன செய்தியொன்றுந் தெரியவில்லையென்று மனம்வருந்திப் பூஞ்சோலைக்குவந்தாள், அப்பொழுது விஷ்ணுவின் கட்டளைப்படி, வைகுண்டத்துத் துவாபாலகா இருவா புலியுருக்கொண்டு அவளெதிரேபாய, அவள் பயந்தோடிக் கபடசந்நியாசியைச் சரணடைதலும் அவர் அந்தப்புலிகளையதட்டி யோட்டிவிட்டு அவளச்சத்தை யொழித்தார். அவள் அச்சமொழிந்துநின்று, சுவாமி, தேவரீர் முக்காலமுமறிந்தவராகக்காணப்படுகிறீர், என்கணவன் பரமசிவனோடு போர்செய்யச்சென்றநாள் முதலாகச் செய்தியொன்றுந் தெரியவில்லை. கிருபைசெய்யவேண்டுமென்றிரந்தாள். அக்கபடசந்நியாசியும், ஆகட்டுமென்று தமது துவாரபாலகரைக்கொண்டு சலந்தரனுடம்பை வரவழைத்துக்காட்ட, அவனுடம்பின் இருபிளவைக்கண்ட பிருந்தையானவள் மரணமூர்ச்சையடைந்தாள், அவளைச் சந்நியாசி வாரியெடுத்து மார்போடணைத்துத் தெளிவித்தலும, அவளெழுந்து, என்னுயிரைக்காத்ததுபோலவே என் கணவனுயிரையுந் தரவேண்டுமென்றுவேண்ட, அவர் அவ்விருபிளவையும் ஒன்றாகப்பொருத்தி அவ்வுடம்பில் தாம் பிரவேசித்து நிற்க, பிருந்தையானவள் தன் கணவனென்றுநம்பி அன்றுமுதல் அவரோடுகூடி நெடுங்காலம் இன்புற்றிருந்தாள். ஒருதினம் விஷ்ணுவானவா நித்திரைசெய்கையில விஷ்ணு கோலம் காணப்பட்டது, அதைக்கண்ட பிருந்தை இவன் மாயோனாகுமென்று நிதானித்து, அவரைநோக்கி, புலியாய்வந்த வுன்வாயில்காப்பாளர் உன் பகைவராய் அரக்கர் குலத்தில் உதிக்கக்கடவர். நீயும் பூமியில் அரசர் குலத்தில் அவதரித்து, என்னை வஞ்சித்தபடியே உன் பத்தினியை அசுரா மாயையால வஞ்சித்துக்கொண்டுபோக, நீயும் குரங்கினங்களைச் சேர்த்துக்கொண்டு, காடு மலை முதலியவிடங்களில் தேடியலைந்து பலரும பழிகூற வருந்தக்கடவையென்று வசைகூறித் தீப்பாய்ந்திறந்தாள். இவள்மீதுள்ள விருப்பமிகுதியால இவளெரிந்தபோன சாம்பலின்மீது விஷ்ணுவானவர் விழுந்து புரண்டழுதார். இச்செய்தியைப் பிரமன்முதலானோர்போய்ச் சிவபெருமானுக் கறிவித்தாாகள். அவர் நகைத்துப் பார்வதியைநோக்க, அவள் ஒரு விதையையுண்டாக்கி, பிரமனிடத்திற்கொடுத்து, இதைக்கொண்டுபோய் கண்ணனுக்குக் காட்டக்கடவீரென்று சொல்ல, அவ்வாறேபிரமன் வாங்கிப்போய்ப் பிருந்தையின் சாம்பலில் மயங்கிக்கிடக்கிற கேசவனுக்குக் காட்ட, அது துளசியாய் முளைத்து உடனே யொரு பெண்ணுருக்கொண்டுநிற்க, அதைக்கண்ட கண்ணன் பிருந்தையிடத்திற் கொண்டிருந்த மையலையொழித்து, இவள்மீது மையல்கொண்டார். இதைக்கண்ட தேவர்கள் இவளை விஷ்ணுவுக்கே மணஞ்செய்தார்கள். பிறகு அவளோடும் வைகுந்தஞ்சேர்ந்து இன்பநுகர்ந்திருந்ததன்றியும் சிரத்திலுமதரித்தாா. அதுமுதல் திருத்துளவம் விஷ்ணு

வுக் குவப்பாயிற்று. அப்பால் திருமால் சலந்தரனைப் பிளந்த சக்கரத்தைப் பெறக் கருதி, பரமசிவனைப் பூசித்துவருங்காலத்தில், ஒருநாள் ஸஹஸ்ரநாமார்ச்சனைத் தொரு கமலம் குறையக்கண்டு, தமது கண்மலரை யிடந்து சாத்திப் பூசிக்க, இறைவர், சக்கரத்தைக் கொடுத்தருளினார். அன்றுமுதல் விண்டுவுக்கு நேமியானென்னும் ஒருபெயரும் உண்டாயிற்று.

இனி இறைவர் இடபவாகனமேறிய செய்தியுஞ் சொல்லுவோம்; கேட்கக் கடவாய். சர்வசங்காரகாலத்தில், எல்லாப் பொருள்களும் நசித்தும் தாம் நசிக்காமல் பெருமயானத்தில் பராசத்தியானவள் கண்டுகளிக்க நடிக்கிறபோது, அந்தப் பரமேச்சுரனைத் தருமதேவதை வணங்கி, என்னை யுமது வாகனமாக்கிக் காக்க வேண்டுமென்று வேண்ட, இறைவன் அப்படியே வரந்தந்து, இனி வருகிற சதுர் யுகங்களிலும், முறையே நான்கு மூன்று இரண்டு ஒன்று ஆகிய பாதங்களோடு நடக்கக்கடவாய், எக்காலத்தும் எமக்கு வாகனமாகவும விளங்கக்கடவாயென் றருளிச்செய்தார். அன்றியும் அளவற்ற பேறுகளையும் தந்தருளினார். இது கருதி யல்லவா திருமால் திரிபுரதகனகாலத்தில் வெள்விடையாய்த்தாங்கினார். இது நிற்க,

முற்காலத்தில் ஒருநாள் தேவாசுரர் பகைகொண்டு போரிட்டு, இருதிறத்தாருள்ளும் அநேகர் இறந்தார்கள். அப்போது அவ்விருதிறத்தாரும் பிரமனிடஞ்சேர்ந்து, பாற்கடலைக் கடைந்து அமிர்தமெடுத்துத் தரவேண்டுமென்று கேட்க, அவர் அந்தக் காரியம் என்னாலாகாதென்று திருமாலிடத்திற் கழைத்துப்போய் இந்தச் செய்தியை விண்ணப்பஞ்செய்ய, அவர் மந்தரகிரிமுதலிய உபகரணங்களைக்கொண்டு மதிக்குங்காலத்தில், கடைகயிறு யமைத்திருந்த வாசுகியென்னும் பாம்பானது வருத்தம் பொறுக்கமாட்டாமல் உமிழ்ந்த நஞ்சானது உலகமுழுதும் பரவினபோது, எல்லாரும் பயந்து முறையிடத் திருமால் போய் அதற்கெதிரே நின்று அதட்டியும் அது தடைபடாது மிக்கு வருதலால், அவர் நிறம் வேறுபட்டுக் கருகி யெல்லாரோடும் கயிலைக் கோடினார். இவ்வாறாக யாவரும் கயிலாயத்தை யடைந்து பரமசிவன் சந்நிதியினின்று இந்தச் செய்தியைச் சொல்லி முறையிட, இறைவர் தம்பக்கத்திலிருக்கிற ஆலாலசுந்தரனை யழைத்து அந்த விடத்தைத் திரட்டிக்கொண்டுவாவென்று கட்டளையிட்டு, அப்படியே அவன் கொண்டுவரவாங்கி ஒரு திவலையாக்கி யுண்டு, அதனால் கறுத்த கண்டத்தை யுடையனாய்க் காளகண்டனென்னும் பெயர்தாங்கினார். பிறகு விண்டு முதலானோரை நோக்கி, நீங்கள்போய் இன்னொருதரம் கடைவீராயின் அமிர்தமுண்டாமென் றருளிச்செய்ய, அவர்களும அப்படியே கடைந்து அமிர்தத்தையும் மற்றபொருள்களையும் பெற்றார்கள்.

இனிக் கங்கையைத் தாங்கிய கதையைக் கேளும். முன்னொருகாலத்தில், கயிலையிலுள்ள பூஞ்சோலையில் உமாமகேசுவரர்கள் வேடிக்கையா யெழுந்தருளியிருக்கும்போது, இறைவன் திருக்கண்களை இறைவி தன் திருக்கரத்தால்பொத்தினாள். சூரியசந்திராக்கினிகள் இறைவன் கண்களாதலால் அவை மூடப்படவே, எல்லா வுலகங்களும் பேரிருளால் மூடப்பட்டு வருந்த, இறைவர் தமது நெற்றிக்கண்ணைத் திறந்து ஒளியுண்டாக்குதலும் முச்சுடர்களும் தோன்றி விளங்கின. இறைவன் கண்களை மூடியிருந்த இறைவி கைவிரல்களை நெகிழ்த்து உதற, அவற்றினின்றும் பெருகின வெயர்வையின் பெருக்குக் கங்கைகளாகிக் கடல்போலப்பெருகி உலகங்களை யழித்தோடின. அதுகண்ட பிரமன் முதலானோர் வணங்கி நின்று இந்தச்செ

ய்தியை விண்ணப்பஞ்செய்ய, பரமசிவன் திருவுளமிரங்கி அந்த வெள்ளத்தைத் தமது சடையி னொருரோமத்தில் சுவறச்செய்தடக்கினார். என்றிப்படி பலவகையாகிய கதைகளைச் சொல்லிச் சிவபெருமானது பெருமையை விளக்கினார். இது நிற்க,

ததீசியுத்தரப்படலம் முற்றிற்று.

---

## கயமுகனுற்பத்திப்படலம்.

பாக சாதனன் றொல்லைநாள் வானவப் படையோ
டேகி யேயசு ரர்க்கிறை தன்னைவென் றிகலில்
வாகை சூடியே விஞ்சையா முதலினோர் வாழ்த்தப்
போக மார்தரு முலகிடை மீண்டுபோய்ப் புகுந்தான். (௧)

பொன்ன கர்க்கிறை போதலும் பொருமையிற் புழுங்கி
வன்னி யுற்றிடு மலங்கல்போ லுளநனி வாடி
வென்ன லித்திடு மவுணர்தங் கோமகன் வினையேற்
கென்னி னிச்செய லெனப்பெரி துன்னியே யினைந்தான். (௨)

வெருவ ரும்படி மலைந்திடு மமரர்பான் மேவிப்
பொருது வென்றிகொண் டெனக்குமப் பெரும்புகழ் புனைய
வொருவ ரெங்குலத தில்லைகொ லோவென்று வுரையாக்
குருவி ருந்துழி யணுகியே வணங்கினன் கொடியோன். (௩)

பொற்றை யின்சிறை தடிந்தவன் சுரரொடும் போர்மே
லுற்ற காலையிற் படையுடன் யான்பொரு துடைந்து
ம்றற வற்குவென் னளிததன னமபெரு மரபிற்
கொற்ற வீரர்க ளியாவரு முடிந்தனா கூற்றால. (௪)

கழிய மாசினை யடைந்தன மின்னலே கரையாம்
பழிகொள் வேலையி லழுந்தின முடைந்திடு பகைவாக
கழிவு முற்றனம் பெருந்திற லறறனை மவுண
ரொழியு மெல்லைவந் தெய்திய தோவிவ னுரைத்தி. (௫)

சிறுவ ராயினோர் பெருமையிற் பிழைப்பரேற் றெருட்டி
யுறுதி பற்பல கொளுத்திமற் றவர்தமை யுயர்ந்த
நெறியி னுக்குதல் குரவர்தங் கடனது நீயே
யறிதி யாதலி னுய்யுமா றுரைததியென் றறைந்தான். (௬)

உரைத்த வாசகங் கேட்டலு மன்னநீ யுளத்தில்
வருத்த முற்றிட லென்னவே தேற்றிமேல் வருவ
கருத்தி னுன்னினன் றெரிதலும் வெதும்பிய காயத்
தரைத்த சாந்தினை யப்பினன் போலவொன் றறைந்தான். (௭)

ஆதியம் பரமன் றனேயலைடைதரு புனிதன் றெலலே
வேதியர் தலைய ஞன விரிஞ்சன்மெய் யுணர்விற பூத்த
காதலன் புலன்க ளாய பகைகளுரைக் கடந்த காட்சி
மாதவ முனிவாக் கீசன் வசிட்டனென் றுரைக்கும் வள்ளல். (அ)

அன்னவன் மரபின் வந்தொ னறிஞர்க்கு மறிஞன் மேலாய்
மன்னிய நெறிக்க ணின்றோன் மாகத னென்னும பேரோ
னுன்னரு மறைகள் யாவு முணாந்தவ னுயாந்த வீடு
தன்னையிங் கடைய னெனஞத தவந்தனை யியறற லுற்றான். (கூ)

ஆயவன் றன்பா லின்றோ ரசுரகன் னிகையைத் தேற்றி
யேயினை யென்னி னன்னு ளெய்தியே யவன்ற னேடு
மேய்பின காலை யாங்கோர் வேழமா முகதத னுங்க
ளுயக ளுகத் தோன்றி நற்றவம புரிவ னன்றே. (க0)

நற்றவம் புரிதல் காணு நண்ணலர் புரங்கண் மூன்றுஞ்
செற்றவன் மேவி மேலாஞ் செல்வமுந் திறலு நல்க
மற்றவன் வானோர் தொலசிர் மாற்றியெவ் வுலகு மாளுங்
கொற்றவ னுவ னென்று கூறினன் குரவ னேனோன். (கக)

அவ்வுரை கேட்ட லோடு மடித்துணை யிறைஞ்சி யீது
செவ்விது செவ்வி தெந்தாய் செய்வனீ பணிதத தென்ன
வெவ்வமில் புகரு மற்றே யியற்றிய சென்மோ வென்ன
மைவரை யனைய மேனி மனனவன் கடிது மீண்டான். (கஉ)

மீண்டுதன் னிருக்கை யெய்தி விபுதையென் றொருத்தி யன்னுள்
காண்டகு மெழிலின் மிகக கன்னிதன குலத்தில வந்தாள்
பூண்டகு நாணி னேடும் பொருந்தின ளவளை யெய்தி
யீண்டொரு மொழிகேட் டன்னு யென்னிடர் தீர்தி யென்றான். (கங)

மன்னவர் மன்னன் கூறு மாற்றமங் கதனைக் கேளாக்
கன்னிகை யாகி நின்ற காமரு வல்லி யன்னு
னின்னடித தொண்டு செய்ய விருதர்தங் குலதது வந்தே
னென்னுனக் கியற்றுஞ் செய்கை யிசைந்தன விசைததி யென்றாள். (கச)

உரையென லோடு மன்ன னுன்குலத் தோரை விணேர்
பொருதுவென் கண்டு மீண்டு போனதை யறிதி யன்றே
மருவருங் குழலாய் போரில் வானவர் தம்மை வெலல
வொருவரு மில்லை நின்னு லுற்றிட வேண்டுங் கண்டாய். (கரு)

ஆங்கதற் கேதுக் கேட்டி யம்பொன்மால் வரைதெ ஞ்ச
பாங்கரி லரிய நோன்பு பயிலுமா கதன்பாற் சென்று
நீங்கல்செல் லாது பன்னு ளினையறிந் தொழுகிக் காலந்
தீங்கற நாடி யன்னான் செய்தவஞ் சிதைததுச சேர்தி. (கசு)

சேருதி யென்னி னங்கோர் சிறுவனின் னிடத்திற் றோன்றிப்
பாருல கனைத்து மேலாம் பதங்களும் வலிதிற் கொண்டு
வீரரில் வீர னுகி வெம்பகை விட்டி யெங்க
ளாருணர் அடைக்கு மன்னு யன்னவா றமைதி யென்றான். (எ)

வேந்தன துரைஇயக் கேட்ட விபுதையம் முனிவன் றன்பாற்
போந்தன தெண்ண முற்றப் புதல்வனை யளித்து மீள்வ
லேந்தனீ யிரங்க லென்றே யேகின னிறைவன் வானோ
ராய்ந்தன ரினியென் றுன்னி மகிழ்ச்சியோ டிருந்தா ரங்கண். (கஅ)

ஏகிய வசுரர் கன்னி யேமமால் வரையின் சார்போய்
மாகதன் பாறசென் றன்னோன் மாதவத் திறத்தை நோக்கி
யாகொடி யிவனே யல்லா தாரிது புரியு நீரார்
மோகமிங் கிவனை யாக்கி முயங்குவ தெவ்வா றென்றாள். (க௯)

நேமிக ளனைத்து மார நிவந்தெழும் வடவை தன்னை
மாமுகின் மாற்ற வற்றோ மாற்றமே வல்ல தென்னிற
காமவே ளொடுத்த செய்ய கணையெலா மொருங்கு சென்றித
தோமில்சீர் முனியை வாட்டித் துறவையு மாற்று மென்றாள் (உ0)

வானுயர் தவத்தி னிறகு மாகதன் யானே யல்ல
மேனகை வரினு நோக்கான் விண்ணவர் பகைஞர் தங்கள்
கோனிஃ துணரான் போலுங் குறுகிநீ புணர்தி யென்று
ஞனதற கிசைந்த வாறு நன்றென நகைத்து நின்றாள். (உக)

போந்தனென் மீண்டு மென்னிற் போற்றலர்க் குடைந்து சோரும்
வேந்தனென் னுற்று யென்று மீளவும் விடுப்ப னம்மா
வேய்ந்ததே யதற்கி லென்பா லெய்திமற் றிவனே யுறற்குக்
காந்தனே யாக நோற்றுக் காலமும் பார்ப்ப னென்றாள். (உஉ)

என்றிவை யுன்னி யுற்றோர்க் கினிதருள் புரியும் வெள்ளிக்
குன்றுறை பெருமான் செய்ய குரைகழல் கருத்துட் கொண்டு
வன்றிற னோன்பின் மிக்க மாகத முனிவ னேரா
நின்றருந் தவத்தை யாற்ற நெடும்பகல் கழிந்த தன்றே (உங)

மாதுசெய் தவத்தி னாலும் வரன்முறை வழாத வூழி
னேதுவி னாலு மங்க ணிருங்களிற் றுருத்த லொன்று
காதலம் பிடியி னோடு கலந்துடன் புணரக் கானூட
லாதரம் பெருகப் பலகா னோக்கின னருந்த வத்தோன். (உச)

மறந்தனன் மனுவின் செய்கை மனப்படு பொருளை வாளா
துறந்தனன் காம மென்னுஞ் சூழ்வலைப் பட்டுச் சோர்வுற
றிறந்தனன் போல மாழ்கி யின்னுயிர் சுமந்தா னின்று
பிறந்தன னினைய கூட்டம் பெறற்கு வேண்டு மென்றான். (உரு)

என்றிது புகன்று முன்செய் தவக்குறைக் கிரங்கி யென்று
நின்றது பழியே யேனு நீடுமேற் காமச் சூர்நோய்
தின்றுயிர் செகுக்கு மந்தோ செய்வதிங் கெவனோ வென்னா
வென்றிகொண் முனிவன் றானு மனத்தொடு வினவ லுற்றான். (உசு)

இவ்விடர் தலைக்கொண் டாங்கே தெறுதரு காமச் செந்தீ
யொய்வது சிறிது மின்றி யுள்ளுயி ரலைக்கும் வேலை
யாவதெ ஞ்சிறுகரி யின்னு மருந்தவங் கூடு மாவி
போவதிற் பயனியா தென்னுப புணர்ச்சிமேற் புந்தி கொண்டான். (உஎ)

போவதற் கென்னும் போதிற் பொருவில்சீ ரசுரர்க் கெல்லாங்
காவல னேவல் போற்றுங் கன்னிகை முனிவன் காமத்
தோய்வதும் பிறவு மெல்லா மொருங்குட ணோக்கி யெண்ணம்
யாவது முடிந்த தென்று வெல்லையின் மகிழ்ச்சி பெற்றாள். (உஅ)

ஈங்கிது கால மாகு மிடனுமா மிதற்கு வேறு
தீங்கிலை யினைய கூட்டஞ் செய்தவஞ் செய்த தென்று
வாங்கிய நுதலி னாளும் வல்விரைந் தெழுந்து தூயோன்
பாங்கரி னணுகிப் பொற்றாள் பணிந்தனள் பரிவு கூர. (உகூ)

மின்னிடை பணிந்து நிற்ப மெய்யுறப் பனைத்து நோக்கிப்
பின்னரு மான்மீக் கொள்ளப் பித்தரின் மயங்கா நின்று
கன்னியு மென்னை வெஃகுங் காந்தரு வததி னானு
மின்னவ ளாயி னன்றோ வென்னுயி ருய்யு மென்று. (௩0)

கருத்திடை யுன்னி யார்நீ கன்னியோ வென்ன லோடு
மருத்திகொண் முனியை நோக்கி யன்னதா மென்ன நம்பால்
வரததகுங் கரும மென்கொல் வல்லையி லியம்பு கென்றான்.
விரத்தரிற் றலைவ னாகி வீடுபெற் றுய்ய நோற்றான். (௩க)

முருந்தெனு முறுவ லாளு முனிவநீ கணவ னாக
விருந்தவம் புரிந்தேன் பின்னு ளின்றது முடிவ தாகப்
பொருந்தின னீண்டு நின்னைப புல்லிய வந்தே னென்ன
வருந்திறு தமுதம் பெறற மாக்களபோன் மகிழ்ச்சி யுற்றான். (௩உ)

என்பெருந் தவமும் பன்னு ளெண்பொருட் டாக நோற்ற
நின்பெருந் தவமு மன்றோ நின்னுட னென்னை யீண்டே
யன்புறக் கூட்டிற் றம்மா வடுகளி றென்னப் புல்லி
யின்புற வேண்டு நீயு மிரும்பிடி யாதி யென்ன. (௩௩)

மெல்லிய ளானு மங்கோர் வெம்பிடி யாகித் தோன்றி
யெல்லையில் காதல் பின்னு மீதலு முனிவ னானு
மல்லலங் களிற தாகி வானுயர் புழைக்கை நீட்டிப்
புல்லின னாற்றந் தானே புணாசசியிற் சிறந்த தன்றே. (௩௪)

நையுறு முள்ள மாதி நான்மையும் பொறியி னண்ணி
யையுறு புலனோ டைந்து மாவியி னொருங்க வன்னாண்
மெய்யுறு புணாச்சித தாய வேட்கையின் மேவ லுற்றுச்
செய்யுறு காம முற்றித் தீர்ந்திடு காலை தன்னில். (௩ரு)

அயன்முதற் றலைவர் வானத் தமர்தரு புலவ ராற்றுஞ்
செயன்முறைக் கடன்கள் யாவுஞ் சிந்தினன் சிதைக்கும் வண்ணம்
வயமுகத தடவு கொண்ட வயிர்த்திடு மருப்பி னல்வாய்க்
கயமுகத் தவுண னங்கே கதுமென வுதயஞ் செய்தான். (௩௬)

பற்றிய பலகை யொள்வாள் விதிர்த்தனன் பரவை ஞாலஞ்
சுற்றினன் வரைகள் யாவுந் துகளபடத் துகைத்தா னுந்தி
யெற்றின னுருமே றஞ்ச விரட்டின னுலக மெல்லாஞ்
செற்றிடுங் கடவு தென்னத் திரிந்தனன் சீற்ற மிக்கான். (௩௭)

அன்னதோர் பிடியு ரோம மளப்பில வவற்றி லாங்கே
மின்னலங் கெயிற்றுப் பேழ்வாய் விளங்கெழிற செக்கர் வாய்ந்த
சென்னியங் குடுமி வீரர் தெழித்தெழீஇச் செங்கை தன்னிற
றுன்னிரும் படைக ளோடுந் தோன்றினர் தொகையி லான்றோ. (௩அ)

இன்னவ ரோடு கூடி யிபமுகத் தவுண னார்ப்பத
தன்னையும் பயந்தோன் றானுந் தளர்ந்தன ரிரியல் போகி
முன்னுறு முருவங் கொள்ள முனிவர னுணர்வு தோன்ற
வுன்னினன் றிர[illegible] யேங்கி யூழ்முறை நினைந்து நைந்தான். (௩௯)

மாயமாங் காம மென்னும் வலையிடைப் பட்டு நீங்குந்
தூயவன் முன்ன நின்ற தோகையைச் சுளித்து நோக்கி
நீயெவர் குலத்தில் வந்தாய் நினைந்ததென் கழறு கென்னச்
சேயிழை மரபும் வந்த செய்கையு முணர்த்தி னனறாள். (௪0)

வரன்முறை யுணர்த லோடு மாகத முனிவன் யானே
தரணியி லுயிர்க ளான சராசரந் தனக்கு மேலாஞ்
சுரகுலந் தனக்கு மின்றே துன்புறு வித்தே னென்னா
வெரியுறு தளிர்போல் வாடி யின்னலங் கடலுட் பட்டான். (௪௧)

சிலபொழு திரங்கித் தேறிச் சேயிழை மடந்தை நங்கோன்
மெலிவுநின் னெண்ணந் தானும் வீடுபெற் றுய்ய யான்முன்
பலபகல் புரிந்த நோன்பும் பாருல கனைத்தும வானோ
ருலகமு முடிந்த வேநீ யொல்லையிற் போதி யென்றான். (௪௨)

போதிநீ யென்ன லோடும் பொன்னடி வணங்கிச சென்று
தாதுலாந் தெரிய லாகத் தயிததியர்க் கிறைபா லெய்தி
யீதெலா முரைத்த லோடு மெல்லையின் மகிழ்சசி யாகிக்
காதல்கூர் தபனற் காணுங் காலையங் கமலம போன்றான். (௪௩)

தாங்கரு முவகை யோடுந் தானவர்க் கரச னண்ண
வீங்குறு முனிவன் முன்போ லினிதுநோன் பியற்றப் போனா
னாங்கவ னுதித்த மைந்த ரனைவரு முதல்வன் றன்னோ
டோங்கலின் குலங்கண் மேரு வுடனடந் தென்னச் சென்றார். (௪௪)

சீற்றங்கொ டறுக ணாக மொருவழித் திரண்ட தென்னக்
கூற்றம்பல் லுருவு கொண்டு குலாயதொட் டென்ன வூழிக்
காற்றெங்கும் பரவிற் றென்னக் கடலிடைப் பிறந்த நஞ்ச
மூற்றங்கொண் டுலாய தென்ன வுலகெலாந் திரிதந் தாற்றா. (௪௫)

மலையினைப் பொடிப்ப ரேனை மண்ணினை மறிப்பர் வாரி
யலையினைக் குடிப்பர் கையா லாருயிர்த் தொகையை யள்ளி
யுலையினைப் பொருவு பேழ்வா யோச்சுவர் பரிதி யோடு
நிலையினைத் தடுப்பர் சேட னெளிதரப் பெயர்வா மாதோ. (௪௬)

தக்கதோ ரவுண ரோடுந் தந்திமா முகத்து வீரன்
றிக்கெலா முனிவி யெல்லாத் தேயமு மொருங்கே சென்று
மக்களே யாதி யான மன்னுயிர் வாரி றுங்கித்
தொக்கதோர் செந்நீர் மாந்தித் துண்ணெனத் திரியு மன்றே. (௪௭)

அத்திறம் வைக றோறு மவுணரு மிறையு மேகிக்
கைத்துறு முயிர்க ளாவுங் கவர்ந்தனர் மிசைந்தா ராகப்
பொய்த்தவா வெறுக்கை யென்னப் போயின வுயிர்கள் சால
வெய்த்தனர் முனிவர் தேவ ரிறந்தது மறையி னீதி. (௪௮)

முகரிமை யடைந்த வன்றோன் முகத்தவ னவுண ரோடு
பகலிட மிசையே யிவ்வா றமர்தலு மனைய தன்மை
தகுவர்கண் முதல்வ னோர்ந்து தமதுதொல் குரவ னானை
புகரினை விடுப்ப வன்னான் போர்ந்திலை புகல லுற்றான். (௪௯)

வேறு.

ஒள்ளி தாகிய வுங்குலத் துற்றுள
மள்ளர் யார்க்குமொர் வான்குரு வாயினேன்
றெள்ளு பன்மறைத் திட்பமுந் தேர்ந்துளேன்
வெள்ளி யென்பதொர் மேதகு பேரினேன். (௫௦)

உங்கு லத்துக் கொருமுத லாகிய
சிங்க மன்ன திறலின னுய்த்திட
விங்கு நின்புடை யெய்தினன் பேனெறி
தங்கு நன்னயஞ் சாற்றுதற் கேயென்றான். (௫௧)

குரவ னாகிக் குறுகிய சல்லியன்
பரிவொ டீது பகர்தலு மாங்கவன்
றிருவ டித்துணை சென்றுவ ணங்கியே
கரிமு கத்தன் கழறுதன் மேயினான். (௫௨)

இறுவ தின்றிய வெங்குலத் தோர்க்கெலா
மறிவ நீயரு ளாலடி யேறகிவ
னுறுதி கூறுகின் றாயித னாங்கினிப்
பெறுவ தொன்றுள தேயெனப் பேசினான். (௫௩)

அந்த வேலை யவுணர்கள் யாவருஞ்
சிந்தை மேல்கொண்ட தீதினை நீததிடா
வெந்தை யார்தங் குரவ ரிவரென
வந்து பார்க்கவன் றாளில் வணங்கினார். (௫௪)

சீத வான்முகிற் கோளெனுஞ் செவ்வியோ
னாதி தன்னரு ளாலவு ணர்க்கிறை
போத கன்முக னோக்கிப் பொருவிலா
வோதி மாண்பி னிவையுரைக் கின்றனன். (௫௫)

வேறு.

மீயுயர் தவத்தை யாற்றாய் விமலனை யுணரா யொல்லார்
மாயமுந் திறனுஞ் சீரும் வன்மையுஞ் சிறிதுந் தேரா
பேயவிவ் வுடல மில்லா தென்பதுங் கருதாய் வாளா
போயின பன்னா ளென்னீ புரிந்தனை புந்தி யில்லாய். (௫௬)

முப்பகை கடந்து மற்றை முரட்பகை முடித்திட் டைம்பகை
மெய்ப்பகை கடந்து சோற்று விழுத்தகு மாற்றல் பெற்றுத்
துப்பகை தொண்டைச் செவ்வாய்ச் சூரொடு புணரும் வானாட்
டப்பகை கடந்து தொல்சீ ரடைந்திலை போலு மன்றே. (௫௭)

இம்மையி னின்பந் தன்னைப் புகழொடு மிழந்து மேலை
யம்மையி னின்பந் தானு மகன்றனை போலு மன்றே
யும்மையு மின்ப மென்ப தூற்றிலை யென்னிற் பின்னை
யெம்மையி னின்பந் துய்க்க விசைந்துநீ யிருக்கின் றாயால். (௫அ)

ஆக்கமுந் திறனுஞ் சீரு மாயுவு நலனு மேலா
மூக்கமும் வீடு மெல்லாந் தவத்தினா லூற்ற மன்றோ
நோக்குறு மிந்நாள் காறு நோற்கலா தினைய வெல்லாம்
போக்குவ தென்னை கொல்லோ புகலுதி யிகலும் வேலோய். (௫௯)

ஆற்றிடு தருமம் விஞ்சை யரும்பெறன் மகவு சீர்த்தி
யேற்றிடு கொற்ற மாற்ற லிருநிதி பெருமை யின்ப
நோற்றிடு விரதஞ் சீல நுவலரும் போதம் யாவுங்
கூற்றுவன் கூவு ஞான்று குறித்திடிற் கூடு மோதான். (௬0)

காலனா கியதோர் சேர்ப்பன் காலமாம் வலையை வீசி
ஞாலமாந் தடத்தில் வைகு நல்லுயிர் மீன்கள் வாரி
யேலவே யீர்த்து நின்று னிறுதியாங் கரைசேர் காலை
மேலவன் கையுட் பட்டு மெலிவொடு வீடுமன்றே. (௬௧)

சீரிய தூடல மென்கை தெரிந்திலை நிலைத்தல் செல்லா
தாருயிர் வகையு மென்ப தறிந்திலை யாயுட் பன்னாட்
சாருதல் வேண்டு மென்னுந் தகைமையு நினைத்தி யல்லை
பாருயி ரிறப்ப நுங்கி யிருப்பதோ பரிசு மாதோ. (௬௨)

மந்திர மில்லை மாய மில்லையோர் வரமு மில்லை
தந்திர மில்லை மேலோர் தருகின்ற படையொன் றில்லை
யந்தர வமர ரெல்லா மணிகமாய்ச் சூழ நின்மே
லிந்திரன் பொருவான் செலவின் யாதுநீ செய்தி மாதோ. (௬௩)

சிறியதோர் பயனைத் தூக்கித் தீயவர் செய்யுஞ் சூழ்ச்சி
யறிகில வாகி வீழ்வுற் றகப்படு மாவு மீனும
பறவையு மென்ன வொல்லார் புணர்ப்பினிற் படுதி யினனே
விறலொடு வலியுஞ் சீரு மேன்மையு மின்றி யுற்றாய். (௬௪)

ஆதலி னெவர்க்கு மேலா மரன்றனை யுன்னி யாற்ற
மாதவம் புரிதி யன்னான் வரம்பல கேட்ட வெல்லாந்
தீதற வுதவும் பின்னர்த் தேவருன் னேவல் செய்வார்
மேதகு முலகுக கெல்லாம் வேந்தனு யிருத்தி யென்றான். (௬௫)

சொன்னவை கேட்ட லோடுந் தொழுதகை யவுணர் தோன்றன்
முன்னிலை யாவ ரேனு மொழிந்தன ரில்லை யானு
மின்னவை புரித றேற்றே னினித்தவ மியற்று கின்றே
னன்னவை புரியுந் தன்மை யருள்செயல் வேண்டு மென்றான். (௬௬)

வேறு.

ஐவினைசெய் பொறிகளெலா மரகமெனக் கறங்குமறி வடங்கு கின்ற
மெய்வினைய மந்திரமுந் தந்திரமு மங்கமுறு விதியி னோடு
கைவினையு முட்கோளும் புறங்காப்பும் விரதஞ்செய் கடனு மேனைச்
செய்வினையு முணர்வித்து மேருவின்பாற் றவம்புரியச் செல்லு கென்றான்.

ஏவுதலுங் கயமுகத்தோ னவுணரொடும் புகரடியி னிறைஞ்சி யங்கண்
மேவுவன்யா னெனவுரையா விடைகொண்டு போற்றிவோன் விரைவி னேகக்
காவதமங் கோரிரண்டு கடப்பளவுந் தானின்று கண்ணி னோக்கிப்
போவனினி யெனமகிழ்ந்து மீண்டுபோ யவுணர்பதி புகுந்தா னன்றே.()

அக்காலத் தெதிர்வந்த விறைவனுடன் புகுந்தவெலா மறைய வன்னா
னிக்காலந் தானன்றே வருள்செய்தீ ரெனவியம்பி யேத்தி யன்பான்
முக்கால்வந் தனைசெய்து விடுத்திடப்போய்த் தன்பதத்தின் முன்ன மேபோன்
மிக்கானும் வீற்றிருந்தான் கடவுளரும் புரந்தரனும் விழுமங் கொள்ள.()

மாண்டகுமவ் வலியகலன் மருப்பதனை யெதிர்ந்துதொல்லை வைப்பி னீங்கு
மீண்டியதிண் காழிருமபி னெஃகமுதல் வியன்படைக ளியற்கை யென்னக்
காண்டகைய தங்குரவ னுணபுக ருரையதனைக் கருத்துட் சேர்ததி
யாண்டகைசே ரிபமுகத்தோ னவுணருடன் றவம்புரிவா னகல லுற்றான். (௭௦)

அங்கண்முகில் படிந்தறியா மேருவினுக் கொருசார்போ யவுணர் வேந்தன்
றுங்கமிகு கருவிகளாய் வேண்டுவன கொணர்வித்துத் தூநீ ராடிச்
செங்கதிரோன் றனைநோக்கி யாற்றுகடன் முடித்துமுன்னைத் தீர்வ நேர்ந்து
தங்கள்குர வன்பணித்த பெறறியினான் மிக்கதவந் தன்னைச் செய்வான். (௭௧)

பொறியினுறு புலனவிதது நவைநீக்கிக் கரணவியல் போக்கி யாசான்
குறிவழியே தலைநின்று மூலவெழுத துடனைந்துங் கொளுவி யெண்ணி
யறிவுதனி லறிவாகி யுயிர்க்குயிராய்ப் பரம்பொருளா யமல மாகிச்
செறிதருகண் ணுதற்கடவு ளடிபோற்றி யவனுருவைச் சிந்தை செய்தான்.

வேறு.

ஆயிர மாண்டுபுல் லடகு மேயினா
னாயிர மாண்டுசில் புனல ருந்தினா
னாயிர மாண்டள வனில துங்கினான்
மாயிரும் புவியுயிர் மடுக்கும் வாயினான். (௭௩)

காலமூ வாயிரங் கழிந்த பின்முறை
மாலுறு மருத்தெனு மாவைத் தூண்டியே
மூலவெங் கனலினை முடுக்கி மூட்டுறா
மேலுறு மமிர்தினை மிசைதன் மேயினான். (௭௪)

கண்டன ரதுசுரர் கவலுஞ் சிந்தையர்
திண்டிற லவுணனிச் செய்கை முற்றுமே
லண்டமும் புவனமு மலைக்கு மேயெனாக்
கொண்டனர் தம்பதி யறியக் கூறினார். (௭௫)

கூறிய செயலினைத் தேர்ந்து கொற்றவ
னூறிய வெகுட்சிய னயர்ந்து சோர்வுறா
வீறியல் வாய்மையும் விறலு மாண்மையு
மாறிய வோவென மறுக்க மெய்தினான். (௭௬)

புலர்ந்தன னிரங்கினன் பொரும லெய்தினா
னலந்தன னுயிர்த்தன னச்சங் கொண்டனா
னுலந்தனன் போன்றன னொடுங்கித் தன்னுளங்
குலைந்தன னவன்செயல் கூறற் பாலதோ. (௭௭)

ஈசனே யன்றுகா ணெதிரக் கண்டிலன்
காய்சின மகன்றிடு கயமு கத்தினன்
றேசிக னருளினுற் றீயின் கண்ணுறீஇ
யாசறு தவஞ்செய மனத்து முன்னினான். (எஅ)

சுற்றுற நாற்கனல் சூழ நள்ளிடை
மற்றொரு பேரழல் வதிய வன்னதிற்
கொற்றவெங் கயமுகக் குரிசி றுணிறீஇ
நற்றவ மியற்றினு னுதற் போற்றியே. (எகூ)

மேயின கொழும்புகை மிசைக்கொண் டாலெனத்
தீயழ னடுவுறச் செந்நின் றையிரண்
டாயிர மாண்டையி னவதி யாருயிர்
நோயுற விபமுக னுேற்ற லோம்பினான். (அ0)

புழைக்கையின் முகத்தினன் புனித மார்தரு
தழற்சிகை மீக்கொளத் தனது தாணிறீஇ
விழுத்தக நோற்றலே வியந்து நோக்குறீஇ
யழற்பெருங் கடவுளு மருள்செய் தானரோ. (அக)

அன்னதோ ரமைதியி லவுணன் மாசுடல்
வன்னியி லுறுத்துகா ரிரும்பின் மாண்டது
பொன்னினு மணியினும் பொலிந்து பூத்தது
மின்னிவர் வச்சிர மிடலுஞ் சான்றதால். (அஉ)

ஏற்றநந் தொன்மர பியல்வ தூமலே
போற்றிய வருமிவன் பொறையு மேன்மையு
நோற்றிடு திட்பமு நுவலற் பாலவோ
தூற்றுது மலரென வவுணர் தோன்றினர். (அந)

வீசினர் நறுமலர் வியப்பி னன்மொழி
பேசினர் புகழ்ந்தனர் பிறங்கு மார்வத்தா
லாசிகள் புகன்றன ரமரர் தானையை
யேசின ரவர்தம தின்ன னேக்குவார். (அச)

தளப்பெரும் பங்கயத் தவிசின் மீமிசை
யளப்பருங் குணத்துட னமர்ந்த நாயக
னுளப்படநோக்கின னுவந்து பூமுடி
துளக்கின னமரர்க டுணுக்க மெய்தினர். (அரு)

இன்னண மருந்தவ மியற்று மெல்லையிற்
பொன்னவிர் சடைமுடிப் புனித நாயக
னன்னது நாடியே யவுண ருக்கிறை
முன்னுற வந்தனன் மூரி யேறதின்மேல். (அசு)

வேறு.

வூந்து தோன்றலு மற்றது நோக்கியத்
தந்தி மாமுகத் தானவ னேன்பொரீஇச்
சிந்தை யன்பொடு சென்னியிற் கைதொழு
தெந்தை தன்னை யிறைஞ்சினி னேத்தினான். (அஎ)

போற்று இன்றுழிப் புங்கவ னின்றுகா
ழுற்று நோன்பி லயர்ந்தனை நீயினிப்
பேற்றை வேண்டுவ பேசினை கொள்கெனத்
தேற்ற மிக்கவன் செப்புதன் மேயினான். (அஅ)

வேறு.

மாலய னிந்திரன் முதல்வ ரம்பிலோர்
மேலுறு தலைபினர் வெய்ய போரிடை
யேலுவ ரென்னினு மெனக்கு வென்னிட
வாலமர் கடவுணீ யருளல் வேண்டுமால். (அகூ)

எற்றுவ வெறிகுவ வீர்வ வெய்குவ
குற்றுவ முதலிய குழுக்கொள் வான்படை
முற்றுற வரினும்யான் முடிவு றுவகை
யற்றமில் பெருமிட லளித்தல் வேண்டுமால். (கூ0)

மிக்கதோ ரமரரால் வியப்பின் மானுட
மக்களா லவுணரான் மற்றை யோர்களாற்
றொக்குறு விலங்கினாற் றுஞ்சி டாவகை
யிக்கணந் தமியனேற் கீதல் வேண்டுமால். (கூக)

என்னிக ராகிவந் தொருவ னென்னொடு
முன்னுற வெஞ்சமர் முயலு மென்னினு
மன்னவன் படையினு மழிவு றுவகை
பொன்னவிர் வேணியாய் புரிதல் வேண்டுமால். (கூஉ)

வரந்தரு கடவுளர் முனிவர் மற்றையோ
ரிருந்திடு முலகெலா மென்ன தாணையிற்
றிரிந்திடு மாழியுங் கோலுஞ் சென்றிடப்
புரிந்திடு மரசியல் புரிதல் வேண்டுமால். (கூங)

அன்றியு மொன்றுள தடியன் சூழ்ச்சியாற்
பொன்றினும பிறவியுட் புகாமை வேண்டுமா
லென்றலு நோற்றவர்க் கேது மீபவ
னன்றவை பெறுகென நல்கி யேகினான். (கூச)

பெற்றனன் படைகளும் பிறவுந் தன்புறஞ்
சுற்றிடு கிளையெலாந் தொடர்ந்து சூழ்தர
வுற்றனன் காண்டகு மும்ப ருங்குவன்
மற்றொரு கயமுக னென்று மாழ்கினார். (கூரு)

காழுறு பெருந்தரு நாறு காசினி
வீழுறு தூரொடு மெலிந்து நின்றன
வூழுறு பருவமவந் துற்ற காலையிற
சூழுறு தொன்னிலை யென்னத தோன்றினான். (கூசு)

அறபுத மெய்தின னிலகொள வாரியிற
புற்புத மாமெனப புளகம் பூத்துளான்
சொற்பகர் வரியதோர் மதாப்பின் சுமமையான்
சிறபரன் கருணையிற் றிளைததன் மேயினான். (கூஎ)

அன்னது தேர்வுறீஇ யவுணர் தொல்குல
மன்னனும் வெள்ளியு மதங்க மாமுகன்
றன்னைவந் தெய்தியே சயமுண் டாகெனப்
பன்னரு மாசிகள் பகர்ந்து மேயினார். (௯௯)

தண்ணளி யில்லதோர் தந்தி மாமுக
னண்ணலங் கடகளிற் றமரர் கோனையும்
விண்ணவர் பிறரையும் வென்று மீண்டுபின்
மண்ணுல கதனிடை வல்லை யெய்தினான். (௧௦௦)

வேறு.

புவனி தன்னிடைப போந்துபின்
னவுணர் கம்மிய வறிஞனை
நவலு மன்பொடு நோக்குறு
வுவகை யாலிவை யுரைசெய்வான். (௧௦௦)

நாவ லந்தரு நண்ணுமித
தீவின் மேதகு தென்றிசைப
பூவி லோர்நகர் புரிதியான்
மேவ வென்று விளம்பவே. (௧௦௧)

பூவின் மேல்வரு புங்கவத்
தேவு நாணுறு செய்கையிற
காவன் மாநகர் கண்டதிற்
கோவி லொன்று குயிற்றினான். (௧௦௨)

வேறு.

வெங்கண் மேதகு வேழ முகத்தனைத
தங்க டொல்பகை தாங்குவ தாமெனச்
சிங்க மாற்றுந் திருமணிப் பீடமொன்
றங்கவன் வைக வர்றறின னவ்விடை. (௧௦௩)

இனைத யாவு மிமைப்பினிற் கம்மிய
னினைப்பி னிற்செய் நிலைமையை நோக்கியே
சினத்தி னீங்கிய செய்தவத தேசிகன்
மனத்தி னூடு மகிழ்ச்சியின் மேயினான். (௧௦௪)

காமர் தங்கிய காப்பிய னந்நகர்
தூம தங்கெழு தோன்முகற் காதலான்
மாம தங்க புரமென மறறொரு
நாம மங்கதற் கெய்திட நாட்டினான். (௧௦௫)

அந்த மாநக ரைத்தெனக் கம்மியன்
சிந்தை நாடினன் செய்திடு காலையிற்
றந்தி மாமுகத் தானவன் கண்ணுறீஇ
யந்த மில்லதோ ரார்வமொ டேகினான். (௧௦௬)

கநத மங்கொரு பத்தெனக் கற்றவ
ரோது கின்ற வொழுக்கமு மொன்றெனும்
பாதி யெல்லைப் பரப்பும் பெறுநகர்
வீதி நோக்கினன் விம்மித மெய்தினான். (௧௦௭)

அரக்கர் தொல்லை யவுணர்க் கரசொடு
தருக்கு தானவர் தம்முட னெய்தியே
பெருக்க முற்றதன் பின்னவ ரின்னவ
ரிருக்க நல்கின னிந்நகர் யாவையும். (௧௦அ)

அங்கண் மேவு மணிமணிக் கோயிலின்
மங்க லத்தொடு வல்லையி னேகியே
சிங்க வேற்றின் சிரங்கெழு பீடமேல்
வெங்கை மாமுகன் வீற்றிருந் தானரோ. (௧௦௯)

போந்து பின்னர்ப் பொருவருந் தானவர்
வேந்தன் மாமக ளான விசிதகிர
காந்தி தன்னைக் கருதுநன் னாளினி
லேந்தன் முன்வரைந் தின்புற மேவினான். (௧௧௦)

விண்ணின் மாதர்கண் மேதகு தன்குல
நண்ணு மாதர்க ணாகர்தம் மாதர்கள்
வண்ண விஞ்சையர் மாதர்க ளாதியா
மெண்ணின் மாதரைப் பின்வரைந் தெய்தினான். (௧௧௧)

பொன்ன கர்க்கும் பொலங்கெழு புட்பக
மன்ன கர்க்குமவ் வானவ ரீண்டிய
வெந்ந காக்கு மிலாவள மெய்திய
வந்ந கர்க்க ணமர்ந்திடன் மேயினான். (௧௧௨)

சூழும் வானவர் தானவர் துன்னியே
தாழ வேழுல குந்தன தாணையால்
வாழி சேர்கொடுங் கோலொடு மன்னுபே
ராழி செல்ல வரசுசெய் தானவன். (௧௧௩)

ஆவுஞ் சங்கமு மம்புய மும்மலர்க்
காவு மாமணி யுங்கம லாலயத்
தேவும் பின்வருந் தேவரு மாதரு
மேவல் செய்ய வினிதிருந் தானரோ. (௧௧௪)

புந்தி மிக்க புகரும் புகருட
னந்த மற்ற வவுணர்கண் மன்னனுந்
தந்தி யின்முகத் தானவ னுக்குநன்
மந்தி ரத்துணை யாயவண் வைகினா. (௧௧௫)

அன்ன காலை யடுகரி மாமுக
மன்னன் முன்வரும் வாசவ னாதியாந்
துன்னு வானவர் சூழலை நோக்கியே
யின்ன தொன்றை யியம்புதன் மேயினான். (௧௧௬)

வைக லும்மிவண் வந்துழி நுங்கடம்
மொய்கொள் சென்னியின் மும்முறை தாக்கியே'
கைகள் காதுறக் கால்கொடு தாழ்ந்தெழீஇச்
செய்க நம்பணி தேவர்க ணீரென்றான். (௧௧௭)

அன்ன தோதலு மண்டர்கள் யாவரு
மன்னன் றானு மறுப்பதை யஞ்சியே
முன்ன ரேகின்று மொய்ம்புடைத தோன்முகன்
சொன்ன தோர்புன் றொழின்முறை யாற்றினார். (௧௧௮)

எழிலி யூர்தியு மேனைய வானவர்
குழுவி னோர்களுங் குஞ்சர மாமுகத்
தழித கன்பணி யல்கலு மாற்றியே
பழியெ னும்பர வைப்படிந் தாரரோ. (௧௧௯)

கரிமு கத்தனுக் கயவன தேவலாற்
பருவ ரற்பழி மூழ்குறு பான்மையைச்
சுரா க ளுக்கிறை தொல்லை விரிஞ்சன்மா
விருவ ருக்கு மியம்பி யிரங்கினன். (௧௨0)

இரங்கு மெல்லையி லிந்திர முற்றுளந்
தரங்க மெய்தித் தளர்ந்திட னீயெனு
வுரங்கொள் பான்மை யுணர்த்தி யவனொடும்
புரங்க ளட்டவன் பொற்றறையிற் போயினார். (௧௨௧)

மாகர் யாவரும் வாசவ னும்புடை
யாக வந்திட வமபுயன் மாலுமை
பாகன் மேய பனிவரைக் கோயிலு
ளேகி னார்நந்தி யெந்தை விடுப்பவே. (௧௨௨)

கண்டு நாதன் கழலிணை தாழ்ந்துநற
றொண்டு காணத் துதிததலு மாங்கவ
னண்ட ரோடு மலமர லெய்தியே
வண்டு மூய்முடி வந்ததென் னென்னவே. (௧௨௩)

வேறு.

ஆனதோர் பொழுதின்மா லரனை நோக்கியோர்
தானவன் கயமுக னென்னுந் தன்மையான்
வானவர் தமையெலாம வருத்தி னானவ
னானமி றவமபுரிந் துடைய வன்மையால். (௧௨௪)

வெங்கய முகத்தினன் விறலை நீக்குத
லெங்களுக் கரியதா லிவர்க்கு மாதியாம்
புங்கவ நினைகதது பொருளன் றுகையா
லங்கவ னுயிர்தொலைத தருள வேண்டுநீ. (௧௨௫)

என்றுரை செய்தலு மீசன் யாமிவ
னொன்றொரு புதல்வனை யுதவித் தோன்முக
வன்றிற லவுணனை மாய்த்து மற்றவன்
வென்றிகொண் டேகுவான் விடுத்து மேலென்றான். (௧௨௬)

வீடிய பறறுடை விரதர்க் கென்னினு
நாடிய வரியவ னவின்ற வாய்மையைச்
சூடினர் சென்னிமேற் றொழுத கையரா
யாடினர் பாடின ரமரர் யாருமே. (௧௨௭)

பாங்கரி லனையரைப் பரிந்து நோக்கியே
யீங்கினி நம்பதிக் கேகு வீரென
வாங்கவ ரெம்பிரா னடியில் வீழ்ந்தனர்
வீங்குறு காதலால் விடைகொண் டேகினார். (கஉஅ)

ஏகிய வெல்லையி லெண்ணி லாவிதி
சேகர மிலைச்சிய சென்னி வானவன்
பாகமுற் றுலகெலாம் பயந்த சுந்தரத்
தோகையை நோக்கியே யிதனைச் சொல்லுவான். (கஉகூ)

யாம்பெரு விருப்புட னியற்று வித்திடுந்
தேம்படு தருவனந் தெரித்துஞ் செல்கென
வாம்பரி சருளினை வருவ னுங்கெனக்
காம்படு தோளுடைக் கவுரி கூறினாள். (கங௦)

ஆயது கேட்டன னகிலம் யாவையுந்
தாயென வருளுமத் தைய றன்னொடுஞ்
சேயுயர் விசும்பினைச் செறிதண் சோலையிற்
போயினன் மறைக்கெலாம் பொருளா தாயினான். (கஙக)

நீணுதற் கனல்விழி விமலத் தேவெனுந்
தாணுவைப போலவே தனது பாதமுஞ்
சேணுடைச் சென்னியுந் தேவர் யாரினுங்
காணுதற் கரியதக் கடிகொள் சோலையே. (கஙஉ)

தேசுடைத் தருநிரை திருமென் போதொடு
பாசடைத் தொகுதியும் பரித்து நிற்பன
வீசனுக் கருச்சனை யியல்பி னாற்றிட
நேசமுற் றுடையவர் நிலைய தொக்குமால். (கஙங)

பாலுற வுருவதோர் பரைதன் மெய்யொளி
மேலுறு பைங்கொடி வேத நாயக
னேலுறு தாருக வனத்தி லெய்தமுன்
மாலுறு மங்கையர் வடிவம் போலுமால். (கஙச)

கொடிகளுந் தருக்களின் குழுவு மாதட
னடிகளங் கேகலு மனையர் செம்மையுஞ்
சுடர்கெழு பசுமையுந் துவன்றி யன்னதோர்
வடிவுகொண் டிருந்திடும் வண்ணம் போலுமால். (கஙரு)

பூந்தரு நிரைகளிற் பொருவில் கோட்டிடைச்
சேர்ந்திடு நனைபல திகழ்வ பார்ப்பதி
காந்தனை யன்பொடு கண்டு பாங்குளா
ரேந்திய தீபிகை யென்ன லானவே. (கஙசு)

வான்றரு வோர்சில மலரின் கண்டொறுந்
தேன்றுளி விடுவன சிவனைக் கண்டுழி
யான்றதோ ரன்பினு ரகநெ கிழ்ந்துகட்
கான்றதோர் புனலெனக் கவின்று காட்டிய. (கஙஎ)

வண்டரு வோர்சில மருப்பில் வானிறங்
கொண்டிடு மதுமலர் குழுமி யுற்றன
வெண்டிரு மலையிடை வீழுங் கங்கையிற்
றண்டுளி சிதறிய தன்மை போன்றவே. (௧௩௮)

கற்றையஞ் சுடர்மணி கனக மேனைய
பிற்றையென் றுதருள் பெரியர் வண்மைபோன்
மற்றவ னுள்ளபன் மரமுந் தம்பய
னொற்றையு முலப்புறு தீகை சான்றவே. (௧௩௯)

காவத னியல்பினைக் கண்டு தன்னொரு
தேவியொ டேயருள் செய்து சிற்பர
னாவியுள் ளுணர்வென வதனுள் வைகுமோ
ரோவிய மன்றிடை யொல்லை யேகினான். (௧௪௦)

எண்டகு பெருநசை யெய்தி யைம்புலன்
விண்டிட லின்றியே விழியின் பாற்படக்
கண்டனள் கவுரியக் கடிகொண் மண்டபங்
கொண்டிடு மோவியக் கோலம் யாவுமே. (௧௪௧)

பாங்கரில் வருவதோர் பரம னுணையா
லாங்கத னடுவணி லாதி யாகியே
யோங்கிய தனியெழுத தொன்றி ரண்டதாய்த்
தூங்குகைம் மலைகளிற் றோன்றிற் றென்பவே. (௧௪௨)

அன்னவை யுமையவள் காண வாங்கவை
முன்னுறு புணர்ச்சியின் முயற்சி செய்தலு
மென்னைகொ லிதுவென வெண்ணித் தன்னொடு
மன்னிய முதல்வனை வணங்கிக் கூறுவாள். (௧௪௩)

மூலமா மெழுத்திவை முயங்கி மால்கரிக்
கோலமாய்ப் புணர்வதென் கூறு கென்றலு
மேலவார் கருங்குழ லிறைவி கேளென
வாலமார் களத்தின னருள்செய் கின்றனன். (௧௪௪)

வேறு.

முன்புநீ காண்டலின் மூலமா யுடையதோர
மன்பெருந் தொல்பொரு மருவியீ ருருவுறீஇ
யன்பினு லானைபோற் புணருமா லாகையா
னின்பெருந் தகவினை நினைகிலாய் நீயுமே. (௧௪௫)

காட்சியா லிதுசெயுங் காரணம் பெற்றநின்
மாட்சிதான் யாமலான் மற்றியா ருணர்குவா
ராட்சியா யுற்றதொல் லருமறைக் காயினுஞ்
சேட்செலா நிற்குநின் றிருவருட் செய்கையே. (௧௪௬)

என்னவே முகமனு லெம்பிரா னம்பிகை
தன்னொடே மொழியவத் தந்தியும் பிடியுமாய்த்
துன்னியே புணர்வுறுந் தூயசெய் தொழில்விடா
முன்னமே போன்றதான் முடிவிலாக் குடிலையே. (௧௪௭)

அக்கணத் தாயிடை யைங்கரத் தவனருண்
முக்கணால் வாயினான் மும்மதத் தாறுபாய்
மைக்கருங் களிறெனா மாமுகத் தவன்மதிச்
செக்கர்வார் சடையனோர் சிறுவன்வந் தருளினான். (கசஅ)

ஒருமையா லுணருவோ ருணர்வினுக் குணர்வதாம்
பெருமையா னெங்கணும் பிரிவரும் பெற்றியா
னருமையா னேவரு மடிதொழுந் தன்மையா
னிருமையா மீசனே யென்னநின் றருளுவான். (கசகூ)

மருளறப் புகலுநான் மறைகளிற் றிகழுமெய்ப்
பொருளெனப் படுமவன் புவனமுற் றவர்கடம்
மிருளறுத் தவர்மனத் திடர்தவிர்த் தருளவோ
ரருளுருத் தனையெடுத் தவதரித் துளனவன். (கருo)

வந்துமுன் னிருவர்தம் மலரடித் த[illegible]மிசைச்
சிந்தையார் வத்தொடுஞ் சென்னிதாழ்த் திடுதலுந்
தந்தையுந் தாயுமுன் றழுவிமார் புறவணைத்
தந்தமில் கருணைசெய் தருளினா ரவ்வழி. (கருக)

என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதன்
முன்னரே யுனதுதாண் முடியுறப் பணிவரே
லன்னர்தஞ் சிந்தைபோ லாக்குதி யலதனை
யுன்னலார் செய்கையை யூறுசெய் திடுதிநீ. (கருஉ)

சேயநன் மலர்மிசைத் திசைமுகன் மான்முத
லாயபண் ணவர்தமக் காருயிர்த் தொகையினுக்
கேயபல் கணவருக் கெத்திறத் தோர்க்குநீ
நாயகம் புரிதியா னல்லருட் டன்மையால். (கருங)

கானுறுங் கரடவெங் கயமுகத் தவனெனுந்
தானவன் வன்மையைச் சாடியே தண்டுழாய்
வானவன் சிறுமையு மாற்றியே வருகெனா
வானையின் முகவனுக் கைம்முக னருள்செய்தான். (கருச)

மோனமே குறியதா முதலெழுத் தருளிய
ஞானமா மதலைபா னண்ணவே பூதவெஞ்
சேனையா யினவருள் செய்துசிற பரையொடு
மானமா முகனொடு மமலன்மீண் டருளினான். (கருரு)

புங்கவர்க் கிறைவனும் புதல்வனை நோக்கிடா
நங்கடைத் தலையினி னாயகம் புரிகெனா
வங்கருத் தியொடிருத் தினனணிக் கோயிலுட்
சங்கரக் கடவுள்சுந் தரியொடு மருவினான். (கருசு)

தந்திமா முகமுடைத் தனயனங் கணுகியே
முந்துபா ரிடமெலா மொய்த்துமுன் சூழ்தர
நந்திவந் தனைசெய நான்முகன் முதலினோ
வந்தவந் தடிதொழ மகிழ்வொடே வைகினான். (கருஎ)

அன்னதற் பின்னரே யாயிரம் பெயருடைப்
பொன்னுலா நேமியான் புனிதனைக் காணிய
மின்னுதண் சுடர்விடும் வெள்ளிமால் வரைமிசைத
துன்னினு னுலயச் சூழன்முன் னணுகினுன். (கடுஅ)

அந்தியார் சடைமுடி யண்ணறன் னருளினு
னந்திதே வுய்த்திட நங்கையோர் பங்கனு
மெந்தைபா லெய்தியே யிணைமலர்த் தாடொழாப
புந்தியார் வத்தொடும் போற்றிசெய் தருளவே. (கடுகூ)

வேறு.

திருத்தனவ் விடைதனி னேமி யான்றனை
யிருத்தியென் றருள்புரிந் திடததின் மேவிய
வொருத்தியை நோக்கியொன் றுரைப்பங் கேளெனு
வருத்திசெய் யாடலொன் றருளிற் கூறுவான். (கசுO)

சூதினை யெம்மொடே பொருதி தோற்றனை
யாதியே னீபுனை யணிகள் யாவையு
மீதியால் வென்றனை யென்னி னெம்மொரு
பாதியாஞ் சசிமுதற் பலவுங் கோடியால். (கசுக)

என்னலு முமையவ ளிசைவு கோடலு
மன்னதொ ரெல்லையி னரியை நோக்கியே
தன்னிக ரில்லவ னிதற்குச் சான்றெனை
மன்னினை யிருதியான் மாய நீயென்முன். (கசுஉ)

பற்றிக லின்றியே பழவி னைப்பயன்
முற்றுணர்ந் துயிர்களை முறையின் வைப்பவன்
மற்றிது புகறலும் வனசக் கண்ணினு
னற்றிற மிஃதெனா நவின்று வைகினுன். (கசுங)

இந்தவா றுயிடை நிகழு மெல்லையிற்
சுந்தரன் முதலிய வுழையா சுற்றினே
ரந்தமில் பெருங்குணத் தாதி யேவலிற்
றந்தனர் காசொடு பலகை தன்னையே (கசுச)

அதுபொழு தண்ணலு மரியை நோக்கியிம்
முதிர்தரு கருவியை முறையின் வைக்கெனக்
கதுமென வைத்தலுங் கவுரி நீநமக்
கெதிருறு கென்றுமுன் னிருத்தி னுரோ. (கசுரு)

கவற்றினை முன்னரே யுய்ப்பக் கண்ணுத
லவற்றினைப் பின்னுற வவளு முய்த்தன
டவற்றியல் பல்லதோர் வல்ல சாரியா
லெவறறினு மேலையோ ரினிதி னுடினுர். (கசுசு)

பஞ்சென வுரைசெய்வர் பாலை யென்பரீ
ரஞ்செனு மொழிவரஞ் சென்ப ரன்றியுந்
துஞ்சலி னடமென்பர் துருத்தி யீதென்பர்
விஞ்சிய மகிழ்வொடு வெடியென் றோதுவார். (கசுஎ)

அடியிது பொட்டையீ தென்ப ரலைதென
முடிவில குழூஉக்குறி முறையின் மூக்துறக்
கடிதினிற் கழறினர் கவறு சிந்தினார்
நொடிதரு கருவிக ளெதிரி னூக்கினார். (௧௬௮)

வேறு.

ஏற்றா னவனெய் தியவின்னருள் யாவ தேயோ
தேற்றா டஃதி யார்க்கு மளப்பருஞ் செய்கையாலே
மேற்றா னெதிரா வுடனாடிய மெல்லி யற்குத்
தோற்றா னெடுமா லயனாடவுந் தோற்றி லாதான். (௧௬௯)

ஒன்றாய பரஞ்சுட ரோனுமை தன்னை நோக்கி
நன்றாயது நின்வலி யென்று நகைத்து நம்மை
வென்றாயலை தோற்றனை முன்னர் விளம்பு மாற்றா
னின்றாரொடு பூணு மெமக்கினி நேர்தி யென்றான். (௧௭௦)

மூன்றாமுல கங்களு மாருயிர் முற்று முன்ன
மீன்றாளது கேட்டலுந் தானிக லாட லஞ்சி
வான்றாவிய பேரடி மாயனை வல்லை நோக்கிச்
சான்றாமென வைகினை நீயிது சாற்று கென்றாள். (௧௭௧)

சொல்லு மளவிற் சுடர்நேமியன் சூது டைப்போர்
வெல்லுந் தகையோன் பரனென்று விளம்ப லோடு
நல்லுண்மை சொற்றாய் திறநன்றிது நன்றி தென்னாச்
செல்லுண்ட வைம்பா லுமையாறறச் சினம்பு ரிந்தாள் (௧௭௨)

பாராயலை கண்ணனு மாயினை பாலி னுற்றாய்
தேராதது வொன்றிலை யாவருந் தேர வொண்ணாப்
பேராதி யோனவை கூறினு நீயிது பேசலாமோ
காராமெய் யென்பர் மனமுங்கரி யாய்கொன் மன்னோ. (௧௭௩)

எம்பாலிது சொற்றனை யாதலி னென்று மாயை
யோம்பாவரு வாயுறு கைதவத் தூற்ற மிக்காய்
பாம்பாதி யெவ்வை பகர்ந்தாள்பகர் கின்ற வெல்லை
நாம்பா லுருவ மஃதங்க ணடைந்த தன்றே. (௧௭௪)

அவ்வா றவன்பா லணைகின்றதொர் போழ்தி லாழிக்
கைவா னவனு மதுகண்டு கவற்சி யெய்திச்
செவ்வா னுறழு முடியோனடி சென்று தாழா
வெவ்வா றெனக்கிவ் வுருநீங்கு மிசைத்தி யென்றான். (௧௭௫)

காலாய் வெளியாய்ப் புனலாய்க்கன லோடு பாராய்
மேலாகி யுள்ள பொருளாயெவற் றிற்கும் வித்தாய்
நாலாய வேதப் பொருளாகிநண் ணுற்ற நாதன்
மாமா யவனுக் கிஃதொன்று வகுத்து ரைப்பான். (௧௭௬)

என்பால்வரு மன்பி னிசைத்தனை யீது பெற்றாய்
நின்பால்வரு மின்னலை நீக்குவ னீங்கு கின்றாய்
தென்பாலுல கந்தனி லன்னதொர் தேய மீதின்
மூன்பா லவனம் மெனவொன்றுள மொய்ம்பின் மிக்காய். (௧௭௭)

ஆங்கே யினிநீ கடிதேகினை யன்ன கானிற
பாங்கே யொருதொன் மரகினறது பார்த்த துண்டே
யூங்கே பராரை யின்மேயபொங் தொன்றி னூடு
தீங்கே குறபபோய்ப் பெருயாதவஞ் செய்து சேர்தி. (கஎஅ)

அஞ்சே லவணீ யுறைகின்றதொர் காலை யானே
யெஞ்சே டவனுங் கயமாமுக னெய்து வானச்
செஞ்சே வகனுக் கெதிர்கொண்டனை சென்று காண்டி
மஞ்சே யனையா யுனக்கிவ்வுரு மாறு மன்றே. (கஎகூ)

வேறு.

என்னுமள விற்றொழுதி றைஞ்சியினி தேத்தி
யன்னதொர் வனததிடை யமர்ந்ததொன் மரத்திற்
றுன்னுவ னெனக்கடிது சொல்லுதலும் யாக்கு
முன்னவனு மேகென முராரியை விடுததான். (கஅ0)

விட்டிடுத லுங்கயிலை நீங்கினன் விரைந்தே
கட்டபூகின் மேதகைய காமனது தாதை
சிட்டாகள பயின்றுறை தெனுதபுல நண்ணி
மட்டொழுகு தொன்மர வனத்தினிடை யுற்றான். (கஅக)

நன்மதி யுடைப்புலவர் நால்வாகளு முய்யச்
சின்மய முணர்ததியரு டேவனமர் தாருத்
தன்மையது பெற்றுநனி தண்ணிழல் பரப்புத்
தொன்மர வியறகையத னிற்சிறிது சொல்வாம். (கஅஉ)

பசுந்தழை மிடைந்தவுல வைத்திரள் பரப்பி
விசும்பளவு நீடியுயர் வீழினிரை தூங்கத்
தசும்பனைய தீங்கனிக டாங்கியது தாளால்
வசுந்தரை யளந்தநெடு மாயவனை மானும். (கஅங)

அண்டநடு வாயவுல கேழினையு மங்கா
ளுண்டருளி யொல்லைதனி லோர்சிறுவ னாகிப
பண்டுகரி யோன்றுயில்கொள் பாசடை கடன்பாற்
கொண்டவட மன்னதொரு கொள்கைய துடைத்தால். (கஅச)

மழைத்தபசு மேனியது மாதிர வரைப்பில்
விழுத்தகைய வீழினிரை வீசுவட தாருத்
தழைக்குல மருப்புமிசை தாங்கியிடை தூங்கும்
புழக்கைகொடு மால்களிறு நாடுகரி போலும். (கஅரு)

பாசடை தொடுத்தபட லைப்பழு மரத்தின்
வீசிநிமிர் கின்றபல வீழின்விரி கற்றை
பூசலிடு கூளியொடு பூதகிரை பற்றி
யூசல்பல வாடியென வூக்கியன வன்றே. (கஅகூ)

ஆல்வரையின் வீழ்நிரைக ளாகக முடற்றப்
பால்வரையி னெற்றிவரு மாறிரவி பாகன்
காலுவரையி னேகவெழு கந்துகம தென்னு
மால்வரையின் வீசுபல மத்திகைய தொத்த. (கஅஎ)

ஆசறு தெனுதிசை யாளுமிறை யெண்ணில்
பாசமொடு நின்றதொரு பான்மையஃ தன்றேல்
வாசவனு மாகமிசை மாலிகையு மாமால்
வீசுபழு மாமர விலங்கலுமவ் வீழும். (௧௮௮)

மாநில மெலாந்தனை வழுத்தவரு மன்னற்
கூனமுறு காலைதனி லொண்குருதி வாரி
வானமுகில் கான்றனைய மாண்டதொன் மரத்தின்
மேனிதரு செய்யபல வீழின்விரி மாலை. (௧௮௯)

இம்பருறை யாலமிசை யெம்முருவு கொள்ளா
வம்புலவு தண்டுளவ மாயன்வரு மென்று
வெம்பணிக டம்பதியின் மேவுவன போலாந்
தம்பமென வேதரை புகுந்ததனி வீழ்கள். (௧௯0)

கடித்தன வெயிற்றினழல் காலவர வின்மே
னடிக்குமொரு கட்செவி நமைக்குறுகு மென்றுத்
துடித்தன வெனத்தலை துளக்கின வுரோமம்
பொடித்தன நிகர்த்துள புனிற்றினுறு புன்காய். (௧௯௧)

கிளாப்புறு கவட்டிலை கிடைத்தகிளை யாவு
மளப்பில்புகை சுற்றிட வனற்கெழுவு கற்றை
துளக்குறு தரக்குழுவு தோன்றியது போன்ற
விளக்கழ னிகர்த்துள விரிந்தமுகை யெல்லாம். (௧௯௨)

செருப்புகு சினத்தெதிர் செறுத்தமத வெற்பின்
மருப்பினை யொசிப்பவன் வரத்தினியல் காணு
விருப்பமலி வுற்றதன் விழித்தொகைக ளெங்கும்
பரப்பிய நிகர்த்துள பயங்கெழுவு பைங்காய். (௧௯௩)

வெள்ளிபடு மின்மதி விண்படர் விமானங்
கள்ளிபடு பால்கெழு கவட்டினிடை தேய்ப்பத்
துள்ளிபடு கின்றளவி லோர்திவலை தொத்தப்
புள்ளிபடு மாறுமுய லென்பர்புவி மேலோர். (௧௯௪)

காவதமொ ரேழுள பராரைகணிப் பின்றுற்
றுவறு முயர்ச்சிய தனுக்குமதி சான்றே
பூவுலக மெங்குநிழல் போக்கிநெடி தோம்புங்
கோவதென நின்றதுயர் கோளியெனுங் குன்றம். (௧௯௫)

அவ்வகைய தாருவினை நோக்கின னணைந்தான்
பவ்வநிற வண்ணறுயில் பாசடைக டம்மோ
டெவ்வகை சுமத்திரென வேவினவ வென்றே
வெவ்வரவி னுக்கிறைவன் பேசியது யான. (௧௯௬)

அந்தமில பெருங்கடல் வளாகமனைத் தந்தன்
னுந்தியி லடைந்ததென் வோங்கலெழு மொள்வாள்
வந்துறையி னிற்புகுவ தென்னவட தாருப
பொந்தினிடை யேயணுகி னுலகு பூத்தோன். (௧௯௭)

சததியுரை யாலரித ளிப்பணிய தான
வித்திற மிசைத்தன மினிச்சுரரை வாட்டு
மத்திமுக வெய்யவனை யாதியருள் செய்யும்
வித்தக முதற்புதல்வன வென்றமை யுரைப்பாம். (௧௯௮)

வேறு

முந்து வேழ முகத்தவ னேவலா
னொந்து சிந்தை நுணங்கிய தேவரு
மிந்தி ராதிபர் யாவரு மைங்கரன்
வந்த தோர்ந்து மகிழ்ச்சியின் மேயினார். (௧௯௯)

ஏத மின்மகிழ் வெய்திய விந்திர
னாதி யோர்கயி லாயத் தணுகியே
போத கததுப் புகர்முகப புங்கவன்
பாத முற்றுப பணிந்து பரவினார். (௨௦௦)

பரவல் செய்திடு பான்மையை நோக்கியே
கருணை செய்து கயமுகத தெம்பிரா
னுரையு நுங்கட் குறுகுறை யென்றலும்
வரன்மு றைப்பட வாசவன் கூறுவான். (௨௦௧)

தொல்லை நாண்மதி சூடிய சோதிபா
லெல்லை நீங்கும் வரந்தனை யெய்தினன்
கல்லென் வெஞ்சொற் கயாசுர னெனபவ
னல்லல் செய்தன னற்றவு மெங்களை (௨௦௨)

பின்னு நங்களைப் பீடற வைகலுந்
தன்னை வந்தனை செய்யவுஞ் சாற்றினா
னன்ன செய்தன மன்றியு மெங்கள் பால
மன்ன வேபுதி தொன்று வகுத்தனன். (௨௦௩)

கிட்டித் தன்முன் கிடைத்துழி நெற்றியிற்
குட்டிக் கொண்டு குழையிணை யிற்கரந்
தொட்டுத் தாழ்ந்தெழச் சொற்றன னங்கதும்
பட்டு பட்டுப பழியிடை மூழ்கினேம். (௨௦௪)

கறுத்து மற்றவன் கட்டுரைக் கின்றுசொன்
மறுத்த லஞ்சி வரும்பழி தன்னையும்
பொறுத்து நாணமும் போகவின் றந்தமுஞ்
சிறப்பி லாவச் சிறுதொழில் செய்தனெம். (௨௦௫)

ஆங்க வன்றன தாவியொ டெங்குறை
நீங்கு வித்திட நீவரு வாயென
வோங்க னல்கு முமையவ டன்னொரு
பாங்கர் வைகும் பராபரன் கூறினன். (௨௦௬)

ஆத லானின் னடைந்தன மெமமுடை
யேத மாற்றுதி யென்று வழிபடீஇ
மோத காதிகண் முன்னுற வோதிடப
பூத நாத னருளிற புகலுவான். (௨௦௭)

அஞ்ச லஞ்ச லவுணர்க் கரசனும்
விஞ்சு வேழ் முகமுடை வீரனைத்
துஞ்சு வித்துந் துயர்தவிப் போமெனக்
குஞ்ச ரத்திரு மாமுகன் கூறவே. (உ0௭)

இறைவ னேமி மிமையவ ரெம்முடைச்
சிறுமை நீங்கின செல்லலு நீங்கின
மறுமை யின்பமும் வந்தன*வாலினிப்
பெறுவ தொன்றுள தோவெனப் பேசினார். (உ0௯)

வேறு.

துன்பினை யுழந்திடு சுரர்க ளிவ்வகை
யின்புறு காலையி லீசன் றந்திடு
மன்புடை முன்னவ னானை மாமுக
முன்பனை யடிவது முன்னி னனரோ. (உ௧0)

பொருக்கெனத் தவிசினின் றெழுந்து பூதக
னொருக்குறு வாய்தலி னெய்தி நீள்கதி
ரருக்களி னிலகிய வசல னென்பவன்
றருக்கிய புயத்தின்மேற் சரண்வைத் தேறினான். (உ௧௧)

ஏறியங் கசலன்மே லிருந்து செல்லுழிக்
காரொடா மூகிலினங் கவைஇய காட்சிபோன்
மாறில்வெம் பூதர்கள் வந்து சுற்றியே
கூறின ரவன்புகழ் குலாய கொள்கையார். (உ௧௨)

சாமரை வீசினர் தணப்பில் பன்மணிக்
காமரு தண்ணிழற் கவிகை யேந்தினர்
பூமரு மதுமலர் பொழிதன் மேயின
ரேமரு பூதரி லெண்ணி லோர்களே. (உ௧௩)

துடியொடு சல்லரி தோமி றண்ணுமை
கடிபடு கரடிகை கணையஞ் சல்லிகை
யிடியுறழ் பேரிகை யிரலை காகளங்
குடமுழ வியம்பினர் கோடி சாரதர். (உ௧௪)

சிந்தையி லுன்னினர் தீமை தீர்ப்பவன்
வந்திடு காலையின் மகத்தின் வேந்தனு
மந்தர வமரரு மடைந்து போற்றியே
புந்திகொ ளுவகையாற போதன் மேயினார். (உ௧௫)

தாருவி னறுமலர் தத்தங் கைகொடு
பேரரு ணுதல்விழிப் பிள்ளை மீமிசை
சேருற வீசியே புடையிற் சென்றனர்
காரினை யடைதரு கடவுள் வில்லென. (உ௧௬)

விரைந்தெழு சாரத வெள்ள மெண்ணில
விரந்தன சூழ்தர விமலன் மாமகன்
பெருந்தரை யேகியே பிறங்கு தோன்முகன
புரந்திடு மதங்கமா புரமுன் போயினான். (உ௧௭)

ஆயது கயமுகத் தவுணற் கோடியே
வேயினர் புகறலும் வெகுட்சி கொண்டெழீஇ
யேயதன் படையெலா மெடுத்து மற்றவன்
சேயுயர் தனதுபொற் றேரி லேறினான். (௨௧௮)

பல்லிய மியம்பின பரிகள் சுற்றின
சில்லிகொ ளாழியந் தேர்கள் சூழ்ந்தன
வெல்லையி லிபநிரை யாவு மொய்த்தன
வல்லிய லவுணர்கள் வரம்பின் றீண்டினார். (௨௧௯)

ஆயிர வெள்ளமா மணிகஞ் சுற்றிடக்
காய்கனல் விழியுடைக் கயமு காசுர
னேயெனு மளவையி லேகிக் கண்ணுத
னாயகன் மதலைதன் படைமு னண்ணினான். (௨௨0)

நண்ணிய காலையி னவையில் பூதரு
மண்ணலங் கழலடி யவுண ருங்கெழீஇப்
பண்ணினர் பெருஞ்சமர் படையின் வன்மையால
விண்ணவர் யாவரும் வியந்து நோக்கவே. (௨௨௧)

புதிதெழு வெயிலுடன் பொங்கு பேரிரு
ளெதிர்பொரு மாறுபோ லினங்கொ டானவ
ரதிர்கழற் பூதரோ டமர்செய் தாற்றலர்
கதுமென வழிந்தனர் கலங்கி யோடினார். (௨௨௨)

ஓடின ரளப்பில ருயிரைச் சிந்தியே
வீடின ரளப்பிலர் மெய்கு றைந்துபி
னாடின ரளபபில ரகலு தற்கிடந்
தேடின ரளப்பிலர் தியக்க மெய்தினார். (௨௨௩)

ஒழிந்தன கரிபரி யுலப்பி றேர்நிரை
யழிந்தன வித்திற மவுணர் தம்படை
குழிந்திடு கண்ணுடைக் குறள்வெம் பூதர்கண்
மொழிந்திட வரியதோர் விசய முற்றினார். (௨௨௪)

உயர்தரு தானவ ருடைந்த தன்மையும்
புயவலி கொண்டுள பூதர் யாவருஞ்
சயமுடன் மேல்வரு தகவு நோக்கியே
கயமுக வவுணர்கோன் கனலிற் சீறினான். (௨௨௫)

உளத்தினில் வெகுண்டுசென் றொருதன் கைச்சிலை
வளைத்தன னத்துணை வளைதலுப் பேரமர்
விளைத்தனர் பூதர்க ளனையர் மெய்யெலாந்
துளைத்தனன் கணைமழை சொரிந்து துண்ணென. (௨௨௬)

ஆர்ந்தெழு பகழிக ளாகம் போழ்தலும்
வருந்தினர் திறலொடு வன்மை நீங்கின
ரிரிந்தனர் பூதர்கள் யாரு மோடினார்
புரந்தர னிமையவர் பொரும லெய்தவே. (௨௨௭)

கணநிரை சாய்தலுங் கண்டு மற்றது
மணிகிளர் கிம்புரி மருப்பு மாமுக
னிணையறு மசலன்மே லேகி வல்லையி
லணுகின னிபமுகத் தவுணர் கோனையே. (௨௨௮)

காருடை யிபமுகக் கடவுண் மேலையோ
னேருற வருதலு நின்ற தூதரைச்
சீருறு கயமுகத் தீய னோக்கியே
யாரிவண் பொருவதற் கணுகுற் றானென. (௨௨௯)

பரவிய வொற்றர்கள் பணைம ருப்புடைக்
கரிமுக முடையன்முக் கண்ண னைங்கர
னுருகெழு பூதன்மே லுறுகின் றான்சிவன்
பெருமக னாகுமிப் பிள்ளை தானென்றார் (௨௩௦)

அன்னது கேட்டலு மவுணன் சீறியே
பன்னரு கலைதெரி பாகை நோக்கிநம்
பொன்னிர தத்தினைப் புழைக்கை மாமுகன்
முன்னுறக் கடவுதி மொய்ம்ப வென்னவே. (௨௩௧)

கேட்டிடு வலவையோன் கிஞ்சு கக்குரத்
தாட்டிறற் பரியினந் தன்னின் மத்திகை
காட்டினன் றவறிலாக் கனகத் தேரினை
யோட்டின னைங்கரத் தொருவன் முன்னுற. (௨௩௨)

ஆயிடைக் கரிமுகத் தவுண னைங்கரத்
தூயனை யழல்விழி சுழல நோக்கியே
காயெரி யெயிறுகக் கறைகொள் பற்களாற்
சேயித ழதுக்கியே யினைய செப்புவான். (௨௩௩)

நந்தையென் யாதவ நோக்கி முன்னரே
தந்திடு பெருவரந் தன்னைத் தேர்கிலை
யுய்ந்தனை போதிநின் னுயிர்கொண் டென்னெதிர்
வந்தனை யிறையது மதியி லாய்கொலோ. (௨௩௪)

அன்றிநீ யமர்செய வமைதி யென்னினும்
வன்றிற லுனக்கிலை மைந்த வென்னெதிர்
பொன்றின ரலலது போர்செய் தென்னைமுன்
வென்றவ ரிவரென விளம்ப வல்லையோ. (௨௩௫)

தேன்பெறு தருநிழற் றிருவின் வைகிய
வான்பெறு தேவரான் மக்க ளாலவ
ரூன்பெறு படைகளா லொழிந்தி டேனிது
நான்பெறு வரத்திய னவிலக் கேட்டியேல். (௨௩௬)

பின்னரும் பல்வுள பெற்ற தொல்வர
மென்னைவெல் பவரெவ ரிந்தி ராதியர்
தன்னிடர் தணிப்பவர் போலச் சார்ந்தனை
யுன்னைவென் றன்னவ ருயிரு முண்பனால். (௨௩௭)

பொருதெனை வென்றனை போக வல்லையேல்
வருதியென் றுரைத்தலும் வானு லாவிய
புரமெரி டுத்தவன் புதல்வ னவ்விடை
யருளுட னொருமொழி யறைவ தாயினான். (உகூஎ)

வேறு.

கிரந்தப்பல் படையு நாளு நிலைபெற நினக்குத் தொன்னாள்
வரந்தரு கின்ற வெந்தை வலலைநின் னுயிரை வவ்விப்
புரந்தரன் முதலி னோர்க்குப் பொன்னினு டுதவி யன்னா
ரரந்தையு மகற்றிச் செலகென் றருளின னெனக்கு மன்றே. (உகூஅ)

உன்னுயிர் காததி யென்னி னுறதியொன் றுரைப்பன் கேண்மோ
பொன்னக ரதனை யிந்தப் புரந்தரன் புரக்க நல்கி
யிங்கிலத தரசு செய்தே யிருத்தியஃ திசையா தென்னி
னின்னுயிர் முடிப்பா னோர்ந்து நின்றன னினைவென் னென்றான். (உசo)

என்னலு மவுணன் பொங்கி யெரியுக விழிததுச் சென்றோர்
பொன்னெடுஞ் சிலையை வாங்கிப் பொருக்கெனப புரிநா ணேற்றி
மின்னுடை வடிம்பின் வாளி வீசலும் விமல னல்கு
முன்னவ னெழுவொன் றேந்தி முரணொடு சிந்தி நின்றான். (உசக)

பொற்றனு முரிந்து வீழப் புழைக்கையிற பிடித்த தண்டா
லெற்றின னனைய காலை யிபமுகத தசுர னென்போன்
மற்றொரு சிலையைக் கையால் வாங்கினன் வாங்கு முன்னர்ச்
செற்றன னதனை மைந்தன் றிசைமுகன் முதலோ ரார்ப்ப. (உசஉ)

திண்டிறல் பெற்ற வீரச் சிலைமுரிந் திட்ட பின்னர்த
தண்டமொன் றேந்தி யீசன் றனயனோ டெதிர்த லோடும்
விண்டது சோரும் வண்ணம் வெய்தெனப் புடைத்து மாயாக்
கண்டக னுரத்திற் றாக்கக் கையற வெய்தி நின்றான். (உசங)

நடுங்கினன் சிந்தை யொன்று நவில்கில னணைத் தாலே
யொடுங்கினன் கயவெஞ் சூர னுலந்தனன் போல நின்றா
னடும்பரி களிறு திண்டே ரணிகெழு தானை பாரிற்
படும்படி நினைந்து முன்னோன் பாசமொன் றுய்ததா னன்றே. (உசச)

விட்டவெம் பாச மங்கண் வெய்யதோர் சேனை முற்றுங்
கட்டிய் தாக மைந்தன் கணிச்சியு மேதற்பி னேவ
வட்டதா லதனை நோக்கி யாடின ரமரா தானை
பட்டன வுணர்ந்து தீயோன் பதைபதைத் துயிர்த்து நொந்தான். (உசரு)

முந்துதன் கரத்தி னுள்ள முரண்கெழு படைகள் யாவுஞ்
சிந்தின னவைக ளெல்லாஞ் சேரந்தன திங்கள் சூடு
மெந்தையை வலஞ்செய் தேததி யேவலி னியன்ற மாதோ
வெந்திற லவுணன் மேன்மேல வெகுளிததீக் கனல நின்றான். (உசசு)

நின்றவன் றன்னை நோக்கி நெடியபல் படைக ளேவிற்
சென றிவன் றன்னைக் கொல்லா சிவனருள் வரததின் சீரா
லின றினிச செய்வ தென்னென் றிறைவரை யுன்னி யெந்தை
தன்றிருக் கோட்டி லொன்று தடக்கையின் முரித்துக் கொண்டான். ()

தடக்கையி லேந்து கோடடைத தநதுயா மவுணன் மீது
விடுத்தலு மனையன் மார்பை வெய்தெனக் கீண்டு போகி
யுடற்படி மிசையே வீழ்த்தி யொல்லையி லோடித் தெண்ணீர்க்
கடற்படிந் தமலன் மைந்தன் கரத்திவ்வந் திருந்த தன்றே. (உ௪அ)

புயலினத் தொகுதி யொன்றிப் புவிமிசை வழுக்கிற் றென்னக்
கயமுகத் தவுணன் முந்நீர்க் கடலுடைந் தென்ன வார்த்திட்
டியலுடைத் தேர்மேல் வீழா வெய்த்தன னவன்றன் மார்பில்
வியனதித் தாரை யென்ன விரிந்தன குருதி வெள்ளம். (உ௪௯)

ஏடவி மூலங்கற் றிண்டோ ளிபமுகத் தவுணன் மார்பி
னீடிய குருதிச் செந்நீர் நீத்தமா யொழுகும் வேலைப்
பாடுற வருங்கா ஞென்றிற் பரத்தவி னதுவே செய்ய
காடெனப் பெயர்பெற் றின்னுங் காண்டக விருந்த தம்மா. (உ௫0)

ஆய்ந்தநல் லுணர்வின் மேலோ ரறிவினு மனுகா வண்ண
லீந்ததொல் வரத்தான் மாயா விபமுகத் தவுணன் வீழ்ந்து
விந்தனன் போன்று தொல்லை மெய்யொரீஇ விண்ணு மண்ணுந்
தீந்திட வெரிகண் சிந்தச் சீற்றத்தோ ராகு வானான். (உ௫௧)

தேக்கிய நதிசேர் கின்ற சென்னியன் செம்ம னன்னைத்
தாக்கிய வருத லோடுஞ் சாரதன் றொளி னீங்கி
நீக்கருந் துப்பின் றாக்கி நீநமைச் சுமத்தி யென்று
மேக்குயர் பிடரிற் றாவி யிற்றிருந் தூர்த லுற்றான். (உ௫௨)

மற்றது கண்ட தேவர் வாசவன் முதலோர் யாரு
மிற்றனன் கயவெஞ் சூர னெம்மிடர் போயிற் றன்றே
யற்றதெம் பகையு மென்னு வாடினர் பாடா னின்றார்
சுற்றிய கலிங்கம் வீசித் துண்ணென விசும்பு தூர்த்தார். (உ௫௩)

காமரு புயலின் றோற்றங் காண்டலுங் களிப்பின் மூழ்கி
யேமரு கலாப மஞ்ஞை யினமெனக் குலவு கின்றார்
தேமரு மிதழி யண்ணல் சிறுவனைத் தெரியா வண்ணம்
பூமலர் பொழிந்து நின்று புகழினைப் போற்ற லுற்றார். (உ௫௪)

காப்பவ னருளு மேலோன் கண்ணகன் ஞாலம் யாவுந்
தீப்பவ னேனைச் செய்கை செய்திடு மவனு நீயே
யேப்படுஞ் செய்கை யென்ன வெமதுளம் வெதும்பு மின்ன
னீப்பது கருதி யன்றோ நீயருள் வடிவங் கொண்டாய். (உ௫௫)

உன்னிடைப் பிறந்த வேத முன்பெரு நிலைமை தன்னை
யின்னதென் றுணர்ந்த தில்லை யாமுனை யறிவ தெங்ஙன
னன்னையும் பயந்தோன் றானு மாயினை யதனுன் மைந்தர்
பன்னிய புகழ்ச்சி யாவும் பரிவுடன் கேட்டி போலாம். (உ௫௬)

என்றிவ ரெகின மூரு மிறையொடு மிறைஞ்சி யேத்தி
நன்றிகொள் சிந்தை யோடு நகையொளி முகத்த ராகி
மன்றவர் குமரன் றன்பால் வந்தனர் சூழ்த லோடு
மொன்றிய கருணை நோக்கா லுலப்பிலா வருளு புரிந்தான். (உ௫௭)

உய்ந்தன மினிகா மென்று வோதிம முயர்த்தோன் வெள்ளைத்
தந்தியன் யாரும் போற்றிச் சார்தலுஞ் சமரின் முன்னம்
வெந்தொழி லவுணன் காய வீந்திடு பூதர் தம்மை
யெந்தையங் கினிது நோக்கி யெழுதிரோன் றருளிச் செய்தான். (உருஅ)

அவ்வகை யருள லோடு மரவென வெழுந்து போற்றி
மைவரை மிடற்றுப் புத்தேண் மைந்தனை வணங்கி யேத்தி
யெவ்வமில் பூதா யாரு மீண்டின ரினைய வெல்லாஞ்
செவ்விதி னுணர்ந்து கொண்டான் றேசிலா திருதர்க் கீசன். (உருகூ)

மந்திரி யோடுஞ் சூழ்ந்து வருந்தினன் புலம்பி மாழ்கி
யுய்ந்தனன் போவல் யானென் றுன்னியோர் பறவை யாகி
யந்தரத் திறந்த புள்ளோ டணுகியப் பதியை நீங்கிச்
சிந்தையிற் செல்லல் கூரச் செம்பொன்மால் வரையிற் சென்றான். ()

தாழுறு சார லூடு தபனனு முணராத் தாருச்
சூழலொன் றுண்டா லங்கட் சுருங்கையோ டிருந்த சேமப்
பூழையுட் புலம்பி யுற்றான் பொன்னக ரிறைக்கு மங்க
ணூழிவெங் காலிற் சூழு முலப்பில்பூ தாக்கு மஞ்சி. (உசுக)

வானவர் பகைஞ னந்த மதங்கமா புரியை நீங்கிப்
போனதோர் காலை மற்றைப் புகருமோர் புள்ள தாகித்
தானுறை யுலகு நண்ணித் தவமறைந் தல்ல தாற்றி
யூனுட லோம்பு வார்போ லொருப்படா யோகி னுற்றான். (உசுஉ)

பூதரு மன்ன வேலைப் புரிசைசூழ் நகரம் போகி
நீதியி லவுண ராகி நிறங்கிளர் படைகொண் டோரைக்
காதிவெஞ் சினப்போர முற்றிக் களத்திடை வருத லோடு
மாதிதந் தருளு மைந்த னவ்விடை யகன்று மீண்டான். (உசுங)

மீண்டுசெங் காட்டி லோர்சார் மேவிமெய்ஞ் ஞானத் தும்பர்
தாண்டவம் புரியுந் தாதை தன்னுருத் தாபித் தேதத்தி
பூண்டபே ரன்பிற் பூசை புரிந்தனன் புவியு ளோர்க்குக்
காண்டகு மனைய தானங் கணபதீச் சரம தென்பார். (உசுச)

புரமெரி படுத்தோன் றன்னைப் பூசனை புரிந்த பின்ன
ரெரிவிழி சிதறு மாகு வெருத்தமே லினிதி னேறிச்
சுரபதி யயன்விண் ணோர்க டொழுதுடன் சூழ்ந்து போற்ற
வரவொடு மாலோன் வைகு மாலமா வனத்திற புக்கான். (உசுரு)

ஆட திருவிருத்தம் க,சஎஉ.

---

வசனம்.

முற்காலத்தி லிந்திரன் அசுரேந்திரனைச் செயித்துப் போக மனுபவித்திருக்குங்காலத்தில், அசுரேந்திரன் மிகவும்வருந்தித் தனது குருவாகிய சுக்கிராசாரியை யடைந்து, இந்திரனோடு யான் போரிட்டுத் தோற்றேன், ஆதலால் யாங்கள் உய்யுமாறு அருள்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தான். அது கேட்ட சுக்கிரன் வருந்தாதே யெனத் தேற்றி, நீர்க்காலோசனைசெய்து, பிரமபுத்திரனுன வசிஷ்ட

னது வமிசத்திற்றோன்றிய மாகதனெனு முனிவன் மோட்சமடையுமாறு தவத்தைச் செய்கின்றான். அவனிடத்து ஒரு அசுரகன்னியை யனுப்பிப் புணரச்செய்தால் கஜமுகனென்பா னொருவன் உங்கள் தலைவனைகப் பிறந்து, தவத்தினைச்செய்து சிவபெருமானிடத்து வேண்டிய வரங்களைப் பெற்று, தேவர்களை யடக்கி யெல்லா உலகத்திற்கும் அரசனுவானென்று கூறினான். அது கேட்ட அசுரேந்திரன் இருக் கையையடைந்து விபுதையென்னும் அசுரக்கன்னியை மாகதமுனியைக்கூடிப் புத் திரனைப் பெறுமாறு அனுப்பினான். அவள் மேருமலையின் தென்புறத்திற் றவஞ் செய்யும் மாகத முனியினிடஞ் சென்று அவனது தவத்தினைக் கண்டஞ்சி, அவன் தனக்குக் கணவனாமாறு அவனெதிரே வெகுகாலந் தவஞ்செய்திருந்தாள். அவ் வாறு தவஞ்செய்திருக்குங் காலத்தில் ஒருநாள் பெட்டை யானையோடு ஆண் ஆனை புணருவதை மாகதமுனிவன் கண்டு தானும் அவ்வாறு புணரவேண்டுமென்று வருந்தினான். அதனைக் கண்ட அசுரமங்கை மகிழ்ந்து, இதுதான் நல்ல சமயமெனறு அவனிடஞ்சென்று வணங்கினாள். அவளைக் கண்ட முனி நீயார் வந்தகாரியமென்னவென்று கேட்க, அவள் யான் அசுரகன்னி நீகணவனாகவேண்டு மென்று வந்தேனென்று கூறினாள். முனிவன் மகிழ்ச்சியடைந்து, தம்மிருவரதுதவத் தின் தன்மையை வியந்து, நீ பெண்யானைவடிவங்கொள்ளென்றுகூறித் தான் ஆண் யானை வடிவங்கொண்டு அவளைப் புணர்ந்தான். அவ்வாறு புணர்ந்தபோது கஜமுக சுரன் பிறந்தான். பிறந்த வுடனே தனது கையிற் பிடித்த கத்தி கேடயத்தைச் சுழற்றி மலைகளைத் தூளாக்கி ஆரவாரித்துத் திரிந்தான். பிறகு அப்பெண்யானை யின் ரோமத்திருந்து அனேக அசுரர்கள் பிறந்தார்கள். அவர்களோடு கயமுகன் ஆரவாரஞ்செய்தலைக்கண்ட விபுதையும் மாகதனும்பயந்து பழையஉருவைக்கொண் டார்கள். பிறகு முனிவன் ஊழ்முறையை நினைந்து வருந்தி, யான் உலகத்திற்குத் துன்புறுவித்தேனென்று கூறி விபுதையை நோக்கி நீ விரைந்தோடிப்போவெனக் கூறினான். அவள் அவனை வணங்கி மீண்டு, அசுரேந்திரனை யடைந்து நடந்தவற் றை விபரமாய்க் கூறினாள்.

அது கேட்டு மகிழ்ந்த அசுரேந்திரன் சேனைகளோடு உலகை வருத்தித் திரி யும் கசமுகனிடத்துச் சுக்கிரனையனுப்ப, அவன் கஜமுகனை யடைந்து நான் உன் குலகுரு; என்பேர் சுக்கிரன். நான் சகலசாஸ்திரபண்டிதன் அசுரேந்திரனால்அனுப் பபட்டு இங்கு உனக்கு உபதேசஞ்செய்யவந்தேன். கயமுகனே நீ அசுரர்க்குரிய செய்கைகள் முற்று மறியாது வீணாக நாள்களைக்கழிக்கின்றாய். நீ சிவனைநோக் கித் தவஞ்செய்து பலவரங்களை பெற்றுத் தேவர்கள் ஊழியஞ்செய்யும்படி உலகத் திற்கு அரசனாயிருத்தல் வேண்டுமென்றுகூறினான். அதுகேட்ட கயமுகன் என க்குத் தவஞ்செய்யும் மார்க்கத்தை உபதேசிக்கவேண்டுமென்று கூற, அம்மார்க்கத் தைச் செவ்வையாக உபதேசித்துத் தவஞ்செய்ய அனுப்பினான். அவன் மேருவின் ஒரு புறத்திற்சென்று அனேக ஆயிரவருடம் சிவபெருமானை, நோக்கிக் கடுந்தவஞ் செய்தான். அதனைக்கண்ட தேவர்கள் மிகவும் வருந்தினார்கள். அசுரர்கள் மிக வும் மகிழ்ந்து மலர்மாரி சொரிந்தார்கள். பிரமனும் இவனது தவத்தைக்கண்டு வியந்தான். இவ்வாறு கடுந்தவம்புரியுங்காலத்தில், அவனெதிரே சிவபெருமான் இடபவாகனரூடராய் எழுந்தருளிவந்து நீ விரும்பிய வரத்தைப்பெற்றுக்கொள்ளெ ன்று கூறியருளினார். அவன் அவரைவணங்கி ஆண்டவனே திருமால் முதலிய எல்லாத்தேவர்களும் போரில் தோற்றோடவேண்டும், யான் எவ்வித ஆயுதங்களி னாலேயும் சாகாதிருக்கவேண்டும்; தேவர்களாலும், மானுடராலும், அவுணராலும், மற்றோராலும், விலங்கினங்களாலும் யான் சாகாதிருத்தல்வேண்டும்; எனக்கொத்

தவனாலும் சாகாதிருக்கவேண்டும்; யான் எவ்வுலகத்தையும் அரசுசெய்யவேண்டும்; ஒருசமயம் பகைவரால் இறப்பேனாயின் மீண்டும் பிறவாதிருக்கவேண்டும் என்று பிரார்த்திக்கச், சிவபெருமான் அவ்வாறேதந்து மறைந்தருளினார். அதனையுணர்ந்த அசுரேந்திரனும் சுக்கிரனும், கயமுகாசுரனையடைந்து, ஜயமுண்டாகுக என வாழ்த்தி அவனோடு இருந்தனர். அக்கொடியன், இந்திரன்முதலியோரை வென்று மண்ணுலகத்திற்குவந்து அசுரதச்சனைநோக்கி, இந்நாவலந்தீவின், தென்பாகத்தில் யான் வசிப்பதற்கு ஒரு நகரமுண்டாக்குவாயெனக்கூற, அவன் அவ்வாறே சிறந்தநகரமுண்டாக்க, அதற்குச் சுக்கிரன் மதங்கபுரமெனப் பேரிட்டான். அந்நகரத்தைக்கண்ட கயமுகன் சந்தோஷமடைந்து அதிலிருந்து அரசாணைசெய்தான். அவ்வாறு வருங்காலத்தில் அசுரேந்திரன் மகளான விசித்ராங்கியென்பவளை மணம்புரிந்ததோடமையாது பலதெய்வமாதர், அசுரமாதர்களையும், மனைவியராகக்கொண்டு தேவர் அசுரர்யாவரும் தன்னைவணங்க எழுலகங்களிலும் தனது ஆக்ஞைசக்கிரஞ்செல்ல அரசாண்டுவந்தான். சுக்கிரனும் அசுரேந்திரனும் மந்திரத்துணைவராகவும், காமதேனு முதலியன ஊழியஞ்செய்யவும் அரசாளுங் கயமுகன் ஒருநாள் தன்னெதிரில்வந்த இந்திரன் முதலிய தேவர் கூட்டத்தை நோக்கி, தேவர்களே! நீங்கள் ஒவ்வொருநாளும் இவ்விடத்திற்கு வந்தவுடனே தலையில் மூன்றுதரங் குட்டிக்கொண்டு, கைகள் காதுகளிற் பொருந்த தோப்புக்கரணம் போடவேண்டுமென்று கட்டளையிட, அதுமுதல் அவர்கள் அவ்வாறேசெய்து மிகவும் துன்பக்கடலுள்மூழ்குவதைப் பிரமனிடத்தும் விஷ்ணுவினிடத்துமிந்திரன் சொல்லிவருந்த அவ்விருவரும் இந்திரன் முதலிய தேவர்களோடு திருக்கைலாயமலையையடைந்து நந்திதேவரது உத்தரவுபெற்று உட்சென்று சிவபெருமானது திருவடிகளை வணங்கித்துதிக்க, சிவபெருமான் விஷ்ணுவைநோக்கி நீதேவரோடு வருத்தமடைந்து வந்தகாரணம் யாதென்றுகேட்டார். அப்பொழுது திருமால் சிவபெருமானைப்பார்த்துக் கயமுகனென்னுமசுரன் கொடாததவவலிமையால், தேவர்களெல்லாரையுந் துன்பப்படுத்துகிறான், அவனை ஒழிப்பதற்கு எங்களுக்குச் சக்தியில்லை; தேவரீர் அவனையொழித்தருளல்வேண்டுமென்று பிரார்த்திக்க, சிவபெருமான் நாம ஒரு புதல்வனையீந்து கயமுகாசுரனை வெற்றிபெற்றுவரும்படி பின்னர் அனுப்புவோமென்றுகூற, அதனைத் திருமால் முதலிய தேவர்கள் சிரசாசவகித்து ஆடிப்பாடித் தம்மருகில் நின்றவர்களைநோக்கி நீங்கள் உங்கள் நகரங்களுக்குப்போங்களென்று கட்டளையிட்டுச் சிவபெருமானது திருவடியைவணங்கி விடைபெற்றுச்சென்றனர். அவர்கள் சென்றபிறகு சிவபெருமான் பார்வதியோடு அவ்விடத்தினின்றுநீங்கி ஓர் சோலையையடைந்து அங்குற்ற சித்திரமண்டபத்துள் எழுந்தருளினார். அப்போது உமாதேவியார் அம்மண்டபத்துள்ள சித்திரங்களை ஆசையோடு பார்த்துவரும்போது, சிவபெருமானது கட்டளையால் அச்சித்திரங்களின் நடுவில் பிரணவமானது பிடிகளிறென்னும் இரண்டு யானையுருவங்கள்போலத் தோன்றிற்று. அவ்யானைகளை உமாதேவியார் பார்த்தருள உடனே அவை புணர்ச்சிசெய்ய முயற்சித்தன. அவற்றைக்கண்டு பார்வதி வியப்புற்று, தனதுபக்கத்திற்பொருந்திய சிவபெருமானைநோக்கி, பிரணவாட்சரம் யானைவடிவங்கொண்டு புணருவதென்னை? அதனைக் கூறவேண்டும் என்று பிரார்த்திக்க, சிவபெருமான் நீ முன்னே பிரணவாட்சரத்தைப் பார்த்தமையால், அது நின்னருளால் யானைவடிவங்கொண்டு புணர்கின்றது. இது உனது பெருந்தகைமையாகும்; இம்மாட்சிமையை நாமன்றி வேறொருவரறியாரென்று கூறியபோது, குடிலையான அப்பிரணவாட்சரம் அவ்வுருவங்களைக்கொண்டு புணர்ந்த தொழிலைவிடுத்து முன்புபோ

லிருந்தது. அப்போது அங்கே ஐங்கரத்தனை விநாயகர் மூன்றுகண்ணும், நால்வாயும், மும்மதமும், யானைமுகமும், சந்திரனையணிந்த சடாபாரமுமுடைய ஒரு சிறுவனாக அவதாரஞ்செய்தார். அவதாரஞ்செய்து தமது தாய்தந்தைகளான உமாமகேசுவரரை வணங்க, அவர்கள் வாரியெடுத்துத் தழுவி மார்பிலணைத்து, யாவராயினும் எக்காரியத்தையுஞ் செய்வதற்கு முன்னே உனது திருவடியை வணங்குவாராயின் அவர்கள் காரியத்தை அவர் மனம்போல முடிக்கக்கடவாய், உன்னை வணங்காதவர் காரியத்தை இடையூறு செய்யக்கடவாய், திருமால் முதலிய தேவர்களுக்கு நாயகனாக இருக்கக் கடவாய், கயமுகாசுரனை வென்று திருமாலின் சிறுமையை யொழித்து வரக்கடவாயென்று அருள்செய்து, அவரோடு செல்லுவதற்குப் பூதப்படைகளைச் சிருட்டித்துக்கொடுத்து, அவ்விநாயகமூர்த்தியோடு தமது கோயிலுக்கெழுந்தருளித் தமதுபுத்திரனைநோக்கி, நமதுகடைத்தலைவாயிலில் நாயகனாயிருந்து யாவருக்கும் அருள்செய்யக் கடவாயென்று உட்சென்று இருந்தார்கள். பிறகு விநாயகர் பூதப்படைகள் நெருங்கியிருக்க நந்தி முதலானோர்வணங்க அவ்விடத்தெழுந்தருளி யிருக்கும்போது, விஷ்ணு சிவபெருமானைத் தரிசித்தற்பொருட்டுக் கயிலை மலையையடைந்து நந்தியினருளால் உட்சென்று, சிவபெருமானை யன்போடு வணங்கினார். அப்போது சிவபெருமான் மாயோனை யோராசனத்திலிருக்கச்செய்து, உமாதேவியை நோக்கி நீ எம்மோடு சூதாடக்கடவாய், நீதோற்றால் உன் ஆபரணமெல்லாவற்றையுந் தரல்வேண்டும், வெற்றிபெற்றால் எமது ஒருபாதியாயுள்ள சந்திரன் முதலானவற்றைப் பெற்றுக்கொள்ளக் கடவாயென்று கூற, அதற்கு உமாதேவி சம்மதிக்க, இருவரும் விஷ்ணுவைச் சாட்சியாக வைத்துச் சூதாடினார்கள். அப்படி யாடும்போது சிவபெருமான் உமாதேவியாருக்குத் தோற்றனர். பிறகு சிவபெருமான் உமாதேவியை நோக்கி நீதோற்றாயாதலின் உனது ஆபரண முதலியவற்றையெல்லாம் கொடுக்கக்கடவாயென்ன, அதனைக் கேட்டவுடனே உமாதேவி அஞ்சி விஷ்ணுவைநோக்கி இதற்கு நீசாட்சியாயிருந்தனையாதலால், உண்மையைக் கூறக்கடவா யென்றார். அதற்கு விஷ்ணு சிவபெருமானே வென்றாரென்றுகூற, உமாதேவி மிகவுங் கோபங்கொண்டு நீ மலைப்பாம்பாகவெனச் சபித்தாள். சபித்தபடி பாம்புருவமுண்டாகிற சமயத்தில் விஷ்ணு சிவபெருமானைவணங்கி இவ்வுருவம் எப்படி நீங்கும் என்று வினவ, அதற்குச் சிவபெருமான் தக்ஷிண தேசத்திலுள்ள ஆலவனம் உனக்குத் தெரியுமல்லவா, அவ்வனத்தில் ஒரு பெரிய வாலமரமிருக்கிறது. அம்மரத்தின் பொந்திலிருந்து தவஞ்செய்திருப்பாயாயின், அவ்விடத்து எமது மைந்தனான விநாயகன் வருவான். அவனுக்கெதிர்சென்றுகாண்பாயாயின் இப்பாம்புருவம் நீங்குமென்றுகூற, திருமால் சிவபெருமான் கட்டளைப்படி தவஞ்செய்துகொண்டிருந்தார். இதுநிற்க; கயமுகனால் வருந்திய இந்திரன் முதலியோர் விநாயகப் பெருமான் அவதரித்ததை யறிந்து மகிழ்ந்து கயிலைக்குச்சென்று விநாயகக் கடவுளை வணங்கித் துதித்தார்கள். அதனைநோக்கி விநாயகப்பெருமான் உங்கள் குறையை யுரையுங்களென்றுகூற, இந்திரன் கயமுகனாலுண்டான துன்பங்களையெல்லாம் விஸ்தாரமாகக்கூறி எங்கள் குறையை நீக்குதற்குத் தேவரீர் வருவீரென்று சிவபெருமான் அருளியபடி உம்மையடைந்தோம். எங்கள் துன்பத்தை நீக்கவேண்டுமென்று மோதகமுதலியவற்றை எதிரேகொண்டுவந்து குவிக்க, விநாயகர் கருணைகூர்ந்து இந்திரனைநோக்கி அஞ்சாதே! அஞ்சாதே!! கஜமுகனை அழித்து, உங்கள் துன்பத்தை நீக்குகின்றோமென்றுகூறி, கயமுகனையழிக்கத் திருவுளத்தெண்ணி வெளியேவந்து அசலன் என்பவன்பேரில் பாதம்வைத்தேறிப் பூதக்கூட்டங்கள் புடைசூழ்ந்துவர, கயமுகாசுரன் அரசாளும் மதங்கமபுரத்துக்குச் சென்ற

ள். அதனை ஒற்றராலறிந்த கயமுகாசுரன் ஆயிரம்வெள்ளம் அசுரப்படைகள் சூழ்ந்துவரப் பொற்றேரேறி விநாயகப்பெருமான் சேனைக்கெதிரே சென்றான்.

அப்போது இருதிறப்படைகளும் உக்கிரமாய்ப் போர்புரிந்தன; அவ்வாறு போர்புரியும்போது அசுரப்படைகள் தோல்வியடையப் பூதப்படைகள் வெற்றிபெற்றன. அதனைக்கண்ட கயமுகன் மிகவுங்கோபங்கொண்டு வில்லைவளைத்து பாண மழைசொரிந்து உக்கிரமாகப்போர்செய்து பூதர்களைச் சின்னபின்னமாக்கிப் பின்னிட்டு ஓடும்படிச்செய்தான். அதனைக்கண்ட விநாயகமூர்த்தி கயமுகனெதிரேசென்று போர்செய்யவர அதனைக்கண்ட கயமுகன் தூதரைநோக்கி, போர் செய்யும்படி வருபவன்யார் என்றுகேட்க, இவன் சிவகுமாரன் என்று தூதர்கள் சொன்னார்கள். அதனைக்கேட்ட கயமுகன் கோபித்துத் தேரினை விநாயகரெதிரே போர்செய்யச் சாரதியால் ஓட்டச்செய்து, நெருங்கி விநாயகரைக் கோபத்தோடுபார்த்து உன்தந்தை யெனக்குத்தந்த வரத்தினை நீ யறியவில்லை போலும், நீ உன் உயிரைக்கொண்டு பிழைத்துப்போகக்கடவாய், என்னை வெல்லத்தக்கவர் உலகத்திலொருவருமில்லை, என்னை போரிட்டு வெலவல்லையாயின் வரக்கடவாய் என்றுகூறினான். அதுகேட்ட விநாயகர் கருணையோடு கயமுகனை நோக்கி நினக்கு வரந்தந்த எமதுதந்தையார் விரைவாக உன்னைக்கொன்று இந்திராதியோர் துன்பத்தை நீக்குவாயென எனக்கு அருள்செய்திருக்கின்றார். உன்னுயிரைக்காக்க விருப்பமுண்டாயின் உறுதி வார்த்தையொன்று கூறுகின்றேன் கேட்கக்கடவாய்; பொன்னுலகத்தை இந்திரனுக்குக் கொடுத்து இந்நில உலகத்தில் அரசு செய்திருக்கக்கடவாய், இதற்குச் சம்மதியில்லையாயின் உன்னை யழித்துவிடுவேன்; உன் கருத்து யாது என்று கூறினர். அதுகேட்ட கயமுகன் மிகவுங் கோபித்துப் பார்த்துச் சென்று தனது பெரிய வில்லை வளைத்து விரைவாக நாணேற்றிப் பாணப் பிரயோகஞ் செய்ய அவற்றை விநாயகப் பெருமான் ஒரு எழுவாயுதத்தால் சிதறவடித்து அவன் பிடித்த விலலொடிந்து விழும வண்ணம் தும்பிக்கையிற்பிடித்த தண்டாலடிக்க, அப்பொழுது அவன் மற்றொரு வில்லெடுத்து வளைத்துப் பிரமன் முதலியோர் ஆரவாரிக்கும்படி போர்செய்யத்தொடங்க அதனையுமிழந்து, விநாயகரது தண்டத்தால்மார்பிலடிப்பட்டு மிகவும்வருந்தி இறந்தவனை யொப்பநின்றான். அப்போது விநாயகர் தனதுபாசத்தால் அசுரசேனைகளைக்கட்டி மழுவாயுதத்தாற் கொல்ல, அதுகண்ட கயமுகவன் தன்கையிலுள்ள தேவாஸ்திரங்களனைத்தையும் விநாயகர்மீதுவிடுத்தான். அவையாவும் விநாயகரை வலமவந்து கட்டளைக் குட்பட்டு நின்றன. பிறகு விநாயகர் இவன் ஆயுதமொன்றாலுஞ் சாகானென்றறிந்து, தனது தந்தங்களிலொன்றை கரத்தாலொடித்து அதனைக் கயமுகன் மீதுவிட, அது விரைந்துசென்று அவன் மார்பைப்பிளந்து அவனுடலைப் பூமியிற்றள்ளி, கன்னீர்க்கடலின்மூழ்கி விநாயகரது திருக்கரத்தில் வந்திருந்தது. சிவபெருமானது வரத்தினாலே அக்கயமுகன் இறவாதுகிப் பழையவுருவைவிடுத்துப் பெருச்சாளியுருவங்கொண்டு விநாயகர்மீது போர்செய்யவந்தான். அப்போது விநாயகப்பெருமான், அசலனென்னும பூதனது தோளினின்றும் நீங்கி அதன் முதுகின்மேற்றாவி வீற்றிருந்து அதனை வாகனமாகக்கொண்டனர். * அதனைக் கண்ட இந்திரன் முதலிய தேவர்கள் சந்தோஷக்கடலின்மூழ்கி விநாயகப்பெருமான்கீர்த்திப்பிரதாபங்களைப் பாடித்துதித்து அவரைச்சூழ்ந்த உடனே அவர்களுக்குக் கருணைசெய்து போரில் இறந்த பூதர்களை யெழுப்பியருளினர். இதை யறிந்த அகரேந்திரன் சுக்கிரனுடன் ஆராய்ந்து வருந்திப்புலம்பி ஒருபறவை வடிவங்கொண்டு, அம்மதங்கமாபுரத்தைக்கடந்து மேருமலையையடைந்து, ஒரு

மரப்பொந்திற்புகுந்து புலம்பிக்கொண்டிருந்தான். சுக்கிரனும் ஒரு பறவைவடிவந்தாங்கித் தன்னுலகத்தையடைந்து யோகஞ்செய்திருந்தான். அப்பொழுது மதங்கமாபுரத்திலுள்ள அசுரர்களைப் பூதப்படைகள்சென்று கொன்று விநாயகப்பெருமானையடைந்தன. பிறகு விநாயகப்பெருமான் திருச்செங்காட்டின் வடபுறத்திற்சென்று தங்கிச் சிவபெருமானது திருவுருவைப் பிரதிட்டைசெய்து பேரன்போடுபூசித்து ஆகுவாகனமேறி இந்திரன் முதலிய தேவர்கள் துதிக்கப் பாம்புருவாகத் திருமாலிருக்கும் ஆலவனத்தையடைந்தனர். கணபதிபூசித்த அத்தலம் கணபதீச்சரமென்று சொல்லப்படுகின்றது.

கயமுகனுற்பத்திப்படலம் முற்றிற்று.

---

## அனந்தன்சாபநீங்குபடலம்.

புக்கதொரு பொழுதிலங்கண் முந்தோ ராலம்
பொந்தினிடை யிருந்தமலன் பொற்றா ளுன்னி
மிக்கதவம் புரிமாலங் கரத்து முன்னோன்
மேவியது மனங்கொண்டு விரைவி னங்கே
யக்கணமே யெதிர்சென்று வழுத்திக் காண
வம்மையளித் தருள்சாப மகற லோடு
சக்கரமே முதலியவைம் படைக ளேந்தித
தனாது தொல்லைப் பேருருவந் தன்னைப் பெற்றான். (க)

மாலோன்றால் உருவுதன்பால் மேவக் கண்டு
மகிழ்சிறந்து சிவனருளை மனங்கொண் டேத்தி
மேலோன்றன் முன்னரெய்தி வணக்கஞ் செய்து
மீண்டுமவன் றனைத்துதித்து விமல நீயென்
பாலோங்கு பூசனைகொண் டருளல் வேண்டும்
பணித்தருள்க வாதிபரா பரத்தின் பாலாய்
மூமேலோங்கா ரபபொருளா யிருந்தாண் முன்ன
மொழிந்தருள்சா பந்தொலைத்த முதல்வ வென்றான். (உ)

ஐங்கரன்றான் மாலுரைத்த மாற்றங் கேளா
வன்னதுசெய் கெனவருளி யங்கண் மேவக்
கொங்குலவு மஞ்சனநீர் சாந்த மாலை
கொழும்புகையே முதலியன கொண்டு போந்து
சங்கரனார் மதலைதனை யருச்சித் தன்பாற்
றுவறுபண் ணியம்பலவுஞ் சால்பிற் றந்து
பொங்கியபா லவியினொடு முன்ன மார்த்திப்
போற்றியே யிஃதொன்று புகல லுற்றான். (ங)

வின்னுமம் புகல்கின்ற திங்க டன்னின்
மிக்கமதி தனிலாறும் பக்க மாகு
மிந்நாளில் யானுன்னை யருச்சித் திட்ட
வியற்கைபோல யாருமினி யிதி லாவுன்

பொன்னூரு மலரடியே புகலென் றுன்னிப்
பூசைபுரிந் திடவுமவர் புன்க ணெல்லா
மந்நாளே யகற்றிநீ யுலவாச் செல்வ
மளித்திடவும் வேண்டுமிஃ தருள்க வென்றான். (௪)

மாயனுரை கேட்டவுநீ மொழிந்தற் றாக
மகிழ்ந்தனின் பூசையென மதித்துக் கூறி
யாயவனு மயன்முதலா வுள்ளோரா யாரு
மன்பினொடு வாழ்த்திசைப்ப வாகு வென்னுந்
தூயதொரூர் தியிலெய்திக் கணங்க ளானோ
சூழ்ந்துவரக் கயிலையெனுந் துகடீர் வெற்பி
னேயமுடன் போந்தானை வணக்கஞ் செய்து
நீடருள்பெற நேதொல்லை நிலயத் துற்றான். (ரு)

வேறு.

அற்றை நாளி லரியய னாதியோர்
நெற்றி யங்க ணிமலன் பதங்களின
முற்று மன்பொடு மும்முறை தாழ்ந்தருள்
பெற்று நீங்கினா பேதுற னீங்கினர். (௬)

கரிமு கம்பெறு கண்ணுதற் பிள்ளைதாள்
பரவி முன்னம் பணிந்தனர் திறபுரி
யருள்பு ரிந்திட வன்னதொர் வேலையிற
பரிவி னொலொா பரிசினைக் கூறுவார். (௭)

எந்தை கேண்மதி யெம்மை யலைத்திடுந்
தந்தி மாமுகத் தானவற் செற்றியா
துய்ந்து நாங்க ளுனதடி யோமிவண்
வந்து நல்குகைம மாறுமற றிலலையே. (அ)

நென்னல் காறு நிகரில கயாசுரன
முனை ராறறு முறைபபணி யெந்தைமுன்
னின்ன நாட்டொட் டியற்றுதும் யாமென
வன்ன செய்திரென் றானரு ணீரமையான். (௯)

இதநி றமபடு மெல்லையி னின்றிடு
மத்த லைசசுரா யாவரு மன்புறீஇக
கைதத லதனைதக கபிததம தாக்கியே
தததத மததகந் தாக்கினா மும்முறை. (௧0)

இணைகொள கையை யெதிரெதிர் மாற்றியே
துணைகொள வாரருழை தொட்டனர் மும்முறை
கணைகொள் காதுங் கவானுஞ் செறிந்திடத்
தணிவி லன்பொடு தாழ்ந்தெழுந் தேததினர். (௧௧)

இணங்கு மன்புடன் யாருமி தாற்றியே
வணங்கி நிற்ப மகிழ்சிறந் தான்வரை
யணங்கின் பாமக னவ்விய னேகியே
கணங்க ளாாததன கார்க்கட லாமென. (௧௨)

நின்ற தேவர் நிமலனை நோக்கியே
யுன்றன் முன்னை மூலகுளர் யாவரு
மின்று தொட்டடைமைப் போலப் பணிமுறை
நன்று செய்திட நல்லருள் செய்கென; (௧௩)

கடனி றந்துக் கயமுக னத்திற
நடைபெ றும்படி நல்கி யமரர்கோ
னெடிய மாலய னின்றுள ருக்கெலாம்
விடைபு ரிந்து விடுத்தன னென்பவே. (௧௪)

அம்பு யக்க ணரியயன் வாசவ
னும்ப ரவ்வரை யொல்லையி னீங்குறுத்
தம்ப தந்தொறுஞ் சார்ந்தனர் வைகினார்
தும்பி யின்முகத் தோன்ற லருளினால். (௧௫)

மூந்தை வேத முதலெழுத் தாகிய
வெந்தை தோற்ற மியம்பின மிங்கினி
யந்த மில்குண தாண்டவைக் கோர்குணம்
வந்ததென் னென்றி மற்றது கேட்டிநீ. (௧௬)

வேறு.

நற்குண முடையநல் லோரு நாடொணுச்
சிற்குண னுகுமச் சிவன் பராபரன்
சொற்குண மூவகைத் தொடர்பு மில்லதோர்
னிர்க்குண னவன்செய னிகழ்த்தற் பாலதோ. (௧௭)

பரவிய வுயிர்க்கெலாம் பாச நீக்குவா
னருளின னுகியே யமலன் மாலயற்
கிருதொழின் முறையினை யீந்து மற்றவைக்
குரியன குணங்களு முள்ள வாக்கினன். (௧௮)

முடித்திட லியற்றுமெம் முதல்வ னத்தொழி
றடுப்பரும் வெஞ்சினந் தன்னின் மூற்றுமா
லடுத்தவப் பான்மையா லதன்கட் டாமதம்
படுத்தின னத்திறம் பலருந் தேர்வரால். (௧௯)

மாமறை யளப்பில வரம்பி லாகமந்
தோமற வுதவியோர் தொன்ம ரதனிடைக்
காமரு முனிவரர் கணங்கட் கன்னவை
தாமத குணத்தனேற் சாற்ற வல்லனோ. (௨௦)

ஞாலிய நிமலமாம் வடிவங் கண்ணுதன்
மேலவ னெய்துமோ வேதம் விஞ்சையின்
மூலமென் றவனையே மொழியு மோவிது
சீலமில லாக்கெவன் றேற்றும் வண்ணமே (௨௧)

இமையவர் யாவரு மிறைஞ்சுங் கண்ணுதல்
விமலனன் றிறுதியை விளைக்கும் பண்பினாற்
றமகுண னெனறியுந் தன்மை செய்கையா
லமைகுண மியற்குண மறியற் பாலதோ. (௨௨)

ஈத்தலு மளித்தலு மியற்று வோர்க்குள
சாத்திக ராசதர் தத்தஞ் செய்கையின்
மாததிரை யல்லது மற்ற வர்க்கவை
பாதத்திடி னியறகையாப பகர லாகுமோ. (உக)

அக்குண மானவை யளிக்குஞ் செய்கையாற்
றொக்குறு மியற்கையத் தொல்லை யோர்கள்பா
லிக்குண மல்லதோ ரிரண்டுஞ் சேருமான்
முக்குண நெறிசெலு முனிவர் தேவர்போல். (உச)

நேமியாற் குருவெலா நீல மாயதுந்
தோமறு கடலிடைத் துயில்கொள் பான்மையு
மேமுறு மகந்தையும் பிறவு மெய்துமேற்
றூமத ராசதந் தானு முற்றவே. (உரு)

அறிவொருங் குற்றுழி யனையன் கண்ணுத
லிறைவனை வழிபடஇ யேத்தி யின்னரு
ணெறிவரு தன்மையு நீடு போதமும்
பெறுதலிற் சாத்திக முறையும் பெற்றுளான். (உசு)

மேனிபொற் கென்றலின் விமல வான்பொரு
ளுனெனு மருட்கையி னவையி லீசனை
தானுணா தெளிவினிற றவத்திற் பூசையி
லானது குணமெலா மயன்ற னக்குமே. (உஎ)

ஆதலின் விருப்புட னல்ல தெய்தினோ
ரோதிய குணவிதத் துறுவர் கண்ணுத
னாதனுக் கனையது நணுகு றூமையாற்
பேதைமை யொருகுண மவன்கட் பேசுதல். (உஅ)

மூன்றென வுளபொருள் யாவு முன்னமே
யீன்றவன் கண்ணுத லென்னு நான்மறை
சான்றது வாகுமாற் றவத்தர்க் கென்னினு
மான்றதோ ரவன்செய லறியற் பாலதோ. (உகூ)

செங்கண்மான் முதலிய தேவ ரேனையோ
ரங்கவ ரல்லவை யகதலுள் வைகியே
யெங்குமா யாவையு மியற்று கின்றதோர்
சங்கர னொருகுணச் சார்பின் மேவுமோ. (ஙo)

ஈறுசெய் மூன்றயினை யெண்ணித் தாமதங்
கூறின ரல்லது குறிக்கொண் மேலையோர்
வேறொரு செய்கையின் விளம்பி னால
ராறணி செஞ்சடை யடல னுக்கரோ. (ஙக)

வேறு.

என்றிவை பலவுந் தூயோ னிசைத்தலு மனைய வெல்லாம்
வன்றிறல் வெறுக்கை யெய்தி மயங்கலாற் றக்க னென்னும்
புன்றொழில் புரியுந் தீயோன் பொறாததிலன் புந்தி மீது
நன்றென வறித் தேர்ந்து னொருசில நவில லுற்றான். (ஙஉ)

முனிவகேள் பலவு மீண்டு மொழிவதிற் பயனென் வெள்ளிப்
பனிவரை யுறையு நங்கோன் பகவனை யெனினு மாக
வனையவன் றனக்கு வேள்வி யவிதனை யுதவே னீயு
மினியிவை மொழியல் போதி யென்செயன் முடிபப னென்றான். (ருரு)

வளங்குலவு தக்கனிது புகன்றிடலுந் ததீசிமுனி மனத்திற் சீற்றம்
விளைந்ததுமற் றவ்வளவி லவெருவியது வடவையழல் விண்ணோர்நெஞ்சந்
தளர்ந்ததுபொன் மால்வரையுஞ் சலித்ததந்தக் குலகிரியுந் தரிபயின் றாகி
யுளைந்தனவே லைகளேழு மொடுங்கியன நடுங்கியதில் வுலகமெல்லாம். ()

அக்கணமே முனிவரன்றன் பெருஞ்சீற்றந் தனைநோக்கி யந்தோவென்று
லெக்குவடு மெக்கிரியு மெக்கடலு மெவ்வுலகும யாவும் யாருந்
தக்கனொருவன்பொருட்டாற் றளர்ந்திடுமோ வெனமுனிவு தணிந்ததற்கு
ழொக்கலொடு மவணெழுந்து சிறுவிதியின் முகநோக்கி யொன்று சொல்வான்

சங்கரனை விலக்கி யின்று புரிகின்ற மகஞ்சிதைக தக்க நின்னோ
டிங்குறையு மமரரெலா மழிவுறவின் னேயென்று விசைத்துப பின்ன
ரங்கணுறு மறையோர்தம் முகநோக்கி யந்தணரி லழிதூ வானீ
ருங்கள்குலத் தலைமைதனை யிழந்திட்டீர் கேண்மினென வுரைக்க லுற்றான்.

பேசரிய மறைகளெலாம் பராபரனீ யெனவணங்கிப் பெரிது போற்று
மீசனையு மன்பரையு நீறுருடுகண் டிகையினையு மிகழ்ந்து நீவிர்
காசினியின் மறையவரா யெந்நாளும் பிறந்திறந்து கதியுறாது
பாசமத னிடைப்பட்டு மறையுரையா நெறியதனிற் படுதிரென்றான். ()

இனையநெறி யாற்சாபம் பலவுரைத்துத் ததீசிமுனி யிரண்டு பானு
முனிவர்தொகை தற்சூழத் தானுறையு மாச்சிரம முன்னிச் சென்றா
னனையவன்றன் பினனுகத் தக்கனென்போன் பெருந்தகவு மாற்று நோன்பும்
புனைபுகழுஞ் செழுந்திருவு மாற்றலுமா மனசெருக்கும் போயிற்றன்றே.

ஆக திருவிருத்தம க,உகo.

---

வசனம்.

இவ்வாறு விநாயகப்பிரான் அவ்வாலவனத்தை யடைந்தபோது ஆண்டுத் தேவியாரிட்டசாபத்தால் பாம்புருவங்கொண்டு ஓராலமரப்பொந்தில் சிவத்தியானஞ்செய்துகொண்டிருந்த திருமால் தனது பண்டைவடிவம்பெற்று விநாயகப்பிரானைச் சோடச உபசாரங்களுடன் பலவாறு போற்றித்துதித்தனர். பின்னர் விநாயகக்கடவுள் கைலைசென்று தமதிருப்பீடத்திலிருந்தார். அப்போது சிவபிரானைத்தரிசித்து வெளியேகும் அரிபிரமாதியோர் விநாயகரைத் தரிசித்துத் தாங்கள் கஜமுகாசுரன் முன்னரியற்றிய பணியை விநாயகப்பிரான் முன்னரும் இயற்றவேண்டியிரந்தனர். அவர் அவ்வாறாகுகவென விடைபெற்றுத் தம்பதங்களுக்குச் சென்றனர். நிற்க; ததீசிமுனிவர் சிவபிரான் தாமதகுணமுடைமைக்குங் காரணங் கூறுவாராயினர். சிவபிரான் அரிபிரமர்கள்போல இயற்கையாகவே முக்குணவயத்தராய் ஒவ்வோர் சிறப்புக்குணத்தைப் பெற்றவராயிராது இயற்கையிலே நிர்க்குணத்தராயச் சங்காரத்தொழினிமித்தம் தாமதகுணத்தைச் செயற்கையாகக் கொண்டவரென்பதனை முனிவர்கூறியும் செல்வச்செருக்கால் தக்கன் செவிகொடானாய்ச் சிவபிரானுக் கவிப்பாகங் கொடேனென மறுத்து முனிவரையும் அவ்விடம்விட்டு நீங்கும்படி யுரைத்தான். அதனைக்கேட்ட ததீசிமுனிவர் மிக்க சீற்றங்கொண்டவராய்த் தக்கயாகத்தையும் யாகசம்பந்திகளையும் சபித்து முனிவர் குழாமும் தக்கனது பெருமைமுதலியனவும் தம்மைப்பின்றொடர அவ்விடத்தினின்றும் நீங்கினர்.

அனந்தன்சாபநீங்குபடலம் முற்றிற்று.

---

# தானப்படலம்.

போனதோர் பொழுதிலவன் றுவசமிற்ற மகத்தூணிற் பொருக்கென் றெய்திக்
கானுலா வியகொடியுங் கழுகுமிடைந் தனயாருங் கலங்கத் தானே
மானமார் வேதவல்லி மங்கலநா ணுங்கழன்ற மற்றித் தன்மை
யானதோர் துன்னிமித்தம் பலவுண்டான் முடிவோன்க ணவையுறுவோ.(௧)

வேறு.

இந்த வாறுதுன் னிமித்தங்கள் பலநிகழ்ந் திடவுஞ்
சிந்தை செய்திலன் சிறுவது மஞ்சிலன் றீயோன்
றந்தை தன்னையு நாரணன் றன்னையுந் தகவான்
முந்து பூசனை புரிந்தனன் முகமன்கண் மொழியா. (௨)

மற்றை வானவர் யாவர்க்கு முனிவர்க்கு மரபா
லெற்று வேண்டிய வவையெலா நல்கியே யிதற்பின்
பெற்ற மங்கையர் தமக்குமா மருகர்க்கும் பெரிது
மற்ற மில்லதோர் மங்கலத் தொல்சிறப் பளித்தான். (௩)

காலு மாமுகக் கடவுள்சே யித்திற நல்கி
மாலும் யாவருங் காத்திடத் தீததொழின் மகஞ்செய்
வேலை நோக்கியே தொடங்கின னவ்விடை வேள்விச்
சாலை தன்னிடை நிகழ்ந்தன சாற்றுவன் றமியேன். (௪)

முன்ன ரேதக்க னேவலும் வினைசெயன் முறையான்
மன்னு தேனுவோ ராடகச் சாலையின் மாடே
பொன்னின் மால்வரை நடுவுசேர் வெள்ளியம் பொருப்பை
யன்ன தாமென வன்னமாம் பிறங்கலை யளித்த. (௫)

ஏத நீங்கிய தீயபா லடிசிலு மெண்ணில்
பேத மாகிய முதிரையி னுண்டியும் பிறவா
மோத னங்களும் வீற்றுவீற் றுகவே யுலகின்
மாதி ரங்களிற் குலகிரி யாமென வகுத்த. (௬)

நெய்யி னோடளாய் விரைகெழு நுண்டுக ணீவிக்
குய்யி னுவியெவ் வுலகமு நயபடுறக் குழுமி
வெய்ய தாகிய கருனைக டிசைதொறு மேவு
மையல் யானைக ளாமென வழங்கிற்று மாதோ. (௭)

அண்ணல் சேர்ஙெவந்தை தோசையே நொலையலே யாதிப்
பண்ணி யங்களுந் தாரமுங் கனிவகை பலவு
மண்ணின் மேலுறு கிரியெலாங் குலகிரி மருங்கு
நண்ணி னுலெனத் தொகுத்தன யாவரு நயப்ப. (௮)

விருந்தி னோர்கொள விழுதுடன் பாறயிர் வெள்ளந்
திருந்து கங்கையும் யமுனையு மாமெனச் செய்த
வருந்து முண்டிகள் யாவையும் வழங்குகோ வதனிற்
பொருந்து கின்றது தந்ததென் றுலது புகழோ. (௯)

தாவில் பாளித மான்மதஞ் சாந்துதண் பனிநீர்
நாவி வெள்ளடை செழும்பழுக் காயொடு நறைமென்
பூவு மேனைய பொருள்களு நல்கின புகழ்சேர்
தேவர் கோமகன் பணிபுரி கின்றதோர் தேனு. (க0)

ஆவ திவ்வகை யாவது நல்கியே யங்கண்
மேவு கின்றது பணியுமச் சங்கமும் வியன்சேர்
காவு மம்புய நிதியமுந் தக்கனுங் கடியோ
னேவ லாலருட் சாலையி லடைந்தன விமைப்பில். (கக)

கணித மில்லதோர் பரிதிகண் மேனியிற் கனலு
மணிக ளோர்புடை தொகுத்தன வாடக வரைபோ
லணிகொள் காஞ்சன மோர்புடை தொகுத்தன வம்பொற்
பணிக ளாடைக ளோர்புடை தொகுத்தன படைத்தே. (க௨)

மற்றும் வேண்டிய பொருளெலா முதவியம் மருங்கி
லுற்ற வேலைய தக்கன தேவவி னெழுகா
நிற்றல் போற்றிய முனிவரர் யாவரு நிலத்தோர்க்
கிறறெ லாமிவண் வழங்குதும் யாமென விசைத்தார். (க௩)

வேறு.

இன்ன வேலையி லிச்செயல் யாவையு
முன்ன மேயுணர் முப்புரி நூலினர்
துன்னி யேமனந் தூண்டவத் தொல்லையி
லன்ன சாலை தனையணைந் தாரரோ. (க௪)

சாலை காண்டலுந் தக்கனை யேததியே
பாலர் தன்மையிற் பாடின ராடினர்
கோல மார்பிற் குலாவிய வெண்டுகில்
வேலை யாமென வீசினின் றார்த்துளார். (க௫)

மிண்டு கின்றவவ் வேதியர் தங்களைக்
கண்டு வம்மின் கதுமென நீரெனாக்
கொண்டு சென்று குழுவொ டிருத்தியே
யுண்டி தன்னை யுதவுதன் மேயினார். (க௬)

மறுவில் செம்பொன் மணிகெழு தட்டைக
ளிறுதி யில்லன யாவர்க்கு மிட்டுமே
னறிய வுண்டிக ணல்கியின் னோர்தமக்
குறவி னாரென வூட்டுவித் தாரவண். (க௭)

அன்ன காலை யருப்பசி தீர்தரத்
துன்ன வுண்டுஞ் சுவையுடைத தாதலா
லுன்னி யுன்னியிவ் வுண்டிகள் சாலவு
மின்னம் வேண்டு மெனவுரைப் பார்சிலர். (க௮)

குற்ற மொன்றுள கூறுவ தென்னினி
நற்ற வஞ்செய்து நான்முக னுலிவ
னுற்ற வுண்டி யெலாமுணை வோர்பசி
பெற்றி லோமெனப் பேசுறு வார்சிலர். (க௯)

வீறு முண்டி மிசைந்திட வேண்டும்வாய்
நாறு நூற தெனநுவல் வார்தமை
யேற வேண்டு மிதிலமை யாதெனச்
சீறி யேயிகல் செய்திடு வார்சிலர். (௨0)

புலவர் கோனகர் போற்றிய தேனுவந்
தலகி லிவ்வுண வாக்கிய தாலெனுச்
சிலர்பு கன்றனர் தேக்கிட வுண்மினோ
வுலவ லீரென வோதுகின் றார்சிலர். (௨௧)

அறிவி லாத வயன்மகன் யாகமின்
றிறுதி யாமென் றிசைத்தன ரன்னது
பெறுதி யேனுமிப் பேருண வேநமக்
குறுதி வல்லையி லுண்மினென் பார்சிலர். (௨௨)

உண்டி லேமிவ ணுண்டதி லீதுபோற
கண்டி லேமொரு காட்சியு மின்பமுங்
கொண்டி லேமின்று கொண்டதி லீசனுல்
விண்டி லேமெனின் மேலதென் பார்சிலர். (௨௩)

எல்லை யில்லுண வீயுமித் தேனுவை
நல்ல நல்லதொர் நாண்கொடி யாதிவண்
வல்லை பற்றிநம் மாநக ரிறகொடு
செல்லு தும்மெனச் செபபுகின் றார்சிலர். (௨௪)

மக்கள் யாவரும் வானவா யாவரு
மொக்கல் யாவரு முய்ந்திட வாழ்தலாற
றக்க னேற்ற தவததினு முண்டுகொன்
மிக்க தென்று விளம்புகின றார்சிலர். (௨௫)

மைந்த னிட்டன மாந்திட நான்முகன்
றந்தி லன்வயின் சாலவு மாங்கவன்
சிந்தை மேலழுக் காறுசெய் தானெனு
நொந்து நொந்து நுவலுகின் றார்சிலா. (௨௬)

குழூவு சேர்தரு குய்யுடை யுண்டிகள
விழைவி னேடு மிசைந்தன மாறறவும
பழுதி லாவிப் பரிசனா தம்மொடு
மெழூவ தெப்படி யென்றுரைப் பாாசிலா (௨௭)

இந்த நல்லுண வீண்டு நுகர்ந்திட
நந்த மைந்தரை நம்மனை யாங்கொடு
வந்தி லம்மினி வந்திடு மோவெனுச்
சிந்தை செய்தனர் செபபுகின் றார்சிலர். (௨௮)

அன்ன பற்பல வார்கலி யாமெனப்
பன்னி நங்கும் பனவர்கள் கேட்டன
ரென்ன மற்றவை யாவையு மார்தர
முன்ன ளித்து முனிவ ரருத்தினர். (௨௯)

அருத்தி மிச்சி லகற்றி யருந்தவ
விருத்தி மேவிய வேதியர் தங்களை
யிருத்தி மற்றொ ரிருக்கையில் வாசநீர்
கரைத்த சந்தின் கலவை வழங்கினார். (௩0)

நளிகு லாவிய நாவிந ரந்தம்வெண்
பளிதம் வெள்ளடை பாகுட னேனவை
யளியு லாவு மணிமலர் யாவையு
மொளிறு பீடிகை யுய்த்தனர் நல்கினார். (௩௧)

அரைத்த சாந்த மணிந்துமெய் யெங்கணும
விரைத்த பூந்துணர் வேய்ந்துபைங் காயடை
பரித்து நின்ற பனவர்புத் தேளுறுந்
தருக்க ளாமெனச் சார்ந்தன ரென்பவே. (௩௨)

ஆன பான்மையி லந்தணர் யாவரு
மேன காதலின் வெய்தென வேகியே
வான மண்ணிடை வந்தென வேர்கெழு
தான சாலை தனையடைந் தார்களே. (௩௩)

அடையும் வேலை யயனருள் காதலன்
விடையி னாலங்கண் மேவு முனிவர
ரிடைய ருதவர்க் கிந்தன ரீந்திடுங்
கொடையி னாலெண்ணில் கொண்டலை போன்றுளார். (௩௪)

பொன்னை நல்கினர் பூணொடு பூந்துகி
றன்னை நல்கினர் தண்சுட ரோனென
மின்னை நல்கும் வியன்மணி நல்கினர்
கன்னி யாவுங் கறவையு நல்கினார். (௩௫)

படிவி லாடகப் பாதுகை நல்கினர்
குடைக ணல்கினர் குண்டிகை நல்கினா
ரிடையும் வேதியர் வேண்டிய வேண்டியாங்
கடைய நல்கின ரங்கைகள் சேப்பவே. (௩௬)

இந்த வண்ண மிறையதுந் தாழ்க்கிலர்
முந்து நின்ற முனிவர ராண்டுறு
மந்த ணாளர்க் கயினியொ டாம்பொரு
டந்து நின்று தயங்கின ரோர்புடை. (௩௭)

அற்ற மில்சிறப் பந்தண ராயிடைப
பெற்ற பெற்ற பெருவளன் யாவையும்
பற்றி மெல்லப் படர்ந்தனர் பற்பல
பொற்றை செய்தனர் போற்றின ரோர்புடை. (௩௮)

வரத்தி னாகும் வரம்பில் வெறுக்கைதம
புரத்தி னுய்த்திடும் புந்தியி லன்னவை
யுரத்தி னாற்றடக் கொப்பரும வேதியர்
சிரத்தின் மேற்கொடு சென்றன ரோர்புடை. (௩௯)

அரித னூர்தியு மன்னமுங் கீழ்த்திசை
யரித னூர்தியு மாங்கவன் மாககளு
மரித னூர்தியு மாருயிர் கொண்டிடு
மரித னூர்தியு மார்ப்பன வோர்புடை. (௪0)

தான மீது தயங்கிய தேவரு
மேனை யோர்களு மிவ்விடை யீண்டலின்
மீன மார்தரு விண்ணென வெண்ணிலா
மான கோடி மலிகின்ற வோர்புடை. (௪௧)

நரம்பின் வீணை ஞரலுறும் வேய்ங்குழல்
பரம்பு தண்ணுமை பண்ணமை பாடலால்
வரம்பி னேய்ந்திட வானவர் நாடவே
யரம்பை மார்கணின் றாடின ரோர்புடை. (௪௨)

தேவர் மாதருஞ் சிற்சில தேவருந்
தாவி லாமகச சாலையின் வைகிய
காவு தோறுங் கமல மலர்ந்திடு
மாவி தோறுமுற றாடின ரோர்புடை. (௪௩)

வேத வல்லி வியப்புட னல்கிய
காதன் மாதருங காமரு விண்ணவர்
மாத ராருஞ் சசியு மகத்திரு
வோதி நாடியங் குற்றன ரோர்புடை. (௪௪)

இனைய பற்பல வெங்கணு மீண்டலிற்
கனைகொள் பேரொலி கல்லென வார்த்தன
வனையன் வேள்விக ககன்கடல் யாவையுந்
துனைய வந்தவண் சூழ்ந்தன போலவே. (௪௫)

ஊன மேவுறு மும்பரு மிம்பரு
மேன காதலின் மிககவ ணீண்டிவ
வான யாறு வருநதி யுமபுவித்
தான யாறுந் தழீஇயின போன்றவே (௪௬)

ஆக திருவிருத்தம் ௧,௨௫௬.

---

வசனம்.

இவ்வாறு ததீசி முனிவர் சொல்ல யாக மழியும்படியான கொடியவுற்பாத முதலிய துர்நிமித்தங்கள் தோன்றின. பின்னர் தக்கன் ஆண்டுவந்திருந்த மறையவருக்கும், மற்றையோருக்கும் காமதேனுவையுங், கற்பகத்தருவையுங் கொண்டு வேண்டியவர் வேண்டியபடி உண்ணவும், உடுக்கவும், பூணவுங் கொடுத்தான். பின்னர் யாவரும் யாகசாலை சென்றனர். ஆண்டுவந்திருந்த தேவர்கள் நக்ஷத்திரங்கள் போல் விளங்கினார்கள். ஒருபுறம் அரம்பைமாதர்கள் இசைக்கருவிகளுடன் நடனஞ்செய்தார்கள். தேவர்களும், தேவமாதர்களும் ஆண்டுள்ள சோலைகளிலும், குளங்களிலு மாடினார்கள். இந்திராணி முதலிய தேவமாதர்கள் யாகசாலையின் வைபவத்தைப் பார்ப்பாராயினர். இவ்விதமாக யாண்டும் கலீரெனப் பேரோசை முழங்கின.

தானப்படலம் முற்றிற்று.

---

# வேள்விப்படலம்.



இகந்த சீர்பெறு மிப்பெருஞ் சாலையி
லகந்தை மிக்க வயன்பெருங் காதலன்
மகம்பு ரிந்தது மற்றது சிந்திடப்
புகுந்த வாறும் பொருக்கெனக் கூறுகேன். (க)

வேறு.

மருத்து ழாய்முடி மாலயன் பாங்குற மகத்தின்
கருத்த னாகிய தீயவன் முன்னமே கருதி
வரித்த மேலவர் தங்களை நோக்கியே மரபி
னிருத்து முத்தழ லென்றலு நன்றென விசைந்தார். (உ)

மூற்று நாடிய விருத்திகு ராணியின் முறையா
லூற்ற வங்கியை வேதிகைப் பறப்பைமே லுய்த்துச்
சொற்ற மந்திர மரபினாற் பரிதிகள் சூழ்ந்து
மற்று முள்ளதோர் விதியெலா மியற்றினர் மன்னோ. (ங)

ஆங்கு முத்தழல் விதிமுறை செய்தலு மயன்சேய்
பாங்க ருற்றிடு மிருத்தினர் யாரையும் பாரா
நீங்க ளுங்களுக் காகிய செய்கையை நினைந்து
தூங்க லின்றியே புரிமினோ கடிதெனச் சொன்னான். (ச)

சொன்ன வாசகங் கேட்டலு மிருத்திகோர் தொகையின்
முன்ன மாகிய வம்மகந் தனக்கவி முழுதும்
வன்னி யாதியாஞ் சமிதையுந் தருப்பையு மற்று
மின்ன போல்வதுங் கொடுவழங் கினாகளா திருவா. (ரு)

அந்த வேள்விசெய் வித்தன ரொருவரா லவிக
ளந்தை யல்லவர் கொள்ளவே யவரவர்க் கிசைதத
மந்தி ரத்தனைப் புகன்றன ரொருவரவ் வானோர்
தந்த மைக்குறித் தழைத்தன ரொருவர்பேர் சாற்றி. (சு)

மற்ற வர்க்கெலா மமைந்திடு மவிகளை மலர்க்கை
பற்றி யங்கிவா யளித்தன ரொருவரப் பரிசி
னற்ற நோக்கியே யிருந்தன ரொருவரங் கதற்கு
முற்று நல்லருள் புரிந்தன ரொருவரம் முதல்போல். (எ)

இருத்தி னோர்களும் பிறருமீ தியற்றுழி யாக
கருத்த னாகிய தக்கனத் தேவரைக் கருதிப
பரித்து நுங்குதி ரென்றவி புரிதொறும் பகர்ந்தே
யருத்தி யுற்றனன் கடவுளர் தமக்கெலா மமுதின். (அ)

திருந்து கின்றநற் சுவையினாற் றூய்மையாற் றிகழு
மருந்து போன்றன வென்னினு முயிர்தொறு மனத்து
மிருந்த வெம்பிரா னன்றியே யிசைதலி னிமையோர்க்
கருந்து நீரலா நஞ்செனலாகிய வவிகள். (கூ)

ஆ. திருவிருத்தம் க,உகூ௫.

வசனம்.

இவ்விதமாகத் தக்கன் ரித்விக்குகளைக்கொண்டு, வேதவிதியிற்சிறந்த சிவ பெருமான் மந்திரங்களை யொழித்து, விஷ்ணுவுக்குரிய மந்திரங்களையோதி யாகத் தைவளர்க்கக் கட்டளையிட்டான். அவ்வாறே யாகத்தைச்செய்து தேவர்கட்கு அவிசுகொடுத்தான். அந்த ஹவிசானது தேவாமிர்தத்தினுஞ் சிறந்ததாயினும், பிரதம தேவதையை நீக்கினதினால், எல்லார்க்கும் நஞ்சாய்த்தோன்றிற்று.

வேள்விப்படலம் முற்றிற்று.

---

# உமைவருபடலம்.



பேசுமிவ் வேள்வி பிதாமகன் மைந்த
னேசம் விளைந்திட நாடி யியற்ற
மாசறு நாரத மாமுனி யுறறே
காசினி மேலிது கண்டன னன்றே. (க)

கண்டன னுலமர் கண்டனை நீக்கிப்
புண்டரி கந்திகழ் புங்கவன் மைந்த
னண்டரு டன்மக மாற்றின னன்னோன்
றிண்டிறல் கொல்லிது செய்திட லென்னா. (உ)

எண்ணிய நாரத னெவ்வுல குஞ்செய்
புண்ணிய மன்னதொர் பூங்கயி லாய
நண்ணிமுன் னின்றிடு நந்திக ளுய்ப்பக்
கண்ணுதல் சேவடி கைதொழு துற்றான். (ங)

கைதொழு தேத்திய காலை யன்னோனை
மைதிகழ் கந்தர வள்ளல் கண்ணுற்றே
யெய்திய தென்னிவ ணிவ்வுல கத்திற்
செய்திய தென்னது செப்புதி யென்றான். (ச)

எங்கணு மாகி யிருந்தருள் கின்ற
சங்கர னிமமொழி சாற்றுத லோடு
மங்கது வேலையி லம்முனி முக்கட்
புங்கவ கேட்டி யெனப்புகல் கின்றான். (ரு)

அதிர்தரு கங்கை யதன்புடை மாயோன்
விதிமுத லோரொடு மேதகு தக்கன்
மதியிலி யாயொர் மகப்புரி கின்றான்
புதுமையி தென்று புகன்றன னம்மா. (சு)

ஈங்கிது கூறலு மெம்பெரு மான்றன்
பாங்கரின் மேவு பராபரை கேளா
வாங்கவன் மாமக மன்பொடு காண்பா
னேங்கு மகிழ்ச்சி யுளத்திடை கொண்டாள். (எ)

அங்கண னல்லரு ளாலனை யான்றன்
பங்குறை கின்றனள் பாங்கரி னீங்கி
யெங்கள் பிரானை யெழுந்து வணங்கிச்
செங்கை குவித்திது செப்புத லுற்றாள். (அ)

தந்தை யெனப்படு தக்க னியற்று
மந்த மகந்தனை யன்பொடு நோக்கி
வந்திடு கின்றனன் வல்லையி வின்னே
யெந்தை பிரான்விடை யீகுதி யென்றாள். (கூ)

என்றலு நாயக னேந்திழை தக்க
னுன்றனை யெண்ணல னும்பர்க ளோடும்
வன்றிற லெய்தி மயங்குறு கின்றா
னின்றவன் வேள்வியி லேகலை யென்றான். (கo)

இறையிது பேசலு மேந்திழை வேதாச்
சிறுவ னெனப்படு தீயதொர் தக்க
னறிவில னாகு மவன்பிழை தன்னைப்
பொறுமதி யென்றடி பூண்டனண் மாதோ. (கக)

பூண்டனள் வேள்வி பொருக்கென நண்ணி
மீண்டிவண் மேவுவல் வீடருள் செய்யுந்
தாண்டவ நீவிடை தந்தரு ளென்றாண்
மாண்டகு பேரருள் வாரிதி போல்வாள். (கஉ)

மாதிவை கூறலும் வன்மைகொ டக்கன்
மேதகு வேள்வி வியப்பினை நோக்குங்
காதலை யேலது கண்டனை வல்லே
போதுதி யென்று புகன்றனன் மேலோன். (கங)

வேறு.

அரன்விடை புரிதலு மம்மை யாங்கவன்
றிருவடி மலாமிசைச் சென்னி தாழ்ந்தெழா
விரைவுட னீங்கியோர் விமானத் தேறினண்
மரகத வல்லிபொன் வரையுற் றாலென. (கச)

ஐயைதன் பேரரு ளனைத தூ மாங்கவள்
செய்யபொன் முடிமிசை திூற்றிச் சென்றெனத்
துய்யதொா கவுரிபாற் சுமாலி மாலினித்
தையலார் மதிக்குடை தாங்கி நண்ணினார். (கரு)

துவரிதழ் மங்கலை சுமனை யாதியோர்
கவரிக ளிரட்டினர் கவுரி பாங்கரி
லிவர்தரு யோதிம மெண்ணி லாதவோ
ரவிர்சுடர் மஞ்ஞைபா லடைவ தாமென. (கசு)

கால்செயும் வடடமுங் கவின்கொள் பீலியு
மால்செயு நறுவிரை மல்க வீசியே
நீல்செயும் வடிவுடை நிமலை பாற்சிலர்
வேல்செயும் விழியினர் மெல்ல வேகினார். (கஎ)

கோடிக மடைப்பைவாள் குலவு கண்ணடி.
யேடுறு பூந்தொடை யேந்தி யம்மைதன்
மாடுற வணுகியே மானத் தேகினார்
தோடுறு வரிவிழித் தோகை மாரபலர். (௧௮)

நாதன தருள்பெறு நந்தி தேவியாஞ்
சூதுறழ் பணைமுலைச் சுகேசை யென்பவண்
மாதுமை திருவடி மலாக ளண்டிய
பாதுகை கொண்டுபின் படர்தன் மேயினாள். (௧௯)

கமலினி யனிந்திதை யென்னுங் கன்னிய
ரமலைதன் சுரிகுழற கான பூந்தொடை
விமலமொ டேந்தியே விரைந்து செல்கினார்
திமிலிடு கின்றதொல சேடி மாருடன். (௨௦)

அடுத்திடு மூலகெலா மளித்த வம்மைபா
படித்தன ரேகினா சிலவா பாட்டிசை
யெடுத்தன ரேகினர் சிலவ ரோர்தக
நடித்தன ரேகினர் சிலவர் நாரிமார் (௨௧)

பாங்கியர் சிலதியர் பலரு மெண்ணிலா
ரீங்கிய பேரொளி விமானத் தேறியே
யாங்கவள் புடையதா யணுகிச் சென்றனா
ரோங்கிய நிலவுகு மூடுகள் போன்றுளார். (௨௨)

தண்ணுறு நானமுஞ் சாந்துஞ் சந்தமுஞ்
சுண்ணமுங் களபமுஞ் சுடரும் பூண்களு
மெண்ணருந் துகில்களு மிட்ட மஞ்சிகை
யொண்ணுத லார்பரித் துமைபின் போயினா. (௨௩)

குயில்களுங் கிள்ளையுங் குறிக்கொள் பூவையு
மயில்களு மஞ்சமு மற்று முள்ளவும
பயிலுற வேந்தியே பரைமுன் சென்றன
ரயில்விழி யணங்கின ரளபபி லாகவே (௨௪)

விடையுறு துவசமும் வியபபின் மேதகு
குடைகளு மேந்தியுங் கோடி கோடியா
மிடியுறழ் பல்லிய மிசைத்து மம்மைதன்
புடைதனில் வந்தனர் பூத ரெண்ணிலார். (௨௫)

அன்னவ ளடிதொழு தருள்பெற றெல்லையிற்
பன்னிரு கோடிபா ரிடங்கள் பாறபட
முன்னுற வேகினன் மூரி யேற்றின்மேற
றென்னெறி யமைச்சியற் சோம நந்தியே. (௨௬)

இவரிவ ரித்திற மீண்ட வெல்லைதீர்
புவனமு முயிர்களும் புரிந்து நல்கிய
கவுரியம் மானமேற கடிது சென்றரோ
தவலுறு வோன்மகச் சாலை நண்ணினாள் (௨௭)

ஏனுறு மானகின் றிழிந்து வேள்வியஞ்
சாலையு ளேகியே தக்கன் மூன்னுறும்
வேலையி லுமைதனை வெகுண்டு நோக்கியே
சீலமி லாதவ ளினைய செப்பினான். (௨அ)

வேறு.

தந்தை தன்னொடுந் தாயி லாதவன்
சிந்தை யன்புறுந் தேவி யானநீ
யிந்த வேள்வியா னியற்றும் வேலையில்
வந்த தென்கொலோ மகளிர் போலவே. (௨௯)

மல்லல் சேருமிம் மாம கந்தனக்
கொல்லை வாவென வுரைத்து விட்டது
மில்லை மீண்டுநீ யேக லாகுமோ
செல்லு மீண்டுநின் சிலம்பி லென்னவே. (௩0)

மங்கை கூறுவாண் மருகர் யார்க்குமென்
றங்கை மார்க்குநீ தக்க தக்கசீ
ருங்கு நல்கியே யுறவு செய்துளா
யெங்க டம்மையோ ரிறையு மெண்ணலாய். (௩க)

அன்றி யும்மிவ ணாற்றும் வேள்வியிற்
சென்ற வென்னையுஞ் செயிர்த்து நோக்குவாய்
ஈன்ற தோவிதோர் நவைய தாகுமா
லுன்ற னெண்ணம்யா துரைதி யென்னவே. (௩௨)

ஏய முக்குணத் தியலுஞ் செய்கையுட்
டீய தொல்குணச் செய்கை யாற்றியே
பேயொ டாடல்செய் பித்தன் றேவியாய்
நீயு மங்கவ னிலைமை யெய்தினாய். (௩௩)

அன்ன வன்றனோ டகந்தை மேவலா
லுன்னை யெள்ளினா னுனது பின்னுளோர்
மன்னு கின்றவென் மருகர் யாவரு
மென்னி னும்மெனக் கினியர் சாலவும். (௩௪)

ஆத லாசியா னவர்கள் பாங்கரே
காத லாகியே கருது தொல்வளன்
யாது நல்கின னிந்த வேள்வியி
லோது நல்லவி யுளது நல்கினேன். (௩௫)

புவனி யுண்டமால் புதல்வ னாதியா
மெவரும் வந்தெனை யேத்து கின்றனர்
சிவனு நீயுமோர் சிறிது மெண்ணலீ
ருவகை யின்றெனக் குங்கள் பாங்கரில். (௩௬)

ஏற்றின் மேவுநின் னிறைவ னுக்கியா
னாற்றும் வேள்வியு ளவியு மீகலன்
சாற்று கின்றவே தத்தின் வாய்மையு
மாற்று கின்றனன் மற்றென் வன்மையால். (௩௭)

அனைய தன்றியீண் டடுத்த திற்கும்யான்
றினையின் காறுமோர் சிறப்புஞ் செய்கல
னெனவி யம்பலு மெம்பி ராட்டிபாற்
றனைய வந்ததாற் றேமில் சீற்றமே. (௩அ)

சீற்ற மாயதீச் செறியு யிர்ப்பொடே
காற்றி னேடூழல் கலந்த தாமெனத்
தோற்றி யண்டமுந் தொலைவி லாவியு
மாற்று வானெழீஇ மல்கி யோங்கவே (௩௯)

பாரு முட்கின பரவு பௌவமுந்
நீரு முட்கின நெருப்பு முட்கின
காரு முட்கின கரிக ளுட்கின
வாரு முட்கின ரமர ராயுளார். (௪0)

பங்க யாசனப் பகவன் றானுமச்
செங்கண் மாயனுஞ் சிந்தை துண்ணென
வங்க னுட்கினா ரென்னி னாங்கவள்
பொங்கு சீற்றம்யார் புகல வல்லரே. (௪௧)

வேலை யன்னதில் விமலை யென்பவள்
பாலி னின்றதோர் பாங்கி தாழ்ந்துமுன்
ஞாலம் யாவையு நல்கு முன்றனை
கேலு கின்றதோ வினைய சீற்றமே. (௪௨)

மைந்தர் யாரையும் வளங்க டமமொடுந்
தந்து நல்கிய தாய்சி னங்கொளா
வந்த மாற்றவா னமைந்து ளாரெனி
னுய்ந்தி டுந்திற முண்டு போலுமால். (௪௩)

அறத்தை யீங்கிவ னகன்று ளானெனச்
செறுத்தி யன்னதோர் சீற்றம் யாரையு
மறைகு முன்னமே யீறு செய்யுமா
பொறுத்தி யீதெனப் போற்றன மேயினாள் (௪௪)

போற்றி சிற்றலும் புனிதை தன்பெருஞ்
சீற மாயெழுந் தீயை யுள்ளுற
மாற்றி வேள்விசெய் வானை நோக்கியே
சாற்று கின்றன ளினைய தன்மையே. (௪௫)

என்னை நீயிவ ணிகழ்ந்த தன்மையை
யுன்ன லேனெனை யுடைய நாயகன்
றன்னை யெள்ளினாய் தரிக்கி லேனதென்
கன்ன மூடுசெல் கடுவு போலுமால். (௪௬)

நிர்க்கு ணத்தனே நிமல னன்னவன்
சிற்கு ணத்தனாய்த் திகழு வானொரு
சொற்கு ணத்தனே தொலைக்கு நாளடு
முற்கு ணத்தினை முன்னு மாறலால். (௪௭)

துன்று தொல்லுயிர் தொலைவு செய்திடு
மன்று தாமதத் தடுவ தன்றியே
நன்று நன்றது ஞான நாயகற்
கென்று முள்ளதோ ரியற்கை யாகுமோ. (௪௮)

தீய தன்றதொரு செயலு நல்லரு
ளாயி லாவிக ளழிந்துந் தோன்றியு
மோய்வி லாதுழன் றலைவு றுமலே
மாய்வு செய்திறை வருத்த மாற்றலால். (௪௯)

ஆன வசசெய லழிவி லாததோர்
ஞான நாயகற் கன்றி நாமெனு
மேனை யோர்களா லியற்ற லாகுமோ
மேன காவலும் விதியு மென்னவே. (௫0)

முன்ன ரேயெலா முடித்த நாதனே
பின்னு மத்திற மளிக்கும் பெற்றியா
னன்ன வன்கணே யனைத்து மாகுமா
லின்ன பான்மைதா னிறைவன் வாய்மையே. (௫௧)

தோமி லாகமஞ் சுருதி செப்பியே
யேம விஞ்சைகட் கிறைவ னாகியே
நாம றும்பொரு ணல்கு மெந்தையைத்
தாம தன்னெனச் சாற்ற லாகுமோ. (௫௨)

ஆத லாலவ னனைவ ருக்குமோர்
நாத னமரோ வவற்கு நல்லவி
யீதல செய்திடா திகழ்ந்தி யஞ்சியே
வேதம் யாவையும் வியந்து போற்றவே. (௫௩)

சிவனெ னுந்துணைச் சீரெ ழுத்தினை
நவிலு வோர்கதி நொய்தி லெய்துவா
ரவனை யெள்ளினு யாரி தாற்றுவா
ரெவனை யுய்குதி யிழுதை நீரைநீ. (௫௪)

வேறு.

முண்டக மிசையினோன் முகுந்த னாடியே
பண்டுணர் வரியதோர் பரனை யாதியாக்
கொண்டில ரெள்ளிய கொடுமை யோர்க்கெலாந்
தண்டம்வந் திடுமென மறைகள் சாற்றுமால். (௫௫)

ஈதுகேள் சிறுவிதி யிங்ஙனோர்மகம்
வேதநா யகனவனை விலக்கிச் செய்தனை
யாதலா லுனக்குமவந் தடைக தண்டமென்
றோதினா ளுலகெலா முதவுந் தொன்மையாள். (௫௬)

இன்னன கொடுமொழி யியம்பி வேள்விசெ
யந்நில மொருவியிவ் வகில மீன்றுளாண்
முன்னுள பரிசன முறையின் மொய்த்திடப்
பொன்னொளிர் மானமேற் புகுந்து போந்தனள். (௫௭)

அகன்றலை யுலகரு ளயன்றன் காதலன்
புகன்றன வுன்னியுட் புழுங்கி யைந்துமா
முகன்றிரு மலையிடை மூடுகிச் சென்றனள்
குகன்றனை மேலருள் கொடிநு சுப்பினுள். (ருஅ)

ஒருவினை ளூர்தியை யுமைதன் னாயகன்
றிருவடி வணங்கினள சிறிய தொல்விதி
பெரிதுனை யிகழ்ந்தனன் பெரும வன்னவ
னரிதுசெய் வேள்வியை யழிததி யென்னவே. (ருசு)

எவ்வயில் பொருட் கிறைவ னாகியோ
னவ்வியங் கரமுடை நாத னாதலி
னவ்வுரை கொண்டில னாக வம்பிகை
கவ்வையோ டினையன கழறன் மேயினள். (சுo)

மேயின கீர்தலும் வெறுப்பு நிற்கிலை
யாயினு மன்பினேற் காக வன்னவன்
றீயதோர் மகத்தினைச் சிதைததல் வேண்டுமென்
னாயக னேயென நவின்று போறறினள். (சுக)

ஆ. திருவிருத்தம க, ருஉசு.

---

வசனம்.

இந்தச்செய்தியை நாரதர் அறிந்து கயிலைக்குப்போய் இறைவனுக்கறிவித்தார், உடனே உமையவள் எழுந்து வணங்கி, என் பிதாசெயயும் யாகத்தைப்பார்த்துவர விடைதரவேணடுமெனறாள். அதற்கு இறைவா என்னையும உன்னையும இகழ்ந்து அவன்செய்யும் யாகத்துக்கு நீபோகலாமாவென்று தடுததுங் கேளாமையாற் போய்வாவென்று விடைகொடுத்தனுப்பினார். உடனே இறைவி அநேக ஆடம்பரங்களோடு விமானமேலேறிச்சென்று தக்கன் வேள்விச்சாலையிற் பிரவேசித்தாள். இவளைக்கண்ட தக்கன், உன்னையார் இங்கே வரவழைத்தது, உன் கணவனாகிய பித்தனும எனக்கெதிரேவரலாகாது, நான் உங்களைப்பாரககவந்தபோது என்னை யந்தப்பிததன் அவமானப்படுத்தினானதலால், அவனுக்கு அவிரப்பாகங் கொடேன். நீ யென்னெதிரே நில்லாமற்போய்விடக் கடவையென்று மிகச்சீறிச் சொல்லக்கேட்ட இறைவி மனங்கொதித்து நெருப்போடுகூடின வாயுவைப்போலப் பெருமூச்செறிந்தாள். அதனால் அணடகோடிகளும் அவற்றுள்ளேயடங்கின சீவர்களும் நிலைகுலையக்கண்ட விமலையென்னும் தோழியானவள் இறைவியைப் பணிந்து, அவள் கோபந்தணியச் சில நியாயங்களைச்சொல்லினாள். அதுகேட்ட இறைவி கோபமாறி, தக்கனைநோககி, நீயென்னை யிகழ்ந்ததை நான் ஒருகுற்றமாய்ப் பாவிக்கவில்லை, என் கணவனாகிய பரமதயாநிதியைப் பலவகையாய் நிந்தித்தனையாதலால் உன்யாகமும் நிறைவேறாமல் நீயும் விரைவில் நசித்துப்போவாயென்று சபித்துவிட்டு, விமாநமேறிக் கயிலையையடைந்து சிவபெருமான் சந்நிதியில்நின்று வணங்கி, சுமாரீ! என் பிதாவாகிய தக்கன் எனனையேயன்றித் தேவரீரையும் நிந்தித்தான், அவன்செய்யும் வேள்வியையழிக்கத் திருவுளங்கொள்ளவேண்டுமென்று பிரார்த்தித்தாள்.

உமைவருபடலம் முற்றிற்று.

---

# வீரபத்திரப்படலம்.

—:§:—

ஆந்த மவலலைமயமை யாளுடைய வண்ண லகிலந்
தந்த மங்கைதன தன்பினை வியந்து தளருஞ்
சிந்தை கொண்டசெயன் முற்றியிடு மாறு சிறிதே
புந்தி யுள்ளுற நினைந்தன னினைந்த பொழுதே. (க)

பொன்னின் மேருவி னிருந்திடு பொலங்கு வடொலா
மின்னும் வெள்ளிமுனை மேற்கொடு விளங்கி யதென
மன்னு தண்சுடர் மதிக்குறை மிலைச்சு மவுலிச்
சென்னி யாயிரமும் வான்முகடு சென்றொ ளிரவே. (௨)

விண்ட லந்தனி யிலங்கு சுடரின் மிடலினைக்
கண்ட லந்தர வொதுங்கு வனபோற் கதிருலா
மண்ட லந்திகழ் முகந்தொறும் வயங்கு பணியின்
குண்ட லங்களிணை கொண்ட குழைகொண் டுலவவே. (௩)

ஆன்ற திண்கடல் வறந்திட விறந்த தனிடைத்
தோன்று கின்றதோர் மடங்கல் வலியின்று தொலைய
மூன்று கண்கண்முக மாயிரமு மேவி முனிவாற்
கான்ற வங்கிகளி னண்ட முழுதுங் கரியவே. (௪)

சண்ட மாருதமு மங்கியு மொதுங்கு தகவாற்
றுண்ட மீதுறு முயிர்ப்புட னெழுந்த சுடுதீ
யண்ட கோளமுட னப்புறமு மாகி யழியாக்
கொண்ட லூடுதவழ் மின்னு வெனவே குலவவே. (௫)

மலரின் வந்துறையு நான்முகன் முகுந்தன் மகவான்
புலவர் தம்புக ழனைத்தையு நுகர்ந்த பொழுதிற்
சிலவொ ழுங்கொடி தழின்புடைகள் சிந்தி யெனவே
நிலவு செய்தபிறை வாளெயிறு நின்றி லகவே. (௬)

துண்ட மீதினழ லோவிதழின் வீழ்ந்த சுசியோ
மண்டு தீவிழிகள் கான்ற கனலோ மனமிசைக்
கொண்ட தோர்வெகுளி யாகிய கொடுந்த ழலதோ
வெண்டி சாமுகமு மாகியடு கின்ற தெனவே. (௭)

தண்ட லின்றுறையு மாவிகள் வெரீஇத் தளரமே
லண்ட ரண்டநிரை விண்டிட வவற்றி டையுறுந்
தெண்டி ரைக்கடல் கலங்கவட லூறற சிவனிற்
கொண்ட வார்ப்புமுழு தெண்டிசை குலாய் நிமிரவே. (௮)

தராத லங்கண்முழு துண்டுமிழு கின்ற தகைசே
ரராவி னங்கடமை யங்கடக மங்க தமொடே
விராய மென்றொடிக ளாவிடுபு விண்ணுற நிமிர்ந்
திராயி ரங்கொள்புய மெண்டிசை யெலாஞ் செறியவே. (௯)

வரத்தின் மேதகைய வேதன்முத லானவ் வலியோர்
சிரத்தின் மாலிகை யடுக்கல்வ ரென்பு செறிபூண்
பெருத்த கேழலின் மருப்பினுட ணுமை பிறவு
மூரத்தின் மேவுபுரி நூலொடு பெயர்ந்தொ ளிரவே. (௧௦)

குந்தம் வெம்பலகை தோமர மெழுக்குலி சம்வாள்
செந்த முற்கழுமுள் சூலமொடு பீலி சிலைகோன்
முந்து தண்டமவி ராழிவசி யால முதலா
மந்த மில்படைக ளங்கைக டொறுங் குலவவே. (௧௧)

ஐய மாமழைதனின் மாமணியி னாகி யறிவார்
செய்ய லாதவரு பேரணிக ளோடு சிவணிப்
பையு லாவுசுடர் வெம்பணிக ளான பணியு
மெய்யெ லாமணி யிடந்தொறு மிடைந்தி லகவே. (௧௨)

நெஞ்ச லஞ்சல மரும்பிறவி நீடு வினையிற்
சஞ்ச லஞ்சல மகன்றதன தன்பர் குழுவை
யஞ்ச லஞ்சலென மஞ்சொலென விஞ்சு சரண்மேற்
செஞ்சி லம்பொடு பொலங்கழல் சிலம்ப மிகவே. (௧௩)

வேறு.

அந்தி வான்பெரு மேனியன் கறைமிட றணிந்த
வெந்தை தன்வடி வாயவ னுதல்விழி யிடையே
வந்து தோன்றியே முன்னுற நின்றனன் மாதோ
முந்து வீரபத திரனெனுந் திறலுடை முதல்வன். (௧௪)

அங்க வேலையி லுமையவள் வெகுளியா லடல்செய்
நங்கை யாகிய பத்திர காளிகைய நல்குச்
செங்கை யோரிரண் டாயிரம் பாதிசெம் முகமாய்த்
துங்க வீரபத் திரன்றனை யடைந்தன டுணையாய். (௧௫)

எல்லை தீர்தரு படைக்கலத் தியைபுமவ் விறைவற்
புல்லு கின்றதோர் திறலுடைத் துணைவியும் போலத்
தொல்லை வீரனுந் தேவியு மேவரு தொடாமை
யொல்லை காணுறா மகிழ்ந்தனர் விமலனு முமையும். (௧௬)

தன்னை வந்தடை பத்திரை தன்னொடு தடந்தாண்
மன்னு வார்கழல் கலித்திட வலஞ்செய்து வள்ள
லன்னை தாதையை வணங்கியே யவாதமை நோக்கி
முன்ன நின்றுகை தொழுதன ளிவைசில மொழிவான. (௧௭)

மால யன்றனைப் பற்றிமுன் றந்திடோ மறவெங்
கால னாவியை முடித்திடோ வசுரரைக் களைகோ
மேலை வானவர் தம்மையுந் தடிந்திடோ வேலை
ஞாலம் யாவையும் விழுங்குகோ வுலகெலா நடுக்கோ. (௧௮)

மன்னு யிர்த்தொகை துடைத்திடோ வரம்பில வாகித்
துன்னு மண்டங்க டகர்த்திடோ நுமதுது மலர்த்தாள்
சென்னி யிற்கொடே யாவதொன் றென்னினுஞ் செய்வ
னென்னை யிங்குநீர் நல்கிய தெப்பணிக் கென்றான். (௧௯)

என்ற வீரனை நோக்கியே கண்ணுத லெம்மை
யன்றி வேள்விசெய் கின்றனன் றக்கனவ் விடைநீ
சென்று மற்றெம தவியினைக் கேட்டியத் தீயோ
னன்று தந்தன னேயெனி னிவ்விடை நடத்தி. (௨0)

தருத லின்றெனி னனையவன் றலையினைத் தடிந்து
பரிவி னுலவன் பாலுறு வோரையும் படுத்துப்
புரியு மெச்சமுங் கலக்குதி யங்கது பொழுதின்
வருது மாயிடை யேகுதி யென்றனன் வள்ளல். (௨௧)

அந்த வேலையிற் பத்திரை தன்னொடு மடவின்
முந்து வீரனவ் விருவர்தம் பதங்களின் முறையாற்
சிந்தை யன்புடன் வணங்கியே விடைகொண்டு சிவனை
நிந்தை செய்தவன் வேள்வியை யழித்திட நினைந்தான். (௨௨)

உன்னி மற்றவ னீங்கியே யாற்றவு முருத்துத்
தன்னு யிரப்பினு லளவையில் கணங்களைத் தந்து
துன்னு கின்றமெய் வியர்ப்பினுற் சிலவரைத் தொகுத்து
வன்னி போன்மயிர்க் காறுறுஞ் சிலவரை வகுத்தான். (௨௩)

மொழியி னிற்பல பூதரை யளித்தனன் முளரி
விழியி னிற்பல பூதரை யளித்தனன் வேணி
யுழியி னிற்பல பூதரை யளித்தனன் னுந்திச்
சுழியி னிற்பல பூதரை யளித்தனன் றூயோன். (௨௪)

தோளி லெண்ணிலா வீரரை யளித்தனன் சுவையின்
கோளி லெண்ணிலா வீரரை யளித்தனன் குளிர்பொற்
றாளி லெண்ணிலா வீரரை யளித்தனன் றடக்கை
வாளி லெண்ணிலா வீரரை யளித்தனன் வலியோன். (௨௫)

கையி னிற்சில பூதரை யளித்தனன்களத்தில்
வெய்ய மார்பினிற கன்னத்திற் சிலவரை விதித்தா
னைய தோர்முழுந் தாடனிற சில்வரை யளித்தான்
குய்ய மீதினி லூருவிற் சிலவரைக் கொடுத்தான். (௨௬)

இன்ன தன்மையில் வீரபத் திரனெனு மிறைவன்
றன்னை நேர்வரு மெண்ணிலா வீரரைத் தந்து
துன்னு கின்றுழிப் பத்திரை யென்பதோர் துணைவி
யன்ன பண்பினிற் காளிக டொகையினை யளித்தாள். (௨௭)

வீர பத்திர வுருத்திரன் வேறுவே றளித்த
சார தர்க்குளங் கோர்சிலா நீனிறந் தழைபபோர்
கோர பத்திர மணிக்கலன் மின்னுவிற் குலவக்
காரெ னப்பொலிக் துருமெனக் கழறுகின் றனரால். (௨௮)

அக்கு மாலையு மணிகளு முடுக்கள்போ லவிரப்
பக்க வாணிலா வெயிறுகள் பிறையெனப் பயில
மிக்கு நீடிய வடிவின ராகியே மேலாஞ்
செக்கர் வானெனச் சேர்ந்தெழு பூதர்கள் சிலரே. (௨௯)

அண்ட ரைத்தொலை வித்திடும் வீரனை யடைந்தோர்
பிண்ட முற்றும்வா ளிறத்தினர் பூதரிற் பெரியோர்
பண்டி ரைத்தொரு முனிமகன் பின்றொடர் பாலின்
றெண்டி ரைக்கடற் றிரைகளெனக் கிளர்ந்தனர் சிலரே. (௩௦)

வெம்பொன் மேனிய ரனுகுறி னவர்தமை விரைவிற்
பைம்பொன் மேனிய ராக்குமேத திருநிழல் பரப்பி
யம்பொன் மார்புடை முகுந்தனில் வடிவுடை யவராய்ச்
செம்பொன் மால்வரை நிரையெனத் தோன்றினர் சிலரே. (௩௧)

மேய வான்பசப் பூர்தரு மேனிய ராகிக்
காய மீதணை யெனப்படாக் கணக்கின ராகி
மாயர் கண்டியில் சேக்கையைத் தங்கணே வருத்தாச்
சேய தொன்மரத் தொகையெனக் கெழீஇயினர் சிலரே. (௩௨)

வேறு.

அங்க வர்க்கு ளடல்விடை யானனந்
தங்கி நின்று தயங்கின ரோர்சிலர்
பொங்கு சீற்றப் பொருதிறல் வாளுளைச்
சிங்க மாமுக மாய்த்தெழுந் தார்சிலர். (௩௩)

புழைகொள் கையுடைப் போர்வலி யாளியின்
முழைகொண் மாமுக மாகிமொய்த் தார்சிலர்
வழுவை யானன மன்னின ரோர்சில
ருழுவை யின்முக மாகியுற் றார்சிலர். (௩௪)

அலைமு கப்பரி யானன மெய்தியே
கொலைமு கத்துக் குழீஇயின ரோர்சிலர்
மலைமு கத்து மரைகளி றெண்குடன்
கலைமு கத்துக் கவினடைந் தார்சிலர். (௩௫)

இனையர் தங்குழு வெண்ணில வன்னாகைப்
புனைய நின்ற பொருபடை யெண்ணில
வினைகொள் வன்மையும் வீரமு மீற்றென
வினைவ தறகரி தெங்ங னிகழ்த்துகேன். (௩௬)

கையி லெண்ணில் படையினர் காய்கனற்
செய்ய பூணினர் தீக்கலுழ் கண்ணினர்
வெய்ய சொல்லர் வெருவரு மேனியர்
வையம் யாவு மடிக்குறும் வாயினர். (௩௭)

கட்டு செஞ்சடைக் கற்றையர் காய்ந்தெழு
நெட்ட ழற்கு நிகர்வரு நாவினர்
வட்டி மாலைகண் மானு மெயிற்றினர்
தொட்ட மூவிலைச் சூலந் துளக்குவார். (௩௮)

துண்ட மீது சொரிதருந் தீயின
ரண்ட கூட மலைத்திடு கையினர்
சண்ட மாருதந் தாழ்க்குஞ் செலவின
ருண்டு போரென் றுளந்தளிர்ப் பெய்துவார். (௩௯)

மடித்த வாயினர் வானவ ரென்பினூற்
றொடுத்த கண்ணி துயல்வரு மார்பினர்
தடித்த தோளர் தனித்தழ லென்னினும்
பிடித்து நுங்கும் பெரும்பசி மிக்குளார். (௪0)

நச்சிற் றீயவர் நானில மங்கையு
மச்சுற றெஞ்ச வடிகள் பெயர்த்துளார்
கச்சைத் தோன்மிசை கட்டி யதட்டிய
ருச்சிட் டமமென் றுலகினை யுண்கிலார். (௪க)

சூழி யானை துவன்றிய மால்வரைப்
பாழி யாகப் படர்செவி வாயின
ரூழி மாருத முட்கு முயிர்ப்பின
ராழி யாக வகன்ற வகட்டினர். (௪உ)

ஆழ்ந்த சூர்ப்பகங் கண்ண ரடித்துணை
தாழ்ந்த கையர் தடக்குறுந் தாளினர்
வீழ்ந்து மிக்க வியன தரத்தினர்
சூழ்ந்த பூதத் தொகையினர் யாவரும். (௪௩)

வேறு.

அத்தகை நின்றிட வண்ண லுடன்சேர்
பத்திர காளி பயந்திடு கின்ற
கத்து கடற்புரை காளிக டம்மை
யித்துணை யேயென வெண்ணரி தாமால். (௪௪)

அந்தமில் பல்படை யங்கையி லேந்தி
யுந்திய தும்பைக ளுச்சி மிலைச்சிச்
சுந்தர மெய்திய தோற்றம தாகி
யிந்தை யெனச்சிலர் மேவின ரன்றே. (௪௫)

தோளின் மிசைத்திரி சூலமி லங்கக்
கோளி லுயிர்ப்பலி கொள்கல னேந்தித்
தாளிடை நூபுர சால மிலங்கக்
காளிகள் போற்சிலர் காட்சி மலிந்தார். (௪௬)

வாகினி யெங்குள வென்றிட மல்கு
மோகினி போற்சிலர் மொய்த்தனர் மாயச்
சாகினி போற்சிலர் சார்ந்தன ரல்லா
யோகினி போற்சில ருற்றன ரம்மா. (௪௭)

அயிருற வண்ட மனைத்தையு மெற்று
வுயிரவி நுங்கிய வுன்னி யெழுந்தே
செயிரவி யாது தெழித்திடு தொன்னாள்
வயிரவி போறசிலர் மன்னினர் மாதோ. (௪அ)

நீடலை மாலை நிலத்திடை தோய
வாடுறு பாந்த ளணிக்கலன் மின்ன
வீடுறு வானுரு மேறென வார்த்தே
மோடிக ளாமென மொய்த்தனர் சில்லோர். (௪௯)

இவ்வகை மாதர்கள் யாவரும் வெவ்வே
றைவகை மேனிய ராய்வத னங்கள
கைவகை யெண்ணில ராய்க்கவின் மாட்சிச
செவ்விய ராய்ச்செரு மேற்கிளர் கின்றார். (௩௰)

வேறு.

கணந்திக ழனைய பூதர் காரிகை மார்கள் யாரு
மணங்குறு காளி தன்னோ டாண்டகை வீரன் றாளிற்
பணிந்தனர் பரசி யன்னார் பாங்கரில் விரவிச் சூழ்ந்து
துணங்கைகொ டாடிப பாடித துள்ளியே போத லுற்றார். (௩௧)

ஈட்டமிக் கெழுந்து செல்லு மின்னதோர் பூதர் தம்மின்
மோட்டிகற் பானு கம்பன் முதலிய கணங்கண் முத்தி
வீட்டுடைத் தலைவ னான வீரபத் திரன்முன் னாகி
யீட்டுடைப் பல்லி யங்கள் யாவையு மியம்பிச் சென்றார். (௩௨)

கொண்டுபே ராற்ற லோடுங் குலவிய வீரன் றன்பா
லண்டமே லுரிஞ்சப் பல்வே றணிபபெருங் கவிகை கொண்டும்
விண்டுலாங் கவரி யீட்டம் வீசியுஞ் சேற லுற்றார்
தண்டனே பிறுகி சிங்க னாதியாந் தறுகட் பூதர். (௩௩)

பாசிழை மகளிர் சில்லோர் பததிரை பாங்க ராகித
தேசுடைக் கவிகை யீட்டந் திருநிழல் பரபப வேந்தி
மாசறு கவரி வட்டம் வரம்பில விரட்டிப் பல்வே
றூசிகள் புகன்று செம்பொ னணிமலா சிதறிப போந்தார். (௩௪)

படர்ந்திடு புணரி போலப் பார்முழு தீண்டித் தானை
யடங்கலு மார்க்கு மோதை யகிலமுஞ் செறிய விண்ணு
முடைந்தகவ் வண்டங் கொலலோ வுதுகொலோ விதுவோ வெனவு
மிடைந்தபல் லண்டத தோருமவ் விதிரபபொடுமெ விளம்ப லுற்றார். (௩௫)

பூழிக ளெழுந்த வம்மா புவியெலாம பரவித தொலபே
ராழியு மடைதது வான்புக் கச்சுதன பதஙகா றேகி
யூழியின் முதல்வ னார்க்கு மொலியினு லுடைந்த வண்டப
பாழிக டொறுமுற் றெல்லாப புவனமும பரந்த வன்றே. (௩௬)

அங்கெழு பூழி தன்னு லவர்விழி கலுழுந் தீயாற்
செங்கையிற் படைக டேய்ப்பச் சிதறிய கனலால வையம்
மெங்கணு மெரிக டுன்னி யிரும்புகைப படல மீண்டிக
கங்குலுமப பகலுங் காணுக் கடைபபகல் போன்ற தன்றே. (௩௭)

இப்பெருந் தானை சூழ வெம்பிரா னெழுந்து சிற்றத்
தப்புட னேகித் தக்கன் றொன்மகம் புரியுஞ் சாலை
வைப்பினை யணுகித் தன்பால் வருபடைத் தலைவாக் கொன்று
செப்பின னென்ப மன்னோ சேணுரு மேறு நாண. (௩௮)

பற்றலர் புரமூன் றட்ட பரமனை யிகழ்ந்து நீக்கிச்
சிற்றினம் பொருளென் றுன்னிச் சிறுவிதி யென்னுந் தீயோ
னிற்றிடு நெறியால் வேள்வி யியற்றுமிச் சாலை வாயில்
சுற்றொடு சேமஞ் செய்து துயக்கறக் காத்தி ரென்றான். (௩௯)

என்றலுந் தானை யோர்க ளெயிற்புற மூற்றுஞ் சூழ்ந்து
நின்றனர் வானி னூடு நெருங்கினர் வாய்த ரேறுஞ்
சென்றனர் கொடிய தக்கன் சேனையா யெதிர்ந்தோர் தம்மைக்
கொன்றன ரவருன் றுய்த்துக் கூற்றனு முட்க வார்த்தார். (௬௦)

ஆ திருவிருத்தம் க,௫௮௬.

வசனம்.

அப்பொழுதெமதிறைவன் இறைவியின் எண்ணப்படி முடிக்கத்திருவுளம் பற்றினவுடனே நெற்றிக் கண்ணினின்றும் அகோர வீரபத்திரர் தோன்றிப் பரம சிவனைத் தொழுது நின்றார். அந்தச் சமயத்தில, உமையவளுடைய கோபக்கண்ணினின்றும் பத்திரகாளி தோன்றி வீரபத்திரருக்கருகே நின்றாள்.

அவ்விருவரையும் சிவபெருமான் கண்டு கிருபை செய்தபோது அவர்கள் இறைவரையும் பிராட்டியாரையும் தொழுது நின்று எங்களைப்படைத்தற்குக் காரணம்யாது? எங்களைக்கொண்டு என்ன காரியம் ஆகவேண்டியது? அதனைக் கட்டளையிடவேண்டுமென்றார்கள். அப்பொழுது இறைவன் அவர்களை நோக்கித் தக்கன் எம்மையொழித்து ஒரு யாகஞ் செய்கிறான். அங்கே போய் நீவிர் எனக்கு அவிர்ப்பாகந் தந்தால் வாங்கி வரக்கடவீர். மறுப்பானாயின், அந்த யாகத்தையழித்து, அங்குவந்திருக்கிற தேவர்களையும் அதம்பண்ணி வாருங்கள் என்று சொல்ல, அவர்கள் தமது வேர்வையினின்றும் மயிர்க்கால்களினின்றும் அநேக பூதங்களையுங்காளிகளையும் படைத்தார்கள். அவர்கள் சூழ்ந்துவர வீரபத்திரர் காளியோடு இரதத்திலேறிச் சென்று யாகசாலையை யடைந்து பூதத்தலைவரை நோக்கி, நீங்கள் இந்த வாயிலினின்றுகொண்டு ஒருவரையும் வெளியேறவொட்டாமல் காக்கக்கடவீரென்று கட்டளையிட, அவர்களும் அப்படியே வளைந்து நின்று, அங்குள்ள காவலரைக் கொன்று தின்று ஆர்ப்பரித்திருந்தார்கள்.

வீரபத்திரப்படலம் முற்றிற்று.

---

# யாகசங்காரப்படலம்.

ஆர்த்தலு மிறைவி தன்னோ டாண்டகை வீரன் வாசத்
தார்த்தொகை தூங்கும் யாக சாலையு ளேக லோடுந்
தீர்த்தனைத் தலைவி தன்னைத் திசைமுகன் முதலோர் யாரும்
பார்த்தன ருளந்துண் ணென்று பதைபதைத் தச்சங் கொண்டார். (க)

மேடங்களின் வரவு கண்ட மானினம் போன்றும் வானத்
தடங்கிய வுருமே றற்ற வரவினம் போன்றும் யாக்கை
நடுங்கின ராற்றல் சிந்தி நகையொரீஇ முகனும் வாடி
யொடுங்கின ருயிரி லார்போ லிவைசில வுரைக்க லுற்றார். (உ)

ஈசனு முமையு மேவந் தெய்தின ரென்பா ரன்னார்
காய்சின முதல வந்த காட்சியர் காணு மென்பார்
பேசரி தந்தோ வந்தோ பெரிதிவர் சீற்ற மென்பார்
நாசம்வந் திட்ட தின்றே நம்முயிர்க் கெல்லா மென்பார். (௩)

தக்கனுக் கீறுமின்றே சார்ந்தது போலு மென்பார்
மிக்கதோர் விதியை யாரே விலக்கவல் லார்க ளென்பார்
முக்கணெம் பெருமான் றன்னை முனிந்திகழ் கின்ற நீரா
ரக்கண முடிவ ரென்றற் கையமு முண்டோ வென்பார். (௪)

விமலனை யிகழு கின்றான் வேள்வியேன் புரிந்தா னென்பார்
நமையெலாம் பொருளென் றுன்னி நடத்தினன் காணு மென்பா
ரிமையவர் குழுவுக் கெல்லா மிறுதியின் றாமோ வென்பா
ருமையவள் பொருட்டா லன்றோ வுற்றதீங் கிதெலா மென்பார். (௫)

ஈடுறு பூதர் யாரு மெங்கணும் வளைந்தா ரென்பா
ரோடவு மரிதிங் கென்பா ரொளிதற் கிடமே தென்பார்
வீடினங் காணு மென்பார் மேலினிச் செயலென் னென்பார்
பாடுசூ ழங்கி நாப்பட் பட்டபல் களிறு போன்றார். (௬)

அஞ்சின ரினைய கூறி யமரர்க ளரற்றை கூரச்
செஞ்சர ணதனை நீங்காச் சிலபெரும் பூதர் சூழப்
பஞ்சுறழ் பதுமச் செந்தாட் பத்திரை யோடு சென்று
வெஞ்சின வீரன் வெய்யோன் வேள்விசெய் வதனைக் கண்டான். (௭)

இடித்தென நக்குப் பொங்கி யெரிவிழித் திகலி யார்த்துப்
பிடித்தனன் வயக்கொம் போதை பிளந்தது செம்பொன் மேரு
வெடித்தது மல்லன் ஞாலம் விண்டன வண்டம் யாவுந்
துடித்தன வுயிர்கண் முற்றுந் துளங்கினா சுரர்க ளெல்லாம். (௮)

எழுகின்ற வோசை கேளா விடியுண்ட வரவிற் சோரா
விழுகின்றார் பதைக்கின் றார்வாய் வெருவுகின் றார்க ளேங்கி
யழுகின்றா ரோடு கின்றா ரழிந்தவ்வே ள்வி யென்று
மொழிகின்றார் மீளு கின்றார் முனிவரு மிமையோ ராமும். (௯)

வானவர் பிறரில் வாறு வருந்தின ரென்னி னங்க
ணனையர் பட்ட தன்மை யியம்பரி தெவர்க்கு மென்றா
லனது புகல வற்றோ நளிர்புனல் வறந்த காலத்
தானதோ ருருமே றுற்ற வசுணமாத் தன்மை பெற்றார். (௰)

வேலையங் கதனின் மேலாம் வீரருள் வீர னேகி
மாலயன் றானு முட்க மகத்தின்முன் னடைத லோடுஞ்
சீலம தகன்ற கொள்கைச் சிறுவிதி யவற்கண் டேங்கிச்
சாலவு நடுக்குற் றுள்ளந் தளர்ந்தனன் றலைமை நீங்கி. (௧௧)

சாரதர் வளைந்த வாறுஞ் சாலைய துடையு மாறு
மாருமங் குற்ற வாறோ ரயர்வுறு மாறு நோக்கிப்
பேரஞ ருழந்து தேறிப் பெருந்திற லாளன் போல
வீரபத் திரனை நோக்கி விளம்பின னினைய தொன்றே. (௧௨)

இங்குவந் தடைந்த தென்கொல் யாரைநீ யென்ன லோடுஞ்
சங்கரன் றனது சேயான் றக்கனின் வேள்வி தன்னி
னங்கவற் குதவும் பாக மருளுதி யதற்கா வந்தப்
புங்கவ னருளி னாலே போந்தன னீண்டை யென்றான். (௧௩)

இத்திறம் வீரன் கூற விருந்தவத் தக்க னுங்க
ளத்தனுக் குலகம் வேள்வி யதனிடை யவியின் பாக
மூய்த்திடா தென்ன வங்க னுறைதரு மறைக ணன்குஞ்
சுத்தமார் குடிலை தானுந் துண்ணென வெழுந்து சொல்லும். (கச)

ஈறிலா வுயிர்கட் கெல்லா மிறையவ னொருதா னுகு
மாறிலா வரனே யல்லான் மகத்தினுக் கிறையா யுள்ளோன்
வேறொர்வா னவனு முண்டோ வேள்வியி லவற்கு நல்குங்
கூறுநீ பாணி யாது கொடுத்தியா லென்ற வன்றே. (கரு)

தேற்றமில் சிதட னுகுஞ் சிறுவிதி கேட்ப வின்ன
கூற்றினன் மறைக ளன்குங் குடிலையு மொருங்கு கூடிச்
சாற்றலு மன்னு னல்காத் தலைமைகண் டிறைவன் றொல்சீர்
போற்றியங் ககன்று தத்தம் புகலிடம் போய வன்றே. (கசு)

போதலுந் தக்கன் றன்னைப் பொலங்கழல் வீரன் பாரா
வேதமும் பிறவுங் கூறும் விழுப்பொருள் கேட்டி யன்றே
யீதியெம் பெருமாற் குள்ள வின்னவி யெனலுங் காணிற்
பேதையொ டாடல் செய்யும் பித்தனுக் கீயே னென்றான். (கஎ)

ஆங்கது கேளா வண்ண லம்புய னாதி யாகிப்
பாங்குற விரவும் வானோர் பலருழு வதனை நோக்கி
நீங்களு மிவன்பா லானீர் கிமலனுக் கவிநல் காம
லீங்கிவ னிகழுந் தன்மை யிசைவுகொ ளுமக்கு மென்றான். (கஅ)

என்றலு மனையர் தொல்லூ ழிசைவினு லதுகே ளார்போ
லொன்றுமங் குரையா ராகி யூமரி னிருத்த லோடு
நின்றதோர் வீரன் வல்லே நெருப்பெழ விழித்துச் சீறி
நன்றிவர் வன்மை யென்னு நகையெயி றிலங்க நக்கான். (ககூ)

கடித்தன னெயிறு செந்தீக் கான்றனன் கனன்று கையிற்
பிடித்திடு மேரு வன்ன பெருந்திறற் கதைய தொன்றாற்
றடித்திடு மகல மார்பத் தடவரை யகடு சாய
வடித்தனன் றக்க னுள்ளம் வெருவர வரிமுன் வீழ்ந்தான் (உ0)

விட்டுமுன் வீழ்த லோடும் வீரருள் வீரத் தண்ணன்
மட்டுறு கமலப் போதில் வான்பெருங் புவிசில வைகுஞ்
சிட்டனை நோக்கி யன்னான் சிரத்திடை யுருமுற றென்னக்
குட்டின னொருதன் கையான் மேல்வருங் குமர னேபோல். (உக)

தாக்குத லோடு மையன் சரணிடைப் பணிவான் போல
மேக்குறு சென்னி சோர விரிஞ்சனும் வீழ வன்னான்
வாக்குறு தேவி தன்னை மற்றவா தமமை வாளான்
மூக்கொடு குயமுங் கொய்தா னிறுதிநாண் முதல்வன் போல்வான். (உஉ)

ஏடுலாந் தொடையல் வீர னித்திற மிவரை முன்னஞ்
சாடினு னதுகண் டங்கட் சார்தரு மிமையோர் யாரு
மோடினா ருலந்தார் வீழ்ந்தா ரொளித்திடற் கிடமே தென்று
தேடினா ரொருவ ரின்றிச் சிதறினர் கதறு கின்றார். (உங)

வேறு.

இன்னதோர் காலையி லிரிந்து போவதோர்
மெய்க்கிறை மதியினை வீரன் காணுறூத
தன்னொரு பதங்கொடே தள்ளி மெலமெலனச்
சின்மை துறவுட றேய்த்திட் டானரோ. (௨௪)

அடித்தலங் கொடுமதி யதனைத் தேய்ததபின்
விடுத்தனன் கதிரவன் வெருவி யோடலு
மிடித்தெனக் கவுளிடை யெறறி னனவ
ணுதித்திர ளுதிர்ந்தென வுகுபபந்த தந்தமே. (௨௫)

எறித்தரு கதிரவ னெயிறு பார்மிசைத்
தெறித்திட வுயிரொரீஇச் சிதைந்து வீழதலும்
வெறித்தரு பகனெனும வெய்ய வன்விழி
பறித்தனன் றகுவதோர் பரிசு நலகுவான். (௨௬)

தொட்டலும் பகன்விழித் துணையை யித்திறம்
பட்டது தெரிந்துயிர் பலவும பைப்பைய
வட்டிடு கூற்றுவ னலமந் தோடலும்
வெட்டின னவன்றலை வீர வீரனே (௨௭)

மடிந்தனன் கூற்றுவ னாக வாசவ
னுடைந்தனன் குயிலென வுருக்கொண் டும்பரி
லடைந்தன னதுபொழு தண்ணல கண்ணுறீஇத்
தடிந்தனன் வீட்டினன் றடக்கை வாளினால. (௨௮)

அண்டர்கோன் வீழ்தலு மலமந் தோடிய
திண்டிற லங்கியைத் திறலகொள சேவகன்
கண்டன னங்கவன் கரததை யொல்லையிற
றுண்டம தாகவே துணித்து வீட்டினான். (௨௯)

கறுத்திடு மிடறுடைக் கடவுட் டேவனை
மறுததவ னல்கிய வரம்பி லுண்டியும்
வெறுததிலை யுண்டியா லென்று வீரனு
மறுத்தன னெழுதிறத் தழலி னாக்களை. (௩0)

துள்ளிய நாவொடுந் துணிந்த கையொடுந்
தள்ளுற வீழ்ந்திடுந் தழலின் றேவியை
வள்ளுகி ரைக்கொடு வலங்கொ ளாசியைக்
கிள்ளினன் வாகையாற் கிளர்பொற றோளினான். (௩௧)

அரித்தனைக் கின்னதோ ராணை செய்திடு
மொருதனித திறலினா னும்பா மேலெழு
நிருதியைக் கண்டன னிற்றி யாலெனாப
பொருதிறற் றண்டினாற் புடைததிட் டானரோ. (௩௨)

வீட்டின னிருதியை வீரன் றன்பெருந்
தாட்டுணை வீழ்தலுந் தடித லோம்பினா
னோட்டினன் போதிரென் றுரைத்துச் செந்நெறி
காட்டின னுருத்திர கணத்தர்க் கென்பவே. (௩௩)

ஒழுக்குட னுருத்திர ரொருங்கு போதலு
மெழுகொடு வருணனை யெற்றிச் செங்கையின்
மழுகொடு காலினை மாய்த்து முத்தலைக்
கழுக்கொடு தனதனைக் கடவுள் காதினான். (௧௪)

எட்டெனுந் திசையினோ னோங்கி வெள்கியே
யட்டிடுங் கொல்லென வஞ்சிப் போற்றலுங்
கிட்டினன் வைதனன் கேடு செய்திலன்
விட்டன னுருத்திரர் மேவுந் தொன்னெறி. (௧௫)

தாணுவி னுருக்கொடு தருக்கு பேரினா
னொணொடு போதலு நடுந டுங்கியே
சோணித புரத்திறை துண்ணென் றோடுழி
வேணுவி னவன்றலை வீரன் வீட்டினான். (௧௬)

மணனயர் சாலையின் மகத்தின் றெய்வதம்
பிணையென வெருக்கொடு பெயர்ந்து போதலுங்
குணமிகு வரிசிலை குனித்து வீரனோர்
கணைதொடுத் தவன்றலை களத்தில் வீட்டினான். (௧௭)

இரிந்திடு கின்றதோ ரெச்ச னென்பவன்
சிரந்துணி படுதலுஞ் செய்கை யிவ்வெலா
மரந்தையொ டேதெரிந் தயன்றன் காதலன்
விரைந்தவ னெழுந்தனன் வெருக்கொள் சிந்தையான். (௧௮)

விட்டனன் றிண்மையை வெய்ய தோர்வலைப்
பட்டதோர் பிணையெனப் பதைக்குஞ் சிந்தையான்
மட்டிட வரியவிம் மகமு மென்முனங்
கெட்டிடு மோவெனா விவை கிளத்தினான். (௧௯)

ஊறக னான்முகத தொருவன் வாய்மையாற்
கூறிய வுணாவினைக் குறித்து நோற்றியா
னாறணி செஞ்சடை யமலன் றந்திட
வீறகல் வளம்பல வெய்தி னேனரோ. (௨௦)

பெருவள நல்கிய பிரானைச் சிந்தையிற்
கருதுதல் செய்திலன் கசிந்து போற்றிலன்
திருவிடை மயங்கினன் சிவையை நல்கியே
மருகனென் றவனையான் மன்ற வெள்ளினேன். (௨௧)

வேதநூல் விதிமுறை விமலற கீந்திடு
மாதியா மவிதனை யளிக்கொ ணாதெனத்
தாதையோன் வேள்வியிற றடுத்தி யானுமிவ்
வேதமா மகத்தனை யியற்றி னேனரோ. (௨௨)

தந்தைசொல் லாமெனுந் ததீசி வாய்மையை
சிந்தனை செய்தன னீடு வேள்வியில்
வந்தவென் மகடனை மறுத்துக் கண்ணுதன்
முந்தையை யிகழ்ந்தனன் முடிவ தோர்கிலேன். (௨௩)

அன்றியும் வீரனின் றவியை யீதியா
லென்றனு மவன்றனை யெண்ண நோக்கியு
நன்றென வீந்திலன் மறையு நாடிலேன்
பொன்றிட வந்தகொ லினைய புந்தியே. (சச)

அல்லியங் கமலமே லண்ண லாதியாச்
சொல்லிய வானவர் தொகைக்கு நோற்றிட
வல்லபண் ணவர்க்குமவே தியர்க்கு மற்றவ
ரெல்லவர் தமக்குமோ ரிறுதி தேடினேன். (சரு)

துதிதரு மறைப்பொருட் டுணிபு நாடியு
நதிமுடி யமலனை நன்று நிந்தியா
விதுபொழு திறப்பதற் கேது வாயினேன
விதிவழி புந்தியு மேவு மேகொலாம். (சசு)

எனத்தகு பரிசெலா மினைந்து தன்னுடை
மனத்தொடு கூறியே மாறு மெல்லையி
னினைத்தறி வின்மையை யிகழ்ந்தி நுவதென்
னினிச்செய லென்னென வெண்ணி நாடினன். (சஎ)

பாடுறு சாரதர் பரப்பும் வேள்வியி
னாடுறு வீரன தாரமுஞ் சீற்றமுஞ்
சாடுறு பத்திரை தகவுங் கண்ணுறீஇ
யோடுவ தரிதென வுன்னி யுன்னிமேல். (சஅ)

சென்றதோ ருயிரொடு சிதைந்த தேவர்போற
பின்றுவ னென்னினும் பிழைப்ப தில்லையால
வன்றிறல் வீரன்முன் வன்மை யாளரபே
னின்றிட றுணிபெனத் தக்க னிறபவே. (சகூ)

வேறு.

கண்டு மற்றது வீரபத் திரனெனுங் கடவுள
கொண்ட சீறறமொ டேகியே தக்கனைக் குறுகி
யண்ட ரோடுநீ யீசனை யிகழ்ந்தனை யதனாற
றண்ட மீதென வாள்கொடே யவன்றலை தடிந்தான். (ருo)

அற்ற தோர்சென்னி வீழ்மு னிறைவனங் கையினுற
பற்றி யாயிடை யலமரு பாவகற் பரிரார
திற்றி யீதெனக் கொடுததலன் கொடுததலுஞ் செந்தீ
மற்றொர் மாததிரைப போதினின் மிசைந்தது மன்றோ. (ருக)

மெல்ல வேயெரி யத்தலை நுகர்தலும் வேத
வல்லி யாதியாந் துணைவியர் தக்கன்மா மகளிர
சில்லி ருங்குழ லூழ்வரச் செங்கரங் குலைந்தே
யொல்லை யத்திறங் கண்டனர் புலம்பிவந் துற்றார். (ருஉ)

அந்த வேலையின் மறைக்கொடி தன்னைமுன் னணுகி
முந்தி வார்குழை யிறுத்தன ளேனையர் முடியுந்
தந்த நங்கையர் சென்னியும் வாள்கொடு தடிந்து
கந்து கங்கள்போ லடித்தனள் பத்திர காளி. (ருங)

காளி யாம்பெயர்த் தலைவியுங் கருதலர் தொகைக்கோ
ராளி யாகிய வீரனு மேனையண் டர்களைக்
கேளி ராகிய முனிவரைத் தனித்தனி கிடைத்துத்
தாளி லார்ப்பினிற் றடக்கையிற் படைகளிற் றடிந்தார். (ருச)

மருத்து மூழியி லங்கியு மூற்றென மாது
முருத்தி ரப்பெரு மூர்த்தியும் வந்தென வுயர்சீர்
தரித்த வீரனும் பத்திர காளியுந் தக்கன்
றிருத்தும் வேள்வியைத் தொலைத்தனர் தனித்தனி திரிந்தே. (ருரு)

அண்ண றன்மையுந் தேவிதன் னிலைமையு மயரும்
விண்ணு ளோர்சிலர் நோக்கியே யாங்கணும் விரவி
யண்ணு கின்றனர் யாரையுந் தொலைக்குந ரம்மா
வெண்ணி லார்கொலாம் வீரனு மிறைவியு மென்றார். (ருசு)

இற்றெ லாநிகழ் வேலையின் வீரன திசைவாற்
சுற்று தானைய ரித்திற நோக்கியே சூழ்ந்த
பொற்றை போலுயர் காப்பினை வீட்டியுள் புகுந்து
செற்ற மோடுசென் றார்த்தனர் வானுளோர் தியங்க. (ருஎ)

சூர்த்த நோக்குடைப் பூதருங் காளிக டொகையு
மார்த்த காலையின் முனிவருந் தேவரு மயர்ந்து
பார்த்த பார்த்ததோர் திசைதொறு மிரிதலும் படியைப்
போர்த்த வார்கட லாமென வளைந்தடல் புரிய. (ருஅ)

வேறு.

தியக்குற்றனர் வெருளுற்றனர் திகைக்கிட்டனர் தெருள்போய்த்
துயக்குற்றனர் பிறக்குற்றனர் தொலைவுற்றனர் மெலியா
மயக்குற்றனர் கலக்குற்றனர் மறுக்குற்றனர் மனமே
லுயக்குற்றன ரிமையோர்களு முயர்மாமுனி வரரும். (ருகூ)

அளிக்கின்றனர் தமைத்தம்முனை யருண்மக்களை மனையைக்
களிக்கின்றதொ ரிளையோர்தமைச் சுற்றந்தனைக் கருதி
விளிக்கின்றனர் பதைக்கின்றனர் வெருக்கொண்டனர் பிணத்து
டொளிக்கின்றன ரவன்வேள்வியி லுறைகுற்றதொர் மறையோர். (சுo)

அலக்கட்படு மிமையோர்களு மருகாமுனி வரரு
நிலக்கட்படு மறையோர்களு நெடுநீர்க்கட லாகக்
கலக்குற்றனர் வரையாமெனக் கரத்தாற்புடைத் துதித்தா
ருலக்கிற்றிர ளாகச்சினத் துயர்மால்கரி யொத்தே. (சுக)

முடிக்குந்திறற் பெருங்கோளரி முழங்கிற்றென முரணு
லிடிக்கின்றனர் கலைமானென விமையோர்தமை விரைவிற்
பிடிக்கின்றன ரடிக்கின்றனர் பிறழ்பற்கொடு சிரத்தைக்
கடிக்கின்றன ரொடிக்கின்றனர் களத்தைப்பொரு களத்தில். (சுஉ)

முறிக்கின்றனர் தடந்தோள்களை முழுவென்புட னுடலங்
கறிக்கின்றன ரடிகாலினைக் களைகின்றனர் விழியைப்
பறிக்கின்றனர் மிதிக்கின்றனர் படுக்கின்றனர் சங்கங்
குறிக்கின்றனா குடிக்கின்றனர் குருதிப்புன றனையே. (சுங)

எடுக்கின்றனர் பிளக்கின்றன ரெறிகின்றன ரெதிர்போய்த்
தடுக்கின்றன ருதைக்கின்றனர் தடந்தாள்கொடு துகைத்துப்
படுக்கின்றனர் தலைசிந்திடப் படையாலையுந் தொடையா
விடுக்கின்றனர் மடுக்கின்றனர் மிகுமுனிவனைப் பகுவாய். (சுச)

நெரிக்கின்றனர் சிலர்சென்னியை நெடுந்தாள்கொடு மிதியா
வுரிக்கின்றனர் சிலர்யாக்கையை யொருசிறசிலர் மெய்யை
யெரிக்கின்றனர் மகத்தீயிடை யிழுதாகட்ட திட்டே
பொரிக்கின்றனர் கரிக்கின்றனர் புகைக்கின்றன ரம்மா. (சுரு)

அகழ்கின்றனர் சிலர்மார்பினை யவர்தங்குடர் சூடி
மகிழ்கின்றனர் நகைக்கின்றனர் மதர்க்கின்றனர் சிவனைப்
புகழ்கின்றனர் படுகின்றதொர் புலவோர்தமைக் காணு
மிகழ்கின்றன ரெறிந்தேபடை யேற்கின்றன ரன்றே. (சுசு)

கரக்கின்றதொர் முனிவோர்களைக் கண்டேதொடர்ந் தோடித்
துரக்கின்றனர் பிடிக்கின்றனர் துடிக்கும்படி படிமேற்
றிரக்குன்றுகொ டரைக்கின்றனர் தெழிக்கின்றனர் சிலனு
னிரக்கின்றதொர் கழுகின்றொகைக் கீகின்றனர் மாதோ. (சுஎ)

நெய்யுண்டனர் ததியுண்டனர் பாலுண்டனர் நீடுந்
துய்யுண்டன ரிமையோர்கடந் தொகைக்காமென வுய்க்கு
மையுண்டதொ ரவியுண்டனர் மகவேள்வியில் வந்தே
நையுண்டவ ருயிர்கொண்டிடு நாளுண்டவ ரெல்லாம். (சுஅ)

உகத்துக்கடை யனலைக்கட லுவர்நீர்தணித் தெனவே
மகத்திற்றிரி விதவேதியில் வைகுங்கன லதனை
மிகத்துப்புர வுளதென்றுகொல் வியப்பாதம தயிரி
னகத்துப்புனல் விடுத்தேவிரைந் தவித்தார்மக மழித்தார். (சுகூ)

தடைக்கொண்டதொர் சிறைதோறுள சாலைக்கத வெல்லா
மடைக்கின்றனர் தழலிட்டன ரவணுற்றவர் தம்மைத்
துடைக்கின்றனர் கலசத்தொடு தொடர்கும்பமும் விரைவா
லுடைக்கின்றனர் தகர்க்கின்றன ருதிர்க்கின்றன ருடுவை. (எ0)

தவக்கண்டகத் தொகையார்த்திடத் தனிமாமகத் தறியிற்
றுவக்குண்டய ரணிமேதகு துகளூர்பசு நிரையை
யவிழ்க்கின்றனர் சிலர்கங்கையி னலையிற்செல விடுவா
திவக்கும்படி வானேச்சினா சிலவெற்றினர் படையின். (எக)

பங்கங்கள் படச்செய்திடு பதகன்மகத் தனிற்போய்
கங்கங்களை முறிக்கின்றனர் கவின்சேரர மகளி
ரங்கங்களைக் கறிக்கின்றன ரறுக்கின்றன ரதனை
யெங்கெங்கணு முமிழ்கின்றன ரெறிகின்றன ரெவரும். (எஉ)

படுகின்றவர் வருமூர்த்தியும் படர்மானமுந் தேருஞ்
சுடுகின்றன ரவர்கொண்டிடு தொலைவில்படைக் கலமு
மிடுகுண்டல முடிகண்டிகை யெவையுந்தழ லிட்டே
சுடுகின்றுக ளாகப்பொடி கண்டார்திறல் கொண்டார். (எ௩)

அடிக்கொண்டதோர் மகச்சாலையு ளமர்வேதியை யடியா
லிடிக்கின்றனர் பொடிக்கின்றன ரிருந்தோரணத் தொகையை
யொடிக்கின்றனர் பெருந்தீயினை யுமிழ்கின்றனர் களிப்பா
னடிக்கின்றன ரிசைக்கின்றனர் நமனச்சுறுந் திறத்தோர். (௭௪)

தருபூதியினை யடுகின்றதோர் தக்கன்றனக் குறவா
மருமக்களைப பிடிக்கின்றனர் வாயாறபுக லொண்ணுக்
கருமத்தினைப் புரிகின்றனர் கரத்தாலவ ருரத்தே
யுருமுறறெனப் புடைக்கின்றன ருமிழ்விததன ரவியே. (௭௫)

தறிக்கின்றனர் சிலதேவரைத தலையாமயிர் முழுதும்
பறிக்கின்றனர் சிலதேவரைப் பாசங்கொடு தறியிற்
செறிக்கின்றனர் சிலதேவரைச் செந்தீயிடை வதக்கிக்
கொறிக்கின்றனர் சிலதேவரைக் கொலைசெய்திடுங் கொடியோர். (௭௬)

நாற்றிக்கினு மெறிகின்றனர் சிலர்தங்களை நல்லூன்
சேற்றுத்தலைப புதைககின்றனர் சிலர்தங்களைச் செந்நீ
ராறறுசகிடை விடுககின்றனா சிலர்தங்களை யண்டப்
பாறறுக்கிரை யிடுகின்றனர் சிலர்தங்களைப பலரும். (௭௭)

இடைந்தாரையும் விழுந்தாரையு மெழுந்தாரையு மெதிரே
நடந்தாரையு மிரிந்தாரையு நவையுற்றிட விறந்தே
கிடந்தாரையு மிருந்தாரையுங் கிளாந்தாரையும் விண்மேற்
படாந்தாரையு மவாககேறறதொா பலதண்டமும் புரிந்தார். (௭௮)

உலக்குறறிடு மகங்கண்டழு துளநொந்தனர் தளரா
மலக்குற்றிடு மணங்கோாதமை வலிதேபிடித தீர்த்துத்
தலக்கட்படு மலர்ப்பொய்கையைத் தனிமாலகரி முனிவாற்
கலக்கிற்றெனப புணாகின்றனா கணநாதரிற் சிலரே. (௭௯)

குட்டென்பதும் பிளவென்பதுங் கொல்லென்பதுங் கடிதே
வெட்டெனபதுங் குததென்பது முரியென்பதும விரைவிற்
கட்டென்பது மடியென்பது முதையென்பதுங் களத்தே
யெட்டென்பதோா திசையெங்கணு மெவரும்புகல் வனவே. (௮0)

கையற்றனர் செவியற்றனர் காலற்றனர் காமர்
மெய்யறறனா நாவறறனர் விழியற்றனர் மிகவு
மையுற்றிடு களமற்றன ரல்லான்மல ரயன்செய்
செய்யுற்றிடு மகத்தோர்களிற் சிதைவற்றவ ரிலையே (௮௧)

வேறு.

இததிறம் யாவரையு மேந்த ருனையும்
பததிரை சேனையும் பரவித தண்டியா
மெத்துறு மளைகெழு வேலை யிறபல
மத்துறு கின்றென மகததை வீட்டவே (௮௨)

செழுந்திரு வுரத்திடை தெருமா் துற்றிடத்
தொழுந்திறற் பரிசனந் தொலைய மாயவ
ளழுந்திடு கவலொடு மயர்வு யிர்த்தவ
னெழுந்தனன் மகம்படு மிறப்பு நோக்கினான். (௮௩)

திருத்தகும வேள்வியைச் சிதைவின் ருகயா
னருத்தியிற் காதத்து மழுகி தாலெனுக்
கருத்திடை யுன்னினன் கண்ணன் வெள்கியே
யுருத்தனன் மானகின் றுளத்தை யீரவே. (அஙு)

பரமனை யிகழ்ந்திடு பான்மை யோர்க்கிது
வருவது முறையென மனத்துட் கொண்டிலன்
றெருமரு முணர்வினன் றிறலகொள் வீரனமேற்
பொருவது கருதினன் பொருவி லாழியான். (அ௬)

உன்னினன் கருடனை யுடைந்த தாதனுங்
தன்னுறு சிறறமாங் தழலை யாங்கொரு
பொனனிருஞ் சிறையபுள் ளரச ஞககனு
மனைது வணங்கியே யரிமு னிறமே. (அ௭)

நிற்றலு மதன்கையி னீல மேனியான்
பொறறடந் தாளவையாப பொருக்கென் றேறியே
பறறின னைமபெரும் படையும வேளவியுண்
முறறுறு பூதாமேன் முனிவுற றேகினன். (அஎ)

எடுத்தனன் சங்கினை யிலங்கு செந்துவ
ரடுததிடு பவளவா யாரச சோததியே
படுததனன் பேரொலி பரவைத தெண்டிரைத
தடககட லுடைந்திடு தன்மை போலவே. (அஅ)

மீச்செலு மமரர்கள் புரிந்த வேள்வியந்
தீச்சிகை யுதவிய சிலையை வாங்கியே
தாசசெலும வசிகெழு சரங்க ளெண்ணில
வோச்சினன் வீரன துரவுத தானைமேல. (அசு)

காளிக டொகைகளுங் கழுதி னீட்டமுங்
கூளிக டொகைகளுங் குழுமி யேற்றெழீஇ
வாளிக டொகைசொரீஇ மாயற சூழ்வுறு
நீளிகல் புரிந்தன ரிகரில வன்மையார். (௯0)

தண்டுளா வலங்கலந் தடம்பொற றோளுடை
யண்டனுந் தனபடை யனைதது நேரகொடு
மண்டமா புரிதலை மறற வெலலையிற
கண்டன னைகததனன கடவுள் வீரனே. (௯க)

வெருவரும் பெருந்திறல் வீரன் றண்டுழா
யரியொடு போர்செய வாதி நாயகன
றிரைகட லுலகமுஞ் சிறிது தானென
வொருபெருந் தேரினை யுய்த்திட் டானரோ. (௯உ)

பாயிரந் தானெனப பகரும் வேதமா
மாயிரம் புரவிக ளளபபில கேதனங்
காயிரும் படைகள்... கலந்த தாகிய
மாயிருந் தேரவண் வல்லை வந்ததே. (௯௩)

தேரவண் வருதலுந் திறல்கொள் வீரனும்
பாரிடை வீழ்தயர் பங்க யாசன
னுருயிர் பெற்றென வறிவு பெற்றெழீஇ
நேரறு மகம்படு நிகழ்ச்சி நோக்கினன். (சு௪)

அரிபொரு நிலைமையு மாடல் வீரன
தருகெழு செற்றமு மும்பர் தன்னிடை
யிரதமவந் திட்டது மியாவு நோக்கியே
கருதினன் யானுயுங் கால மீதென. (சு௫)

விண்ணிழி தேரிடை விரைவி னான்முக
னண்ணினன் வலவனி னைகழுட் கோல்கொடு
துண்ணென நடத்தியே தொழுது வீரனும்
புண்ணியன் றனக்கிது புகறன் மேயினன். (சு௬)

நீறணி பவளமெய் நிமல னிறகிதோர்
வீறணி தேர்தனை விரைவி னுய்த்தனன்
றேறலர் தமையடுந் திறல்கொள் வீரநீ
யேறுதி றுணைவியோ டென்று போற்றினன். (சு௭)

போற்றின னிரத்தலும் பொருவில் வேதன்மேற்
சீறறமுள் ளதிலொரு சிறிது நீங்கியே
யாற்றல்கொள் வீரனெம் மன்னை தன்னுட
னேறறமொ டதன்மிசை யிமைப்பின் மேவினன். (சு௮)

மேவிய காலையில் வெலற்க ருந்திறற்
சேவக வடியனேன் றிறததைக் காண்கெனத்
தாவக றேரினைத் தண்டு மாய்முடிக்
காவலன் முன்னுறக் கடாவி யுய்ப்பபவே. (சு௯)

வரனுறு நான்முக வலவ னுய்த்திடு
திருமணித தோமிசைத் திகழ்ந்த வீரன்முன்
னொருதனி வையமே லும்பர்க் காகவே
புரமட வருவதோர் புராரி போன்றனன். (௧00)

எல்லையில் பெருந்திற லிறைவ னேறுதே
ரல்லியங் கமலமே லண்ண லுய்ததிட
சொல்லருந் தானையின் றொகையை நீக்கியே
வல்லைசென் றிறுத்ததம் மாயன் முன்னரே. (௧0௧)

பாருல களவினும் பரந்த பைம்பொனந்
தேரவ ணெதிர்தலுந் திருவு லாவிய
காருறழ் மேனியங் கண்ணன் கண்ணுதல்
வீரனை நோக்கியோர் மொழிவி ளம்பினன். (௧0௨)

வேறு.

தெழித்த வார்புனற் கங்கையஞ் சடைமுடிச் சிவனைப்
பழித்த தக்கனை யடுவதல் லாலவன் பாலி
விழுக்கி றேவரை யடுவதென் வேள்வியை யெல்லா
மழித்த தென்னைநீ புகலுதி யாவென வறைந்தான். (௧0௩)

பாடல்சான்றிடு மாலிது புகறலும் பலரு
நாடு தொல்புகழ் வீரனன் றிதுவென நகையா
வீடு சேரிமி லேறுடன் வயப்புலி யேறுன்
றூடல் செய்தல்போ லொருமொழி யுரைத்தன னன்றே. (கoச)

எல்லை யில்லதோர் பரமனை யிகழ்ந்தவ னியற்று
மல்லல் வேள்வியி லவிநுகர்ந் தோர்க்கெலா மறைமுன்
சொல்லு தண்டமே புரிந்தன னின்னையுந் தொலைப்பாம்
வல்லை யேலது காத்தியென் றனனுமை மைந்தன். (கoரு)

வீர னிங்கிது புகறலுஞ் செங்கண்மால் வெகுண்டு
பார வெஞ்சிலை குனித்தன னொலி படுத்தி
யாரும் விண்முகி லொன்றுதன் வில்லொடு மப்பு
மாரி பெய்தெனப் பகழியாற் பூதரை மறைத்தான். (கoசூ)

கணங்க டம்மிசை மால்சரம் பொழிதலுங் காணூஉ
வணங்கு தன்னொடு நகைசெய்து வீரனு மமலன்
பணங்கொள் பஃறலைப் பன்னகக் கிறைவனாற் படைத்த
குணங்கொண் மேருவே யன்னதோர் பெருஞ்சிலை குனித்தான். ()

செற்ற மீக்கொள வையன்வில் வாங்கினன் சிறிதே
பற்றி நாணொலி யெடுத்தலு மொடுங்கின பரவை
பொற்றை யாவையுங் கீண்டன துளங்கின புவன
மிற்றை வைகலோ விறுதியென் றயர்ந்தன ரெவரும். (கoஎ)

கோளி லாகிய புற்றிடை யோராராக் குறுகி
மீளில வெஞ்சினக குழுவிகொண் டேகலின் வீரன்
றோளில் வாங்கிய சிலையினிற் றாணியிற் றுதைந்த
வாளி வாங்கியுய்த் தொருதனி மாயனை மறைத்தான். (கoகூ)

செங்க ணன்றனை மறைத்தபின் மற்றவன் செலுதகூர்
துங்க வெங்கணை யாவையும் பொடிபடத் தொலைப்ப
வங்கொ ராயிரம் பகழியை யைதெனப் பூட்டி
யெங்க ளையகன் றிருமணிப் புயத்தினே ரெய்தான். (ககo)

எய்யும் வெங்கணை யாவையும வீரரு ளிறையா
மைய னைசுக மாயிர மோச்சின னகறறி
யொய்யெ னக்கரி யோனுதன் மீமிசை யொருகன்
வெய்ய பொததிர மேவின னவனுளம் வெருவ. (கூக)

ஏவு தொல்கணை மாயவ னுதலிடை யிமைப்பின்
மேவு கின்றுழி யணையவன் றளர்தலும் வீரன்
வாவு தேர்மிசை யூன்றினன் சிலையைவார் கணையுந்
தூவு கின்றிலன் மாலிடர் நீங்குறுந் துணையும். (ககஉ)

இன்ன லத்துணை யகன்றுமா லெதிர்தலு மெமது
மன்னு நேர்ந்தன னிருவரும் வரிசிலை வளையாப்
பொன்னின் வாளிகள் பொழிந்தனர் முறைமுறை பொருதா
ரன்ன பான்மையர் செய்தபோா யாவரே யறைவார். (ககங)

மாறு கொண்டபோ ரிவ்வகை புரிதலும் வயத்தால்
வீறு கொண்டுயர் முக்கணான் வெய்யதீ வடவைக்
கூறு கொண்டதோர் படையினை யோச்சலுங் குவட்டி
லேறு கொண்டலை யனையவ னுரத்திலெய் தியதே. (௧௧௪)

எய்து காலையி னுளம்பதை பதைத்திட விரங்கி
வெய்து யிரப்புட னுணர்வொரீஇ யுளநனி மெலிந்து
நொய்தின் மையலை நீங்கலு முகுந்தனை நோக்கிச்
செய்தி போரென வுரைத்தனன் சரபமாந் திறலோன். (௧௧௫)

மெய்வ குத்தினை யாவர்க்கும் விரைவினி லிழைக்குந்
தெய்வ தப்படை முழுவதுஞ் செங்கண்மால் செலுத்த
வவ்வ னைத்தையு மனையவப் படைகளா லகற்றிக்
கவ்வை முற்றிய னுதல்விழி யளித்திடுங் கடவுள். (௧௧௬)

வேறு.

தென்றிகழ் பங்கயத் திருவி னாயகத்
தோன்றறன் படைக்கலந் தூண்ட வெங்கணுஞ்
சான்றென நின்றவன் றனயன் வீரமாம்
வான்றிகழ் படைதொடா வல்லை மாற்றவே. (௧௧௭)

அரியதன் பின்னுற வாதி வீரன்மேற்
பொருகணை யளப்பில பொழிய மாற்றியோர்
சரமது செலுத்திமால் சாரங்க மொன்றையு
மிருதுணி படுத்தின னிறைவன் மைந்தனே. (௧௧௮)

பின்னுமத் துணைதனிற் பெருந்தி றற்பெயர்
முன்னவ னிருகணை முறையி னேச்சியே
பன்னக மிசைத்துயில் பகவ னாதிதன்
பொன்னிரு சிறையினைப் புவியில் வீட்டினான். (௧௧௯)

ஆயதோ ரமைதியி லாழி யங்கையான்
மாயவ னாதலின் வரம்பில கண்ணரா
மேயின காதலின் விதிப்ப வீரன் முன்
பாயிருண் முகிலெனப் பரம்பி னாரரோ. (௧௨0)

அங்கவர் யாரையு மமலன் வெய்யகட்
பொங்கழல் கொளுவிநுண் பொடிய தாக்கலும்
பங்கய விழியினான் பரம னன்றருள்
செங்கையி லாழியைச் செல்கென் றேவினான். (௧௨௧)

விடுத்ததோர் திகிரியை வீர னங்கையாற்
பிடித்தவண் விழுங்கினன் பெயர்த்து மாயவ
னெடுத்திடு கதையினை யெறிய வன்னது
தடுத்தனன் றனதுகைத் தடம்பொற் றண்டினால். (௧௨௨)

வேறு.

சங்கார் செங்கைப் புங்கவ னேவுந் தண்டம்போய்
மங்கா வங்கண் வீழ்வது காணா வாள்வாங்கிப்
பொங்கா நின்றே யுய்த்திட வெய்தும் பொழுதின்க
ணுங்கா ரஞ்செய் திட்டன னம்மா வுமைமைந்தன். (௧௨௩)

ஓய்யென் றையன் சீற்றமொ டங்க ணுங்காரஞ்
செய்யுங் காலத தோவிய மென்னச் செயனீங்கிக்
கையும் வாளு மாயவ னின்றான் கடனூடே
வையம் முண்டு கண்டுயில் கின்ற மாமாயன். (கஉச)

சான்றகன் மாய னச்சுற வெய்தித் தளர்காலை
மூன்றாகண் வீரன் யாது நினைந்தோ முனிவெய்த
வான்றதொர் செற்ற நீங்குதி யென்று வண்டதனே
தோன்றிய தம்மா கண்ணுத லீசன் சொல்லொன்றே. (கஉரு)

அந்தர மீதே வந்திடு சொல்லங் கதுகேளா
வெந்தை மனங்கொள் வெஞ்சின நீங்கி யிடுபோழ்தி
லந்தின் மணித்தே ருய்த்திடு பாக னதுநோக்கி
வந்தனை செய்தே போற்றியொர் மாற்றம் வகுப்பானால். (கஉசு)

வேறு.

அறத்தினை யொருவிச் செல்லு மழிதக னுலக மெல்லா
மிறத்தலை யெய்த விங்ங னியற்றிய மகத்தின் மேவிப்
பெறத்தகு மவியை நுங்கும் பேதையேன் பிழையை யெல்லாம்
பொறுத்தனை கொண்மோ வென்றுப் பொன்னடிக் கமலம் பூண்டான். ()

பூண்டிடு முலகந் தந்த புங்கவன் றன்னை நோக்கி
யாண்டகை வீர னஃதே யாகவென் றருளா லோடு
நீண்டதோர் மாய னன்று னீட்ரு னிலைமை காணூஉ
வீண்டிது கால மென்று வேத்தின னியம்ப லுற்றான். (கஉஎ)

பாரவெஞ் சிலையும் வீட்டிப் பல்படைக் கலமுஞ் சிந்திச்
சேரல ருயிர்க ளுண்ட திகிரியுஞ் செல்ல நுங்கிப்
போரிடை யெனையும வென்று புகழ்புனைந் திடுதி யென்றால்
வீரநின் றகைமை யாரே முடிவுற விளம்ப வல்லார். (கஉஅ)

ஆசறு நெறியி னீங்கு மயன்மக னியற்று கின்ற
பூசனை விரும்பி வேள்வி புகுந்தனன் புந்தி யிலமேலன்
மாசறு புகழாய் நின்னுன் மற்றிது பெற்றே னந்தோ
வீசனை யிகழ்ந்தோர் தம்பா லிருப்பரோ வெண்ண மிக்கோர். (ககூ௦)

ஆதிநா யகனை யொல்லா ரனையவர்ச் சேர்ந்தார்க் கெல்லாம்
வேதமே யிசையா நிற்கும் வியன்பெருந் தண்ட மன்றோ
வீதெலா மெம்ம னோர்பா லியற்றிய வினைய தன்மை
நீதியா லெம்பா லன்றி நின்கணோர் குறையு முண்டோ. (ககூக)

விழிதனின் முறுவ றன்னின் வெய்துயிர்ப் பதனி லார்ப்பின்
மொழிதனிற் புவன மெல்லா முதலொடு முடிக்க வல்லோய்
பழியடு வேள்வி தன்னிற் பலரையும் படையி னோடு
மழிவுசெய் திட்ட தம்மா வடிகளுக் காட லன்றோ. (ககூஉ)

உறுநர்தந் தொகைக்கு வேண்டிற் றுதவிய முதல்வ னேவு
முறையதை யுன்னி வேள்வி முடிப்பதோ ராட லாகச்
சிறிதெனு மளவை தன்னிற் சிதைத்தனை யன்றி யெந்தா
யிறுதிசெய் திடநீ யுன்னின் யார்கொலோ வெதிர்க்கு நீரார். (ககூங)

இறுதிசெய் திடலே சீற்ற மின்பமே யாண்மை யென்று
வலைறதரு சத்தி நான்கா மரன்றனக் கையை காளி
முறைதரு கவுரி யின்னோர் மும்மையும் பெற்றோ ரேனைப்
பெறலருஞ் சத்தி யானிப் பெற்றியு மறைகள் பேசும். (கரு௪)

அன்னதோர் பரிசா லீச னரும்பெருஞ் சத்தி யென்னிற்
பின்னமன் றவற்கி யானும் பெரிதுமன் புடையேன் முக்கண்
முன்னவன் றன்பா லீண்டென் மொய்ம்புட னிழந்த நேமி
யின்னுமங் கவன்று ளர்ச்சித் திமைப்பினி லெய்து கின்றேன். (கருரு)

முனிவுட னடிக ளீண்டு முறைபுரிந் ததனுக் கின்னன்
மனனிடை கொள்ளே னின்னுன் மற்றிது பெறுத லாலே
புனிதமாக் கொள்வன் றண்டம் புரிந்தனை பொறுத்தி குற்ற
மினியருள் புரிதி யென்று விணையடி யிறைஞ்ச லோடும். (கருசு)

வீரருள் வீரன் மாலோன் விளம்பிய மாற்றங் கேளா
நாரணற் கன்பு செய்து நணியதோர் காலை தன்னிற்
பாரிடஞ் சூழ நந்தி பரவிட வுமையா ளோடு
மூரிமால் விடைமேல் கொண்டு தோன்றினன் முடிவி லாதான். (கருஎ)

தேங்கிய கங்கை சூடுஞ் செஞ்சடைக் கடவு டோன்ற
வாங்கது தெரிந்த வீர னச்சமோ டங்கை கூப்பிப
பாங்குற நிற்ப மாலும் பங்கயத் தயனுந் தாழா
நீங்கிய தாயை நேருங் குழவியி னிலைய ரானார். (கருஅ)

கண்டனள் கவுரி வேள்விக் களத்திடைக் கழலுங் கையுந்
துண்டமுந் தலையு மார்புந் தோள்களுந் துணிந்து வீழ
வண்டருந் தக்கன் றானு மாவிபோய்க் கிடந்த தன்மை
கொண்டதோர் சீற்ற நீங்கி யருள்வரக் கூறு கின்றாள். (கருகூ)

வேறு.

பொன்னார் சடையெம் புனிதன் றனைநோக்கி
முன்னா கியபொருட்கு முன்னோனே வேள்விக்கு
மன்னான வறகு மிமையோர்க்கு மற்றெவர்க்கு
மென்னான் முடிவெய்திற் றென்றுரைக்கு மிவ்வுலகே. (க௬0)

மற்றவர்கள் புந்தி மயக்குற் றனதுதொல்சீர்
சற்றுமுண ராது தவறுசெய்த தன்மையினுற
செற்றமிகு வீரத திருமகனு லிஞ்ஞான்று
பெற்றனரே யன்றோ பெறததக்க தோர்பரிசே. (க௬க)

முந்து மிவரை முடித்திடென வெஃகியதுந்
தந்து முடிததாய் தனிவீர னுமனைய
ருய்ந்து குறைபோ யுயிர்பெற றெழும் வண்ண
மிந்த வரமு மெனக்கருளா யெங்கோவே. (க௬௨)

என்று தொழுதாங் கெமையுடையாள் கூறுதலுந்
நன்றுன் னருளென்று நகைசெய்து தன்பாங்கா
நின்ற திறலோனை நோக்கி யிம்மாற்ற
மொன்று பகர்ந்தா னுயிர்க்குயிரா யுற்றபிரான். (க௬௩)

ஈண்டை மகத்தி லெமையிகழ்ந்து தின்கினைத்தான்
மாண்டு சிதைவுற்ற வலியிலோர் தம்முயிரை
மீண்டு மளித்துருவு மேனு ளெனப்புரிதி
யாண்டகைநீ யென்றே யரனருளிச் செய்தலுமே. (௧௪௪)

வீர னதற்கிசைந்து மேனு ளென விறந்தோர்
யாரு மெழுதி ரெனவுரைப்ப வானவர்கள்
சோரு முனிவர் மறையோர் துயிலுணர்ந்த
நீர ரெனவுயிரவந் தெய்த நிலத்தெழுந்தார். (௧௪௫)

தண்ட மியற்றுந் தனிவீர னற்சிதைந்த
பிண்ட முழுதுருவும் பெற்றோர் மகம்புக்கு
விண்ட செயலுமுயிர் மீண்டதுவுங் கன்றிடைக்
கண்ட புதிய கனவுநிலை போலுணர்ந்தார். (௧௪௬)

அந்தண் முனிவோ ரனைவோரும் வானவரு
மிந்திரனே யாதி யிமையோர் களும்வெருவிச
சிந்தை மருண்டு சிவனை யிகழ்ந்ததனால்
வந்த பழியுன்னி வருந்திமிக வெளகினரால். (௧௪௭)

பானு ரளிமுரலும் பைந்தார் புனைவீரன்
மானுகத தன்னோர் மருங்காகத தேவியுடன்
பூனு ரரவப புரிசடையெம் புண்ணியனைச்
சேனுர் ககனந் திகழுஞ் செயல்கண்டார். (௧௪௮)

தஞ்ச லகன்ற சுரரு முனிவரரு
நஞ்ச மணிமிடற்று நாயகனைக் கண்ணுறலு
மஞ்சி நடுங்க வதுகண் டெவரிவர்க்குத்
தஞ்ச மெமையல்லா லென்றுதள ரேலென்றான். (௧௪௯)

என்றாங் கிசைத்த விறைவ னருளுடி
நன்றா லிதென்று நனிமகிழ்ந்து முன்னணித்தாச்
சென்றார் தொழுதா திசைமுகன்மா லாதியராய்
நின்றா ரெவரு நெறியா லிவையுரைப்பார். (௧௫௦)

சிந்தை யயர்வுற்றுச் சிறுவிதிதன் வேள்விதனி
லெந்தை நினையன்றி யிருந்தோங்கள் கண்முன்னும்
வந்து கருணை புரிந்தனையான் மைந்தருக்குத்
தந்தை யலது பிறிதொருவர் சாருண்டோ. (௧௫௧)

அற்றமி லன்பில்லா வடியேங்கள் பாலடிகள்
செற்ற மதுபுரியிற செய்கைமுத லானசெயல்
பற்றி முறைசெய் பதமுளதோ வஞ்சலென
மற்றொர் புகலுளதோ மன்னுயிருந் தானுளதோ. (௧௫௨)

வேதத் திறங்கடந்த வேள்விப் பலியருந்தும்
பேதைச் சிறியோம் பெரும்பகலுந் தீவினையி
லேதப்படாமே யிமையாயி லதுதொலைத்த
வாதிக் கெவன்கொ லளிக்கின்ற கைம்மாறே. (௧௫௩)

இங்குன் னடிபிழைத்தோ மெல்லோமும் வீரனெனுஞ்
சிங்கந்தன் கையாற் சிதைபட்ட வாறெல்லாம்
பங்கங்க ளன்றே பவித்திரமாய் மற்றெங்க
ளங்கங்கட் கெல்லா மணிந்த வணியன்றே. (கருச)

கங்கை முடித்ததுவுங் காய்கனலை யேந்தியதும்
வெங்கண் மிருவிடத்தை மேனா ளருந்தியது
நங்கை யுமைகாண நடித்ததுவு முறபகலு
மெங்கண் மிசைவைத்த வருளன்றோ வெம்பெருமான். (கருரு)

ஐய பலவுண் டறிவிலே னிறனக்குச
செய்ய வருபிழைகள் சிந்தைமிசைக் கொள்ளாம
லுய்யும் வகைபொறுத்தி யுன்னடியே மென்றனுமே
யைதயலொரு பங்கன் றணிந்தனமா லஃதென்றான். (கருசு)

ஏற்றூர்த் தலைவ னியம்புந் திருவருளைப்
போற்றித் தொழுதுதம புந்தி தளிர்பபெய்திக்
கூற்றைத் தடிந்த குரைகழறறுண் முன்னிறைஞ்சித்
தேற்றத் துடனபாடி யாடிச் சிறந்தனரே. (கருஎ)

அன்ன பொழுதத் தயன்முதலாந் தேவர்கண்மே
லுன்ன வரிய வொருவனருட் கண்வைத்து
நுந்நும் மரசு நுமக்கே யளித்தனமான்
முன்ன ரெனவே முறைபுரிதி ரென்றுரைத்தான். (கருஅ)

மாலயனே யாதியராம் வானவர்க ளெல்லோரு
மாலமிடற் றண்ண லருளின் றிறம்போற்றி
மேல மகிழ்வெய்தி விறந்தெழுந்தோர தங்குழுவிற்
சீலமில்லாத் தனமகனைக் காணான் றிசைமுகனே. (கருகூ)

மாண்டதொரு தககன வயவீரன் றன்னருளா
வீண்டுசனந் தன்னோ டெழாவச் செயனோக்கிக்
காண்டகைய நாதன் கழலிணைமுன் வீழ்ந்திறைஞ்சி
யாண்டு கமலத தயனின் றுரைக்கின்றான். (கசூ0)

வேறு.

ஐயநின் வாய்மை யெள்ளி யழல்கெழு மகத்தை யாற்றுங்
கையன தகந்தை நீங்கக கடிதினிற றண்டஞ் செய்து
மையுறு நிரயப் பேறு மாற்றினை யவனு மெம்போ
லுய்யவே யருளு கென்ன வுமாபதி கருணை செய்தான். (கசூக)

இறையருள் கண்டுவீர னெல்லையங் கதனி லெந்தை
யறைகழல் கண்டு போற்றி யவற்றியல் வினவித் தாழாப்
பொறியுள தென்று தக்கன் புன்றலை புகுத்த வுன்னுக்
குறையுட லதனைப் பானு கம்பனைக் கொணர்தி யென்றான். (கசூஉ)

வித்தக வலிகொள் பூதன் வீரபத் திரன்றன் முன்ன
ருய்த்தது மதன்மேல வேள்விக் குண்டியாம் பசுவுள் வீந்த
மைத்தலை கண்டு சேர்த்தி யெழுகென்றான் மறைகள் போற்று
மத்தனை யிகழு நீர ராவரிப் பரிசே யென்னா. (கசூங)

என்றலு முயிர்பெற் றங்க ணெழுந்தவத் தக்கன் முன்ன
நின்றதோர் வீரற் கண்டு நெஞ்சுதுண் ணென்ன வஞ்சித்
தன்றக விழுந்து பெற்ற தலைகொடு வணங்கி நாணி
யன்றுசெய் நிலைமை நாடி யரந்தையங் கடலுட் பட்டான். (கசுச)

அல்லல்கூர்ந் திரங்கு கின்ற வசமுக னடல்வெள் ளேற்றின்
மெல்லிய லோடு முற்ற விமலன துருவங் காணூஉ
வொல்லென வெருக்கொண் டாற்ற வுற்றன னச்ச மற்றவ்
வெல்லையி லிறைவன் றக்க வஞ்சலை யினிநீ யென்றான். (கசுரு)

அஞ்சலென் றருள லோடு மசமுகத் தக்க னெங்கோன்
செஞ்சரண் முன்னர்த் தாழ்ந்து தீயனேன் புரிந்த தீமை
நெஞ்சினு மளக்கொ ணாதா னினைதொறுஞ் சுடுவ தையா
வுஞ்சன னவற்றை நீக்கி யுனதருள் புரிந்த பண்பால. (கசுசு)

அடியனேன் பிழைத்த தேபோ லார்செய்தா ரெனினு மென்போற்
படிவதே சரத மன்றோ பங்கயத் தயனை நல்கு
நெடியவன் றனையென் றுன்னி நின்பெரு மாயை யாலே
யடிகளை யிகழ்ந்தேன் யாது மறிகிலேன் சிறியே னென்றான். (கசுஎ)

காலையங் கதனி லமமை காளிதன் னோடு போற்றிப்
பாலுற நின்ற வீர பத்திரன் றனைவம மென்றே
வேலவன் றேவி யென்ன வெரிந்புற நீவி யன்னார்க்
கேலநல் வரங்க ளீந்தா ளீசனுக் கன்பு மிக்காள். (கசுஅ)

மீத்தகு விண்ணு ளோரும் வேள்வியந் தேவு யாவும
பூத்திகழ் கமலத் தோனும் புதல்வனு முனிவர் தாமு
மேத்தினர் வணங்கி நிற்ப வெம்மையா ளுடைய முக்க
ணத்தனங் கவரை நோக்கி யிவைசில வருளிச் செய்வான். (கசுகூ)

வம்மினோ பிரம னாதி வானவர் மகஞ்செய் போழ்தி
னம்மைநீ ரிகழ்ந்தி யாரு நவைபெறக் கிடந்த தெல்லா
மும்மையில் விதியாந் தண்ட முமக்கிது புரிந்த வாறு
மிம்மையின் முறையே நாணுற திரங்கலீ ரிதனுக் கென்றான். (கஎ0)

வேறு.

இனைத்தருள் புரிதலு மெண்ண லாரையு
நினைத்தருள் புரிதரு நிமலன் றொழாச்
சினத்தொடு மகத்தைமுன் சிதைத்த வாளையு
மனத்தகு மன்பினால் வணங்கிப் போற்றவே. (கஎக)

வீரரில் வீரனும் விசய மேதகு
காரியு மயல்வர நந்தி முன்செலப்
பாரிட மெங்கணும் பரவ மாதொடே
போரடல் விடையினன் பொருக்கென் றேகினன். (கஎஉ)

கயிலையி லேகியே கவுரி யோடரு
வியனகர் மன்றிடை வீற்றி ருந்துழி
வயமிகு வீரற்கு வான மேக்குற
வியலுமோர் பதமளித் திருத்தி யாங்கென. (கஎங)

இருவர்தந் தாளையு மிறைஞ்சி யன்னவர்
தருவிடை பெற்றன னாகித் தக்கனை
தூரியதோர் மகமடு மூலப்பில் பூதர்க
டிரைகட லாமெனத் திசைதொ றீண்டவே. (௧௭௪)

தந்தைமுன் விடுத்ததோர் தடம்பொற் றேரயல்
வந்ததங் கதன்மிசை வயங்கொ ளாடலான்
பைந்தொடி யொடும்புகாப் பானு கம்பன
துந்திட வரனரு ளுலகிற் போயினான். (௧௭௫)

போயின னதனிடைப் பொருவி றூல்பெருங்
கோயிலி னெய்தியே குழுக்கொள் சாரதர்
மேயினர் சூழ்தர வீர பத்திர
னேயதோர் துணைவியோ டினிது மேவினான். (௧௭௬)

ஆக திருவிருத்தம் ௪௫௨.

---

வசனம்.

இப்படி காவற்படுத்தின பிறகு, வீரபத்திரர், யாகசாலையில் ஓமகுண்டத்துக்கருகே வருவதைக்கண்ட திருமால் முதலியோர் திடுக்கிட்டு நடுங்கினார்கள். தக்கன் கண்டு, மனங்கலங்கிச் சற்றுத்தெளிந்து நீயார்? நீ யிங்கு வந்ததற்குக்காரணம் யாது? என்று வினவ, வீரபத்திரர் நகைத்து, நான் பரமசிவன் புதல்வன், நீ செய்யும் யாகத்தில் அவர்க்குரிய அவிர்பபாகத்தை வாங்கிப்போக வந்தேன் என்றார். அதற்குத் தக்கன் ஒருபோதும் அந்தச் சுடலையாடிக்கு அவிர்ப்பாகம் தரமாட்டேனென்று சொன்னான். அதுகேட்ட வேதங்களும் குடிலையும தோன்றி, எங்களுக்கும் ஏனைய வுயிர்களுக்கும் ஆதாரமாயிருக்கிற பரமசிவனன்றி இத்யாகத்துககுக் கர்த்தராவார் யாவர்? அவர்க்கு முதல் அவிர்ப்பாகங் கொடுத தலே தகுதி, அல்லாவிடின், உன்யாகம் நிறைவேறாது, நீயும் அழிந்துபோவா யென்று சொல்லியும் அவன் கேளாமையால், உன்விதிப்படி அநுபவிக்கக்கடவை யென்று சொல்லிவிட்டுத் தமது நிலைகளையடைந்தன.

அப்போது வீரபத்திரர், அருகிலிருந்த பிரம விஷ்ணுக்களைநோக்கி, இவன் சிவபெருமானுக்கு அவிர்ப்பாகங்கொடாமல் மறுததுப்பேசுவது தகுதியோ, உங்களுக்கும் சம்மதமோவென்றுகேட்க, அவர்கள் விடைசொல்லமாட்டாமல் ஊமைகள்போல நின்றார்கள். அதைக்கண்ட வீரபத்திரர் வெகுண்டு, தமதுகையிலிருந்த கதாயுதத்தால் கேசவனைமோதி மூர்ச்சையடைவித்தும், பிரமனைச் சிரத்திற்குட்டிக் குப்புறவிழுத்தியும், சந்திரனைக் காலால்தேய்த்தும், சூரியனைப் பல்லுதிர்த்தும், சனியைக் கண்பறித்தும், யமனைச் சிரமறுத்தும், குயிலாகிப்பறந்த இந்திரனைத் தண்டித்தும் இவ்வாறே மற்றையவரையும் கடுந்தண்டம்புரிந்துவருவதைக்கண்ட தக்கன், மனம்வருந்தி இப்படி விளையுமென்றறியாமல் வீணே செருக்கி எனக்கு நானே கெடுதிவிளைத்துக்கொண்டேனே, இனி யெவ்விதத்திலும் பிழைக்கும் வழியில்லை. ஆயினும் தைரியம விடலாகாதென்று கேடயத்தையும் வாளையும் கையிற் பற்றிக் கொக்கரித்து எதிரே வரக்கண்டவீரபத்திரர், வடவைதீப் போற் கொதித்து, தமது வாளாயுதத்தால் அவன் சிரததைச் சேதித்துத் தன்

ளுதலும், அத்னே யாகாக்கினி விழுஙகிவிட்டது. இதை அவன் மனைவியாகிய வேதவல்லி கணடு மார்பிலறைந்துகொண்டு பிரலாபிக்கக கணட பதநிரகாளியா னவள் அவனேச் சிகையறுத்தும் மற்றவரைப் பலவகையாய்த் தண்டித்தும் வீரபத் திரரோடு கலந்துகொணடு தேவர் முனிவர் முதலானவர்களேச் சின்னபின்னப்படு த்தி யுலாவிக்கொண்டிருந்தாள்.

அப்பொழுது பூதப்படைகள மதிலேயழித்து உள்ளே நுழைந்து, பயநதோடு கிற பிராமணர் முதலாஞேரைப் பற்றிப் பலவகையாய்ச் சித்திரவதைசெய்தன. இதைக்கணட திருமாலானவர் தமது சாரங்கததை வளேத்து அநேக பாணங்களே யேவினர். அப்பொழுது பிரமன் கொண்டுவந்த தேர்மீது வீரபததிரர் ஆரோக ணித்து எதிரே வரக்கண்ட திருமால் வீரபத்திரரை நோககி, சிவனே யிகழ்ந்த தக் கனேத் தண்டித்தல் தகுதியேயன்றி யாகத்துக்கு வந்த தேவர் முதலியோரைத தணடிப்பது தகுதியோவென்று வினவ, வீரபததிரர் ஒரு துராதமா குற்றஞ்செய் தால் அதைக்கண்டித்து அவனுக்கு நற்புததி வருவியாமல் அவனுககுதவி செய்வது விவேகிகள் செய்கையோ, நீங்களும் அவனுக் கிணக்கமா யிருந்ததனல் உங்களுக் கும் சிக்ஷை நேரிட்டதென்றார். அதற்கு விஷ்ணுவானவா கோபித்து வீரபத்திர ரோடெதிர்த்துப் பலவகையாயுதங்களேப்பிரயோகிக்க, வீரபததிரரும அநேகவகை யாயெ படைகளே யேவ, இப்படி நெடுநேரம் இருவரும் கைகலந்து போரிட்டு, முடிவில் விஷ்ணு தோலவியடைந்து வீரபத்திரரது ஆற்றலேப்புகழ, அவரும் மகிழ்ந் திருந்தார்.

பிறகு சிவபெருமான் பராசததியோடு இடபவாகநத்திலேறி யாகசாலேக்கெ ழுந்தருளக்கணட வீரபததிரர் வணஙகிநின்றா. அப்பொழுது அருட்கடலாகிய பராசத்தியானவள் யாகசாலேயில் மடிந்துகிடக்கிற தககன் முதலியவர்களேயும் யாகத்தின் அலங்கோலத்தையுஙகணடு இரக்கமுற்று, சுவாமீ! இவ்வளவு அநர்த் தஙகளும் என்ஞலுணடாயினவென்று உலகம் நிந்திக்குமாதலால், இவர்களேயெல் லாம் உயிர்தழெழுமபடி திருவுளங்கொள்ளவேணடுமென்று பிரார்த்தித்தாள். அதுகேட்ட பரமன் வீரபததிரரைநோக்கி, உன்ஞற் கொல்லப்பட்டவரையெல் லாம் பிழைப்பிககக்கடவையென் றநுககிரகிக்க, அவரும் அவ்வாறேசெய்தார, பிரமன் முதலாஞேர் சிவபிரானேப் பலவாறுவாழ்த்தி வணஙகிஞர்கள்.

அப்போது அக்கூட்டத்தில் தக்கனே ககாணுமையால பிரமன் சிவபெருமானே வணங்கி, எம்மைப்போலவே எமது குமாரனேயும் காத்தருளவேணடுமென்று வேண்ட, அவர் வீரபத்திரரைநோகக, ஆவர் பானுகமபனுல் அத்தக்கனுடம்பைத தருவித்து அவிககறுககப்பட்ட ஆட்டினதலேயை அதிறபொருததி, எழக்கடவை யென்றவுடன், அவன் பரமசிவனேயிகழ்ந்தவர் இவ்வாறுவரென் றறிவிப்பவன் போன்றெழுந்து, வீரபத்திரரைக்கணடு நாணி, பரமசிவனேயும நோக்கி நடுஙகி நின்றான். அதைக்கண்ட கடவுளகிருபை பாலித்தார், பிறகு அவரைத தக்கன் பல வாறு துதிததுததொழுதான. பிறகு இறைவா கேசவன் முதலாஞேருக்கு கிருபை பாலித்து அவரவரிடஙகளுக்கனுப்பித தாமும திருக்கயிலாயத்திற்கெழுந்தருளி வீரபத்திரர் முதலாஞேரை அவரவர்க்குரிய இடங்களிற் செலுத்தியருளினா.

யாகசங்காரப்படலம் முற்றிற்று.

---

# அடிமுடிதேடுபடலம்.



இங்கிது நிற்கமுன் னிறைவன் வந்துழி
யங்குற நின்றதோ ரமரா தங்களுட்
செங்கம லத்துறை தேவன் றக்கனுந்
துங்கமின் மைந்தனை நோக்கிச் சொல்லுவான். (௧)

யாதுமுன் னுணர்ந்தனை யாது செய்தனை
யாதவண் கருதினை யாரிற் பெற்றனை
யாதுபின் செய்தனை யாது பட்டனை
யாதிவண் பெறறனை யாதுன் னெண்ணமே. (௨)

பொன்றுத லில்லதோர் புலவர் யாவர்க்கும
வன்றிறன் முனிவரர் தமக்கும் வையமேற்
றுன்றிய வந்தணர் தொகைக்குந் துண்ணெனக்
கொன்றுயி ருண்பதோர் கூற்ற மாயினாய். (௩)

சீரையுந் தொலைத்தனை சிறந்த தக்கனும்
பேரையுந் தொலைத்தனை பேதை யாகிநின்
னேரையுந் தொலைததனை யேவல் போற்றுந
ராரையுந் தொலைததனை யலக்க ணெய்தினாய். (௪)

நின்னுணர் வல்லது நிகரின் மேலவர்
சொன்னது முணர்ந்திலை தொல்லை யூழினா
லிந்நிலை யாயினை யிறையை யெள்ளினாய்
முன்னவ னுயர்நிலை முழுதுந் தோர்ந்தநீ. (௫)

இயற்படி'வளம்பெறீஇ யீசன் மேன்மைக
ளயர்த்தனை நின்னள வன்று மைபரு
னுயிர்த்தொகை தமக்கெலா முள்ள தாதலான்
மயக்கினை யடைந்தனை மற்றென் செய்திநீ. (௬)

முற்றுணர் வெய்தியே முழுத ளித்திடப்
பெற்றவெங் கண்ணினும் பெரிது மாமயக்
குற்றன முறபக லுதகண் டின்றுபோ
னெற்றியங் கண்ணினா னருளி னீக்கினான். (௭)

ஆதலி னருளுடை யமல நாயகன்
பாதம தருச்சனை பரிவிற் செய்குதி
பேதுறு மிப்பவப் பெற்றி நீக்கியே
போதமோ டின்னருள் புரிவ னென்றலும். (௮)

மைதிகழ் முகத்தினன் மறற தற்கிசைந்
துய்திற மூணாத்தினை யுங்கள் கண்ணுமுன்
னெய்திய மையலு மெம்பிரா னருள்
செய்தது மியர்புதி தெளிதற் கென்னவே. (௯)

பொன்னிருஞ் சததளப் போதின் மீமிசை
மன்னிய திசைமுகன் மதலை மாமுக
முன்னுற நோக்கியே மூந்துங் கூறின
மின்னமு மக்கதை யியம்பு வோமென. (௧0)

நாலுள திசைமுக நாதன் றொல்லைநாண்
மாலொடு பற்பகன் மலைவு செய்துநா
மேலதோர் பொருளென விமலன் வந்தருள்
கோலம துன்னியே தொழுது கூறுவான். (௧௧)

வேறு.

பத்தினொடு நூறெதிர் படுத்தயுக நான்மை
யொத்தமுடி வெல்லையென தோர்பகல தாகு
மத்தகு பகற்பொழுது மந்தியொடு செல்ல
நத்தமுறு நான்றுயிலி னண்ணுவனவ் வேலை. (௧௨)

வானு மொடுங் கும்பரிதி மாமதி யொடுங்கு
நாளுமொடுங் குந்தமது நாளுமொடுங் குறமே
கோளுமொடுங் குங்குலிச பாணிமுதல் வானோ
கேளுமொடுங் குமபுவனி கேடுபடு மன்றே. (௧௩)

மண்ணுலகி லாருயிா வறந்திறுதி யாகும்
துண்ணென வெருக்கொடு துளங்கினாகள் சூழா
விண்ணுறு பதங்களில் வியன்முனிவர் யாருங்
வெண்ணுசன லோகமிசை யெய்துவாக ளந்நாள். (௧௪)

வாரிதிக ளுற்றிறமும வல்லையி லெழுந்தே
யாரியை தவஞ்செய்பதி யாதியன வல்லாப்
பாரினை யருந்தியொரு பாகமதன் மேலு
மோரெழு பிலததுலக முண்டிலவு மன்றே (௧௫)

ஒண்டிகிரி மால்வரை யுடுததகில முற்றுங்
குண்டுறு பிலத்தினொடு கூடும்வகை வீட்டி
யண்டருல குண்டுகிமிர்ந் தப்புறனு மாகி
மண்டுபுன லேயுலகை மாற்றியிடு மன்றே. (௧௬)

ஆனதொரு வேலையிலோ ராலிலையின் மீதே
மேனிலவு தண்மதி மிலைந்தவன் கலாத்தா
டானக முறுத்தியோர் தனிக்குழவி யேபோற
கானுறு துழாய்மவுலி கண்டுயிலு மாதோ. (௧௭)

கண்டுயிலு கின்றபடி கண்டுசன லோகத்
தண்டுமுனி வோாபுகழ வாங்கனம் விழிகதே
பண்டையில னேடவது பாதலம தாகக்
கொண்டன்மணி மேனியனோர் கோலவுரு வானென. (௧௮)

கோலமெனு மோருருவு கொண்டுபில மேகி
ஞாலமெவ னுற்றதென நாடியது தன்னை
வாலிய வெயிற்றினிடை வல்லைகொடு மீண்டு
மூலமென வேகிறுவி மொய்ம்பினொடு போனான். (௧௯)

அற்பொழுது நாலுகமொ ராயிரமு மேக
வெற்பொழுது தோன்றியதி யான்றுயி லுணர்ந்தே
கற்பனை யியற்றிய கருததினினை போழ்தி
னிற்புழி யடைந்தன நெடும்புணரி யெல்லாம். (௨0)

அருத்திகெழு பாற்கட லராவணையின் மீதே
திருத்திகழு மார்புடைய செம்மல்புவி தன்னை
யிருத்தின மெயிற்றினி லெடுத்தென நினைத்தே
கருததினி லகந்தைகொடு கண்டுயில லுற்றான். (௨௧)

ஆனபொழு தத்தினி லளப்பிலிமை யோரைத
தானவரை மானுடவர் தம்மொடு விலங்கை
யேனைய வுயிர்த்தொகையை யாவையு மளித்தே
வானகமும் வையகமு மல்கும்வகை வைத்தே. (௨௨)

மன்னியலு மிந்திரனை வானரசி லுய்த்தே
யன்னவ ஞெழிந்ததிசை யாளர்களை யெல்லாந்
தந்நிலை நிறுத்தியது தன்னைநெடி துன்னி
யென்னையல தோர்கடவு ளின்றென வெழுந்தேன். (௨௩)

துஞ்சலுறு காலைதனிற் றுஞ்சுமெழும் வேலை
யெஞ்சலி லுயிர்தொகுதி யாவுமெழும் யானே
தஞ்சமெனை யன்றியொரு தாதையிலை யார்க்கும்
விஞ்சுபொருள் யானென வியந்தெனை நடந்தே. (௨௪)

மல்லலுறு மேலுலகு மாதிரமு மேனைத்
தொலலுலகு மேருவொடு சுற்றுகட லேழு
மொல்லென விரைதெழு முயிர்தொகையு மல்லா
வெல்லையில் பொருட்டிறனும யானெடிது நோக்கி. (௨௫)

இப்பொரு ளனைத்துமுனம் யான்பயந்த வென்று
லொப்பிலை யெனக்கென வுளத்திடை மதித்தே
னப்பொழுதி லாரமுத வாழியிடை யாழிக்
கைப்புய லகந்தையொடு கண்டுயிலல் கண்டேன். (௨௬)

அன்றவனை மாலென வறிந்தன னறிந்துஞ்
சென்றன னகந்தையொடு செய்யதிரு வைகு
மன்றன்மணி மார்பமிசை வண்கைகொடு தாக்கி
யின்றுயி லுணர்ந்திடுதி யென்றலு மெழுந்தான். (௨௭)

ஏற்றெழு முராரிதனை யாரையுரை யென்றே
சாற்றுதலும் யாமுனது தாதையறி யாய்கொ
லாற்றலைகொண் மைந்தவென நன்றென நகைத்துத்
தேற்றிடினு நீதுயி றெளிந்திலைகொ லென்றேன். (௨௮)

தந்தையென வந்தவர்க டாமுதவு கின்ற
மைந்தரக டமக்குரைசெய் வாசகம தென்ன
முந்துற வெமக்கிது மொழிந்ததியல் பன்று
லெந்தையென வேநினைதி யாம்பிரம மேகாண். (௨௯)

உந்தியி லிருந்துவரு முண்மையுண ராமே
மைந்தனென நீயெமை மனத்தினினை குற்று
யிந்தன முதித்தது மெரிக்கடவு ளுக்குத
தந்தையது வோவிது சழக்குரைய தன்றே. (ருo)

நின்னுடைய தாதையென நீயுனை வியந்தா
யன்னதை விடுக்குதி யருந்தவ வலத்தாற்
முன்னமொரு தூணிடை முளைத்தனை யவற்று
ளுன்னிலது மேலமிக வுயர்ந்தபொரு ளாமோ. (ருக)

துய்யமக னுமபிருகு சொற்றசப தத்தா
லையிரு பிறப்பினை யடிக்கடி யெடுத்தாய்
மெய்யவை யனைத்தையும விதித்தனம் விதித்தெங்
கையது சிவந்துளது கண்டிடுதி யென்றேன். (ருஉ)

வேறு.

அன்றவற கெதிர்புகுந் தனையசொற் புகறலுங்
குணறெடுத் திடிகரக் கொண்டல்போன மேனியா
னன்றெனச் சிரமசைஇ நகைசெயா வெகுளியாற
பொனறளிர்க் கரதலம புடைபுடைத் துரைசெய்வான். (ரு ங)

நச்சராப பூண்டிடு நம்பனுன் சென்னியி
லுச்சியந் தலையினை யுகிரினுற களைதலு
மச்சமாய் வீழ்ந்தனை யதுபடைத் தின்னமும
வைச்சிலாய் நன்றுநீ மறமெமைத் தருவதே. (ருச)

நேயமாய் முன்னரே நின்னையீன் றுதவிய
தாயும்யா மன்றியுந் தந்தையும் யாமுனக்
காயதோா கடவுளயா மடிகள்யா மைந்தநம்
மாயையா லின்றிவண் மதிமயக குறுதிகாண். (ருரு)

பொன்னலா தாங்கொலோ பூணலா மிறைபுரி
மன்னலா தாங்கொலோ மாநில மாநிலந்
தன்னலா தாங்கொலோ தருவதோா வளமதி
லெனனலா தாங்கொலோ வெச்சரா சரமுமே. (ருசா)

எண்ணுவிப போனுநா னெண்ணுகின் றோனுநான்
கண்ணுதற் பொருளுநான் காண்டகும் புலனுநா
னெண்ணுதற் கரியனு னாரணக் கடவுளுன்
விண்ணகத் தலைவனுன் வேதமும பொருளுநான். (ருஎ)

ஆதிநா னுருவுநா னருவுநா னிருளுநான்
சோதிநா னத்தனுன் றாயனுன் மாயனுன்
யாதுநான் பூதநான் யாருநான் சங்கரன்
பாதிநா னயனுநான் பரமெனும் பொருளுநான். (ருஅ)

என்றுபற் பலவுரைத திடுதலும் யானெதிர்
சென்றுருத் திருவருஞ் செருவினைப புரிதிமேல்
வென்றியுற வராரோ மேலையோ ரெழுகென
வன்றிறற் போர்செய்வான் வந்தனன் மாலுமே. (ருகூ)

ஏற்றெழுந் தோர்சிலை யேந்தியே வாங்கிமால்
கூற்றிரும் படைமுதற் கொடியவெம் படையெலா
மாற்றருந் தன்மையால் வல்லையுய்த் திடுதல்கண்
டாற்றினன் குசைகளா லனையவெம் படைதொட. (சo)

வேறு.

ஆங்கவை யழிவுற வரியுந் தன்படை
வாங்கினன் விடுத்தலும் வருதல் கண்டியான்
பாங்கரி னின்றவென் படையை யங்கையிற்
றாங்கினன் றுய்த்தனன் றடுத்து மீண்டதே. (சக)

அப்படை மீண்டபி னாதி யாகிய
வொப்பருஞ் சிவனளித் துள்ள புங்கவ
ரெப்பெரும் படைக்குமோ ரிறைவ னாயது
மைப்புயன் மேனிமால் வழுத்தி வாங்கினன். (சஉ)

மஞ்சன முதலிய மறுவில் பூசனை
நெஞ்சுறு புலன்களி னிரப்பி யோச்சலு
மெஞ்சலி லமரர்க ளிரிய மேற்செலு
நஞ்சினுங் கொடிதென நடந்த வேலையே. (சங)

முன்னமே யெனக்குமம் முக்க ணாயக
னன்னதோர் படையளித் தருளி னானதை
யுன்னியே வழிபடீஇ யொல்லை யுய்த்தனன்
வன்னிமேல் வன்னிசெல் வண்ண மென்னவே. (சச)

ஒருதிறத் திருவரு முனூற்றி யேவிய
வரனருள் பெரும்படை தம்மி லாடல்செய்
தெரிகனற் கற்றைகள் யாண்டுஞ் சிந்தியே
திரிதலுற் றுலகெலாஞ் செற்று லாயவே. (சரு)

அப்படை திரிதலு மவைகள் வீசிய
துப்புறழ் கொழுங்கன றொல்லை வானினு
மிப்புவி மருங்கினு மீண்ட வானவர்
வெப்புற விரிந்தனர் விதிர்ப்புற் றேங்குவார். (சசு)

வீண்டன ரொருசிலர் வெதும்பி விம்மியே
மாண்டன ரொருசிலர் வந்த நஞ்சமுண்
டாண்டவர் கழலிணை யடைதும் யாமெனாக்
காண்டகு கயிலையின் கண்ணுற் றார்சிலர். (சஎ)

காரெலாங் கரிந்தன ககனந் தன்னொடு
பாரெலா மெரிந்தன பௌவப் பாற்படு
நீரெலாம் வறந்தன நிரந்த பல்லுயிர்ப்
பேரெலாந் தொலைந்தன பின்னும் போர்செய்தோம். (சஅ)

இந்தவா றமர்புரிந் திட்ட காலையிற்
றந்தையா ரருளினாற் றமியன் மாமுகம்
வந்துநா ரதனெனு மறுவின் மாமுனி
சிந்தைசெய் தெமக்கிவை செப்பன் மேயினான். (சகூ)

நீர்முத ளுமென நினைந்து கூறியே
போர்முத லெசில புரிகின் றீர்கொலா
மோர்முத லன்றியே யில்லை யுங்களி
லார்முத லிருவரு மன்ன பண்பினீர். (ருo)

பொருசமர் கருதியே புகுந்த போழ்தினு
மூரியதோர் படையல துலகந் தீப்பதோர்
வெருவரும் பெரும்படை விடுத்தி ரப்படை
யருளிய கடவுளை யயர்த்திர் போலுமால். (ருக)

கடவுளை மறந்திரேற் கருதி நீர்பெறு
மடுபடை நாமமு மயர்த்தி ரோவது
நெடிதுறும் மனத்தினி னினைந்து தேற்றுமின்
விடும்னி யமரென விளம்பி மேலுமே. (ருஉ)

வாதியா வின்னுநீர் மலைதி ரேயெனி
னாதியா யருவுரு வான தோர்பொருள்
சோதியாய் நடுவுறத் தோன்றுங் காண்டிரென்
றோதியா லெமக்கிவை யுணாததிப் போயினான். (ருங)

போயின னுரைத்தசொற் புந்தி கொண்டிலர்
தீயென வுருத்திகல் செருக்கு நீங்கல
மாயிர மாண்டுகா றமரி யற்றின
மாயிரும் புவனமு முயிரு மாயவே. (ருச)

இங்கிவை யாவையு மிறுதி யூழியி
னங்கியி னடம்புரி யண்ண லோக்கியே
தங்களி லிருவருஞ் சமர்செய் கின்றனர்
புங்கவர் தாமெனும் புகழை வெஃகினா. (ருரு)

அறிவறை போயின ரகந்தை யுற்றன
ருறுவதொன் றுணர்கில ருண்மை யோர்கிலர்
சிறுவரி லிருவருஞ் சீற்றப் போர்செயா
விறுதிசெய் கின்றன ருலகம் யாவையும். (ருசு)

ஈங்கிவர் செயலினை யின்னுங் காண்டுமேற்
றீங்குறு முலகுயிர் சிதைந்து வீடுமா
லோங்கிய நங்கிலே யுணர்த்தி னுயிடைத்
தாங்கரும வெஞ்சமர் தணிந்து நிற்பரால். (ருஎ)

தம்மையே பொருளெனச சாற்று கின்றதும்
வெமமைசேர் வெகுளியும் வெறுத்து விட்டியே
செப்பைசோ பனததராய்த திகழ்வா தாமெனு
வெம்மையா னுடையவ னெண்ணி னானரோ. (ருஅ)

வேறு.

ஆன்றதோ ரளவை தன்னி லடைந்தது மாகந் தனனில்
வான்றிகழ் பானுட் கங்குன் மதிபக றழுவு நென்னன்
ஞான்றது தனில்யாங் கண்டு நடுக்குற நடுவ ணாகத்
தோன்றினன் கனற்குன் றேபோற சொல்லரும் பரத்தின் சோதி. (ருகூ)

தோற்றிய செய்ய சோதி தொல்லம ருழுந்தி யாங்கண்
மாற்றரும் படைக ளாக வழங்கிய விரண்டும் வெளவி
யாற்றருந் தன்மைத்தாக வனுகுரு தகன்று போகிச்
சீற்றமுஞ் சமரு நீங்கிச் சேணுற நோக்கி நின்றேம். (சுo)

நிற்றலும் யாங்கள் கேட்ப நெடுவிசும் பிடையோர் வார்த்தை
தெற்றென வெழுந்த தம்மா சிறுவிர்கா ளுமது வன்மை
பற்றலர் புரமூன் றட்ட பரமனே காண்பான் சோதி
மற்றித னடியு மீறும் வரன்முறை தேரு மென்றே. (சுக)

கேட்டன மதனை நெஞ்சிற் கிளர்ந்தெழு சீற்றம் யாவும்
வீட்டின மெனினும் பின்னும் விட்டில மகந்தை தன்னைக்
காட்டிய வெமது முன்னோன் காண்பனும் வலியை யென்ன
வீட்டுடன் விசும்பிற் சொற்றார் யார்கொலென் றெண்ணிப்பின்னும். ()

ஏனுற வெதிர்ந்தி யாஞ்செ யிகலினுக் கிடையூ றாக
நீணில மதனைக் கீண்டு நிமிர்ந்துவான் புகுந்து நீடு
மாணுறு சோதி தானு மறைமுனி யுறைத்த வாறு
காணிய வந்த தெம்மிற் கடந்தவான் பொருள்கொ லென்றேம். (சுங)

தீதுறு காலின் வந்த செந்தழ லன்று வீது
யாதமொன் றறித றேற்று மிருவரு மிதனை யின்னே
யாதியு முடியு நாடி யன்னது காண்டு மென்று
மாதவன் றானும் யானும் வஞ்சின மிசைத்து மன்னோ. (சுச)

நீடுவா னுருவிச் சென்று நிலனுற விடந்து புக்கு
மோடிநா மொல்லை தன்னி னுற்றிதற் கடியு மீறு
நாடினு லவற்றி லொன்று நலம்பெற முன்னங் கண்டோர்
பீடியா தலைவ ரீதே துணிவெனப் பேசி நின்றேம். (சுரு)

முடியினைக் காண்ப னென்றே மொழிந்தனன் றமிய னேனை
யடியினைக் காண்ப னென்றே யரியுமங் கிசையா நின்று
ணடையபின் மழலை யோவா நாகிளஞ் சிறுவர் வானிற்
சுடர்மலி கதிரைக் கையாற் றீண்டுவான் றுணியு மாபோல. (சுசு)

எரியுறழ் தறுகட் செங்க ணிமிலுடை யெருத்தம் யாரு
முருகெழு தழனிக் கூர்வா யொள்ளெயி றிலங்கு தந்தங்
கருவரை யனைய மேனிக் கடுநடைக் குறுந்தாள் வெள்ளைக்
குரமொடு கண்ண னன்றோர் கோலமாங் கோலங் கொண்டான். (சுஎ)

ஒருபது நூற தாகும் யோசனை யுகபபி னோடு
பருமையு மாகுமந்தப் பகட்டுரு வாகி முன்னந்
தரணியை யிடந்து கீழ்போய்த் தடவியே துருவிச் சென்று
நிரைபடு புவனம் யாவு நீந்தியே போயி னானால். (சுஅ)

பாதல நாடி யன்னோன் படர்தலும் யானு மாங்கோ
ரோதிம வடிவ மாகி யொல்லையி லெழுந்து மீப்போய்
மேதகு விசும்பின் மேலாம் வியன்புவ னங்களூடிப்
போதலுஞ் சோதி முன்னம் போலமேல் போயிற் றம்மா. (சுகூ)

முன்னமோ ரேன மாகி முரனொடு புவனி கீண்டு
வன்னியா யெழுந்த சோதி வந்ததோர் மூலங் காண்பா
னுன்னியே போன மாலோ னூக்கியே செல்லச் செல்லப
பன்னெடுங் காலஞ் சென்ற பாதமுங் கானான் மாதோ. (எ0)

நொந்தன வெயிறு மேனி நுடங்கின நோன்மை யாவுஞ்
சிந்தின புனலுண் வேட்கை சேர்ந்தன வுயிர்ப்பி னோடும்
வந்தன துயரம் போன வலுசின மகந்தை வீந்த
முந்தையி னுணர்வு மால்பான் முழுதொருங் குற்ற தன்றே. (எக)

தொல்லையி னுணர்ச்சி தோன்றத் துண்ணெனத் தெளிந்த கண்ண
னல்லுறழ் புயலின் றேத்தத் தண்ணலங் களிற்றின் யாக்கை
மெல்லவே தரிக்க லாற்றான் வீட்டவுங் கில்லான் மீண்டு
செல்லவு மூற்ற மில்லான் சிவனடி சிந்தை செய்தான். (எஉ)

வேறு.

என்று முணர்வரிய வெம்பெருமா னுன்றிருத்தா
ளன்றி யரணில்லை யவற்றையருச் சித்திடவும்
பொன்றியதென் வன்மை பொறுத்தி குறையடியே
னென்று முணரேனென் றுளநொந்து போற்றினனே. (எங)

ஆன பொழுதி லமலன் றிருவருளாற்
றேனுலவு தண்டாத திருமான் மிடலினொ
டேன வடிவோ டெழுந்துபுவிப் பாலெய்தி
வானுறுசோ திக்கணித்தா வந்து வணங்கினின்றான். (எச)

வேறு.

நின்றா னொருபா னெடுமாலது கிறக யான்முன்
பின்றா வகையாற் பெருஞ்சூளிவை பேசி வானிற்
சென்றா யிரயாண்டு திரிந்து திரிந்து நாடிக்
குன்றாத சோதிக் கொழுந்தின் றலை கூட லேன்யான். (எரு)

மீளும் படியு நினையேன்வினை யேனு மீளிற்
சூளும் பழுதா மதுவன்றித் துணிந்து முன்ன
மூளுஞ் சுடரின் முதலகண டரிமோத்தி யாவா
னொளென்ப ரென்னை யழிவெய்துமிவ் வாறறன் மன்னோ. (எசு)

எந்நாள்வரை செல்லினுஞ் செல்லுக வின்னும் விண்போய்ப
பொன்னாமுடி கண்டபி னல்லது போக லேனென்
றுன்னுவது காணிய போதலு முள்ளம் வெம்பி
மனனு வுயிரு முலைந்தாற்றலு மாண்ட தன்றே. (எஎ)

கண்ணுஞ் சுழன்ற சிறைநொந்தன காலு மோய்ந்த
வெண்ணுந் திரிந்த ததுபோதி லெழுந்த சோதி
யுண்ணின் றசித்த ரெனவேபல ரொல்லை மேவி
விண்ணின் றலைபோ யிதுவொன்று விளம்ப லுற்றார். (எஅ)

வானார்பரஞ் சோதியி னீற்றினை வாரி தன்னுண்
மீனார் தரவே திரிகின்றதொர் வெள்ளை யன்னந்
தானு முணருஞ் சிறைபோகித் தளர்ந்து வன்மை
போனாலு நாட வருகின்றது போலு மம்மா. (எகூ)

அன்னந் தனக்கீ தறிவின்மைய தாகு மல்லாற்
பின்னொன் றுளதோ துணிவுற்றதோர் பெற்றி நோக்கி
னின்னுஞ் சிறிது பொழுதேகி னிறக்கு மிந்த
மன்னுஞ் சுடரைச் சிவனென்று மனங்கொ ளாதோ. (௮௦)

மாலென் பவனு நிலங்கீண்டனன் வல்லை யேகி
மூலந் தெரிவா னுணராமன் முரணு நீங்கிச்
சீலங் குறுகச் சிவனேசர ணென்று பைய
ஞாலந் தனில்வந் தனல்வெற்பினை நண்ணி நின்றான். (௮௧)

முந்துற் றிதனை யருள்செய்திடு மூர்த்தி தானே
சிந்தைக் குண்மாசு தனைதீர்த்தருள் செய்யி னுய்யு
மிந்தப் பறவை யெனயானு மிதனை நாடிப்
புந்திக் குண்மைய லொழிந்தேயவர்ப் போற்றி செய்தேன். (௮௨)

ஈசன் னருளா லிவைகூறின ரேக லோடு
மாசின் வழியா மகந்தைத்திற ஞதி யாய
பாசங்களை வீட்டி யரன்புகழ் பன்னி யேத்தி
நேசங்கொடு பூசனை செய்ய நினைந்து மீண்டேன். (௮௩)

வேறு.

வந்துகண்ணன் றனையணுகி வான்பொருள்யா மென்றிகலி
முந்துறுவெஞ் சமரியற்றி முனிமொழியு முணர்ந்திலமாற்
றந்தைவர வறியாமற் றாண்முடியுந் தேடலுற்றே
மந்தமுறும் வேலைதனி லவனருளா லவற்புகழ்ந்தேம். (௮௪)

ஈண்டுநில னிருவிசும்பிற் கிளர்ந்துமடி முடியுணரே
மீண்டுமவன் றன்னருளான் மிடல்பெற்று வந்தனமா
லீண்டுசிவன் றனைவழிபட் டிருவருமன் னவன்றோற்றங்
காண்டுமென யானுரைப்பக் கண்ணனுமங் கதற்கிசைந்தான். (௮௫)

இருவருமச் சிவனுருவை யியன்முறையாற் றாபித்து
விரைமலர்மஞ் சனஞ்சாந்தம் விளக்கழலா தியவமைத்துப்
பொருவருபூ சனைபுரிந்து போற்றிசெய்து வணங்குதலு
மெரிகெழுசோ திக்கணிதா வெந்தையவண் வந்தனனே (௮௬)

மைக்களமு மான்மழுவும் வரதமுட ஞபயமுறு
மெய்க்கரமு நாற்புயமும் விளங்குபணிக் கொடும்பூணுஞ்
செக்கருறு மதிச்சடையுஞ் சேயிழையோர் பாகமுமாய்
முக்கணிறை யாங்காண முன்னின்றே யருளபுரிந்தான். (௮௭)

அவ்விடையா மிருவர்களு மமலன்ற னடிவணங்கிச்
செவ்விதினின் றவனருளிற் றிளைத்திதனைச் செப்பினமான்
மெய்வகையா மன்பின்றி விளங்காநின் னியன்மறையு
மிவ்வகையென் றுணராதே யாங்காணற் கெளிவருமோ. (௮௮)

புந்தி மயங்கிப் பொருங்காலை யெம்முன்னிற்
செந்தழலின் மேனிகொடு சென்றருளித் தொல்லறிவு
தந்துநினை யுணர்த்தித் தாக்கயரு நீக்கினையா
லெந்திரம்யா முன்னின் றியற்றுகின்றாய் நீயன்றோ. (௮௯)

உன்னை யுணரு முணர்வுபுரிந் தாலுன்னைப்
பின்னை யுணர்வேம் பெருமசிறி யேஞ்செய்த
புன்னெறியை யெல்லாம் பொறுத்தியாற் றஞ்சிறுவ
ரென்ன செயினு மினிதன்றோ வீன்றவர்க்கே. (சு0)

இன்னாத் தகைசே ரிரும்பினைவல் லோனிலங்கும்
பொன்னாக் கியபரிசு போலே யெமையருளி
மன்னாக்கினை யயர்த்தோ மற்றுனையும் யாங்களுயிர்
தொன்னாட் பிணித்த தொடரகற்ற வல்லேமோ. (சுக)

வேறு.

என்றி யம்பியா மேத்தலு மெதிருற நோக்கிக்
குன்ற வில்லுடை யொருவனீர் செய்தன குறியா
வொன்று மெண்ணலீர் நும்பெரும் பூசனை யுவந்தா
மன்று மக்கருள் பதந்தனை யின்னும்யா மளித்தேம். (சுஉ)

வேண்டு நல்வரங் கேண்மினீ ரென்றலும் விசும்பிற்
றூண்ட வம்புரி பகவநின் சரணமே யரணுப
பூண்டி டுந்தலை யன்பரு ளென்றலும் புரிந்து
காண்ட குந்தழற் சோதிய ளிமைப்பினிற கலந்தான். (சுங)

கலந்த காலையில் யாங்கண்முன் றெழுந்தெழுங் காலைச்
சலங்கொள் பான்மையின் முன்னுறத் தேடுவான் றழலாய்
மலர்ந்த பேரொளி மீமிசை சுருங்கியே வந்தோர்
விலங்க லாகிய துலகெலாம் பரவியே வியப்ப. (சுச)

அன்ன தாஞ்சிவ லிங்கரூ பந்தனை யணுகி
முன்ன மாகியே மும்முறை வலஞ்செய்து முறையாற்
சென்னி யாற்றொழு தேத்தியெம பதங்களிற் சென்றேம்
பின்ன ரெந்தையை மறந்திலம் போற்றுதும பெரிதும். (சுரு)

அரியும் யானுமுன் றேடுமவ் வனறகிரி யனல
கிரியெ னும்படி நின்றதா லவ்வொளி கிளர்ந்த
விரவ தேசிவ ராத்திரி யாயின திறைவற்
பரவி யுய்ந்தன ரன்னதோர் வைகலிற் பலரும். (சுசு)

ஆத லாலவ னருள்பெறி னவனிய லறியு
மோதி யாகுவ ரல்லரேற் பலகலை யுணாந்தென்
வேத நாடியென் னிறையுமன் னவனிலை விளங்கார்
பேதை நீரரு மாங்கவ ரல்லது பிறரார். (சுஎ)

மோக வல்வினை யாற்றியே பவததிடை மூழ்கும்
பாக ரல்லவர்க் கெய்திடா தவனருள் பவமும
போக மாற்றிடு தருமமு மிகர்வரு புனிதர்க்
காகு மற்றவ னருணிலை பாகரா மவரே. (சுஅ)

நீயுந் தொல்வினை நீங்கலி னெமபிரா னிலைமை
யாயுந் தொல்லுணர் வின்றுவந் தெய்திய தவனே
தாயுந் தந்தையுங் குரவனுங் கடவுளுந் தவமு
மேயுஞ் செல்வமு மனையவற் சார்தியா லென்றான். (சுகூ)

ஆ திருவிருத்தம் க,சுசுக.

## வசனம்.

பிரமன் தக்கனைநோக்கி பின்வருமாறுகூறினன். என்செய்தனை மைந்த! நின் எண்ணம் யாது? தேவர்க்கும் முனிவர்க்கும் மறையவர்க்கும் இயமனானாய். நின் சீரும், பேரும், அறிவுந் தொலைத்தனை. நின் ஊழ்வலியால் பெரியோர்சொற் கேளாது சிவபெருமானை இகழ்ந்தனை. நீ என்செய்வாய்? ஜீவராசிகளுக்குச் சகசமாயுள்ள மயக்கம் நின்னைப் பற்றியது; அது உலகம்படைக்கும் என்னையும்பற்றச் சிவபெருமான் தனது கிருபையால் நீக்கினான். ஆகையால் சிவபெருமானைப் பூஜை செய்வாயாக. பிறகு இத்துன்பம்நீங்கி, ஞானமபெறச் சிவபிரான் நினக்கருளுவனென்றுகூற இதைக்கேட்ட தக்கன் பிரமனைநோக்கி உன்னிடத்தும் மயக்கமுண்டாயதும் சிவபிரானருளியதும் எனக்கு உரைப்பாயாக என்றனன். அவ்வாறே அக்கதையைக் கூறலாயினான். இரண்டாயிரம் சதுர்யுகங்கள் எனக்கொருநாளாகும்; அது முடியும்பொழுது சூரியன் முதலிய தேவர்களும் உலகமுமொடுங்கும். மாயோன் நித்திரைசெய்வான். அப்படியிருந்த மாயோனை தேவர்கள்வேண்ட பன்றியுருக்கொண்டு பாதலஞ்சென்று பூமியைத் தன் கொம்பினைக்கொண்டு மீண்டும் தாபித்தனன். பின்னர் யான் துயிலொழிந்து மீண்டும் உலகம் முன்னர் இருந்தவாறே படைத்தனன். இதனால் உலகத்திற்கு மூலகாரணன் யானேயெனச் செருக்குற்று மாலினையடைந்து மார்பிற்றாக்கினன். உடனே அவன் விழித்து நின்னுடைய தாதையும் பிரமமுமாயின் என்னை இவ்வாறு தாக்கியது குற்றமன்றோவென்றனன். அதற்கு யான் பிருகு சாபத்தால் நீபெற்ற பத்துப்பிறப்பினையும் படைத்தனனன்றோ? அதனால் நான் நின்தாதை என்றனன். அதற்குத் திருமால் நகைத்துச் சிவபெருமான் கிள்ளிய நின்தலையில் ஒன்றை இன்னும் படைத்திலை. இதுவோ நின்படைப்புத்திறம்? ஆகையால் யானே எல்லாமாயிருப்பவன் என்றனன். அதற்குயான் நாமிருவரும் சண்டைசெய்வோம் அதில் வெற்றிபெற்றவரே மேலானவர் என்றனன். அதற்கிணங்கி யாமிருவரும் பன்னாள் போர்புரிந்தனம். இருவரும் சிவாஸ்திரம் எடுத்தனம்; அவற்றின்போரால் உலகம் அழிய ஆரம்பித்தது; இதனைக்கண்ட நாரதர் எமயிருவர்முன்தோன்றி இவ்வஸ்திரத்தைக் கொடுத்த சிவனை மறந்தீர் ஆகையால் சிவனினைந்து நும்போரைநிறுத்தும் என்று உரைத்து மறைந்தனர். அதனையோராது மீண்டும யாம் போர்புரியலானோம். இதனையறிந்த சிவபிரான் எங்களமத்தியில் மாசில சதுர்த்தசியன்று அக்கினி மலையாய்த் தோன்றினன். இவ்வக்கினித்தம்பத்தின் அடிமுடிகாணவல்லரே மேலோரென ஓர் அசரீரி தோன்றியது. அதனைக்கேட்டு அளவில திருமால் பன்றியுருக்கொண்டு பூமியைப்பிளந்து அடியினைத் தேடிச்சென்றனன். யானும அன்னவுருக்கொண்டு பறந்து முடியினைத் தேடிச்சென்றனன். பாதலஞ்சென்ற திருமால் அடியைக்காணாது தன் ஆற்றலிழந்து சிவனடியைச் சிந்தைசெய்து சிவபிரானருளால் திரும்பிவரச் சக்திபெற்று பூமியின்மீது வந்திருந்தனன். யானும் மேல்நோக்கிப்பறந்து என் வலியுமிழந்து மீண்டும் பூமியில்வந்தேன்; பிறகு இருவரும் சிவபிரானைத்துதித்தனம்; அதற்கிணங்கிய சிவபெருமான் மான் மழு சதுர்ப்புஜனாய் மாதொருபாகனாய் எங்கள்முன் தோன்றினான்; அவரைநோக்கித் துதித்தனம். அதற்கு அவன் தலைமையன்பினை யெமக்களித்து மலைவடிவாயினன், அம்மலையை மும்முறைவலஞ்செய்து சிவபிரானை மறவாது எமதுபதவிகளிற்சென்றோம். ஆகையால் இச்சிவபெருமானே, மாதாவும், பிதாவும், குருவும், கடவுளும், தவமும், செல்வமுமாவன். அவனையடைவாயாக என்று பிரமன் தக்கனுக்கு உரைத்தான்.

அடிமுடிதேடுபடலம் முற்றிற்று.

---

# தக்கன்சிவபூசைசெய்படலம்.



மருமல ரயனிவை வகுப்ப நாடியே
புரிகுவ னஃதெனப் புகன்று தாதைதாள்
பரிவொடு சிறுவிதி பணிந்து காசியாந்
திருநக ரதனிடைச் சேறன் மேயினான் (க)

சென்றனன் காசியிற் சிறந்த தொன்மணி
கன்றிகை யொருபுடை கங்கை வேலையிற்
பொன்றிகழ் செஞ்சடைப் புனிதற் காலய
மொன்றுமுன் விதித்தன னுணர்வு சேர்ந்துளான். (உ)

அருளுரு வாகியே யகில மாவிக
டருவதுங் கொள்வது மாகித் தாணுவா
யுருவரு வாகிய வொப்பில் பேரொளித
திருவுரு வொன்றினைச் சிவனுக் காக்கினான். (௩)

நாயகன் மொழிதரு நவையி லாகம
மேயின முறைதெரி விரத னாகியே
பாய்புனல் புனைசடைப் பரமன் றாண்மல
ராயிரம் யாண்டுகா றருச்சித் தேத்தினான். (௪)

அருச்சனை புரிதலு மயன்றன் காதலன்
கருத்துறு மன்பினைக் கண்டு கண்ணுதல்
பொருக்கென வெளிப்படப் புகழ்ந்து பொன்னுலாந்
திருக்கழல் வணங்கினன் றெளிவு பெற்றுளான். (௫)

அகந்தைய தாகியே யைய நின்றனை
யிகழ்ந்தன னென்கணே யெல்லை யில்பவம்
புகுந்தன வவையெலாம் போக்கி நின்னிடைத்
தகும்பரி சன்பினைத் தருதி யாலென்றான். (௬)

ஆயவை தொலைத்தளித் தவன்றன் பூசையி
னேயம தாகியே நிமலன் றன்கண
நாயக வியறனையை நல்கி யெல்லையிற்
போயினன் றக்கனும் புனித னாயினான். (௭)

வேறு.

கங்கைச் சடையான் றனைத்தக்க னக்காசி தன்னி
லங்கர்ச் சனைசெய் திடப்போந் துழியம் புயன்மா
றுங்கத் திமையோ ரிறையா வருஞ்சூர மாதர்
சங்கத் தவரு மகவெல்லை தணந்து போனார். (அ)

போகுற் றவர்க ளனைவோரும் பொருவில் சீர்த்தி
வாகுற்ற வீரன் சயந்தன்னை வழுத்தித் தங்கட்
காகுற்ற தொலைத் தலந்தோறு மடைந்து மாதோர்
பாகத் தமலன் றனைப்பூசனை பண்ண லுற்றார். (௯)

ஆரா தனைகள் புரிந்தே யனைவோரு மெங்கும்
பேராது நிற்கும் பெருமானருள் பெற்று மெய்யிற்
றீராத தின்னங்க ளுந்தீர்ந்து சிறந்து தத்த
மூரா கியதோர் பதமேவி யுறைத லுற்றார். (௰)

மேதக்க தக்கன் மகந்தன்னில் விரைந்து புக்காங்
கேதத் தடிசின் மிசைந்தே பொருள்யாவு மேற்றுப்
பூதத் தரின்மாய்ந் தெழுந்தே தம்புரிக டோறும்
பேதைத் தொழிலந் தணர்யாரும் பெயர்ந்து போனார் (௧௧)

என்றிங் கிவைகள் குரவோ னிசைத்திட்டல் கேளா
நன்றென்று சென்னி துளக்குற் றுநனி மகிழ்ந்து
குன்றின்சிறை கொய்தவனை றந்த குரிசி லுளளத்
தொன்றுங் கவலை யிலனாகியவ் வுமப ருற்றான்.  (௧௨)

ஆ திருவிருத்தம் ௧,௬௭௩.

வசனம்.

அதன்பிறகு தக்கன், தன் தந்தையானவர் அருளிச் செய்தபடியே தவஞ் செய்யக்கருதி, காசியையடைந்து, கங்கைக்கரையில் ஆலயமொன்றுண்டாக்கி, சிவலிங்கத்தைத் தாபித்து ஆயிரவருடம் அருச்சித்துவர, இறைவன் இறைவியோடு மெழுந்தருளக்கண்டு துதித்து வணங்கி, சுவாமீ, அடியேன் பேதைமையால் அளவற்ற பாவங்களைத் தேடிக்கொண்டேன். அவற்றைப்போக்கி உமது அடியாரிற் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று வேண்ட, அவ்வாறே கணத்தலைமையருளி மறைந்தனர். பிரமன் முதலியோர் சிவப்பிரதிஷ்டை செய்து பூசித்து வேண்டிய பேறுகளைப்பெற்றுத் தங்களுலகத்திற்குப் போனார்கள். தக்கன் யாகத்திற் சேர்ந்திருந்ததனாலேதான் இவர்கள் யாவரும் சூரன் முதலியோரால் துன்பமடைய வேண்டியதாயிற்றென்று பிருகற்பதி பகவான் சொல்லக்கேட்ட சயந்தன் சந்தேக மொழிந்து விண்ணுலகத்தை அரசுபுரிந்துவந்தான்.

தக்கன்சிவபூசைசெய்படலம் முற்றிற்று.

# கந்தவிரதப்படலம்.

உரைசெறி மகவான் செம்ம லும்பரி விருபப விம்பா
முரசெறி தானை வேந்தன் முசுகுந்த னென்னும் வள்ளல்
விரைசெறி நீபத் தண்டார் வேல்வன் விரதம் போற்றித்
திரைசெறி கடற்பா ராண்ட செயன்முறை விளம்ப லுற்றாம். (௧)

முந்தொரு ஞான்று தன்னின் முசுகுந்தன் வசிட்ட னென்னு
மந்தண னிருக்கை யெய்தி யடிமுறை பணிந்து போற்றிக்
கந்தவேள் விரத மெல்லாங் கட்டுரை பெரியோ யென்ன
மைந்நீ கேட்டி யென்னு மற்றவை வழாது சொல்வான். (௨)

எள்ளருஞ் சிறப்பின் மிக்க வெழுவகை வாரந் தன்னுள்
வெள்ளிநாள் விரதந் தானே விண்ணவ ருலகங் காத்த
வள்ளறன் விரத மாகு மற்றது புரிந்த மேலோ
ருள்ளமே நினைந்த வெல்லா மொல்லையின் முடியு மன்றே. (௩)

பகிரத னென்னும் வேந்தன் படைத்தபா ருலகை யெல்லா
நிகரறு கோர னென்னு நிருதனங் கொருவன் வௌவ
மகவொடு மனையுந் தானும் வனத்திடை வல்லை யேகிப்
புகரவன் றனது முன்போய்த் தன்குறை புகன்று நின்றான். (௪)

பார்க்கவ னென்னு மாசான் பகீரத னுரைத்தல் கேளா
வேற்கரன் மகிழு மாற்றால் வெள்ளிநாள் விரதந் தன்னை
நோற்குதி மூன்றி யாண்டு நுங்களுக் கல்லல் செய்த
மூர்க்கனு முடிவ னீயே முழுதுல காள்வை யென்றான். (௫)

நன்றென வினவி மன்னன் ஞாயிறு முதலா நாளி
லொன்றெனும் வெள்ளி மூமறு முணவினைத் துறந்து முன்பின்
சென்றிடு மிரண்டு நாளுந் திவாவினி லடிசின் மாந்தி
யின்றுயி லதனை நீத்தி யாண்டுமூன் றளவு நோற்றான். (௬)

நோற்றிடு மளவி லைய னுதியுடைச் செவ்வேல் வந்து
மாற்றல னுயிரை யுண்டு வல்லையின் மீண்டு செல்லப்
போற்றியே பகீர தப்பேர்ப் புரவலன் றன்னூ ரெய்தி
யேற்றதொல் லரசு பெற்றா னின்னுமோர் விரதஞ் சொல்வாம். (௭)

வாரிச மலர்மேல் வந்த நான்முகன் மதலை யான
நாரத முனிவ னென்போ னலத்தகு விரத மாற்றி
யோரெழு முனிவர் தம்மி லுயர்ந்திடு பதமு மேலாஞ்
சீரொடு சிறப்பு மெய்தச் சிந்தனை செய்தா னன்றே. (௮)

நூற்படு கேள்வி சான்ற நுண்ணிய வுணர்வின் மிக்கோன்
பார்ப்பதி யுதவு முன்னோன் பதமுறை பணிந்து போற்றி
யேற்புறு முனிவ ரான வெழுவகை யோரில் யானே
மேற்பட விரத மொன்றை விளம்புதி மேலோ யென்றான். (௯)

முன்னவ னதனைக் கேளா முழுதருள் புரிந்து நோக்கி
யன்னது பெறுதி திண்ண மாறுமா முகத்து நம்பி
பொன்னடி வழிபா டாற்றிப பொருவில்கார்த் திகைநாளென்னைப்
பன்னிரு வருடங் காறும் பரிவுடன் புரிதி யென்றான். (௧௦)

நாரதன் வினவி யீது நான்புரிந் திடுவ னென்னாப்
பாருல கதனில் வந்து பரணிநா ளபரா ணத்தி
லோர்பொழு துணவு கொண்டே யொப்பில்கார்த் திகைநா டன்னில்
வீரவேற் றடக்கை யண்ணல் விரதத்தை யியற்ற லுற்றான். (௧௧)

தூசொடு கயத்தின் மூழ்கித் தூய்யவெண் கலைகள் சுற்றி
யாசறு நியம முற்றி யான்றமை புலத்த னாகித்
தேசிகன் றனது பாதஞ் சென்னிமேற் கொண்டு செவ்வேள்
பூசனை புரிந்திட் டன்னான் புராணமும் வினவி னானல். (௧௨)

கடிப்புன லள்ளித் தன்னோர் கைகவித் தூண்டு முக்காற்
படுத்திடு தருப்பை யென்னும் பாயலிற் சயனஞ் செய்து
மடக்கொடி மாதர் தம்மை மறவியா மதித்து வள்ள
லடித்துணை யுன்னிக் கங்கு லவதியு முறங்கா தூற்றான். (௧௩)

அந்தநாள் செல்லப் பின்ன ருரோகிணி யடைந்த காலைச்
சந்தியா நியம மெல்லாஞ் சடக்கென முடித்துக் கொண்டு
கந்தவேள் செம்பொற் றண்டைக் கான்முறை வழிபட் டேத்தி
வந்தமா தவர்க ளோடும் பாரண மகிழ்ந்து செய்தான். (௧௪)

பாரணம் விதியிற் செய்தோன் பகற்பொழு துறங்கு மாயி
னாரண மறையோர் தம்மி லொம்பதிற் றிருவர் தம்மைக்
காரண மின்றிக் கொன்ற கடும்பழி யெய்து மென்னா
சூரதன் மாயம் வல்லோ னிமைத்தில னயனஞ் சற்றும். (௧௫)

விழியொடு மிமைகூ டாமே வெய்யவன் குடபால் வீழும்
பொழுதள விருந்து மற்றைப் புறத்துள செயலும் போற்றி
யழிவறு விரத மிவ்வா றூறிரு வருட மாற்றி
யெழுவகை முனிவோ ருக்கு மேற்றமாம் பதத்தைப் பெற்றான். (௧௬)

இந்தநல் விரதந் தன்னை யீண்டொரு மறையோ னேற்று
முந்திய மனுவே யாகி முழுதுல கதனை யாண்டா
னந்தண னொருவன் பின்னு மவ்விர தத்தைப் போற்றிச்
சிந்தையி னினைந்தாங் கெய்தித் திரிசங்கு வாகி யுற்றான். (௧௭)

ஈங்கொரு மன்னன் வேட னிருவரு நோற்று வண்மை
தாங்கிய வந்தி மானே சந்திமா னென்று பேராய்
வீங்குநீ ருடுத்த பாரை மேலைநாட் புரந்தா ரென்ப
வாங்கவர் பின்னும் முத்தி யடைவது திண்ண மம்மா. (௧௮)

இப்படி யார ணாளில் விரதத்தை யியல்பி னேற்று
முப்புவ னத்தின் வேண்டு முறைமையை யடைந்த நீரார்
மெய்ப்படு தொகையை யாரே விளம்புவ ரீதே யன்றி
யொப்பரும் விரதம் வேறு மொன்றுள துரைப்பக் கேண்மோ. (௧௯)

வெற்பொடு மவுணன் றன்னை வீட்டிய தனிவேற் செங்கை
யற்புதன் றன்னைப் போற்றி யமரரு முனிவர் யாருஞ்
சொறபடு துலையின் றிங்கட் சுக்கில பக்கந் தன்னின்
முற்பக லாதி யாக மூவிரு வைக னேற்றார். (௨௦)

முந்திய வைக லாதி மூவிரு நாளுங் காலை
யந்தமில் புனலின் மூழ்கி யாடையோ ரிரண்டு தாங்கிச்
சந்தியிற் கடன்கள் செய்து தம்பவிம் பங்கும் பத்திற்
கந்தனை முறையே பூசை புரிந்தனா கங்குற போதில. (௨௧)

நிறைதரு கட்டி கூட்டி நெய்யினாற் சமைக்கப் பட்ட
குறைதவிர் மோத கத்தைக் குமரநா யகற்க ருத்திப்
புறவுள விதியுஞ் செய்து பிரான்றிருப் புகழ்வி னவி
யுறுபுன்ல் சிறிது மாந்தி யுபவசித திருந்தா ரம்மா. (௨௨)

ஆரண முனிவர் வானோ ரங்கதன் மற்றை வைகல்
சீரணி முருக வேட்குச் சிறப்பொடு பூசை யாற்றிப
பாரணம் விதியிற் செய்தார் பயிற்றுமிவ் விரதந் தன்னாற்
சூரணி யவுணர் கொண்ட தம்பதத் தலைமை பெற்றார். (௨௩)

என்றிவை சூதவன் செப்ப விறையவன் வினவி யெந்தாய்
நன்றிவை புரிவ னென்னா நனிபெரு வேட்கை யெய்தி
யன்றுதொட் டெண்ணில் கால மவ்விர தங்க ளாற்றிக்
குன்றெறி நுதிவே லையன் குரைகழ லுன்னி நோற்றான். (௨௪)

வேறு.

ஆன காலையி லாறுமா முகமுடை யமலன்
கோன வன்றனக் கருளுவான் மஞ்ஞைமேல் கொண்டு
தானை வீரனு மெண்மரு மிலக்கருஞ் சார
வானு ளோர்களுங் கணங்களுஞ் சூழ்வுற வந்தான். (௨௫)

வந்து தோன்றலு மன்னவர் மன்னவன் மகிழ்ந்து
கந்த வேளடி பணிந்தனன் கைதொழூஉப் பரவ
வந்த மில்பகல் விரதங்க ளாற்றினை யதனா
லெந்த நல்வரம் வேண்டினை யதுபுக லென்றான். (௨௬)

என்ற காலையின் முசுமுக முடையவ னெந்தாய்
நன்று பாரெலா மெனதுசெங் கோலிடை நடப்பான்
வென்றி மொய்ம்பின னாதியாம் வீரரை யெல்லா
மொன்று கேண்மையிற் றுணைவராத் தருதியென் றுரைத்தான். ()

மன்ன னிவ்வகை வேண்டுகோள் வினவுறா வள்ள
லன்ன வாறுனக் குதவுவ மென்றருள் புரிந்து
மின்னல் வாட்படை வீரமொய்ம் பன்முதல் விளம்புந்
துன்னு தானையந் தலைவரை நோக்கியே சொல்வான். (௨௮)

நோற்றல் கூடிய முசுகுந்த னும்மினு மெம்பா
லேற்ற மேதரு மன்பின னெழுகடற் புவியும்
போற்ற வைகுவா னீவிர்க ளாங்கவன் புடைபோ
யாற்றல் சான்றிடு துணைவரா யிருத்திரென் றறைந்தான். (௨௯)

வேறு.

முழுதருட் புரிதருங் கடவுள்சொல் வினவியே முடிவ தில்லாச்
செழுமதித் தண்குடைச் சூர்குலந் தனையடுந் திறவி னோர்கள்
பழிபடப் பானுவின் வழிவருஞ் சிறுமகன் பாங்க ராகி
யிழிதொழிற் புரிகிலோ மெனமறுத் துரைசெய்தா ராரும் வீரர். (௩௦)

ஞானநா யகனவர் மொழிதனைத் தேர்ந்துநம் முரைம றுத்தீ
ரானதோர் பான்மையா னீவிர்மா னுடவரா யவனி மன்னன்
சேனையா கிப்புறம் போற்றியே பற்பகற் சேர்திர் பின்னர்
வானுளோர் புகழவே நோற்றுநம் பக்கலில் வருதி ரென்றான். (௩௧)

ஐயன்வாய் மொழியினால் வீரமொய்ம் புடையவ னாதி யானோர்
மையன்மா னுடவராய்த் தொல்லைநா ளுடையதோர் வன்மைநீங்கி
மெய்யெலாம் வியர்வுறப் பதைபதைத் தேங்கியே விழும மிக்குப்
பொய்யரேம் பிழைபொறுத் தருடியா லென்றுபொன் னடிப ணிந்தார்.

கமலமார் செய்யசே வடியின்மேற் றாழ்ந்துகை தொழுது போற்றிக்
குமரவேள் விடைதனைப் பெற்றுமா னவரெலாங் கொற்ற மன்னன்
றமர்களா யொழுகினர் நேமியும் படையுடைத் தரும மூர்த்தி
யமரர்கோ னிளவலா யாங்கவன் பின்செலு நிமைதி யேபோல். (௩௩)

ஆயதோர் காலையின் முசுமுகத் திறையவ னுடல் வேற்கை
நாயகன் பொற்பதம் வந்தியா திற்பகல் லருள்பு ரிந்தே
பாயபொன் சுடர்மணித் தோகையம் புரவியும் படைக் ளாகு
மாயிரும் பூதருந் தானுமந் நிலைதனின் மறைத லுற்றான். (௩௪)

வேறு.

மறைந்தனன் குமர னேக மன்னவன் மகிழ்ச்சி கொண்டு
சிறந்திடு கருவூ ரென்னுந் திருநக ரரசின் மேவி
யறந்தரு மாட வீதி யளப்பில புரிவித் தாங்கே
நிறைந்திடு வீரர் தம்மை நிலைபெற விருத்தி னானே. (௩௫)

ஆயவர் தங்கட் கெல்லா மரும்பெற லாக்க முள்ள
தேயமுங் கரிதேர் வாசித் திரள்களும் வரிசை முற்றுந்
தூயபல் சனங்க ளாகுந் தொகுதியு முதவித் தண்ட
நாயக முதல்வ ராக நல்கினன் ஞால மன்னன். (௩௬)

அன்னதோர் காலந் தன்னி லரம்பைய ரவனி யாளு
மன்னவர் தம்பாற் றோன்றி வளர்தலும் வாகை மொய்ம்பின்
முன்னவன் முதலோர்க் கெல்லா முசுகுந்த வேந்த னந்தக்
கன்னியர் தம்மைக் கூவிக் கடிமண மியற்று வித்தான். (௩௭)

அந்தமில் வன்மை சான்ற வாடலம் புயத்தோன் புட்ப
கந்தியென் றுரைபெற் றுள்ள கன்னிகை தன்னை வேட்டுச்
சிந்தையின் மகிழ்வாற் சேர்ந்து சித்திர வல்லி யென்னும்
பைந்தொடி தன்னை யன்பாற் பயந்தனன் பதும மின்போல் (௩௮)

அத்தகு பொழுதிற் பின்னை யனகனே சனக னென்னும்
புத்திரா தம்மை நல்கிப் புவனியாண் முசுகுந் தற்குச்
சித்திர வல்லி யென்னுஞ் சீர்கெழு புதல்வி தன்னை
மெய்த்தகு வதுவை நீரால் விதிமுறை வழாம லீந்தான். (௩௯)

ஏனைய வீரர் தாமு மியல்புளி வழாமல் வேட்ட
தேனிவர் குழலா ரோடுஞ் சிறந்தவிவ் வாழ்க்கை போற்றிப்
பானலங் குதலைச் செவ்வாய்ப் பாலரை நீல வேற்கண்
மானனை யாரை நல்கி மனுகுலத் தொன்றி யுற்றார். (௪௦)

சித்திர வல்லி யென்னுஞ் சீருடைச் செல்வி யங்கோர்
தத்தையை வளர்த்த லோடுந் தண்டகத் தருமன் றேவி
யத்தனிக் கிளியை வெஃக வாங்கவன் றாதர் போந்து
கைத்தலத் ததனைப் பற்றிக் கடிதினிற் கொடுபோ யீந்தார். (௪௧)

அவ்வழி கிள்ளை காணா ளாயிழை யயர்த லோடு
மெவ்வழிப் போயிற் றோவென் றிறையவ னுலகி னாடி
மைவழி நின்ற மேனி மறலிதன் றுணைவி யானாள்
கைவழி யமருந் தன்மை கதுமென வுணர்ந்தா னன்றே. (௪௨)

பூதலம் புரந்த செங்கோற் புரவலன் வீர மொய்ம்ப
னாதியர் தம்மைக் கூவி யங்ஙனந் தூண்ட வன்னோ
ரேதமில் கரிதேர் வாசி யெல்லையின் மறவர் சுற்ற
மேதியங் கடவுண் மூதூர் விரைந்துபோய் வளைந்து கொண்டார். (சந)

தன்னகர் வளைத லோடுந் தருமன்வந் தேற்ற காலை
யன்னவ னொடுபோர் செய்தே யடுமுரண் டொலைச்சி யம்பொன்
வன்னமென் கிள்ளை தன்னை வாங்கினர் மீண்டு தங்கண்
மின்னுள மகிழ நல்கி வேந்தற்கு விசயஞ் செய்தார். (சச)

சித்திர வல்லி பின்னர்ச் சீர்கெழு சூல்கொண் டுற்று
மெய்த்தகு பலங்காய் வேண்டி வேண்டினள் வினவ லோடு
முத்தணி பலங்கற் றிண்டோண் முசுகுந்த னதுகொண் டேக
வத்திரு மலைநன் னாட்டுக் களபபிலோர் தம்மை யுய்த்தான். (சரு)

மஞ்சுசூழ் மலைநா டுள்ளார் மன்னவர் மன்ன னாணைக்
கஞ்சல ரிகழ்த லோடு மாடலம் புயனு மேனைச்
செஞ்சிலை வீரர் தாமுஞ் சென்றன ரந்நாட் டுள்ள
வெஞ்சுர மீரோன் பானும் வென்றொரு பகலின் மீண்டார். (சசு)

பூண்டிடு கழற்கால் வீரர் பொற்புறு புதல்வி யானாள்
வேண்டிய தீய பைங்காய் வியத்தக நல்கிப் பின்ன
ரீண்டுள தரணி யெல்லா மேகியே திறைகொண் டெங்கு
மாண்டைய மன்னன் கோலு மாணையு நடக்கச் செய்தார். (சஎ)

கருமுதிர் கின்ற காமர் கற்பக வல்லி யன்னா
ளொரிகிள ரங்கி வன்ம னென்பதோர் குமரன் றன்னை
யரியதோர் தவத்தின் சீரா லளித்தன ளதனைக் கண்டு
பெரிதுள மகிழ்ந்து மன்னன் பேரர சாட்சி செய்தான். (சஅ)

வேறு.

அன்ன காலையில் வலாசுர னென்பதோ ரவுணன்
பன்னெ டும்பெருஞ் சேனையுந் தானுமாய்ப் படர்ந்து
பொன்னி னாட்டினைச் சுற்றியே யடர்த்தலும் புலவோர்
மன்னர் மன்னவ னவனுடன் சிலபகன் மலைந்தான். (சகூ)

கிருதர் போற்றிய வலாசுரன் றன்னொடு நேர்ந்து
பொருது வென்றில னாதலாற் பூதலம் புரக்குங்
குருதி வேற்படை முசுகுந்த மன்னனைக் கூவி
வருதி யென்றொரு தூதனை விடுத்தனன் மகவான். (ருo)

ஏய தூதுவ னிருநிலம் புக்கன னிமையோர்
நாய கன்பணி யுரைத்தலு நன்றென வினவி
மாயி ருந்திறல் வீரர்தம் படையொடும வான்மேற்
போயி னான்முசு குந்தனென் றுரைபெறும் புகழோன். (ருக)

போன மன்னவன் புரந்தரன் பொன்னடி வணங்கித்
தானை விண்ணவர்க் கதிபனாக் தலைமையைத் தாங்கி
மானி னங்கண்மேன் மடங்கல்சென் றென்னவல் லவுணர்
சேனை யங்கடல் யாவையு மிமைப்பினிற் செறுத்தான். (ருஉ)

சுற்று கிற்புறு மவுணராஞ் சூழ்பெரும் பௌவம்
வற்று கின்றுழி வலாசுரன் றன்னொடு மகவான்
செற்ற வீரொடு சிலபக லின்றுபோர் செய்து
கொற்ற மார்குலி சத்தினு லவனுயிர் குடித்தான். (௫௩)

மன்னு தொல்புகழ் வலனுயிர் கோறலால் வலாரி
யென்ன வோர்பெயர் பெற்றனன் வாகையு மெய்திக்
கொன்னு னைப்படை முசுகுந்த வேந்தனைக் கொண்டு
பொன்ன கர்த்திருக் கோயிலிற் புரத்தரன் புகுந்தான். (௫௪)

காய்ந்த மாற்றலர் தம்வலி கடந்தெனைக் ககன
வேந்த னுக்கினை வீரமு மேதகு புகழு
மீந்தெ னக்குநற் றுணைவனு மாயினை யிதனு
லாந்த ரங்கமாஞ் சுற்றநீ யல்லையோ வென்றான். (௫௫)

என்று மன்னனை நோக்கியே முகமன்க ளியம்பிக்
குன்று போலுயர் தன்பெருங் கோயிலுட் கொடுபோய்
மன்றன் மாண்புன லாடியே மணிக்கலை புனைந்து
சென்று மாறெழுந் தேவனைப் பூசனை செய்தான். (௫௬)

எயிலை யங்கெரி யூட்டிய கண்ணுத லிமைய
மயிலு மைந்தனு மொருபுடை மகிழ்வுடன் மேவக்
கயிலை யின்கணே யமர்தலபோ லிருத்தலுங் கண்டான்
பயிலு மன்புடை மன்னவன் பரவச மானன். (௫௭)

ஆடி னன்றொழு தேத்தினு னடிகளை முடிமேற்
சூடி னனுள முருகினன் றுள்ளினன் சுருதி
பாடி னன்கரங் கொட்டினன் பகரொணு வுவகை
கூடி னன்மொழி குழறினன் பொடிப்புமெய் கொண்டான். (௫௮)

சிறந்த வெள்ளியங் கிரியின்மேற் கண்ணுதற் செல்வ
னுறைந்த விப்பெருங் கோலத்தைக் கண்டுகண் டுளத்தே
நிறைந்த மாமகிழ் வெய்தியே யிருந்தன னெடுநாண்
மறந்த னன்கொலோ பிறப்பினன் மயங்கியே யென்றான். (௫௯)

ஒவி லாமலே யொருபொருள் போற்றுவா னுன்னி
மேவு கின்றவ னவசமாய் விழிதுயின் றதுபோன்
மாவின் மாமுகம் வாங்கியு மயங்கிய மன்னன்
றேவ தேவனை நோக்கியே தொழுதிவை செப்பும். (௬௦)

வேறு.

ஏகனே போற்றி யார்க்கு மீசனே போற்றி யம்மை
பாகனே போற்றி மேலாம் பரஞ்சுட ருருவே போற்றி
மேகமார் களனே போற்றி விடைமிசை வருவாய் போற்றி
மோகமார் தக்கன் வேள்வி முடித்திடு முதல்வா போற்றி. (௬௧)

அம்புயா சனன்மா லின்னு மளப்பருந் திறத்தாய் போற்றி
நம்பனே போற்றி யெங்க ணுதனே போற்றி கோதில்
செம்பொனே மணியே போற்றி சிவபெரு மானே போற்றி
யெம்பிரான் போற்றி முக்க ணிறைவனே போற்றி போற்றி. (௬௨)

பொங்கரா வணிக ளாகப புனைதரு புனிதா போற்றி
யங்கரா கத்திற் பூதி யணிந்திடு மாதி போற்றி
வெங்கரா சலத்தின் வன்றோல் வியன்புயம் போர்த்தாய் போற்றி
சங்கரா பரமா போற்றி தாணுவே போற்றி போற்றி. (கூங)

முன்னெனும் பொருளுக் கெல்லா முன்னவா போற்றி முப்பான்
மன்னுயிரக் குயிரே போற்றி மறைகளின் முடிவே போற்றி
யென்னைமுன் வலிந்தாட் கொண்டே யிருவிலம் விடுத்தாய் போற்றி
நின்னுருக் காட்டி யென்னை நினைபயித்த நித்தா போற்றி. (கூச)

எவ்வெவர் தம்மை யேனும் யாவரே யெனினும் போற்றி
னவ்வவ ரிடமாக கொண்டே யவர்க்கரு டருவாய் போற்றி
மெய்வரு தெளிவி னுன்னை வெளிப்பட வுணர்ந்து ளோர்க்குத்
தெய்வத போக முத்தி சிறப்பொடு தருவாய் போற்றி. (கூரு)

அம்புய மலர்மே லண்ண லச்சுத னாதி வானோர்
தம்பத மெமக்கு நல்குந் தற்பரா வென்றே யாரு
நம்புறு பொருட்டால் வேத நவின்றிட வடைந்தோர்க் கெல்லா
வும்பர்தம் பதமு மீயு முலகுடை முதல்வா போற்றி. (கூசு)

உறைதரு மமரர் யாரு முழையராய்ச் சூழ நாப்பண்
மறைபயில் பெரியோ ருற்று வழிபட விருந்தாய் போற்றி
யறுவகை யைந்து மாறு மாகிய வரைப்பின் மேலா
மிறைவனே போற்றி போற்றி யென்பிழை பொறுத்தி யென்றான். (கூஎ)

இவைமுசு குந்தன் கூற வெம்பிரான் கருணை செய்தே
யவன்முகந் தன்னை நோக்கி யாழியா னளப்பில் கால
முவகையால் வழிபா டாற்றி யுமபர்கோ னிடத்தில் வைத்தான்
புவிதனிற் கொடுபோய் நம்மைப் பூசனை புரிதி யென்றான். (கூஅ)

என்றிவை முக்கண் மூர்த்தி யிந்திரன் கேளா வண்ணி
னன்றருள் புரித லோடு நனிபெரு மகிழ்ச்சி யெய்தி
யுன்றிரு வுளமீ தாயி னுய்ந்தன னடியே னென்னா
வென்றிகொண் மன்னர் மன்னன் விம்மித னாகி யுற்றான். (கூகூ)

இந்திர னமலன் பூசை யிவ்வழி முடித்த பின்னர்ச்
செந்தழ லோம்பி யேனைச் செய்கடன் புரிந்து வேறோர்
மந்திரம் புகுந்து தேனு வருகென வல்லை கூவி
வெந்திறன் மன்னற் கங்காள விருந்துசெய் வித்தா னன்றே. (எ0)

விருந்துசெய் வித்த பின்னர் விசித்திரக் கலையும் பூணுந்
தெரிந்திடு மணியு முத்துந் தெய்வதப் படையு மற்றும்
பரிந்துட னுதவி யின்னும் வேண்டுவ பகர்தி யென்னப்
புரந்தர னருள லோடும் புரவல னிதனைச் சொல்வான். (எக)

எவருந் தெரித றேற்றா திருந்திடு மிமையா முக்கட்
பாவையோர் பாகன் றன்னைப் பரிவொடு கொடுத்தி யைய
பூவுல கதனின் யான்போய்ப் பூசனை புரிதற் கென்னத்
தேவர்கண் முதல்வன் கேளா வினையன செப்ப லுற்றான். (எஉ)

உந்தியா லுலகைத் தந்த வொருதனி முதல்வன் முன்ன
மைந்தர்தா மின்மை யாலே மன்னுயிர்த் தொகுதிக் கெல்லாந்
தந்தையா யிருந்த தங்கோன் சரணமே யரண மென்னுச்
சிந்தைசெய் தூழி காலஞ் செய்தவ மியற்றி யிட்டான். (எ௩)

தவமுழந் திருந்த காலைச் சாரதப் புணரி சுற்றக்
கவுரியுந் தானு மையன் கருணையால் வந்து தோன்றப்
புவிதனை யளந்த மாயோன் பொள்ளென வெழுந்து போற்றிச்
சிவனடி வணக்கஞ் செய்து செங்கையாற் றொழுது நின்றான். (எ௪)

வேறு.

மாதொரு பாகன் மகிழ்ந்தருள் செய்து
நீதவ மாற்றி நெடும்பக னின்று
யேதிவண் வேண்டு மியம்புதி யென்னச்
சீதர னின்னன செப்புத லுற்றான். (எ௫)

'அந்தமி லாயுவு மாருயிர் காப்புஞ்
செந்திரு வோடிறை செல்வமு மீந்தாய்
மைந்த னிலாமல் வருந்தின னெந்தாய்
தந்தரு ளாய்தமி யேற்கினி யென்றான். (எ௬)

குன்றினை யாற்றிடு கோனிவை செப்ப
நன்றென வேநகை யாநவை யில்லா
வொன்றொரு செம்ம லுனக்குத வுற்று
மென்றருள் செய்தனன் யாரினு மேலோன். (எஎ)

கழையிசை போற்று கருங்கடல் வண்ணன்
முழுதுல கீன்றிடு முற்றிழை பாதந்
தொழுதில னின்று துதித்தில னன்பால்
வழிபடு நீரின் வணங்கிலன் மாதோ. (எ௮)

வேறு.

முறையி னுறறனக் கிளையவ ளென்றே
முன்னி னன்கொலோ மூலமு நடுவு
மிறுதி யுமிலாப பரமனுக் கெம்போ
லிவளு மோர்சத்தி யெனநினைந் தனனோ
பறுவி லாமலை மகளென வுளத்தே
மதித்த னன்கொலோ மாயவன் கருத்தை
யறிகி லேமுமை யம்மைபாற் சிறிது
மன்பு செய்திலன் முன்புசெய் வினையால். (எ௯)

ஆன்ற வைம்புல னொருவழிப் படுத்தி
யார்வம் வேரறுத் தையமொன் றின்றி
யூன்றி ரிந்திடி னுங்கிலை திரியா
வுண்மை யேபிடித் துலகங்கண் முழுது
மீன்ற வெம்பெரு மாட்டியை நீக்கி
யெம்பி ரானையே வழிபடு மியற்கை
மூன்று தாளுடை யொருவனுக் கல்லா
லேனை யோர்களான் முடியுமோ முடியா. (௮0)

அன்ன காலையி லெம்பெரு மாட்டி
யாழி யம்படை யண்ணலை நோக்கி
யென்னை நீயிவ ணவமதித் தனையா
லெம்பி ராற்குநீ யன்புள னன்றுன்
முன்ன நீபெறு மதலையு மையன்
முனிவ னெலலையின் முடிந்திட வென்னப்
பன்ன ருங்கொடு மொழிதனை யியம்பிப்
பராப ரன்றனை நோக்கியே பகர்வாள். (அக)

ஆன தோர்பரப் பிரமமும் யானே
யல்ல தில்லையென் றறிவிலாப் பேதை
மானு டப்பெறும் பசுக்களை யெல்லா
மருட்டி யேதிரி வஞ்சகன் முன்ன
ஞான நீரினு றறிவினு லன்றி
நணுகு றுதநீ யணுகிற் பதுவோ
வூனு லாவிய வுயிரினுக் குயிரா
மொருவ செலனுறும் வருகென வுரைத்தாள். (அஉ)

இன்ன வாறுரைத் தெமபெரு மாட்டி
யெம்பி ரான்றனைக் கொண்டுபோ மளவி
லன்ன தன்மைகண் டச்சுதக் கடவு
ளலக்க ணெய்தியே யச்சமுற் றயர்ந்து
தன்னு ளந்தடு மாறிமெய் பனிததுத
தளர்ந்து நேமியந் தண்கரைக் கணித்தாய்
மன்னு பல்பொருட் கலந்தனைக் கவிழ்த்த
வணிக னுமென வருந்தினன் மாதோ. (அங)

அம்மை தன்பொருட் டாலிடை யூறிங் •
கடைந்த தென்றுமா லகந்தனி லுன்னி
யெம்மை யாளுடை யிறையவன் றனையு
மிறைவி தன்னையு மிளங்கும ரனையு
மெய்ம்மை சேரவடி வாகவாங் கமைத்து
வேத வாகம விதிமுறை வழாமற்
பொய்ம்மை தீர்ந்திடு மின்பினுற் பூசை
புரிந்து பின்னரும் வருந்தியே நோற்முன். (அச)

வேறு.

அனைய தன்மையா லாண்டுபல் லாயிர கோடி
புனித னுகியே நோற்றன னதுகண்டு புழுங்கி
முனிவ ராயுளோ ரின்னமும் வருகிலன் முதலவ
னினிய ருந்தவஞ் செய்பவ ரில்லையா லென்றூா. (அரு)

அந்த வெல்லையிற் சத்தியுஞ் சிவமுமா யனைத்தும்
வந்தி டும்பரி சளித்தவ ரிருவரும் வரலுஞ்
சிந்தை யின்மகிழ் வெய்தியே யம்மைசே வடியின்
முந்தி யோடியே வணங்கினன் முழுதொருங் குணர்ந்தோன். (அசு)

இறைவி தாண்மலர் பணிந்தபின் னெம்பிரான் பதமு
முறையி னூற்பணிந் திருவர்தஞ் சீர்த்திகண் முழுது
மறையின் வாய்மையாற் பன்முறை யால்வழுத் துதலு
நிறையு நல்லருள் புரிந்தனன் றனக்குநே ரிலாதான். (அஎ)

மாது நீயிவற் கருள்புரி யென்னவம் மாது
சீத ரன்றனை நோக்கியே நம்பெருந் தேவ
னோதும் வாய்மையும் யான்முனிந் துரைத்திடு முரையும்
பேதி யாவினி யாவரே யன்னவை பெயர்பபார். (அஅ)

எங்க ணாயகன் விழிபொழி யங்கியா லிறந்து
தங்க மேன்மைபோய்ப் பின்முறை முன்புபோற் றோன்றி
யுங்குன் மாமக னிருக்கவென் றுரைத்தன னுமையா
ளங்க தாகவென் றருளியே மறைந்தன ளையன். (அகூ)

அம்மை தன்னுட னெம்பிரான் மறைதலு மண்ணல்
விம்மி தத்தொடு தன்பதி புகுந்துவீற் றிருப்ப
மைம்ம லிந்திடு மெய்யுடைக் காமவேள் வாரா
விம்மெ னக்கடி துதித்தன னவன்மனத் திடையே. (கூ0)

வேறு.

வந்திடுங் காமவேள் வடிவுடைக் காளையாய்க்
கந்தமார் பூங்கணை கன்னல்விற் கைகொடே
மைந்தரா னோர்களு மாதருங் காமமேற்
புந்திவைத் திடும்வகை போர்புரிந் துலவினான். (கூக)

தண்ணிழற் குடையெனச் சசிபடைத் துடையவ
னெண்ணமற் றொருபகல் யார்க்குமே லாகிய
கண்ணுதற் பகவன்மேற் கணைமலர் சிந்தியே
துண்ணெனத் துகளதாய்த தொலைதலுற் றனரோ. (கூஉ)

பூழியாய் மாணுளான் பொருவிலா நல்லரு
ளாழியா னணையா லருவொடே யுருவமாய்
வாழிசேர் தொல்லைநாள் வளனொடு மன்னினான்
சூழிமால் கிரிதருந் தோகைசொற் றவறுமோ. (கூங)

கிற்பமற் றித்திற நேமியான் முன்னைநா
ளற்புடன் வழிபடு மமலையைக் குமரனைத்
தற்பரக் கடவுளைத் தனதுமார் பிற்கொடே
பற்பகற் பணியின்மேற் பாற்கடற் றுஞ்சினான். (கூச)

நீடவே துயிலுமா னெட்டுயிர்ப் பசைவினாற்
பீடுசேர் நாகணைப் பேருயிர்ப பசைவினாற்
பாடுசூழ் தெண்டிரைப பாற்கட லசைவினா
லாடியே வைகினா ரலகிலா வாடலார். (கூரு)

அன்னதோ ரமைதியி லசுரசே னைக்கெலா
மன்னனா யுற்றுளான் வாமகவி யென்பவ
னென்னைவா னவரொடு மீடழித் தமர்தனின்
முன்னைநாள் வென்றனன் முடிவிலா மொய்ம்பினால். (கூசு)

அத்திறங் கண்டுகோ னமரரோ டேகியே
பத்துநூற் றுத்தலைப் பாந்தண்மேற் றுயில்கொளுஞ்
சுத்தனைப் போற்றியே தொழுதுவாற் கலியினு
லெய்த்தனங் காத்தியா லெம்மைநீ யென்றனன். (கூஎ)

நஞ்சுமிழ் கெயிறுடை நாகமாம் பள்ளிமேற்
றுஞ்சும்வா லறிவினன் றுயிலைவிட் டேயெழீஇ
யஞ்சலீ ருங்களுக் கல்லலே யாற்றிய
வஞ்சனு ருயிர்தனை வல்லையுண் டிடுதுமால். (கூஅ)

என்றுதன் கையமைத் தேமொடே மூலகமுண்
டன்றொரா லிலையின்மே லறிதுயின் மேவிய
மன்றலந் தண்டுழாய் மாலைசூழ் மௌலியா
னென்றுபே ரன்பினு லொன்றெனக் குரைசெய்தான் (கூகூ)

பார்த்தியா லெனதெனும் பைம்பொன்மார் பத்திடை
மூர்த்தியாய் வைகிய முதலவியைக் குமரனைத்
தீர்த்தனைப் பூசனை செய்துநின் றீவினை
யார்த்திநீங் குதியெனு வாதரத் தருளினுன். (க00)

அன்னவா றருள்செய்தே யனையர்மூ வோரையும்
பொன்னுலா மார்பினும் பொள்ளென வாங்கியே
யென்னதா கியகரத் தீந்தன னீதலுஞ்
சென்னிமேற் றுங்கினேன் மாதவத் திண்மையால். (க0க)

வேறு.

அங்கதற்பின் முறையாக வச்சுதன்பாற் கடலகன்று
நங்குழுவொ லாஞ்சூழ நாவலந்தீ வகத்தணுகி
யெங்கள்பிரா னருணடஞ்செய் யெல்லையிலாத் தில்லைதனிற்
றுங்கமணி மன்றுதனைத் தொழுதுபர வசமானுன். (க0உ)

செல்லரிய பரவசமாய்த் திருமுன்னே வீழ்ந்திறைஞ்சித்
தொல்லைதனி லறிவிழந்து துணைவிழிகள் புனல்பெருகப்
பல்லுயிர்க்கு முயிராகும் பரமசிவ பூரணத்தி
னெல்லைதனிற் புக்கழுந்தி யெழுந்திலனீ ரிருதிங்கள். (க0ங)

இத்திறத்தா லவசமதா யீறுமுத னடுவுமிலா
வத்தனது திருவடிக்கீ ழடங்கியே யரணையினுன்
மெய்த்துரியங் கடந்தவுயிர் மீண்டுசாக் கிரத்தடையத்
தத்துவமெய் யுணர்ச்சியெலாந் தலைத்தலைவந் தீண்டினவால். (க0ச)

கண்டுயில்வா னெழுந்ததெனக் கதுமெனமா யோனெழுந்து
புண்டரிகப் பதந்தொழுது போற்றிசெய்து புறத்தேகித்
தெண்டிரைசூழ் புவிக்கரசு செலுத்தியவாற் கலியுடனே
மண்டுபெருஞ் சமர்செய்து வல்லைதனி லுயிருண்டான். (க0டு)

வாற்கலிதன் னுயிருண்டு வாகைபுனைந் தேதிருமால்
சீர்க்கருணை நெறியதனுற் றேவருக்கு மென்றனக்கு
மேற்கும்வகை விடையுதவி யிம்மெனவே மறைந்தேகிப்
பாற்கடலிற் பணியணைமேற் பண்டுபோற் கண்வளர்ந்தான். (க0சு)

தேவர்குழாத் தொடுமீண்டு சிறந்திடுமித் துறக்கத்தி
லாவலுடன் வந்தேயா னன்றுமுத லின்றளவும்
பூவைநிறங் கொண்டபுத்தேள் பொன்மார்பில் வீற்றிருந்த
மூவரையு மருச்சித்தேன் முதுமறைநூல் விதிமுறையால். (கoஎ)

மன்னர்க்கு மன்னவநீ வழிபடுதல் காரணமாத்
தன்னொப்பி லாதாரைத் தருகென்றாய் தந்திடுவ
தென்னிச்சை யன்றேமா லிசைவுனக்குண் டாமாகிற்
பின்னைத்தந் திடுவனெனப் பெருந்தகையோன் பேசினனால். (கoஅ)

பேசுதலு முசுகுந்தன் பெயர்ந்துபாற் கடலிடைபோய்க்
கேசவனை யடிவணங்கிக் கிட்டிநின்று வேண்டுதலும்
வாசவன்ற னிடந்தன்னில் வைத்திநம் முயிர்க்குயிரைப்
பூசனைசெய் கொடுபோந்து பூதலத்தி னிடையென்றான். (கoகூ)

நன்றெனவே யிசைவுகொண்டு நாரணனை விடைகொண்டு
சென்றபுரந் தரற்குரைப்பச் சிந்தைதளர்ந் தேயிரங்கி
யன்றுதனை யீன்றதனிப புனிற்றாவை யகலுவதோர்
கன்றெனவே தனிபுலம்பி யொருசூழ்ச்சி கருதினனால். (ககo)

தேவர்பிரா னவ்வளவிற் றெய்வதச்சம் மியன்செயலான்
மூவடிவு மூவிரண்டு முறைவேறு வேறாக
வேவர்களும் வியப்பெய்த விமைப்பின்முன மமைப்பித்துக்
காவலன்கை தனிற்கொடுப்பக் கைதவமென் றறிந்தனனே. (ககக)

ஆதியில்விண் ணவர்தச்ச னமைத்திடுமூ விருவடிவும்
பூதலமன் னவன்வாங்கிப் புதலவனொடங் கவுரியொடும்
வீதிவிடங் கபெருமான் மேவியதா மெனவிருந்து
மேதுமுரை யாநெறியா லிவரவரன் றெனமொழிந்தான். (ககஉ)

துங்கமுறு முசுகுந்தன் சொல்வினவிச சுடராழிப்
புங்கவன்றன் மார்பமெனும் பொனனூச லாடுகந்து
மங்கையொடுங் குமரனொடு மகிழ்ச்சியொடும் வீற்றிருந்த
வெங்கள்பிரான் றனைக்கொடுவந் திவராமோ வென்றனனே. (ககங)

இந்திரனிவ் வாறுரைப்ப விமையாமுக் கட்பகவன்
முந்துதிறன் முசுகுந்தன் முகநோக்கி நின்பாலில்
வந்தனமா லெம்மையினி மாநிலத்திற் கொடுபோந்து
புந்திமகிழ் வாறபூசை புரிவாயென் றருளசெய்தான். (ககச)

ஊழிநா யகன்மகவா னுணராமே யிஃதுரைபபக்
கேழிலாப் பேருவகை கிடைத்தினிது பணிந்தேத்தி
யாழியான் பூசனைகொண் டமர்ந்தவரா மாமிவரை
வாழியாய் தருகவென வாங்கினன்மன் னவர்மன்னன். (ககரு)

வாங்கியபின் னிமையவர்கோன் மன்னவனை முகநோக்கி
யீங்கிவரை யறுவரொடு மிருநிலத்தி னிடைகொடுபோய்ப்
பூங்கமலா லயமுதலாப் புகல்கின்ற தலந்தன்னிற்
றீங்கறவே வழிபாடு செய்தியென விடைகொடுத்தான். (கககூ)

நன்றெனவே விடைகொண்டு நானிலத்தி னிடையிழிந்து
தென்றிசையா ரூர்தன்னிற் சிவனுறைபூங் கோயில்புக்கு
மன்றல்கமழ் தண்டுளவோன் வழிபடவீற் றிருந்தோரை
வென்றியரி யணைமீதில் விதிமுறையாற் றாபித்தான். (ககஎ)

கடனாகை நள்ளாறு காறாயல் கோளரியூர்
மடனாக முத்தீனும் வாய்மியூர் மறைக்காள
முடனாகுந் தலமாறி லோராறு வடிவுகொண்ட
படநாக மதிவேணிப் பரஞ்சுடரை யமாவித்தான். (ககஅ)

இப்படியே யொருபகலி லெழுவரையுந் தாபித்து
மெய்ப்பரிவில் வழிபாடு விதிமுறையாற் புரிவித்துச்
செப்பரிய புகழாரூர் தேவனுக்கு விழாசெய்வான
முப்புவனங் களுமபோற்று முசுகுந்தன முன்னினனால. (ககக)

அந்நாளி லிமையவர்கோ னருச்சனைசெய் பரம்பொருளைக்
கொன்னார்வேன் மன்னவன்கைக் கொடுத்ததொரு கொடும்பவத்தாற்
பொன்னாட்டிற் றிருவிழந்து புலையுருவந் தனைத்தாங்கிக்
கைந்நாக மிசையூர்ந்து கமலையெனும் பதியடைந்தான. (கஉ0)

ஆரூரின் மேவியபின் னமலன்விழாப் போற்றுதற்குப்
பாரூருந் திரையூரும பலவூரும வருகவென்றே
வாரூரு முரசெறிந்து மதக்களிற்றின் மிசையேறித்
தேரூருஞ் செம்பொன்மணித் திருவீதிப புடைசூழ்ந்தான். (கஉக)

பூங்கமலா புரிவாழும் புங்கவனுக் கன்னதற்பி
னோங்குதிரு விழாநடத்தி யொழிந்தபதிப பணைவர்கரு
மாங்கதுபோ னிகழ்வித்தே யந்தமீல்சீர் முசுகுந்தன்
பாங்கில்வரும் வீரருடன் பாருலகம புரந்திருந்தான. (கஉஉ)

ஆண்டுபல வப்பதியி லமலன்விழாச் சேவித்துக்
காண்டகைய தவமபுரிந்து கடைநாவடி வினைநீங்கித்
தூண்டகைய தோண்மகவான் றொலவுருவந் தனைப்பெற்று
மீண்டுசுரர் பதிபுகுந்து விபவமுடன் வீற்றிருந்தான. (கஉங)

விண்ணவர்கோ னேகியபின் விரவுபுகழ்க் கருவூரி
லெண்ணரிய பலகால மிறையரசு செலுத்தியபின
மண்ணுலகம் புரக்கவங்கி வன்மனுக்கு முடிசூட்டித்
துண்ணெனவே நோற்றிருந்து தொலகயிலை தனையடைந்தான். (கஉச)

துங்கமிகு முசுகுந்தன் றொல்கயிலை யடைந்தபின்ன
ரெங்கள்விறன் மொய்ம்பினனு மிலக்கருட னணையர்களுந்
தங்கள்சிறூர் தமைவிளித்துத் தத்தமது சிறப்பு நலகி
யங்கிவன்மன் பாலிருத்தி யரியதவ மாற்றினரே. (கஉரு)

மாதவமெண் ணிலவியற்றி மானுடத்தன் மையைநீங்கி
யாதிதனி லடலெய்தி யருண்முறையா லனைவர்களு
மேதகுசீர்க் கந்தகிரி விரைந்தேகி வேற்கடவுள்
பாதமலர் பணிந்தேத்திப் பத்திமைசெய் திற்றனரால். (கஉசு)

ஆகையா லயனறியா வருமறைமூ லந்தெரிந்த
வேகநா யகன்விரத மெவரேனும் போற்றியிடி
னேகையா னினைந்தவெலா மொல்லைதனிற் பெற்றிவர்
மாகமே லிமையவரும் வந்தவரை வணங்குவரே. (கஉள)

ஆ. திருவிருத்தம் க,அ00.

---

வசனம்.

சயந்தன் இவ்வாறு சுவர்க்கத்தில் அரசுபுரிந்துவருங்காலத்தில், இவ்வுலகத்தில் முசுகுந்தனென்னுமரசன் கந்தவிரதத்தை அனுஷ்டித்து அரசுபுரிந்த செயலை யுரைக்கின்றாம். முன்னொருகாலத்தில் முசுகுந்த சக்கிரவர்த்தி வசிட்டமுனிவரது ஆச்சிரமத்தையடைந்து, அவரது அடிவணங்கித் துதித்து, முனிசிரேஷ்டரே! அடியேனுக்குக் கந்தவேள் விரதமெல்லாம் கூறியருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அம்முனிவர்: வெள்ளிக்கிழமையில் குமரவேள்விரதத்தை யனுட்டித்தல்வேண்டும். அந்நாளில் அவ்விரதத்தை யனுட்டிப்பவர் நினைத்தவெல்லாம்பெறுவர். கோரனென்னு மசுரனால், அபகரிக்கப்பட்ட தனதரசைப் பகீரதனென்னு மரசன் தனது மனைவியோடு காட்டிற்கு விரைந்துசென்று, சுக்கிராசாரியரை வணங்கிநின்று, தனது குறையைக்கூற, அவர் முருகவேள் மகிழும்வண்ணம் சுக்கிரவாரவிரதம் மூன்றுவருடம் நோற்பாயாயின், உன்பகைவன் மடிய, நீ உலகமுற்றும் ஆள்வாயென்று கூறினர். அவர் கூறியவாறே பகீரதன் வெள்ளிக்கிழமைமுற்றும் உணவின்றியிருந்து, வியாழமும், சனியுமான இரண்டுதினங்களிலும் பகலில்மாத்திரம் உணவுண்டு, துயிலைவிடுத்து மூன்றுவருடமளவும் கந்தவேள் விரதத்தை யன்போடு அனுட்டித்துவந்தான். அவ்வாறு நோற்குங்காலத்தில், முருகக்கடவுள் வேற்படை கோரனென்னுமசுரனை அழித்தது, பிறகு பகீரதன் உலகமுற்றும் சந்தோஷத்துடன் ஆண்டுவந்தான். இன்னுமொருவிரதஞ் சொல்வாம். பிரமபுத்திரரான நாரதர் இவ்விரதத்தை யனுஷ்டித்து, சப்தமுனிவருள் உயர்ந்தபதமும், சீரும், சிறப்பும் அடையச் சிந்தனைசெய்து, விநாயகப்பெருமானை வணங்கிச் சப்தமுனிவர்களுள் யானே உயர்ந்தோனாகுமாறு ஒருவிரதத்தை யடியேனுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, விநாயகர் முருகக்கடவுளது கார்த்திகைவிரதத்தை யன்போடு பன்னிரண்டுவருடமளவும் அனுஷ்டிப்பாயின் நீ விரும்பியவாறு அடைவாயென்ன, நாரதர் அவ்வாறே செய்வேனென்று பூலோகத்தை யடைந்து, பரணிநாள் பின்னேரத்தில் ஒருபொழுதுண்டு, கார்த்திகைதினத்தில் கந்தவேள் விரதத்தைப் பன்னிரண்டுவருடம் அனுஷ்டித்துச் சப்தரிஷிகளுள் மேலானபதத்தை யடைந்தார். ஒரு பிராமணன் கார்த்திகைவிரதத்தை அனுட்டித்து, முதல் மனுவாகி, உலகமுற்றும் ஆண்டான். மற்றோரந்தணன் இதனை நோற்று விரும்பியவற்றையடைந்து திரிசங்கு என்னும் அரசனானன். ஒரு அரசனும், வேடனும் இவ்விரதத்தினை நோற்று, அந்திமான், சந்திமான் என்னும் பெயருடையவர்களாய் உலகமுற்றும் ஆண்டார்கள். இக்கார்த்திகை விரதத்தினை யனுட்டிப்பவர் மோட்சமடைவது நிச்சயம்.

இக்கார்த்திகை விரதத்தை யனுட்டித்தாரது தொகையை அளவிட்டுரைத்தல் முடியாது. இதுவன்றி மற்றொருவிரதமிருக்கிறது; அதனையுங்கூறுகின்றோம்: முருகக்கடவுளைத்துதித்துத் தேவர் முனிவோர் யாவரும் ஐப்பசிமாதத்தில் சுக்கிலபட்சம பிரதமைமுதலாகச் சஷ்டிவரைக்கும் விரதம்புரிந்து, அதனால் தமது நிலையை

படைத்தனர் என்று கூறியருளினர். இவற்றைக்கேட்ட முசுகுந்தன் அன்போடு அளவற்றகாலம் கந்தவேள் விரதத்தை யனுட்டித்துவந்தான். முருகக்கடவுள் அவனுக்கு அருள்செய்தற்பொருட்டு வீரவாகுமுதலியோர்சூழ, மயூராரூடராய்ப்பிரத்தியட்சமாக, முசுகுந்தன் மிகவுந் துதித்து, எந்தையே! உலகமுற்றும் எனது செங்கோலின்வழி நடத்தற்பொருட்டு, வீரவாகுமுதலியவர்களைப் படைத்துணைவராகத் தரவேண்டுமென்று பிரார்த்தித்தான். அவ்வாறே தந்தோமென் றருள்செய்து, வீரவாகுமுதலியோரைப்பார்த்து, நீங்கள் முசுகுந்தனிடஞ்சென்று படைத்துணைவராய் இருப்பீராகவென்று கூற, அதற்கவர்கள் சூரபத்மன் குலத்தை நாசமாக்கிய நாங்கள் இவ்வற்பமனிதனுக்கு அடங்கியிரோமென்று மறுத்தனர்.

எம்பெருமான் நீங்கள் மனிதராய்ப்பிறந்து இவ்வரசனது சேனைத்தலைவராகிப், பிறகு நம்மிடத்திற்கு வருவீராகவென்று சபிக்க, வீரவாகுமுதலியோர் மனிதராகப்பிறந்து முசுகுந்தனுக்கு நண்பராய் அவனது சேனைத்தலைவரானார்கள். அப்படி ஆனகாலத்து முசுகுந்தமன்னன் அரசரிடம்பிறந்துவளர்ந்த அரம்பாஸ்திரீகளை வீரவாகுமுதலியோர்க்கு மணம்புரிவித்தான். வீரவாகுதேவர் புட்பகந்தியென்னும் தனது மனைவியோடு கூடிச் சித்திரவல்லியென்னும் மகளையும், அனகன், ஜனகனென்னும் புத்திரர்களையும் பெற்றான். அப்பெண் முசுகுந்தனுக்கு மனைவியாகி வாழுங்காலத்தில், அவள் வளர்த்த கிளியை எமனது மனைவியிடத்து எமதூதர்கள் அபகரித்துக்கொடுத்தார்கள். அக்கிளியைக் காணாது சித்திரவல்லி வருந்தி, தனது கணவனிடத்துச்சொல்ல, அவன் எமனது மனைவிகையிலிருப்பதாகவறிந்து, வீரவாகுமுதலியோரை எமபுரத்திற்குப் போர்க்கனுப்ப, அவர்கள் எமனோடு போர்செய்து வெற்றிபெற்றுக கிளியைவாங்கிச் சித்திரவல்லியினிடங் கொடுத்தார்கள்.

அவர்கள் இன்னும் பலவகையாக அவனுக்கு வெற்றியுண்டாக்கிவருங்காலத்தில், வலாசுரனென்னுமரசன் சுவர்க்கநாட்டைச்சேர்ந்து போர்புரிந்தான், அவனோடு போர்புரியச் சக்தியற்ற இந்திரன் முசுகுந்தனிடத்தில் ஒரு தூதனையனுப்பி, தனது குறைகளைத் தெரிவித்தான். உடனே அவன் வீரவாகு முதலியோரோடு சுவர்க்கத்திற்குச்சென்று, வலாசுரனது சேனையை அழிக்கும்போது, இந்திரன் அவனை வச்சிராயுதத்தாற்கொன்று, வலாரியென்னும் பெயரைப்பெற்று, முசுகுந்தனோடு தனதுநகரத்திற் பிரவேசித்து, அவனைப் பலவாறாகப்புகழ்ந்து, தனது பெரிய கோயிலிற்சென்று, சிவபெருமானைப் பூசித்தான். அப்போது முசுகுந்தன்: சிவபெருமான் பார்வதிதேவியும், குமாரக்கடவுளும், ஒருபுறத்திலிருக்கக் கைலாயத்திருப்பதுபோலக்கண்டு, தரிசித்துத் தன்னைமறந்து பலவாறு ஆடிப் பாடித் துதித்து, மனிதப்பிறப்பினால் தேவரீரை மறந்திருந்தேனென்றுகூறி, என் பிழையைப் பொறுக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். சிவபெருமான் முசுகுந்தனைநோக்கி, இந்திரன் கேளாதபடி விஷ்ணு பூசித்து இந்திரனிடத்துக்கொடுத்த எம்மை பூமியிற் கொண்டுபோய்ப் பூசைபுரிவாய் என்றுகூற, அரசன் ஆச்சரியமுடையவனானான். சிவபூசைமுடித்த இந்திரன் ஏனைய கடன்களையும்முடித்து, முசுகுந்தனுக்குவிருந்து செய்வித்து, ஆடையாபரணமுதலியவற்றையுந்தந்து, இன்னும் வேண்டுவனவற்றைக் கூறக்கடவாய் என்றான். அதற்கு அரசன் சிவபெருமானைப் பூலோகத்திற் பூசிக்கத்தருவாயென்றுகேட்க, இந்திரன்: மாயோன், மைந்தனில்லாமையால், சிவபெருமானைநோக்கித் தவஞ்செய்தான். அத்தவத்திற்குவந்து சிவபெருமான் உமாதேவியோடு பூதங்கள்சூழ, எழுந்தருள, அச்சுதன் உமாதேவியைநீக்கிச் சிவனைவணங்கி எனக்குப் பிள்ளைவரந்தந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, சிவபெருமான்

நகைத்து உனக்கு ஒரு ஆண்மகனைத் தந்தோமென் றருளிச்செய்தார். அப்போது உமாதேவி மாயோனைப்பார்த்து, என்னை அவமதித்த நீ எம்பெருமானையும் அவமதித்தவனாய்; நீபெறும் பிள்ளையும் இறைவன் கோபத்தால் விரைவில் அழிகவென்று சாபமிட்டு, பரமசிவனைநோக்கி இவ்வஞ்சகன்முன்னர் நிற்பதுதகாது, என்றுகூறி, எமபெருமானையழைத்துக்கொண்டுபோம்போது, மாயன் மிகவும்வருந்தி உமாதேவியை வணங்காமையால், இத்தீங்கு நேரிட்டதென்றுசிந்தித்து, உமாதேவியையும், பரமசிவனையும், கந்தவேளையும் உருவமாகப் பிரதிட்டைசெய்து, வேதாகம விதிதவறாது, உண்மையான அன்புடன் பல்லாயிரங்கோடிவருஷம் பூசைபுரிந்துவந்தான். அப்போது சிவபெருமானும், உமாதேவியும் எழுந்தருள, மாயோன்முன்னர் அம்மையைவணங்கிப் பின்னர் ஐயனைவணங்கிப் பலவாறாகத் துதிசெய்துநிற்க, பரமேசுவரன் பார்வதியைநோக்கி இவனுக்கருள்செய்யென்று புகல, அவ்வம்மை விஷ்ணுவைநோக்கி உன்மகன் முன்னர் எனது நாயகனது நெற்றிவிழிப் பொறியால வெந்தொழிந்து, பின்பு முன்புபோல மகனாயிருப்பானென்றருள்செய்ய, சிவபெருமானும் அவ்வாறாகவென்றுகூறி உமாதேவியோடு மறைந்தருளினார். பிறகு மன்மதன் திருமாலதுஉள்ளத்தினின்றுந்தோன்றி, மலர்க்கணைகளையும், கருப்புவிலலுங்கொண்டு, மைந்தரும் மடவாரும் காமத்திற்கருத்துவைக்கும்படி போர்புரிந்துலாவி, ஒருநாள் சிவபெருமான்மேல் மலரம்புவிட்டு மாண்டொழிந்து, சிவனதருளால், அருவமும், உருவமும், உடையோனாயிருந்தான். இதுநிற்க; மாயவன் முன்னாளிற்பூசித்த உமாதேவியையும், சிவபெருமானையும், சுப்பிரமணியக்கடவுளையும், மாபிறகொணடு பலநாள் பாற்கடலில் ஆதிசேடன்மீது நித்திரைசெய்தான். அவனது பெருமூச்சினசைவினாலும், ஆதிசேடன் பெருமூச்சினசைவினாலும், பாற்கடலலையின் அசைவினாலும் சிவபெருமான் ஆடிக்கொண்டிருந்தனர். அவ்வாறு சோமாஸ்கந்தமூர்த்தி அசைந்தாடுங்காலத்தில், வாற்கலியென்னுமசுரன் தேவர்களைவருத்த அதைககண்டு, நான் தேவர்களோடு பாற்கடலிற்சென்று, விஷ்ணுவைத் துதித்து, எங்களைக் காக்கவேணடுமென்று கூறினேன், விஷ்ணு உடனே துயிலைவிட்டெழுந்து, அஞ்சாதேயென்றுகூறி, தன்மார்பிலிருந்த அம்மூவர்களையும் என்னிடததளித்து, சிதம்பரஞ்சென்று சபாபதியை வணங்கி, அவரருள்பெற்று, அவ்வசுரனை வென்று, எங்களுக்கு விடையளித்து, முன்போல் துயில்வானாயினான். அதுமுதல் இதுவரைக்கும் அம்மூவரையும் பூசித்துவருகிறேன்; ஆதலால் அம்மூவர்களையும் தருவது எனதிச்சையன்று. திருமாலின் விருப்பம உனக்குண்டாயிருக்குமாயின், கொடுக்கிறேனென்று கூறினான். உடனே முசுகுந்தன் கேசவனையடுத்துவணங்கித் தனது விருப்பத்தைக்கூற, கேசவன் இந்திரனிடத்துவைத்துள்ளஎமதுயிர்க்குயிரைப் பூமியிற்கொண்டுபோய்ப்பூசிக்கக்கடவாயென்றான். அதனை முசுகுந்தன் இந்திரனுக்குரைக்க, இந்திரன் மிகவும் வருந்தி ஆலோசித்துத் தெய்வதச்சனால்மூன்றுருவங்களையும் ஆறுமுறை வேறுவேறாகச்செய்வித்து, முசுகுந்தனிடத்திறகொடுக்க, அவன் இவரல்ல, இவரல்லவென்று கூறிய பிறகு இந்திரன் தான் பூசித்த சோமாஸ்கந்தரரைக் கொடுத்தான். அதை முசுகுந்தன்பெற்றுச் சந்தோஷத்தோடு பூவுலகத்துக்குவந்து, திருவாரூரில், கமலாலயத்தையடைந்து, அதில் எழுந்தருளச்செய்து விதிப்படி ஸ்தாபித்தான்

தேவதச்சன் படைத்த ஆறு சோமாஸ்கந்தரையும் திருநாகை, திருநள்ளாறு, திருக்காறாயல், திருக்கோளரியூர், திருவாய்மியூர, திருமறைக்காடு என்னும் ஆறு தலங்களிலும் ஒருதினத்திலே ஸ்தாபித்துப் பூசைசெய்வித்தான். இந்திரன் தான் அருச்சித்த பரம்பொருளை முசுகுந்தன்கையிற்கொடுத்த பாவத்தால், பூனையுருவந்

தாங்கி, ஐராவதத்தேறி, திருவாரூரையடைந்து, சிவபெருமான் திருவிழாவைக் கண்டு, யாவருந் துதித்தற்பொருட்டு, முரசறைந்து சுற்றிவந்தான். அத்திருவிழா நடந்தபிறகு முசுகுந்தன் வளைய திருநாகைமுதலிய ஸ்தலங்களில திருவிழாநடத்தி, வீரவாகு முதலியவரோடு அரசாட்சிசெலுத்திவந்தான். இந்திரன் திருவாரூரிற் றவஞ்செய்து புலையுருநீங்கிச், சுவர்க்கமடைந்தான். முசுகுந்தன் அனேககாலம் அரசு புரிந்து, அக்கினிவன்மனென்னும் தனது மகனுக்கு முடிசூட்டித தவஞ்செய்து, கைலாயமடைந்தான். வீரவாகுமுதலியோருந்தவம்புரிந்து மானுடத்தன்மைநீங்கிக் கந்தகிரியடைந்து, குகப்பெருமானைத் துதிசெய்திருந்தனர். ஆகையால், கந்தவேளது விரதத்தை எவரேனும் அனுட்டிப்பாராயின, அவர் எண்ணியவெல்லாம் விரைவிலடையப்பெற்றுத், தேவர்கள் வணங்கும் சிறப்பினையடைவார்கள்.

கந்தவிரதப்படலம் முற்றிற்று.

---

# வள்ளியம்மை திருமணப்படலம்.

வெள்ளியங் கிரியி னோர்சார் விளங்கிய கந்த வெற்பி
னள்ளூறு நகரீந் தனனி னங்கையோ டினிது மேவு
மள்ளிலை வேற்கை நமபி யம்புவி யெயினர் போற்றும்
வள்ளியை வதுவை செய்த மரபினை வழாது சொல்வாம். (க)

வேறு.

அயன்ப டைத்திடு மண்டத்துக் காவியாய்ப்
பயன்ப டைதத பழம்பதி யென்பரா
னயன்ப டைததிடு நறறொண்டை நாட்டினுள்
வியன்ப டைத்து விளங்குமேற் பாடியே. (உ)

ஆய தொல்லை யணிநகர் ஞாங்கரின்
மீயு யர்ந்ததொர் வெற்புநிற் கின்றதாற்
பாய தெண்கடற் பாரள விட்டிடு
மாய வன்றன் வடிவென நீண்டதே. (ங)

அரவுந் திங்களு மாறுமெல் லாரமுங்
குரவுங் கொன்றையுங் கூவிள முமமிசை
விரவுந் தன்மையின் வெற்புவிண் ணோரெலாம்
பரவுங் கண்ணுதற பண்ணவன் போன்றதால். (ச)

வாசி தாகிய வானரு வித்திர
ணீல மேக நிரையொடு தாழ்தலிற
றோலு நூலுந் துயலவரு மாபுடை
நாலு மாமுகன் போலுமந் நாகமே. (ரு)

குமர வேள்குற மங்கையொ டிவவிடை
யமரு மாலது காண்பனென றாசையாற
றமர வானதி தானணு குற்றிட
நிமிரு கின்றது நீள்கிரி யனனதே. (சு)

வேறு.

கள்ளிறைத் திடிபூந் தண்டார்க் கடம்பணி காளை பன்றூட்
பிள்ளைமைத் தொழின்மேற் கொண்டு பெட்புட னெழுகும் வண்ணம்
வள்ளியைத் தன்பால் வைத்து வள்ளிவெற் பென்று நாம
முள்ளவக் கிரியின் மேன்மை யுரைத்திடு மளவிற் றாமோ. (எ)

செய்யவெண் குன்றி வித்துஞ் சீர்திகழ் கழைவீழ் முத்தும்
பையரா வினங்க ளீன்ற பருமணித் தொகையு மீண்டிச்
சையம தெங்குஞ் சேர்த ராகா கணங்களெல்லாம்
வெய்யவ னழற்காற் றூது வீழ்ந்தென விளங்குகின்ற. (அ)

கானுறு தளவம் பூத்த காட்சியாற் கழைக ளெல்லாந்
தூநகை முத்த மீன்ற தோற்றத்தாற் பொதும்பர் தன்னிற்
றேனமர் தொடைய றாங்குஞ் செய்கையாற் சிலம்பின் சாரன்
மீன்மு மதியும் பூத்த விண்ணென விளங்கிற் றம்மா. (கூ)

கூட்டளி முரலு நீலக் குண்டுநீர்ச் சுனைகள் யாண்டுங்
காட்டிய பிறங்கல் யாருங் காணுறு வள்ள வீண்டே
வேட்டுவர் சிறுமிக் காக மேவுதல் காண்ப னென்று
நாட்டமெய்ம் முழுதும் பெற்று நண்ணிய தன்மை போலாம். (க0)

விண்ணுயர் பிறங்கன் மீது விரிகின்ற சுனைகண் மிக்குத்
துண்ணென விளங்கும் பெற்றி சூரியன் முதலோர் காண
மண்ணெனு மடந்தை யாங்கோர் மதலையில் வரம்பி லாத
கண்ணடி நிரைத்து வைத்த காட்சிபோன் றிருந்த மாதோ. (கக)

ஒள்ளிணர்க் கணியின் கொம்ப ருலவியே யசோகில் வாவி
வெள்ளிலிற் பாய்ந்து மந்தி வியன்கடு வுறைப்ப மீள்வ
வள்ளிய ரிடத்துச் சென்றோர் மானவப் பண்பி லோர்பாற்
பொள்ளென விரப்பான் புக்குப் புலம்பொடு மீண்ட வாபோல். (கஉ)

தொகையுறு குலைச்செங் காந்த டுடுப்பெடுத் தமருஞ் சூழ்விற்
சிகையுறு தோகை மஞ்ஞை செறிந்துலா வுற்ற தன்மை
யகையுறு கழைகொன் றுண்ட வாரழல் சிதற வாங்கே
புகையுறு கின்ற தன்மை போலவே பொலிந்த தம்மா. (கங)

கண்டுதங் கேளிர் தம்மைக் கைகொடு புல்லி யில்லங்
கொண்டுசெல் பான்மை யுன்னி விலக்குறு கொள்கைத் தென்ன
விண்டொடர் செலவிற் றாகும் வெஞ்சுடர்க் கதிரை வெற்பிற்
றண்டலை கணியின் கொம்பாற் றழீஇக்கொடு தடுக்க லுற்ற. (கச)

சிறைபழி கடமால் யானை நெடுவரைச் சிகரம் பாய்ந்து
சிறவொடு முழங்க வாங்கோர் விடரளை மடங்கல் கேளாக்
கறுவுகொள் சினத்தி னார்க்குங் கம்பலை கனக னெற்றுந்
தறியிடை யிருந்த சீயந் தழங்குர லென்ன லாமால். (கரு)

பறையடிப் பதனுற் சேணிற் பயன்விரிப் பார்போன் மாறூ
யறையடிப் பாந்த ளார்ப்ப வகலிரு விசும்பே றாப்பக்
கறையடித் தொகுதி யார்ப்பக் கடுந்திற லரிமா னார்ப்பச்
சிறையடிக் கொண்டு சிம்பு ளார்த்திடத் திங்கள் செல்லும். (கசு)

இன்னபல் வளமை சான்ற கிரிதனி லெயினை ரீண்டி
மன்னிய தாங்கோர் சீறூர் வதனமா றுடைய வள்ளல்
பின்னரே தன்பான் மேவப் பெருந்தவந் தன்னை யாற்றிப்
பொன்னக ரிருந்த வரபோற் புன்மையற் றிருந்த தம்மா. (கஎ)

ஆயதோர் குறிச்சி தன்னி லமர்தருங் கிராதர்க் கெல்லாம்
நாயக னுகம்பூண் டுள்ளோ னுமவே னம்பி யென்போன்
மாயிருந் தவமுன் செய்தோன் மைந்தர்கள் சிலரைத் தந்து
சேயிழை மகட்பே றுன்னித் தெய்வதம் பராவி யுற்றான்.(கஅ)

அவ்வரை மருங்கு தன்னி லைம்புல னொருங்கு செல்லச்
செவ்விதி னடாததுந் தொன்மைச் சிவமுனி யென்னு மேலோ
னெவ்வெவர் தமக்கு மெய்தா வீசனை யுளத்துட் கொண்டு
சைவநல் விரதம் பூண்டு தவம்புரிந் திருந்த னுற்றான். (கசு)

சிறப்புறு பெரிய பைங்கட் சிறுதலைச் சிலைக்கும் புல்வாய்
நெறிபபொடு நிமிர்வுற் றூன்ற நெடுஞ்செவிக் குறிய தோகைப்
பொறிபபடு புனித யாக்கைப புன்மயிர்க் குளபபு மென்கான்
மறிபபிணை யொன்று கண்டோர் மருங்கவண் துலாவிற் றங்கண். (உ0)

போர்த்தொழில் கடந்த வைவேற் புங்கவ னருளால் வந்த
சீர்த்திடு நவ்வி தன்னைச் சிவமுனி யென்னுந் தூயோன்
பார்த்தலு மிளமைச் செவ்வி படைத்திடும் பிறனிற் கண்ட
தூர்த்தனின் மைய லெய்திக் காமத்தாற் சுழல லுற்றான். (உக)

ஏமத்தின் வடிவஞ் சான்ற விலங்கெழிற் பிணையின் மாட்டே
காமத்தின் வேட்கை வைத்துக் கவலையா யவல மெய்தி
மாமத்த மனைபுக் கென்ன மனக்கருத் துடைந்து வேறு
யூமத்தம பயன்றுய்த் தாரபோ லுன்மதத னாகி யுற்றான். (உஉ)

படவரா வனைய வல்குற் பைந்தொடி நல்லார் தம்பாற்
கடவுளர் புணர்ச்சி யென்னைக் காட்சியி னின்பந் துய்த்து
விடலரு மார்வ நீங்கி மெய்யுணர் வெய்தப பெறறுத்
திடமொடு முந்து போலச் சிவமுனி யிருந்து நோற்றான். (உங)

நற்றவன் காட்சி தன்னு னவ்விபாற் கருப்பஞ் சேரத்
தெற்றென வறித றேற்றிச் செங்கண்மா லுதவும் பாவை
மற்றத னிடத்திற் புக்காள் வரைபக வெறிந்த வைவேற
கொற்றவன் முன்னஞ் சொற்ற குறிவழிப் படரு நீரான். (உச)

வேறு.

மானி டத்தின்வரு மைந்தன் முந்துநீ
மானி டத்தின்வரு கென்ற வாய்மையான்
மானி டத்தின்வயி னடைந் தாண்மரு
மானி டத்தின்மா னருகும மான்மகள். (உரு)

அனைய காலையி லாயிடை நீங்கியே
புனித நவ்வி புனமெங் கனுமுலாய்ச்
சுனையி னீருண் டொர் சூழலின் வைகியே
யினிய மால்வரை யேறி நடந்ததே. (உசு)

நடந்த நவ்வி நலத்தகு வெற்பினி
விடந்தொ றுஞ்செறி யேனற் புனமெலாங்
கடந்து போயது காவல்கொள் வேட்டுவர்
மடந்தை மார்கள் வரிவிழி யென்னவே. (உஎ)

பிள்ளை யீற்றுப் பிணைவெயின் சேரியி
னுள்ள மாதரு ளித்தலைக் கோல்கொடு
வள்ளி கீழ்புகு மாமுதல் வெளவியே
பொள்ளல் செய்திடு புன்புலம் புக்கதே. (உஅ)

தோன்ற லுக்குத துணைவியைத் தொல்பிணை
தான்ற ரித்துத் தளர்ந்து தளாந்துபோய்
மான்ற ரற்றி யுயிர்தது வயிறுநொந்
தீன்று வள்ளி யிருங்குழி யிட்டதால. (உகூ)

குழைகு றுந்தொடி கோல்வளை யேமுதற்
பழைய பூண்கள் பலவுடன் றுங்குறுத
தழைபு னைந்து தனதுணர் வின்றிமெ
யுழைவ யின்வந் துதித்தன ளொப்பிலாள். (௩0)

கோற்றொ டிக்கைக் குழவியை நோக்கியே
யீற்று மான்பிணை யெமதினத் தன்றிது
வேற்று ருக்கொடு மேவிய தென்றெணு
வாறற வேமருண் டஞ்சி யகன்றதே. (௩க)

வேறு.

அன்னையென வீன்ற வரிணமருண் டோடியபின்
றன்னிணையி லாத தலைவி தனிததனளாய்க்
கின்னரநல் யாழொலியோ கேடிலசீர்ப் பாரதிக
னின்னிசையோ வென்றயிர்க்க வேங்கியழு திட்டனளே. (௩உ)

அந்த வளவைதனி லாதிரண்டு மொய்ம்புடைய
வெந்தையரு ளுய்ப்பவெயினர்குலக் கொற்றவனும்
பைந்தொடிநல லாளும் பரிசனங்கள் பாங்கெய்தச்
செந்திணையின் பைங்கூழ் செறிபுனத்துப புக்கனரே. (௩௩)

கொல்லை புகுந்த கொடிச்சியொடு கானவர்கோ
னல்லைகா குழலா ளமமென் குரல்கேளா
வெல்லை யதனி லெழுமொலியங் கேதென்று
வல்லை தனிலவ் வறுமபுனததில் வந்தனனே. (௩௪)

வந்தான் முதலெடுத்த வள்ளிக்குழி யில்வைகு
நந்தா விளக்கனைய நங்கை தனைநோக்கி
யிந்தா வினுக்கோ ரிளங்குழவி யென்றெடுத்துச்
சிந்தா குலந்தீரத் தேவிகையி லீந்தனனே. (௩௫)

ஈந்தான் சிலைவிலத்தி விட்டா னெழுந்தோங்கிப்
பாய்ந்தான் றெழித்தா னுவகைப் படுகடலிற்
றோய்ந்தான் முறுவலித்தான் றோள்புடைத்தான் றொல்பிறப்பி
னோர்தாயுற்றுதவ நன்றாங்கொ லென்றுரைத்தான். (௩௬)

கொற்றக் கொடிச்சி குழவியைத்தன் கைவாங்கி
மற்றப் பொழுதில் வயாவும் வருத்தமுமாய்ப்
பெற்றுக்கொள் வாள்போலப் பேணிப் பெரிதுமகிழ்
வுற்றுக் கனதனத்தி லூறுமமிர் தூட்டினளால. (௩௭)

வென்றிச் சிலையெடுத்து மேலைப் புனமகன்று
குன்றக் குறவன் குதலைவாய்க் கொம்பினுடன்
மன்றற் றுணைவிதனை வல்லைகொடுசீ றாரிற்
சென்றக் கணத்திற் சிறுகுடிலிற் புக்கனனே. (௩௮)

அண்ட ரமுத மனையமகட் பெற்றிடலான்
மண்டு பெருமகிழ்வாய் மாத்தாட் கொழுவிடையைக்
கெண்டி யொருதன் கிளையோ டினிதருந்தித்
தொண்டகம தார்ப்பக் குரவைமுறை தூங்குவித்தான். (௩௯),

காலை யதறபின் கடவுட் பலிசெலுத்தி
வாலரிசி மஞ்சண் மலர்சிந்தி மறியறுத்துக்
கோல நெடுவேற் குமரன்விழாக் கொண்டாடி
வேலனைமுற் கொண்டு வெறியாட்டு நேர்வித்தான். (௪0)

இன்ன பலவு மியற்றி யிருங்குறவர்
மன்னன் மனைவி வடமீன் றனையனையாள்
கன்னி மடமகட்குக் காப்பிட்டுக் கானமயிற்
பொன்னஞ் சிறைபடுத்த பூந்தொட்டி லேற்றினளே. (௪௧)

நாத்தளர்ந்து சோர்ந்து நடுக்கமுற்றுப் பறகழன்று
மூத்துநரை முதிர்ந்த மூதாளர் வந்தீண்டிப்
பாத்தி படுவள்ளிப் படுகுழியில் வந்திடலால்
வாய்த்த விவளுமம் வளளியெனக் கூறினரே. (௪௨)

தம்மரபி லுள்ள தமரா கியமுதுவ
ரிம்முறையா லாராய்ந் தியற்பேர் புனைந்துரை...
கொம்மை முலையாள் கொடிச்சியொடு குன்றவர்கோ
னம்மனையை நம்மகளென் றன்பால் வளர்த்தனனே. (௪௩)

முல்லைப் புறவ முதல்வன் றிருமடந்தை
கொல்லைக் குறிஞ்சிக் குறவன் மகளாகிச்
சில்லைப்புன் கூரைச் சிறுகுடிலிற் சேர்ந்தனளாற்
றொல்லைத் தனித்தந்தை தோன்றியமர் வுற்றதுபோல். (௪௪)

மூவா முகுந்தன் மூதனுட் பெறுமமுதைத்
தேவாதி தேவன் றிருமைந்தன் றேவிதனை
மாவாழ் சுரத்திற்றம் மாமகளாப் போற்றுகையா
லாவா குறவர்தவ மாரளக்க வல்லாரே. (௪௫)

பொற்றொட்டில் விட்டுப் புவியின் மிசைதவழக்
கற்றுத் தளர்நடையுங் காட்டிக் கனிநீழன்
முற்றத் திடையுலவி முறத்தின் மணிகொழித்துச்
சிற்றில் புனைந்து சிறுசோறட் டாடினளே. (௪௬)

முந்தை யுணர்வு முழுதுமின்றி யிம்முறையாற்
புந்திமகிழ் வண்டல் புரிந்துவளர் செவ்விக்க
ணைந்தைபுயம் புல்லுவதற் கிப்பருவ மேற்குமெனப்
பைந்தொடியி னுக்கியாண்டு பன்னிரண்டு சென்றனவே. (௪௭)

ஆன பருவங்கண் டம்மனையு மம்மனையிற்
கோனு மொருதங் குலத்தின் முறைநோக்கி
மானின் வயிற்றுதித்த வள்ளிதனைப் பைம்புனத்தி
லேனல் விளையு ளினிதளிக்க வைத்தனரே. (௪௮)

காட்டி லெளிதுற்ற கடவுண்மணி யைக்கொணர்ந்து
கூட்டி யிருளோட்டக் குருகுய்த்த வாறன்றே
நீட்டுசுடர் வேற்குமரன் றேவியாந் தெள்ளமுதைப்
பூட்டுசிலைக் கையார் புனங்காப்ப வைத்ததுவே. (௪௯)

சுத்த மெழுகிட்டுச் சுடர்கொளுவிப் பன்மணியின்
பத்தி குயின்றிட்ட பழுப்பேணி யிற்பாதம்
வைத்து மகிழ்ந்தேறி மகடூஉத் தினைப்புனத்தி
லெத்திசையுங் காணு மிதணத் திருந்தனளே. (௫௦)

கிள்ளையொடு கேகயமே யன்றிப் பிறநிலத்தி
லுள்ள பறவை யொருசார் விலங்கினொடும்
வள்ளி மலைப்புனத்தில் வந்துற் றனமாவும்
புள்ளு மயங்கல் பொருணூற் றுணிபன்றே. (௫௧)

கட்டு வரிவிற் கருங்குறவர் கைத்தொழிலா
விட்ட விதணத் திருந்தெம் பெருமாட்டி
தட்டை குணிறழலைத் தாங்கித் தினைப்புனத்தைக்
கிட்டுரு வண்ணங் கிளிமுதற்புள் ளோட்டினளே. (௫௨)

எய்யா னவைபு மிரலைமரை மான்பிறவுங்
கொய்யாத வேனற் குரல்கவர்ந்து கொள்ளாமன்
மையார் விழியாண் மணிக்கற் கவணிட்டுக்
கையா லெடுத்துக் கடிதோச்சி வீசினளே. (௫௩)

பூவைகாள் செங்கட் புறவங்கா ளாலோலந்
தூவிமா மஞ்ஞைகாள் சொற்கிளிகா ளாலோலங்
கூவல் சேர்வுற்ற குயிலினங்கா ளாலோலஞ்
சேவல்கா ளாலோல மென்று டிருந்திழையாள். (௫௪)

இந்த முறையிலிவ ளேனற் புனங்காப்ப
வந்த வளவி லவளுக் கருள்புரியக்
கந்தவரை நீங்கிக் கதிர்வே லவன்றனியே
வந்து தணிகை மலையிடத்து வைகினனே. (௫௫)

வேறு.

சூரல் பம்பிய தணிகைமால் வரைதனிற் சுடர்வேல
வீரன் வீற்றிருந் திடுதலும் வேலையங் கதனில்
வாரி யும்வடித் தந்தியும் வரிசையா னுறழ்ந்துஞ்
சீரி யாழ்வல்ல நாரதன் புவியினிற் சேர்ந்தான். (௫௬)

வளவி தாகிய வள்ளிமால் வரைதனில் வந்து
விளையு ளாகிய தினைப்புனம் போற்றிவீற் றிருந்த
புளினர் பாவையைக் கண்டுகை தொழுது புந்தியினி
லளவி லாததோ ரற்புதத் துடனிவை யறைவான். (கஎ)

அன்னை யாகியிங் கிருப்பவர் பேரழ கனைத்து
முன்னி யான்புனைந் துரைக்கினு முலவுமோ வுலவா
வென்னை யாளுடை யறுமுகன் றுணைவியா யிருப்ப
முன்னர் மாதவம் புரிந்தவ ரிவரென மொழிந்தான். (கஅ)

வேறு.

கார்த்தி னைப்புனங் காவற் கன்னியைப்
பார்த்து மற்றிவை பகர்ந்து போற்றிப்போய்
மூர்த்த மொன்றினின் மூன்று பூமலர்
தீர்த்தி கைச்சுனைச் சிகர நண்ணினான். (கக)

தணிகை யங்கிரி தன்னில் வைகிய
விணையில் கந்தனை யெய்தி யன்னவன்
றுணைமென் சீறடி தொழுது பன்முறை
பணிதல் செய்திவை பகாதன் மேயினான். (சுo)

மோன நற்றவ முனிவன் றன்மகண்
மானி னுற்றுளாள் வள்ளி வெறபினிற்
கான வக்குலக் கன்னி யாகியே
யேன லைபபுரந் திதணின் மேயினாள். (சுக)

ஐய னேயவ ளாக நல்லெழில்
செய்ய பங்கயத் திருவிற் கும்மிலை
பொய்ய தன்றிது போந்து காண்டிநீ
லைய னேனிவண் கண்டு வந்தனன். (சுஉ)

தாய தாகுமத் தையன் முன்னரே
மாய வன்மகண் மற்றுன் மொய்ம்பினைத்
தோய நோற்றனள் சொற்ற வெல்லையிற்
போய வட்கருள் புரிதி யாலென்றான். (சுங)

என்ற வேலையி லெஃக வேலினு
னன்று நன்றிது நவையில் காட்சியோய்
சென்றி நீயெனச் செபபித் தூண்டியே
கன்று காமநோய்க் கவலை யுள்வைத்தான். (சுச)

எய்யும் வார்சிலை யெயினர் மாதரா
ளுய்யு மாறுதன் னுருவ நீத்தெழீஇச்
செய்ய யோருள் செய்து சேவகன்
மையன் மானுட வடிவந் தாங்கினான். (சுரு)

காலிற் கட்டிய கழலன் கச்சினன்
மாலைத் தோளினன் வரிவில் வாளிய
னீலக் குஞ்சிய னெடியன் வேட்டுவக்
கோலத் தைக்கொடு குமரன் றோன்றினான். (சுசு)

கிள்ளை யன்னதோர் கிளவி மங்கைமாட்
டுள்ள மோகந்தன் னுள்ள கந்தனைத்
தள்ள வெம்பிரான் றணிகை வெற்பொரீஇ
வள்ளி யங்கிரி வயின்வந் தெய்தினான். (கூஎ)

வேறு.

மண்டலம் புகழுந் தொல்சீர் வள்ளியஞ் சிலம்பின் மேல்போய்ப்
பிண்டியந் தினையின் பைங்கூழ்ப் பெரும்புனத் திறைவி தன்னைக்
கண்டனன் குமா னம்மா கருதிய வெல்லை தன்னிற்
பண்டொரு புடையில் வைத்த பழம்பொருள் கிடைத்த வாபோல். (கூஅ)

பூமஞ்சார் மின்கொ லென்னப் பொருப்பினி லேனல் காக்குங்
காமஞ்சா லிளமை யாளைக் கடம்பமர் காளை நோக்கித்
தூமஞ்சால் விரகச் செந்தீச் சுட்டிடச் சோர்ந்து வெம்பி
யேமஞ்சால் கின்ற நெஞ்ச னிதணினுக் கணியன் சென்றான். (கூகூ)

நாந்தக மனைய வுண்க ணங்கைகேண் ஞாலந் தன்னி
லேந்திழை யார்கட் கெல்லா மிறைவியா யிருக்கு நின்னைப்
பூந்தினை காக்க வைத்துப் போயினா் புளின ரானோர்க்
காய்ந்திடு முணர்ச்சி யொன்று மயன்படைத் திலன்கொ லென்றான். ()

வாரிருங் கூந்த லல்லாய் மதிதளர் வேனுக் குன்றன்
பேரினை யுரைத்தி மற்றுன் பேரினை யுரையா யென்னி
னூரினை யுரைத்தி யூரு முரைத்திட முடியா தென்னிற்
சீரிய நின்சீ றூர்க்குச் செல்வழி யுரைத்தி யென்றான். (எக)

மொழியொன்று புகலா யாயின் முறுவலும் புரியா யாயின்
விழியொன்று நோக்கா யாயின் விரகமிக் குழல்வே னுய்யும்
வழியொன்று காட்டா யாயின் மனமுஞ்சற் றுருகா யாயிற்
பழியொன்று நின்பாற் சூழும் பராமுகந் தவிர்தி யென்றான். (எஉ)

உலைப்படு மெழுக தென்ன வுருகியே யொருத்தி காதல்
வலைப்படு கின்றான் போல வருந்தியே யிரங்கா நின்றான்
கலைப்படு மதியப புத்தேள் கலங்கலம் புனலிற் றோன்றி
யலைப்படு தன்மைத் தன்றோ வறுமுக னுடை லெல்லாம். (எஙு)

செய்யவள் குமரி முன்னந் திருநெடுங் குமா னின்று
மையலின் மிகுதி காட்டி மற்றிவை புகரு மெல்லை
யெய்யுட னுளியம் வேழ மிரிதா வீரலை யூத
வெய்யென வெயினர் சூழ வொருதனித் தாதை வந்தான். (எச)

ஆங்கது காலை தன்னி னடிமுதன் மறைக ளாக
வோங்கிய நடுவ ணெல்லா முயர்சிவ நால தாகப்
பாங்கமர் கவடு முற்றும் பல்கலை யாகத் தானோர்
வேங்கையி னுருவ மாகி வேற்படை வீர னின்றான். (எரு)

கானவர் முதல்வ னாங்கே கதுமென வந்து தங்கண்
மானினி தன்னைக் கண்டு வள்ளியங் கிழங்கு மாவுந்
தேனொடு கடமான் பாலுந் திற்றிகள் பிறவு நல்கி
யேனலம் புனத்தி னின்ற யாணர்வேங் கையினைக் கண்டான். (எசு)

ஆங்கவ னயலாய் நின்ற வடுதொழின் மறவ ரானோர்
வேங்கையி னிலைமை நோக்கி விம்மித நீர ராகி
யீங்கிது முன்னுற் றன்று லித்துணை புகுந்த வாற்றாற்
றீங்குவந் திடுத றிண்ண மென்றனர் வெகுளித் தீயார். (எஎ)

எறித்தரு கதிரை மாற்று மிருநிழற் கணியை யின்னே
முறித்திடு வீர்க ளென்பார் முதலொடு வீழச் சூழப்
பறித்திடு வீர்க ளென்பார் பராரையைக் கணிச்சி தன்னாற்
றறித்திடு வீர்க ளென்பார் தாழ்க்கலீர் சற்று மென்பார். (எஅ)

இங்கிவை யுரைக்குந் தீயோர் யாரையும் விலக்கி மன்ன
னங்கைதன் வதனம் பாரா நறுமலர் வேங்கை யொன்று
செங்குர லேனற் பைங்கூழ் செறிதரு புனத்தின் மாடே
தங்கிய தென்னை கொல்லோ சாற்றுதி சரத மென்றான். (எகூ)

தந்தையாங் குரைத்தல் கேளாத் தையலும் வெருவி யீது
வந்தவா றுணர்கி லேன்யான் மாயம்போற் றோன்றிற் றையா
முந்தைநா ளில்லா தொன்று புதுவதாய் முளைத்த தென்னாச்
சிந்தைமே னடுக்க மெய்தி யிருந்தனன் செயலி தென்றாள். (அ0)

வேறு.

என்றிவை சொற்றபி னேந்திழை யஞ்சே
னன்றிவண் வைகுதி நாண்மலர் வேங்கை
யின்றுணை யாயிவ ணெய்திய தென்னாக்
குன்றுவன் வேடர் குழாத்தொடு போனான். (அக)

போனது கண்டு புனத்திடை வேங்கை
யானதொர் தன்மையை யைய னகன்று
கானவர் தம்மகள் காண்வகை தொல்லை
மானுட நல்வடி வங்கொடு நின்றான். (அஉ)

வேறு.

தொல்லையி னுருக்கொடு தோன்றி நின்றவே
ளொல்லையின் மையலுற் றிரங்கு வானென
வல்லிவர் கூந்தலா ளருகு நிற்புறீஇ
நல்லரு ளாலிவை நவிறன் மேயினான். (அங)

கோங்கென வளர்முலைக் குறவர் பாவையே
யீங்குனை யடைந்தனீ னெனக்கு நின்னிரு
பூங்கழ லல்லது புகலொன் றில்லையா
னீங்கல னீங்கல னின்னை யென்றுமே. (அச)

மாவியல் கருங்கணாய் மற்று நின்றனைப
பாவிய னீங்கியே படர வல்லனோ
வாவியை யகன்றுமெய் யறிவு கொண்டெழீஇப்
போவது கொலலிது புகல வேண்டுமே. (அரு)

மைதிகழ் கருங்கணின் வலைப்பட் டேற்கருள்
செய்திட லன்றியே சிறைக்க ணிததனை
யுய்திறம் வேறெனக் குளகொ லீண்டுநின்
கைதனி லிவ்வுயிர் காத்துக் கோடியால். (அகூ)

கோடிவர் கெடுவரைக் குறவர் மாதுநீ
யாடிய சுனையதா யணியுஞ் சாந்தமாய்ச்
சூடிய மலர்களாய்த் தோயப் பெற்றிலேன்
வாடின னினிச்செயும் வண்ணம் யாவதே. (அஎ)

புல்லிது புல்லிது புனத்தைக் காத்திடன்
மெல்லியல் வருதியால் விண்ணின் பால்வரும்
வல்லியர் யாவரும் வணங்கி வாழ்த்திடத்
தொல்லியல் வழாவளந் துய்ப்ப நல்குவேன். (அஅ)

என்றிவை பலபல விசைத்து நிற்றலுங்
குன்றுவர் மடக்கொடி குமரன் சிந்தையி
லொன்றிய கருத்தினை யுற்று நோக்கியே
நன்றிவர் திறமென நாணிக் கூறுவாள். (அகூ)

இழிகுல மாகிய வெயினர் பாவைநான்
முழுதுல கருள்புரி முதல்வர் நீரெனைத்
தழுவுத லுன்னியே தாழ்ச்சி செப்புதல்
பழியது வேயலாற் பான்மைத் தாகுமோ. (கூ0)

இலைமுதி ரேனல்காத் திருக்கும் பேதையா
லுலகரு ளிறைவர்நீ ருளம யங்கியென்
கலவியை விரும்புதல் கடன தன்றரோ
புலியது பசியுறிற் புல்லுந் துய்க்குமோ. (கூக)

வேறு.

என்றிவை பலப்பலவு மேந்திழை யியம்பா
நின்றபொழு தத்திலவு ணெஞ்சம்வெருக் கொள்ள
வென்றிகெழு தொண்டகம் வியன்றுடி யியம்பக்
குன்றிறைவன் வேட்டுவர் குழாத்தினொடும் வந்தான். (கூஉ)

வந்தபடி கண்டிபிட மானடு நடுங்கிச்
சிந்தைவெரு விக்கடவுள் செய்யமுக நோக்கி
வெந்திறல்கொள் வேடுவர்கள் வெய்யரிவ ணில்லா
துய்ந்திட நினைந்தகடி தோடுமினி யென்றாள். (கூஙு)

ஓடுமினி யென்றவ ளுரைத்தமொழி கேளா
நீடுமகிழ் வெய்தியவ ணின்றகும ரேச
ஞடுபுகழ் சைவநெறி நற்றவ விருத்த
வேடமது கொண்டுவரும் வேடரெதிர் சென்றான். (கூச)

சென்றுமுது வோன்குறவர் செம்மலெதிர் நண்ணி
நின்றுபின் வோடுதிரு நீறுதனை நல்கி
வன்றிறன் மிகுத்திடுக வாகை பெரிதாக
வின்றியமை யாதவள மெய்திடுக வென்றான். (கூரு)

பூதியினை யன்பொடு புரிந்தகுர வன்றன்
பாதமலர் கைகொடு பணிந்துகுற மன்னன்
மேதகுமிவ் வெற்பினில் விருத்தரென வந்தீ
ரோதிடுதிர் வேண்டியவதை யொல்லைதனி லென்றான். (கூகூ)

ஆண்டொழிலின் மேதகைய வண்ணலிது கேண்மோ
நீண்டதனி மூப்பகல நெஞ்சமரு ணீங்க
வீண்டுறும்வ ரைக்குமரி யெய்தியினி தாட
வேண்டிவரு கின்றனன் மெலிந்துகடி தென்றான். (௯௭)

வேறு.

நற்றவன் மொழியைக் கேளா நன்றுநீர் நவின்ற தீர்த்த
மிற்றது மாடியெங்க ணேரிழை தமிய ளாகி
யுற்றன ளவளுக் கெந்தை யொருதனித் துணைய தாகி
மற்றிவ ணிருத்தி ரென்ன வழகிதா மன்ன வென்றான். (௯௮)

இனையதோர் பொழுதிற் றந்தை யேந்திழை தன்பா லேகித்
தினையொடு கிழங்கு மாவுந் தீங்கனி பிறவு நல்கி
யனையவ டுணைய தாக வருந்தவன் றன்னை வைத்து
வனைகழ லெயின ரோடும் வல்லையின் மீண்டு போனான். (௯௯)

போனது முதியோன் கண்டு புனையிழை தன்னை நோக்கி
நானினிச் செய்வ தென்கொ னலிவது பசிநோ யென்னத்
தேனொடு கனியு மாவுஞ் செங்கையிற் கொடுப்பக் கொண்டு
வேனிலு முடுகிற் றுண்ணீர் விடாய்பெரி துடையே னென்றான். ()

செப்புறு மனைய மாற்றஞ் சேயிழைக் கிழத்தி கேளா
மிப்புற வரைக்கு மப்பா லெழுவரை கடந்த தற்பி
னுப்புற மிருந்த தெந்தா யொருசுனை யங்க ணேகி
வெப்புற லின்றித் தெண்ணீர் மிசைந்துபின் வருதி ரென்றாள். ()

பூட்டுவார் சிலைக்கை வேடர் பூவையே புலர்ந்து தெண்ணீர்
வேட்டனன் விருத்தன் வெற்பில் வியனெறி சிறிதுந் தேரேன்
றாட்டுணை வருந்து மென்று தாழ்த்திடா தொல்லை யேகிக்
காட்டுதி சுனைநீ ரென்றா னறுமுகங் கரந்த கள்வன். (௧௦௨)

முருகன துரையை யந்த மொய்குழல் வினவி யெந்தாய்
வருகென வழைத்து முன்போய் வரையெலாங் கடந்துசென்று
விரைகமழ் சுனைநீர் காட்ட வேனிலால் வெதும்பி னான்போற்
பருகினன் பருகிப் பின்ன ரிஃதொன்று பகர்த லுற்றான். (௧௦௩)

ஆகத்தை வருத்து கின்ற வரும்பசி யவித்தாய் தெண்ணீர்த்
தாகத்தை யவித்தா யின்னுந் தவிர்ந்தில தளர்ச்சி மன்னோ
மேகத்தை யனைய கூந்தன் மெல்லியல் வினையேன் கொண்ட
மோகத்தைத் தணித்தி யாயின் முடிந்ததென் குறைய தென்றான்.

வேறு.

ஈறின் முதியோ னிரங்கி யிரந்துகுறை
கூறி மதிமயங்கிக் கும்பிட்டு நின்றளவி
னூறுமலர்க் கூந்த னங்கை நகைத்துயிர்த்துச்
சீறி நடுநடுங்கி யிவ்வாறு செப்புகின்றாள். (௧௦௫)

மேலா கியதவத்தோர் வேடர் தனைப்பூண்டிங்
கேலா தனவே யியற்றினீர் யார்விழிக்கும்
பாலா கித்தோன்றிப் பருகினா ராவிகொள்ளு
மாலால நீர்மைத்தோ வைய ரியற்கையதே. (௧௦௬)

கொய்தினைகள் காப்பேனைக் கோதிலா மாதவத்தீர்
மெய்தழுவ வுன்னி விளம்பா தனவிளம்பிக்
கைதொழுது நிற்றல் கடனன்று கானவரிச்
செய்கைதனை யறியிற் றீதாய் முடிந்திடுமே. (கOஎ)

நத்துப்புரை முடியீர் நல்லுணர்வு சற்றுமிலீ
ரெத்துக்கு மூத்தீ ரிழிகுலத்தேன் றன்னைவெஃகிப்
பித்துக்கொண் டார்போற் பிதற்றுவீ ரிவ்வேடர்
கொத்துக் கெலாமோர் கொடும்பழியைச் செய்தீரே. (கOஅ)

சேவலாய் வைகுந் தினைப்புனத்திற் புள்ளினுடன்
மாவெலாங் கூடி வளர்பைங் குரல்கவரு
நாவலோய் நீரு நடந்தருளு நான்முந்திப்
போவனு லென்று புனையிழையாள் போந்தனளே. (கOகூ)

பொன்னே யனையாண்முன் போகுந் திறனோக்கி
யென்னே யினிச்செய்வ தென்றிரங்கி யெம்பெருமான்
றன்னே ரிலாதமருந் தந்திமுகத தெந்தைதனை
முன்னே வருவாய் முதல்வா வெனநினைந்தான். (கக0)

அந்தப் பொழுதி லறுமா முகற்கிரங்கி
முந்திப் படர்கின்ற மொய்குழலாண் முன்னாகத்
தந்திக் கடவுட் டனிவா ரணப்பொருப்பு
வந்துற்ற தம்மா மறிகடலே போன்முழங்கி. (கக்க)

அவ்வே லையில்வள்ளி யச்சமொடு மீண்டுதவப்
பொய்வேடங் கொண்டுநின்ற புங்கவன்றன் பாலணுகி
யிவ்வேழங் காததருள்க வெந்தைநீர் சொற்றபடி
செய்வே னெனவொருபாற் சேர்ந்துதழீஇக் கொண்டனளே.

அன்னதொரு காலை யறுமா முகக்கடவுண்
முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற்றப்
பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற
விற்நடுவே நின்று னெறுழ்வயிரத் தூணேபோல். (கக௩)

கந்த முருகன் கடவுட் களிறுதனை
வந்தனைகள் செய்து வழுத்திநீ வந்திடலாற்
புந்தி மயறீர்ந்தேன் புனையிழையுஞ் சேர்ந்தனளா
லெந்தை பெருமா னெழுந்தருள்க மீண்டென்றான். (கக௪)

என்னு மளவி னிமெதன் றியானைமுக
முன்னிளவ லேக முகமா றுடையபிரான்
கன்னி தனையோர் கடிகா வினிற்கலந்து
துன்னு கருணைசெய்து தொல்லுருவங் காட்டினனே. (ககரு)

முன்னான்கு தோளு முகங்களோர் மூவிரண்டுங்
கொன்னார்வை வேலுங் குலிசமுமே னைப்படையும்
பொன்னார் மணிமயிலு மாகப் புனக்குறவர்
மின்னாள் கண்காண வெளிநின் றனன்விறலோன். (ககசு)

கூரார் நெடுவேற் குமரன் றிருவுருவைப்
பாரா வணங்காப் பரவலுறா விம்மிதமுஞ்
சேரா நடுநடுங்காச் செங்கைகுவி யாவியரா
வாராத காதலுறா வம்மையிது வோதுகின்றாள். (ககள)

மின்னே யனையசுடர் வேலவரே யிவ்வுருவ
முன்னேநீர் காட்டி முயங்காம லித்துணையுங்
கொன்னே கழித்தீர் கொடியேன்செய் குற்றமெலா
மின்னே தணித்தே யெனையாண்டு கொள்ளுமென்றாள்.(ககஅ)

உம்மைய தனிலுலக முண்டோன் றன்மகணீ
நம்மை யணையும்வகை நற்றவஞ்செய் தாயதனு
லிம்மை தனிலுன்னை யெய்தினோ மென்றெங்க
ளம்மை தனைத்தழுவி யைய னருள்புரிந்தான். (ககசு)

எங்கண் முதல்வ னிறைவி தனைநோக்கி
யுங்கள் புனந்தன்னி னுறைந்திடமுன் னேகுதியான்
மங்கைநல் லாயாமும் வருவோ மெனவுரைபப
வங்கண் விடைகொண் டடிபணிந்து போயினளே. (கஉ0)

வேறு.

வாங்கிய சிலைநுதல் வள்ளி யென்பவள்
பூங்குர லேனலம் புனத்து ளேகியே
யாங்கன மிருத்தலு மயற்பு னத்தமர்
பாங்கிவந் தடிமுறை பணிந்து நண்ணினாள். (கஉக)

நாற்றமுந் தோற்றமு நவிலொ ழுக்கமு
மாற்றமுஞ் செய்கையு மனமு மற்றதும்
வேற்றுமை யாதலும் விளைவு நோக்கியே
தேற்றமொ டிருளையங் கிளைய செப்புவாள். (கஉஉ)

இப்புன மதிதர வெங்ங னேகினா
செப்புதி நீயெனத் தெரிவை நாணுறா
வப்புற மென்சுனை யாடப போந்தனன்
வெப்புறும் வேனிலான் மெலிந்தி யானென்றாள். (கஉங)

மைவிழி சிவப்பவும் வாய்வெ ளுப்பவு
மெய்வியர் வடையவு நகிலயர் விமமவுங்
கைவளை நெகிழவுங் காட்டுந் தண்சுனை
யெவ்விடை யிருந்துள தியம்பு வாயென்றாள். (கஉச)

சொற்றிடு மிருளையைச் சுளித்து நோக்கியே
யுற்றிடு துணையதா வுனையுட் கொண்டியான்
மற்றிவ ணிருந்தனன் வந்தெ னக்குமோர்
குற்றம துரைத்தனை கொடியை நீயென்றாள். (கஉரு)

பாங்கியுந் தலைவியும் பகர்ந்து மற்றிவ
யாங்கன மிருத்தலு மதனை நோக்கியே
யீங்கிது செவ்வியென் றெய்தச் சென்றனன்
வேங்கைய தாகிமுன் னின்ற மேலையோன். (கஉசு)

எறி

கோட்டிய சிலையினன் குறிக்கொள் வாளியன்
நீட்டிய குறியவாள் செறித்த கச்சினன்
வேட்டம தழுங்கிய வினைவ லோனெனத்
தாட்டுணை சிவந்திடத் தமிய னேகினான். (௧௨௭)

வேறு.

காந்தள் போலிய கரத்தினீர் யானெய்த கணையாற்
பாய்ந்த சோரியும் பெருமுழக் குறுபகு வாயு
மோய்ந்த புண்படு மேனியு மாகியோ ரொருத்தல்
போந்த தோவிவண் புகலுதிர் புகலுதி ரென்றான். (௧௨௮)

வேழ மேமுத லுள்ளன கெடுதிகள் வினவி
யூழி நாயக னிற்றலு முமக்குநே ரொத்து
வாழு நீரருக் குரைப்பதே யன்றிநும் வன்மை
யேழை யேங்களுக் கிசைப்பதென் னென்றன ளிகுளை. (௧௨௯)

ஐயர் வேட்டைவந் திடுவதுந் தினைபுனத் தமர்ந்து
தையல் காத்திடு கின்றதுஞ் சரதமோ பறவை
யெய்யும் வேட்டுவர் கோலமே போன்றன விருவர்
மைய றன்னையு முரைத்திடும் விழியென மதித்தாள். (௧௩௦)

மனத்தி லிங்கிவை யுன்னியே துணைவியு மற்றைப்
புனத்தி லேகிவீற் றிருந்தன ளன்னதோர் பொழுதிற்
சினத்தி டுங்கரி யெய்தன மென்றசே வகன்போய்க்
கனத்தை நேர்தரு கூந்தலாய் கேளெனக் கழறும். (௧௩௧)

உற்ற கேளிரு நீங்களே தமியனுக் குமக்குப்
பற்ற தாயுள பொருளெலாந் தருவனும் பணிகண்
முற்று நாடியே புரிகுவன் முனிவுகொள் ளாது
சற்று நீரருள் செய்திடு மென்றனன் றலைவன். (௧௩௨)

அண்ணல் கூறிய திகுளைதேர்ந் திடுதலு மைய
ரெண்ண மீதுகொ லெம்பெருங் கிளைக்கிதோ ரிழுக்கை
மண்ணி னுட்டவோ வந்தது மறவர்தம் பேதைப
பெண்ணை யாதரித் திடுவரோ பெரியவ ரென்றாள். (௧௩௩)

சீத ரன்றரு மயிர்தினை யெயினர்கள் செய்த
மாத வந்தனைப் பெண்ணினுக் கரசைமற் றெனக்குக்
காத லல்கியே நல்லருள் புரிந்தகா ரிகையைப்
பேதை யென்பதே பேதைமை யென்றனன் பெரியோன். (௧௩௪)

என்றெங் கோனுரை செய்தலு மடமக ளிங்ஙன்
குன்றங் காவலர் வருகுவ ரவர்மிகக் கொடியோ
ரொன்றுந் தேர்கிலர் காண்பரே லெம்முயி ரொறுப்பா
ரின்றிங் காவதென் போமென நெறிப்படுத் துரைத்தாள். (௧௩௫)

தோட்டின் மீதுசெல் விழியினுய் தோகையோ டென்னைக்
கூட்டி டாயெனிற் கிழிதனி லாங்கவள் கோலந்
தீட்டி மாமட லேறிநும் மூர்த்தெரு வதனி
லோட்டு வேனிது நாளையான் செய்வதென் றுரைத்தான். (௧௩௬)

ஆதி தன்மொழி துணைவிகேட் டஞ்சி யையாக்கு
நீதி யன்றுதண் பனைமட லேறுத னீரிம்
மாத வித்தருச் சூழலின் மறைந்திரு மற்றென்
காதன் மங்கையைத் தருவனென் றேகினன் கடிதின். (கருஎ)

வேறு.

அங்க வெல்லையி லகம கிழ்ச்சியா
லெங்க டம்பிரா னினிதி னேகியே
மங்குல் வந்துகண் வளரு மாதவிப
பொங்கர் தன்னிடைப் புக்கு வைகினன். (கருஅ)

பொள்ளெ னத்தினைப் புனத்திற் பாங்கிபோய்
வள்ளி தன்பதம் வணங்கி மானவேற்
பிள்ளை காதலும் பிறவுஞ் செப்பியே
யுள்ளந் தேறறியே யொருபப டுத்தினள். (கருகூ)

இளைய மங்கையை யிருளை யேனலின்
விளைத ரும்புன மெல்ல நீங்கியே
யளவின் மஞ்ஞைக ளகவு மாதவிக்
குளிர்பொ தும்பரிற் கொண்டு போயினள். (கசo)

பற்றின் மிக்கதோர் பாவை யிவ்வரை
சுற்றி யேகிநீ சூடுங் கோடல்கள்
குற்று வந்துநின் குழற்கு நல்குவ
னிற்றி யீண்டென நிறுவிப் போயினள். (கசக)

வேறு.

கோற்றொடி யிருளைதன் குறிபபி னல்வகை
சாற்றின ளகன்றிட் தைய னிற்றலு
மாற்றவு மகிழ்சிறந் தாறு மாமுகன்
றோற்றின னெதிர்ந்தனன் றொன்மை போலவே. (கசஉ)

வடுத்துணை நிகர்விழி வள்ளி யெம்பிரா
னடித்துணை வணங்கலு மவளை யங்கையா
லெடுத்தனன் புல்லின னின்ப மெய்தினன்
சுடர்தொடி கேட்டியென் றிதனைச் சொல்லினன். (கசங)

உந்தையும் பிறரும்வந் துன்னை நாடுவர்
செந்தினை விளைபுனஞ் சேவல போற்றிடப்
பைந்தொடி யணங்கொடு படர்தி நாளையாம்
வந்திடு வோமென மறைந்து போயினன். (கசச)

போந்தபி னிரங்கியப் பொதும்பர் நீங்கியே
யேந்திழை வருதலு மிருளை நேர்கொடு
காந்தளின் மலர்சில காட்டி யன்னவள்
கூந்தலிற் சூடியே கொடுசென் றேகினள். (கசரு)

இவ்வகை வழிபடு மிருளை தன்னொடு
நைவள மேயென நவிலுந் தீஞ்சொலாள்
கொய்வரு தினைப்புனங் குறுகிப் போற்றியே
யவ்விடை யிருந்தன ளகம்பு லர்ந்துளாள். (கசகூ)

வளந்தரு புனந்தனில் வள்ளி நாயகி
தளர்ந்தன ளிருத்தலுந் தலைய ளித்திடு
மிளந்தினை யின்குர லீன்று முற்றியே
விளைந்தன குறவர்கள் விரைந்து கூடினார். (௧௪௭)

வேறு.

குன்ற வாணர்கள் யாவருங் கொடிச்சியை நோக்கித்
துன்று மேனல்கள் விளைந்தன கணிகளுஞ் சொற்ற
வின்று காறுநீ போற்றியே வருந்தினை யினிநீ
சென்றி டம்மவுன் சிறுகுடிக் கெனவுரை செய்தார். (௧௪௮)

குறவ ரிவ்வகை சொற்றன செவிப்புலங் கொண்டாங்
கெறியும் வேல்படு புண்ணிடை யெரிநுழைந் தென்ன
மறுகு முள்ளத்த ளாகியே மற்றவ ணீங்கிச்
சிறுகு டிக்குநல் லிருளையுந் தானுமாய்ச் சென்றாள். (௧௪௯)

மானி னங்களை மயில்களைக் கிளியைமாண் புறவை
யேனை யுள்ளவை தங்களை நோக்கியே யாங்கள்
போன செய்கையைப புகலுதிர் புங்கவர்க் கென்னாத்
தானி ரங்கியே போயின ளொருதனித் தலைவி. (௧௫௦)

பூவை யன்னதோர் மொழியினாள் சிறுகுடிப் புகுந்து
கோவில் வைப்பினுட் குறுகியே கொள்கைவே றாகிப்
பாவை யொண்கழங் காடலள் பண்டுபோன் மடவா
ரேவர் தம்மொடும் பேசலள் புலம்பிவீற் றிருந்தாள். (௧௫௧)

மற்ற வெல்லையிற் செவிலியு மன்னையு மகளை
யுற்று நோக்கியே மேனிவே றாகிய துனக்குக்
குற்றம் வந்தவா றென்னென வற்புறக் கூறிச்
செற்ற மெய்தியே யன்னவ டன்னையிற் செறித்தார். (௧௫௨)

வேறு.

ஓவிய மனைய நீரா ளுட்பிடித் தடக்கை யோனை
மேவினள் பிரித லாலே மெய்பரிந் துள்ளம் வெம்பி
யாவிய தில்லா ளென்ன வவசமா யங்கண் வீழப்
பாவைய ரெடுத்துப புல்லிப பருவர லுற்றுச் சூழ்ந்தார். (௧௫௩)

ஏர்கொண்மெய் நுடங்கு மாறு மிறைவளை கழலு மாறுங்
கூர்கொள்கண் பனிக்கு மாறுங் குணங்களவே றாய வாறும்
பீர்கொளு மாறு நோக்கிப் பெண்ணினைப் பிறங்கற் சாரற்
சூர்கொலாந் தீண்டிற் றென்றார் சூர்ப்பகை தொட்ட தோரார். (௧௫௪)

தந்தையுங் குறவர் தாமுந் தமர்களும் பிறரு மீண்டிச்
சிந்தையு ளியாவு கொண்டு தெரிவைதன் செயலை நோக்கி
முந்தையின் முதியா ளோடு முருகனை முறையிற் கூவி
வெந்திறல் வேலி னாற்கு வெறியயர் வித்தா ரன்றே. (௧௫௫)

வெறியயர் கின்ற காலை வேலன்மேல் வந்து தோன்றிப்
பிறிதொரு திறமு மன்றாற் பெய்வளை தமிய ளாகி
யுறைதரு புனத்திற் றொட்டா முளமகிழ் சிறப்பு நேரிற்
குறையிது நீங்கு மென்றே குமரவேள் குறிப்பிற் சொற்றான். (௧௫௬)

குறிப்பொடு நெடுவே லண்ணல் கூறிய கன்ன மூல
நெறிப்பட வருத லோடு நேரிழை யவச நீங்கி
முறைப்பட வெழுந்து வைக முருகனை முன்னி யாங்கே
சிறப்பினை நேர்து மென்று செவிலித்தாய் பராவல் செய்தாள். (கருள)

மனையிடை யம்மை வைக வனசரர் முதிர்ந்த செவ்வித்
தினையினை யரிந்து கொண்டு சிறுகுடி யதனிற் சென்றூ
ரினையது நோக்கிச் செவ்வே ளிருவியம் புனத்திற் புக்குப்
புனையிழை தன்னைக் காணான் புலம்பியே திரித லுற்றான். (கருஅ)

கனந்தனை வினவு மஞ்ஞைக் கணந்தனை வினவு மேனற்
புனந்தனை வினவு மம்மென் பூவையை வினவுங் கிள்ளை
யினந்தனை வினவும் யானை யிரலையை வினவுந் தண்கா
வனந்தனை வினவு மற்றை வரைகளை வினவு மாதோ. (கருக)

வாடினான் றளர்ந்தா னெஞ்சம் வருந்தினான் மையற் கெல்லை
கூடினான் வெய்து யிர்த்தான் குற்றடிச் சுவடு தன்னை
நாடினான் றிகைத்தா னின்று நடுங்கினா னங்கை தன்னைத்
தேடினான் குமரற் கீது திருவிளை யாடல் போலாம். (கசூ0)

வல்லியை நாடு வான்போன் மாண்பகல் கழித்து வாடிக்
கொல்லையம் புனத்திற் சுற்றிக் குமரவே ணடுநாள் யாமஞ்
செல்லுறு மெலலை வேடர் சிறுகுடி தன்னிற் புக்குப்
புல்லிய குறவர் செம்மல் குரம்பையின் புறம்போய் நின்றான். (கசூக)

பாங்கிசெவ் வேளைக் கண்டு பணிந்துநீ கங்குற் போதி
லீங்குவந் திடுவ தொல்லா திறைவியும் பிரியி னுய்யா
ணீங்களிவ் விடத்திற் கூட நேர்ந்ததோ ரிடமு மில்லை
யாங்கவ டன்னைக் கொண்டே யகலுதி ரடிக ளென்றாள். (கசூஉ)

என்றிவை கூறிப் பாங்கி யிறைவனை நிறுவி யேகித்
தன்றுணை யாகி வைகுந் தையலை யடைந்து கேள்வ
ருன்றனை வெளவிச் செல்வா னுள்ளத்திற் றுணியா விங்ஙன்
சென்றனர் வருதி யென்னச் சீரிதென் றொருப்பா டுற்றாள். (கசூங)

தாய்துயி லறிந்து தங்க டமர்துயி லறிந்து துஞ்சா
நாய்துயி லறிந்து மற்றந் நகர்துயி லறிந்து வெய்ய
பேய்துயில் கொள்ளும யாமப் பெரும்பொழு ததனிற் பாங்கி
வாய்தலிற் கதவை நீக்கி வள்ளியைக் கொடுசென் றய்த்தாள். (கசூச)

அறுமுக வொருவன் றன்னை யாயிழை யெதிர்ந்து தாழ்ந்து
சிறுதொழி லெயினர் சூரிற் றீயனேன் பொருட்டா லிந்த
நறுமலர்ப் பாதங் கன்ற நள்ளிருள் யாமந் தன்னி
லிறைவநீர் நடப்ப தேயென் றிரங்கியே தொழுது நின்றாள். (கசூரு)

மாத்தவ மடந்தை நிற்ப வள்ளலை யிகுளை நோக்கித்
தீத்தொழி லெயினர் காணிற் றீமையாய் விளையு மின்னே
யேத்தருஞ் சிறப்பி னும்மூர்க் கிங்கிவ டனைக்கொண் டேகிக்
காத்தருள் புரியு மென்றே கையடை யாக நேர்ந்தாள். (கசூசு)

முத்துறு முறுவ லாளை மூவிரு முகத்தி னொன்றன்
கைத்தலந் தன்னி னீந்து கைதொழு திருளை நிற்ப
மெய்த்தகு கருணை செய்து விளங்கிழாய் நீயெம் பாலின்
வைத்திடு கருணை தன்னை மறக்கலங் கண்டா யென்றான். (௧௬௭)

மையுறு தடங்க ணல்லாள் வள்ளியை வணக்கஞ் செய்து
மெய்யுறப் புல்லி யன்னாய் விரைந்தனை சேறி யென்னா
வையனோ டினிது கூட்டி யாங்கவர் விடுப்ப மீண்டு
கொய்யுறு கவரி மேய்ந்த குரம்பையின் கூரை புக்காள். (௧௬௮).

விடைபெற்றே யிருளை யேக வேலுடைக் கடவு ளன்ன
நடைபெற்ற மடந்தை யோடு நள்ளிரு ளிடையே சென்று
கடைபெற்ற சீறூர் நீங்கிக் காப்பெலாங் கடந்து காமன்
படைபெற்றுக் குலவு மாங்கோர பசுமரக் காவுட் சேர்ந்தான். (௧௬௯)

செஞ்சுடர் நெடுவே லண்ணல் செழுமலர்க் காவிற் புக்கு
வஞ்சியொ டிருந்த காலை வைகறை விடியல் செல்ல
வெஞ்சலில் சீறூர் தன்னி லிறையவன் றனது தேவி
துஞ்சலை யகன்று வல்லே துணுக்கமுற் றெழுந்தா ளன்றே. (௧௭0)

சங்கலை கின்ற செங்கைத தனிமகட் காணு ளாகி
யெங்கணு நாடிப் பின்ன ரிருளையை வந்து கேட்பக்
கங்குலி னவளு நானுங் கண்படை கொண்ட துண்டா
லங்கவ ளதறபின் செய்த தறிகில னன்னு யென்றாள். (௧௭௧)

தம்மகட் காணு வண்ணந் தாய்வந்து புகலக் கேட்டுத்
தெம்முனைக் குறவர் செம்ம றெருமந்து செயிரதுப் பொங்கி
நம்மனைக் காவ னீங்கி நன்னுதற பேதை தன்னை
யிம்மெனக் கொண்டு போந்தான் யாவனோ வொருவ னென்றான். (௧௭௨)

மற்றிவை புகன்று தாதை வாட்படை மருங்கிற கட்டிக்
கொற்றவில் வாளி யேந்திக குமரியைக் கவர்ந்த கள்வ
னுறறிடு நெறியை நாட வொல்லையிற் போவ னென்னாச்
செற்றமொ டெழுந்து செல்லச் சிறுகுடி யெயினர் தேர்ந்தார். (௧௭௩)

எள்ளுதற் கரிய சீறா ரிடைதனில் யாமத் தேகி
வளளியைக் கவர்ந்து கொண்டு மாயையநுன் மீண்டு போன
கள்வனைத் தொடர்து மென்றே கானவர் பலருங் கூடிப்
பொள்ளெனச் சிலைகோல் பற்றிப் போர்த்தொழிற் கமைந்து போனார். ()

வேடுவர் யாரு மீண்டி விரைந்துபோய் வேந்த னோடு
கூடின ரிரலை தனைக் குறித்தனர் நெறிக ேடாறு
மோடினர் பொதும்ப ரெல்லா முலாவினர் புலங்கள் புக்கு
நாடினர் சுவடு நோக்கி நடந்தன ரிடங்க ளெங்கும். (௧௭௫)

ஈங்கன மறவ ரோடு மிறையவன் றேடிச் செல்லப
பாங்கரி லொருதண் காவிற் பட்டிமை நெறியா னுற்று
ளாங்கனந் தெரியா வஞ்சி யாறுமா முகத்து வள்ளல
பூங்கழ லடியில் வீழ்ந்து பொருமியே புகல லுற்றாள். (௧௭௬)

கோலொடு சிலையும் வாளுங் குந்தமு மழுவும் பிண்டி
பாலமும் பற்றி வேடர் பலருமாய்த் துருவிச் சென்று
சோலையின் மருங்கு வந்தார் துணுக்கமுற் றுளதென் சிந்தை
மேலினிச் செய்வ தென்கொ லறிகிலேன் விளம்பா யென்றாள் (௧௭௭)

வருந்தலை வாழி நல்லாய் மால்வரை யோடு சூர
னுரந்தனை முன்பு கீண்ட வுடம்பிடி யிருந்த நம்மோர்
விரைந்தமர் புரியச் சூழின் வீட்டுது மதனை நோக்கி
யிருந்தரு ணம்பி னென்னு விறைமகட் கெந்தை சொற்றான். (௧௭௮)

குறத்திரு மடந்தை யின்ன கூற்றினை வினவிச் செவ்வேள்
புறத்தினில் வருத லோடும் பொளபொளெனக் குறுகி யந்தத
திறத்தினை யுற்று நோக்கிச் சீறிவெய் துயிர்த்துப் பொங்கி
மறதொழி லெயினர் காவை மருங்குற வளைந்து கொண்டார். (௧௭௯)

தாதையங் கதனைக் கண்டு தண்டலை குறுகி நந்தம்
பேதையைக் கவர்ந்த கள்வன் பெயர்கில னெமது வன்மை
யேதையு மதியா னம்மா விவன்விற லெரிபாய்க் துண்ணு
மூதையங் கான மென்ன முடிக்குது மொல்லை யென்றான். (௧௮0)

குறவர்கண் முதல்வன் றானுங் கொடுந்தொழி லெயினர் யாரு
மறிகட லென்ன வார்த்து வார்சிலை முழுதும் வாங்கி
யெறிசுடர்ப பரிதித் தேவை யெழிலிகண் மறைத்தா லென்ன
முறைமுறை யமபு வீசி முருகனை வளைந்து கொண்டார் (௧௮௧)

ஒட்டல ராகிச் சூழ்ந்தாங் குடன்றுபோர் புரிந்து வெய்யோர
விட்டவெம் பகழி யெல்லா மென்மலர் நீர வாகிக்
கட்டழ குடைய செவ்வேற் கருணையங் கடலின் மீது
பட்டன பட்ட லோடும் பைந்தொடி பதைத்துச் சொல்வாள் (௧௮௨)

நெட்டிலை வாளி தன்னை ஞெரேலென நும்மோர செல்லத
தொட்டிடு கையர் தம்மைச சுடருடை நெடுவே லேவி
யட்டிடல் வேண்டுஞ் சீய மடுதொழில் குறியா தெனனிற
கிட்டுமே மரையு மானுங் கேழலும வேழந் தானும் (௧௮௩)

என்றிவை குமரி செபப வெம்பிரா னருளாற பாங்கா
நின்றதோர் கொடிமாண் சேவ லிமிழ்ந்தெழுந் தார்ப்புக கொள்ளக்
குன்றவர் முதல்வன் றானுங் குமரருந் தமரும் யாரும்
பொன்றின ராகி மாண்டு பொள்ளெனப புவியில் வீழ்ந்தார் (௧௮௪)

தந்தையு முன்னை யோருந் தமரும்வீழ்ந் திறந்த தன்மை
பைந்தொடி வள்ளி நோக்கிப பதைபதைத் திரங்கிச சோரக்
கந்தனத துணைவி யன்பு காணுவான் கடிகா நீங்கிச்
சிந்தையி லருளோ டேக வனையளுந் தொடர்ந்து சென்றாள். (௧௮௫)

செல்லநா ரதப்பேர் பெற்ற சீர்கெழு முனிநேர் வந்து
வல்லியோ டிறைவன் றன்னை வணங்கிநின் செய்கை யெல்லாஞ்
சொல்லுதி யென்ன வன்னோன் றோகையைக் காண்ட றொட்டு
மல்லல்வேட் டுவரை யட்டு வந்திடு மளவுஞ் சொற்றான். (௧௮௬)

பெற்றிடு தந்தை தன்னைப் பிறவுள சுற்றத் தோரைச்
செற்றமொ டட்டு நீக்கிச் சிறந்தநல் லருள்செ யாமற்
பொற்றொடி தன்னைக் கொண்டு போந்திடத் தருமோ வென்று
மற்றிவை முனிவன் கூற வள்ளலு மஃதா மென்றான். (கஅஎ)

விழுப்பமு துளதண் காவில் விசாகன்மீண் டருளித் தன்பால்
முழுப்பரி வுடைய நங்கை முகத்தினை நோக்கி நம்மேற்
பழிப்படு வெம்போ ராற்றிப் பட்டநுங் கிளையை யெல்லா
மெழுப்புதி யென்ன லோடு மினிதென விறைஞ்சிச் சொல்வாள். (கஅஅ)

விழுமிய வுயிர்கள் சிந்தி வீழ்ந்தநங் கேளிர் யாரு
மெழுதிரென் றருள லோடு மிருநிலத் துறங்கு கின்றோர்
பழையநல் லுணர்வு தோன்றப் பதைபதைத் தெழுதற் கொப்பக்
குழுவுறு தமர்க ளோடுங் குறவர்கோ னெழுந்தா னன்றே. (கஅகூ)

எழுந்திடு கின்ற காலை யெம்பிரான் கருணை வெள்ளம்
பொழிந்திடு வதன மாறும் புயங்கள்பன் னிரண்டும் வேலு
மொழிந்திடு படையு மாகி யுருவினை யவர்க்குக் காட்ட
விழுந்தனர் பணிந்து போற்றி விம்மித ராகிச் சொல்வார். (ககூ0)

அடுந்திற லெயினர் சேரி யளித்திடு நீயே யெங்கண்
மடந்தையைக் கரவில் வௌவி வரம்பினை யழித்துத் தீரா
நெடுந்தனிப் பழிய தொன்று நிறுவினை புதல்வர் கொள்ள
விடந்தனை யன்னை யூட்டின் விலக்கிடு கின்றா ருண்டோ. (ககூக)

ஆங்கது நிற்க வெங்க ளரிவையை நசையால் வௌவி
நாங்களு முணரா வண்ண நம்பெருங் காவ னீங்கி
யீங்கிவட் கொணர்ந்தா யெந்தா யின்னினிச் சீறூர்க் கேகித்
தீங்கனல் சான்றா வேட்டுச் செல்லுதி தின்னூர்க் கென்றார். (ககூ௨)

மாதுலன் முதலோர் சொற்ற மணமொழிக் கிசைவு கொண்டு
மேதகு கருணை செய்து மெல்லிய றனையுங் கொண்டு
கோதிலா முனிவ னோடுங் குளிர்மலர்க் காவு நீங்கிப்
பாதபங் கயங்க ளேவப பருப்பதச் சீறூர் புக்கான். (ககூ௩)

தந்தையுஞ் சுற்றத் தோருஞ் சண்முகன் பாங்க ரேகிச்
சிந்தையின் மகிழ்ச்சி யோடு சிறுகுடி யோரை நோக்கிக்
கந்தனே நமது மாதைக் கவர்ந்தன னமது சொல்லால்
வந்தனன் மணமுஞ் செய்ய மற்றிது திகழ்ச்சி யென்றார். (ககூ௪)

சங்கரன் மதலை தானே தையலைக் கவர்ந்தா னென்று
மங்கல வதுவை செய்ய வந்தன னிங்ங னென்றுந்
தங்கள்சுற் றததோர் கூறச் சிறுகுடி தன்னி லுற்றோர்
பொங்குவெஞ் சினமு நாணு மகிழ்ச்சியும் பொடிப்ப நின்றார். (ககூ௫)

குன்றவர் தமது செம்மல் குறிச்சியிற் றலைமைத் தான
தன்றிரு மனையி னூடே சரவண முதல்வன் றன்னை
மன்றலங் குழலி யோடு மரபுளி யுய்த்து வேங்கைப்
பொன்றிக ழுதளின் மீது பொலிவுற விருத்தி னானே. (ககூ௬)

அன்னதோர் வேலை தன்னி லறுமுக முடைய வள்ள
றன்னுழை யிருந்த நங்கை தனையரு ளோடு நோக்கக்
கொன்னவில் குறவர் மாதர் குயிற்றிய கோல நீங்கி
முன்னுறு தெய்வக் கோல முழுதொருங் குற்ற தன்றே. (கசஎ)

கவலைதீர் தந்தை தானுங் கணிப்பிலாச் சுற்றத் தாருஞ்
செவிலியு மனனை தானு மிருளையுந் தெரிவை மாருந்
தவலருங் கற்பின் மிக்க தம்மகள் கோல நோக்கி
யிவளெம திடத்தில் வந்த தெம்பெருந் தவமே யென்றார். (கசஅ)

அந்தநல் வேலை தன்னி லன்புடைக் குறவர் கோமான்
கந்தவேள் பாணி தன்னிற் கன்னிகை கரத்தை நல்கி
நந்தவ மாகி வந்த நங்கையை நயப்பா லின்று
தந்தனன் கொள்க வென்று தண்புனற் றாரை யுய்த்தான். (கசகூ)

நற்றவ மியற்றுந் தொல்சீர் நாரத னனைய காலைக்
கொற்றம துடைய வேலோன் குறிப்பினா லங்கி யோடு
மற்றுள கலனுந் தந்து வதுவையின் சடங்கு நாடி
யற்றம தடையா வண்ண மருமறை விதியாற் செய்தான். (உ00)

ஆவதோர் காலை தன்னி லரியுநான் முகனும் வானோர்
கோவொடு பிறருஞ் சூழக் குலவரை மடந்தை யோடுந்
தேவாக டேவன் வந்து சேண்மிசை நின்று செவ்வேள்
பாவையை வதுவை செய்யும் பரிசினை முழுதுங் கண்டான். (உ0க)

கண்ணுத லொருவன் றானுங் கவுரியுங் கண்ணுற் கண்டு
தண்ணளி புரிந்து நிற்பத் தண்டுழாய் முடியோ னாதிப
பண்ணவ ருவகை நீடிப் பனிமலர் மாரி வீசி
யண்ணலை வழிபட் டேத்தி யஞ்சலி புரிந்திட் டார்த்தார். (உ0உ)

அறுமுக முடைய வள்ள லன்னது நோக்கிச் சீறா
ரிறையது முணரா வண்ண மிமையமே லணங்கி னோடுங்
கறையமர் கண்டன் றன்னைக் கைதொழு தேனை யோர்க்கு
முறைமுறை யுவகை யோடு முழுதருள் புரிந்தா னன்றே. (உ0ங)

வேறு.

அங்க வேலையி னலரின் மேலவன்
செங்கண் மாயவன் றேவர் கோமகன்
சங்கை தீர்தருந் தவத்தர் தம்மொடு
மங்கை பாதியன் மறைந்து போயினான். (உ0ச)

போன வெல்லையிற் பொருவி னாரதன்
றானி யற்றிய சடங்கு முற்றலுங்
கான வேடுவர் கன்னி தன்னொடு
மான வேலனை வணங்கிப் போற்றினான். (உ0ரு)

வேறு.

மற்றது காலை தன்னின் மாதுலன் வள்ளி தன்னைக்
கொற்றவே லுடைய நம்பி வதுவைசெய் கோல நோக்கி
யுற்றவிவ் விழிக டம்மா லுறுபய னொருங்கே யின்று
பெற்றென னென்றா னன்னா னுவகையார் பேசற் பாலார். (உ0சு)

மெல்லிடை கொம்பென் றன்ன விரைமலர் தலைமேற் கொண்ட
புலலிய குறவர் மாதர் பொருவில்சீர் மருகன் றானும்
வல்லியு மின்னே போல வைகலும் வாழ்க வென்று
சொல்லிய லாசி கூறித் தூமல ரறுகு தூர்த்தார். (௨௦௭)

செந்தினை யிடியுந் தேனுந் தீம்பல கனியுங் காயுங்
கந்தமும் பிறவு மாக விலைபொலி கலத்தி லிட்டுப்
பைந்தொடி யனங்கு நீயும பரிவுட னுகர்தி ரென்ன
வெந்திற லெயினர் கூற வியனருள் புரிந்தான் மேலோன். (௨௦௮)

வேறு.

கிராதர் மங்கையும் பராபரன் மதலையுங் கெழுமி
விராவு சில்லுணா மிசைந்தனர் மிசைந்திடு தன்மை
முராரி யாதியாந் தேவர்பான் முனிவர்பான் மற்றைச்
சராச ரங்கள்பா லெங்கணுஞ் சார்ந்துள தன்றே. (௨௦௯)

அனைய காலையி லறுமுக னெழுந்தவின் றங்கே
குனியும் வில்லுடைக் குறவர்தங் குரிசிலை நோக்கி
வனிதை தன்னுடன் சென்றியாஞ் செருத்தணி வரையி
லினிது வைகுது மென்றலு நன்றென விசைத்தான். (௨௧௦)

தாயும் பாங்கியுஞ் செவிலியுந் தையலை நோக்கி
நாயகன் பின்னர் நடததியோ நன்றெனப் புல்லி
நேயமோடுபல் லாசிகள் புகன்றிட நெடுவேற்
சேயு டன்கடி தேகவே சிந்தையுட் கொண்டாள். (௨௧௧)

பாவை தன்னுடன் பன்னிரு புயமுடைப் பகவன்
கோவி னீங்கியே குறவர்தங் குரிசிலை விளிததுத்
தேவ ருந்தொழச் சிறுகுடி யரசியல் செலுத்தி
மேவு கென்றவ ணிறுவியே போயினன் விரைவில். (௨௧௨)

இன்ன தன்மைசேர் வள்ளியஞ் சிலம்பினை யிகந்து
பன்னி ரண்டுமொய்ம் புடையவன் பாவையுந் தானு
மின்னும் வெஞ்சுடர்ப் பரிதியும் போலவிண் படர்ந்து
தன்னை யேநிகர் தணிகைமால் வரையினைச் சார்ந்தான். (௨௧௩)

செச்சை யெளவியான் செருத்தணி வரைமிசைத் தெய்வத்
தச்சன் முன்னரே யியற்றிய தனிநகர் புகுந்து
பச்சி ளங்கொங்கை வனசரர் பாவையோ டொன்றி
யிச்ச கத்துயிர் யாவையு முய்யவீற் றிருந்தான். (௨௧௪)

அந்த வேலையில் வள்ளிநா யகியயில் வேற்கைக்
கந்த வேள்பதம் வணங்கியே கைதொழு தைய
விந்த மால்வரை யியற்கையை யியம்புதி யென்னச்
சிந்தை நீடுபே ரருளினு லின்னன செப்பும். (௨௧௫)

செங்கண் வெய்யசூர்ச் செருத்தொழி லினுஞ்சிலை வேட்டர்
தங்க ளிற்செயுஞ் செருத்தொழி லினுந்தணிந் திட்டே
யிங்கு வந்தியா மிருத்தலாற் செருத்தணி யென்றோர்
மங்க லந்தரு பெயரினைப் பெற்றதிவ் வரையே. (௨௧௬)

முல்லை வாணகை யுமையவண் முலைவளை யதனுன்
மல்லன் மாகிழ லிறைவரை வடிப்படுத் தமரு
மெல்லை நீர்வயற் காஞ்சியி னனுகனின் றிடலாற்
சொல்ல லாந்தகைத் தன்றிந்த மால்வரைத் தூய்மை. (௨௧௭)

விரையி டங்கொளும் போதினுண் மிக்கபங் கயம்போற்
றிரையி டங்கொளு நதிகளிற் சிறந்தகங் கையைப்போற்
றரையி டங்கொளும் பதிகளிற் காஞ்சியந் தலம்போல்
வரையி டங்களிற் சிறந்ததித் தணிகைமால் வரையே. (௨௧௮)

கோடி யம்பியும் வேய்ங்குழ லூதியுங் குரலா
னீடு தந்திரி யியக்கியு மேழிசை நிறுத்துப்
பாடி யுஞ்சிறு பல்லியத் தின்னிசை படுத்து
மாடு தும்பிவளை யாடுது மிவ்வரை யதன்கண். (௨௧௯)

மந்த ரத்தினு மேருமால் வரையினு மணிதோய்
கந்த ரத்தவன் கயிலையே காதலித் ததுபோற்
சுந்த ரக்கிரி தொல்புவி தனிற்பல வெனினு
மிந்த வெற்பினி லாற்றவு மகிழ்ச்சியுண் டெமக்கே. (௨௨0)

வான்றி கழ்ந்திடு மிருங்கில வரைபல வவற்று
ளான்ற காதலா லிங்ஙன மேவுது மதற்குச்
சான்று வாசவன் வைகலுஞ் சாத்துதற் பொருட்டான்
மூன்று காவியிச் சுனைதனி லெமக்குமுன் வைத்தான். (௨௨௧)

காலைப் போதினி லொருமலர் கதிர்முதி ருச்சி
வேலைப் போதினி லொருமலர் விண்ணெலா மிருள்சூழ்
மாலைப் போதினி லொருமல ராகவிவ் வரைமே
னீலப் போதுமூன் றொழிவின்றி நிற்றலு மலரும். (௨௨௨)

ஆழி நீரா சுலகெலா முண்ணினு மளிபபோ
லூழி பேரினு மொருபகற் குற்பல மூன்றாய்த்
தாழி ருஞ்சுனை தன்னிடை மலர்ந்திடுந் தவிரா
மாழை யொண்கணு யிவ்வரைப் பெருமையார் வகுப்பார். (௨௨௩)

இந்த வெற்பினைத் தொழுதுளார் பவமெலா மேருஞ்
சிந்தை யன்புட னிவ்வரை யின்கணே சென்று
முந்த நின்றவிச் சுனைதனில் விதிமுறை மூழ்கி
வந்து நந்தமைத் தொழுதுளார் நம்பதம வாழ்வார். (௨௨௪)

அஞ்சு வைகலிவ் வகன்கிரி நண்ணியெம் மடிக
டஞ்ச மென்றுளத் துன்னியே வழிபடுந் தவத்தோர்
நெஞ்ச கந்தனில் வெஃகிய போகங்க ணிரப்பி
யெஞ்ச லில்லதோர் வீடுபே றடைந்தினி திருப்பார். (௨௨௫)

தேவ ராயினு முனிவர ராயினுஞ் சிறந்தோ
ரேவ ராயினும் பிறந்தபி னிவ்வரை தொழாதார்
தாவ ராதிக டம்மினுங் கடையரே தமது
பாவ ராசிக ளகலுமோ பார்வலஞ் செயினும். (௨௨௬)

பாத கம்பல செய்தவ ராயினும் பவங்க
ளேதும் வைகலும் புரிபவ ராயினு மெம்பா
லாத ரங்கொடு தணிகைவெற் படைவரே லவரே
வேதன் மாலினும் விழுமிய ரெவற்றினு மிக்கார். (உஉஎ)

வேறு.

உற்பல வரையின் வாழ்வோ ரோரொரு தருமஞ் செய்யிற்
பற்பல வாகி யோங்கும் பவங்களிற் பலசெய் தாலுஞ்
சிற்பம தாகி யொன்றாய்த் தேய்ந்திடு மிதுவே யன்றி
யற்புத மாக விங்ங னநந்தகோ டிகளுண் டன்றே. (உஉஅ)

என்றிவை குமரன் கூற வெயினர்தம் பாவை கேளா
நன்றென வுவகை யெய்தி நானில வரைப்பி னுள்ள
குன்றுடைச் சிறந்த விந்தத் தணிகைமால் வரையின் கொள்கை
யுன்றிரு வருளாற் றேர்ந்தே யுய்ந்தனன் றமிய னென்றாள். (உஉக)

இவ்வரை பொருசார் தன்னி லிராறுதோ ளுடைய வெந்தை
மைவிழி யணங்குந் தானு மாலய னுணரா வள்ள
லவ்வகை யுருவி லொன்றை யாகம விதியா லுய்த்து
மெய்வழி பாடு செய்து வேண்டியாங் கருளும் பெற்றான். (உ௩0)

கருத்திடை மகிழ்வு மன்புங் காதலுங் கடவ முக்க
ணொருத்தனை வழிபட் டேத்தி யொப்பிலா நெடுவே லண்ணன்
மருத்தொடை செறிந்த கூந்தல் வள்ளிநா யகியுந் தானுஞ்
செருத்தணி வரையில் வைகிச் சிலபக லமர்ந்தா னன்றே. (உ௩க)

தள்ளரும் விழைவின் மிக்க தணிகையி னின்று மோர்நாள்
வள்ளியுந் தானு மாக மானமொன் றதனிற் புக்கு
வெள்ளியங் கிரியின் பாங்கர் மேவிய கந்த வெற்பி
லொள்ளிணர்க் கடப்பந் தாரோ னுலகெலாம் வணங்கப் போனான். ()

கந்தவெற் பதனிற் சென்று கடிகெழு மான நீங்கி
யந்தமில் பூதர் போற்று மம்பொனா லயத்தி னேகி
யிந்திரன் மகடூ வாகு மேந்திழை யினிது வாழு
மந்திர மதனிற் புக்கான் வள்ளியுந் தானும் வள்ளல். (உ௩௩)

ஆரணந் தெரித றேற்றா வறுமுகன் வரவு நோக்கி
வாரணை மடந்தை யெதிர்ந்து வந்தனை புரிய வன்னாள்
பூரண முலையு மார்பும் பொருந்துமா றெடுத்துப் புல்லித்
தாரணி நன்னிற் றீர்ந்த தனிமையின் றுயரந் தீர்த்தான். (உ௩ச)

ஆங்கது காலை வள்ளி யமரர்கோ னளித்த பாவை
பூங்கழல் வணக்கஞ் செய்யப் பொருக்கென வெடுத்துப் புல்லி
யீங்கொரு தமிய ளாகி யிருந்திடு வேனுக் கின்றோர்
பராங்கிவர் துற்ற வாறு நன்றெனப் பரிவு கூர்ந்தாள். (உ௩ரு)

சூர்க்கடல் பருகும் வேலோன் றுணைவிய ரிருவ ரோடும்
போர்க்கடல் கொண்ட சேயப் பொலன்மணி யணைமேற் சேர்ந்தான்
பாற்கட லமளி தன்னிற் பாவையர் புறத்து வைகக்
கார்க்கடற் பவள வண்ணன் கருணையோ டமரு மாபோல். (உ௩௬)

செங்கனல் வடவை போலத் திரைக்கடல் பருகும் வேலோன்
மங்கைய ரிருவ ரோடு மடங்கலம் பீட மீதி
லங்கினி திருந்த காலை யரமக ளவனை நோக்கி
யிங்கிவள் வரவு தன்னை யியம்புதி யெந்தை யென்றாள். (உகஎ)

வேறு.

கிள்ளை யன்னசொற் கிஞ்சுகச் செய்யவாய்
வள்ளி தன்மையை வாரணத் தின்பிணுப்
பிள்ளை கேட்பப் பெருந்தகை மேலையோ
னுள்ள மாமகிழ் வாலிவை யோதுவான். (உகஅ)

நீண்ட கோலத்து நேமியஞ் செல்வர்பா
லீண்டை நீவி ரிருவருந் தோன்றினீ
ராண்டு பன்னிரண் டாமளை வெம்புயம்
வேண்டி நின்று விழுத்தவ மாற்றினீர். (உகக)

நோற்று நின்றிடு நுங்களை யெய்தியா
மாற்ற வும்மகிழ்ந் தன்பொடு சேருதும்
வீற்று வீற்று விசும்பினும் பாரினுந்
தோற்று வீரென்று சொற்றனந் தொல்லையில். (உசO)

சொன்ன தோர்முறை தூக்கி யிருவருண்
முன்ன மேவிய நீமுகி லூர்தரு
மன்னன் மாமக ளாகி வளர்ந்தனை
யன்ன போதனை யன்பொடு வேட்டனம். (உசக)

பிளவு கொண்ட பிறைநுதற் பேதைநின்
னிளைய ளாய்வரு மிங்கிவள் யாம்பகர்
விளைவு நாடி வியன்றமன் மூழ்கியே
வளவி தார்தொல் வடிவினை நீக்கினாள். (உசஉ)

பொள்ளெ னத்தன் புறவுடல் பொன்றலு
முள்ளி னுற்ற வுருவத நுடனெழீஇ
வள்ளி வெற்பின் மரபயில் சூழல்போய்த்
தெள்ளி திற்றவஞ் செய்திருந் தாளரோ. (உசங)

அன்ன சார லதனிற் சிவமுனி
யென்னு மாதவ னெலலையில் காலமாய்
மன்னி நோற்புழி மாயத்தி னீரதாய்ப்
பொன்னின் மானென்று போந்துல வுற்றதே. (உசச)

வந்து லாவு மறிதனை மாதவ
புந்தி மாலொடு பொள்ளென நோக்கலு
மந்த வேலை யதுகருப் பங்கொள
விந்த மாதக் கருவினு ளெய்தினாள். (உசரு)

வேறு.

மானிவ டன்னை வயிற்றிடை தாங்கி
யானதொர் வள்ளி யகழ்ந்த பயம்பிற்
றானருள் செய்து தணந்திட வங்கட்
கானவன் மாதொடு கண்டன னன்றே. (உசசு)

அவ்விரு வோர்களு மாங்கிவ டன்னைக்
கைவகை யிற்கொடு காதலொ டேகி
யெவ்வமில் வள்ளி யெனப்பெயர் நல்கிச்
செவ்விது போற்றினர் சீர்மக ளாக. (உ௪௭)

திருந்திய கானவர் சீர்மக ளாகி
யிருந்திடு மெல்லையில் யாமிவள் பாற்போய்ப்
பொருந்தியும் வேட்கை புகன்று மகன்றும்
வருந்தியும் வாழ்த்தியு மாயைகள் செய்தேம். (உ௪அ)

அந்தமின் மாயைக ளாற்றி யதற்பின்
முந்தை யுணர்ச்சியை முற்றுற நல்கித்
தந்தை யுடன்றமர் தந்திட னென்ன
விந்த மடந்தையை யாமணஞ் செய்தேம். (உ௪௯)

அவ்விடை மாமண மாற்றி யகன்றே
யிவ்விவ டன்னுட னிம்மென வேகித்
தெய்வ வரைக்கணொர் சில்பகல் வைகி
மைவிழி யாயிவண் வந்தன மென்றான். (உ௫௦)

என்றிவை வள்ளி யியற்கை யனைத்தும்
வென்றிடு வேற்படை வீர னியம்ப
வன்றிறல் வாரண மங்கை வினவி
நன்றென வொன்று நவின்றிடு கின்றாள். (உ௫௧)

வேறு.

தொல்லையின் முராரி தன்பாற் றோன்றிய விவளும் யானு
மெல்லையில் கால நீங்கி யிருந்தன மிருந்திட் டேமை
யொல்லையி லிங்ஙன் கூட்டி யுடனுறு வித்த வுன்றன்
வல்லபந் தனக்கி யாஞ்செய் மாறுமற் றில்லை யென்றாள். (உ௫௨)

மேதகு மெயினர் பாவை விண்ணுல குடைய நங்கை
யோதுசொல் வினவி மேனா ளுனக்கியான் றங்கை யாகு
மீதொரு தன்மை யன்றி யிமமையு மிளைய ளானே
னாதலி னுய்ந்தே னின்னை யடைந்தன னளித்தி யென்றாள். (உ௫௩)

வன்றிறற் குறவர் பாவை மற்றிது புகன்று தெய்வை
தன்றிருப் பதங்க டம்மைத் தாழ்தலு மெடுத்துப் புல்லி
யின்றுனைத் துணையாப் பெற்றே னெம்பிரா னருளும் பெற்றே
னென்றெனக் கரிய துண்டோ வுளந்தனிற் சிறந்த தென்றாள், (உ௫௪)

இந்திர னருளு மாது மெயினர்தம் மாது மிவ்வா
றந்தரஞ் சிறிது மின்றி யன்புட னளவ ளாவிச்
சிந்தையு முயிருஞ் செய்யுஞ் செயற்கையுஞ் சிறப்பு மொன்றாக
கந்தமு மலரும் போலக் கலந்துவே றின்றி யுற்றார். (உ௫௫)

இங்கவ ரிருவர் தாமு மியாக்கையு முயிரும் போலத்
தங்களில் வேறின் றாகிச் சரவணத் தடத்தில் வந்த
புங்கவன் றன்னைச் சேர்ந்து போற்றியே யொழுக லுற்றார்
கங்கையும் யமுனை தானுங் கனைகட லுடன்சேர்ந் தென்ன. (உ௫௬)

கற்றையங் கதிர்வெண் டிங்க ளிருந்துழிக் கனலிப் புத்தே
ளுற்றிடு தன்மைத் தென்ன வும்பர்கோ னுதவு மானு
மற்றையில் வேடர் மானும் வழிபடல் புரிந்து போற்ற
வெற்றியந் தனிவே லண்ணல் வீற்றிருந் தருளி னானே. (௨௫௭)

கல்லகங் குடைந்த செவ்வேற் கந்தனோர் தருவ தாகி
வல்லியர் கிரியை ஞான வல்லியின் கிளையாய்ச் சூழப்
பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறி காய்த்திட் டன்ப
ரெல்லவர் தமக்கு முத்தி யிருங்கனி யுதவு மென்றும். (௨௫௮)

பெண்ணொரு பாகங் கொண்ட பிஞ்ஞகன் வதன மொன்றிற்
கண்ணொரு மூன்று வைகுங் காட்சிபோ லெயினர் மாதும்
விண்ணுல குடைய மாதும் வியன்புடை தன்னின் மேவ
வண்ணலங் குமர னன்னார்க் கருள்புரிந் திருந்தா னங்கண். (௨௫௯)

சேவலுங் கொடிமான் றேருஞ் சிறைமணி மயிலுந் தொன்னாள்
மேவருந் தகரும் வேலும் வேறுள படைகள் யாவு
மூவிரு முகத்து வள்ளன் மொழிந்திடு பணிக ளாற்றிக்
கோவிலின் மருங்கு முன்னுங் குறுகிவீற் றிருந்த மன்னோ. (௨௬0)

ஆறிரு தடந்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வே
ளேறிய மஞ்ஞை வாழ்க யானைதன் னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ ரடியா ரெல்லாம். (௨௬௧)

புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலா
நன்னெறி யொழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
யென்னையு மடிய னாக்கி யிருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள் போற்றி. (௨௬௨)

வேறு.

வேல்சேர்ந்த செங்கைக் குமரன்வியன் காதை தன்னை
மால்சேர்ந் துரைத்தேன் றமிழ்ப்பாவழு வுற்றதேனு
நூல்சேர்ந்த சான்றீர் குணமேன்மை நுவன்றுகொண்மின்
பால்சேர்ந் ததனுற் புனலும்பய னாவதன்றே. (௨௬௩)

பொய்யற்ற கீரன் முதலாம்புல வோர்புகழ்ந்த
வையற்கெனது சிறுசொல்லு மொப்பாகு மிப்பார்
செயுற்ற வன்மாலுமை பூசைகொ டேவதேவன்
வையத் தவர்செய் வழிபாடு மகிழுமன்றே. (௨௬௪)

என்னாயகன் விண்ணவர் நாயகன் யானைநாம
மின்னாயக னன்மறை நாயகன் வேடர்நங்கை
தன்னாயகன் வேற்றனி நாயகன் றன்புராண
நன்னாயக மாமெனக் கொள்கவிந் ஞாலமெல்லாம். (௨௬௫)

வற்றா வருள்சேர் குமரேசன்வண் காதைதன்னைச்
சொற்றாரு மாராய்ந் திடுவாருந் துகளறாமே
கற்றாருங் கற்பான் முயல்வாருங் கசிந்துகேட்க
வுற்றாரும் வீடு நெறிபபாலி னுறுவரன்றே. (௨௬௬)

பாராகி யேனைப் பொருளாயுயிர்ப் பன்மையாகிப்
பேரா வுயிர்கட் குயிராய்ப்பிற வற்றுமாகி
நேராகித் தோன்ற லிலதாகிநின் றூன்கழற்கே
யாராத காத லொடுபோற்றி யடைதுமன்றே. (௨௯௭)

ஆ. திருவிருத்தம் ௨,௦௯௭.

---

வசனம்.

சூதபுராணிகர் மற்றைச்சரித்திரங்களையுஞ் சொல்லலாயினர். எப்படியெனின், ஓ சவுநகாதிரிஷிகளே! முற்குறித்த வெள்ளிமலையி னொருபக்கத்திலுள்ள கந்தமாதநபர்வதத்தில் தெய்வயானையாருடன்கூடி இன்புற்றிருக்கிற குமரநாயகன், இந்த மண்ணுலகில் வேடர் வளர்க்க வளர்கின்ற வள்ளியம்மையை மணந்து உபயநாச்சிமாருடனே கூடிக் குலாவியிருந்த சரிதத்தையுஞ் சொல்லுகிறேன், கேட்பீராக.

இந்தப் பூமண்டலத்துக்கு அலங்காரபூதமாயும், நீர்வளமுதலிய எல்லாவளங்களும் நிறைந்துளதாயும், சிவாலய விஷ்ணுவாலயாதிகளாற் பொலிவுற்றதாயும் விளங்குகிற தொண்டைநாட்டில், மேற்பாடியென்றொரு வளம்பதியுண்டு, அதற்கருகில் வானத்தைத்தீண்டுவதோர் வளமலையுண்டு, இதனை வள்ளிமலையென்றும் சொல்வார்கள். இந்த மலைக்கருகில் வேடர்கள் மிருதியாய் வாசஞ்செய்யும் ஒரு சிற்றூருண்டு, அது சண்முகப்பெருமான் பிற்காலத்தில் தன்னிடத்தில்வந்து அளவற்ற திருவிளையாடல்கள்செய்ய விருப்புற்றுப் பொன்னகரமானது அருந்தவஞ்செய்து இறங்கிவந்திருப்பதைநிகர்த்த ஒருகுறையுமில்லாமல் விளங்கிக்கொண்டிருக்கும். அங்குள்ள வேடரெல்லாருக்கும் அரசனும் நம்பி என்னும் பெயருடையவன் ஒருவனுண்டு, அவன் தன்மனைவியோடு முருகக்கடவுளைக்குறித்துச் செய்துவந்த விரதபலத்தினுல் சிலபிள்ளைகளைப்பெற்றுப் புதல்வியில்லாமையால் அந்தப் பாக்கியத்தையும்பெற்றுக் களிக்கவிரும்பித் தங்கள் குலதேவதையாயிருக்கிற முருகக்கடவுளுக்குப் பூசைமுதலிய வழிப்பாடுகள் செய்துவருங்காலத்தில்,

மேற்குறித்த அந்த வள்ளிமலைச்சாரலில் தழைத்தோங்கியிருக்கிற ஒருசோலையில் சிவமுனியென்னும் பெயருள்ள ஒரு தவசிரேஷ்டர் பஞ்சேந்திரியங்களையடக்கிச் சிவபெருமானைக்குறித்து அருந்தவஞ்செய்துவந்தார். அப்படிவரும்போது ஒருநாள் அதிரசவுந்தரியமுள்ள வொரு பெண்மானனது அம்முனிவரது தவச்சாலைக்கெதிரில்வந்து புல்மேய்ந்துகொண்டிருக்க, அதைக்கண்ட முனிவர் அதனிடத்தில் அதிகமையலகொண்டு ஐம்புல வின்பநுகர்ச்சியி லொன்றாகிய காட்சிப்புல வின்பநுகர்ந்து, நீராடிப் பழையபடியே தந்தவத்திலிருந்தார். அச்சோலையினோர்புறத்தில் ஸ்ரீமகாவிஷ்ணுபெற்ற கன்னிகையாகித் தவஞ்செய்துகொண்டிருந்தவள், இதுதான்சமயம், நாம் குமாரக்கடவுளை மணம்புணர்தற்குரிய காலம் நேர்ந்ததென்று அந்தப் பெண்மான்வயிற்றிற் பிரவேசித்திருந்தாள். பிறகு அந்த மானனது கருப்பமுதிர்ந்து தள்ளாடித் திரிந்துகொண்டிருந்து ஒருநாள் பிரசவவேதனை யதிகரித்தது, வேடப்பெண்கள் வள்ளிக்கிழங்கைக கல்லியெடுத்த குழிகளினொன்றில வள்ளிநாயகியாரை யீன்றது. சற்றுநேரத்தில் அந்த மானனது பிரசவவேதனைநீங்கித் தெளிந்து, குழந்தையைப்பார்த்து இது நமமினமன்றென்று பயந்தோடிப்போயிற்று.

இப்படி தாயாகிய மான் தனியேவிட்டு நீங்கினபோது வள்ளிநாயகியானவள் பசியினால்வருந்தி கீகாவென் றழத்தொடங்கினள். அந்தச்சமயத்தில் வேடராஜன் தினைப்புனத்தைப் பார்த்துப்போகவெண்ணி அவ்விடத்திற்குவந்து இக்குழந்தையின் இனிய அழுகுரலைக்கேட்டு ஓடோடிவந்து வள்ளிக்குழியிலிருந்த குழந்தையையெடுத்துத் தன் மனைவிகையிற்கொடுத்து ஆனந்தக்கடலில் மூழ்கினான். அவள் அந்தக்குழந்தையைக் கையிலேந்தினவுடனே, தானீன்றகுழந்தையைப்போலவே கொங்கைகளிற் பால்சுரக்க அதனைக் குழந்தைக்கு வயிறார வுணபித்து மனமகிழ்ந்தாள். பிறகு வேடராஜனும தன்தேவியுடன் தன் சிற்றூரையடைந்து, குழந்தைகிடைத்த பெருமகிழ்ச்சியால் தமது குலாசாரப்படியே தொண்டகப்பறைமுழக்கி, வனதேவதைகளுக்குரிய பலிமுதலியவற்றைக்கொடுத்தும், சுற்றத்தார்க்கு விருந்திட்டும், இன்னும் பற்பலசிறப்புகள்செய்துங் களித்திருந்தான். அவன்மனைவியும் குழந்தையை நீராட்டி, மையிட்டு, மஞ்சள்பூசி, கஸ்தூரிதிலகமிட்டு, தலைப்பணிமுதலியதிருத்தி, இன்னுஞ் செய்யவேண்டிய அலங்காரங்களைச்செய்து முலையூட்டி, லாலிமுதலியபாட்டுக்கள்பாடிச் சீராட்டி வளர்த்துவருவாளாயினள்.

பிறகு இக்குழந்தை வள்ளிக்குழியிற்கிடைத்தமையால் வள்ளியெனப் பெயரிட்டழைத்தார்கள். அதன்பிறகு வள்ளிநாயகியானவள் பருவக்கிரமமாகச் சப்பாணிகொட்டியும், தவழ்ந்தும், தளர்நடைநடந்தும், சிற்றிலிழைத்தும, சிறுசோறட்டும், அம்மனையாடியும், பலவகையாகிய அற்புதத்திருவிளையாடல்களைச்செய்தும்வருங்காலத்தில், பன்னிரண்டுவயதுநிறைந்து மங்கைப்பருவமடைந்ததைக் கண்டதாய்தந்தையர்கள் களிப்புமிகுந்தவர்களாய்த் தினைப்புனங்காக்கத் தோழிமாரோடு அனுப்பினார்கள். அப்படியே வள்ளிநாயகியும் தினைப்புனங் காவல்செய்யுங்காலத்தில், அவ்விடத்தில் தினையுண்ணவரும் கிளிமுதலியவற்றைக் கவணெறிந்து கடிந்து பரண்மீதிருந்துகொண்டு, தாய்தந்தையர் அனுப்புகிற தேன், தினைமா முதலியவற்றையுண்டு களித்திருந்தாள். இப்படியிருக்குங்காலத்தில் குமாரகடவுள் முற்காலத்தில் அவளுக்கு அநுக்கிரகித்திருந்தபடியே காட்சிதந்தாண்டருளத் திருவுளங்கொண்டு, தெய்வயானையாருடன்கூடிக்குலாவியிருந்த கந்தமாதனவரையைநீங்கித் தனியனாய்வந்து திருத்தணிகைவரையைச் சேர்ந்து காலம்பார்த்திருக்கும்போது, பூவுலமவந்த நாரதமுனிவர் வள்ளிமலைக்கருகில்வந்து தினைப்புனங் காவல்செய்யும் வேடராஜபுத்திரியாகிய வள்ளியம்மையைக்கண்டு, இவளது சவுந்தரியாதிகளை நோக்குமிடத்தில், இவள் எமதிறைவராகிய பாலசுப்பிரமணியருக்குப் பிராணநாயகியாதற்குரியளாய்த் தோற்றுகின்றாள். ஆதலால் இவளழகுமுதலியவற்றைச் சண்முகனுக்குத் தெரிவித்து மணம்புணர்விப்பது எப்போலியாக்கு அழகாகுமென்று விரைந்துபோய்த் திருத்தணிகைவரையையடைந்து, குமாரகடவுளை வணங்கி வள்ளிநாயகியின் சவுந்தரியாதிகளைச்சொல்லி, அவருக்கு அவள்மீது மையலுண்டாகும்படிசெய்தார். அதுகேட்ட பாலசுப்பிரமணியர் காமவெறிபிடித்து, தணிகையைவிட்டு வள்ளிமலையினோர்புறத்துள்ள தினைப்புனங் காவல்செய்யும வள்ளிநாயகியினிடத்தையடைந்து, மானிடவுருக்கொண்டு, அவளது கட்டழகில் ஈடுபட்டு, மதிமயங்கி, பெண்ணரசே! நான் உன்னைக்கண்டமாத்திரத்தில என்மனம் அனலிற்பட்ட மெழுகுபோ லுருகாநின்றது, உன் இதழமுதந்து என்னை யாதரியாவிடின், இன்னும் சற்றுநேரத்தில் என்னுயிர் நீங்கிபோம், அன்போடு கடைக்கணித்து என்னை யாதரிக்கவேண்டுமென்று கெஞ்சிக்கெஞ்சிக் குறையிரந்துநின்றார்.

இப்படிநிற்கும்போது, வழக்கப்படி வள்ளிநாயகிக்கு உணவுகொண்டுவருகிற வேடராஜன் தன் பரிவாரங்களோடு வருவதைக்கண்ட குமரநாயகன், அவர்களுக்குத் தன் உண்மையுருவை மறைத்து ஒரு வேங்கைமரமாகநின்றார். வேடராஜன் வள்ளியம்மைக்கு உணவுகொடுத்துத் திரும்பும்போது, இந்த வேங்கைமரத்தை நோக்கி, இது புதிதாயிருக்கின்றது, இதுவரையில் யாம் வரப்போகவிருக்கிறமார்க்கத்தில் இதைக் கண்டதில்லையென்று அதிசயித்துநிற்கிறபோது, அவனோடுகூட வந்த வேடர்கள் அந்த மரத்தை வெட்டியெறியத் துணிந்தார்கள். வேடராஜன் அவர்களை விலக்கி, தன் புதல்வியைநோக்கி, இந்த மரத்தின் வரலாறு யாதென்று கேட்க, அவளெனக்குத் தெரியாதென்றாள். பிறகு வேடராஜன், அம்மையை நோக்கி, நீ மலர்பறித்து விளையாடுதற்குரிய இம்மரம் இங்கிருப்பது நன்மையே, நீ தினைப்புனத்தைப் பத்திரமாய்க் காத்துக்கொண்டிருவென்று சொல்லிப்போய் விட்டான்.

அவன் போனவுடனே, வேங்கைமரமாயிருந்த குமரநாயகன் முன்போலவே மானிடவுருவங்கொண்டு வள்ளிநாயகிக்கெதிரேவந்துநின்று பலவாறு தன் வேட்கைமிகுந்த வார்த்தைகளைப்பேசி யிரத்தலும், வள்ளிநாயகியார சண்முகனைநோக்கி, நான் இழிகுலமாகிய வேடப்பெண், தேவரீர் மேன்மையாகிய ராஜகுமாரராகக் காணப்படுகிறீர், அப்படியிருக்க, தேவரீர் என்மீது மனமவைத்து இப்படிப்பட்ட தகாதவார்த்தைகளைப்பேசுவது நீதியன்றென்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, வேடராஜன் உணவுகொணடுவருவதைக்கண்டு, மனமபதைத்துக் கைபிசைந்து, குமரநாயகனைநோக்கி, சுவாமீ, என் தந்தைமுதலானோர் வருகின்றனர், அவர்கள் மிகவும் மூர்க்கர், கொலைவல்லர், தேவரீர் இனி யிஙகிருக்கத்தகாதென்றுசொல்ல, குமரநாயகன், பெண்ணே! நீயஞ்சாதே, என்றுசொல்லி, ஒரு கிழப்பருவமுள்ள சைவசந்நியாசிவேடம்பூண்டு, வேடராஜனெதிரேபோய், அவனுக்குத் திருநீறுகொடுக்க, அவன்வாங்கி நெற்றியிலிட்டுக்கொண்டு, சுவாமீ! தேவரீா இங்கெழுந்தருளினகாரணம் யாதென, அதற்கு இவர் சொல்லுகின்றார்.

வேடராஜனே! இந்த வள்ளிமலைக்கண்ணேயுதித்து, உஙகளுக்குக் களிப்பைத் தருகிற குமரியை நானுங்கலந்துகளிக்க விரும்பிவந்தேனென, அபபடியேயாகுகவென்று வேடராஜனுஞ் சம்மதிதது, தன்மகளுக்கு உணவுகொடுத்து, அம்மே! இந்தப் பெரியவர் இவ்விடத்தில் குமரியாடவந்தார், இவர் உனக்குத் துணையாகவுமிருப்பாரென்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். பிறகு, விருத்தர் வள்ளியம்மையைப்பார்த்து, பெண்ணரசே! பசிப்பிணி வருத்துகின்றது, நீர்வேட்கை யதிகரித்திருக்கின்றது, ஆகையால் நீர் மிகுதியா யிருக்குமிடததைக் காட்டவேண்டுமென, வள்ளிநாயகி, அவர் வேண்டுகோளுக்கிரங்கிப் பரண்விட்டிறங்கி அவரையழைத்துப் போய் நீர்நிறைந்த சுனையைக்காட்ட, அதிலுள்ள நீரைத் தனக்கு வேண்டியமட்டும் வாரியுண்டு தாகந்தீர்த்தவன்போல நடித்து, வள்ளிநாயகியைநோக்கிச் சொல்லுவதாயினர்.

பெண்மணியே! நான் கொண்டிருந்த நீர்வேட்கையை நீக்கினதுபோலவே, என் காமவேட்கையையும் நீக்குவையாயின் உனக்குப் பதினாயிரம்நமஸ்காரம்செய்வேனென, அதுகேட்ட வள்ளிநாயகி, கபடசந்நியாசியைநோக்கி, ஐயரே! உம்மை நான் பெரியவரென்று நம்பினேன், நீர் இப்படிப்பட்டவார்த்தைகள் பேசுவது நியாயமல்லவென்றுசொல்லி, விரைந்து தினைப்புனத்தைநோக்கிச்செல்லும்போது முருகர் தமது தமையனாகிய விநாயகமூர்த்தியைக்குறித்துத் தியானித்தவுடனே,

அவர் ஒரு மதயானைவடிவங்கொண்டுவந்து எதிரேநிற்க, வள்ளிநாயகி பயந்து, இவரைக்கிட்டித் தழுவிக்கொண்டு, இந்தச்சமயத்தில், என்னைக் காத்தருளினால், உமது விருப்பத்தின்படியே நடந்துகொள்வேனென்று வேண்டிக்கொண்டாள், அதுகண்ட குமரன் தன் தமையனைநோக்கி, என்விருப்பம் நிறைவேறிவிட்டது, இனி நீர் போகலாமென் றனுப்பி, அங்குள்ள சோலையில் அவளோடு கூடி யின்புற்றான். குறவள்ளியும் களித்து, பழையபடியேபோய்த் தினைப்புனத்தைக் காத்திருந்தனள். அங்கே அக்கபடசந்நியாசி, ஒரு வேடவேஷம்பூண்டுவந்து, இவ்விடத்தில், ஒருயானைவந்ததோவென்று வினவ, பாங்கியானவள், இது ஏதோ சந்தேகத்துக்கிடமாயிருக்கிறதென்று நினைத்து, ஐயரே! இங்கே யானையும் வரக்காண்கிலோம், நீரும் இங்குவரத் தகுதியன்றென்று கடிந்துசொன்னாள். இவ்வாறு இவர் வருவதும் போவதுமாயிருந்து களவப்புணர்ச்சிநிகழ்வதை வேடர்யாவருமறிந்து, வேதவிதிப்படிமணமுடித்துக்கொடுக்கப்பெற்று, மனமகிழ்ந்திருந்தனர். அதன்பிறகு மாமி மாமன்மாரைப்பார்த்து, யாம திருத்தணிகைக்குப்போக நினைந்தோமென்று சொல்ல, அப்படியேசெய்யலாமென்று அவர்கள் விடைகொடுக்கப்பெற்று திருத்தணிகையைச்சேர்ந்து சுகித்திருக்குங்காலத்தில், வள்ளிநாயகி, இந்த மலையின்வரலாற்றை யெனக்குச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க, அதன் வரலாறும் பெருமையும் ஆகிய எல்லாவற்றையும் குறைவறச் சொல்லக்கேட்டு மனமகிழ்ந்திருந்தாள்.

அதன்பிறகு ஒருநாள் தெய்வயானையார் கந்தசுவாமியைநோக்கி, உமது வலப்புறத்திலிருக்கும் பெண் யாவள் அவள் வரலாற்றைச் சொல்லவேண்டுமென்று வேண்ட, அதனை ஆதியந்தமாய்ச் சொல்லக்கேட்டு மனமகிழ்ந்து, வள்ளிநாயகியைநோக்கி, உன்னைத் தங்கையாயப்பெறுதற்கு என்னதவஞ்செய்தேனென்று இனியமொழிகள் பலசொல்லி மகிழ்ந்திருந்தாள். கந்தவேளும கந்தமாதனகிரியில் உபயநாச்சிமாருடன் கூடிச்சுகித்திருந்தார். இந்தக் கந்தசரிதத்தைச் சொன்னவரும் கேட்டவரும இம்மை மறுமைவீடு என்பவற்றை எளிதிற்பெறுவார்கள். எல்லாஞ்சுத்தம்.

வள்ளியம்மைதிருமணப்படலம் முற்றிற்று.



ஆ காண்டம ஆறுக்குந் திருவிருத்தம் ௧0,௩௪௬.

திருச்சிற்றம்பலம்.

வேலுமயிலுந் துணை.

கச்சியப்பசிவாசாரியார் திருவடி வாழ்க.

நான்காவது

# யுத்தகாண்டம்.



## ஏமகூடப்படலம்.

உ. திண்ணிய=வலிவுடைய
செற்றிட=கொல்ல
சூழ்வு=ஆலோசனை
௩. மாவியல்கின்ற=லக்ஷ்மிவாசம்பெற்ற
௫. மகவான்=இந்திரன்
௬. வலவன்=சாரதி
எ. மருத்தன்=வாயுபகவான்
அ. இருமூவெய்யோர் = ஆறுசூரியர்கள்
௯. அளக்கர்=கடல்
நாப்பண்=நடுவிடம்
௧௦. உவணம்=விமானம்
ஊர்தி=வாகனம்
௧௫. செங்கணயுதத்தன்=பதினாயிரங் கண்ணன்
௧௯. அனிகம்=சேனை
௩௧. கரடிகை=ஓர்பறை
துடி=உடுக்கை
காளம்=எக்காளம்
சல்லரி =பம்பை
உஉ. திடர்=மேடு
உ௩. வலவயின்=வலப்பக்கத்தில்
உ௪. அலமந்து=வருந்தி
உ௫. படிதவிர்=ஒப்பற்ற
பாட்டின்காறு=கணுக்கால்வரையிலுமாக
௩அ. கவ்வை=ஒலி
எவ்வம்=வருத்தம்
உ௯. காந்தகம்=வாள்
௩௪. மந்திரம=கோயில்
௩௯. அறுவர்கள் என்றது ஈண்டுப்பராசர் பிள்ளைகள்

## வரவுகேள்விப்படலம்.

௧. புரவலன்=சூரபதுமன்
உ. இக்கு=மூங்கில்
௪. கைதவம்=பொய்
புகர்=சுக்கிரன்
௫. சிந்து=நீர், சிந்தமதி=சிறுமதி
எ. செந்தி=திருச்செந்தூர்
புகுதி=சம்பவிப்பு
௧௦. கொல்=வினாக்குறிப்பு
௧௧. காலம்இது அங்குஅவன்
௧௩. பூழி=தூளி (ஈண்டுநீறு)
௧௪. வாரியிறைவன்=சமுத்திரராஜனான வருணன்
௧௯. புயங்கம்=ஆதிசேஷன்.
உ௩. உடல்சினவசனி= மிருத்தகோபத்தையுடைய விடி
பணி=பாம்பு
உ௪. துளக்கம்=நடுக்கம்
உ௫. அரி=இந்திரன்
உஎ. கடவது=தகுவது

## முதனாட் பானுகோபன் யுத்தப்படலம்.

௧. கோதை=ஒழுங்கு
௩. உருமு=இடி
பதாதி=சேனைத்தலைவர்
எ. சிந்து=வாமனன் (மூன்றடி)
௯. பின்னை =தாரகன்
அடுக்கல்=கிரௌஞ்சம்
மைந்தன்=வச்சிரவாகு
௧௦. சாரதர்=பூதர்
௧௧. வயம்=வெற்றி
மீடியால்=மீளக்கடவாய்
௧உ. குமிழ்=புளகம்
௧௫. தொறு=கூட்டம்
௧அ. பரிசனம்=ஏவலசெய்வோர்
எலலையம்புகை=பானுகோபன் (எல்லை=சூரியன்)
உ௧. கயிரவம்=செவ்வலரி
துளக்கம்=நடுக்கம்
உஉ. சாலிகை=கவசம்
மருமம்=மார்பு
உ௩. கோதை=முன்னகத்தோற்கட்டி
கொளுவி=தொடுத்து
அங்குலிபுட்டில்=விரலுறை
தூணி=அம்புக்கூடு
உ௪. சிகழிகை=மாலை
மவுலி=தலை
உ௫. வயம்=வெற்றி
௩௦. மானவத்தலைவர்=படைவீரர்

௩௯. திருமை - அழகு
௪௦. கோடிகம்=தாம்பூலப்படிகம்
௪௪, வலவன்=சாரதி
௪௭. கேதனம=விருதுக்கொடி
௪௯. கணடை=யானைமணி
தார்நிரைகள் - கிணகிணிக்கூட்டங்கள்
௫௧. அருக்கன்=சூரியன்
௫௩. படகம்=இரணபேரி
௫௪. உரிஞ்ச=தேய
பாழி=வலி
ஆலி=மழைத்துளி
௫௫. வானமோடிய = மழைபெய்தது போல்
தானமோடின = மதநீரோடுவனவாய்
சரங்களினோடி=அம்புகளைப்போலோடி
௫௭. கதிர்=சூரியன்
விறந்த=அதிகரித்த
௫௮. மேன - மேயின
௫௯. சிந்துரபகைதவிசு = சிஙகாதனம் (சிந்துரம=யானை)
நார்=நாரம், அன்பு
௬௧. நிகண்ட=நிகழ்ந்த
உகண்ட=கோபித்த
௬௩. புவனியுணடவா புறந்தரவென்முன்=விஷ்ணுமுதுகிட்டுப்படி ஐயித்தான்
௬௬. பாருபட்டபடை= அணிவருத்தசே (னை
௬௭. மூரல்=புன்சிரிப்பு
௭௦. முன்கடை=முன்றுமகடையும
௭௧. ஈரும்=பிளக்கும
௭௭. சூரா=சூரியா
௮௦. அருத்தி=ஆசை
கிருததிமத்தவர்=பூதகணத்தார்
௮௧. பை=படம்
வாகு=புஜம்
௮௪. செல்=மேகம்
௯௨. ஆசை=திக்கு
௯௩. தொல்மிடல்=பழமையானவலலமை
௯௫. தொறு=கூட்டம்
புதவு=கதவு
௯௯. சிலைத்த=ஒலித்த
௧௦௦. வயிர்த்திடு=வயிரத்தன்மையுடைய
மறலி=இயமன்
அயிர்த்திடு=சந்தேகிக்கும்
௧௦௩. தகை=தக்க
உகைத்தனர்=செலுத்தினர்கள்

௧௦௪. மா=குதிரை
௧௦௫. முசுண்டி = சம்மட்டிவடிவினதாகிய தோராயுதம
௧௦௭. பரம்=பாரம், மிகுதி
௧௧௯. தாக்கணங்கு=வீரலட்சுமி
ஏ=அம்பு
௧௨௧. ஆளியான்=சிங்கன் (பூதன்)
அங்கியின்பெயரினுன் = அனவி (அசுரன்)
௧௨௨. சயந்தனம்=தேர்
௧௨௩. கார்முகம=வில்
௧௨௫. இடிப்பின்மும்மை = இடியின்சத்தத்தைவிடமூன்றுபங்கு
௧௨௭. பித்தினிலேமருவோன் = பைத்தியத்தினுல துன்பமடைந்தவன்
தேறல=கள்
௧௨௮. துஞ்சினுன்=மாணடான்
௧௩௦. பொன்றிய=இறந்த
உட்க=அஞ்ச
௧௩௧. ஆரஞர்=பெருந்துன்பம்
௧௩௨. குப்புறு=பாய்கின்ற
௧௩௪, உரம்=மார்பு
அணஙகுற=துன்பமடைய
கறைகெழு=விஷங்கொண்ட
௧௩௫. வீக்கி=கட்டி
எயிறு=பல்
௧௩௬. சோரி=உதிரம்
௧௩௭. வட்டணை=வட்டம்
௧௩௯. அயிர=நுணமணல்
௧௪௧. ஆற்றலை=வல்லமையுடையாய்
ஆற்றலை=வல்லமையை
௧௪௪. சரண=கால்
௧௪௫. பழுமரம=ஆலமாம்
சாலிகை=கவசம்
௧௬௦. உழிதனிதொடரா = மதுவென்டவன்பக்கத்தைச்சேர்ந்து
௧௬௩. வைத்தலைப்பகழி= கூரியதலையுடைய அம்பு
௧௬௬. இறந்து=கடந்து
ககனம=ஆகாயம்
௧௬௮. ஆகம=உடல்
பாசனம்=அகக்னி
காசினி=பூமி
௧௭௦. உலந்தனன்=அழிந்தான்
௧௭௫. தட்டில்=தவறுதலில்லாமல்
குடிஞை=யாறு
௧௭௭. நுதலி=நினைத்து
௧௭௯. வட்டாடல்=சூதாடல்
நமரஙகள்=நம்மவர்கள்
௧௮௦. ஊற்றம்=கெடுதி
௧௮௨. கூழை=பிற்படை

௧௮௩. கன்னல்=நாழிகை
சூள்=சபதம்
௧௮௪. கூனல்=வளைந்த
௧௮௬. அசலம்=மலை
௧௮௮. கண்டேதி=தினவு (அல்லது, கண்டு=பார்த்து, ஊதி = வாயால ஊதி)
௧௯0. நன்குஆலம்நீவி=நன்றாகவிஷந்தடவப்பெற்ற
௨00. மைக்கின்ற=மைத்தன்மையுடை
௨0௧. எழுவம்=இருப்புலக்கை [ய
௨0௨. ஏ (யென்று)=இகழ்ச்சிக்குறிப்பு
௨0௫. சூரன்=சூரியன் [ம்
௨0௬. காமர்தாரு=அழகியகற்பகவிருக்ஷ
௨0௭. மாழை=பொன்= (பொன்னலாய ஆபரணம்)
௨0௮. மறியும்=மீளும்
௨0௯. மருமம=மார்பு
விடர்=மலைப்பிளப்பு
௨௧0. அடுக்கல்=மலை
௨௧௨. அமபுவித்தலை=பூமியினிடம்
பகழி=அம்பு
செம்புனல்=இரத்தம்
௨௧௬. கொடுமரம்=வில்
௨௧௭. ககுபக்குவடு=திக்கு (மலை) யானை
௨௧௯. உலம்=திரண்டகல்
௨௨0. தொடலை=மாலை
௨௨௩. சீகரம=அலை
௨௨௮. வையம்=தேர்
விசிகம்=அம்பு
௨௩0. கற்பு=கல்வி
௨௩௨. பனித்தனா=நடுங்கினர்
௨௩௩. நொறில்=விரைவு
தூக்கி=செலுத்தி
௨௩௫. அகலம்=மாாபு
௨௩௮. எருவைநீா=இரத்தநீர்
௨௪௨. ஊர்=பரிவேடம்
௨௫௧. சூதன்=சாரதி
௨௫௩. பணை=கிளை
௨௫௫. பாடுசெய்தனன் = (படுத்தான்) கொன்றான்
௨௬௩. பின்றிய - பிற்பட
௨௬௫. சேகு=வயிரம்
௨௬௬. குனித்திட=நடிக்க
மோடி=காடுகொள், வடுகன்தாய்
௨௭௧. காயம்=ஆகாயம்
௨௭௪. நடுவனூர்=யமபுரம்
௨௭௬. பின்றுவார்=முதுகிடுபவர்
௨௮௨. கஞ்சமாமகள் = பதுமகோமளை (கஞ்சம்=பதுமம்)
புஞ்சம=கூட்டம்
௨௮௩. மூக்நீர்=கடல

௨௮௪. பாரிவட்டம்=பூவட்டம்
௨௮௫. சூறை=சுழல்காற்று
௨௮௮. புடவி=பூமி
௨௯௪. அறம் - தருமதேவதை
௩0௧. திமிர=இருள
௩0௬. உரம்=வலி, மார்பு
மோகரகம்=உக்கிரம்
௩0௭. விதம்மறுக்கும்=கொலையைத்தடுக்கின்ற
௩0௯. வாளம்=சக்கரவாளகிரி
௩௧0. படி=பூமி (பிருதிவி)
௩௧௨. குணங்கள்=பிசாசம்
சேனம்=பருந்து
பிள்ளை=காகம்
௩௧௭. கங்கம=பருந்து
களேபரம்=பிணம்
௩௨௫. சாபம=வில்
௩௨௭. கங்கபத்திரம்=அம்பு
௩௩௬. கந்து=தூண
௩௪௩. எதிலன்=பகைவன்
௩௪௬. இனன்=சூரியன்
௩௫௫. வெங்கிடல் = முதுகுகாட்டியோ
௩௭௧. குண்டு=ஆழம் [டல்
௩௮௧. சிந்துரத (தொல்) பகை=(யானைக்குவிரோதியாகிய) சிங்கம
௩௮௩. நிசாவது=இரவு
அசாவறு=நாசமில்லாத
௩௮௯. போதிர=நீங்கள்போங்கள்
௩௯0. கடியள் - விரைவுடையவள்
௩௯௨. எல்லொடும=சூரியனொடும

## இரண்டாநாட் சூரபன்மன் யுத்தப்படலம்.

௨. நெருநல்=நேற்று
௩. வாகை=வெற்றி
௬. பீலி—பேரீட்டி
௮. தேககினன்=திருப்தியடைந்தான்
செல்லுறழ்=மேகமபோன்ற
௧0. கோதை=முன்கைத்தோற்கட்டு
வெரிந்=முதுகு
புட்டில=அமபுக்கூடு
௧௧. குந்தளச்சுழியல் - மயிர்ச்சுருள்
௧௨. பண்ணுலாம்=அலங்கரிக்கப்பெற்ற
௧௮. பறந்தலை=போர்க்களம்
௨௨. சசி=சந்திரன்
மீன்=நக்ஷத்திரம்.
௩௧. தருணம் - புதுமை
௩௩. பாரிடர்=பூமியிலுள்ளார்; பூதர், பெரியதுன்பம
பாரிடம்=பூமியாகியவிடம்

ருக. தளம்=படை
சஅ. அளக்கர்=கடல்
திடர்=மேடு
கூரு. சலந்தரன்=ஓரிராக்கதன்
கூகூ. ஆசுகம=அம்பு
கூச. பனைக்கைநாகம்=எண்டுேத்தாரகன்
கoரு. கொடுமரம்வாங்கி=வில்லை வளைத்து
கிசிதம்=கூரிய (பொன்போன்ற)
ககஎ. அயம்=குதிரை
கஉக. அரவம=சப்தம்
கருச. கடி=இடுப்பு
ககூஉ. அரக்கர்வீரன்=வீரர்கூன்
ககூச. வீரமாமகேந்திரர்=வீரமகேந்திரனென்னுமியற்பெயரையுடையவன், வீரமாமகேந்திரமென்னுமூரையுடையவன்.
ககூகூ. அளரி=சிங்கமுகாசுரன்
கோளரி=வீரகோளரி
கருo. எழிலி=மேகம்
கருக. சாபம் - முனிவர்வசனம்
கருஉ. பாழி=அகலம், சிறுகுளம
கருரு. ககேசன்=கருடன (ககம=பறவை)
நகேசன்=மலையரையன் (நகம்=மலை)
கருஎ. பரம்=கவசம
வரம=மேனமை
கஅக. மறல் - மயக்கம
கஅஉ. அரி - சத்துரு
கஅச. பட்டிமை - வஞ்சகம
ககூஅ. புலவு=மாம்ஸம்
உoரு. புணரி=கடல்
உககூ. காாமுகம்=வில்
உஉகூ. துங்கதை - உயர்ச்சி
உருக. நீததம=வெள்ளம் (சேனை)
உசகூ. அடுக்கல்=எண்டுகிரவுஞ்சம்
உருக. வரை=மலைபோன்றசிவபிரான்
உஎச. நடுவுநாள்யாமதது=நடு இராததிரியில்
உஅக. நச்சுதன்னிடத்து=விருப்பந்தருகின்றதன்னிடப்பாகததில
உஅகூ. களேவரம்=பிணம். அழுங்கல் - சததம
உஅரு. ஞெகிழி=கொள்ளி
உகூo. கொடி=காக்கை
முகர்=முகததையுடையவர்
உகூரு. போதன்=பிரமன்
உகூஎ. அச்சுதமூர்த்தி=விஷ்ணு
ருகஉ. பொருள் - பொன்
ருககூ. இடை - சமயம

ருருஎ. திண்டிமபேரி திமிலை=வாத்தியவிசேஷங்கள்
ருருஅ. கழலின் - கழற்காயைப்போல
ருசஉ. காரி - காகமை
ருசரு. வீடுனது - நீங்காது
ருகூக. ஏதம=குற்றம்
ருகூகூ. பன்னகேசன்=சாப்பராஜன், ஆதிசேஷன் (பன்னம=பாமபு)
படர்=துன்பம்
ருருo. நாகர்அமமணி=நாகலோகத்தாரது அழகிய இரத்தினங்கள்
ருருஉ. பங்கயமணி=பதுமராகமணி
ருஎஉ. இபம்=யானை
ருஅo. வான்மை=பரிசுத்தம்
ருஅஉ. திருமகள் - எண்டுப் பதமகோமளை
ருகூஅ. கொற்றவை - உமாதேவி
சoo. முன்பன் - வலியன்
சoஎ. தன்குலம் - தனதுகோயில்
சகக. கோடு=கரை
குட்டம்=குளம்
சககூ. யாமினி=இரவு

## மூன்றுநாட்பானுகோபன் யுத்தப்படலம்.

உ. கோறலெழில் அகன்றிய - கொலைத்தொழிலதிகரித்த
கரு. சயந்தனை=சூரியனை
சயந்தனை=இந்திரகுமாரனை
சந்தனம=தேர
சயமதனை=வெற்றியை
உஉ. உழை=சமீபம்
கறபினர்=கற்பிப்போர்
தாழையுடை = இலைகளையுடைய கிளைகளை முறிககும
புழை=துவாரம
மழை=மேகம்
கேதனம்=கொடி
தாரு=கற்பகதத்தரு
கொடி=கற்பகவல்லி
உரு. தூஙகல் - தங்கல்
ருக. வேயினோர்=ஒற்றர்(வேய்=ஒற்று)
ருஎ. மேவலாளன் - பகைவன்
சஉ. எய - எவிய
சச. கணவர்=கணத்தவர்
ஆடலம்=பொருகின்ற அழகிய.
சரு. சாரதம் - பூதம
சஅ. தேர்த்திடு - தேர்ந்திடு
கூக. முத்தலைக்கழு - சூலம
கூரு. குழகு=அழகு
கழகு=போர்க்களம்
காணடம்=நீர்க்காக்கை

க௰. தோல் - யானை
சாங. சுவாய்=சுழற்றி
எரு. தூமுகில் - தூவுகின்றமேகம்
எஅ. மண்டலமால்வரை - சக்கரவாளம்
துழனி=ஓசை
காயம் - ஆகாயம்
கூகூ. வலவை - வலியின்தன்மை
கூஎ. கனலி=சூரியன்
கண்டகன்=அசுரன்
க௰க. இமில்=முசுப்பு
மருப்பு=கொம்பு
கஉ௰, வல்லியம் - சிங்கம்
கஉக. ஐவர்சாரணன்=பாண்டவ தூதன்
தந்தவாரணன்=நான்குதந்தங்களையுடைய ஐராவதத்தையுடைய விந்திரன்
வளத்தின்காரணன்=குபேரன்
கஉங. செல் - இடி.
கஉஅ. இருவர் - காயத்திரி சாவித்திரி
கஉகூ. பிணை=பெட்டை
கசங. மாயத்தான்எய்தும்=சாகத்தான் வரும்
மாயத்தான்=மந்திரத்தினால்
காயத்தனுகி=ஆகாயத்திலிருப்பவனாகி
தொன்ருக்காயத்தன்=அருவன்
கசாகூ. மான்றி=மயங்கி
கஅக. கைமமறித்தல் - கையுதறல்

## நகர்புகுபடலம்.

அ. செருவென=சண்டையென்றமாத்திரத்தானே
உ௰. கடக்குன்றம்=மதமலை (யானை)
தடக்குன்றம=பெரியமலை
உக. சாலம் - கூட்டம
உங. குயவரி=புலி
உரு. செறித்திடு -!ருத்திய
ங௰. சூர் - பயம்
ஙங. கலம்பகிர்வுறிட=கப்பல்உடைய
ஙச. ஞெள்ளல்=வீதி
சரு. வஞ்சனி=மாயை

## இரணியன்யுத்தப்படலம்.

ங. விரணம்=மாறுபாடு
எ. விழுமம்=துன்பம்
கூ. மாறு ஓரீஇ=பகைநீங்கி
கச. அரி=நரசிம்மம்
கரு. கனலித்தது=கிள்ளியது
ஐந்தியலரக்கர் - பஞ்சஇராவணர்

கசா. தந்தி=யானை
உழுவை=புலி
உரு. வலவி=விலங்கு
ஙஉ. புலமையோர்=அறிவுடையோர்
ஙச. எம்முன்=எமதண்ணன் (பரிந தோபன்)
ஙரு. மறியினும=இறந்தாலும்
சஉ. தூவு=ஊன்
சகூ. பொன்னேன்=இரணியன்
ருஉ. மடங்கல்=சிஙஹம்
ருரு. கடி - பேய்
ருசா. வசலை=ஓர்கொடி
கிசலையம்=தளிர்
பசலை=தேமல்
அசலை=பூமி
சாச. மந்திரி—குபேரன்
சாகூ. நரலை=கடல்
எஅ. கவடு=கிளை
பொதும்பர்=சோலை
அஉ. தேர்கால் - சக்கரம்
அச. தோல்=கேடயம்
கூக. சாலம=மரம்
கூஉ. சராசனம்=வில்
கூச. நூக்கிய=செலுத்திய
கக௰. பொங்கர்=சோலை
ககச. பட்டிமை=வஞ்சம்
ககஎ. ஆரணம்=கவசம்
கஙங. உததி=கடல்

## அக்கினிமுகாசுரன்வதைப் படலம்.

ரு. ஐவர்=பஞ்சமூர்த்திகள் (பிரமா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவன்.)
கூ - உடல் - உடலல்=வருத்தல்
உஉ. நல்குமாறின்றி-கொடுத்தலில்லாத
உஎ. எதினமாதர் - அன்னியமாதர்
உஅ. நேர்ந்தவர்=எதிர்ப்பட்டவர்
உகூ. வெஃகி=விரும்பி
ங௰. சூழி=முகபடாம்
காழகம்=ஆடை
மாழை—மாவடு
ஙஅ. புங்கவம்=அம்பு
சஅ. கிடுகு=தேரின்மரச்சுற்று
சகூ. கொடி=காகம்
சாக. - இனப்படு - கூட்டமாகிய
சாஉ. முனி=அகஸ்தியர்
சாசா. நெற்றியில் - முன்னணியில்
எச. வளை-முழங்கு
அ௰. திக்கானனன் - பிரமன்

அ௩. முண்டம்=நெற்றி
வளை=சங்கு
அ௫ - சுதை—கேடு.
௯௩. சூல்அமகொண்டல்=கருப்பந்தாங்
கிய அழகியமேகம்
சூலம கொண்டு அலமந்து=சூலத்
தைத்தாங்குவதால்வருந்தி
குலிங்கம - இங்குலிகம்
௯௪. போதம்கொன்று=அறிவையழி
த்து
போது அங்குஒன்று=மலரை
யொத்த
ஏதம்தீர்ந்திடும்எண்ணலர்=குற்
றத்தைநீக்கும்எண்ணமில்லாத
வர்கள்
சிரமேற்தாள்ந்திடும்=தலை
யில்கொடுத்து அறுக்கும்
௯௫. சங்கு ஆரத்து அணி=சங்கினாலாய
மாலையாகியவாபரணம்
சங்காரத்து அணி=கொலை
யினதுவரிசை
௯௬. ஞாலத் தேவரும்=பிராமணர்
களும்
ஞாலததேவரும் = பூமியில்எல்
லாரும்
௯௭. அஞ்சத்தான்=அம்ஸத்தான்,
பிரமன்
நஞ்சத்தான் அவர்கள்=விஷ
முண்டபரமசிவனைச்சோந்தவர்
கள்
௧00 மூதக்கார்—மிக்கவர்
௧0௩. எல்லை=சமயம், அளவு
௧௧0. வயப்புலி=சிங்கம்
௧௧௬. தூக்கினன் - ஆலோசித்தனன்
௧௨௩. காளி=கறுப்புநிறமுடையவள்
௧௨௬. சின்னம் - கொஞ்சம்.
௧௩௩ . சான்று-அதிகரித்து
௧௩௪. வடி=கள்
௧௪௨. அல்லி=ஈண்டுத்தாமரை
௧௪௭. கலிங்கம்=ஆடை
௧௫அ. முலாவும்=உலாவும்
௧௫௬. மயிலை=மீன்
௧௬௩. உலந்தவன்=இறந்தவன்
௧௯௬. வள்ளுரம-தசை
௧௭௬. சூர்த்திடுநோக்கு=அஞ்சத்தக்க
நோக்கு
௧அ0. குடிஞை=யாறு
௨0௫. ஆறுட்பட்டவையிருகாலம்=பதி
னறு வயது
௨0௭. துஞ்சற்றுணற்று=தூக்கமு
முணவுமில்லாமல்
௨௨௩. எல்லினன் - சூரியன்

௨௨௪. சாதகம்=வானம்பாடி
௨௩௬. காரோதிமருங்குளகாரணனே=
கறுத்தகூந்தலையுடைய உமா
தேவியை இடப்பாகங்கொண்
டசிவனே
நேர்=ஒப்பு

## மூவாயிரர்வதைப்படலம்.

௧௫- வென் - முதுகு
௪௬. இலம்படை=தரித்திரம்
௭௧. பொதுவன்=இடையன்
அ௧. ஞமலியூர்தி=வைரவன் (ஞமலி=
நாய்)

## தருமகோமன்வதைப் படலம்.

௧- படி=ஒப்பு.
௧௧. போதகதகரசு=யானையரசு
௧௬ஆவணம்=வீதி
௧௯. பொச்சையர்=வலியற்றவர்
பொருமல்=அழுதல்
௨௫. சகுகு=கைவாள்
௩௨- விறப்புறு - அளவில்லாத
௩௩. பூசை=பூனை
௩௪. மையுண்மாலை=துன்பத்தன்மை
௪0. மாறு=ஒப்பு.
௪௩. உணடைகெழு - அணிவகுக்கப்
பட
௪௪. அடைச்சி - செலுத்தி
௪௫. பாலம்=நெற்றி
௪௭. பொத்திரம்=பாணம்
௫0. வழுவை=யானை
௫௨. தில்+தில்+ஐய
௫௭. தீனக்குரல் - குரூரஒலி
௬0. அந்து - ஒருபூச்சி
௭௭. வெருவல்=அச்சம்
௭௯. உணடை=சேனை

## பானுகோபன்வதைப் படலம்.

௨௪. வெதிர்=செவிடு
பங்கு=முடம
௧0௫. தூப்பில=குற்றமில்லாத
௧0௭. மான்றிடு=மயங்கிடு
௧௧௯. பொடி=விபூதி
௧௨௩. சையம்=மலை
௧௩௨. ஆவலம்=சப்தம்
௧௫0. கிடங்கு=அகழி
௧௫அ. வாதுவர்=குதிரைப்பாகர்

